கடவுள் துணை.

# படல அகராதி.

உ

கடவுள் துணை.

# நைடதம்.

நைடதம் என்னுஞ்சொல் நைஷதம் என்கிற ஆரியத்தின் திரிபு. அதன் வரலாறு என்னவெனின், நிஷதம் என்பது ஓர் தேயத்தின் பெயர், அத்தேயத்தை ஆள்பவன் நைஷதன், அவனே நளன் அவனைக்குறித்துச் செய்யப்பட்ட நூல் நைஷதம்.

## பாயிரம்

### கடவுள்வணக்கம்.

[இந்நூல் எடுத்துக்கொண்டகாவியம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு உயர்ந்தோர் வழக்கத்தின்படியே கவி கடவுள் வணக்கஞ்செய்தல் சொல்லப்படுகின்றது]

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தழைவிரி கடுக்கை மாலைத் தனிமுதல் சடையிற்
சூடும், குழவிவெண் டிங்க ளிற்ற கோட்டது குறையென்
றெண்ணிப், புழைநெடுங் கரத்தாற் பற்றிப் பொற்புற
விணைத்து நோக்கும், மழைமதக் களிற்றின் செய்ய மலரடி
சென்னி வைப்பாம்.

(இ-ள்.) தழை - செழித்த, விரி - மலர்ந்த, கடுக்கை-கொன்றை மாலைகளாலாகிய, மாலை - மாலையையுடைய, தனி முதல் - ஒப்பில்லாத பரமசிவனால், சடையில் சூடும் - சடையின்கண் சூடப்பட்டிருக்கிற, குழவி வெண் திங்கள் - குழந்தையாகிய வெள்ளிய சந்திரனை, இற்ற கோட்டது - ஒடிந்த (தன்) கொம்பினது, குறை என்று எண்ணி - சேஷமென்று நினைத்து, புழை நெடு கரத்தால் - தொளையையுடைய நெடிய துதிக்கையினாலே, பற்றி - பிடித்து, பொற்பு உற - அழகு பொருந்த, இணைத்து நோக்கும் - (அதிற்) பொருத்திப் பார்க்கின்ற, மழை மதம் - மழைபோல் பொழிகின்ற மதத்தையுடைய, களிற்றின் - யானைமுகக்கடவுளுடைய, செய்ய மலர் அடி - செந்தாமரை மலர்போன்ற திருவடிகளை, சென்னி வைப்பாம் - (நாம்) தலைமேல் சூடிக்கொள்வாம், என்றவாறு.

(கருத்து.) சிவன்முடியிலிருந்த பிறையை ஒடித்த கொம்புக் கிணையாகக்கும் விநாயகரை வணங்குவோமென்பதாம்.

தழை விரி என்கிற வினைத்தொகைக்கு எடுக்கிக் கொன்றை மலரென்கிற வினைமுதற்பெயர் கொண்டன. எல்லா அவயவங்களிலும் முதன்மையாகிய தலை யானைத்தலையாயிருத்தலைப்பற்றி விநாயகக் கடவுளை யானையென்றார். பல்மலர்களினும் தாமரைமலர் சிறந்தமைபற்றி மலரெனப்பட்டது "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" என்பதனாலறிக. தந்தைக்கு மூத்தபிள்ளையின்மேலும் தாய்க்கு இளையபிள்ளையின் மேலும் அன்புமிகுத லுலகியற்கையாதலால் பரமசிவனிடத்தே விநாயகக் கடவுளுக்கு விளையாட்டுச் சொல்லப்பட்டது. "மூத்தமக னிடத்தார்வ மீன்றெடுத்த பிதாமகற்கு முதிருமாறல்" என்பதனாலு மறிக. பிறையைக் கொம்பின் குறையென்று மயங்கினமையால் மயக்கவணியாம். இது பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும் மற்றை நான்குசீரும் மாச்சீர்களுமாகிய அடிகளால் வந்த ஆசிரியவிருத்தம்.

---

## சிறப்புப்பாயிரம்.

[இதனுள் நூலாசிரியர் பெயர் முதலானவை சொல்லப்படுகின்றன]

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நிலவுபொழி தனிக்கவிகை நிடதர்கோன் புகழ்ச்
சரித நெடுநீர் வையத்தில், புலவர் களி யமுதொழுகு புது
மொழிகூட் டுணத்தமிழாற் புனைதல் செய்தான், வலனு
யர்த்த வண்ணலஞ்சேல் வான்றொடுபொற் கோட்டிமய
வரையிற் றீட்டி, அலர்தலைமா நிலம்புரக்கு மதிவீர ராம
னிக லரச ரேறே

(இ-ள்.) இகல் அரசர் - பகைத்த மன்னராகிய (யானைகளுக்கு), ஏறு - ஆண்சிங்கமாயுள்ளவனாகிய, வலன் உயர்த்த - வெற்றியினால் உயர்த்தப்பட்ட, அண்ணல் - பெருமைபொருந்திய, அம் சேல் - அழகிய மீனக்கொடியை, வான் தொடு - ஆகாசத்தை அளாவிய, பொன் கோடு - பொன்மயமாகிய சிகரத்தையுடைய, இமயவரையில் - இமயமலையினிடத்தே, தீட்டி - (தனக்குரிய வெல்லைக்கல்லாக) எழுதி, அலர் தலை - பரந்த இடத்தையுடைய, மா நிலம் புரக்கும் - பெரிய பூமியைக் காக்கின்ற, அதிவீரராமன் - அதிவீரராமனென்கிற இயற்பெயருடைய (பாண்டியராஜனானவன்), நிலவு பொழி - சந்திரிகையைப் பொழிகின்ற, தனி கவிகை - ஒப்பற்ற (முத்துக்) குடையையுடைய, நிடதர் கோன் - நிடததேசத்தரசனாகிய நளமஹாராஜனது, புகழ் சரிதம் - புகழையுடைய சரித்திரமாகிய, களி அமுது - களிப்பைத் தருகின்ற அமிர்தத்தை, நெடு நீர் வையயில் - கடலாற் சூழப்பட்ட பூமியிலுள்ள, புலவர் கூட்டுண - புலவரானவர் கொள்ளைகொள்ளும்படியாக, ஒழுகு - (அவ்வமிர்தம்) பெருகுகின்ற, புது மொழி - புதிய காப்பியத்தை, தமிழால் புனைதல் செய்தான் - தமிழ்மொழியினாலே அலங்கரித்துப் பாடினான், எ-று.

(கருத்து) அதிவீரராம பாண்டியராஜனென்பவன் நளமகாராஜனது சரித்திரத்தைத் தமிழிற் பாடினனென்பதாம்.

புலவரென்பது தேவர்க்கும் வித்துவான்களுக்கும் பெயர். இங்கே வானென்றது நீல நிறமுள்ளதாகக் காணப்படும் மாகாசமாம். பின் வருவனவற்றையும் இப்படியே கொள்க. கூட்டினைத்தருக கொள்ளாயிட வென்பது 'நவமணியழுத்தடிச் சவேடியாநிதிசில் கணைடியாதிகைத்துவாடிச் சிந்தைதோயுழுந்திய மாதுறவர் சூட்டுண்டோடிப் போயினது'' என்பதனாலறிக. புதுமொழி—மொழியென்பது தன்காரியமாகிய காப்பியத்தை யுணர்த்தப் புதுமையென்பது அக்காப்பியத்தை விசேடித்து நிற்கையால் இருபெயரொட்டாகுபெயரா மென்றறிக.

அதிவீரராம னென்பவே ஆக்கியோன் பெயரும், சிட்டர்கோவை புகழ்ச்சரிதம் என்பவே நுதலிய பொருளும், அக்காரணத்தால் தோன்றுகிற நைடதம் என்கிற வடமொழிப்பெயர் இதற்குப் பெயரென்பதும், கூட்டுணவென்பவை இந்நூலுக்குப் பயனும் பெறப்பட்டன. தமிழ்றாற் புனைந்துசெய்தா னென்பவே முன்பு இது தமிழிலின்றி வடமொழியிலிருந்து தெரித்துத் தமிழின் மொழிபெயர்க்கப்பட்டதென்பது குறிக்கப்படுகின்றது. செருக்கீரவைப்பிற புலவர்கள் யமுதொழுகு என்றதனால் விளங்கிற புலவர்களுக்குக் கடலமிர்தம்போல மனமினிய புலவர்க்கு இச்சரித்திரமிர்த மனமொப்புமென்பது உவமையணி தொனிக்கின்றது. 'இகலரசொறு' என்பதில் அதிவீரராமனிடத்தே சிங்கத்தன்மையை யேற்றினதற்சேறப்பட பகைவரிடத்தே யானைத்தன்மையை யேற்றுமையால் ஏகதேச வுருவகவணியாம். இது பெரும்பாலு மீற்றுச்சீரக விரண்டு மாச்சீர்களும் மற்றைநான்கும் காய்ச்சீர்களுமாகிய அடிகளால் வந்த ஆசிரியவிருத்தம்.

---

# நாட்டுப்படலம்

அஃதாவது நளனாளப்பட்ட நிடதநாட்டினது வளத்தைச் சொல்லுகிற படலம்.

---

[இதுமுதல் இரண்டு பாட்டுக்களால் மழைச்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கலித்துறை.

கருவிமாமழை கலைமகளுருவென விளங்கி
இருவிசும்பிடைப் படர்ந்துசென் றின்மணி நெழிக்கும்
பரவைவெண்டிரைமேய்ந்துயர் பனிவரையுயிர்த்த
உருவவோட்டரித் தடங்களுஞ் சுருக்கொடுமீண்ட.

(இ - ள்.) கருவி மா மழை - (உலகத்திற்குத்) துணைக்காரணமாகிய பெருமைபொருந்திய மேகங்களானவை, கலைமகள் உருவு என விளங்கி - சரஸ்வதியினது வடிவம்போல (வெண்மையாக) விளங்கி, இரு விசும்பிடை - பெரிய ஆகாசத்தினிடத்தே, படர்ந்து சென்று -

பரந்து போய், இனம் மணி கொழிக்கும் - இனமாகிய இரத்தினங் களைக் கொழிக்கின்ற, பரவை - கடலினது, வெள் திரை - வெள்ளிய அலைகளையுடைய (நீரை), மேய்ந்து - குடித்து, உயர் பனி வரை - உயர்ந்த மலையரசனும், உயிர்த்த - (புதல்வியாகத்) தரப்பட்ட, உருவ ஓடு - (காதுகளுக்கு) நேராக ஓடுகின்ற, அரி - இரேகைகள் பரந்த, தடம் கணாள் - விசாலமாகிய கண்களையுடைய பார்வதியினது, உரு கொடு - (கரு) நிறத்தைப் பெற்று, மீண்டு - திரும்பின, எ-று.

(க-து.) மேகங்களானவை சரஸ்வதி வடிவம் போலத் தோன்றிக் கடற்சலத்தையுண்டு பார்வதி வடிவம் போலத் திரும்பின வென்பதாம்.

முன்னுரு—வடிவு, பின்னுரு — நிறம். "உருவே யுடம்பும் வடிவு நிறமும்" என்பதனாலறிக. மழை கலைமகளுருவென விளங்கி— இதில் கலைமகளுரு உபமானம், மழை உபமேயம், என - உருபு. விளங்கல் - பொதுத்தன்மை. இந்நான்கும் விரிந்து நிற்கையால் விரி யுவமையணியாம். தடங்கணாளுருக்கொடு மீண்ட—இதில் மழையா கிய உபமேயத்திலே தடங்கணாளுருவாகிய உபமானத்தின் குணத் தை யேற்றலால் பற்பொருட் காட்சியணியாம். இது முதல் பத்துப் பாட்டுக்கள் வரைக்கும் பெரும்பாலு முதற்சீரும் மூன்றாஞ்சீரும் மாச்சீர் களும் மற்றைய மூன்றும் விளச்சீர்களுமாகிய அடிகளால் வந்த கலித் துறைகள். (௬)

அன்னங்கண்படுத்தண்பணை நிடதநாடளிக்கும்
மன்னர்மன்னவன்மண்டமர்கடந்தவொள்வேலின்
மின்னியாங்கவன்முரசெனவிண்ணிடையதிர்ந்து [ழிந்த
பொன்னங்குன்றின்மேலவன்கொடைபோலுமெனப்பொ

(இ - ள்.) அன்னம் கண்படு - அன்னங்களானவை தூங்குகின்ற, தண் பணை - குளிர்ச்சி பொருந்திய கழனிகளையுடைய, நிடதநாடு அளிக்கும் - நிடததேசத்தைக் காக்கின்ற, மன்னர் மன்னவன் - அரசர் களுக்கு அரசனாகிய (நளனது), மண்டு - நெருங்கிய, அமர் கடந்த - போரை முடித்த, ஒள் வேலின் - ஒள்ளிய வேலைப்போல், மின்னி - மின்னுதல்செய்து, அவன் - அவனது, முரசு என - முரசம்போல், விண்ணிடை அதிர்ந்து - ஆகாசத்தினிடத்து ஒலித்து, பொன் அம் குன்றின்மேல் - பொன்னையுடைய அழகிய இமய மலையின்மேல், அவன் - அவனது, கொடை போலும் என - ஈகையை ஒக்குமென்று சொல்லும்படியாக, பொழிந்த - (அம்மேகங்கள் நீரைச்) சொரிந் தன, எ-று. ஆங்கு—அசை.

(க-து.) அந்த மேகங்களானவை நளனது வேலைப்போல மின்னி அவன் பேரிகையைப்போலச் சத்தித்து அவன் கொடையைப்போல நீரைச் சொரிந்தன வென்பதாம்.

இங்கே பொன்மலையென்றது இமயமலையாம். நிடததேசத்திற் குச் சமீபத்திற் சிறந்துள்ளது அதுவேயாதலால், பின்வரும் 'கங் கையென் றுலகேத்திய' என்னும் பாட்டில் அம்மலையிற்பிறந்துவருங் கங்கையே அந்நாட்டிற்கு நதி என்பதனாலுமறிக. மேகத்திற்கு மின்

னுதல்பற்றி வேலும், ஒலித்தல்பற்றி முரசமும், அம்மேகத்தினை பெய்தற்குக் கைம்மாறு நோக்காமைபற்றி ஈகையும், உபமானஞ் செய்யப்படுதலால் உவமையணியாம். ஆகவே இக்கதைக்கு நாயக னாகிய நளமகாராசனுடைய வேன்முதலியவற்றி னியல்பு தொனிக் கின்றது போலும் என்பது போன்ம் எனத் திரிந்து வந்தது. (௨)

[இது முதல் மூன்றுபாட்டுகளால் வெள்ளச்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

விலங்கிவில்லுமிழ்விரிகதிர்மணிபலவரன்றிப்
பொலன்முகட்டுயர்பொன்னெடுங்குன்றின்வீழருவி
குலவுவெண்டிரைக்குரைகடலுடுத்தபார்மடந்தை
அலர்முலைத்தலைத்துயல்வருமாரமொத்துளதால்

(இ-ள்.) உயர் நெடு பொன் குன்றின் - (மலைகளில்) உயர்ந்த நெடிய இமயமலையின்மேல், பொலன் முகடு - அழகிய சிகரத்திலிருந்து, விலங்கி - இடைவிட்டு, வில் உமிழ் - ஒளியை வீசுகின்ற, விரி கதிர் - விரிந்த கிரணங்களையுடைய, பல மணி - பலவகைப்பட்ட முத்துக்களை யும், வரன்றி - வாரிக்கொண்டு, வீழ் அருவி - வீழ்கின்ற வெள்ளமா னது, குலவு - வளைவாகிய, வெண் திரை - வெள்ளிய அலைகளையுடைய, குரை கடல் - ஒலிக்கின்ற கடலாகிய (ஆடையை), உடுத்த பார்மடந் தை - (மருங்கிற்) சூழக்கொண்டிருக்கிற பூமிதேவியினுடைய, அலர் முலைத்தலை - அடிபரந்த (அம்மலையாகிய) முலையினிடத்து, துயல்வ ரும் ஆரம் - புரளுகின்ற முத்துமாலையை, ஒத்து உளது - ஒத்திருக் கின்றது, எ-று. ஆல்—அசை.

(க-து) மலைவெள்ளமானது பூமிதேவியினது முலையின்மீ தணிந்த முத்துமாலையை யொத்திருக்கின்ற தென்பதாம்.

பல்வகை முத்துக்களாவன குறிஞ்சிக்கருப்பொருளாகிய யானைக் கொம்பு, பன்றிப்பல், மூங்கில், இவை முதலியவற்றி லுண்டாகின் றவையாம். பூமியின்மேல் மடந்தை தன்மையையும் கடலின்மேல் ஆடைத் தன்மையையும் மலையின்மேல் முலைத்தன்மையையும் ஆரோபித்தலாகிய உருவகம் உறுப்பாகவும் அருவியின்கண் ஆரத்தன்மையைச் சம்பா வித்தலாகிய தற்குறிப்பு உறுப்பியாகவும் வருதலால் உறுப்புறுப்பிக் கலவையணியாம். (௩)

வேழவெண்மருப்பெறிந்துவெண்ணித்திலம்வரன்றிக்
காழகிற்றுணிசந்தொடுகையரிக்கொண்டு
கோழரைச்செழுங்குங்குமத்தடஞ்சினைசாடி
ஆழ்திரைக்கடலகடுகீண்டொழுகியதன்றே.

(இ-ள்) வேழம் - யானைகளுடைய, வெண் மருப்பு - வெள்ளிய கொம்புகளை, எறிந்து - வீசிக்கொண்டும், வெண் நித்திலம் - வெள்ளிய முத்துக்களை, வரன்றி - வாரிக்கொண்டும், காழ் அகில் துணி - வயி ரம்பொருந்திய அகின்மரங்களுடைய துண்டங்களை, சந்தொடு - சந் தனமரங்களோடு, கையரிக்கொண்டு - சேர்த்துக்கொண்டும், கோழ்

அளை - வழுவழுப்பாகிய அளையையுடைய, செழு குங்குமம் - செழிய குங்கும மரங்களுடைய, தடம் சினை - விசாலமாகிய கிளைகளை, சாடி - முறித்துக்கொண்டும், ஆழ் திரை கடல் - ஆழ்ந்த அலைகளையுடைய கடலினது, அகடு கீண்டு - வயிற்றைக் கிழித்து, ஒழுகியது - (அவ்வெள்ளம்) சென்றது, எ-று. அன்று, ஏ,—அசைகள்.

(க-து.) அந்த வெள்ளமானது யானைத்தந்தத்தின் முத்துக்களையும் அகிற்றருவையுஞ் சந்தனத்தருவையுங் குங்குமத்தருவையு முறித்துச் சமுத்திரத்துட் சென்றதென்பதாம்.

அரித்தலென்பதற்குக் கையென்பது முன்னிலையாய்க்கூடி அவ்விரண்டும் கைகூடல் கால்சீத்தல் என்பனபோல ஒருசொல்லாய் நின்றன. மரங்களுக்குக் கோழரை, பொருட்டரை, பொரியரை, முள்ளரை என்று சொல்லப்பட்டவற்றுள்ளே கோழரை - சருச்சரையில்லாத அரையாம். பின் 'கோழரையரமரைச் சாயக்கருங் குடக்கோட்டாளும் வேந்தே' என்பதனாலு மறிக. (௪)

கங்கையென்றுலகேத்திய கடவுண்மாநதிவெண்
சங்குருளுந்தலறிய தடம்பணை தவழ்ந்து
கொங்குயிர்த்தபூந் தடத்துலாய்க் குளம்பல நிரப்பி
அங்கண்மாநிலத் தமுதெனப் பரந்ததையன்றே

(இ-ள்) கங்கை என்று - கங்காநதியென்று, உலகு ஏத்திய - உயர்ந்தோரால் துதிசெய்யப்பட்ட, கடவுள் மா நதி - தெய்வத்தன்மை பொருந்திய பெரிய நதியானது, வெள் சங்கு - வெள்ளிய சங்குகளானவை, உருள உந்து - புரளும்படி செலுத்தி, அலறிய - இரையும்படியாக, தடம் பணை - விசாலமாகிய கழனிகளிலே, தவழ்ந்து - ஊர்ந்து, கொங்கு உயிர்த்த பூ - வாசனையை வீசுகின்ற மலர்களையுடைய, தடத்து - தடாகங்களில், உலாய் - திரிந்து, பல குளம் நிரப்பி - பலவகைப்பட்ட குளங்களையும் நிறைத்து, அம் கண் மா நிலத்து - அழகிய இடத்தையுடைய பெரிய பூமிக்கு, அமுது என பரந்து - அமிர்தமென்று சொல்லும்படியாகப் பரவிற்று, எ-று. ஐ—சாரியை, அன்று, ஏ,—அசைகள்.

(க-து.) நதியானது கழனிகளையுந் தடாகங்களையுங் குளங்களையு நிரப்பிப் பூமிக்கு அமிர்தமாகப் பரவியதென்பதாம்.

உலகுக்கு உயர்ந்தோரென்பது 'உலகமென்ப துயர்ந்தோர்மாட்டே' என்பதனாலறிக. கங்காநதிக்குத் தெய்வத்தன்மையாவது தன்னின் முழுகியோரைப் பரிசுத்தராக்கலாம். அலறிய வென்பது செய்யியவென் வாய்பாட்டு வினையெச்சம். உயிர்த்தலென்பது சாலவழுவமைதி. பலவகைக்குளமாவன ஏரி, கயம், ஓடை, குட்டம், மடு முதலியன. நிலத்தமுதெனவே தேவருலகுக்குக் கடலமிர்தம்போலென்று முவமையணி தோன்றுகின்றது. (௫)

ஒழுகுதீம்புன லிறைசெய்யோதையு முழுநர்
குழுவின்கம்மையு முழத்தியர் குரவையி னார்ப்பும்

கழனிவாழ்கென வான்முளை வித்துநர் கலிப்பும்
மழைமுழக்கொடு மாறுகொண் டொலித்தன மாதோ

(இ-ள்) ஒழுகு தீ புனல் - பெருகி யோடுகின்ற மதுரம்பொருந்திய நீரை, சிறை செய்யும் ஓதையும் - கரைகோலித் தடுத்து நிறுத்துகின்றவர்களுடைய ஓசையும், உழுநர் குழுவின் கம்மையும் - ஏருழுகின்றவர்களுடைய கூட்டத்தினது ஓசையும், உழத்தியர் குரவையின் ஆர்ப்பும் - கடைசியரது குரவைக்கூத்தினது ஓசையும், கழனி வாழ்க என - வயல்களானவை வாழ்கவென்று, வால் முளை - வெள்ளிய (நெல்லின்) முளைகளை, வித்துநர் கலிப்பும் - விதைக்கின்றவர்களுடைய ஓசையும், மழை முழக் கொடு - மேகத்தினது ஓசையுடனே, மாறு கொண்டு - பகைமை கொண்டு, ஒலித்தன - முழங்கின, எ-று. மாது, ஓ,—அசைகள்.

(க-து.) அணைகட்டுதலா லுண்டா மோசையும் ஏருழுகின்றவ ரோசையும் கடைசியர் குரவைக்கூத்தோசையும் நெல்விதைக்கின்றவ ரோசையும் மழைமுழக்கத்தோடு மாறுகொண்டன என்பதாம்.

வாழ்கென—வாழ்க வென்பதன் கடை குறைந்தது. குரவை - கைகோத்தாடல்; 'குரவை யென்பது கைகோத்தாடல்' என்பதனாலறிக. கரைகோலுதற் றொழிலாகிய வோசை முதலியவற்றிற்கு மழை முழக்கத்தோடு மாறுகொள்ளுதலாகிய சம்பந்த மில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்ததனால் தொடர்புயர்வு நவிற்சியணியாம். இதனால் அவ்வொலிகள் மேகவொலியையோட மிகுகின்றனவென்று முவமையணி தொனிக்கின்றது. (௬)

வாள்வாய்ச் செழுங் கமலத்தில் வண்டுபாண் மிழற்றும்
அள்ளலங் கருஞ்சேற்றிடை யாமைகண் படுக்கும்
பள்ளநீர்ச் செழும் பணைதொறும் பணில முத்துயிர்க்கும்
கள்ளுலா மலர்ப் பொதும்பரிற் களிமயி லகவும்.

(இ-ள்.) வண்டு - வண்டுகளானவை, வாள்வாய் - கிண்ணம் போன்ற வாயையுடைய, செழு கமலத்தில் - செழிய தாமரைமலர்களிலே, பாண் மிழற்றும் - இசைப்பாட்டைப் பாடிக்கொண்டிருக்கும், ஆமை - ஆமைகளானவை, அள்ளல் - குழம்பாகிய, கரு சேற்றிடை - கரிய சேற்றினிடத்தில், கண்படுக்கும் - தூங்கிக்கொண்டிருக்கும், பணிலம் - சங்குகளானவை, பள்ளம் நீர் - ஆழமாகிய நீரையுடைய, செழு பணை தொறும் - செழிய கழனிகளிலெல்லாம், முத்து உயிர்க்கும் - முத்துக் களைச் சொரியும், களி மயில் - களிப்பையுடைய மயில்களானவை, கள் உலாம் மலர் - தேனொழுகுகின்ற மலர்களையுடைய, பொதும்பரில் - சோலைகளிலே, அகவும் - அழைத்துக்கொண்டிருக்கும், எ-று. அம்—சாரியை.

(க-து.) வண்டுகள் தாமரையிற் பாடும், ஆமைகள் சேற்றிலே நித்திரைசெய்யும், சங்குகள் கழனிகளில் முத்துக்களைச் சொரியும், மயில்கள் சோலைகளிலாடும் என்பதாம். (௭)

பண்ணைவாய்த் தவழ் பணிலங்க ளுயிர்த்தவெண் முத்தும்
கண்ணுடைக் கரும்பீன்றவெண் முத்தமு மயங்கும்

தண்ணந்தாமரைசொரிந்தவெண்முத்தமுந்தயங்கி
வெண்ணிலாக்கதிர்விரித்தலிற்குமுதம்வாய்விள்ளும்.

(இ - ள்.) பண்ணைவாய் தவழ் - கழனிகளிடத்துத் தவழுகின்ற, பணிலங்கள் உயிர்த்த - சங்குகளால் தரப்பட்ட, வெள் முத்தும் - வெள்ளிய முத்துக்களும், கண் உடை - கணுக்களை உடைய, கரும்பு ஈன்ற - கரும்புகளால் தரப்பட்ட, வெள் முத்தமும் - வெள்ளிய முத்துக்களும், கமழும் - பரிமளிக்கின்ற, தண் - குளிர்ச்சிபொருந்திய, அம் தாமரை - அழகிய தாமரைமலர்களால், சொரிந்த - தரப்பட்ட, வெள் முத்தமும் - வெள்ளிய முத்துக்களும், தயங்கி - விளங்கி, வெள் நிலா கதிர் - வெள்ளிய சந்திரனது கிரணத்தை, விரித்தலின் - பரப்புதலினாலே, குமுதம் - அல்லிமலர்களானவை, வாய் விள்ளும் - (சந்திரோதயமில்லாத காலத்திலும்) மலரும், எ-று.

(க-து.) சங்கின் முத்துக்களும், கரும்பின் முத்துக்களும், தாமரை முத்துக்களும் கிரணங்களை விரித்தலால் அல்லிமலர்கள் மலரும் என்பதாம்.

சங்கு முதலானவைகளிலே முத்துப் பிறக்குமென்பது "தந்திவராகமருப்பிப்பிபூகந்தழைகதலி, நந்துசலஞ்சலமீன்றலைகொக்குநளினமின்னார், கந்தரஞ்சாலிகழைகன்னலாவின்பல்கட்செவிகார், நிந்துவும்புகர்முத்தமீனுமிருபதுமே" என்பதனாலறிக. முத்தாகிய வுபமேயத்திலே சந்திரனாகிய வுபமானத்தின் குணத்தை ஆரோபித்தலாற் காட்சியணி. (அ)

விழுந்தவஞ்சிறைவண்டினமிதிப்பமெல்லரும்பு
கிழிந்துவார்தருதேறலுங்கிளர்சினைப்பலவின்
பழங்கனிந்துவீழ்தேறலும்பழனங்கடோறும்
வழிந்துபாய்தலின்வானுறவளர்வனசெந்நெல்

(இ - ள்.) விழுந்த - (மேல்) விழுந்த, அம் சிறை - அழகிய சிறைகளையுடைய, வண்டு இனம் - வண்டுகளுடைய கூட்டங்களானவை, மிதிப்ப - துவைக்க, மெல் அரும்பு - மெல்லிய அரும்புகளானவை, கிழிந்து - கிழிய, வார் தரு தேறலும் - (அவைகளிலிருந்து) ஒழுகுகிற தேனும், கிளர் சினை பலவின் - விளங்குகின்ற கிளைகளையுடைய பலா மரங்களுடைய, பழம் - பழங்களானவை, கனிந்து வீழ் - கனிய (அவைகளிலிருந்து) விழுகின்ற, தேறலும் - தேனும், வழிந்து - பெருக்கெடுத்து, பழனங்கள்தோறும் - கழனிகளிலெல்லாம், பாய்தலின் - பாய்தலினாலே, வான் உற - ஆகாசத்தைத் தொடும்படி, செந்நெல் - செந்நெற்பயிர்களானவை, வளர்வன - வளரும், எ-று.

(க-து.) மலர்களின் தேனும், பலாப்பழங்களின் தேனும், கழனிகளிற் பாய்தலின்றுற செந்நெல் விளைவன என்பதாம்.

கிழிய, கனிய என்பன கிழிந்து கனிந்து எனத் திரிந்து வந்தன 'வானின்றுலகம்வழங்கி' என்பதில் நிற்பவென்பது நின்றெனத்திரிந்தமைபோல். செந்நெற்பயிருக்குந் தேறலுக்குஞ் சம்பந்தமில்லா

திருக்கச் சயப்பந்தனைக் கரப்பித்தமையால் தொடர்புயர்வு நவிற்சி யணியாம். (௯)

கூனிரும்பினிற்குறைத்தரிசுமையிற்கொடுபோய்
மேனிவந்துயர்வரையெனப்போர்பலவேய்ந்து
நீனிறக்கரும்பகட்டினாற்றெழித்துவைநீத்துத்
தூநிறத்தநெற்பண்டியிற்பற்பலர்தொகுப்பார்

(இ-ள்) கூன் இரும்பினில் குறைத்து - (அரிவாளினாலே) அறுத்து, அரி - (அவ்வறுக்கப்பட்ட) அரிகளை, சுமையில் கொடுபோய் - சுமைகளாக்கிக் கொண்டுபோய், மேல் நிவந்து உயர் வரை என - மேல் ஓங்கிய மலைகளைப்போல (தோன்ற), பல போர் வேய்ந்து - பலவாகிய போர்களைப்போட்டு, நீல் நிறம் - நீல நிறம் பொருந்திய, கரும் பகட்டினால் - பெரிய கடாக்களினாலே, தெழித்து - துவைப்பித்து, வை நீத்து - வைக்கோலைக் கழித்து, தூ நிறத்த நெல் - பரிசுத்தமாகிய சாதியையுடைய நெற்களை, பண்டியில் - வண்டிகளால் (கொண்டுபோய்), பற்பலர் தொகுப்பார் - பலபல சாதியாரும் (களஞ்சியங்களிலே) நிறைப்பார்கள், எ-று.

(க-து) நெற்கதிரையறுத்துக் கடாக்களால் மிதிப்பித்து வைக்கோலை நீக்கி அந்நெற்களைப் பண்டியிற் கொண்டுபோவார்கள் என்பதாம்.

கூனிரும்பு—இருபெயரொட்டாகுபெயர். நிவந்துயர்—ஒருபொருண்மேல் வந்த இருசொற்கள், இதற்கு 'ஒருபொருளிருசொற் பிரிவிலவரையார்' என்பது விதி. நீல்—கடைக்குறை. (௧௦)

[இதுமுதற் பதினொருபாட்டுகளால் அந்நாட்டிலுள்ளோர்
செல்வமுதலிய சிறப்புகள் சொல்லப்படுகின்றன]

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

குரும்பைமென்முலையாராடக்கூந்தலினறவந்தோய்ந்த
இரும்புனலாறுபாயவெறிதிரைசுருட்டுந்தெண்ணீர்க்
கருங்கடற்புலவுநீங்கிநறுமணங்கமழுமென்றால்
முருந்துறழ்மூரலார்தமிகுதியைமொழியலாமோ

(இ-ள்) குரும்பை - தென்னம்பிஞ்சுபோன்ற, மெல் முலையார் - மெல்லிய முலைகளையுடையமாதர், ஆட - முழுக, கூந்தலில் - (அவர்) தலைமயிரிலுள்ள, நறவம் தோய்ந்த - சாந்தத்தோடு கலந்த, இரும் புனல் - பெரிய நீரானது, ஆறு பாய - ஆற்றிலே (போய்) விழ, எறி திரை சுருட்டும் - வீசுகின்ற அலைகளை மடக்குகின்ற, தெள் நீர் - தெளிவுபொருந்திய நீரையுடைய, கரு கடல் - கரிய கடலினது, புலவு - புலானாற்றத்தை, நீங்கி - நீங்கச்செய்து, நறு மணம் - நல்ல மணமானது, கமழும் என்றால் - (அக்கடலிடத்தே) மணக்குமென்றால், முருந்து உறழ் - மயிலிறகினடியை ஒத்த, மூரலார் மிகுதியை - பற்களையுடைய அவரது பெருக்கத்தை, மொழியலாமோ - (நான்) சொல்லலாமோ, எ-று. தம்—சாரியை, ஓ—எதிர்மறை.

(க-து.) மாதர்களாடிய நீர்த்துறையிலே கடலாளன்று புலால் நாற்றம் நீங்கி மணம் வீசுமாதலால் அவ்யாற்றின்பெருக்கத்தைச் சொல்லலாமோ வென்பதாம்.

நறவமென்னும் வாசனைப்பெயர் அதனையுடைய மயிர்ச்சாந்தத்தை யுணர்த்தலால் ஆகுபெயர். நீங்கியென்பது பிறவினைப் பொருளைத் தந்தது, ''குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும்'' என்பதிற் பொன்றி யென்பதுபோல். அந்நாட்டுமகளிரது செல்வ மிகுதியைச் சொல்லுதலால் வீறுகோளணியாம். (கக)

பூமலி தடங்க டோறும் புனல்குடை மகளி ரீட்டம்
காமரு பழனந் தோறுங் கடைசியர் குரவை யீட்டம்
தேமலர்ச் சோலை தோறுஞ் செழுங்குயிற் றொழுதி யீட்டம்
கோமறு கிடங்க டோறுங் குணில்பொரு முரசி னீட்டம்

(இ-ள்.) பூ மலி தடங்கள் தோறும் - மலர்களாலே நிறைந்த குளங்களிலெல்லாம், புனல் குடை - நீராடாநின்ற, மகளிர் ஈட்டம் - மாதரது கூட்டமும், காமரு பழனந்தோறும் - அழகிய வயல்களிலெல்லாம், குரவை - கைகோத்தாடுதலையுடைய, கடைசியர் ஈட்டம் - உழத்தியரது கூட்டமும், தேன் மலர் சோலைதோறும் - வாசனைபொருந்திய மலர்களையுடைய சோலைகளிலெல்லாம், தொழுதி - ஒலித்தலையுடைய, செழு குயில் ஈட்டம் - செழிய குயில்களது கூட்டமும், கோ - அரசரது, மறுகு - வீதிகளுடைய, இடங்கள் தோறும் - இடங்களிலெல்லாம், குணில் பொரு - குறுந்தடியால் அடிக்கப்படுகின்ற, முரசின் ஈட்டம் - முரசங்களது கூட்டமும், (இருக்கும்), எ-று.

(க-து.) குளங்களெங்கும் நீராடுமாதர் கூட்டங்கள் வயல்களெங்கும் உழத்தியர் கூட்டங்கள் சோலைகளெங்குங் குயில்கூட்டங்கள் இராஜவீதிகளெங்கும் பேரிகைக்கூட்டங்கள் என்பதாம்.

காமரு—உகரம் சாரியை. தொழுதி - புள்ளொலி. கோ—சாதி யொருமை. (கஉ)

கறுவொடு மொன்றோ டொன்று காரண மின்றிச்
சீறிப், பொறியுடைக் குறும்பூழ் தம்மிற் போர்செய்யப்
பொருந்து மோதை, செறிமயிர்த் தகர்க டம்மிற் றீயெ
ழத் தாக்க னோக்கி, அறைகழல் வீர ரார்க்கு மடலையை
யவிக்கு மன்றே

(இ-ள்.) பொறி உடை குறும்பூழ் - புள்ளிகளையுடைய காடைகளானவை, தம்மில் ஒன்றோடொன்று - தம்முள்ளே ஒன்றுடனொன்று, காரணமின்றி - ஏதுவில்லாமல், கறுவொடும் சீறி - கறுவுதலுடனே சீறிக்கொண்டு, போர் செய - சண்டையைச் செய்யும்படியாக, பொருத்தும் - (அவற்றைக்) கூட்டுதற்குள்ளாகின்ற, ஓதை - (சிறுவர்) ஓசையானது, செறி மயிர் - நெருங்கிய மயிர்களையுடைய, தகர்கள் - ஆட்டுக்கடாக்கள், தம்மில் - தம்முள்ளே, தீ எழ - நெருப்பானது தோன்ற, தாக்கல் நோக்கி - (ஒன்றையொன்று) முட்டுதலைப் பார

ந்து, அறை கழல் வீரர் - ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய வீரரானவர், ஆர்க்கும் - (ஆச்சரியப்பட்டு) ஒலிக்கின்ற, அமலையை - ஓசையை, அவிக்கும் - அடக்கும், எ-று. ஏ—அசை.

(க-து) காளைகளைச் சண்டைசெய்விக்குஞ் சிறுவர்கள் சத்தமானது ஆட்டுக்கடாக்களைச் சண்டைசெய்வித்துப்பார்க்கும் வீரர் சத்தத்தையடக்கும் என்பதாம்.

தகுதிபற்றிக் காளைச்சண்டைக்குச் சிறுவரென்பது வருவிக்கப்பட்டது. கழல் - வீரக்காலணி. "வீரந்திகழ் வீங்கியகழலே யாடவர் கான்மிசை யணிவடம்" என்பதனாலறிக. (கங)

மாதர்மென் முல்லையீன்ற வாண்முகை யனைய முரல்
கோதறு கருணை தீம்பால் கொழுங்கனி யிவற்றி னோடும்
ஆதுலர் யாவ ரென்ன வதிர்குரன் முரசிற் சாற்றி
வேதியர்க் கருந்திப் பின்னர் விருந்தொடு நுகர்வர் மாதோ.

(இ-ள்.) ஆதுலர் - யாசகர், யாவர் என்ன - யாவரென்று, அதிர் குரல் முரசின் - அதிர்கின்ற ஓசையையுடைய முரசினாலே, சாற்றி - விளம்பி (அறிவித்து), மாதர் மெல் முல்லை ஈன்ற - அழகிய மெல்லிய முல்லைக்கொடியினால் தரப்பட்ட, வால் முகை அனைய - வெள்ளிய அரும்புகளோடொக்கும், முரல் - சோறும், கோதறு கருணை - குற்றமற்ற பொரிக்கறியும், தீம் பால் - இனிமையாகிய பாலும், கொழுங் கனி - செழிய பழமும், இவற்றினோடும் - ஆகிய இவற்றோடு மற்றையுணவுகளையும், வேதியர்க்கு அருந்தி - அந்தணரை (முன்னே) உண்பித்து, பின்னர் - (அதன்) பின்பு, விருந்தொடும் - (சுற்றத்தார் முதலியோரோடன்றி) விருந்தினரோடும், நுகர்வர் - (அந்நாட்டோர்) உண்பர், எ-று. மாது, ஓ,—அசைகள்.

(க-து.) யாசகரை வரும்படி முரசறைவித்து முன்பிராமணரை உண்பித்துப் பின் விருந்துடனுண்டார் என்பதாம்.

உவமை இரண்டும்—எச்சம் வேதியர்க்கு—உருபுமயக்கம். (கச)

முல்லையங் கோதை நல்லார் முகமதி வெயர்வு தோன்ற
வல்லிநுண் மருங்குல் நோவ வால்வளை வாய்விட் டார்ப்ப
மெல்விரல் காந்தட் சேப்ப வெண்டயிர் கடையு மோதை
கொல்புலி முழக்க மென்ன வயின்றொறுங் குளிறு மாதோ.

(இ-ள்.) முல்லை அம் கோதை நல்லார் - முல்லைமலர்களைச் சூடிய அழகிய கூந்தலையுடைய இடைச்சியர், முகம் மதி - (தமது) முகமாகிய சந்திரனிடத்து, வெயர்வு தோன்ற - வேர்வையானது உண்டாகவும், வல்லி நுண் மருங்குல் நோவ - பூங்கொடிபோலும் நுட்பமாகிய இடையானது வருந்தவும், வால் வளை வாய்விட்டு ஆர்ப்ப - வெள்ளிய சங்க வளையல்களானவை (ஒன்றோடொன்று தாக்குண்டு) ஒலிக்கவும், மெல் விரல் - மெல்லிய விரல்கள், காந்தள் சேப்ப - காந்தண் மலர்போல சிவக்கவும், வெள் தயிர் - வெள்ளிய தயிரை, கடையும் ஓதை - கடைதலினாலுண்டாகின்ற ஓசையானது, கொல் புலி - கொல்

லுகின்ற புலியினது, முழக்கம் என்ன - உறுமுதல்போல, வயின்றொறும் குளிறும் - (அவர்) வீடுதோறும் ஒலிக்கும், எ-று. மாது, ஓ,— அசைகள்

(க-து) இடைச்சியர் தயிர்கடையுஞ் சத்தமானது புலி முழக்கம்போல வீடுகளெங்குஞ் சத்திக்குமென்பதாம்.

நிலமத்திட்டுத் தயிர் கடைகின்ற இடைச்சிகளுக்கு அப்போது உண்டாகின்ற முகம் வெயர்த்தலாதியாகிய சுபாவத்தைச் சொல்லுதலாகிய தன்மை நவிற்சியணியும் மெய்ப்புலிமுழக்கமென்னக் குளிறுமென்னும் உவமையணியுஞ் சேர்ந்துவருதலால் சேர்வையணியாம். ()

பூங்கரும்புடைந்தீஞ்சாற்றடுபுகைபுயலென்றெண்ணி
மாங்குயிற்றொகுதியாவும்வாய்விடாதொழிந்தமஞ்ஞை
தூங்கிசைவண்டுந்தேனுஞ்சுரும்பொடுஞிமிறும்பாடத்
தேங்கமழ்சோலைதோறுஞ்சிறைவிரித்தாடுமாதோ

(இ-ள்) உடைந்த பூ கரும்பு தீ சாறு - (ஆலையிற்) சிதைந்த அழகிய கரும்புகளினுடைய தித்திப்பாகிய சாற்றை, அடு புகை - காய்ச்சுமிடத்தெழுகின்ற தூமத்தை, புயல் என்று எண்ணி - மேகமென்று நினைந்து, மா குயில் - மாமரங்களிலுள்ள குயில்களுடைய, தொகுதி யாவும் - கூட்டங்களெல்லாம், வாய்விடாது ஒழிந்த - கூவா தொழிந்தனவாக, மஞ்ஞை - மயில்களானவை, தூங்கு இசை - நாட்டிய ராகத்தை, வண்டும் - கருவண்டுகளும், தேனும் - தேன்வண்டுகளும், சுரும்பொடு - பொறிவண்டுகளுடனே, ஞிமிறும் - பொன்வண்டுகளும், பாட - பாடுதல்செய்ய, தேன் கமழ் சோலைதோறும் - தேனுடைய மணக்கின்ற சோலைகளிலெல்லாம், சிறை விரித்து - கலாபத்தை விரித்துக்கொண்டு, ஆடும் - கூத்தாடும், எ-று. மாது, ஓ,— அசைகள்.

(க-து) கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகையி லெழும் புகையை மேகமென்று குயில்கள் கூவாதடங்கின, வண்டுகள் பாட மயில்கள் நடனமாடின என்பதாம்.

ஒழிந்தவென்பது முற்றெச்சமாய் வந்தது, "பாயுமாரிபோற் பகழிசிந்தினு, ராயமத்தெறி தயிரினுயிரோ" இதிற் சிந்தினுரென்பது சிந்தவென்னும் பொருளைத் தந்ததைப்போல. வண்டு, தேன், சுரும்பு, ஞிமிறு, இந்நான்கும் வண்டுகளின் சாதிபேதம், "மங்கைநல்லவர் கண்ணுமன்முமபோன, றெங்குநாடியிட்டுஞ் சுரும்புகாள், வண்டுகாண் மகிழ் தேனினங்காண்மது, வுண்டுதேக்கிடு மொண்ஞிமிறீட்டங்காள்" என்பதனாலறிக. தேன் தேம் என் றாறு திரிந்தது. மேகத்தைக் காணும்போது குயில்களுக்குத் துன்பமும் மயில்களுக்கு இன்பமும் உண்டாகுகை சுபாவம். புகையை மேகமென்று மயங்குதலினாலே மயக்கவணியாகும். (௧௩)

அரக்கெறிகுமுதச்செவ்வாயலர்முலைப்பந்லார்தம்
திருக்கிளர்கமலம்பூத்தசேயரிக்கண்ணும்வாவி

கற்புடைய மாதருக்கு முல்லைப்பூ உரித்தாதலால் அன்பொடு வளர்த்த முல்லை யென்றார். இது "முல்லையந் தொடையருந்ததிமுத லெழுமுனிவ, ரில்லறம்புரிதுணைவியர்" என்பதனாலுமறிக. அதற்கு விழாவாவது பருவப்பெண்ணுக்கு முதற்பூப்பிலே செய்யப்படுஞ் சிறப்பை அதன் முதற்பூப்பிலே செய்தல். வாத்திய வோசைக்குங் கடலோசைக்கும் பகையில்லாமையிலே பகையைக் கற்பித்தமையி னாலே தொடர்புயர்வு நவிற்சியணியாகும். (கஅ)

அவிரிழைசுமக்கலாற்றாதந்நலார்பரிந்துநீத்த
திவளொளிமணியுமுத்துஞ்சிந்தியமுன்றிறோறும்
குவிமுலைக்கயவாய்ச்செய்யகட்குடம்புரைசெருத்தன்மேதி
கவையடிபெயர்ப்பமாழ்கிக்காற்றளர்ந்தொதுங்குமன்றே.

(இ-ள்) அந்நலார் - அத்தேசத்து மாதரால், சுமக்கல் ஆற்றாது - சுமக்கமாட்டாமல், பரிந்து நீத்த - வருந்திக் கழற்றியெறியப்பட்ட, அவிர் இழை - ஒளிசெய்கின்ற ஆபரணங்களினுடைய, திவள் ஒளி - அசையாநின்ற ஒளியையுடைய, மணியும் முத்தும் - பலவித மணிகளும் முத்துக்களும், சிந்திய முன்றில் தோறும் - இறைந்து கிடக்கின்ற வீட்டு முன்னிடந்தோறும், குவி முலை - குவிந்த முலைகளையும், கய வாய் - பெரியதாகிய வாயையும், செம் கண் - சிவந்த கண்களையும், குடம் புரை செருத்தல் - குடம்போலும் மடியையுமுடைய, மேதி - எருமைகளானவை, கவை அடி - பிளப்பையுடைய அடிகளை, பெயர்ப்ப மாழ்கி - எடுத்துவைக்க வருந்தி, கால் தளர்ந்து - கால்களானவை சோர்ந்து, ஒதுங்கும் - (பக்கங்களிலே) விலகும், என்று அன்று, ஏ,—அசைகள்.

(க-து) பெண்கள் கழற்றியெறிந்த ஆபரணங்களின் நவமணிக ளின்மேல் எருமைகள் பிளவடி வையாமல் விலகிப்போமென்பதாம்.

இல்முன் முன்றில் என இலக்கணப் போலியாய்வந்தது. அடி - கிழக்கால். தளர்ந்து என்னுஞ் சினைவினை ஒதுங்குமென்னும் முதல்வினை யோடு முடிந்தது. இதற்கு "அம்முக்கிளவியுஞ் சினைவினைதோன்றிற் சினையொடுமுடியா முதலொடுமுடியினும் வினையோரனைய" என்பது விதி. அம்மணிகளும் முத்துக்களுங் குளம்பினைக்குத்தி வேறுபடாமல் நோ மென்றஞ்சி ஒதுங்குமென்பது கருத்தாயிற்று. செல்வ மிகுதியைச் சொல்லுதலால் வீறுகோளணியாம். (கக)

பொரியரைத்தேமானெற்றிப்பூங்கனியிழிந்ததேனும்
விரிதலையரம்பையீன்றமென்பழனுகுத்ததேனும்
முருக்கவிழ்சுளைவாய்விண்டமுட்புறக்கனியின்றேனும்
குருகுபாய்தடமுமியாறுங்குறைவறப்பெருகுமன்றே.

(இ-ள்.) பொரி அரை தேமா - பொருக்குகளோடு கூடிய அரையை யுடைய தித்திப்பு மாமரத்தினது, பூ கனி - அழகிய பழங்களானவை, நெற்றி - முதிர, இழிந்த தேனும் - (அவைகளிலிருந்து) ஒழுகிய மது வும், விரி தலை அரம்பை - விரிந்த தலையையுடைய வாழைகளால், ஈன்ற - தரப்பட்ட, மெல் பழன் - மெல்லிய பழங்கள், உகுத்த தே னும் - சொரிந்த மதுவும், விண்ட - வெடித்த, முட்புறக்கனியின் -

நிறத்தையுடைய மணிகளும், சாந்தம் - சந்தனக்கட்டைகளும், நிலை மடக்கு உற்ற ஆற்றால் - கலந்துகிடக்குந் தன்மையால், தண் மதி தவழும் - தண்ணிய சந்திரனால் உராய்ந்து செல்லப்படுகின்ற, கோடு - சிகரத்தையுடைய, மலை வளம் - மலையினது வளத்தை, யான் பெரிது எனக்கோ - நான் அதிகமென்று சொல்லுவேனோ, வால் வளை - வெண்மை பொருந்திய சங்குகளானவை, பரந்து பெயும் - பரவி மேய்கின்ற, அலை வளம் - அலைகளையுடைய கடலினது வளப்பத்தை, யான் பெரிது எனக்கோ - நான் அதிகமென்று சொல்லுவேனோ, யாது எவன் - (இவற்றுள்ளே) எதை (அதிக) மென்று, அறைவல் - (யான்) சொல்லுவேன், எ-று. மாது, ஓ,—அசைகள்

(க-து,) மலைவளத்தைப் பெரிதென்று சொல்லுவேனோ கடல்வளத்தைப் பெரிதென்று சொல்லுவேனோ என்பதாம்

முத்து முதலியவற்றை விரவிக் கூறியபோதும் உரிமை நோக்கிக் கடலுக்கு முத்தும் நீலமணியும், மலைக்குப் பொன்னுஞ் சாந்துங் கொள்ளப்படும். நீலமணி கடலிற் பிறவாதேனுங் கடலகத்துள்ள வேறு தீவிற் பிறத்தல் பற்றி அதன் வளமெனப்பட்டது. மலைக்குங் கடலுக்கும் விசேடணங்களை மிகுத்துச் சொன்னமையால் அகில் முதலிய மற்றை மலைவளங்களும் பவளமுதலிய மற்றைக் கடல்வளங்களுங் கொள்ளப்படும். நானிலங்களின் முதனிலமாய கடைநிலமாக கூறவே மற்றை நிலங்களுங் கூறினமையும் இதில் ஐயவணியினாலே அப்பலவளங்களு மிகுதிருக்கின்றமை வெளிப்படையாய்த் தோன்றுகின்றது. (உஉ)

உளங்களித் தாயரூதும் வேயிசை செவியி னோர்ந்து
துளங்குவெள் ளருவிக் குன்றிற் றோகைகண் டுஞ்சுந் தெ
வளங்கெழு மருதவேலி வண்டுதா லாட்ட நெய்தல் [ணீர்
இளங்கனிக் குமரி யன்ன மினிதுயில் கூரு மாதோ

(இ-ள்.) ஆயர் - (முல்லைநிலத்துள்ளார்) இடையர், உளம் களித்து ஊதும் - மனமகிழ்ந்து ஊதுகின்ற, வேய் இசை - புல்லாங்குழலோசைகளுடைய இராகத்தை, செவியின் ஓர்ந்து - காதுகளினாலே கேட்டு, துளங்கு - அசைகின்ற, வெள் அருவி - வெள்ளிய வெள்ளங்களையுடைய, குன்றில் - குறிஞ்சி நிலத்தில், தோகை - மயில்களானவை, கண் துஞ்சும் - தூங்கும், தெள் நீர் வளம் கெழு - தெளிந்த நீரினது வளமானது பொருந்திய, வேலி - வேலியையுடைய, மருதம் - மருதநிலத்தில், வண்டு தாலாட்ட - வண்டுகளானவை தாலாட்டிசையைப் பாட, நெய்தல் - நெய்தனிலத்தில், இள கனி குமரி அன்னம் - இளமைபொருந்திய கனிப்பையுடைய பெட்டையன்னங்களானவை, இனிது துயில் கூரும் - இனிய நித்திரைமிகும், எ-று. மாது, ஓ,—அசைகள்.

(க-து.) இடையர் புல்லாங்குழலோசைகேட்டு மலையில் மயில்கள் நித்திரை செய்யும், மருதநிலத்தில் வண்டுகள் தாலாட்டிசைபாட நெய்தனிலத்தில் அன்னங்கள் நித்திரை செய்யும் என்பதாம்.

முல்லையோடு குறிஞ்சிக்கும் மருதத்தோடு நெய்தலுக்கும் அணிமை சொல்லப்பட்டது. (உங)

கொடியனமகளிர்தங்கள் குழையுநுண்மருங்கேவாளா
படுகொலைபுரிவமாதர் படைநெடுங்குவளைக்கண்ணே
அடிமிசைமுறையிட்டென்றுமரற்றுவசிலம்பேசூழ்ந்து
கடிமதுநுகர்வவன்னோர் கருங்குழற்காமர்வண்டே.

(இ-ள்.) மகளிர் தங்கள் - மாதருடைய, குழையும் நுண் மருங்கே - வாடுகின்ற நுண்ணிய இடைகளே, கொடியன - கொடுமை யுள்ளனவாம், (அன்னோர்) - அவருடைய, மாதர் - அழகிய, படை - வாளும், குவளை - நீலோற்பலமும் (போன்ற), நெடு கண்ணே - நெடிய கண்களே, வாளா - வீணாக, படு கொலை - கொடுமையான கொலைத்தொழிலை, புரிவ - செய்வனவாம், சிலம்பே - நூபுரங்களே, (அன்னோர்) அடிமிசை முறையிட்டு - அவருடைய அடிகளின்மேல் (விழுந்து தங் குறைகளை) முறையிட்டு, என்றும் - எந்நாளிலும், அரற்றுவ - புலம்புவனவாம், அன்னோர் கரு குழல் - அவருடைய கரிய கூந்தலிலுள்ள, காமர் வண்டே - அழகிய வண்டுகளே, சூழ்ந்து - சூழ்ந்து, கடி மது நுகர்வ - (வேதநூலில்) விலக்கப்பட்ட கள்ளைக் குடிப்பனவாம், எ-று.

மருங்கே கொடியன என்பதற்கு—மருங்கே - இடைகளே, கொடியன - கொடிபோல்வன எனவும், கண்ணே வாளா படுகொலைபுரிவ என்பதற்கு—கண் - கண்களே, வாளா - காரணமில்லாமல், படு - வருத்துகின்ற, கொலை - வருத்தத்தை, புரிவ - செய்வன எனவும்; சிலம்பே யடிமிசை முறையிட்டென்று மரற்றுவ என்பதற்கு—சிலம்பே - சிலம்புகளே, அடிமிசை - அடிகளின்மேல், முறை - முறைப்பாக, இட்டு - தரிக்கப்பட்டு, அரற்றுவ - ஒலிப்பன எனவும், வண்டே சூழ்ந்து கடிமது நுகர்வ என்பதற்கு—வண்டே - வண்டுகளே, சூழ்ந்து - மொய்த்து, கடி - பரிமளம் பொருந்திய, மது - பூந்தேனை, நுகர்வ - குடிப்பன, எனவும் பொருள்கொள்ளலாம்.

(க - து) அந்நாட்டு மனிதர்களிலே கொடியவரும், வீணாக இறக்குமபடியான கொலைத்தொழிலைச் செய்பவரும், பிறரடிகளின்மேலே வீழ்ந்து தங்குறைகளை முறையிட்டுப் புலம்புவோரும், வேதநூலிலே விலக்கப்பட்ட கள்ளைக்குடிப்பவரும் இல்லையென்பதாம்.

இடைமுதலியவைகளை அம்மனிதரிற் பிரித்தலால் ஏகாரங்கள் பிரிநிலைகள். கொடுமை முதலானவற்றை மனிதர்களினொழித்து இடைமுதலானவற்றிற் காட்டலால் ஒழித்துக் காட்டணியாம்.

கடல்படுமமுதுமல்லற் கானபடுமமுதுமோங்கும்
தடவரையமுதுமொன்றித் தலைமயக்குற்றவாற்றால்
உடைதிரையமுதமொன்றேயுடையவிண்ணுடுக்கொல்லோ
விடத்துநாட்டிற்குநேராநிகழ்த்தலாந்தன்மைத்தம்மா.

(இ-ள்.) கடல் படும அமுதும் - கடலினகண் உண்டாகிய (உப்பு முதலாகிய) அமுதமும், மல்லல் - வளமபொருந்திய, கான படும் அமுதும - காட்டினகண் உண்டாகிய (பால் முதலாகிய) அமுதமும்,

ஓங்கும் - உயர்ந்த, தடம் வரை அமுதும் - பெரிய (மலையின்கண்) உண்டாகிய (தேன் முதலாகிய) அமுதமும், ஒன்றி - பொருந்தி, தலைமயக்கு உற்ற ஆற்றால் - கலந்துகிடக்கிற காரணத்தால், உடை திரை- (கரையை) உடைக்கின்ற அலைகளையுடைய (கடலின்கண் உண்டாகிய), அமுதம் ஒன்றே உடைய - ஓரமிர்தத்தையே (தன்னிடத்தி) லுடைய, விண் நாடோ - தெய்வநாடோ, நிடத நாட்டிற்கு - நிடததேசத்திற்கு, நேர் ஆ நிகழ்த்தலாம் தகைமைத்து - ஒப்பாகச் சொல்லுதற்கேற்ற குணத்தையுடையது, எ-று. கொல்—அசை, ஓ—எதிர்மறை.

(க-து) கடலிலும் மலையிலும் காட்டிலு முண்டாகின்ற திரவியம் பொருந்தியிருப்பதால் இந்நாட்டைப் பொன்னாட்டுக் கொப்பாகச் சொல்லலாம் என்பதாம்.

அமுது உண்ணுதற்குரிய அறுசுவை புனைவுகளுக்குந் தேவருண விற்குஞ் சிலேடை, "அமுதுபாற் றேவருணடி யார்புனல் சுதைசுவைப் பேர்" என்பதனாலறிக. உபமேயமாகிய நிடதநாட்டிற்கு உபமான மாகிய வோரமுதமுடைய தெய்வநாட்டினும் பல்லமுத முடைமை யாகிய விசேஷத்தைச் சொல்லுதலால் வேற்றுமையணியாம். (உரு)

நலனுறு குமரர் யார்க்கு நண்ணிய விருந்தோ டுண்டும்
பலகலைக் கேள்வி யாய்ந்தும் பகற்பொழு தினிது நீங்கும்
அலர்முலையந் நல்லார்தம லத்தகமலர்த் தாணீவிப்
புலவிகள் தீர்த்துஞ் சேர்ந்து நள்ளிருட் பொழுதும் போமால்

(இ-ள்.) நலன் உறு குமரர் யார்க்கும் - நற்குணங்களைப் பொருந்திய ஆடவரெல்லாருக்கும், நண்ணிய விருந்தோடு - (தம்மிடத்து) வந்த விருந்தினரோடு, உண்டும் - (அறுசுவையுண்டிகளை) யுண்ணலாலும், பல கலை கேள்வி ஆய்ந்தும் - பலவகையாகிய கலைகளைக் கேள்வியினாலே ஆராய்ச்சிசெய்தலாலும், பகல் பொழுது - பகற்காலமானது, இனிது நீங்கும் - இனியதாகக் கழியும், அலர் முலை அம் நல்லார் - அடிபருத்த முலைகளையுடைய அழகிய மங்கையருடைய, அலத்தகம் மலர் தாள் - செம்பஞ்சூட்டிய தாமரை மலர்போலும் அடிகளை, நீவி - தடவி, புலவிகள் தீர்த்தும் - ஊடல்களை நீக்குதலாலும், சேர்ந்தும் - (அவரைச்) சேர்தலாலும், நள் இருள் பொழுதும் - நடுவிராக்காலமும், போம் - (இனியதாகக்) கழியும், எ-று. தம்—சாரியை, ஆல்—அசை.

(க-து) வாலிபர்களுக்குப் பகற்பொழுதானது விருந்துண்ணுதலாலும், கல்விப் பயிற்சியினாலும் நீங்கும், இராப்பொழுதானது பெண்களின் பிணக்கை நீக்குதலாலும், அவர்களைச் சேர்தலாலும் நீங்கும் என்பதாம்.

உண்டு, ஆய்ந்து, தீர்த்து, சேர்ந்து, இந்நான்கும் வினையெச்சத் திரிபுகள். பல்கலைகளாவன—வேதவேதாங்கமுதலிய அறுபத்துநாலு கலைகளாம். இரவின் முதற்பங்கு உண்ணலாதிகளாலும், கடைப்பங்கு நித்திரையினாலும் கழிதலிற் பற்றி நள்ளிருட்பொழுதென்றார். (உசு)

[இதனுள் அங்கிட்ட தேசத்துள்ளே நளராஜனுக்கிடமாகிய மாவிந்த நகரத்தின் சிறப்பைப் புகழத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

கொல்லுலைவேற்கணல்லார் கொழுநரோடூடிநீத்த
வில்லுமிழ்கலன்களியாவுமிளிர்சுடரெறிக்குமாற்றால்
எல்லியும்பகலுந்தோன்றாதிமையவருலகமேய்க்கும்
மல்லன்மாவிந்தமென்னும்வளநகர்கூறலுற்றாம்

(இ-ள்) கொல் உலை - கொல்லனது உலைக்களத்திலே (காய்ச்சப்பட்ட), வேல் கண் - வேல்போலும் (சிவந்த) கண்களையுடைய, நல்லார் - மாதர்கள், கொழுநரோடு ஊடி - (தம்முடைய) கணவரோடு பிணங்கி, நீத்த - களைந்தெறிந்த, வில் உமிழ் கலன்கள் யாவும் - காந்தியை வீசுகின்ற ஆபரணங்களெல்லாம், மிளிர் சுடர் எறிக்கும் ஆற்றால் - விளங்குகின்ற கிரணங்களை வீசுகின்ற காரணத்தால், எல்லியும் பகலும் தோன்றா - இரா (இது) வென்றும் பக (லிது) வென்றும் அறியப்படாமல், இமையவர் உலகம் - தேவர்களது உலகத்தை, ஏய்க்கும் - ஒத்திருக்கின்ற, மல்லல் - செல்வத்தையுடைய, மாவிந்தமென்னும் - மாவிந்தமென்று சொல்லப்படுகின்ற, வள நகர் - பட்டணத்தினது சிறப்பை, கூறல் உற்றாம் - (யாம்) சொல்லத்தொடங்கினோம், எ-று.

(க-து) மாதர்கள் கழற்றியெறிந்த ஆபரணப் பிரகாசத்தினால் தேவலோகத்தைப் போன்ற மாவிந்த நகரவளப்பத்தைச் சொல்லுவாம் என்பதாம்.

கணவர்மேற் கோபித்திருந்த மாதர்கள் எறிந்ததலின் காய்ச்சப்பட்டவேலை யுவமானமாக்கினர். இராப்பகலுந் தோன்றாமையை ஆபரணகாந்தியின்மேலேற்றிப் பாவிகச் செய்யுட்சுவையை அங்கமாகக் கொண்டு இமையவருலகமேய்க்குமென்று முவமை வந்ததனால் கலவையணியாம். (உஎ)

நாட்டுப்படலம் முற்றும்.

---

## நகரப்படலம்

அஃதாவது நளனது இராசதானியாகிய மாவிந்தநகரத்தின் சிறப்பைச் சொல்லுகின்ற படலம்.

---

[இதனுள் மாவிந்தநகரத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது]

கலிநிலைத்துறை.

குடவளைகருவுயிர்த்திளைத்துநன்மணிகொழிக்கும்
மடுவில்வான்கருங்குவளைபூத்ததுபோன்மதில்சூழ
கடிகொண்மாநகர்நிழல்கதுவிடாதனால்
புடைகொணீர்நகருடுத்தலைப்பொய்க்கும்பேரகழி

(இ - ள்.) மதில் சூழ - மதில் சூழ்ந்த, கடி கொள் - காவலைக் கொண்டிருக்கிற, மா நகர் - பெருமை பொருந்திய (முன்சொல்லப்

பட்ட மாவிந்த) நகரமானது, குடம் வளை குலம் - குடம்போலும் சங்குகளது குலமானது, வயிறு உளைந்து - வயிறுநொந்து, இனம் மணி கொழிக்கும் - (ஒன்றற்கொன்) றினமாகிய முத்துக்களை சொரிதற்கிட மாகிய, மடுவில் - ஒருதடாகத்துள், வான நகர் உருவு - அமராவதி பட்டணத்தின்சாயலை, காட்டியது போலும் - தோன்றச்செய்ததை யொக்கும், நகர் உடுத்து - அந்நகரத்தினால் உடுக்கப்பட்டு, அலை பொங்கு - அலைகளால் விளங்குகின்ற, பேர் அகழி - பெரிய அகழியானது, அந்நிழல் கதுவிடாது - அந்நிழலினால் பற்றப்படாமல், அகன்ற - நீங்கிய, புடை கொள - சுற்றுப்பக்கத்தை (தனக்கிடமாகக்) கொண்ட, நீர் (போலும்) - நீரை யொத்திருக்கும், எ-று.

(க-து.) மாவிந்தநகரமானது ஒரு தடாகத்துள்ளே தோன்றிய தேவநகரம்போலு மிருந்தது, அம்மாவிந்த நகரத்தி னகழியானது அத்தடாகத்திற் றோன்றிய தேவநகரைச் சூழ்ந்த சலத்தைப்போலு மிருந்தது, எப்படியெனில், கண்ணாடியுள்ளே முகந் தோன்றியவிடத் தில் கண்ணாடிவடிவந் தோன்றாது, அம்முகந் தோன்றாவிடத்தில் அக் கண்ணாடி வடிவந் தோன்றும், இதுபோலவே தடாகத்துள்ளே தேவ நகரந் தோன்றியவிடத்தில் சலந் தோன்றாது, அத்தேவநகரந் தோன் றாவிடத்தில் சலந் தோன்றும், ஆகையால் தேவநகரத்தின் பிரதிபிம் பத்தையே மாவிந்தநகரமாகவும், பிரதிபிம்பத்தைச் சூழ்ந்த சலத்தை யே மாவிந்தநகரத்தி னகழியாகவுங் கொள்க என்பதாம்.

"குடவளைக்குலம் வயிறுளைந் தினமணி கொழிக்குமடுவில்" என்ற தனால் வானகரத்தின் பிரதிபிம்பம் உள்ளடங்குதற்குத் தகுந்த விசா லமுள்ள தென்பதாயிற்று. சங்குகள் முத்துக்களை மிகுதியாகத் தரு தல்தோன்ற "உளைந்து கொழிக்கு" மென்றார். போலுமென்னுஞ் செய்யுமென் வாய்பாட்டு முற்றுவினை ஈற்றயலுகரங்கெட்டு லகர மெய் னகரமெய்யாகத் திரிந்தது, இதற்குவிதி "அவற்றுள் செய்யு மென்னும் பெயரொருசுகிளவிக்கு" என்னுஞ் சூத்திரவுரையிற் காண்க" போன்மென்பது புடைகொள்ளாக்குங் கூட்டப்பட்டது, உடுத்து, கதுவிடாது என்பவை 'எழுதிவந்தவாலை' என்கிறவிடத்தே எழுதி யென்பதுபோலச் செயப்பாட்டு வினைப்பொருளைத் தந்தன. அந்த மாவிந்தநகரத்தை அமராவதியின் பிரதிபிம்பமாகவும், அந்த மாவிந்த நகரைச் சூழ்ந்த அகழியை அந்நிழலைச் சூழ்ந்த நீராகவுங் குறித்தலால் தற்குறிப்பணியாகும். (க)

[இதனால் அகழியின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கண்ணகன்றபே ரகழியி லுழக்கிய கரிகள்
தண்ணந்தாமரைத் தாளெனத் தடக்கையாற் பிலத்தில்
நண்ணுஞ்சேடனை யெடுத்தலச் சுடிகையி னுறி
உண்ணிலவுதொளிர் மணியினுறகையெனப் பறியும்

(இ-ள்) கண் அகன்ற - இடம்பரந்த, பேர் அகழியில் - பெரிய அகழியினகண், உழக்கிய கரிகள் - கலக்கிய யானைகள், தண் அம் தாமரை - தண்ணிய அழகிய தாமரையினுடைய, தாள் என - நாள

அற்றந்த சமயமென்பது "அற்றமே மறைவுஞ்சோர்வு மவகாசத் தானு மாகும்" என்பதனாலறிக. சதுரைமென்மதி யென்றதனாற் பூரண சந்திரனெனக் கொள்க. சந்திரன் சாளரத்துள்ளே நுழைதற் கிடம்பெறுமாறு புறத்தே சிறப்பெய்தி ஆழியிற் காட்டுமென்றார். சூரியனோடும் மதிலவாயிலூடு செல்லுஞ் சந்திரனும் மதிற்சாளரத்திறந்து சம பந்தஞ் சொல்லுதலால் தொடர்புயர்வு நவிற்சியணியாம். இதனால் அந்நகரத்து மதிலுக்கு அதிக உயர்வு தோன்றுகின்றது. (௩)

[இதுமுதல் மூன்று பாட்டுக்களால் வீடுகள் முதலிய வற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

மறுவிகந்த வெண்மதியென வயங்கிய பளிங்கின்
செறியுமாடங்கள் வெண்கதிர் பரப்பிச் செவ்வி
நறவுயிர்த்தலர்ந் தலர்ப்பகந் தலர்கற்பக நாட்டை
வெறுவிதாமென வெண்ணகை புரிவது போலும்

(இ-ள்.) மறு இகந்த - களங்கத்தினின்றும் நீங்கிய, வெண் மதி என - வெள்ளிய சந்திரனைப்போல, வயங்கிய - விளங்கிய, பளிங்கின் செறியும் - (பளிங்கு) சுவர்களாலவை செறிந்த, மாடங்கள் - மாளிகைகளானவை, வெண் கதிர் பரப்பி - வெள்ளிய கிரணங்களை விரிக்கின்ற, செவ்வி - அழகிலே, நறவு உயிர்த்து அலர்ந்த அலர் - தேனைச் சொரிகின்ற மலர்ந்த பூங்கொத்துகளால், மலி கற்பக நாட்டை - நிறைந்த கற்பகதருக்களையுடைய சுவர்க்கத்தைக் குறித்து, வெறுவிதாம் என - வறுமையுடையதென்று, வெண் நகை புரிவது போலும் - வெள்ளிய சிரிப்பைச் செய்வதை ஒக்கும் (அங்ஙனம்,) எ-று.

(க-து) மாடங்களானவை கிரணங்களை விரித்திட்ட வழகிலே பொன்னகரத்தைப் பார்த்துப் புன்னகை புரிவனபோலு மிருக்கின்றன என்பதாம்.

விரும்பப்படுகிற உண்டி அணி ஆடை முதலியவற்றைக் கற்பிக்கின்ற கற்பகதருவையுடைத்தாய மற்றெல்லாவுலகங்களாலும் புகழப் படுகை தோன்றக் கற்பகநாடென்றார். அப்படியிருந்தும் அது தன் பெருவளத்திற்குச் சிறிதாகக் காணப்படுதலால் மாவிந்தம் அதனை யிகழ்ச்சிசெய்து சிரிப்பதென்ற தாயிற்று. சிரிப்பதற்கேற்பத் தெரு வாயாகவும் மாடவரிசைகள் பல்வரிசைகளாகவும் கொள்க. பளிங்கு மாடங்களின் வெள்ளொளி வீசலாகிய தருமசம்பந்தத்தினாலே மாவிந்தத்தைச் சிரிப்பதாகக் குறித்தலாற் பொருட்டற்குறிப்பணி யாகும். இதனாலே மாவிந்தத்தின் வளஞ் சுவர்க்கவளத்திலும் மிகுந்துள்ளதென்பது தொனிக்கின்றது. (௪)

வடிகொள் வெண்சுதை தீற்றிய மாடநீள் கழுத்திற்
படியமைம் முகில்கதிர் விடுபாளிலாக் குழவி
முடியின் மீதுறத் தவழ்தலான் முழுமெயும் வெள்ளைப்
பொடியணிந்தருள் கறைமிடற் றண்ணலைப் பொருவும்

(இ-ள்) வடிகொள் வெண் சுதை - வடித்துக்கொள்ளப்பட்ட வெள்ளிய சுண்ணச்சாந்தை, தீற்றிய மாடம் - பூசிய மாளிகையானது,

நீள் கழுத்தில் - நீட்சிபொருந்திய (அதன்) கண்டத்தின்கண், மை முகில் படிய - கரிய மேகமானது படிந்திருக்க, கதிர் விடு பால் நிலாக் குழவி - கிரணங்களை வீசுகின்ற வெண்பிறையானது, முடியின்மீது உற தவழ்தலால் - (அதன்) முடியின்மேலே பொருந்த ஊர்தலால், முழு மெய்யும் வெள்ளைப்பொடி அணிந்தருள் - திருமேனிமுழுதிலும் விபூதியைப் பூசியருளிய, கறை மிடறு - (நஞ்சக்) கறைபொருந்திய கண்டத்தையுடைய, (நிலாக்குழவி முடியின்மீது) - பிறையானது முடியின்மேல், (உற) - பொருந்த, (தவழ) - ஊர்கின்ற, அண்ணலை - பரமசிவனை, பொருவும் - ஒத்திருக்கும், எ-று.

(க-து.) மாளிகையானது வடிவத்திற் சுண்ணச்சாந்தும் கழுத்திற் கரிய மேகமும் முடியிலிளம்பிறையும் பொருந்தியிருத்தலாற் பரமசிவனை யொப்பாகும் என்பதாம்.

நிலாக்குழவி முடியின் மீதுறத் தவழ்தல் பரமசிவனுக்குங் கூட்டப்பட்டது. மாளிகையினது வடிவத்திற் பூசிய சுண்ணச்சாந்து பரமசிவனது வடிவத்திற் பூசிய விபூதிபோலவும், அதனது கழுத்திலே படிந்த கரியமேகம் அவனது கழுத்திலே பொருந்திய நஞ்சக்கறைபோலவும், அதனது முடியின்மேலே தவழுகின்ற பிறை அவனது முடிமேலே தவழுகின்ற பிறைபோலவும் தோன்றுதலாலே, அது பரமசிவனுக்கு ஒப்பாக இருக்குமென்பதாம். இது உவமையணி. [illegible] அமரர்கள் சந்திர[illegible] தோன்றுகின்றது. (௫)

மழைக்கண் மங்கையர் பயிற்று மரகதமணியின்
இழைத்த செய்குன்றின் பைங்கதிர் பொன்னில்தெய்வக்
குழைந்த தருநீழல் குலவு மானினங்கள்
தழைத்த புல்லென விழைவொடு தனித்தனி கறிக்கும்.

(இ-ள்.) மழைக் கண் மங்கையர் - குளிர்ச்சிபொருந்திய கண்களையுடைய மகளிரானவர், பயிற்று - (ஏறி) விளையாடுதற்கு, மரகத மணியின் இழைத்த - மரகதமணிகளாலே பதிக்கப்பட்ட, செய்குன்றின் - விளையாடல் மலைகளுடைய, பைங்கதிர் - பசிய கிரணங்களானவை, பொன்னில் தெய்வ - தேவலோகத்தினுடைய, குழைந்த தரு - தளிர்த்த பசுந்தருக்களது, நீழலில் குலவும் - நிழலின்கண் தங்குகின்ற, ஆன் இனங்கள் - பசுக்களுடைய கூட்டங்களானவை, தழைத்த புல் என - செழித்த புற்களென்று நினைத்து, விழைவொடு - [illegible]கிரமாக, தனித்தனி கறிக்கும் - ஒவ்வொன்றாக (அக்கிரணங்களை) கௌவும், எ-று.

(க-து.) செய்குன்றிலிழைத்த மரகதக்கிரணங்களைத் தெய்வப் பசுக்கள் புற்களென்று கடிக்கும் என்பதாம்.

மற்றை மலைகள்போலப் படைப்புக்காலத் துண்டாயதன்றி விளையாடுதற்காகச் செய்யப்பட்டமையாற் செய்குன்றென்றார். மரகதமணியின் கிரணத்தைப் புல்லென்று மயங்கினமையான் மயக்கவணியாகும். இதற்கு அக்கதிருக்குந் தெய்வலோகத்திற்குஞ் சம்பந்

த்தைக் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சியணி அங்கமாதலால் கலவையணியாம். (௬)

புதுமணத்தமென்மகளிர்சாளரத்திடைப்பொருந்து
மதியையின்னுயிர்ப்பாங்கியர்மறைந்தனர்நோக்கும்
கதிர்கொள்வாண்முகமென்றுநங்காதலர்ப்புல்லும்
பதுமமென்கரநீக்கிநீள்படைவிழிபுதைப்பார்

(இ-ள்.) புதுமணத்த - புதிய விவாகத்தையுடைய, மென் மகளிர் - மெல்லிய மங்கையரானவர், சாளரத்திடை - (மேல்வீட்டின்) பலகணியினப்புறத்து, பொருந்து மதியை - சேர்ந்த சந்திரனை, இன் உயிர் பாங்கியர் - இனிய உயிர்போலச் சிறந்த தோழியரானவர், மறைந்தனர் - மறைந்தவராகி, நோக்கும் - பார்க்கின்ற, கதிர் கொள் வாள் முகம் என்று - கிரணத்தைக் கொண்ட ஒளியையுடைய முகமென்று நினைத்து, நம் காதலர் புல்லும் - நாயகனைத் தழுவிக் கொள்ளுகின்ற, பதுமம் மென் கரம் - தாமரைமலர்போலும் மெல்லிய கைகளை, நீக்கி - (அவரினின்று) நீக்கி, நீள் படை விழி - நீண்ட வாள்போலும் கண்களை, புதைப்பார் - மூடிக்கொள்வார், எ-று.

(க-து.) புதிதாக விவாகஞ்செய்துகொண்ட பெண்கள் பலகணியினப்புறத்துத் தோன்றிய சந்திரனை மறைந்துபார்க்குந் தோழியர் முகமென்றெண்ணி நாயகரைத் தழுவிய கைகளால் கண்களை மூடிக்கொள்வார்கள் என்பதாம்.

மறைந்தனரென்பது வினையெச்ச முற்றுத் திரிந்தது. இதற்கு விதி. "வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" என்ற தொல்காப்பியத்தா லறிக. இன்னுயிர்ப் பாங்கியர் என்றதனால் அந்தப்புரச் செய்கையைப் பார்த்தற் குரிமை பெற்றுநின்ற புதுமணத்தாராதலால் இன்னுயிர்ப் பாங்கியர்களுக்குக் கட்டுப்பட்ட சேடியரை நாணுஞ் சொல்லப்பட்டது. மதியைப் பாங்கியர் முகமென்று மயங்குதலால் மயக்கவணியாம். இதனால் அம்மகளிர் முகங்கள் சந்திரனிற் சிறந்தனவென்பதும் அம்மாடஞ் சந்திரமண்டலத்தி லுயர்ந்ததென்பதும் ஒலிக்கின்றன. (எ)

வள்ளவாய்மலர்முகத்தியர்வதியுமேனிலையில்
கள்ளறுமலர்நாற்றியசுருங்கையிற்கதிர்கள்
உள்ளுறப்புகுந்துவாமதியுடலுரிஞ்சுதலால்
பிள்ளைவெண்மதியாதலின்றெனப்பெரிதுவக்கும்

(இ-ள்.) உவா மதி - பருவகாலத்திலே தோன்றுகிற சந்திரனானவன், வள்ளம் வாய் மலர் முகத்தியர் - தாமரைமலர்போலும் முகத்தையுடைய மாதரானவர், வதியும் மேல்நிலையில் - வாசஞ்செய்கின்ற மேல்வீட்டில், கள் அறு மலர் - தேனானது நீங்காத மலர்களை, நாற்றிய - தொங்கக்கட்டிய, சுருங்கையில் - நுழை வாயிலிலே, கதிர்கள் - கிரணங்களானவை, உள் உற புகுந்து - உள்ளே பாய நுழைந்து, மதி உடல் - (யாவராலும்) மதிக்கப்படுகிற (தன் பெரிய) வுடம்பு, உரிஞ்சுதலால் - தேய்தலினாலே, பிள்ளை வெண்மதி ஆதல் - குழந்தை

(இ - ள்.) வெள் திங்கள் - வெள்ளிய சந்திரனது, பளிக்கு மேல் நிலத்து - பளிங்கினாலாகிய மேல்வீட்டினுள், அம்பர் பால் - ஆகாயத்தினிடத்தில், பயில்வுறு கலவி - (நாள்தோறும்) பழகிய புணர்ச்சியை, திளைத்து - அநுபவித்து, மாரபிடை துயில்பவர் முகத்தில் - (அவர்) மார்பினிடத்தே தூங்குகிற மகளிரது முகத்தினிடத்தே, கிளைத்த தண் கதிர் - தழைத்த தண்ணிய கிரணங்களை, பரப்புதல் - விரித்தலினாலே, கிளர்ந்த சாளரத்தின் - விளங்குகின்ற பலகணியின் புறத்து, ஒளித்து - மறைந்துநின்று, வாள் முகம் - ஒளிபொருந்திய (அவர்) முகத்திலுள்ள, செவ்வியை கவர்வது - அழகை திருடுவதை, ஒத்து உளது - ஒத்திருக்கும், எ-று. அம்பர் - அசை.

(க - து) மேன்மாளிகையில் கணவருடன் புணர்ந்து அவர் மார்பின்மேல் தூங்குகிற பெண்களின் முகத்தில் சந்திரன் கிரணங்களை விரித்தல் அப்பெண்களின் முகத்தழகைத் திருடுவதை ஒத்திருக்கும் என்பதாம்.

பிறிதொன்றின் [illegible] சமயம் [illegible] யாதலால் [illegible] சந்திரனைக் கவர்ந்தாகக் குறித்தலினாலே [illegible] முகத்துக்குச் சந்திரனிலும் அதிக காந்தியைச் சொல்லியதாகிய வேற்றுமையணி தோன்றுகின்றது. (௪0)

கணங்கொண்மாமணிகுயிற்றியொளிர்சுடர்செய்மேனிலையிற்
சுணங்குபூத்தணிபருமிதத்துணைமுலைமகளி [ல
மணங்கொள்தாமரைமுகமுமொளிர்மதியுமறியா
தணங்கராமதிமருண்டுபார்த்தையுறவெய்துமால்

(இ - ள்) கணம் கொள் மா மணி - கூட்டத்தைக் கொண்ட பெரிய மணிகளானவை, குயிற்றி - பதிக்கப்பட்டு, ஒளிர் சுடர் செய் மேல் நிலையில் - ஒளிரிய கிரணங்களைச் செய்கின்ற மேல்வீட்டில், சுணங்கு பூத்து - தேமல் படர்ந்து, அணி - அலங்கரிக்கப்பட்ட, பருமிதம் - பருத்த அளவையுடைய, துணை முலை மகளிர் - இரண்டாகிய முலைகளையுடைய மாதரது, மணம் கொள் தாமரை - வாசனையைக் கொண்ட தாமரைமலர்போலும், முகமும் - முகத்தையும், ஒளிர் மதியும் - ஒளிரிய சந்திரனையும், அறியாது - அறியமாட்டாமல், அணங்கு அரா - தெய்வத்தன்மை பொருந்திய இராகுவானது, மதி மருண்டு - புத்தி மயங்கி, பார்த்து - நோக்கி, ஐயுறவு எய்தும் - (இவற்றுள் முகம் யாதோ சந்திரன் யாதோ வென்கிற) சந்தேகத்தை அடையும், எ-று.

(க - து) இராகு என்னும் பாம்பானது மேல்வீட்டில் உலாவும் பெண்கள் முகமென்றும் சந்திரன் என்றும் அறியாது சந்தேகம் அடையும் என்பதாம்.

அணங்கு - தெய்வம், "அணங்கோ யழகுதெய்வம்" என்பதாலறிக. ஒப்புமையினாலே முகத்திற்குஞ் சந்திரனுக்கும் விசேடந் தோன்றுதற்காகிய பொதுமையணி ஐயவணிக்கு அங்கமாதலாற் கலவையணி. இதனால் அம்மேல்வீடுகள் சந்திரமண்டலத்தை யளாவி

னுடைய, செழு கதிர்கள் - செழிய கிரணங்கள், தங்கி - தங்க, வீழ் புனல் பெருக்கொடு - (அதிலிருந்து) வீழ்கின்ற நீரினது வெள்ளத்தோடு, தலைப்பெய்து - கலந்து, ஆழ் கடல் தலைமகன் - ஆழமுள்ள கடலாகிய (தன்) கணவனானவன், களிப்புற - (அப்போது) களிக்க, களித்து - (தானுங்) களித்து, பொங்கு கற்பு நூல் உரைத்தவை - விளங்குகின்ற கற்பிலக்கண நூலினுற் சொல்லப்பட்ட விதிகளை, புகா அற விளக்கும் - குற்றமற விளக்குவாள், எ-று.

(க - து) ஆகாய கங்கையானவள் சந்திரகாந்தக் கற்கள்பதித்த மேல்வீட்டில் சந்திரகிரணங்களால் வீழுகின்ற வெள்ளத்தோடு கலந்து கடலாகிய கணவனைக் களிக்கத் தானுங் களித்துத் துணையாகச்சென்று கற்பிலக்கணவிதிகளை விளக்குவாள் என்பதாம்.

கணவன் களிக்கும்போது உடன் களித்தலும் அவன் துயருறும்போது உடன் துயருறுதலும் கற்பிலக்கணமாதலால் ஆகாயகங்கையும் பூரண சந்திரோதயகாலத்திலே தன் கணவனாகிய சமுத்திரம் பெருகுங்காலே அப்போது அந்தச் சந்திரகிரணம்பட்டுச் சந்திரகாந்தத்தினின்று வீழுகின்ற நீர் வெள்ளத்தோடு கலந்து தானும் பெருகி அக்கற்பிலக்கணத்தைப் பிறருக்குக் காட்டுமென்பதாம். தங்கியென்பது விகாரமெய்திய திரிபு. இயல்பே களித்தல் - முன்னையளவின் மிகுதல். கங்கை நூல் செய்கையினுலே கற்பிலக்கணமாகிய நற்பொருளைக் காட்டுதலால் நற்பொருட்காட்சியணியாம். இதற்குச் சந்திரகாந்த நீருக்குங் கங்கைக்குஞ் சம்பந்தங் கற்பித்ததாகிய தொடர்புயர்வு நவிற்சி அங்கமாதலால் கலவையணி. இதனுலே அந்நகரத்து வீடுகளின் மேனிலைகள் ஆகாசகங்கையளவுமே யுயர்ந்திருக்கின்றமை தோன்றுகின்றது. (கரு)

தடங்கொள் தாமரைத் தளிரியலுறையுமிந் நகரம்
இடங்கொள் பூதலத் தகரெலாம் வென்றனமினிவான்
அடங்க வெல்லுதுமென்னவே யோர்வஞ்சினமறையாப்
படங்கணாற்றிய போன்றுள பசியபொற்கொடிகள்

(இ-ள்.) பசிய பொன் கொடிகள் - பசுமையுள்ள பொன்மயமாகிய கொடிகளானவை, தடம் கொள் தாமரை - விசாலத்தைக் கொண்ட தாமரைப்பூவிலிருக்கின்ற, தளிர் இயல் - தளிர்போலு மெல்லிய வடிவுடைய சீதேவியானவள், உறையும் இ நகரம் - வாசஞ்செய்கின்ற இந்த மாவிந்த நகரமானது, இடம் கொள் பூதலம் - இடத்தைக் கொண்ட பூமியிலுள்ள, நகர் எலாம் - எல்லாநகரங்களையும், வென்றனம் - வென்றோம், இனி - இனிமேல், வான் - தெய்வலோகத்தை, அடங்க வெல்லுதும் என்ன - (எமக்குக்) கீழ்ப்பட வெல்லுவோம் என்று, ஓர் வஞ்சினம் அறையா - ஒரு சபதத்தைச் சொல்லி, நாற்றிய படங்கள் - (எழுதித்) தொங்கவிடப்பட்டனவாகிய படங்களை, போன்றுள - ஒத்திருக்கும், எ-று.

(க-து) கொடிகளானவை மாவிந்த நகரம் எல்லா நகரங்களையும் வென்றோம் இனித் தேவநகரத்தை வெல்லுவோமென்று படங்களெழுதிக் கட்டியதுபோலு மிருக்கின்றன என்பதாம்.

சந்தநறுமென்புகைத்துவழுந்துநிலமெய்க்கும்
பந்துபயில்கோதையர்பசும்பொனணியாவு
மைந்தருயியனெயிணையணிந்தனர்தனேறே
வந்துநனியேற்பவர்மகிழ்ந்திடவழங்கும்

(இ-ள்.) சந்தம் நறு மென் புகை - [illegible] முளரா மெல்லிய புகையானது, [illegible] - படிந்து மேலே வீடுகளும், பந்து பயில் கோதையர் - பந்தாட்டத்தில் பழகுகின்ற மாதரானவர், பசும்பொன் அணி - பசிய பொன்னாலாகிய ஆபரணங்களையும், யாவும் - மற்றுமுள்ள [illegible], [illegible] - [illegible] தருவினுடைய பெரிய [illegible], அணிந்தனர் - மேற்பார், அதனேறே - அதனாலேயே, ஏற்பவர் மகிழ்ந்திட - (யாசித்து) வந்து இரப்பவர்களுக்கு மகிழ்ச்சியுண்டாக, நனி வழங்கும் - (அத்தருக்கள்) மிகுதியாக (விரும்பப்பட்டவைகளைக்) கொடுக்கும், எ-று.

(க-து.) மேன்மாடிகளின்மேல் [illegible] பெண்கள் ஆபரண முதலியவற்றைக் கற்பகத் தருக்களில் அணிந்தனர். அத்தருக்கள் அவற்றை யாசிக்க வந்தவர்க்குக் கொடுக்கின்றன என்பதாம்.

யாவுமென்றதனாலே ஆடை முதலிய வெல்லாம் கொள்க. பந்துபயிற்றாவில் [illegible] வருத்துமென்று கழற்றி வைத்தார்களாக அதனாலே வழங்குமென்றது மேலே செல்வப்பெருக்கினைச் செருக்கிருப்பவர்களுடைய அவற்றையெடுத்து இல்லென்றதாயிற்று. கற்பகத்தின் கொடைக்கு ஏதுவாகாத அவ்வணி முதலியவற்றைப் பெறுதிருக்கையை ஏதுவாகக் குறித்ததாலே ஏதுத்தற்குறிப்பணியாம். (உச)

வாய்ந்தமின்னைமடந்தையராக்கிவின்னை
போந்திடாமலன்றேமலர்ப்புங்கவன்
சாந்தணிந்ததமனியக்குன்றென
வேந்துவெம்முலைப்பாரமியற்றினன்

(இ-ள்.) மலர் புங்கவன் - தாமரைப்பூவிலிருக்கின்ற நான்முகக்கடவுளானவன், விண் வாய்ந்த மின்னை - மேகத்தினோடு பொருந்திய மின்னற்கொடிகளை, மடந்தையர் ஆக்கி - மங்கையராக்கி, போந்திடாமல் அன்றே - (அம்மேகத்தினிடத்தே) போகாதிருந்ததற்கன்றே, சாந்து அணிந்த - சந்தனத்தைப் பூசிய, ஏந்து வெம் பாரம் முலை - சுமக்கப்படுகின்ற விருப்பஞ்செய்கின்ற பாரமாகிய முலைகளை, தமனியம் குன்று என இயற்றினன் - பொன் மலையைப்போல (அவர்களுக்கு) உண்டாக்கினன், எ-று.

(க-து.) பிரமதேவனானவன் மின்னல்களைப் பெண்களாக்கி அம்மின்னல்களாகிய பெண்கள் மேகத்திற் செல்லாமலிருக்கப் பொன்மலைகளைப்போல நன்முலைகளைப் படைத்தான் என்பதாம்.

புகழவேண்டியதல்லாத மின்னலைக்கொண்டு படைத்தலைப் புகழ்தலினாலே புகழவேண்டிய அந்நகரத்து மகளிரது சரீரகாந்தி

தோன்றுதலாற் காரணப்புனைவிலி புகழ்ச்சி. இது அங்கம், முலைகளின் பாரத்தை யுண்டாக்கினமைக்குப் பயனுசாத மேகத்தினுட் போகா மையைப் பயனாகக் குறித்தலாலே பயனற்ற குறிப்பணியாகும். இது அங்கி. ஆதலாற் கலவையணி.

இதுமுதற் பதினொருபாட்டுக்கள் பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும் மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகி வருகிற அளவடிகள் நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (உரு)

> வெங்கதிர்ச்சுடர் மேவியதேர்ப்பரித்
> தங்குவண்குளம்பிற் றகர்ந்திட்டன
> தெங்கினொண்பழம்பெய் தெள்ளமுதத்தினாற்
> பங்கமெய்துமறுகின்பரப்பெலாம்

(இ-ள்) வெம் கதிர் சுடர் - வெவ்விய கிரணங்களையுடைய சூரியனுடைய, மேவிய - பொருந்திய, தேர் பரி - தேரிற்பூட்டிய குதிரைகளுடைய, வல் தங்கு குளம்பின் - வலிமை தங்கிய குளம்புகளாலே, தகர்ந்திட்டன - உடைந்தனவாகிய, தெங்கின் - தென்னமரங்களுடைய, ஒள் பழம் - [illegible], பெய் தெள் அமுதத்தினால் - [illegible], மறுகின் பரப்பெலாம் - வீதிகளினுடைய விரிவுகளெல்லாம், பங்கம் எய்தும் - சேறுநிலை அடையும், எ-று.

(க-து) சூரியனுடைய தேரிற்பூட்டிய குதிரைகளுடைய வன்காற் குளம்பால் உடைபட்ட [illegible] வீதிகள் சேறடையும் என்பதாம்.

தென்னமரத்திற்குச் சூரியன் ரதத்தோடு சம்பந்தத்தைக் கற்பித்ததினாலே தொடர்புயர்வு நவிற்சியணியாகும். (உசா)

> நிலவுவெண்கதிர் நீண்மணிமாடமேற்
> குலவுபாதிமதியைமெல் கொம்பனார்
> சிலைகொள்வாணுதற் சேர்த்தியவாடவ
> ருலகமேத்துமுவாமதியென்பரால்

(இ-ள்) நிலவு வெண்கதிர் மணி - நிலவைச்செய்கின்ற சந்திரனுடைய மணிகளாலாகிய, நீள் மாடமேல் - நீண்ட வீட்டின்மேலே, குலவு பாதி மதியை - விளங்குகின்ற பாதிச்சந்திரனை, மெல் கொம்பனார் - மெல்லிய பூங்கொம்புபோன்ற ஸ்திரீகள், சிலை கொள் - வில்வடிவத்தைக் கொண்ட, வாள் நுதல் - ஒளி பொருந்திய (தமது) நெற்றியோடு, சேர்த்திய - கூட்ட, ஆடவர் - (அதுகண்ட) நாயகரானவர், உலகம் ஏத்தும் - உயர்ந்தோரால் துதிக்கப்படுகின்ற, உவாமதி என்பர் - பூரணசந்திரன் என்று சொல்லுவார், எ-று.

(க-து.) வீட்டின்மேலிட்ட நிலாவிய பெண்கள் பாதிச்சந்திரனைப் பிடித்துத் தங்களுடைய நெற்றியோடு சேர்க்க அதுகண்ட கணவர்கள் பூரணசந்திரனென்று சொல்லுவார்கள் என்பதாம்.

(க-து.) நாயகமாரிடத்து மறைந்து செல்கின்ற மாதர்கள் முகத்தைச் சந்திரனென்றெண்ணி அச்சந்திர கிரணங்களை உண்ணவந்த சகோரங்களானவை சந்தித்து அவரை வெளிப்படுத்தி யலைத்தூற்றும் என்பதாம்.

சிலம்புகள் அன்னம்போ லொலித்தலாலே அதுகேட்டு அவ்வன்னங்கள் தம்மினமென்று வரின் மறைந்து செல்லுதல் வெளிப்படுமென்று அச்சிலம்பொலியாமல் மெல்லநடந்து செல்லுவா ரென்க. சிலம்பு அன்னம்போ லொலிக்குமென்பது பின்னே "அன்னமென மிழற்றும் பரிபுரமணிந்து" என்பதனாலு மறிக. பெருநாண முடைமையாற் கணவரிடத்துங் கரந்து செல்லுவாராயினர். சகோரம் நிலவை யருந்துதல் "வெண்டிங்கணிலவு வாயிடைப்புகினுஞ் சகோரமென்று மென்புளன்றி யுண்டிங்குவாழு நருமுளாகொல்லோ" என்பதனாலறிக. முகத்தைச் சந்திரமென்று மயங்குதலால் மயக்கவணி. இது அங்கம். மறைந்து செல்லலாகிய விரும்பப்பட்ட பொருளைக் குறித்து முயற்சி செய்ய அது வெளிப்படுதலாகிய அதன் பகைப்பொருள் கிடைத்தலால் துன்பவணி. இது அங்கி. ஆதலாற் கலவையணியாம். (௨௯)

மலயமாதவனுண்டமணிக்குவைக்
குலவுவார்கடனேர்சொலிற்குற்றமே
யலகில்பல்வளஞ்சேர்ந்தியவாவண
முலகமுண்டருண்மால்வயிறொக்குமே

(இ-ள்.) மலயமாதவன் உண்ட - பொதியமலையி லிருக்கின்ற அகஸ்தியமுனிவரால் குடிக்கப்பட்ட, மணிக்குவை குலவு வார் கடல் - மணிகளது கூட்டத்தையுடைய வளைவாகிய நெடிய கடலை, அலகு இல் பல் வளம் - கணக்கில்லாத பலவகையாகிய வளங்களையும், சேர்ந்திய ஆவணம் - (தன்னுள்) அடக்கிய கடைக்கு, நேர் சொலின் - ஒப்பென்று சொன்னால், குற்றமே - (அப்படிச்சொல்லுதல்) குற்றமேயாம், உலகம் உண்டருள் - உலகத்தை விழுங்கியருளிய, மால் வயிறு - திருமாலினது வயிற்றை, ஒக்கும் - (அது) ஒத்திருக்கும் (ஆதலால்), எ-று.

(க-து.) கடலைக் கடைக்கு ஒப்பென்று சொன்னாற் குற்றமாம்; அக்கடை திருமால் வயிற்றை ஒத்திருக்கும் என்பதாம்.

முத்துப் பவள முதலிய கடல்வளமேயன்றி நானகு நிலவளங்களையுந் தன்னிடத்தே கொண்டிருக்கையால் 'கடனேர்சொலிற் குற்றம்' என்றார். பிரளயத்திலே திருமால் வயிற்றுட்சென்ற மார்க்கண்டேயரால் உலகத்துப் பொருள்களெல்லாம் காணப்பட்டன வென்பது புராணகதை யாதலால் அப்படியே அக்கடையிலுங் காணப்படுதல் பற்றி 'மால்வயிறொக்கும்' என்றார். 'உலக முண்டருண்மால் வயிறொக்கும்' என்னும் வாக்கியத்தினால் கடலை ஒப்புச்சொல்லுதல் கூடாமை சாதித்தலாலே செய்யுட் குறியணியாம். (௩௦)

**நீடுமோவணிநித்திலப்பந்தருட்**
**கேடில்கம்பலையாலிசைகேட்கிலார்**

பாடல்வண் டொடுநானம்பகர்ந்திடக்
கோடல்செய்வர் நிறைகுறை யின்றென

(இ-ள்.) நீடும் நீண்டிருக்கின்ற, நித்திலப் பந்தருள் - முத்துப் பந்தல்களிலுள்ள, ஆவணம் - கடைகளிலே, பாடல் வண்டொடு - பாடுதலையுடைய வண்டுகளோடு, நானம் பகர்ந்திட - கஸ்தூரியை (நிறுத்து) விற்க, கேடில் கம்பலையால் - (எப்போதும்) நீங்காத (கள்கள் வென்னும்) வொலியினாலே, இசை - (அப்பாடல்) ஒலியை, கேட்கிலார் - கேட்கின்றிலருமாகி, நிறை குறைவு - இந்நிறுக்கப்பட்ட பொருளிலே யாதொரு குறைவு[illegible], இன்று என - இல்லையென்று நினைத்து, கோடல் செய்வர் - (விலைக்கு) கொள்ளுவார்கள், எ-று.

(க-து) கடைகளிலே வண்டுகளுடனே கஸ்தூரியை நிறுத்து விற்க நிறைகுறை யில்லையென்று கொள்ளுவார்கள் என்பதாம்.

'இசைகேட்கிலார்' என்றதனால் கஸ்தூரிதானும் வாசனை விருப்பங்கொண்டு மொய்த்துப்பாடி இசைவிடாது இடத்தானும் வண்டின் வடிவத்தைப் பார்த்தறிந்திலரென்பது பெறப்பட்டது. வண்டொலி சிறுத்தொலியாதலிற் கடைஞர் தெருவின் பேரொலியுள் மறைந்ததெனக. இக்காரணத்தாற் குறையுளதாகவு மின்றெனக் கருதி விலைப்படுக்கொள் வாராயினார். ஒப்புமையினாலே கஸ்தூரிக்கும் வண்டுக்கும் விசேஷந் தோன்றாமையினாலே பொதுமையணியாகும். (௩௧)

குளிர்பளிக்குநீண்மாடங்கொடிகளான்
வெளிமுகட்டுயர் வெண்பதி தோய்வன
வொளிகொள்வெங்கதிர் வெம்மையொழித்திட
நளிகொள்தண்சுதை நக்குவபோலுமே

(இ-ள்) குளிர் பளிங்கு நீள் மாடம் - குளிர்ச்சி பொருந்திய பளிங்காலாகிய நீண்ட மாளிகைகளானவை, வெளி முகடு - ஆகாச வெளியினது முகட்டின்கண், உயர் வெண் பதி தோய்வன - உயர்ந்த சந்திரனைத் தடவுவனவாகிய, கொடிகளால் - கொடிகளினாலே, ஒளி கொள் வெம் கதிர் - சூரியனிலிருந்து (தம்மேல்) கொள்ளப்பட்ட உஷ்ண கிரணத்தாலாகிய, வெம்மை ஒழித்திட - வெப்பத்தை நீக்கும்படியாக, நளி கொள் - பெருமையைக்கொண்ட, தண் சுதை - குளிர்ச்சி பொருந்திய (அச்சந்திரனிடத்துள்ள) வமுதத்தை, நக்குவ போலும் - (நாக்குகளினாலே) நக்குவனவற்றை ஒத்திருக்கும், எ-று.

(க-து.) மாடங்கள் சந்திரனை அளாவிய கொடிகளான வெங்கதிர் காய்கை நீங்கிடத் தண்கதிரை நக்குவபோன்றிருந்தன வென்பதாம்.

ஆகாசமத்தியத்தில் வந்தபின்னன்றித் தோய்தல் கூடாமையால் 'வெளிமுகட்டுயர்' என்றார். சந்திரனிடத்தே கலை வளருந்தோறும் அமிர்தம் பெருகுமென்பது புராண சித்தாந்தம். பகல் முழுதும் வெயிலால் வருந்தியோன் இரவிலே சீதளோபசாரஞ் செய்துகொள்ளுவானாதலின் மாடங்கள் 'வெம்மை யொழித்திடச் சுதைநக்குவ போலும்'

என்றார். 'கொடிகளால்' என்றதனாலும் 'நக்குவ' என்றதனாலும் நாக்கென்பது வருவிக்கப்பட்டது. கொடிகளாலே சந்திரனைத் தோயு மாளிகைகளை அப்படி நக்குவனவாகக் குறித்தலால் பொருட்குறிப் பணி. (௩௨)

பத்திமாடமணிக் கொடிபானுவின்
மெய்த்தழும்புறத் தைவரல் வெங்கதிர்
கைத்தலங்களிற் காளிந்தியைமடி
வைத்திருந்துதாலாட்டுதன் மானுமே

(இ-ள்) பத்தி மாடம் - ஒழுங்காயுள்ள மாளிகையினது, மணிக் கொடி - நீலக்கொடியானது, பானுவின் மெய் - சூரியனது உடம்பிலே, தழும்பு உறத் தைவரல் - தழும்பு பொருந்தத் தடவுதல், வெம் கதிர் - அச்சூரியனானவன், காளிந்தியை - (தன் புதல்வியாகிய) காளிந்தி யென்பவளை, கைத்தலங்களில் - கைகளிலே (பற்றி), மடி வைத்து இருந்து - மடியின்மேல் வைத்துக்கொண்டிருந்து, தாலாட்டுதல் மானும் - தாலாட்டுகிறதை ஒக்கும், எ-று

(க-து.) நீலக்கொடியானது சூரியனைத் தடவுதல் சூரியன் தன் மகளாகிய காளிந்தியைத் தாலாட்டுதல்போலு மிருந்தது என்பதாம்.

மணி கருமையென்பது 'மணிநவமணியே கனைகடை வன்பொடு கருமைசெம்மை" என்பதனா லறிக. 'மடிவைத்திருந்து' என்றதனால் குழந்தைப்பருவ முற்றிருந்த காளிந்தி யென்பதாயிற்று. காளிந்தி கருநிறத்தவ ளாதலாலே நீலக்கொடி அவள்போலத் தோன்றிற்று. தாலாட்டுதல் தொட்டிலிலேனும் மடியிலேனுங் கிடத்தி மெல்லென அசைத்தும் பாடியும் தூங்கப்பண்ணுதலாம். நீலக்கொடி தடவுதலாலே சூரியனைக் காளிந்தியைத் தாலாட்டுகிறவனாகக் குறித்தலாலே பொருட்குறிப்பணி (௩௩)

யாணர்மேயவிரவியைநண்பகற்
காணுந்தோறுங்கனன்றுகனலுமிழ்
சோணைவெம்மணிக்கொம்மையெயிற்புறம்
வாணனூரழற்சூழெயின்மானுமே

(இ-ள்) இரவியை - சூரியனை, நண்பகல் - நட்டபகலிலே, காணுந் தோறும் - பார்க்குந்தோறும், கனன்று - எரிந்து, கனல் உமிழ் - நெருப்பைச்சொரிகின்ற, புறம் - புறத்தையுடைய, சோணை வெம் மணி - அழியாத சூரிய காந்தத்தாலாகிய, யாணர் மேய - தச்சரால் விரும்பிச் செய்யப்பட்ட, கொம்மை எயில் - வலயமாகிய மதிலானது, வாணன் - வாணசுரனது, ஊர் அழல் சூழ் - மிகுந்த நெருப்பாற் சூழந் திருக்கப்பெற்ற, எயில் மானும் - (சோணித புரத்திலுடைய) மதிலை யொக்கும், எ-று.

(க-து) சூரியகாந்தக் கற்களாற்செய்த மதிலானது சூரியனைக் கண் டக்கினி கக்கலால் வாணசுரன் கோட்டையை ஒக்கும் என் பதாம்.

யானார் தச்சனென்பது "யானோர் புதுமை தச்ச ரெய்திய வன்பு நன்மை" என்பதனாலறிக, அழகெனினுமாம். சூரியகாந்தம் நெருப்பை யுமிழுவது "சூரியனொளியிற் றீக்கால்சலாகை சூரியகாந்தமென்பெயர் பெறுமே" என்பதனாலறிக. மாவிந்தத்தின் மதில் முன் சொல்லப் படுதலால் இது அரசாரணமனை மதிலெனக் வாணாசுரன் சிவபூசை யாலே நெருப்புக்கோட்டை பெற்றிருந்தானென்பது புராணகதை. இது உவமையணி. (௩௪)

உள்ளமொன்றுதங்காதலரோதிய
கள்ளநேயக்கலவியின்வாய்மையை
வள்ளவாயமுதுண்டுவளர்மடக்
கிள்ளைமெல்லக்கிளத்தலுநாணுவார்.

(இ-ள்.) உள்ளம் ஒன்று - ஒருமனப்பட்ட, தம் காதலர் ஓதிய - தம்முடைய நாயகரால் சொல்லப்பட்ட, கள்ளம் நேயம் கலவியின் வாய்மையை - (தம்மிருவருக்குள்ளே) மறைக்கத்தக்க அன்புபொருந்திய புணர்ச்சிக்குரிய சொல்லுகளை, வள்ளவாய அமுது - கிண்ணத்தினிடத்தே தங்கிய பாலை, உண்டு வளர் - குடித்து வளர்கின்ற, மடம் கிள்ளை - இளங் கிளிகள், மெல்ல கிளத்தலும் - மெள்ள (பிறரறியச்) சொல்லுதலும், நாணுவார் - (மங்கையர்) வெட்கப்படுவார், எ-று.

(க-து.) தங்கள் புருஷர்கள்சொல்லிய புணர்ச்சிச்சொற்களைக் கிளிகள் சொல்லக்கேட்டு மாதர்கள் நாண மடைவார்கள் என்பதாம்.

கள்ளநேயமாவது பிறர்க்கு வெளிப்படாமல் மறைக்கப்பட்ட வன்பு. கலவியின் வாய்மை - காமவிகார மேலிட்டுத் தம்மை மறந்து சொல்லப்பட்டவையாம். இதனாலே அங்கேயுள்ள கிளிகள் தமக்கு ஒருவர் ஒன்றைப் பலதரஞ்சொல்லி வருந்திக் கற்பிக்கவேண்டாது தாமே விரைவிற் கற்கின்றன வென்பது தோன்றுகின்றது. (௩௫)

வாணிலாமணிமாடத்தொளித்தெமைக்
காணுகென்பவர்மெய்ந்நிழல்கண்ணுறீஇப்
பூணுலாமுலையார்புல்லியின்மையி
னாணிநின்றுநகைமுகங்கோட்டுவார்.

(இ-ள்.) பூண் உலாம் முலையார் - ஆபரணங்கள் புரளுகின்ற கொங்கையுடைய மகளிரானவர், வாள் நிலாமணி மாடத்து - காந்தி பொருந்திய சந்திரகாந்தத்தாலாகிய வீட்டினுள்ளே, ஒளித்து - மறைந்து, எமை காணுக என்பவர் - எங்களை காண்பீராகவென்ற கணவரது, மெய் நிழல் கண் உறீஇ - உடம்பினது சாயையைக் கண்டு, புல்லி - (அச்சாயையைத்) தழுவி, இன்மையின் - கைக்கப்படாமையினாலே, நாணி நின்று - வெட்கப்பட்டு நின்று, நகை முகம் கோட்டுவார் - நகையோடுகூடிய முகத்தை வளைப்பார், எ-று.

(க-து.) நிலாமணிமாடத் தொளித்துக்கொண்ட கணவர்களது நிழலைக் கணவரென்று தழுவிய மாதர்கள் நாண மடைவார்கள் என் பதாம்.

காணுகென்பவா—கடைக்குறைவிகாரம். 'மகளிர் நாணி முகங் கோட்டுவார்' என்றதனால் ஒளித்தவ ராட்டவரென்பது பெறப்பட்டது. நிழலைக் கணவரென்று மயங்கலால் மயக்கவணி. (௩௯)

சாந்தமூழ்கிவளர்ந்ததடமுலைக
காந்துபன்மணிமேகலைசகாழலகு
லேந்திவிண்ணியங்கலரிதென்றுப்
போந்தமங்கையரிந்நகாப்பொன்னனா

(இ - ள்.) இநகா பொன் அனனா - இந்த நகரத்துள்ள ஸ்ரீதேவி போல்வார், சாந்தம் மூழ்கி - சந்தனத்துள் முழுகி, வளர்ந்த தடம் முலை - பருத்த மலைபோலும் முலைகளையும், காந்து பல் மணி - விளங்காநின்ற பல மணிகளாலாகிய, மேகலை காழ - மேகலையின் சரங்களையுடைய, அல்குல் - ஜகனத்தையும், ஏந்தி - சுமந்துகொண்டு, விண்ணில் இயங்கல் - வானத்திலே உலாவுதல், அரிது என்று - (எம்மாலே) முடிவதன்றென்று நினைத்து, போந்த மங்கையா - இறங்கிவந்த தெய்வமகளிரோ, எ-று.

(க-து.) தனத்தையுஞ் சகனத்தையுஞ் சுமந்துலாவ லரிதென்று பொன்னகர மாதரகளே இந் நகரமாதர்களாக வந்தார்கள் என்பதாம்.

காழ்சரமென்பது "காழெனப் மணியின் கோவை" என்பதனாலறிக. மேகலை எண் கோவையுள்ளது. "எண்கோவை மேகலை காஞ்சியிருகோவை, பண்கொள்கலாப மிருபத்தொன்று - கண்கொள், பருமம்பதினாறு முட்பத்திரண்டு, விரிசிகையென் றுணரற்பாற்று" என்பதனாலறிக. இப்பட்டணத்து மங்கையரை அப்பாரத்தைச் சுமந்து ஆகாசத்திலே சஞ்சரிக்கமாட்டாமல் வந்த தெய்வமகளிராகக் குறித்தலாலே பொருட்டற்குறிப்பணி.

நளமகாராஜன் அரசாட்சி செய்திருந்தகாலங் கிரதயுகமாயிருக்க இதுவரையிலே நாடுநகரங்களின் சிறப்புகள் பலவற்றைச் செய்யுமென் வாய்பாட்டு நிகழ்கால வெதிர்காலங்களுக் குரிய முற்றுவினைகளாலும் எதிர்காலத்திற்கேயுரிய முற்றுவினைகளாலுங் கூறல்வேண்டுவ தென்னையெனின், அவ் வினைநிகழ்ச்சி அந்த யுகத்திலே நெடுங்காலம் நிகழ்ந்தன வென்னும் பொருள் படுதற்கு அங்ஙனங் கூறினானெனக. இவர் பண்டிப்பொழிலகத்து விளையாடுவர், இவள் பண்டிப்பொழிலகத்து விளையாடும், என்பனபோல இவற்றிற்கு "இறப்பே யெதிர்வே யாயிருகாலமுஞ், சிறப்பத்தோன்று மயங்கு மொழிக்கிளவி, ஏனைக்காலமு மயங்குதல்வரையார்" என்பன விதி. பின்னிப்படி வருவனவு மன்ன.

[இதுமுதல் ஐந்துபாட்டுகள் ஒருதொடர். இவ்வைந்து பாட்டுகளாலும் அந்நகரத்திலிருந்து உலகத்தையாண்ட நளமஹாராஜனுடைய வியக்கத்தக்க பலவகைக்குணங்களுஞ் சொல்லப்படுகின்றன.]

கலிவிருத்தம்.

வளமலியிநநகர்மன்னர்மன்னவன்
றளையவிழ்நறுமலர்த்தண்ணந்தாரினன்

களைகணாயுலகொருமூன்றுங்காத்தரு
ணளனெனப்பெயரியநாமவேலினான்

(இ-ள்.) உலகு ஒரு மூன்றும் - (தன்னை யுபசரிக்கின்ற) மூன்றுலகத்தாரையும், களைகண் ஆய - ஆதாரமாய், காத்து - (ஆபத்தினின்றுங்) காத்து, அருள் - (விரும்பப்பட்டவற்றைத்) தருகின்ற, நளன் எனப் பெயரிய - நளனென்னும் பெயர் பெற்ற, வளம் மலி இந்நகர் - செல்வத்தினாலே நிறைந்த இம்மாவிந்த நகரத்திலுள்ள, மன்னர் மன்னவன் - அரசர்க் கரசனானவன், தேன் அவிழ் நறு மலர் - கட்டவிழ்ந்த நல்ல மலர்களாலாகிய, தண் தாரினான் - குளிர்ச்சி பொருந்திய மாலையை யுடையவன், நாமம் வேலினான் - அச்சஞ் செய்கின்ற வேற்படையை யுடையவன், எ-று. அம் - அசை.

(க - து.) இம்மாவிந்த நகரத்தையாளும் அரசர்க்கரசன் மூன்றுலகத்தையுங் காத்தருள்செய்யும் நளன் என்னும் பெயரையுடையவன் என்பதாம்.

பெரியமன்னவன், இந்நகர் மன்னவன், மன்னர் மன்னவன் எனக் கூட்டுக. மூன்றுலகம் பூமியும் வானமும் பாதாளமுமாம். எவ்வுலகத்துள் யாவராயினும் நளனென்கிற பெயரை யுரைக்கினும் நினைக்கினும் அவர்க்கு நினைத்தது முற்றுமென்பது புராணசித்தமாதலாலே அவ்விசேஷணம் அப்பெயர்க்குக் கூறப்பட்டது. இது மகாபாரதத்திலுங் காண்க. இதனால் அவனது மகாமகத்துவமாகிய தெய்வத்தன்மை விளங்குகின்றது. அவன் மாலையைக் கண்டோர் கண்களுக்குங் கருத்துக்கும் மலர்ச்சியுங் குளிர்ச்சியுஞ் செய்யும், அதன் சிறப்புத் தோன்றத் 'தேனவிழ் நறுமலர்த் தண்ணந்தார்' என்றார். பகைவர்க்குச் செருக்கு விளையுந்தோறு மச்சஞ்செய்து அதனை யொழித்தலின் 'நாமவேல்' என்றார். நாமமென்பதில் அம்முச்சாரியை. நாம் அச்சமென்பது "பேநாமுருமென வரூஉங்கிளவி யாமுறைமூன்று மச்சப் பொருள" என்பதனாலறிக. இதுமுதல் ஐந்துபாட்டுகள் பெரும்பாலும் மூன்றாஞ்சீர் மாச்சீரும் மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகி வருகிற அளவடிகள் நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (ருஅ)

ஒன்னலர்மணிமுடியுரிஞ்சுதாளினான்
கன்னவிறோளினான்கமலக்கண்ணினான்
றன்னுயிராமெனவுலகிற்றங்கிய
மன்னுயிரனைத்தையும்புரக்குமாட்சியான்.

(இ-ள்.) ஒன்னலர் - பகைவருடைய, மணி முடி - நவமணிகளையுடைய மகுடங்கள், உரிஞ்சு தாளினான் - தேய்தற்குக் காரணமாகிய அடிகளை யுடையவன், கல் நவில் தோளினான் - மலைபோலச் செய்யப்பட்ட புயங்களை யுடையவன், கமலம் கண்ணினான் - தாமரை மலர் போலும் நேத்திரங்களை யுடையவன், தன் உயிர் ஆம் என - தனது உயிர்போல நினைத்து, உலகில் தங்கிய - உலகத்தின்கணே பொருந்திய, மன் உயிர் அனைத்தையும் - நிலையுள்ள எல்லா வுயிர்களையும், புரக்கும் மாட்சியான் - காப்பாற்றுகின்ற பெருமையையுடையவன், எ-று.

(க - து.) பகைவர் முடிபடிந்த தாட்களையும், கல்லோடு பழகிய தோட்களையும், தாமரைநிகர் கண்களையுமுடையவன், தன்னுயிரைப் போல மன்னுயிரைக்காப்பவன் என்பதாம்.

பகைவர் தம்மேற் கருணை பிறப்பிக்கவேண்டிப் பலமுறையாகத் தம்முடிகள் அவரடிகளிற்பட வணங்குதலாலே அம்முடிகளுக்குத் தேய்வு கூறப்பட்டது. அவர்கள் வணங்குதற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட ஊர்த்துவரேகாதிகளையுடைய தாளென்பது குறிக்கப்படுகின்றது. இன்மையும் பருமையும் திரட்சியும் பற்றித் தோள்களுக்கு மலையும், மலர்ச்சியுங் குளிர்ச்சியுங் கண்டோரை மகிழ்வித்தலும் பற்றிக் கண்களுக்குத் தாமரைமலரும் உபமானமாக்கப்பட்டன. உடம்பழியினும் உயிரழியாது வேறுடம்பு பெற்று நிற்குமாதலின் 'மன்னுயிர்' என்றார். அது பதிபசுபாச மூன்றும் நித்தியமென்கிற சைவாகமத்தானுணர்க. 'உயிரனைத்தையும்' என்றதனாற் பறவை விலங்கு முதலியவுங் கொள்க. இங்கே புரந்தல் பகை பிணி முதலியவற்றான் துன்பம் வாராமற் காத்தல். (௫௧)

பொருசிலைவேனில்வேளனையபொற்பின
னருவரையாமெனவான்றமார்பினன்
கணைபொருமுடைத்திரைக்கடலந்தானையான்
றிருகுவெகுளியங்களிற்றனையசீற்றத்தான்

(இ - ள்) பொரு சிலை - போர் செய்கின்ற (கருப்பு) வில்லையுடைய, வேனில் வேள் அனைய - வசந்தகாலத்திற்குரிய மன்மதனைப் போலும், பொற்பினன் - அழகினையுடையவன், அரு வரை ஆம் என - அரிய மலையைப்போலும், ஆன்ற மார்பினன் - பரந்த மார்பினையுடையவன், கணை பொரு - கணையோடு போர்செய்கின்ற, முடை - புலால்நாற்றமமொருந்திய, திரை கடல் - அலைகளையுடைய கடல்போலும், தானையான் - சேனையையுடையவன், திருகு வெகுளம் - மாறுபட்ட கோபத்தையுடைய, களிறு அனைய சீற்றத்தான் - யானைபோலும் கோபத்தையுடையவன், எ-று. அம் - அசை.

(க - து) மன்மதனை நிகர் அழகையும், மலையைநிகர் மார்பையும், கடலைநிகர் சேனைகளையும், யானையைநிகர் கோபத்தையுமுடையவன் என்பதாம்.

மன்மதனுக்கு வேனிற்காலத்திலே போர்த்தொழிற்கண்ணே ஊக்கமுங் களிப்புமுண்டாதல் பற்றி அப்போது அவனுடம்பு பூரித்து அழகுசிறந்து விளங்குமாதலாற் 'பொருசிலைவேனில்வேள்' என்றார். 'அருவரையாமென' என்றமையாற் பகைவர் படைக்கலங்களா லூறடையாத திடமுங் குறிக்கப்படுகின்றது. அளவு காணப்படாமையும் பூமி முழுதுஞ் சூழ்தலும் பற்றிச் சேனைக்குக் கடல் உவமையாக்கப்பட்டது. அக்கடலலைகள்போலச் சேனையிலணிவகுப்புகள் ஒன்றன்பின் ஒன்றாக வெழும்பி யிரைந்துகொண்டு பின்வாங்காது சென்று பகைவரை மோதுதலாலும் புலானாற்றம் பகைவரிறைச்சியு முதிரமுந் தோய்ந்த படைக்கலங்களின் மாறாமையாலும் 'கணைபொருமு

டைத்திரை' என்னுமடைகள் கடலுக்குச் சேர்க்கப்பட்டன. யானை போல மறைத்தற்குரிய காலத்தே மறைத்து வெளிப்படுத்தற்குரிய காலத்தே வெளிப்படுத்தலாற் சிறத்தலின் யானை யுவமான மாக்கப் பட்டது "பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த் துள்வேர்ப் பரொள்ளியவர்" என்பதனா லறிக. யானையின்க ணக்குணமுண்டென் பது "யானையறிந்தறிந்தும் பாகனையேகொல்லும்" என்பதனா லறிக.

வெங்கலியிருள்கெடவெண்ணிலாவுமிழ்
திங்களங்கவிகையான்றிகிரியொன்றினா
லங்கணமாநிலமுழுதளிக்குமாற்றலான்
மங்குலினெழுமடங்குதவும்வண்கையான்

(இ - ள்.) வெங் கலி - தீய வறுமையாகிய, இருள் கெட - இருளானது அழிய, திங்கள் - சந்திரன்போல, வெண் நிலா உமிழ் - வெள்ளிய நிலவை வீசுகின்ற, கவிகையான் - குடையையுடையவன், திகிரி ஒன்றினால் - ஏக சக்கரத்தினாலே, அம் கண் மா நில முழுதும் - அழகிய இடத்தையுடைய பெரிய பூமி யனைத்தையும், அளிக்கும் ஆற்றலான் - அரசாளுகின்ற வல்லமையை யுடையவன், மங்குலின் எழு மடங்கு உதவும் - மேகத்திலும் ஏழுபங்கு அதிகமாகக் கொடுக்கின்ற வண் கையான் - வளம்பொருந்திய கையையுடையவன், எ-று.

(க - து.) உலகெல்லா மொருகுடையி லாள்பவன் மேகத்தைப் பார்க்கிலும் ஏழுபங் கதிகமாகக் கொடுக்குங்கையை யுடையவன் என் பதாம்.

நிலாவுமிழ் குடையெனக் குடையின் விளக்கத்தைச் சொல்லுத லாலே அவனரசாட்சி விளங்குதலுங் கூறப்பட்ட தாயிற்று. அவ் வரசாட்சியே யாவரும் வறுமைநோய் தீர்ந்து பெருஞ்செல்வத்த ராய் வாழ்தற்குக் காரணமாகையால் 'வெங்கலியிருள்கெட வெண் ணிலாவுமிழ் திங்களங்கவிகை' என்றார். 'மாநிலமுழுதளிக்கு மாற்ற லான்' என்றதனாற் பல தீவுகளையுங் கண்டங்களையும் வென்று தன் னாணையின் கீழ்ப்படுத்தி வாழுஞ் சக்கரவர்த்தி யென்றதாயிற்று. இதனாலே பேராற்றலுடைமையும் விளங்குகின்றது. ஏழென்பது ஒரு தொகைச்சொல்லாயினும் இங்கே பலவென்னும் பொருளதாம். மே கம் நீரொன்றையே ஒரு பருவத்திலே தரும், இவன் கைகளோ எல்லாப் பொருள்களையு மெல்லாப் பருவங்களிலுந் தருமென்றதா யிற்று. கைக்கு வளமாவது உத்தமரேகைகள் பொருந்தி முழந்தா ளளவு நீண்டிருத்தல். (௪௧)

அருளினதுறையுணல்லறத்தின்வேலிசொற்
றெருளுறுகல்வியந்தெய்வமாக்கடல்
குரைகடற்புவிபுகழ்குணக்குன்றஞ்சுட
ரொளிதவழலங்கல்வேலரசரேறனான்.

(இ-ள்) அருளினது உறையுள் - கருணைக்கு வீடாயுள்ளவன்; நல் அறத்தின் வேலி - நல்லதருமமாகிய (பயிருக்கு) வேலியாயுள்ளவன்;

சொல் - நூல்களாலே, தெருளூறு கல்வி - (பல்வகைப் பொருள்களையும்) அறிந்த கல்விக்கு, தெய்வம் மா கடல் - தெய்வத்தன்மைபொருந்திய பெரிய கடலாயுள்ளவன், குரை கடல் புவி - ஒலிக்கின்ற கடலாற்சூழ்ந்த பூமியிலுள்ளோரால், புகழ் குணம் - புகழப்படுகின்ற நற்குணங்களெல்லாஞ்சேர்ந்த, குன்றம் - மலையாயுள்ளவன், சுடர் எரி தவழ் - ஒளியையுடைய நெருப்பானது தவழுகின்ற, அலங்கல் வேல் அரசர் - மாலையையுடைய வேலேந்திய (பகை) யரசராகிய (யானைகளுக்கு), ஏறு அன்னான் - ஆண்சிங்கம் போல்பவன், எ-று.

(க-து.) இருமைக்கு வீடானவன், தருமத்திற்கு வேலியானவன், கல்விக்குக் கடலானவன், குணத்திற்குக் குன்றானவன், பகைமன்னர்க்குச் சிங்கமானவன் என்பதாம்.

அருளாவது பிறவுயிர்க்கு வந்த வருத்தத்தைக் காணுகின்றபோது மனம்பொறாது இரங்கலாம், அதற்கு வீடெனவே அது அவனிலே நிலையாயிருக்குமென்றதாயிற்று. அறமாவது அந்தணர் முதலிய வருணத்தோரும் பிரமசாரிமுதலிய வாசிரமத்தோரும் வேத முதலியவற்றில் தத்தமக்கு விதிக்கப்பட்டவற்றைச் செய்தலும் விலக்கப்பட்டவற்றைச் செய்யாமையு மாம். 'நல்லறம்' என்று அடைகொடுத்துக் கூறலால் அது புறச்சமய நூல்களிற் கூறுந் தீயவறங்களை யொழிந்து நிற்றல்காண்க. 'அறத்தின்வேலி' எனவே அவர்களை அவற்றின் பிறழாது நடத்துவனென்றதாயிற்று 'கல்வி' என்பது பொதுப்படக் கூறலால் வேதம் - ச, வேதாங்கம் - சு, மீமாம்சை - க, தருக்கம் - க, புராணம் - க, தருமநூல் - க, ஆகிய பதினான்கு வித்தைகளுமெனக் கொள்க. அக்கல்விக்குக் 'கடல்' எனவே அது யாவராலும் உணரப்படாத ஆழமுங் கடக்கப்படாத விரிவு முடைத்தென்றதாகும் 'குரை கடற் புவிபுகழ்' என்றதனாலே கடலின் அலையொலிபோலப் புவியிலே புகழொலி யெப்போது மெழுதல் சொல்லப்பட்டது. இங்கே குண மெனப் பட்டவை இவ்வைந்து பாட்டினுஞ் சொல்லா தொழிந்த உயர்குலப் பிறப்பும் சதுரப்பாட்டுடைமையும் முறைபுகழ்ச்சி வேண்டாமையும் அழகுருத்துடைமையும் பிறவுங் கொள்ளப்படும். 'எரி தவழலங்கல்வேலரசர்' என்றதனால் பகையரசர் என்றதாயிற்று. அவர் அங்ஙனஞ் சிறப்பித்தமையால் இவனோடு பகைத்தற்குத் தகுதி யுடையராதல் தோன்றுகின்றது. 'புவிபுகழ் குணக்குன்றென்ற தனால் பெருங் கீர்த்தியும் 'அரசரேறன்னான்' என்றதனால் பெரும்பிரதாபமும் விளங்குகின்றன. வளமலியெனும் பாட்டில் மன்னர் மன்னவ னென்னு மெழுவாய் நின்று அப்பாட்டுமுதல் இப்பாட்டுவரையுமுள்ள பயனிலைகளைத் தனித்தனி கொண்டு முடிந்தது. இவற்றாலே தெய்வத் தன்மை பெருங்கொடை பெருஞ்செல்வம் ஒப்பில்லழகு நிறைபுலமை உயர்குலப்பிறப்பு விளக்கமுடைமை சதுரப்பாடு அறவழிநிற்றல் இவை முதலிய குணங்கள் சொல்லப்படுதலினாலே இவ்வரசன் உத்தமநாயக னென்பது பெறப்பட்டது. (சஉ)

நகரப்படலமுற்றும்.

---

# அன்னத்தைக் கண்ணுற்றபடலம்

நளன் பூஞ்சோலையிற்சென்று அந்நவனத்தைக் கண்டதையும், அவ்வனத்தினிடையிலுள்ள பூந்தடாகத்திலே அரசவன்னத்தைப் பற்றினதையும், அதன் துயரத்தைக் கண்டு அதைவிட்டதையும் சொல்லுகின்றது.

---

[இதுமுதல் ஒன்பது பாட்டுகளால் தமயந்தியினது காம விருப்பத்தைச் சொல்லத்தொடங்கி இதனுள் விரகிகளுக்குச் சொல்லப்பட்ட காட்சிமுதலாகிய பத்து அவஸ்தையுளுள் காட்சி யென்பது கேள்விக்கும் உபலக்ஷணையாதலால் அவள் நளமகாராஜனுடைய உயர்வாகிய குணங்களைக் கேட்டு அதுமுதலாகிய ஒன்பது அவஸ்தைகளையடைந்து வருந்துகின்றமை பொதுவகையாற் சொல்லப்படுகின்றது]

கலிநிலைத்துறை

**இன்னதன்மையனாகியவேந்தெழிற்றிணிதோள்**
**மன்னர்மன்னவன்மாணெழில்வகைநலங்கேட்டுக்**
**கன்னலஞ்சுவைகனிந்தசொற்றமயந்தியென்னும்**
**பொன்னங்கொம்பனையாண்மயலொடும்வைகலும்புலம்பும்**

(இ - ள்) கன்னல் அம் சுவை - சர்க்கரைபோல மதுரச்சுவையினாலே, கனிந்த சொல் - முதிர்ந்த சொல்லையுடைய, தமயந்தி என்னும் - தமயந்தியென்கிற, பொன்னம் கொம்பு அனையாள் - கற்பகப் பூங்கொம்பு போல்பவள், இன்ன தன்மையன் ஆகிய - இப்படிப்பட்ட குணாதிசயங்களையுடையவனாகிய, ஏந்து - (பூமிபாரத்தைத்) தாங்குகின்ற, எழில் திணி தோள் - அழகும் வலிமையும் பொருந்திய தோள்களையுடைய, மன்னர் மன்னவன் - அரசர்களுக்கு அரசனாகிய நளனுடைய, மாண் - குணங்களையும், எழில் வகை - அழகினது வகையையும், நலம் - செல்வத்தையும், கேட்டு - (அறிந்தோர்சொல்லக்) கேட்டு, மயலொடும் - மயக்கத்தோடும், வைகலும் புலம்பும் - தினந்தோறும் புலம்புவாள், எ-று.

(க - து.) தமயந்தியானவள் நளனது குணாதிசயங்களைக் கேட்டு மயலுற்றுப் புலம்புவாள் என்பதாம்.

மயலொடுமென்னும்உம்மை கீழ்ப்போன வேட்கை முதலாகிய ஏழவஸ்தைகளையுந் தழுவி நின்றது. அவஸ்தை பத்தாவன,—காணுதல், பெறல்வேண்டல், இடைவிடாது நினைத்தல், உடம்பு வாடல், தன்வருத்தம் பிறர்க்குச் சொல்லல், நாணத்தினெல்லை கடத்தல், தன்னாற் காணப்படுகின்றவையெல்லாம் அவ்விரும்பப் பட்டவைபோலுதல், பித்தாதல், மூர்ச்சித்தல், இறத்தல் என்பன. இவற்றுட் காட்சியொழிந்த வொன்பதும் "வேட்கை யொருதலை யுள்ளுதன் மெலித, லாக்கஞ்செப்ப னாணுவரை யிறத்த, னோக்குவ வெல்லா மவையேபோறன், மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்றிச், சிறப்புடை மரபினவை

களவென்மொழிப" என்பதனாலறிக. வடநூலாருள் ஆக்கஞ் செப்பலையும் நோக்குவ வெல்லாமவையே போறலையும் நீக்கி சாகரமென்கிற விழி துயிலாமையும் அரதியென்கிற வேறுபடுவெறுப்புங் கூட்டிப் பத்தென்பாராலெனின் அவ்விரண்டும் உள்ளுதலி லடக்கிக்கொள்ளப்படுமெனக. 'கன்னலருஞ்சுவை கனிந்த சொல்' ஆவது கேட்டோரை மகிழ்விக்கும் பொருளமைந்த மொழியாம். ஆகவே அவளது குறைவற்ற புலமை கூறியவாறாயிற்று. வாடாமையாலும் ஒளியாலும் கண்டோர் கண்களிகூரச் செய்தலாற் பற்றிப் பொன்னயங்கொம்பு உவமானமாக்கப்பட்டது. ஆகவே கல்வியிற் குறைவில்லாத சிறந்த தமயந்தியால் விரும்பப்படுதற்கு இப்படிப்பட்ட தோள்களே முக்கியகாரணமென்பது தோன்ற 'ஏந்தெழிற் றிண்டோளான்' என்றார். கல்வியறிவுடைய மங்கையர் ஆடவரிடத்தே முன்னே குணங்களையும் அதன்பின்னே அழகையும் அதன்பின்னர் அவ்விரண்டுங் கொண்டு காமவின்பத்தை யனுபவித்தற்குத் துணைக்காரணமாகிய செல்வத்தையும் விரும்புவராதலால் அம்முறையே 'மா[illegible] கேட்டாள்' எனக்க. அழகின் வகையாவன, கை கால் கண் முதலிய அவயவங்களின் அளவையும் நிறத்தையும் பற்றிய இயற்கை யழகென்று கூறப்படும் ஆடை யணி முதலியவற்றாற் செய்துகொள்ளப்படுஞ் செயற்கை யழகென [illegible]மாம். (க)

[இதனால் இடை[illegible] தன் [illegible]
[illegible] சொல்லப்படுகின்றது.]



தாதளைந் தினவண்டு கொண்டுமுரற் குழற்றைய
லேதமற்ற தன்னெழிற் கிணையாமென் றெண்ணி
யாதரத்தின் வேளாணையிற் பயிலு நெஞ்சத்தனைத்
தூதுவிட்டனடோன் றற்பாற் றுறந்தனடுயில்.

(இ-ள்) இனம் வண்டு - கூட்டமாகிய வண்டுகளானவை, தாது அளைந்து - மலர்ப்பொடியைப் பூசிக்கொண்டு, கொண்டு முரல் - ஆர்க்கின்ற கூந்தலையுடைய, தையல் - தமயந்தியானவள், ஏதம் அற்ற - குற்றமற்ற, தன் எழிற்கு - தனது அழகுக்கு, இணை ஆம் என - (இவனழகு) தகுதியாமென்று, எண்ணி - நினைத்து, ஆதரத்தின் - ஆசையினாலே, வேள் ஆணையில் - மன்மதனது ஆக்கினையிலே, பயிலும் - தங்குகின்ற, நெஞ்சத்தனை - (தன்) மனத்தை, தோன்றல்பால் - அரசனிடத்திலே, தூது விட்டனள் - தூதாக அனுப்பினவளாகி, துயில் துறந்தனள் - நித்திரையை இழந்தாள், எ-று.

(க-து.) தமயந்தி தன்மனத்தை நளனிடத்துத் தூதுவிட்டனள், அதனால் நித்திரையை விட்டனள் என்பதாம்.

அழகினாலே தனக் குயர்ந்தவளேயன்றி யொப்பவ ளொருத்தி யிருக்கினும் அதுவே தன்னழகுக்குக் குறைவாமென்று கொள்வளாதலால் அக்குறைவு மில்லையென்பது தோன்ற 'ஏதமற்ற தன்னெழிற்கு' எனச் சொல்லப்பட்டது. இங்கே யிணையென்பது மாற்றுயர்ந்த பொன்னுக்கும் மாசில்லாத மணிக்கும் போலத் தன்னழகுக்கு மவ

னழுக்கு முள்ள தகுதியாம். வேளாணையிற் பயிலுதல் தன்னுரிமை கெட்டு மன்மதன் எவ்வழியிலே நடத்துகின்றனனோ அவ்வழியிலே நடத்தல். நெஞ்சைத் தூதுவிடுதல் நளனிடத்தே மிகக்குறச் செலுத் துதலாம், அதாவது இடைவிடாது நினைத்த லென்க. இனவண்டு தாதளைந்து கண்படு குழற் றையல் துயிலைத் துறந்தனளெனவே தன் னையடுத்த அஃறிணையுயிர்களுக்கும் நித்திரைசெய்தற் கிடமாயுள்ள வள் தான் அதனையிழந்தனளோ வென்னு மிரக்கத்தைத் தோற்று கின்றது. (உ)

[இது முதல் மூன்று பாட்டால் கேள்வி விருப்பஞ் சொல்லப்படுகின்றது.]

மின்னிலங்குவேனளன்பெயர்கேட்டிடும்விழைவாற்
பொன்னின்வார்கழல்விதர்ப்பர்கோன்பேரவைபோந்து
மன்னரியாரினும்வந்தியர்நிடதனேத்தெடுப்ப
வன்னவன்புகழ்கேட்டலும்புளகமுற்றயரும்

(இ-ள்.) மின் இலங்கு வேல் - மின்னல்போல விளங்குகின்ற வேலையுடைய, நளன் பெயர் - நளமகாராஜனது நாமத்தை, கேட் டிடும் விழைவால் - கேட்கவேண்டுமென்கிற ஆசையினாலே, பொன் னின் - பொன்னாலாகிய, வார் கழல் - நீட்சி பொருந்திய வீரக்கழலை யுடைய, விதர்ப்பர் கோன் - விதர்ப்பதேசத்தாருடைய அரசனது, பேர் அவை போந்து - பெரிய சபையின்கண் (அவனைத் தொழுதற்குச் செல்கின்றவள் போல) சென்று, மன்னர் யாரினும் - பல அரசரிலும், நிடதன் - நிடததேசத்தரசனை, வந்தியர் - புகழ்வோரானவர், ஏத்து எடுப்ப - அதிகமாகப்புகழ, அன்னவன் புகழ் - அப்படிப் புகழ் பெற்ற அரசனது கீர்த்தியை, கேட்டலும் - கேட்ட வளவிலே, புள கம் உற்று - மெய்ம்மயிர் சிலிர்த்தலை அடைந்து, அயரும் - (தமயந்தி) வாடுவாள், எ-று.

(க-து) தமயந்தி தன்பிதாவின் அவையிற்சென்று வந்தியர் நள னைப்புகழக்கேட்டு வருந்துவாள் என்பதாம்.

நளன்பெயர் கேட்பவென்னாது 'கேட்டிடும் விழைவால்' என்றத னால் போந்து என்றதற்குத் தந்தையைத் தொழச் செல்கின்றவள் போலச் சென்றென்று பொருள்கூறப்பட்டது. நற்குல மகளிர்க்கு விவாகமளவும் தந்தையைத்தொழுதலும் விவாகத்தின்பின் கண வனைத் தொழுதலும் நித்தியவிதியா மென்க. நளன்பெயர் கேட்டிடும் விழைவினாலே வந்திய ரவனைப் புகழுஞ் சமயநோக்கிச் சென்றா ளென்க. ஒரு பெரிய வரசன்முன்னே பலதேசத்தரசர் குணங்களை யும் உள்ளவாறு புகழ்ந்துரைத்தல் வந்தியர் கடனாதலால் அவர் நளன்குணத்தை யுயர்த்திப் புகழ்ந்தா ரென்க. புளகத்தால் அவன்மே லவளுக்காசை மிகுந்தமை வெளிப்படுகின்றது. புளகித்தல் உவ கைச் சுவையைப் பற்றிய விறலாம். இப்படிப்பட்டவனை எனக்குக் கணவனாகப் பெற்றிலே னென்னு முள்ளநிகழ்ச்சியே அயர்தற்குக் காரணமாதல் தோன்றுகின்றது. (௩)

அனங்கனையொழியாமண்ணிலாடவற்றெரிதிரென்னக
கனங்குழையவரான்மன்னர்க்கோரொருகுற்றங்காட்டி
யினஞ்செயவண்டிமிருந்தண்டார்நளனலதில்லையென்று
மனங்களித்துரைப்பக்கேட்டுமம்மர்நோயுழக்குமாதோ.

(இ - ள்.) அனங்கனை ஒழியா - மன்மதனை நீக்கி, மண்ணில் - பூமியினிடத்துள்ள, ஆடவன் - (ஒரு) காளையை, தெரிதிர் என்ன - ஆராய்ந்து தேடுங்களென்றுசொல்லி, கனம் குழையவரால் - கனம்பொருந்திய காதணியையுடைய மகளிரால், மன்னர்க்கு - (மற்றை) அரசர்களுக்கு, ஓரொரு குற்றம் காட்டி - ஒவ்வொரு குற்றத்தைச் சொல்வித்துக் கொண்டு, இனம் செய வண்டு இமிரும் - கூட்டமாகக்கூடி வண்டுகளானவை ஒலிக்கப்பெற்ற, தண் தார் - குளிர்ச்சிபொருந்திய மாலையையுடைய, நளன் அலது - நளராஜனல்லாமல், இல்லை என்று - (ஒருவனு)மில்லையென்று, மனம் களித்து - நெஞ்சத்தில் மகிழ்ந்து, உரைப்ப - (அவர்) சொல்ல, கேட்டு - (தான் அதைக்) கேட்டு, மம்மர் நோய் - மயக்கமாகிய நோயிலே, உழக்கும் - (தமயந்தி) வருந்துவாள், எ-று.

(க-து) நளனே அழகுள்ளவனென்று மாதர்சொல்லக் கேட்டுத் தமயந்தி வருந்துவாள் என்பதாம்.

மன்மதனுக்கு அழகு நிறைந்திருந்துங் காணத்தக்க அங்கமில்லாத குறையுள்ளதென்பது தோன்ற 'அனங்கன்' என்றும், அக்காரணத்தினாலே அவனதழகு பயன்படுவதன்றென்பது கருதி 'ஒழியா' என்றும், விண்ணவரிற்சிறந்த மன்மதனை யொழிக்கவே தண்டாபூபிகநியாயத்தினாலே மற்றை விண்ணவரும் ஒழிக்கப்பட்டமையினாலே 'மண்ணிலாடவன்' என்றும், சொல்லினள். எல்லா வவயவங்களினழகு மொருவனுக்கே யமைதலரிதாதலால் ஒவ்வோரரசனுக்கு மொவ்வொரு குற்றங்கூறி நளனிடத்தெல்லா வவயவங்களினழகும் இருத்தல்பற்றி நளனைக்கூறி அதனைப்பின்னும் வலியுறுத்தற்கு உளனென்னாது 'அலதில்லை' என்றார். அவன் குணங்களைச் சொல்லும்போது சொல்கின்றோர்க்கே மனமகிழ்ச்சி யுண்டாதலால் 'மனங்களித் துரைப்ப' என்றார். 'என்னக் காட்டிக் கேட்டுழக்கும்' என முடிக்க. அனங்கனென்னும் விசேஷியம் அதன் பொருளாகிய மன்மதனை விலக்குதற்குத் தகுங் கருத்தை யுட்கொண்டிருத்தலாலே கருத்தடைகொளியணி. (௪)

பாளைவாய்க்கமுகிற்றாவிப்படுபழஞ்சிதறிவாளை
தாள்தாமரையிற்றுஞ்சுந்தண்பணைநிடதநாட்டின்
நீள்வளங்கேட்பாள்போலத்தூதர்பானிருபன்சீர்கேட் [ம
டாளிமொய்ம்பினனையெண்ணியணிமுலைநோக்கிச்சோரு

(இ-ள்.) பாளை வாய் கமுகின் தாவி - பாளைகளானவை பொருந்திய பாக்குமரத்தின்மேலே பாய்ந்து, படு பழம் சிதறி - குலைகளிலுள்ள கனிகளை உதிர்த்து, வாளை - வாளைமீன்களானவை, தாள் தாமரையில் துஞ்சும் - நாளத்தையுடைய தாமரைமலர்களிலே தூங்கப்பெறுகின்ற, தண் பணை - தண்ணிய கழனிகளையுடைய, நிடதநாட

டின் நீள் வளம் - நிடததேசத்தினது பெரியவளத்தை, கேட்பாள் போல - கேட்பவள்போல, தூதாபால - (அங்கிருந்து வந்த) தூதரிடத்து, நிருபன் சீர் கேட்டு - அரசனது கீர்த்தியைக் கேட்டறிந்து, ஆளி - சிங்கம்போல்பவனுடைய, மொய்ம்பு - தோள்களாகிய, இனை - இனத்தை, எண்ணி - நினைத்து, அணி முலை நோக்கி - ஆபரணங்களையுடைய (தன்) முலைகளைப் பார்த்து, சோரும் - (தமயந்தியானவள்) வாடுவாள், எ-று.

(க-து.) தமயந்தி புகழாளரிடத்து நிடதநாட்டுவளங் கேட்பவள் போல் நளன் கீர்த்தியைக்கேட்டு அவனைச்சேரக் கனதனங்களைப் பார்த்து வருந்துவாள் என்பதாம்.

அந்நாட்டின் வளத்தைக் கேட்பாள்போல நளன் சீரைக் கேட்டலாவது நளனை முக்கியப்பொருளாகக் காட்டாமல் அந்நாட்டையே முக்கியப்பொருளாகக் காட்டி அதைத் தொடர்ந்து வருகிற அவனது சீரைக் கேட்டலாம். அதைக் கேட்கும்போது மற்றை நாட்டு வளங்களினும் மிகப் பெரிதாதலின் அவற்றையொழித்து இதனைக் கேட்கின்றாளென்று கொள்ளுதலால் அவளிடத்தே ஐயமுறாரென்பது தோன்ற 'நீள்வளம்' என்றார். இவள் முலைகளோடு சேர்தற்கு அவன்றோள்கள் தகுதியான வென்மாதலால் 'இனை' எனப்பட்டது. பொருந்தும் பார்த்தற்குத் தோள்கள் காணப்படாமையாலும் தன் முலைகள் காணப்படுதலாலும் அவற்றை மனத்தாலெண்ணி இவற்றைக் கண்களாலே பார்த்தாளெனக. அவ்விரண்டற்கும் பொருத்தமுண்டென்றறிதலாலே அவ்விரண்டுஞ் சேர்தலால் வரு மின்பத்தைப் பெற்றிலேனென்று வாடினளெனக. நாட்டுவளங் கேட்கையாகிய கபடத்தினாலே நளன் சீர் கேட்கையாகிய தன் விருப்பத்தைச் சாதித்தலாலே பிறிதினவிழ்ச்சியணி. (௫)

[சித்திரக்காட்சி கனவிற்காட்சி முதலியவை விரகிகளுக்கு விநோதோபாயங்க ளாகையாலே இதனாலே சித்திரக் காட்சி விருப்பம் சொல்லப்படுகின்றன ]

ஓவியத்துறைகைபோயவொருவனையுருவின்மிக்க
காவலனொருவன்மற்றோர் கன்னிநீதீட்டுகென்னத்
தாவருமெழிலிற்கோட்டத்தானுமந்நளனுமாக
மேவரவினிதுநோக்கிமெய்ம்மயிர்பொடிக்குமன்றே.

(இ-ள்.) ஓவியம் துறை கைபோய - சித்திரவித்தையினது வழியிலே வல்லவனாகிய, ஒருவனை - ஒருவனைப் (பார்த்து), உருவின் மிக்க - அழகினாலே (யாவரினும்) மேற்பட்ட, காவலன் ஒருவன் - ஒரு ராஜகுமாரனையும், மற்று ஓர் கன்னி - வேறொரு கன்னிகையையும், நீ தீட்டுக என்ன - நீ யெழுதுக வென்றுசொல்ல, தாவரும் - வருத்தஞ் சோர்தலில்லாத, எழிலில் - சித்திரசாலையிலே, கோட்ட - (அவ்விருவர் வடிவங்களையும் அவன்) எழுத, தானும் - (விரும்பிய) தானும், அ நளனும் ஆக - (விரும்பப்பட்ட) அந்நளராஜனுமாக, மேவர - பொருந்த, இனிது நோக்கி - இனிதாகப் பார்த்து, மெய் மயிர் - உடம்பி

னுள்ள மயிர்களானவை, பொடிக்கும் - சிலிர்க்கப்பெறுவாள் (தமயந்தியானவள்), எ-று. அன்று, ஏ - அசைகள்.

(க-து.) சித்திர மெழுதிக்கொடுத்த இருபடங்களையுந் தமயந்தி பார்த்துப் புளகமடைந்தா ளென்பதாம்.

ஒருவனையென்பது பார்த்தென்னுஞ் சொல் வருவித்து முடிக்கப் பட்டது, இது சொல்லெச்சம் "சொல்லெஞ்சு முன்னுமடிவுமுளதாகுஞ் சொல்லளவல்ல தெருஞ்சுதலின்றே" எழில் - வண்ணமும் அழகுமாம் கைபோதல் - சிறுமைபோதல், அதாவது மிக்க தேர்ச்சியடைதல் விருப்பத்தின்படி யெழுதவேண்டலாய ஒவியத்துறை கைபோயவொருவன் தெரிந்துகொள்ளப்பட்டான். மன்மதன் முதலியோரை யொழித்து நாற்றிசையினும் புகழ்பெற்ற நளனென்று உய்த்துணர்ந்து கொள்ளுதற்கு உருவின்மிக்கவ னென்றது 'உருவின்மிக்க காவலனொருவன்' என்றும், அதுவரையி லவரோடு சம்பந்தமில்லாதவளும் கன்னிகையுமாகிய தன்னைக் குறிப்பித்தற்கு ஒருத்தி யென்றது 'மற்றோர் கன்னி' என்றுங் கூறினார் நளனையுந் தன்னையும் வெளிப்படையாகச் சொல்லாமைக்குக் காரணம் நாணமேயாம். அவ்வெழுதற்கு அவனுக்கு மனவூக்க முண்டாதற்பொருட்டு வேண்டிக்கோடல் பொருட்பட்ட திட்டென்றது 'திட்டிக' என்றார். அவ்வெழுதப்பட்டவை விபரீதப்படாமல் தன் விருப்பத்தின்படியே அமைதலால் 'தாழ்வும் அசநளனுமாக நோக்கினாள்' என்க. தன்னுருவங் காணப்பட்டு நிற்றலானும் நளனுருவஞ் செவிப்புல வுணர்ச்சியைக்கொண்டு பார்த்தறிய வேண்டுதலானும் முன் சொல்லப்பட்ட முறைப்படி அந்நளனுந் தானுமாக வறிந்த 'தானுமந்நளனுமாக' என்றா ளென்றார். அன்றியும் இப்பாட்டுச்சு அழகினாலே மிக்க வொருவனையு மொருத்தியையும் எழுதென்று பின்னேயே அவ்வுருவங்களை அழகான் மிக்கவர் தாமிருவருமேயாதலால் அவற்றைத் தாமாகக் கண்டாளெனினும் அமையும். உண்மையாகவே தாமல்லா திருந்தாலும் விநோதமாக அவற்றைத் தாமாகப் பாவித்துப் பார்த்து மகிழ்ந்தாளென்க. மயிர்பொடித்தல் உவகைச் சுவைபற்றிய விறலாம். (௩)

[இதுமுதல் இரண்டு பாட்டுகளால் கனவிற்காட்சி சொல்லப்படுகின்றது.]

வள்ளறரு ரகலந்தன்னில் வனமுலை திளைக்க வெண்ணு
முள்ளத்தாள் கனவிற் காணு மொழிந்தநா ளுளதோ கங்கு
லொளிர்க்கா துயிலிற் காணு மனைபொருள் காணுங் கொல்லோ
மெள்ளத்தான் விதியாற் காட்டுஞ் செயலினை விலக்கலாமோ

(இ-ள்.) வள்ளல் - நளமஹாராஜனது, தார் அகலம் தன்னில் - மாலைசூடிய மார்பினகண்ணே, வனம் முலை திளைக்க - சித்திரத்தையுடைய முலைகளானவை அழுந்தாநிற்க, எண்ணும் - (அவனை) இடைவிடாது நினைக்கின்ற, உள்ளத்தாள் - மனத்தையுடைய தமயந்தியானவள், கனவில் காணுது - ஸ்வப்பனத்திலே காணுதிருக்க, ஒழிந்த நாள் உளதோ - கழிந்தநாளும் உண்டோ, [இல்லை], காணு நனை

பொருள் - (முன்) காணப்படாமல் தங்கிய ஒருபொருளை, கங்குல் நள ளில - இரவினது நடுவிலே, கூா துயிலில - செய்யப்பட்ட நித்திரை யினால், காணுங்கொல் - (ஒருவன்) காண்பானோ (வெனின்), விதி யால - ஊழினால், காட்டும - (அதனைக) காட்டுகின்ற, செயலினை - (அந்நித்திரையின்) செய்கையை, மௌனத்தான் - வினையாமலேனும், விலக்கலாமோ - (அசம்பவமென்று) விலக்கலாமோ (ஆகாது), எ-று.

(க - து.) தமயந்தி நளனைக் கனவிற் காணுதொழிந்த நாளிலலே கண்ணிறகாணாத பொருளைக் கனவிற் காணாது, காணாத நளனைக் கனவிற் கண்டது விதிகூட்டுஞ்செயல் என்பதாம.

கிளைக்கவென்னும் வினையெச்சம் காணுதென்னு மெதிர்மறையின் முதனிலைத்தொழில் கொண்டது முன்னே துயிலைத் துறந்தனளென்ப தனோடு இங்கே பலநாள்களிலும் துயின்றபின் வருவதாகிய கனவு கண்டாளென்றது மாறன்றோவெனின் அவனை இடைவிடாது சிந்தித் திருப்பவளுக்கு நெடுங்கால வாசனையால் சிறிது கண்ணுறக்கம் வருவ தன்றிப் பழையபடி நித்திரை செய்திலளெனக். நளனைத் தனக்கு நாயகனாக இடைவிடாது சிந்திக்கின்றவளாகிய தமயந்தியானவள் தினந்தோறுங் கனவிலே தன்னைப் புணர்கின்றவனாக அவனைக் காண் கின்றாளென்றும், ஒருபோதுங் காணப்பட்டிலலாத ஒருபொருளை இரவிலே நித்திரையினாலே காணுதல் அசம்பவமன்றோ வென்கிற சங் கைக்கு அந்த நித்திரையானது தனனாலேயன்றி ஊழ்வலியினாலே அப் படிப்பட்ட பொருளையுங் காட்டுதலால் அதனை அசம்பவ மென்னலா காதென்றுஞ் சொல்லியதாம. இங்கே காணுதலுக்குக் கட்பொறி மாத்திரத்தாலன்றி மற்றைப் பொறிகளா லனுபவித்தலுங் கொள்க. 'விதியாற் காட்டுஞ் செயலினை விலக்கலாமோ' என்னும் பொதுப்பொ ருளாலே நளனைக் கண்டிலாத தமயந்தி கனவிலே அவனைக் காணுத லாகிய சிறப்புப்பொருளைச் சாதித்தலால் வேற்றுப்பொருள்வைப்பணி.

கட்புலனென்னுந்தூயகதவடைத்திதயமேய
வுட்புலனொடுங்கநோக்கியுறுதுயிலென்னுந்தோழி
புட்குலஞ்சுழலுமவைவேலிறையெழிற்பொலிவுகாட்டு
முட்பொதிபசுந்தாட்செய்யமுளரிபோன்முகத்தினுட்கே.

(இ-ள்.) தூய கண் புலன் என்னும் கதவு அடைத்து - (நீர்த்துளி களைந்த) தூய்மையுடைய கண்ணிமைகளென்கிற கதவுகளைச் சாத்திக்கொண்டு, இதயம் மேய - நெஞ்சமாகிய (தனவீட்டுள்) தங்கிய, உள் புலன் ஒடுங் க நோக்கி - மனமானது அடங்க (அச்சமயம்) பார்த்து, உறு துயில் என்னும தோழி - அடைந்த நித்திரையென்கிற பாங்கியானவள், புள் குலம் சுழலும் - பறவை யினமானது வட்டமிடப்பெறுகின்ற, வை வேல் இறை - கூர்மைபொருந்திய வேலையுடைய நளமகாராஜனாகிய, எழில் பொலிவு - அழகினது பெருக்கத்தை, முள் பொதி பசு தாள் செய்ய முளரிபோல - முள்ளுகளாலே நிறைந்த பசிய தண்டையுடை ய செந்தாமரை மலர்போலும், முகத்தினுட்கு - முகத்தையுடைய தம யந்திக்கு, காட்டும் - காண்பிப்பாள், எ-று.

(க-து) நித்திரையென்னும் பாங்கியானவள் நளனது அழகைத் தமயந்திக்குக் காட்டுவாள் என்பதாம்.

தூவுதல் வினைக்கு அவாய் நிலையாலே நீர்த்துளிகளென்கிற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பிறர் தனக் கெதிராயிரா திருக்கக் கதவடைத்து வீட்டுள்ளே தனித்திருந் தெண்ணுவோன்போல மனமானது உருவங்கள் தனக் கெதிராகா திருக்கக் கட்பொறிவாயி லிமைக் கதவடைத்து நெஞ்சமாகிய தனிடத்தே தங்கி நெடும்பொழு தெண்ணியதாற் சேர்ந்த தெனக். 'உட்புலனொடுங்க' என்றதனால் மற்றைமெய் வாய் மூக்குச் செவி யென்னும் பொறிகளிற் செல்லாமையும் பெறப்படுகின்றது. ஒருத்திக்கு அரிதான வொரு மறைபொருளைப் பிறரறியாமற் கொணர்ந்து காட்டுந் தோழிபோல நித்திரையானது தமயந்திக்கு அவள் கண்களும் அந்தக்கரணமும் அறியாமல் மறைத்து நளனைக்காட்டிய தென்பதாம். கண்ணிற் காட்சி யறிவும் மனத்தாலன்றி யுண்டாவதில்லையே அப்படி யிருக்க அதற்கு எவ்வாறு மறைத்துக் காட்டிய தென்னின் இங்கே பொறிகளோடு கூடிய மனத்துக்கே மறைத்த தென்று கொள்க. எதுகைக்காகவே யன்றிப் பறிக்கப்பட்டு மலர்ச்சியும் அழகுங் கெட்டுப் போகாத மலரென்பது தோன்றுதற்கு 'புட்பொதி பசுந்தாள்' என்னும் அடை சொல்லப்பட்டது போலும். உருவகவணி. (அ)

[இதனால் நினைத்தலாலுண்டாகிய துயிலாமை
சொல்லப்படுகின்றது]

தாமரைமுகங்கள்வாட்டுந்தண்பனிக்காலந்தன்னிற்
காமர்வெம்பகனீட்டித்தவண்ணமுங்கணவர்தீர்ந்தோ
ரேமுறுவேனிற்காலமிரவுநீட்டித்தவாறுந்
தூமமென்கூந்தற்செவ்வாய்த்துடியிடைதுயரவன்றே.

(இ-ள்.) தாமரை முகங்கள் வாட்டும் - தாமரை மலர்கள் போன்ற முகங்களை வாடச்செய்கின்ற, தண் பனி காலந் தன்னில் - குளிர்ச்சியான பனிக்காலத்தில், காமர் வெம் பகல் - அழகிய வெப்பத்தைத் தரும் பகற்பொழுதானது, நீட்டித்த வண்ணமும் - அதிகரித்திருப்பதும், கணவர் தீர்ந்தோர் - (தம்முடைய) நாயகரினின்று நீங்கின மாதர், ஏம் உறு வேனில் காலம் (தன்னில்) - மையலை யடைதற்குக் காரணமாகிய வேனிற்காலத்தில், இரவு நீட்டித்த ஆறும் - இராப்பொழுதானது அதிகரித்திருப்பதும், தூமம் மென் கூந்தல் - (அகில்) புகையூட்டிய மெல்லிய அளகபாரத்தையும், செம் வாய் - சிவந்த வாயையும், துடி இடை - உடுக்கைபோலும் இடையையுமுடைய (தமயந்தியானவள்), துயர அன்றே - வருந்தும்படியாகவே யல்லவா? [ஆம் என்றபடி], எ-று.

(க-து.) பனிக்காலம் பகலைநீட்டித்ததும் வேனிற்காலம் இரவை நீட்டித்ததும் தமயந்தி துயரப்படத்தான் என்பதாம்.

தைமீ ௰உ தொடங்கி ஆனிமீ முடிவு வரைக்கும் பகற்காலம் உஅ - நாழிகையிலிருந்து ஙஉ - நாழிகை அளவாக வளர்ந்தும்,

இதற்கேற்க இராக்காலம் ௩௨ - நாழிகையிலிருந்து ௨௮ - நாழிகை யளவாகத் தேய்ந்தும் வரும், இப்படியே ஆடிமீ ௩௨ தொடங்கி மார்கழிமீ முடிவு வரைக்கும் இராக்காலம் ௨௮ - நாழிகையிலிருந்து ௩௨ - நாழிகை யளவாக வளர்ந்தும், இதற்கேற்கப் பகற்காலம் ௩௨ - நாழிகையி லிருந்து ௨௮ - நாழிகை யளவாகத் தேய்ந்தும் வரும், இது சூரிய சித்தாந்த முதலிய கணிதநூல்களாலும் அநுபவத்தா லும் அறியப்படும். ௨௮ - நாழிகைப் பகலுள்ள மார்கழியும் தையு மாகிய முன்பனிப் பருவத்தையே 'தலைப்பனிக்காலம்' என்றொன்றும், ௨௮ - நாழிகை யிரவுள்ள ஆனியும் ஆடியும் ஆகிய முதுவேனிற் பரு வத்தையே 'வேனில்' என்றொன்றுங் கொள்க. 'தாமரை முகங்கள் வாடும்' என்றதனாலும் 'கணவர் தீர்ந்தோ ரேமுறு' என்றதனா லும் அவ்விருவகைக் காலங்களுக்குங் கொடுமையே சொல்லப்பட்ட தாயிற்று. பனிக்காலத்திலே குறைந்த பகலும் வேனிற்காலத்திலே குறைந்த இரவும் மிகுந்து தோன்றுதல் சாஸ்திரத்துக்கும் அநுபவத் திற்கும் விரோதமன்றோ வெனின் விரகிகளுக்குக் கஷ்டப்பொழுது நெடுங்காலமா மென்பதனால் விரோத மில்லை யென்க. ( )

[இது முதற் பதினொரு பாட்டுகளால் நளராஜனுடைய காமவிருப்பத்தைச் சொல்லத்தொடங்கி அவன் தமயந்தியி னுயர்வாகிய குணத்தைக் கேட்டமையை இதனாற் சொல்லுகிறார்.]

மணியெழுவனையதோளார் மனவலியகற்றுந்துத்திப்
பணவரவல்குற்செவ்வாய்ப் பைந்தொடி குணனூலாக
வணியிளஞ் சீத்திமுத்தங் கோத்தனனரசர்சென்னி
தணவறவிளங்குபைம்பொற் றாமரைத்தாளினானே.

(இ - ள்.) அரசர் சென்னி - அரசருடைய தலைகளிலே, தணப்பு அற விளங்கு - ஒழிவில்லாமல் விளங்குகின்ற, பசுமை பொன் தாமரை தாளினான் - பசிய பொற்றாமரை மலர்களாகிய அடிகளையுடைய நள மஹாராஜாவானவன், அரவு - பாம்பினது, துத்தி பணம் அல்குல் - கரும் புள்ளிகளையுடைய படம்போலும் அல்குலையும், செம் வாய் - சிவந்த வாயையும், பைந் தொடி - பச்சை வளையல்களையும் உடைய தம யந்தியினது, மணி எழு அனைய தோளார் - மணித் தூண்போலும் தோள்களையுடைய காளையரது, மனம் வலி அகற்றும் குணன் - தைரி யத்தை நீக்குகின்ற குணமானது, நூலாக - இழையாக, அணி இளம் சீத்தி முத்தம் - (தன்) அழகினாலே விளங்கா நின்ற கீர்த்திகளாகிய முத்துகளை, கோத்தனன் - (அவ்விழையிலே) கோத்தான், எ-று.

(க-து.) நளமகாராஜன் தமயந்தி குணமே நூலாகவும், தன் கீர்த் தியே முத்துக ளாகவும் கோத்துக்கொண்டிருந்தான் என்பதாம்.

அரசர் தமது முடிகளின்மேலே பொற்றாமரை மலரைப்போல மகிழ்ந்து கொள்ளுதலால் அவர்முடிக்கு இவனடி பொற்றாமரை மல ரென்னப்பட்டது. படத்திற்குக் கரும்புள்ளிகள்போல அல்குலுக்கு ரோம மென்க. 'பைந்தொடிகுணன்' மனவலி யகற்றுங் குணமென

எனக்கூட்டுக. 'மணியெழு வனையதோளார்' அரசிளங்காளையார். மனவலியகற்றலாவது கூற்றங்கொதித்து மேல்வரினும் கலங்காத வலிய மனநிலையைக் கேட்கப்பட்டவளவிலே கலங்கச் செய்தலாம். குணமெனப் பொதுப்படக் கூறுதலால் அழகு முதலான பலவுங் கொள்ளப்படும். அரச னழகினு லுண்டாகிய கீர்த்திகளாகிய முத்துகளுக்கு அவள் குணம் நூலாகவெனவே முத்துகளுக்கு நூல் போல அக்கீர்த்திகளுக்கு அவள் குணம் இன்றியமையாத சிறப்புடைத்தென்பது பெறப்பட்டது. கீர்த்தி முத்தங்களாகக் குணமானிற கோத்தல் அவள் தனக்குக் கிடைக்கப்பெறின் அவள் குணத்தினாலே தன் கீர்த்தி விளங்குந்தன்மையை நினைத்தல் குணத்திலே நூலையும் கீர்த்தியிலே முத்தையும் ஆரோபித்தலால் உருவகவணி (௧0)

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் நளமகாராஜனை வெல்லுதற் கெண்ணிய மன்மதன் செய்கையைக் காட்டி அனமேலவ னுக்குண்டாகும் விருப்பம் குறிப்பிக்கப் படுகின்றது]

வனப்பினில்வென்றவேந்தைவயங்கொளுங்காலமென்னும்
கனைந்துவண்டிவருங்கூந்தல்கருதியவிலக்கந்தப்பாத
தனிப்படையாகவேறறெண்ணினனறரளஞ்சிந்தக் [ன.
குனிக்குமென்கரும்பானமேருவில்லியைவெல்லுங்கோளா

(இ-ள்.) தரளம் சிந்த - முத்துகளானவை உதிராநிற்க, குனிக்கும் மெல் கரும்பால் - வளைக்கப்பட்ட மெலிய கருப்பு வில்லினாலே, மேரு வில்லியை - மேருவை வில்லாகக்கொண்ட சிவனையும், வெல்லும் கோளான் - வென்ற (பெருமையையுடைய) மன்மதனானவன், வயம் கொளும் காலம் என்னு - வெற்றியை கொள்ளுதற்கேற்ற காலம் (இதுவே) என்று, வண்டு கனைத்து இவரும் கூந்தல் - வண்டுகளானவை ஒலித்து ஏறுகின்ற கூந்தலையுடைய தமயந்தியானவள், கருதிய இலக்கம் தப்பாத - (தன்னாலே) குறிக்கப்பட்ட குறியினின்றும் தப்பாத, தனி படை ஆக - ஒப்பற்ற ஆயுதமாக, வனப்பினில் வென்ற வேந்தை - அழகினாலே (தன்னை) வென்ற நளமஹாராஜனை, வேறற்கு எண்ணினன் - (அப்படையால்) வெல்லுதற்கு ஆலோசித்தான், எ-று.

(க - து.) மன்மதனானவன் தமயந்தியைப் படையாகக்கொண்டு நளனை வெல்ல நினைத்தான் என்பதாம்.

முன்னே மேருவில்லியால் வெல்லப்பட்டவனாயினும் பின்னே உமாதேவியை மணம்புணரச் செய்தமையினாலே 'கரும்பான மேரு வில்லியை வெல்லுங்கோளான்' என்றார்.

"மாதுமை நிமித்தமாக மழுவலா னனங்கனுக்கும்
கோதறெரு சுட்டறச்சிறிக் கொனகனெ டுமைக்குமேனி
பாதிசெய் தவனைத்தண்டம் பணணித்தன் வசமாச்செய்த
நாதனே யுலகுக்கெல்லா நாதனென் றேத்துவாமே"

என்பதனாலுமறிக. வல்லவனுக்குப் புல்லுமாயுத மென்றபடியே மன்மதன் ஆற்றலை மெச்சியவா றுயிற்று. 'வயங்கொளுங் காலம்' என்றது

கொத்தி முத்தங்களைக் குணநூலிற் கோத்தகாலத்தைச் சுட்டிநின்றது. வனப்பினில் வெல்லுதலாவது அழகின் மேற்பட்டு நிற்றலாம். தமயந்தி மன்மதனுக்கு அவனாலே குறிக்கப்பட்ட அரசனாகிய குறியிலே தப்பாது சென்றுதாக்கும் ஒப்பற்ற படைக்கலமாயினாள் எனச் தன்னை யழகில்வென்ற அரசன்மேல் உள்வயிரங்கொண்டு அவனை வெல்லுதற்கான காலமும் படைக்கலமுந் தேடிக்கொண்டிருந்து அவை கிடைக்கப் பெறுதலினாலே 'வேற்று கெண்ணினான்' எனக். வயங்கொள்ள நினைத்தற்கு ஏதுவாகாத வனப்பினில் வென்றமையை யேதுவாகக் குறித்தலால் ஏதுத்தற்குறிப்பணி. 'கருப்பான மேருவில்லை வெல்லுங் கோளான்' என்க் காரணத்தினது தருமங் குறைவாயிருக்கக் காரியம் பிறத்தலைச் சொல்லுதலால் உ-வது பிறிதாராயச்சியணி. இவ்விரண்டுஞ் சேர்தலாலே சேர்வையணி. (கக)

அணங்கினுக் கணங்கு செய்யு மணிகிள ரஞ்சில லோ
தி, குணங்கமழ் குருதி வைவேற் கொற்றவன் செவியுறு
முன், மணங்கமழ் தென்றற் றேரோன் வாங்குபைங் கழை
விற் பூட்டுங், குணஞ்செவிப் பட்ட தன்னோன் வன்மை
யார் குணிக்கற் பாலார்.

(இ-ள்.) அணங்கினுக்கு அணங்கு செய்யும் - தெய்வமகளிருக்கு வருத்தத்தைச் செய்கின்ற, அணி கிளர் அம் சில் ஓதி - அலங்கரித்தலாலே விளங்காநின்ற அழகிய பொன்வட்டத் தகட்டணி பொருந்திய கூந்தலையுடைய தமயந்தியினது, குணம் - குணமானது, கமழ் குருதி வை வேல் கொற்றவன் - நாறுகின்ற உதிரத்தையுடைய கூர்மைபொருந்திய வேலையுடைய நளமகாராஜனது, செவி உறு முன் - காதிலே அடைவதன்முன்னே, மணம் கமழ் தென்றல் தேரோன் - வாசனையானது மணக்கப்பெற்ற தென்றலாகிய தேரையுடைய மன்மதனால், வாங்கு பைங் கழை வில் - வளைக்கப்பட்ட பசிய கருப்புவில்லிலே, பூட்டும் குணம் - ஏற்றப்பட்ட நாணானது, செவி பட்டது - (அம்மன்மதன்) காதிலே அடைந்தது, அன்னோன் வன்மை - அப்படிப்பட்ட மன்மதனது வல்லமையை, யார் குணிக்கற்பாலார் - யாவர் அளவு செய்ய வல்லவர்? எ-று.

(க-து.) தமயந்தி குணாதிசயமானது நளன் காதில்விழுமுன் மன்மதனானவன் விற்பூட்டும் வல்லமை யார் சொல்லவல்லார் என்பதாம்.

அணங்கு - சாதியொருமை. "அணங்குஞ்சூருந் தெய்வப்பெண் பொதுப்பெயர்" என்பதனாலறிக. அணங்கினுக் கணங்குசெய்தல் தன் பேரழகினால் அவர்க்குப் பொறாமை வருத்தஞ் செய்தலாம்; அல்லாமலும் அழகுக்கழகு செய்கின்றவெனினுமாம். தமயந்தியின்குணம் அழகுமுதலிய பண்பாம். கருப்புவிற் குணம் அதனது நாணாம். "குணமென்ப கயிறும் பண்புங் கும்பம்வின் னாணுநாற்போ" என்பதனாலறிக. தமயந்தியின் குணம் நளன் செவியி லடைவதன் முன்னே கருப்புவில்லின் குணம் மன்மதன் செவியிலடைந்த தெனக். நளன் செவியி லடைதலாவது கேட்டறியப்படுதல். மன்மதன் செவியி லடைதலா

வது இடதுகையால் வில்லைப்பிடித்து நின்று வலதுகையால் அம்பைத் தொடுத்து நாரியை யிழுக்கும்போது அந்நாரி காதளவிற் சென்று படுதலாம். தமயந்தியின் குணத்தை நளன் கேட்பதற்கு முன்னே மன்மதன் அம்பெய்யத் தொடங்குதல் கூடாமையாலே 'செவியுறுமுன்' என்பது செவியுற்றளவி லென்னும் விரைவைக் காட்டியது. தமயந்தியினழகை யரசன்கேட் டறிதலாகிய காரணத்துக்குமுன்னே மன்மதன் வில்வளைத்தலாகிய காரியம் பிறத்தலைச் சொல்லுதலால் மிகையுயர்வுநவிற்சியணியாகும். (௪௨)

கல்வியின்றுறைகைபோயகாவலன்றன்னையின்னே
வெல்குவலென்னநெஞ்சில்விழைவுறுகருப்புவில்லான்
மல்லலம்புவனமூன்றும்வென்றதன்வரம்பில்சீர்த்தி
யலகலிலையமென்னுமாழியிலுகுத்துநின்றான்

(இ-ள்.) கல்வியின் துறை கைபோய - கல்வியினது வழியில் வல்லவனாகிய, காவலன்றன்னை இன்னே வெல்குவல் என்ன - அரசனை இப்போதே வெல்வேனென்று, நெஞ்சில் விழைவு உறு கருப்பு வில்லான் - (தன்)மனதில் ஆசைப்பெருக்கத்தைக்கொண்ட கருப்பு வில்லையுடைய (மன்மதனானவன்), அம் புவனம் மூன்றும் வென்ற - அழகிய உலக மூன்றையும் (அதுவரையில்) வென்று சம்பாதிக்கப்பட்ட, தன் - தனது, மல்லல் வரம்பு இல் சீர்த்தி - வளம்பொருந்திய அளவில்லாத கீர்த்தியை, அலகலில் ஐயம் என்னும் ஆழியில் - சுருங்கலில்லாத சந்தேகமென்கின்ற கடலுள், உகுத்து நின்றான் - முழுக்கச்செய்து (திகைத்து) நின்றான், எ-று.

(க-து.) நளனைவெல்ல விருப்புற்ற மன்மதனானவன் தன்கீர்த்தியைச் சந்தேகக்கடலிற்சொரிந்து மயங்கிநின்றான் என்பதாம்.

'கல்வியின்றுறை கைபோய காவலன்' எனவே வேதாகமங்களிற் சொல்லப்பட்ட விதிவிலக்குகளை ஐயந்திரிபின்றி யறிந்து அவ்வறிவினாலே மனத்தைத் தன்வசப்படுத்தி நிற்பவன் என்பது பெறப்பட்டது. அவனை வெல்லுதல் அவன் மனநிலையைக் கெடுத்துக் காமத்திற் கலங்கச்செய்தல். அக்கல்வியறிவினுயர்ந்தோனை யிப்போதே வெல்லுவே னென்றாசைகூர்தல் சாகசமாதலாலே மன்மதனுக்கு இவனை வெல்லமாட்டுவேனோ மாட்டேனோ வென்கிற வுள்ளநெகிழ்ச்சிபிறந்து அதனால் இதுவரையில் மூன்றுலகங்களையும் வென்று சம்பாதிக்கப்பட்ட கீர்த்திகளும் நிற்குமோ நீங்குமோ வென்று சந்தேகித்தா னென்க. புதிதாகச் சம்பாதிக்க விரும்பிய ஊதியத்தைக் குறித்து முயன்று அதுவரையிலே சம்பாதித்து வைத்திருக்கப்பட்ட முதலையும் இழந்துபோதல் அறிவிலான்செயல் ஆதலால், "ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செயவினை யூக்கா ரறிவுடையார்" என்பதனாலறிக. 'கல்வியின் றுறைகைபோய' என்னுமடை அரசன் மன்மதனுக்கு ஐயந்தரவல்லவனென்னுங் கருத்தை யுட்கொள்ளுதலால் கருத்துடையணி அங்கம், மன்மதனுக்குச் சந்தேகமில்லாதிருக்கச் சந்தேகத்தைக் கற்பித்தலால் தொடர்புயர்வுநவிற்சியணி அங்கி, ஆதலால் உறுப்புறுப்பிக் கலவையணி. (௪௩)

[இதனால் மன்மதனுக்கு விதித்துணையாற் பூவம்பைக்கொண்டே ஆண்மை பயன்பட்டமை சொல்லப்படுகின்றது]

தண்ணறுந்துளிக்குங்கூந்தற்றமயந்திமுலையும்போர்வே
லண்ணனற்புயமுங்கூட்டும்விதிவலியழகிற்றம்மா
மண்ணமைமுழவுத்தோளான்மனவலிக்கவசமார
னொண்மலர்வாளியாலுமுரனறப்பிளந்ததன்றே

(இ-ள்.) தண் நறு துளிக்கும் கூந்தல் தமயந்தி முலையும் - தண்ணிய (மலர்ந்த) தேனைத் துளிக்கின்ற கூந்தலையுடைய தமயந்தியினுடைய முலைகளையும், போர் வேல் அண்ணல் புயமும் - போர்க்குரிய வேலையுடைய நளமகாராஜனுடைய தோள்களையும், கூட்டும் - சேர்க்கும், விதி வலி - தெய்வத்தினது வல்லமையானது, அழகிற்று - பயனுடைத்தாயிற்று, மண் அமை முழவு தோளான் - துடைத்தல் அமைந்த மத்தளம்போலும் தோள்களையுடைய அவ்வரசனது, மனம் வலி கவசம் - தைரியமாகிய கவசமானது, மாரன் - மன்மதனது, ஒள் மலர் வாளியாலும் - பிரகாசமாகிய பூ வம்பினாலும், உரன் அற பிளந்தது - உரங்கெடக் கிழிந்தது, எ-று.

(க-து.) தமயந்தி முலைகளையும் நளன்றோள்களையும் சேர்க்கும் விதிவசம் வலுமையுள்ளது, நளனது தைரியமாகிய மனக்கவசமானது மன்மதபாணத்தால் கிழிந்தது என்பதாம்.

மனவலியில் வலியென்பது தல் விகுதி குன்றிய தொழிற்பெயர். அது நிலைத்தலென்பது, "உயர்ந்துபோமாறே வலிக்குமாமானுடர் மனம்" என்பதனாலறிக. தமயந்தி முலையும் நளன் புயமுங் கூட்டலென்றதற்கு அவளை இவனுக்கு மனைவியாகச் செய்தலென்பது பொருள். கொடிய படைக்கலங்களால் ஊறுபடாமற் காக்குங் கவசம்போல அரசனது மனவலி காமத்தினாலே ஊறுபடாமற் காத்தலாலே 'மனவலிக்கவசம்' என்றார். அது பிளத்தல் - நிலைகலங்குதல். தெய்வ சங்கற்பத்தினாலே எந்தக்காரியந்தான் முடியாதென்றதாயிற்று. மலர்வாளியாலுங் கவசம் பிளந்ததென்னும் விரோதம் விதிவலியாற் பிளந்ததென்றதினாலே அழிதலால் முரண்விளைந்தழிவணி. இது 'மனவலிக்கவசம்' என்னும் உருவகத்தை அங்கமாகக்கொண்டு வந்தது. (௧௬)

[இதனாலே முதற்கடவுளரையும் வென்ற மன்மதனுக்கு வெல்லுதற்கரியதியாதென்று சொல்லப்படுகின்றது.]

தேங்கமழ்துளவினானுநான்முகத்தேவுநாளுந்
தாங்கருங்காமவெம்மைதரிக்கிலராகியன்றே [ள
வாங்குதண்டிரையிற்றண்ணென் மலர்வயின்வதிந்தார்மன்
னீங்கருநிழலிற்றேன்றுமதனையெவ்வாறுநீங்கும

(இ-ள்.) தேன் கமழ் துளவினானும் - தேனது மணக்கப்பெற்ற துளசிமாலையையுடைய விஷ்ணுவும், நான்முகம் தேவும் - நான்கு முகங்களையுடைய பிரமாவும், நாளும் - எந்நாளும், தாங்கு அரு காம

வெம்மை - (யாவராலும்) தாங்குதற்கரிய மன்மதனாலுண்டாகிய வெப்பத்தை, தரிக்கிலா ஆகி - பொறுக்கமாட்டாதவா ஆகி, வாங்கு தண் திரையில் - வளைந்த குளிர்ச்சிபொருந்திய பாற்கடலின்கண்ணும், தண் என மலரவயின் - குளிர்ச்சிபொருந்திய தாமரைப்பூவின்கண்ணும், வதிந்தார் அன்றே - வாசஞ்செய்கின்றாரன்றே, மன்னன் - அரசனானவன், நீங்க அரு நிழலின் தோன்றும் மதனை - நீங்காத (தனது) சாயை வடிவமாகத் தோன்றுகின்ற மன்மதனினின்றும், எவ்வாறு நீங்கும் - எவ்வுபாயத்தினாலே நீங்கமாட்டுவான்? எ-று.

(க - து.) பிரமனும் விட்டுணுவும் காமக்கனலுக்காற்றாமல் கடலிலும் மலரிலும் இருக்கின்றார்கள் ஆகையால், நளன் மதனைவிட்டெவ்வாறு நீங்குவான் என்பதாம்.

காமவெம்மை—நிலைமொழியீறு விகாரப்பட்டது, குமரகோட்டமென்பதுபோல. காமனாலாகிய வெப்பம்பொறாமல் அதைத் தணித்துக்கொள்ளுதற்குத் திருமால் பாற்கடலினும், நான்முகன் தாமரைப் பூவிலும் வாசஞ்செய்கின்றாரென்றார், படுக்கையிடமும் ஆசனமும் அசலபற்றி யென்க. முதற்கடவுளரே மன்மதனைக் கடக்கமாட்டார் இருக்கையில் ஒருமனிதனாகிய அரசன் தனது சாயை வடிவாய்த் தொடர்ந்து நிற்கின்ற அவனை யெப்படிக் கடக்கமாட்டுவ னென்றதாயிற்று. 'நிழலிற்றோன்றும்' என்றதற்கு மன்னனது காந்திபோலுங் காந்தியுடையனாகத் தோன்றுமென்பது நேர்பொருளாகவும் மன்னனது சாயையின் வடிவாய்த்தோன்று மென்பது பயன்படு பொருளாகவுங் கொள்க. நிழல் காந்தியுஞ் சாயையுமா மாதலின் காந்தியென்பது "வாம நிழற்செவி வள்ளொளியாகும்" என்பதனாலறிக. உடம்பி னிழலை யொருவருங் கடக்கக்கூடாமை யறிக. மன்மதனாலே கடவுளர் படும்பாட்டைச் சொல்லவே நளன் படும்பாடு தோன்றலாலே செய்யுட் பொருட்பேறணி. காந்திபோலுங் காந்தியென்பது தொகையுவமை, இது அங்கம், கடக்கமாட்டாமைக்கு ஏதுவாகா நிழலிற்றோன்று தலை யேதுவாகக் குறித்தலால் ஏதுத்தற்குறிப்பணி, இது அங்கி, ஆதலால் கலவையணி. (கரு)

[இதனால் உள்ளுதலும் நாணுவரை யிறத்தலுஞ் சொல்லப்படுகின்றன.]

மானநீ ரரணஞ்சூழ்ந்த மன்னவ னுள்ளத்தினூடு
தூநலப் பருவமென்னுந் தோழியன் பொழுகநல்கு
நானமும் புழுகுங்கொட்டி நகைமணி முத்தஞ்சூட்டு
நீனிறமணிக்கட் கொங்கைக் குடத்தினீந்திப் புக்காள்

(இ-ள்.) மானம் - நாணமாகிய, நீர் அரணம் சூழ்ந்த மன்னவன் - அகழியினாலே சூழப்பட்ட அரசனது, உள்ளத்தினூடு - மனத்தினுள்ளே, தூ நலப் பருவம் என்னும் தோழி - குற்றமற்ற மங்கைப்பருவமென்கிற பாங்கியினாலே, அன்பு ஒழுக நல்கு - (அவன்மே) லன்பு பெருகக் கொடுக்கப்பட்ட, நானமும் புழுகும் கொட்டி - கஸ்தூரியையும் புழுகையும் அப்பி, நகை மணி முத்தம் சூட்டும் - காந்திபொருந்திய அழ

கிய முத்துவடத்தைச் சூட்டப்பெற்ற, நீல் நிறம மணி கண் கொங்கை- நீலமணிபோலும் சூசுகத்தையுடைய முலைகளாகிய, குடத்தினுல - குடங்களினுலே, நீந்தி புக்காள - (அவவகழியைக்) கடந்து சென்றாள, எ-று.

(க - து) தமயந்தியானவள் நளனது மான மெனனு மகழியைக கொங்கைக் குடஙகளாலே நீந்தி அவ னுளளத்துட புகுந்தாள என பதாம.

ஒரு நகரத்திலே பகைவா புகாமற காக்கும அகழிபோல நாணம அரசனுள்ளத்தே காமம புகாமற காத்தலாலே 'மான நீரரணம' என்றா. "மானமும வெள்கலும வடகலுஞ் சமழபபு நாணமுணா தது நடையவாகும" புதியகாமவினைபத்தை யனுபவித்தற குறித்தாய முன றும் பின்னுமுள்ள பருவஙக ளனைத்தினுஞ் சிறந்து நிறகையால மங கைப பருவத்தைத் 'தூங்கலபபருவம' என்றா. அது பனனிரணடாணடு களின்மேல வருவது. அதிலே பெணமைக்குச் சிறந்த முலைக ளரும புதலபறறி அதனமேல அனபு பிறத்தலால 'அனபொழுக' என்றா. மாாபிலே குடத்தைக்கொணடு அழநீரைக்கடந்து அக்கரைசோவோா போலத் தமயந்தி தன முலைகளாலே அரசனது நாணத்தைக கடந்து அவனது மனத்திலே புகுந்தா ளெனக. இபபடி அவள செயலாகக கூறபபட்டதாயினும அரசன அவளுடைய முலையழகைக் கேட்டுத் தன ஞணத்தை யிழந்து அவளை நினைத்திருந்தா னெனபது கருத தாகக் கொளக. உயாவொபபிலலாத வழகுடைய மகளிராயினும யௌ வனமுற்று முலை யருமபுதறகு முனனே அவளை விருமபுதல பொருந் தாக காமமா மாதலின, விருமபுதறகு முலைகளி னியறகையழகோடு செயறகையழகும காரணமாதல தோனற 'நாணமும புழுகுஙகொட்டி நகைமணிமுத்தஞ் சூட்டு நீனிறமணிக்கட கொஙகை' என்றா. மானம, பருவம, கொஙகை, இம மூன்றிலும நீரரணம, தோழி, குடம, இம மூன்றின அபேதங்களை ஆரோபித்தலால உருவகவணி. (கசு)

[இதனுல் துயிலாமைத் துனபஞ்சொலலப்படுகின்றது.]

சிறையளிகுடைந்துபாடுந்தேமலர்ப்பகழிமாரி
நறைவிரியலங்கன்மாா பிறறிளைத்தலினையுந்துன்பம
கறைமதிவிளங்குங்கங்குற்காலையுமணையுமலலாற
பிறரறியாமலுள்ளத்தடக்கினனபிறங்கற்றோளான்.

(இ-ள.) பிறஙகல் தோளான-மலைபோலும் தோள்களையுடைய நள மஹா ராஜனானவன, சிறை அளி குடைந்து பாடும - சிறைகளையுடைய வண்டுகளானவை தொளைத்துப பாடப பெறுகின்ற, தேன மலா பகழி மாரி - பரிமளம் பொருந்திய பூ வம்புகளது மழையானது, நறை விரி அலஙகல் மாாபில் - தேனையுடைய மலாந்த பூமாலையையுடைய மாாபின கண்ணே, இளைத்தலின - படுதலினுலே, நையும் துனபம்- இளைத்தலாலுணடாகின்ற (தனது) துனபத்தை, கறை மதி விளங கும் கஙகுல் காலையும - சந்திரனுலே விளங்காநின்ற இராக்காலமும, (கறைமதி விளங்கும) அணையும் - சந்திரன்போல விளஙகாநின்ற

பிராணன்களை யிழந்தபின்னு மழியாது நிற்றல்பற்றி 'உண்மையறம்' என்றார். பலதுன்பங்களினு மிறந்தற் றுன்பமும், அதனினும் அறத் தை யிழத்தற் றுன்பமும், அதனினும் இரப்புத் துன்பமுங் கொடியன வென்று கூறியதாயிற்று. "ஆவிற்குநீரென்றிரப்பினு நாவிற் - கிரவி னிளிவந்ததில்" என்பதனாலும் இரத்தல் இழிவென்ப தறிக. மானம் பூண்டவ ரிரவாரென்னும் பொதுப்பொருளால் வீமனாத தமயந்தியை யிரவாமை சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள் வைப்பணி. (கஅ)

[இதனால் காமநோயை மறைக்குமாறும் அது உண்மையாததாலே மறைபடாமையுஞ் சொல்லப்படுகின்றன.]

திறங்கிளர் வயிரத் தோளா னெடுமுயிர்ப் பெறியுந்
தோறும், பிறங்குதல் சிறிதுமின்றி வேறொன்றுன்றொன்று மறைக்
கும் பெட்பான், [illegible] வேறு [illegible] னுருவெளி
வயத்த னாகிச், [illegible] [illegible] [illegible] உரைப்பது
கரக்க மாட்டான்

(இ-ள்.) திறம் கிளர் வயிரத் தோளான் - காட்சியினாலே விளங்கா நின்ற வச்சிரத்தைப் [illegible] தோள்களையுடைய அரசனான நளன், நெடு உயிர்ப்பு எறியுந்தோறும் - [illegible], பிறங்கு தல் சிறிது [illegible] - (அரசன் [illegible] காமம்) வெளிப்படு தல் சிறிதாயினும் [illegible], வேறு ஒன்று [illegible] மறைக்கும் - வேறு காரணத்தால் (பிறர்க்கு அதை) மறைப்பான், மறம் [illegible] கணை மாதன் - [illegible] விளங்காநின்ற [illegible] கணைகளையுடைய [illegible], உரு வெளி வயத்தன் ஆகி - (பிராந்தியால்) வெளிப்பட்டுத் தோன்றுகிற [illegible] வசப்பட்டவனாகி, [illegible] நெருநல் உழல் - [illegible], அன்றுடன் - [illegible] பொய்யாகத் தோன்றுகிற தமயந்தியுடன், பெட்டால் - ஆசையால், உரைப்பது கரக்கமாட்டான் - சொல்வதைமாத்திரம் மறைக்கமாட் டான், எ-று.

(க - து.) பிராந்தியால் காமத்தை மறைக்கும் நளமகாராஜன் உருவெளித்தோற்றத் தமயந்தியோடு பேசுவதை மறைக்கமாட்டான் என்பதாம்.

நெடுமுயிர்ப்பெனறது 'நெடுமுயிர்ப் பெறியுந்தோறும்' என்றத னால் அருகிலுள்ள மந்திரி முதலியோர்களுக் கொருகாற் கொன்றாக வேறு வேறு காரணந்தோன்ற அபிநயித்து அவற்றின் காரணமாகிய காமத் தை மறைப்பா னெனக. வேறுகாரணங்களாவன பகைவர்மேற் கோ பஞ்செய்கை முதலியனவாம். அப்படி மறைக்க வல்லவனு யிருந்தும் பிராந்தியினாலே தமயந்தி யுருவெளியாகக் காணப்படுந்தோறும் அவள் வசப்படுத்த தன்னை மறந்துநிற்கையினாலே அவளுக்குச் சொல்வதை மாத்திரம் மறைக்கமாட்டா னாயினனெனக. அவளுக்குச் சொல்வ தாவது அவளழகின் சிறப்பையும் அதுபற்றித் தனக்குண்டான விருப் பத்தையும் அவ்விருப்பங் காரணமாகத் தான்படும் வருத்தத்தையும் அவ்வருத்தத்தை யொழித்தற்கு அவள் இரக்கஞ்செய்யவேண்டுதலை

நின்ற ஒளியைப் பரப்புகின்ற புறமயிரையுடைய குதிரையின்மேல், மேற்கொண்டான் - (அரசன்) ஏறினன், எ-று.

(க - து.) நளமகாராஜன் அக்குதிரைமேலேறினன் என்பதாம்.

பன்னகர்க்கு சுப்பந்த வென்றவளவிலே ஆயிரமுடிகளாற் சுமக்கப் படுதல் விளங்குதலால் அப்படிப்பட்ட பூமிபாரத்தை ஒரு தோளாற் சுமக்கு மரசனை யானொருவனே சுமக்கின்றேனென்று தனது மிக்க வலிமையைக் காட்டி அப்படிப்பட்ட வலியில்லாத சூரியனை நீங்கக் ளேழாகக் கூடிச் சுமக்குமாறென்னவென்று அச்சூரியன் குதிரைக ளின் வலிமைக் குறைவைச் சொல்லுந்தபொருண்மை தோன்ற அவமதித்துச் சிரித்தல்போலாக அரசனேறிய தோளிற பரித்தலாவது ஒரு தோளாவலிமைக்கொண்டு டக்கவனா வென்று காட்டப்பெறுதலாம். பரித்தல் - சுமத்தலுக்குந் தாங்குதலுக்கும் சொல்லை "பரிபரிசுமத் தல்வேகம் பாதுகாத்திடல்" இந்நூலறிக. சூரியனது தேர்க்குதிரை கள் ஏழென்னுந் தொகையினவன்றி ஏழென்ட பெயர்பெற்ற குதிரை யொன்றே யென்பாரும், ஏழுகுதிரைகளுண்டு அவற்றுள் ஏழெனப் பெயர்பெற்ற தொன்றே யென்பாரும் உளர். நக்கவென்பது ஈறுகெட் டது, குதிரையின் பல்லொளி விரிந்ததை அப்படிச் சிரித்தலாகக் குறித் தலாலே தற்குறிப்பணியாகும். (௨௨)

[இதனால் வனத்திற்குச் செல்லுதற்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

கொய்யுளைப் பரியிற் செல்லுங் குரிசில்வாண் முகத் திற் செவ்விச், செய்யபங் கயமென் றெண்ணித் தெரிவை யர் முகத்துலாய, வையரி பரந்த மைக்க ணளியினந் தொ டர்ந்து வீழ, மையலங் களிற்று வேந்தர் மலரடி பரவச் சென்றான்.

(இ - ள்.) கொய் உளை பரியில் - கொய்யப்பட்ட கழுத்து மயி ரையுடைய குதிரையில், செல்லும் குரிசில் - போகாநின்ற அரசனது, வாள் முகத்தில் - காந்திபொருந்திய வதனத்தில், செவ்வி செய்ய பங் கயம் என்று எண்ணி - பருவமுள்ள செந்தாமரைப்பூ வென்று (அத னை) நினைத்து, தெரிவையர் முகத்து உலாய - மங்கையருடைய முகங் களிலே உலாவுகின்ற, ஐ அரி பரந்த மை கண் அளி இனம் - பருசவரி கள் பரவப்பெற்ற அஞ்சனத்தையுடைய கண்களாகிய வண்டுகளது கூட்டமானது, தொடர்ந்து வீழ - சென்று வீழாநிற்கவும், மையல் களிறு வேந்தர் - மதயானைபோலும் அரசர்களானவர்கள், மலர் அடி பரவ - தாமரைமலர்போலும் பாதங்களைத் துதிசெய்யாநிற்கவும், சென்றான் - (அரசன்) போயினான், எ-று. அம் - அசை.

(க-து.) நளமஹாராஜன் அரசர்கள் வணங்கச் சோலையிற் சென் றான் என்பதாம்.

பிடரியின் மயிர்கள் ஒன்றற்கொன் றளவொத்திருப்பக் கத்தரிக் கப்படுதலாற் 'கொய்யுளை' என்றார். தெரிவையர் உலாக்காணவந்த

அந்தரத்துமகளிரென்க. நாணுடைகொண்டு வேந்தர் நெருங்கு பேரவையினீங்கித் தனித்திருக்க வனத்திற்குச் செல்வோனோடு வேந்தர் உடன்செல்லுதற்கு இயையுமோ வெனின் மன்னர் மன்னனாதலின் வழிவிடச்சென்றா ரென்க. அல்லது நளனுக்கு உயிர்போலச் சிறந்த நட்பரசரென்று கொள்க. 'கலைவளர்பிறையினம்' என்னும் உருவகத்தை அங்கமாகக்கொண்டு 'செய்யபங்கயமென்றெழுமணி' என்னும் மயக்கவணி வந்தது. (உ௩)

[இதனால் வனஞ்சேர்ந்தமை சொல்லப்படுகின்றது]

சுழிகொள்வாம்பரியிழிந்துதுன்னலார்மௌலிதேயக்கருங்
கழல்களிற்கழல்கள்சேர்த்தகாட்சிமுன்வெருவித்தோற்ற
தழனிறத்தளிருஞ்செய்யதாமரைமலருமல்கி [ற
விழைவுறுவனமென்றெண்ணி விசித்தபொற்கவசம்போன்

(இ - ள்) சுழி கொள் வாம் பரி இழிந்து - நல்ல சுழிகளோடு கூடிய தாவாநின்ற குதிரையிலிருந்து இறங்கி, துன்னலார் மௌலி தேயக்கரும் கழல்களில் - பகைவரது மகுடத்தைத் தேயச்செய்கின்ற அடிகளிலே, கழல்கள் சேர்த்த காட்சி - செருப்புகளைப் பூட்டியிருக்கும் தோற்றமானது, முன் வெருவி தோற்ற - முன்னே அஞ்சித் தோற்றுப்போன, தழல் நிறம் தளிரும் - தீயினது நிறத்தையுடைய தளிர்களும், செய்ய தாமரை மலரும் - செந்தாமரை மலர்களும், மல்கி - (மீண்டும்) பெருக்கமடைந்து, விழைவு உறு வனமென்று எண்ணி - (அவற்றாலே தமக்கு அரணமாக) விரும்பப்பட்ட பொழிலென்றும் நீரென்றும் ஆலோசித்து, விசித்த - (அவ்வடிகளால்) பூட்டிக்கொள்ளப்பட்ட, பொன் கவசம் போன்ற - பொன்மயமாகிய கவசங்களை ஒத்திருந்தன, எ-று.

(க - து) காலிலணிந்த செருப்புக்கள் கவசங்களை ஒத்திருந்தன என்பதாம்.

சுழி—கழுத்திலுள்ளது, அதற்குத் தேவமணியென்று பெயர். தோற்றவர் வனத்தை யடைவராதலால் அரசனடிகளுக்குத் தோற்ற தளிர்களுக்கும் தாமரைமலர்களுக்கும் வனவாசங் கூறப்பட்டது. 'தழனிறத்தளிர்' என்றதனால் மாந்தளிர் அசோகந்தளிரென்க. தோற்றொளித்தாரோடு பொருதற்குச் செல்லல் அறநிலைபோரன்றே யெனின் அவர் தோற்றநிலையினின்று மீண்டும் பெருக்கமடைந் திருப்பராயிற் பொருதல் அறநிலைப்போரேயாம். அவற்றிற்குப் பெருக்கமாவது நிலவளத்தாலும் நீர்வளத்தாலுஞ் செழுமையு மொளியுங்கொண்டிருத்தலாம். வனம் சோலையும் நீரும், "வனமேநீர்மிகுதிகாடுவளர் சோலை" என்பதனாலறிக. அக்கழல்களை அப்படிப்பட்ட கவசங்களாகக் குறித்தலாலே பொருட்டற்குறிப்பணி. (உ௪)

[இது முதலியவற்றால் வனங்காணேகின்றமை
சொல்லப்படுகின்றது.]

வயிரியாபாடறநீங்கித் தேனசெவிப்புலத்தினிதுமாந்திக்
கயிரவமனையவாயார்கவரிகாலசைப்பகாமப்

பயிரெனப்படருமாதர் வெள்ளடைப்பாகுநல்கச்
செயிரறுவனங்காப்பாளர் செறிவளங்காட்டக்கண்டான்

(இ-ள்.) வயிரியர் பாடல் தீந்தேன் - பாடகர் பாட்டாகிய மதுரத்தேனை, செவி புலந்து இனிது மாந்தி - செவியறிவாகிய (வாயி)னாலே இனிதாகக் குடித்து, சயிரவம் அனைய வாயார் - செவ்வல்லிமலர் போலும் வாயையுடைய மாதர்கள், கவரி கால் அசைப்ப - சாமரத்தினாலே காற்றை எழுப்பவும், காமன் பயிர் என - மன்மதனது பயிர் போல, படரும் மாதர் - உடன்செல்கின்ற மாதரானவர், வெள் அடை பாகு நல்க - வெற்றிலைச் சுருளையும் பாக்குப்பிளவையும் கொடுக்கவும், வனம் காப்பாளர் செயிர் அறு - குற்றமற்ற வனத்தைக் காப்பவர்கள், செறி வளம் காட்ட - நெருங்கிய (சோலை) வளத்தைக் காண்பிக்க, கண்டான் - (அரசன்) பார்த்தான், எ-று.

(க-து.) காவலாளர் வனவளப்பத்தைக்காட்ட நளன் கண்டான் என்பதாம்.

காமப் பயிரில் நிலமொழி நீறு நெட்டது ஆசிவகப்பள்ளியிற் போல. அது காளைப்பாக்கு இன்பப் பயன் விளைவித்தற்குக் காமனால் வளர்க்கப்பட்ட பயிரெனச். வனப்பாலங்காரக்கொண்டே வனச்சிறப்புகளை முறைப்படக் காட்டவேண்டுதலாலே 'காட்டக்கண்டான்' என்றார். (உரு)

கோங்கிள முலைகள் தாங்கிக் கொடியிடை நுடங்கக் கூவு, மாங்குயிற் கிளவி தன்னால் வருகென முகமன்கூறித், தேங்கமழ் வனமான் புன்னைப் பூம்பொரி சிதறிச் செவ்வி, தாங்குமென் தளிர்க்கை தன்னாற் கனிதரத் தகவிற் கண்டான்

(இ-ள்.) தேன் கமழ் வனம் மான் - பரிமளமானது (தன்கண்) மணக்கின்ற அவ்வனமாகிய மங்கையானவள், கோங்கு இள முலைகள் தாங்கி - கோங்கரும்புகளாகிய இளமை பொருந்திய முலைகளைச் சுமந்து, கொடி இடை நுடங்க - பூங்கொடியாகிய இடையானது அசைய, கூவும் மா குயில் கிளவி தன்னால் - கூவுகின்ற மாமரத்திலிருக்கின்ற கோகிலத்தினது இசையினாலே, வருக என முகமன் கூறி - (அரசனே) வாவென்று இன்சொற் சொல்லி, புன்னை பூ பொரி சிதறி - புன்னையினுடைய மலர்களாகிய பொரிகளை இறைத்து, செவ்வி தாங்கு மென் தளிர் கை தன்னால் - அழகைத் தாங்கிய மெல்லிய தளிராகிய கையினாலே, கனி தர - பழத்தைத் (தனக்குக்) கொடுக்க, தகவின் கண்டான் - தகுதியாக (அரசன்) பார்த்தான், எ-று.

(க - து) வனமென்னும்பெண் கனிகொடுக்க நளன்கண்டான் என்பதாம்.

தனவரவைக் கண்டவளவிலே முலைகளின் பாரத்தைச் சுமந்து இடை யசையாநிற்க அன்பிற் கடையாளமாக நல்வார்த்தை சொல்லி மங்களத்தின் பொருட்டுப் பொரியிறைத்துக் காணிக்கையாகக் கனி

கொடுத்துக் காண்கிற வொரு சுமங்கலைபோல வனமானது கோங்கரும்புகளைத் தாங்கிக் கொடியசையாநிற்பக் குயிற்சொற்களைக்காட்டிப் புன்னைப்பூக்களை யிறைத்துத் தளிரிடைத் தொங்குகிற கனியைத் தருகின்றது போலத் தோன்ற அரசன் காணுதற்குரிய தகுதியின்படியே கண்டானென்க. வனமுதலியவற்றில் மானமுதலியவற்றின் அபேதத்தை யாரோபித்ததனாலே உருவகவணி (௨௬)

[இதுமுதற் பத்துப்பாட்டுக்களால் வனத்தின் முல்லைமுதலியவற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

அரும்பிள நகையிற் றோன்ற வழிநறு வெயர்விற்
றோன்றச், சுரும்பிமிர் முல்லை வீசுந் தென்றலாற் றுவளுந்
தோற்றம், விரும்பினர்ப் புணர்ந்த மாதர் மெய்யெழில்
காட்டக் கண்டு, பொருந்தலர் வணங்கும் வேலாற் கச்சமு
மகிழ்வும் பூத்த.

(இ-ள்.) அரும்பு இள நகையின் தோன்ற - அரும்புகள் (முல்லை) சிறு நகைபோல விளங்கவும், அழி நறு வெயர்வின் தோன்ற - ஒழுகிய தேன் (துளிகள்) வெயர்வுபோலத் தோன்றவும், வீசும் தென்றலால் - எறிகின்ற தென்றற்காற்றால், துவளும் தோற்றம் - அசைகின்ற தோற்றத்தையுடைய, சுரும்பு இமிர் - வண்டுகள் ஒலிக்கப்பெற்ற, முல்லை - முல்லைக்கொடியானது, விரும்பினர் புணர்ந்த மாதர் - விரும்பிய ஆடவரைக் கூடிய மாதருடைய, மெய் எழில் காட்ட - வடிவங்களது அழகைக் காண்பிக்க, கண்டு - (அதனைப்) பார்த்து, பொருந்தலர் வணங்கும் வேலாற்கு - பகைவராலே தொழப்பெறுகின்ற வேலையுடைய அரசனுக்கு, அச்சமும் மகிழ்வும் பூத்த - அஞ்சுதலும் மகிழ்தலும் உண்டாயின, எ-று.

(௧-து.) முல்லைக் கொடியானது புணர்ந்த மாதரைப் போலுங் குறிகள் காட்டநளனுக்கு அச்சமுமகிழ்வும் உண்டாயின வென்பதாம்.

அரும்பு அதனொளியை யுணர்த்தலால் ஆகுபெயர். புணர்ந்த மங்கையாகத்து உடனே பிறரைக் காணும்பொழுது தமது புணர்ச்சி நிகழ்ந்தமை குறிகளாலே வெளிப்படுமென்னும் நாணத்தால் புன்சிரிப்பும் புணர்ச்சியருத்தத்தால் வெயர்வும் உடம்பு துவளுதலும் வண்டிசைபோன்று சொல்லிசை பிறத்தலு முளவா மென்க. தனது காமத்தை யெழுப்புதலால் அச்சமும், தன்காதலிபோலுதலால் மகிழும், அரசன் அடைந்தனன் அச்சமுமகிழ்வும் அகத்தியும் வருளமும் பூத்தன வென்னும் பொருளுங் குறிக்கப்படுகின்றது. முல்லைக்கொடி தன்செய்கையினாலே புணர்ந்தமகளிர் வடிவத்தழகைக் காட்டுதலாலே நயப்பொருட் காட்சியணியாகும். இதற்கு இளநகையிற் றோன்று கை முதலிய உவமை யங்கம். (௨௭)

விரும்பிய கணவர்க் கண்டார் மெய்புள குற்ற வென்
ன, வரும்புகண் டகத்த வாகு மாதுளை பருவத் தன்றித்,
தரும்புகை யிடையிற் றோன்றுங் கனித்தம யந்தி கொங்

(க - து.) சண்பகத்தரும்புகளானவை தீபங்களை ஒத்திருந்தன; அவ்வரும்புகள் மன்மதபாணங்களை ஒத்திருந்தன என்பதாம்.

சண்பகமும் வேங்கையும் வண்டு சேராமரம் என விருக்கச் சண்பகத்தின்மேல் வண்டு சேர்ந்ததாகச் சொல்லிய தென்னையெனின், அதற்கு வண்டுசேர்ந்து தேனையுண்டா லிறந்துபடும் மெய்ப்பத்தி கருத்தாதலின் மறைமொழிபோல அதனைக் கூறுஞ் சொல்லேமென்க. ...க்குப் பட்டைவீடு சோலையாதலின் 'வெளிவெட்டாசறை' என்றார். "தொடையிலகுஞ்சி மருப்பினாருஞ் சோலைப்பட்டையில்" என்பதனு லறிக. "நசையுநாதுயரம்வளிட ... பூமடாவறும்" என்.. பாடமு முண்டு. முற்றுமொட்டு யாறுபட்டுய வண்டுகள் அம்புகள் போன்று அவற்றின் மேலிருந்த சிறையிறகைமெல்லாம் காமன் பழியைக் கரிதென்பது செய்யுளழகு. சம்பகவரும்புகளை அவ்விளக்குகளாகவும் அவ்வரும்புகளின்மேல் மொய்த்த வண்டுகளை அவ்விளக்குகளின்மேற் றங்கிப்புகைகளாகவும் அப்புகைபட்ட பழிகளாகவுங் குறித்ததாலே தற்குறிப்பேற்றணியாகும் பழியாகக்குறித்ததற்கு நசையுநாசசலப மென்னுமுருவகம் அங்கம். (உ௯)

பூங்கழைக் குமர னேவாற் புலம்புகொண் டினைவார்
துன்ப, மாங்குயி லுணைப்ப மூசும் வரியளி முரலும் வாசத்,
தேங்கமழ் பொழில்வாய் விட்டுக் கேட்பது சிவணக் கூற,
ஆங்கதற் கன்றி லோதை யதிசயித் தரற்றல் போன்ற

(இ-ள்.) பூ கழை குமரன் ஏவால் - அழகிய கருப்புவில்லையுடைய மன்மதனது அம்பினாலே, புலம்பு கொண்டு இனைவார் துன்பம் - துன்பத்தை அடைந்து இளைக்கின்றவரது துன்பத்தை, மா குயில் உணைப்ப - மாவிலுள்ள குயில்கள் சொல்லாநிற்க, வரி முரல் மூசும் அளி வாசம் - இசைபாடுவனவாகிய மொய்க்கின்ற வண்டுகளுக்கு இருப்பிடமாகிய, தேன் கமழ் பொழில் - தேனால் மணக்கின்ற சோலையானது, வாய் விட்டு கேட்பது சிவண - உங்கொடுத்து கேட்பதுபோன்றிருக்க, கூறும் - சொல்லப்படுகின்ற, ஆங்கு - அவ்விடத்தே, அதற்கு - அச்செய்திக்கு, அன்றில் ஓதை - அன்றிற்பறவைகளுடைய ஒலிகளானவை, அதிசயித்து அரற்றல் போன்ற - ஆச்சரியப்பட்டு கூவுதல் போன்றிருந்தன (அரசனுக்கு,) எ-று.

(க - து.) காமிகள் துன்பத்தைக் குயில்கள்சொல்ல வண்டுகள் பாடுஞ்சோலை கேட்பதுபோலுமிருந்தன, அன்றில்களின் சத்தங்கள் அதிசயித்தரற்பன போலுமிருந்தன என்பதாம்.

குயிலுணைப்பவென்றே னூங் குயிலினது கூவுதல் அதன் துணைத்தல்போலத் தோன்றுகிறது வென்பது பொருளாகக் கொள்க. இடைவிடாது நிகழும் வண்டொலி இடைவிட்டுநிகழும் உங்கொடுத்தல் போலுதற் கியையுமோ வெனின் அவ்வண்டினது சிறப்புற்றொலி குயிலினது பேரொலியில் இடையிடை மறைந்து அங்ஙனந் தோன்றுதலா லியையு மென்க. இடைபமில்லாத கருப்புவில்லையுடையவ னம்பால் வருந்துதல் ஆச்சரியத்திற்குக் காரணமா மென்க. அக்குயில்களைச்

சொல்வனவாகவுஞ் சோலையைக் கேட்பதாகவும் அன்றில்களின்னொலி களை அவற்றி னதிசயவொலிகளாகவுங் குறித்தலாலே தற்குறிப்பணி.

வெண்மதிக் கவிகை வேந்தன் விழாவயர் வளமான்
பைந்தாட், டண்மலர்க் காந்த ளங்கை மறித்தளி தகைதவ
போன்ற, வொண்மலர்ப் பொதுளுந் தேமா தளிர்விரல
சைத்துள் ளூறுங், கண்ணுகர் வண்டி னார்ப்பாற் காமுகர்ச்
சினப்ப போன்ற

(இ - ள்) வெண்மதி கவிகை வேந்தன் - வெள்ளிய சந்திரனைக் குடையாகவுடைய மன்மதனது, விழா அயர் வளம் மான் - உற்சவத்தைச் செய்தற்கிடமாகிய வனமாகிய மங்கையை, காந்தள் - காந்தள்களான வை, பைந்தாள் - பசிய காம்பையுடைய, தண் மலர் அங்கை மறித்து - குளிர்ந்த மலர்களாகிய அழகிய கைகளாலே (அச்செய்தியைக் கேளே லென்று) தடுத்து, அளி - கருவண்டினங்களை, தகைதவ போன்ற - நிறுத்தின போன்றன, ஒண் மலர் பொதுளும் தேமா - ஒள்ளிய மலர்க ளாலே நிறைந்திருக்கின்ற தேமா மரங்களானவை, தளிர் விரல் அசைத்து - தளிராகிய விரலை ஆட்டி, உள் ஊறும் - உள்ளேயூறுகின்ற, கள் நுகர் வண்டின் ஆர்ப்பால் - தேனை உண்கின்ற வண்டுகளது ஒலியினாலே, காமுகர் சினப்ப போன்ற - காமிகளை உங்காரஞ்செய்து) கோபிக்கின்றன போன்றன (அசைநிலை), எ-று.

(க - ரை) காந்தள்களானவை வனமங்கையை மலரென் னுங் கரங்களாலே அச்செய்திகளைச் சொல்லக்கேளாதே என்று தடுத்து அக் கருவண்டுகளைப் போகவொட்டாமல் நிறுத்தின, மாமரங்களானவை தளி ரென்னும் விரலையசைத்து வண்டுகளால் காமுகரைக் கோபிப்பன போலுமிருந்தன என்பதாம்.

மன்மதனது விழாவானது ஆடவருமகளிருஞ் சென்று சோலையின் கண்ணே பூக்கொய்தலும் புனல்விளையாடலுங் காமவின்பத்தை யனுப வித்தலாம். அல்லது மன்மதனுக் கெடுப்பதோர் சிறப்பெனினுமாம். இன்னும் வெண்மதிபோலுங் கவிகையுடைய நளராசனது விழாவெ னினுமமையும். முன்பாட்டில் குயில் சொல்லவந்ததாற் கேட்கப் பட்டசெய்தி கொடிதாதலின் அவ்வனத்தைநோக்கி நீ யதைக் கேளற்க வென்கக் காந்தள்மலராக் கைகளாலே விலக்கினவென்க. அளி தகைத்தற் குச் சிலேடையாய் கருணையாகத் தென்றும் வண்டுக ணிறைதலென் றும் பொருள்கொள்க. இக்காந்தள் விலக்குதலை யிதன்முதனூலிற் சொல்லப்பட்டபடியே முன்பாட்டிலே யடக்காமல் வேறுமுடிபு செய் தற்கு ஏதுவென்னென்னின் அம்முதனூலு ளில்லாத அன்றிலி னதி சயித்தாற்றலை அதிலே மிகுத்துச்சொல்லியவதனு லிதனை வேறு முடிபு செய்தார்போலும். இப்பாட்டிலே காந்தளது தோற்றமும் மாவினது தோற்றமும் சொல்லப்பட்டன. காந்தட்செடிகளை அங்ங னந் தடுப்பனவாகவும் மாமரங்களை அப்படி வெருட்டுவனவாகவுங் குறித்தலாலே தற்குறிப்பணியாகும். (நக)

பொன்னிதழ்ச்சண்பகத்திற்புரிமுறுக்கவிழ்ந்தூங்கி
யின்னறுத்துளியினேடுமகரந்தமிறைப்பவூதித

தென்னிடுங்களிகொள்வண்டுசேர்ந்தமைகாமவெங்நோய்
துன்னினர்க்கின்னல்காட்டுந்தூமகேதுவினைப்போன்ற.

(இ-ள்) புரி முறுக்கு அவிழ தூங்கி - கட்டினது முறுக்கானது விரிய ஆடி, இன் நறு துளியினோடு மகரந்தம் இறைப்ப ஊதி - இனிதாகிய தேனினது துளியுடனே மகரந்தப்பொடியை உதிர்க்க (வாயினால்) ஊதி, தென் இடும் களி கொள் வண்டு - இசைபாடுகின்ற களிப்பைக் கொண்ட வண்டுகளானவை, பொன் இதழ் சண்பகம் சேர்ந்தமை - பொன்னிறம் பொருந்திய இதழ்களையுடைய சண்பகப்பூக்களின்மேல் சேர்ந்தமையால் (அம்மலர்கள்), காமம் வெம் நோய் துன்னினர்க்கு - காமமாகிய வெப்பநோயை அடைந்தோர்க்கு, இன்னல் காட்டும் - (பின்வரும்) துன்பத்தைக் காண்பிக்கிற, தூமகேதுவினை போன்ற - வால்மீனை ஒத்துத்தோன்றின (அரசனுக்கு), எ-று.

(க-து) வண்டுகள் சேர்ந்த சண்பகமலர்களானவை வால்மீனை ஒத்திருந்தன என்பதாம்.

வண்டுகள் சண்பகத்திலே தேனுண்டவளவிலே இறந்துபடும் மாதலால் அப்படி ஆடித்தூங்கல் மரணம [illegible]ரிலென்று கொள்க. களிப்பினாலே துடைக்கைம கருநாது சேர்ந்தமை வெளிறுமையு மெய்ப்பதற்கு 'தென்னிடுங் களிகொள் வண்டு' என்றார். சேர்ந்தமை மாலைபோ தோன்றமையின் தொன்றாக வந்துவீழ்ந்தன. தூமகேது உலகத்தார்க்குப் பெருந்துன்பத்தைச் செய்யத் தோன்றுமாம் வண்டொழுங்கோடு கூடிய சண்பகமலர் காமிகளுக்குப் பெருந்துன்பத்தைச் செய்வதோடும் வண்டொழுங்கு வாலாக நிற்கவும் சண்பகமலர் அதனையுடைய மீன்போலவுகிறது லாதலால் தூமகேதுவினைப் போலுமென்றார். தூமகேது பின்வரும் பஞ்சமுதலியவற்றிற்கு உற்பாதமாதலால் பெருந்துன்பத்திற் கேதுவா மென்க. சண்பகமலரோடு சேர்ந்த வண்டொழுங்கை அப்படிப் பட்ட தூமகேதுவாகக் கற்பித்தமையாலே தற்குறிப்பணி. (௬௨)

குளிர்நறுஞ்சாந்தநாறுங்கூவிளங்கனிமுளையேறுண்
டொளிர்வனகணிகைமாதர்வரிமுலைக்குவமைசான்ற
தளையவிழ்பாடலத்தினகவரிணர்சம்பராரி
யுளைவுறவிருவர்மேலுமுடற்றினம்பகழிபோன்ற

(இ-ள்) முளை ஏறு உண்டு ஒளிர்வன - முளையினாலே கிழிக்கப்பட்டு விளங்குகின்றவையாகிய, குளிர் நறுஞ் சாந்தம் நாறும் கூவிளம் கனி - குளிர்ச்சி பொருந்திய நல்ல சந்தனம்போல் மணக்கின்ற வில்வப்பழங்களானவை, கணிகைமாதர் - பரத்தையருடைய, (சாந்தம் நாறும்) வரி முலைக்கு - சந்தனத்தினாலே மணக்கின்ற நகக்குறிகளையுடைய முலைகளுக்கு, உவமை சான்ற - ஒப்புமையில் சிறந்தன, தளை அவிழ் பாடலத்தின - கட்டவிழ்ந்த பாதிரிமரங்களுடைய, கவர் இணர் - கவர்தற்குரிய பூங்கொத்துகளானவை, சம்பராரி உளைவு உற - மன்மதனானவன் வருந்தும்படியாக, இருவர்மேலும் - நாயக (நாயகிகள்) இருவர் மேலும், உடற்று இனம் பகழி போன்ற - கோபித்தற்கு (வைத்திருக்கப்பட்ட) அம்புக்கூட்டம் போன்றன (அரசனுக்கு), எ-று.

(க - து.) வில்வப்பழங்களானவை வேசைகள் முலைகளை யொப்பாயிருந்தன, பாதிரிமரங்களின் பூங்கொத்துக்களானவை மன்மதன் பாணங்களை யொப்பாயிருந்தன என்பதாம்.

சாந்தநாறுதல் முலைக்குங் கூட்டப்பட்டது. குலமங்கையர் முலைகளுக்கு நகக்குறி விசேடித்துச் சொல்லுதல் தகுதியன்று மாத்திரமன்றி 'கணிகைமாதர் வரிமுலை' என்றார். அன்றியும் அவர் பல்லோரையும் புணர்தலின் நகக்குறி மிகுத்தோன்று மெனக. அவ்வில்வக் கனிகளுக்கு அப்படிப்பட்ட கணிகைமாதர் முலைகளை யுவமித்தலா லுவமையணி யாகும். இன்பக்கழி யென்றதற்கு அதற்கிடமாகிய அம்பறாத்தூணியென்பதும், இருவரொன்றதற்கு விரும்பிய ஆடவரும் மகளிரு மென்பதுங் கருத்தாகக் கொள்க. "கவரிதழ் சம்பராரி யுளைவுற விருவர்மேலு முட்டறியிணைப் பகழிபோன்ற" என்ப பாடமுமுண்டு. இருபிளப்பாகிய விதழ் ஏந்தற்கின்மையாலும் இரட்டம்புகளை யொன்றாகச் சேர்த்து இருவர்மேற் செலுத்துதல் கூடாமையாலும் இதன் முதலானமுடிபிற்கு வேறுபடுதலாலும் பொருந்தாமை யுணர்க. அப்பாதிரிப் பூங்கொத்துக்களை அவ்வம்பறாத்தூணியாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. வில்வமும் பாதிரியுங் கூறப்பட்டன. (௩௩)

பாசிலையி னிடையிற் பூத்த பைந்துணர கத்தி தூய
மாசறு நிலவுகாலு மதியினை விழுங்கு நாளிற்
றேசுறு கலைகளியாவுந் தின்றுதின் றுமிழுந் துத்திக்
காசுறு சுடிகைச் செங்கட் கருநிறப் பாந்தள் போன்ற.

(இ - ள்) பாசிலை - பச்சிலைகளையும், இடையில் பூத்த பைந்துணர் - நடுவில் மலர்ந்த குளிர்ச்சிபொருந்திய மலர்களையுமுடைய, அகத்தி - அகத்திமரங்களானவை, தூய - பரிசுத்தமாகிய, மாசு அறு நிலவு காலும் - குற்றமற்ற சந்திரிகையை வீசுகின்ற, மதியினை விழுங்கும் நாளில் - சந்திரனை உட்கொள்ளுகிற நாளிலே, தேசு உறு - காந்தி பொருந்திய, கலைகள் யாவும் - கலைகளை யெல்லாம், தின்று தின்று - ஒவ்வொரு கலையாகத் தின்று, உமிழும் - உமிழ்ந்துகொண்டிருக்கின்ற, துத்தி - படப்புள்ளிகளையும், காசு உறு சுடிகை - இரத்தினம் பொருந்திய உச்சியையும், செம் கண் - சிவந்த கண்களையும், கரு நிறம் - கரிய நிறத்தையு முடைய, பாந்தள் போன்ற - பாம்பாகிய இராகு போன்றன (அரசனுக்கு), எ-று.

(க-து) அகத்தி மரங்களானவை கரும்பாம்பிற் கொப்பா யிருந்தன என்பதாம்.

துணர்மலரென்பது "போதவிழ் துணர்மலர்" இதனாலறிக. 'தூயமாசறு நிலவு' என்னுமடையை அம்மலர்க்குங் கூட்டுக. மதியினை விழுங்குநாள் அபரபக்ஷத்துப் பதினைந்து நாட்களு மெனக. அவற்றுள்ளே சந்திரனுக்குத் தினம் ஒவ்வொரு கலை குறைதலை இராகுவினாலே அங்ஙனந் தின்னப்பட்டுக் குறைதலாகக் கற்பித்து அப்பொருண்மை தோன்றத் தின்றுதின் றென்றார். அன்றியும் சந்திரகிரகண காலமெனினுமாம். தேவநாகமாகிய இராகுவென்பது தோன்றற்குக் 'காசுறு

சுடிகைச் செங்கண்' என்னு மடைகொடுத்தாரபோலும். இராகு கரி தெனபது "இராகுககோள கரும்பாம்பு" என்பதனு லறிக கருமைக் கும் பசுமைக்கும் மிக்க வேறறுமைதோனருமையிற பச்சென்ற தழை களாற சூழபபடட வகததி கரிய விராகுபோலுதலும் அதன் மலாகள் அவ் விராகுவால மென றுமிழப்படட சநதிரகண்டங்கள போலுத லுங் கொளக. அவவகததியை அவவிராகுவாகக் குறிததலாலே தற் குறிபபணியாம. (நூச)

கலிவிருததம

விணபுகுவியனசினைததருககணமேவிய
தணகனிபபொறையினுறறலைவணஙகின
தெண்கடற்கலைபுனைசெலவமாநிலப்
பெணகொடிதாடொழும்பெறறிபோனறவே

(இ-ள.) மேவிய - விருமபபபடட, தண கனி பொறையினுல் - குளிாசசியான பழஙகளது பாரததினுலே, தலை வணஙகின - தலை கள் வளைநதனவாகிய, விண புகு - ஆகாசததில நுழைநத, வியன சினை தருககள - விசாலமாகிய கிளைகளையுடைய மரஙகளானவை, தெள கடல கலை புனை - தெளளிய கடலாகிய ஆடையை யுடுதத, செலவம் - செலவததையுடைய, மா நிலம பெணகொடி - பெரிய பூமிதேவியின்து, தாள தொழும - பாதஙகளை வணஙகாநினற, பெறறி போனற - தனமையுடையன போனறன (அரசனுககு), எ-று.

(க-து.) மரஙகளானவை பூமிதேவியி னடியை வணஙகுகினறன போலு மிருநதன எனபதாம.

பெறறியன வெனபது இறுதிநிலைகெடடது தமமைப பெற்று வளர்தத தாயெனறு வணஙகுதல கொளக. அவவணஙகிய மரஙக ளைப் பூமிதேவியைத தொழுவனவாகக குறிததலாலே தறகுறிபபணி யாம். (நுரு)

அளிமுரலணிமலரசோகமபூத்தன
தெளிவருகாரணபபெயரினசெவ்வியா
லெளிவருகாமுகாககிரங்கிவேணறுங்
தளிர்மறையழற்கணைதரிததபோனறவே

(இ - ள.) பூததன - மலாநதனவாகிய, அளி முரல - வண்டுக ளானவை ஒலிககபபெறற, அணி மலா அசோகம - அழகுபொருநதிய மலாகளையுடைய அசோகமரஙகளானவை, தெளிவரு - தெளியவநத, காரணபபெயரின - காரணபபெயரினது, செவ்வியால - அழகினுலே, எளி வரு காமுகாக்கு - எளிமையோடு (தமமிடத்திலே) வருகின்ற காமிகளுக்கு, இரஙகி - மனமிரஙகி, வேள் அழல் கணை - மன்மதனது நெருப் பம்புகளை, நறு தளிா மறை - நல்ல தளிாகளிலே மறைத்து, தரித்தபோன்ற - தரிததிருககின்றவை போன்றன (அரசனுககு) எ-று.

(க - து.) அசோக மரங்களானவை அக்கினிக கணைகளைத் தரித்தல் போலு மிருககினறன என்பதாம்.

அசோகஞ் சோக மில்லாததாம், சோக மில்லாத தாகையால் எம்மையுஞ் சோக மில்லாதவ ராக்குமென்று சரண மடைகின்றனவென்க. தமக்குக் கடைக்கல மாயினோரைக் காவாதுவிடல் மகா பாதக மாதலால் இரங்கின வென்க. அந் நெருப்புடம்புகளை யருசினோர்க்கு அவற்றை வெளிப்படுத்தாம லிருக்கை காத்தற்கு உபாயமென்பது கருத்து. மலருக்குச் சொல்லப்பட்ட அளிபோல அழற்கணைக்குப் புகை குறிக்கப்படுகின்றது. அசோகமலர் அழல்போல சிவந்து தோன்றலின் 'அழற்கணை' என்றார். மறைத்தென்பது மறையென்று கெட்டுநின்றது. "வரிப்புனைபந்தொடு பாவைதூங்க" என்பதில் வரிந்தென்பதுபோல அசோகமென்னும் பெயர்க்கு வேறுபொருளைக் கற்பித்தலாற் பிறிதின்கவிற்சி யணியாம். இது அங்கம். அவ் வசோகத்தை அங்ஙனந் தரித்தனவாகக் குறித்தலாலே தற்குறிப்ப டணியாம் இது அங்கி (௬௬)

[இதுமுதல் ஞனகு பாட்டுகளால் தாழம்பூவை
வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மணங்கமழ்முடவெண்டாழைமலரினவார்நறவமாந்திக்
கணங்கொள்வண்டினமுந்தேனுங்களித்திடைவதிந்ததோ
றணங்கரவசைத்தோனீத்தவரும்பழிசுமந்ததென்ன [ற்ற
நிணங்கமழ்வேலான்கண்டுநெஞ்சுறவிழித்துச்சொல்வான்.

(இ-ள்.) நிணம் கமழ் - (பகைவரது) கொழுப்பினது நாறுதற் கிடமாகிய, வேலான் - வேலையுடையவன், முடம் தாழை - முடமாகிய தாழையினது, மணம் கமழ் - மணக்கின்ற, வெண் மலரின் - வெண்மை பொருந்திய பூவினின்றும், வார் நறவம் மாந்தி - ஒழுகாநின்ற தேனைக் குடித்து, கணம் கொள் வண்டு இனமும் - கூட்டத்தைக் கொண்ட கருவண்டுகளின் சாதிகளும், தேனும் - தேனவண்டுகளும், களித்து - மகிழ்ந்து, இடை - (அதன்) நடுவில், வதிந்த தோற்றம் கண்டு - தங்கிய தோற்றத்தைப் பார்த்து, அணங்கு அரவு அசைத்தோன் நீத்த - பரமசிவனால் தள்ளிவிடப்பட்ட, அரும்பழி - நீக்கக்கூடாத பழியை, சுமந்தது என்ன - (இம்மலர்) சுமந்ததென்று, நெஞ்சுற - நினைப்புண்டாக, இழித்து சொல்வான் - இகழ்ந்து கூறுவான், எ-று.

(க-து.) நளமஹாராஜன் தாழைமலரைப் பார்த்து இகழ்ந்து சொல்வான் என்பதாம்.

நான்முகன் அன்னவடிவங்கொண்டு நெருப்பு மலையாய் நின்ற பரமசிவனது திருமுடியை நெடுங்காலந் தேடிக் கண்டிலாது மீள்கையில் அம் முடியினின்றும் வீழ்கின்ற தாழம்பூவைக் கண்டு தான் கண்டாகப் பொய்க்கரி கூறுதற்கு உடன்படுத்த அதற்கு உடன்படுதலால் அம்மலர் பரமசிவனாற் கோபித்து இன்றுமுதல் எனக்காகா யென்றிகழ்ந்து தள்ளப்பட்டதென்பது புராணகதை. சிறந்தோனுக்குப் பெரியோரால் தள்ளப்படுதலே பழிவிளைக்கு மென்பது கருத்து. அத்தாழம்பூவை அப்பழிசுமந்ததாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாம் (௬எ)

நாகிளவரிவணடுணைடுநறவுகொபபுளிககுநகைதாய
பாகுறுகமைழவேளெயயிறபறிப்பரிதாயுள்ளாவி
யேகமெயதளாநதோர்நெஞ்சமீர்ந்திடுமுள்ளமபெனறே
வாகைவின்மதனைச்செறறேன்வனைநதிடாதிகழ்நதவாறே

(இ-ள்) நாகு இள வரி வணடு - இளமைபொருநதிய இசைபாடு கினற வணடுகளாலனவை, நறவு உணடு கொப்புளிக்கும் - தேனைக குடித்து உமிழ்ததறகிடமான, கைதாய - தாழமபூவே!, பாகு உறு கழை - சாறுளது பொருநதிய கருபபுவிலலினை, வேள - மனமதனெனவன, எயயின - எயதால, பறிபபு அரிது ஆம - பிடுஙகபபடாததாகி, உள ஆவி ஏக - உளளிருககும் உயிரானது நீஙக, மெய தளாநதோர நெஞ்சம - உடமபு தளாநத விரகிகளுடைய மனததை, ஈாநதிடும - அறுககினற, முள அமபு என்றே - முளளாயமபெனறு (உன கொடுமை யை நினைநதே), வாகை விலல மதனை - வெறறிபொருநதிய விலலை யுடைய மனமதனை, செறறோன - வெனற பரமசிவன, வனைநதிடாது - சூடாமல, இகழநத ஆறு - (உனனை) இகழநததறகுக காரணமாம், எ-று.

(க - து.) தாழமபூவே நீ முளளாமபெனறு சிவன அணியா திகழநதான எனறு நளன சொனனான.

நாகிள வெனபன ஒருபொருள குறிதத இரு சொறகள. தாழம் பூவினுடைய நடு முடகளும இருபுடை முடகளும எதிரிட டடுககி நிறறலால அதனடிநுனிகளில யாதொனறைபபறறி யிழுககினும் அறுக்கு மாதலாற 'பறிபபரிதாய' எனக. 'வாகைவிலமதனைச செற றோன' எனறமையாலே தன பகைவனுககு உபகரணமா யிருபபதே பொறுககககூடாததா யிருககுமாயிற கொலைவனாயு மிருநதாற சொல் வானேன எனறதாயிறறு. கடவு ளிகழததறகு ஏதுவாகாத அபபடிப பட்ட முளளமபா யிருககையை எதுவாகக குறிததலாலே ஏதுததற குறிபபணியாம். (௫அ)

பசியநெட்டிலையதாழைமடலெனுமீாவாளபறறி
வசையறுகாமதசசனைமையலாமவளியிறைுநா
மசைவொடுதளாநதுகலவியருநதழையுகுததுநிறகு
நசையுநர்நெஞ்சதருநடுவுறபபோழுமாதோ

(இ - ள்.) பசிய நெடு இலைய தாழை - பசுமைபொருநதிய நெடிய இலைகளை யுடையனவாகிய தாழம பூவே!, மடலெனும் - (உன) இதழெனகிற, ஈாவாள பறறி - பலவாளைப பிடிததது, வசை யறு காம தசசன - பழி யறற மனமதனாகிய தச்சனானவன, மையல ஆம் வளியின் - மயக்கமாகிய காறறினாலே, நாளும - பலநாளும, அசை வொடு தளாநது - அசைதலுடனே வாடி, கலவி - கலவி யறிவாகிய, அரு தழை உகுதது - அரிய தழையை உதிாதது, நசையுநா - காமிக ளுடைய, நிறகும் நெஞ்சம தாரு - நிறகினற மனமாகிய (உலாநத) மரத்தை, நடு உற போழும - நடுவிலே பிளப்பான், எ-று.

(க-து.) தாழம்பூவே! உன் னிதழெனனும் வாளாலே மன்மதனாகிய தச்சன் காமிகளுடைய நெஞ்சமாகிய மரத்தை யறுப்பான் என்று நளன் சொன்னான் என்பதாம்.

தாழை அன்மை விளி. காமதச்ச னென்பதில் சிலேமொழி பிறுகெட்டது. காம மேலிட்டவாகக்க கல்வியறிவு குறையு மாதலால் 'மையலாம் வளியிற கல்வி யருந்தழை யுருந்தது' என்றார். மடலாதிகளிலே யீரவாளாதிகளின் அபேதங்க ளாரோபித்தலாலே உருவக வணியாம். (௩௯)

விழையுநராவிபோழும்வேனிலானிரதமூறுங்
கழைகுழைத்தளிநாணேற்றிக் கணைமலர்தொடுக்கிற் றீந்தே
மழையினிற்கரங்க ணாளுமழுவழுத்திழுக்கா வண்ணந் [ன்
தழைமடற்கைதாய்நின்பொற்றுகளைத் திமிர்ந்தெய்வானால்.

(இ-ள்.) விழையுநர் ஆவி போழும் - விரும்பினவருடைய உயிரைப் பிளக்கின்ற, வேனிலான் - மன்மதனுடைய, இரதம் ஊறும் - சாறு ஒழுகுகின்ற, கழை குழைத்து - கருப்புவில்லை வளைத்து, அளி நாண் ஏற்றி - வண்டுகளாகிய நாரியைப் பூட்டி, கணை மலர் தொடுக்கின் - பூவம்புகளை எய்யும்போது, தீம் தேன் மழையினில் - மதுரம்பொருந்திய தேனினது மழையினாலே, கரங்கள் - (தன்) கைகளானவை, நாளும் - தினந்தோறும், வழுவழுத்து இழுக்கா வண்ணம் - வழுவழுத்துத் தப்பிப்போகாதபடி, தழை மடல் கைதாய் - தழைத்த இதழ்களையுடைய தாழம்பூவே!, நின் - உனது, பொன் தாது - பொன்னிறம்பொருந்திய துகளை, கை திமிர்ந்து - அக்கைகளிலே பூசிக்கொண்டு, எய்வான் - (அவன் என்மேற்) செலுத்துகிறான், எ-று.

(க-து.) தாழம்பூவே! மன்மதன் கருப்புவில்வளைத்து அளிநாணேற்றி மலர்க்கணை தொடுக்கில் வழுக்காதிருக்க உன்மகரந்தங்களைத் திமிர்ந்து அக்கணை யெய்கிறான் என்று நளன்சொன்னான் என்பதாம்.

அந்தத் தாழம்பூவில் மற்ற மலர்களினும் மிக்க தூளிருத்தலபற்றி அங்ஙனங் கூறப்பட்டது. (௪௦)

[இதனால் முருக்கம்பூவை வெறுத்தல் சொல்லப்படுகின்றது]

குனிசிலைவேனிலானைக் கைக்குருதிதோய்பிறைவாயம்பின்
றனியெழில்கவர்ந்துதோன்றித் தணந்தவர்தமையெஞ்ஞா
துனியுறமுருக்குகின்றதொழிலினாலன்றேநின்னை [ன்றும்
முனிவுடனுலகிலியாருமுருக்கெனக்கிளக்கின்றாரே.

(இ-ள்.) குனி சிலை வேனிலான - வளைக்கப்பட்ட வில்லையுடைய வசந்தகாலத்திற்குரிய மன்மதனது, கை - கையிலிருக்கின்ற, குருதி தோய - உதிரத்திலே முழுகிய, பிறை வாய் அம்பின - பிறைபோன்ற வாயையுடைய அம்பினது, தனி எழில் கவர்ந்து - ஒப்பற்ற அழகை வௌவி, தோன்றி - விளங்கி, தணந்தவர் தமை - பிரிந்தவரை, எஞ்ஞான்றும் - எந்நாளினும், துனி உற - துன்பத்தை யடைய, முருக்குகின்ற - கொல்கின்ற, தொழிலினால் அன்றே - செய்கையினாலன்றோ,

(இ-ள்) நஞ்சு உமிழ் வேலினான் - விஷத்தைக் கக்குகின்ற வேலையுடைய நளராஜனானவன், கீர்த்தி - (தன்) கீர்த்தியை, நாடொறும் - தினந்தோறும், அம் சொலார் - அழகிய சொற்களையுடைய மகளிரானவர், பயிற்றலால் - கற்பித்தலாலே, அம் தண் காவினில் - அழகிய தண்ணிய சோலையிலே, மஞ்சரி - பூங்கொத்துகளுடைய, இடை இடை வதிந்த பூவையும் - நடுவே நடுவே தங்கிய நாகணவாய்ப் பறவைகளும், பைஞ்சிறைக் கிளியும் - பசிய சிறகுகளையுடைய கிளிகளும், பாட - படிக்க, கேட்டனன் - (அரசன்) கேட்டான், எ-று.

(க-து.) நளமகாராஜன் தன்கீர்த்தியைப் பூவைகளும் கிளிகளும் பாடக் கேட்டான் என்பதாம்.

அரசனை மகிழ்வித்தற்பொருட்டு அவனது புகழைப் பூவைகளுக்கும் கிளிகளுக்குங் கற்பித்து அவ்வனத்தில் விட்டுவைப்பாரென்க. அப்பறவைச் சொற்களின் மதுரச்சுவைதோன்ற 'அஞ்சொலார் பயிற்றலால்' என்றார், காரணத்தின் குணம் காரியத்திலும் உளதாதலால்.

[இதனுள் தென்றலின் வரவு சொல்லப்படுகின்றது.]

தேங்கமழ்மலர்நறுவருந்திச்சீர்கெழு
தூங்கிசையளிமுரல்சுண்ணமாடிமென்
பூங்கொடிமடந்தையராடப்போர்வளம்
மாங்குயிலுழைசெயவசந்தனெய்தினான்

(இ-ள்) தேன் கமழ் மலர் - பரிமளிக்கின்ற மலர்களது, நறு அருந்தி - தேனை உண்டு, சீர் கெழு - சிறப்புப் பொருந்திய, தூங்கு இசை - நாட்டியராகத்தை, அளி முரல - வண்டுகள் பாட, சுண்ணம் ஆடி - பரிமளப் பொடியைப் பூசிக்கொண்டு, மென் பூ கொடி - மெல்லிய பூங்கொடிகளாகிய, மடந்தையர் ஆட - மகளிர் கூத்தாட, போர் வளம் - போர்க்குரிய வளத்தை, மா குயில் உழை செய - மாவிலுள்ள குயிலாகிய (மந்திரி) சொல்ல, வசந்தன் எய்தினான் - தென்றலாகிய (பகைவன்) வந்தான், எ-று.

(க-து) சோலையில் தென்றற்காற்று வந்தது என்பதாம்.

முரல என்பது முரல் என ஈறு கெட்டது. போர்வளம் — காலதேசங்களின் சிறப்பு இயற்கை நயத்தினைச் சிற காலமும் பொழிலிடமுமாம். மதுவுண்டு பரிமளப்பொடி பூசிக்கொண்டு ஆடல் பாடல்களின் மகிழ்ந்து அமைச்சரோடெண்ணிப் போர்செய்தற்கு அரசன் வந்தானென்க. இப்படி வந்தானெனவே அரசனை வெல்லுதற்கு அவனை எளியனாகக் கருதலாலே செருக்கோடு வந்தானென்பது தொனிக்கின்றது. பூங்கொடியாட என்றதனாலே மெல்லிய நடையும், நறு வருந்தி என்றதனாலே தண்மைக்குணமும், சுண்ணமாடி என்றதனாலே நறுநாற்றமும், ஆகிய தென்றலுக்குரிய மூன்று குணங்களுஞ் சொல்லப்பட்டன. (௪௭)

மிடைந்திருவிசும்புறையமரர்வெற்பினைக்
கடைந்துதன்வளனெலாங்கவர்வராமெனக்

குடைந்துவண் டிமிர்பொழி லிடையிற் கொள்கட
லடைந்தன்ன வாவியைமன்ன னோக்கினான்

(இ-ள்) இரு விசும்பு - பெரிய விண்ணுலகத்தில், மிடைந்து உறை - நெருங்கி வாசஞ்செய்கின்ற, அமரர் - தேவரானவர், வெற்பினால் - மந்தரகிரியினால், கடைந்து - (இவ்வாறு) கடைந்து, தம் வளம் எலாம் - தம் செல்வத்தை யெல்லாம், கவர்வர் ஆம் என்று - வெளவுவாரென் றெண்ணி, குடைந்து - கிண்டி, வண்டு இமிர் - வண்டுகளானவை ஒலிக்கப்பெறுகின்ற, பொழில் - வனத்தினது, இடையில் அடைந்து - நடுவிலே அடைந்ததாகிய, கொள் - (அவ்வளங்களைக்) கொண்ட, கடல் அன்ன வாவியை - பாற்கடல் போலுகிற தடாகத்தை, மன்னன் நோக்கினான் - அரசன் பார்த்தான், எ-று.

(க-து.) நளராஜன் தடாகத்தைக் கண்டான் என்பதாம்.

முற்காலத்தே தேவர்கள் கடைந்து ஐராவதாதிகளைக் கொண்டு போனதுபோல மீளவும் வந்து மற்றை வளங்களையுங் கொண்டு போய் விடும் போவரென்று அஞ்சியதெனக் ஒருகா லோரிடத்தே தன்வளங்களை யெல்லாங் கொள்ளக் கொடுத்தேதான் புகவிடமயிட்டு வெறிட்டுச் செல்வனெனக் அடைந்தது என்பது அடைந்து என விகாரப்பட்டு நின்றது. அத்தடாகத்தை அப்படி யஞ்சி யடைந்த கடலாகக் குறித்தமையாலே தற்குறிப்பு. (௭)

[இதுமுதல் மேற்பாட்டுகளால் முன்னிட்டில் வாவியின் வளமென்று அவை இவையெனச் சொல்லப்படுகின்றன.]

தூவியஞ்சிறையன்னந் துயிலுநாண்மலர்
வாவியுட் டாமரைவளையந் தோன்றுவ
பூவலர் கற்பகப்பொதும்பர் நாட்டுறை
கோவிளங் களிற்றினக் கோடுபோன்றவே

(இ-ள்.) தூவி அம் சிறை அன்னம் - இறகையும் அழகிய சிறகையு முடைய அன்னங்களானவை, துயிலும் - தூங்குகின்ற இடமாகிய, நாள் மலர் வாவியுள் - அன்றலர்ந்த மலர்களையுடைய தடாகத்தினுள்ளே, தோன்றுவ - தோன்றுகின்றவையாகிய, தாமரை - தாமரைகளுடைய, வளையம் - தளிர்ச்சுருள்களானவை, பூ அலர் - அழகிய மலரையுடைய, கற்பகம் பொதும்பர் - கற்பகச் சோலையையுடைய, நாடு உறை - நாட்டினைக் கண் வாசஞ்செய்கின்ற, கோ - அரசனாகிய இந்திரனுடைய, இள களிறு இனம் - (அதினுள்ளிருக்கிற) இளமைபொருந்திய யானைகளது இனத்தினுடைய, வெள் கோடு போன்ற - வெள்ளைக் கொம்புகள்போன் றிருந்தன, எ-று.

(க-து.) தடாகத்துள்ளே தோன்றிய தாமரைவளையங்களானவை தேவலோகத்தின் யானைகள் கொம்புகளை யொத்திருந்தன என்பதாம்.

வளையம் "விரித்திடுஞ் சுருளினும்ம விசியொடு வளையமாகும்" இதனாலறிக, இரண்டுபிரிவாகிய அச்சுருள்கள் இரட்டைத் தந்தங்

கள் போலுதல் காண்க. 'பூவலர்க் கற்பகப்பொதும்பர் நாட்டுறை கோவிளங்களிறு' இவற்றை யொருமொழியாகக் கொண்டு அதற்கு ஐராவதமென்ப பொருள்கொள்க. களிறென்னும் பொதுப்பெயர் ஐராவதமென்னுஞ் சிறப்புப்பெயர்ப்பொருளைத் தருதற்கு அவ்வடை சேர்க்கப்படுதலாலே, பல ஐராவதங்கள் நீருள்ளே மறைந்திருக்க நீர் மேலே வெளிப்பட்டுத் தோன்றுகிற அவற்றி னிரட்டைக் கோடுகள் போலுதல் கொள்க. "தாமரைமுளைகட்டான்றுவ" என்ப பாடங் கூறின் இதன் முதனான் முடிபையாத்து முடியும். அவ்வளையங்களை அக்கோடுகளாகக் குறித்தலாலே தற்குறிப்பணி அதிலே யோரைரா வதம் இதிலே பல வைராவதங்கள் தோன்றலாலே வேற்றுமையணி யாம். (சஅ)

ஏந்தலோடவ்வழியிறுத்தவெண்ணறுங்
கூந்தன்மாநிழற்றடத்திடைகுலாவுவ
காந்தளங்கரத்தரமகளிர்காமுறு
வேந்தனற்புரவியின்வெள்ளம்போன்றவே

(இ - ள்.) ஏந்தலோடு - அரசனோடு, அவ்வழி - அவ்விடத்தே, இறுத்த - அடைந்த, எண் அறும் - எண்ணில்லாத, கூந்தல் - மயிரையுடைய, மா - குதிரைகளுடைய, தடத்திடை - தடாகத்தின்கண், குலாவுவ - தோன்றுவனவாகிய, நிழல் - சாயைகளானவை, காந்தள் - காந்தள் மலர்போலும், அம் கரத்து - அழகிய கைகளையுடைய, அர மகளிர் காமுறு - தெய்வமங்கையரால் இச்சிக்கப்படுகின்ற, வேந்தன் - இந்திரனுடைய, நல் புரவியின் - நல்ல - குதிரைகளுடைய, வெள்ளம் போன்ற - (அதிலுள்ள) கூட்டம் போன்றன, எ-று.

(க - து.) தடாகத்தில் தோன்றிய குதிரைகளின் சாயலானவை இந்திரன் குதிரைகளை ஒத்திருந்தன.

'காந்தளங் கரத்தர மகளிர் காமுறும் வேந்தனற்புரவி' இவற்றையும் முன் ஐராவதத்திற்குச் சொல்லப்பட்டதுபோலே ஒருமொழியாகக்கொண்டு உச்சைசிரவமென்று பொருள்கொள்க. குலாவுதல் அந்நிழல்கள் அலையினாலே ஒன்றையொன்று தொடர்வனவாகத் தோன்றுதல். அந்நிழல்களை அவ்வுச்சைசிரவங்களாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. அக்கடலிலே ஓருச்சைசிரவம் இதிலே பலதோன்றுதலாலே வேற்றுமையணியாம். இதனாலே அரசன் குதிரைகளெல்லாம் உச்சைசிரவம்போலிருக்கின்றன வென்பது தொனிக்கின்றது.()

வரிச்சிறைத்தும்பிகளுழுநல்வள்ளவாய்
விரித்தவெண்டாமரைவிளங்கித்தோன்றுவ
தரித்திடுகளங்கமெய்தயங்கத்தண்ணெனுந்
திருக்கிளர்நிலவுமிழ்திங்கள்போன்றவே

(இ-ள்.) விளங்கி - பிரகாசித்து, தோன்றுவ - (தடாகத்திலே) காணப்படுகின்றவையாகிய, வரி சிறை தும்பிகள் - கீற்றுகள் பொருந்திய சிறைகளையுடைய வண்டுகளால், உழு - கிண்டப்படுகின்ற,

நல் - நல்ல, வள்ள வாய - கிண்ணம்போலும் வாயை, விரிந்த - திறந்திருக்கின்ற, வெள் தாமரை - வெண்டாமரை மலர்களானவை, தரித்திடு - தாங்கப்பட்ட, களங்கம் - களங்கங்களானவை, மெய் தயங்க - வடிவங்களிலே தோன்ற, தண் எனும் - குளிர்ச்சியாயிருக்கிற, திரு கிளர் - அழகினாலே விளங்காநின்ற, நிலவு - சந்திரிகையை, உமிழ் - கக்குகின்ற, திங்கள்போன்ற - (அதிலுள்ள) சந்திரர்கள் போன்றிருந்தன, எ-று.

(க - து) தடாகத்துத்தோன்றிய வெண்டாமரை மலர்களானவை சந்திரர்களை ஒத்திருந்தன என்பதாம்.

வண்டு களங்கமும் வெண்டாமரைமலர் சந்திரனும் போலுதல் கொள்க. தண்மையுந் திருக்கிளர் நிலவுந் தாமரைக்குமாம். அப்படிப்பட்ட வெண்டாமரைமலர்களை அப்படிப்பட்ட சந்திரர்களாகக் குறித்தலாலே தற்குறிப்பணியாம் இதிலும் வேற்றுமையணி கொள்க. ()

சேயிதழ்க்குவளைமென்னனைகடெண்டிரைத்
தூயநற்றடத்திடைத்தோன்றுகின்றன
மேயவார்கணைகவா வன்பிலாமிக்கவாயப
பாயொளிசிறந்தசெம்பவளம்போன்றவே

(இ - ள்) தெள் திரை - தெளிவுள்ள அலைகளையுடைய, தூய - பரிசுத்தம்பொருந்திய, நல் தடத்திடை - நல்ல தடாகத்தினுள்ளே, தோன்றுகின்றன - காணப்படுகின்றவையாகிய, செம் இதழ் குவளை - சிவப்பான இதழ்களையுடைய உற்பலங்களுடைய, மெல் நனைகள் - மெல்லிய அரும்புகளானவை, மேயவார் கணை - அடைந்தவருடைய பாரவையை, கவா - வௌவுகின்ற, வன்பில் மிக்க ஆய - அழகில் மிகுந்தனவாகி, பாய ஒளி - விரிந்த வொளியால், சிறந்த - விசேஷித்த, செம் பவளம் போன்ற - (அதிலுள்ள) செம்பவளங்கள் போன்றன, எ-று.

(க-து.) தடாகத்தில் தோன்றிய செங்குவளை அரும்புகளானவை பவளத்தை ஒத்திருந்தன என்பதாம்

அச் செங்குவளை யரும்புகளை அப் பவளங்களாகக் குறித்தலால் தற்குறிப்பணி. (௫௧)

வெண்ணிறத்தாமரைமலருமவேரியந்
தணகருங்குவளையுந்தடத்துட்டோன்றுவ
வெண்ணிருகலைமதிநிலவினீட்டமு
முண்ணிலவியவிடத்தொளியும்போன்றவே.

(இ-ள்.) தடத்துள் தோன்றுவ - தடாகத்தினுள்ளே தோன்றுகின்றவையாகிய, வெள் நிறம் - வெள்ளை நிறம்பொருந்திய, தாமரை மலரும் - தாமரைப் பூக்களும், வேரி - தேனையுடைய, தண் - தண்ணிய, கரு குவளையும் - நீலோற்பல மலர்களும், உள் - (அத)னுள்ளே, நிலவிய - விளங்குகின்ற, எண் இரு கலை - பதினாறுகலைகளையுமுடைய, மதி - சந்திரனது, நிலவின் ஈட்டமும் - ஒளிச்செறிவும்,

பொனனுலகததிலுளள, நிறம - ஒளிபொருநதிய, சிறகரால் தழீஇ - சிறைகளினுலே தழுவி, விருபபொடும - ஆசையுடனே, உள - (அதன) உளளததே, மகிழ கூாதர - மகிழசசியானது மிகுமபடி, உவநது - (தானும) மகிழ்ந்து, புலலிறறு - புணாநதது, எ-று.

(க - து.) அரச வனனமானது பெடடையனன மகிழத தானு மகிழநது புணாநதது எனபதாம

முனபாடடிலே கலவியின குறிபபுணா காடடிறறெனற பேடைக்கு ஊடலெபபாடி யுண்டாயிற றெனருல நாயகனே முனனே தனனிடதது விரும்பிவரச செயததாலும வநதபினபு ஊடுதலும நாயகிககு இயலபலா மெனக. ஊடலிலலையாயிற புணாசசி யினபஞ சிறவாதாம, "ஊடு தல் காமததிற கினப மதறகினபங கூடி முயஙகப பெறின" இதனு லறிக. (ருசு)

[இதனுல அரசனன செயய விருமபியது கைகூடலல காரிய முகததாற சொலலபபடுகினறது.]

விழைவுறறுக கலவியின மெலிநதோர தாளினின
றெழிறிகழ பொனனிறமெருததங கோடடுப
குழைவுறறுச சிறகரான முடிததனனறு
வழிமலாச சேககையி லனனந துஞ்சிறறால

(இ - ள.) விழைவு உறறு - விருமபபபடட, கலவியில மெலிநது - புணாசசியால இளைதது, ஓா தாளின நினறு - ஒரு காலிலுல நினறு, எருததம கோடடு - பிடரியை வளைதது, குழைவு உறறு - குழைநதது, சிறகரால மூடி - சிறையால (தலையை) மறைததுககொணடு, தன நறு வழி - தனனணிய நெருனது வழியபபெறற, மலா சசேககையில - தாமரைபபூவாகிய சயனததில, எழில திகழ - அழகிலுல விளஙகா நினற, பொனன - பொனவடிவமாகிய, நிறம - காநதியுளள, அனனம துஞசிறறு - அவவனனமானது தூஙகிறறு, எ-று

(க - து) அவவரசவனனம தாமரையிடதது நிததிரைசெயதது எனபதாம.

இபபடி தூஙகுதலாகிய பறவையின சாதிததனமை சொல்லுத லாலே தனமை நவிறசியணி. (ருஎ)

[இதனுல அவவனனததைப பிடிததறகுக காரணமும பிடிததமையும சொலலபபடுகினறன.]

சூழ்வளியுடன்சுழலசருகிறறெனறிய
வூழ்வழிமனருசெலலுண்மையன்றுகொ
ருழ்புலன்வழிமனஞ்சாரவோதிமம
பாழியநதோளினுனகையிற்பறறினன்

(இ-ள.) சூழ வளியுடன - அலே காறறுடனே, சுழல் - சுழன்று செல்கின்ற, சருகின - சருகுபோல, ஊழ் வழி - விதியின் வழியிலே,

தோன்றிய - (அதன்பயன்) உண்டாக, மனம் செல்ல - (உயிர்களது) மனமானது செல்லுதல், உண்மை அன்றுகொல் - சத்தியமன்றோ, தாழ் புலன் வழி - அற்பவிஷயமாகிய (அவ்வன்னத்தின்கண்), மனம் சார - மனமானது (ஊழினால்) அடைய, ஓதிமம் - அவ்வன்னத்தை, பாழி - வலிமைபொருந்திய, அம் தோளினான் - அழகிய தோள்களையுடைய நளராஜன், கையில் பற்றினான் - கையினாலே பிடித்தான், எ-று

(க-து.) நளமஹாராஜன் விதியின்படி மதியுஞ்செல்ல அவ்வன்னத்தைப் பிடித்தான் என்பதாம்.

அவ்வன்னம் பெறுதற்கரிய பொருளாயினும் அரசனது பெருந்தன்மைக்கு அதைத் தூங்கும்போது பற்றுதல் தகாத செயலென்பது தோன்ற அதனைத் 'தாழ்புலன்' என்றும், அவனைப் 'பாழியந்தோளினான்' என்றுங் கூறினார். அற்பகாரியத்திலே தீரோதாத்தனாகிய அரசனுக்கு மனஞ்செல்லுமோ வென்கிற சங்கைக்கு உயிர்களுக்கு மனம் விதிவழிப்பட்டு நிற்குமாதலால் செல்லுமென்பது சொல்லப்பட்டது. ஊழ்வழி மனஞ்செல்லுமென்னும் பொதுப்பொருளை அவ்வன்னம் பற்றுதற்கு அரசன்மனஞ் சென்றதென்னுஞ் சிறப்புப் பொருளாலே சாதித்தலால் வேற்றுப்பொருள்வைப்பணி. இதில் உவமையுஞ் சேர்தலாற் சேர்வையணி. (ருஅ)

கைப்படுசிறையன்னங்கலங்கிவாய்வெரீஇத்
துப்புறழ்தோலடிதுடிப்பத்துன்புற்
றெய்ப்பொடுசிறையடித்தேகலாமையின்
மைப்புயலனையவன்கைம்மலரிற்கொத்திற்றால்

(இ-ள்) கை படு - (அரசனது) கைக்கு அகப்பட்ட, சிறை அன்னம் - சிறைகளையுடைய அன்னமானது, கலங்கி - அறிவழிந்து, வாய் வெரீஇ - அச்ச வொலிகள்செய்து, துப்பு உறழ் - பவளம்போலும், தோல் அடி துடிப்ப - தோலையுடைய அடிகளானவை நடுங்க, துன்பம் உற்று - துயர மடைந்து, சிறை அடித்து - சிறைகளாலடித்து, ஏகலாமையின் - போகமாட்டாமையால், எய்ப்பொடு - இளைப்புடனே, மை புயல் அனைய - (கொடையால்) கரிய மேகம்போலும், கை மலரில் - (அவன்) கையாகிய மலரில், கொத்திற்று - கொத்தியது, எ-று.

(க-து) அன்னமானது வருத்தமுற்று நளன் கையைக் கொத்திற்று என்பதாம்.

வலியவன்கையிற் கட்டுப்பட்டோன் முன்னே தப்பிப் போதற்கு முயற்சிசெய்தலும் அது கூடாதபோது தன்னாலானமட்டும் அவனை வருத்துதலுஞ் செய்வா னென்க. பிடிபட்டபோது கலங்குதலாதியாகிய அதன் சாதித்தன்மைகளைச் சொல்லுதலால் தன்மை நவிற்சியணியாம். (ருகூ)

[இதுமுதல் இரண்டு பாட்டுகளால் அவ்விடத்து நிகழ்ச்சி
சொல்லப்படுகின்றது]

இரைத்தயர் புள்ளினுக்கிரங்கிப் புட்குலம்
விரிந்தெழுசிறைவளிவீசமெல்லிதழ்த்
திருந்தகுதாமரையலைதல்சேர்தடம்
வருந்தலையென்றுகைமறித்தல்போன்றதே

(இ-ள்.) புள் குலம் - பறவைக் கூட்டமானது, விரிந்து - பரவி, எழு - எழும்புகையில், சிறை - சிறைகள், வளி வீச - காற்றை எறிதலால், மெல் இதழ் - மெல்லிய இதழ்களையுடைய, திரு தகு தாமரை - அழகு பொருந்திய தாமரை மலர்களானவை, அலைதல் - அசைதலானது, சேர் தடம் - சேர்விடமாகிய தடாகமானது, இரைத்து - கூவி, அயர் - வருந்துகின்ற, புள்ளினுக்கு - அவ்வன்னத்திற்கு, இரங்கி - இரக்கமுற்று, வருந்தலை என்று - (அதனை) வருந்தாதே யென்று, கை - (தன்) கைகளினாலே, மறித்தல் போன்றது - தடுத்தல் போன்றது, எ-று.

(க-து) பறவைக ளெழுந்ததால் தாமரைக ளசைதலானது அன்னை வருந்தாதென்று தடுத்தல்போன் றிருந்தது என்பதாம்.

இரங்கி யென்னும் வினையெச்சம் கைம்மறித்த லென்னும் வினை கொண்டது. தன்னைச் சேர்ந்திருந்த தாதலால் அதற்குத் தடாக மிரங்கிற்றென்க. அத்தாமரை மலர்களி னசைதலை அத்தடாகத்தின் கைம் மறித்தலாகக் குறித்தலால் தற்குறிப்பணி. (௯0)

வள்ளவாய்த்தாமரைவதிந்துபோதரு
புள்ளெலாந்தனித்தனிபுலம்பல்வாவியி
னுள்ளுறுவறுமைகண்டொதுங்குபூமகள்
டெள்ளரிச்சிலம்புகள்சிலம்பல்போன்றதே

(இ-ள்.) வள்ளம் வாய் - கிண்ணம்போலும் வாயை யுடைய, தாமரை வதிந்து - தாமரைமலர்களில் வாசஞ்செய்திருந்து, போதரு - (அப்போது) போகின்ற, புள் எலாம் - பறவைகளனைத்தும், தனி தனி - வேறுவேறாக, புலம்பல் - புலம்புதலானது, வாவியின் உள் - தடாகத்தினுள்ளே, உறு - சேர்ந்திட்ட, வறுமை கண்டு - (அரசவன்னம்) இல்லாமையைப் பார்த்து, ஒதுங்கு - விலகுகின்ற, பூமகள் - திருமாதி னுடைய, தெள் அரி - தெள்ளப்பட்ட பருக்கைக் கல்லுகளையுடைய, சிலம்புகள் - பாதச்சிலம்புகளானவை, சிலம்பல் போன்றது - ஒலித்தல் போன்றது, எ-று.

(க-து) பறவைப் புலம்பலானது தடாகத்தைவிட்டு இலக்குமி நீங்கும் பாதச்சிலம்பொலிபோ லிருந்தது என்பதாம்.

இங்கே விளக்கத்தைத் திருமகளென்று ராதலின் அத்தடாகம் அரசவன்ன மில்லாமையிருலே சந்திரனில்லாத இரவுபோல விளக்கத்தை இழந்ததென்றதாயிற்று. அஞ்சிப்போகிற வன்னங்களினொலியை அச்சிலம்புகளினொலியாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. ()

[இதனாலே சில நியாயங்கள் கூறத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

இன்னபொன்னிறவன்னங்கண்டிலேனென்னு
மன்னர்மன்னவன்மதிவதனநோக்கியே
யன்னவன்கரமலரமர்ந்தவோதிம
நன்னயமொழிசிலநவிறலுற்றதே

(இ-ள்.) இன்ன - இப்படிப்பட்ட, பொன் - பொன்மயமாகிய, நிறம் - ஒளிபொருந்திய, அன்னம் - அன்னத்தை, கண்டிலேன் எனும் - (இதுவரையில்) பார்த்திலேனென்ன (வியக்கின்ற), மன்னர் மன்னவன் - அரசர்க்கரசனது, மதி வதனம் நோக்கி - சந்திரன்போலும் (விளக்கம்பொருந்திய) முகத்தைப் பார்த்து, அன்னவன் - அப்படிப்பட்டவனது, கரமலர் - கையாகிய தாமரைப்பூவின்கண், அமர்ந்த - தங்கிய, ஓதிமம் - அன்னமானது, நல் - நல்ல, நயம் - நீதிநூலைப் பற்றிய, சில மொழி - சிலசொற்களை, நவிறல் உற்றது - சொல்லத் தொடங்கிற்று, எ-று.

(க-து.) நளன்கையிலிருந்த வன்னமானது அவன் முகத்தைப் பார்த்துச் சிலநீதி சொல்லத்தொடங்கிற்று என்பதாம்.

'மதிவதனம்' என்றதனாலே அந்நேரம் பார்க்கையில் அவனோடு பேசுதற்கு ஊக்கமுண்டாயிற்றென்றதாயிற்று. கைப்பிடியினாலே அதற்கொரு வருத்தமில்லையென்பது 'கரமலர்' என்றதனாற் குறிக்கப்படுகின்றது. நயம் - நியாயம், "நயமென்ப நியாயநெறி" இதனா லறிக (சுஉ)

[இதுமுதல் மூன்று பாட்டுகளாலே முன் கூறப்பட்ட நயமொழிகள் சொல்லப்படுகின்றன.]

சிறையொளிர்பொன்னிறைசெல்வநல்குமோ
வறைகடல்பனியினினிறைவதாங்கொலோ
கறைகெழுவேலினாயகருத்தினுள்ளுற
நிறைதருவிழைவினைநீத்தல்வேண்டுமால்

(இ-ள்.) கறை கெழு வேலினாய - உதிரம்படிந்துள்ள வேலையுடைய நளராஜனே!, சிறை - (என்) சிறைகளிலே, ஒளிர் - விளங்காநின்ற, பொன் - பொன்னானது, நிறை செல்வம் நல்குமோ - குறைவில்லாத செல்வத்தை (உனக்குத்) தருமோ? அறை கடல் - ஒலிக்கின்ற (பெரிய) கடலானது, பனியினில் - (அற்பமாகிய) பனியினாலே, நிறைவதாங்கொலோ - நிறையுமோ?, கருத்தினுள் - (உன்) மனத்தினுள்ளே, உற - பொருந்த, நிறைதரு - நிறைந்த, விழைவினை - அப்பொன்னாசையை, நீத்தல் வேண்டும் - (நீ) ஒழிக்க வேண்டும், எ-று.

(க-து.) நளமஹாராஜனே! என் பொன்னிறகானது செல்வந்தருமோ, கடலானது பனியால் நிறையுமோ, நீ உன்னாசையை நீக்க வேண்டுமென் றன்னங் கூறியது என்பதாம்.

முன்பாட்டிலே 'இன்ன பொன்னிறவன்னங் கண்டிலேன்' என்றுரைக்கச் சொல்லப்பட்டமையால் தன்னைப் பொன்னுக்காகக் கொல்வானென்று நினைத்து இவ்வாறு சொல்லியதெனக். 'கறைகெழுவேலினாய்' என்றதனாலே நீகொலையிற்கொடியோ யென்றதாயிற்று. இச்சிறிய பொன்னிலே உன்பேராசை பறிக்கப்படத்தக்கதாதலால் 'நீத்தல் வேண்டும்' என்றது. முன்னிரண்டு வாக்கியங்களிலுஞ் சாதாரண தருமத்தைச் சொல்லுதலால் தொடர்முழு துவமையணி. (கூரு)

> கோறல்செய்தாலுயிர்க்கொலையொன்றேயலாற்
> றேறினாற்பிழைத்தவன்பழியுஞ்சேருமாற்
> றூறுபாய்கவுண்மத்தறுகண்யானையாய்
> மாறுகொள்பகைஞர்க்குமிதுமனங்கொளார்

(இ-ள்.) தாறு பாய் - முட்கோல்கள் பாயப்பெறுகின்ற, கவுள் - கதுப்பையும், மதம் - மதத்தையும், தறு கண் - கொடுங் கண்களை யுமுடைய, யானையாய் - யானை யாள்பவனே!, கோறல் செய் தால் - (உன்னை விசுவாசித்திருந்த என்னை நீ) கொல்லுவையே யானால், உயிர் கொலை ஒன்றே அலால் - உயிரைக் கொல்லுதற்பாதக மொன்றே யல்லாமலும், தேறினார் - நம்பினவர்க்கு, பிழைத்த - தீங்குசெய்த, வன் பழியும் சேரும் - கொடிய பாதகமும் (உன்னை) யடையும், மாறு கொள் - மாறுபாடுகொண்ட, பகைஞர்க்கும் - விரோதிகளுக் கும், இது - இவ்விசுவாசகாதகஞ் செய்தலை, மனம் கொளார் - நினை யார், எ-று.

(க-து.) நளமஹாராஜனே! என்னைக்கொன்றா லுயிர்க்கொலை, அல்லாமலும் நம்பினவர்க்குத் தீமைசெய்த பழியு முன்னை யடையு மென்றன்னங்கூறியது என்பதாம்.

'தேறினார்ப்பிழைத்த' என்றதனாலே எனக்கு ஒரு தீங்குஞ் செய் யாயென நான் உன்னை நம்பியிருந்தே னென்றதாயிற்று. "நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக், கொன்றாகு மாக்கங் கடை" என்றவாறே எல்லாப் பாவங்களிலுங் கொலைப்பாவங் கொடிது, அதி னும் விசுவாசகாதகங் கொடியதென்பது தோன்ற 'வன்பழி' எனப் பட்டது. மதச்செருக்கும் வன்கண்மையும் உடையை யாதலால் இத் தகாதசெயல் செய்கின்றாயென்பது குறிப்பித்தற்குத் 'மதத்தறுகண் யானையாய்' என்றது. நம்பின பகைவர்க்குந் தீங்கு நினைத்தலும் பாவ மாயிருக்கப் பகைவனல்லாதிருந்து விசுவாசித்த என்னைக் கொலைசெய் யப் பெறலாமோ வென்றதாயிற்று. (கூ௪)

> செருக்களத்தேற்றவர்ச்செகுத்தலன்றியுன்
> னருட்கிடனாமெனைப்படுத்தனீதியோ
> முருக்கிதழ்மடந்தையர்முலைதிளைத்திடுங்
> குருக்கிளர்மணிபுனைகுவவுத்தோளினாய்

(இ-ள்.) முருக்கு இதழ் - முருக்கம்பூப்போலும் உதடுகளை யுடைய, மடந்தையர் - மாதருடைய, முலை - முலைகளானவை, திளைத்

திடும் - அழுந்தப்பெறும், குரு இளா - சிறந்தநிறமுள்ள விளங்காநின்ற, மணி புனை - இரத்தினாபரணத்தால் அலங்கரிக்கப்பட்ட, குவவு தோளினாய - திரட்சியையுடைய தோள்களை யுடையவனே!, செரு களத்து - போர்க்களத்தில், ஏற்றவர் - (உன்னோடே) யெதிர்த்தவரை, செகுத்தல் அன்றி - கொல்லுதல (நீதியாம்) அன்றி, உன் அருட்கு - உனது கருணைக்கு, இடமாம் - பாத்திரமாகிய, ஏனை அடாத்தல் - (ஒரு புல்லிய பறவையாகிய) என்னைக் கொல்லுதல், நீதியோ - நீதியா மோ, எ-று.

(க - து) அரசனே! போரி லெதிர்த்தவரைக் கொல்லுதல் நீதி உமமையடுத்த வென்னைக் கொல்லுதல் நீதியோ என்று அன்னஞ் சொல்லிற்று என்பதாம்

என்னையென்றது அறபமாகிய பறவையாயிருக்கிற வென்னுஞ் சொல்லிலே விசேடணமாகவெல்லாநின்றது நீதியாமென்னும் ஏகா ரம அநீதியாமென்னும் பொருளைத் தந்தது. புயேதினைத் திடுந் தோளினு யென்றதனுலே பெண்டிரோடு கூடிவாழுமீ அப்ப டிப்பட்ட என்னையாழ்வைக் கொல்லுதற்கு எப்படித் துணிந்தாயென்ப தைக் குறிப்பித்தாயிற்று (௯௫)

[இதனுலே பலதுயர மொழிகளைக் கூறத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது ]

கல்வியி னகன்றிடு கருணை வேந்தனா
லொல்கலுங் கருணையு முவப்புந் தோன்றிட
அல்கிலின் மொழிசில வறைந்து பின்னரும்
பல்பல துயர மொழிபகர லுற்றதே

(இ - ள்) கல்வியின் - கல்வியறிவுபோல, அகன்றிடு - பெருக்கத் தை யடைந்திருக்கிற, கருணை வேந்து - அருளையுடைய நளராஜ னது, உளத்து - உள்ளத்தினுக்கும், ஒல்கலும் - நாணமும், கருணையும் - அருளும், உவப்பு - மகிழ்ச்சியும், தோன்றிட - (ஏககாலத்தில்) உண் டாக, அல்கு இல் - (ஒழிவற்ற) சுருங்குதலில்லாத, சில்மொழி அறைந்து - சிலசொற்களைச்சொல்லி, பின்னரும் - (அதன்) பின்பும், பல்பல் துயர மொழி - பலபலவாகிய (அரசனுக்குத்) துன்பத்தை யுண்டாக்குகின்ற சொற்களை, பகரலுற்றது - (அன்னம்) சொல்லத் தொடங்கிற்று, எ-று.

(க - து.) அன்னமானது நளனுள்ளத்து நாணமுங் கிருபையு மகிழ்ச்சியுந் தோன்றிடச் சில்மொழிகூறிப் பல துயரமொழிகூறத் தொ டங்கிற்று என்பதாம்

ஒல்கல் - அசைதல், அது இங்கே நாணத்தை உணர்த்தினின்றது. முன்னிலையிலிருந்து நிந்தித்தலால் நாணமும், அதன் வருத்தத்தைக் காணுதலால் கருணையும், அது கற்ற வல்லோர்போலப் பேசுதலால் மகிழ்ச்சியும் அரசனுக்குண்டாயின. சில மொழிகளாயினும் நீதிநூலின் பலபொருள்களைத் தழுவிச் சுருங்கச் சொல்லலை விளங்கவைத்தல் முத

லிய வழக்கமைந்து நிறைகையால் 'அல்கலின் மொழிசில' என்றார். "அல்கலுடை சுருங்கல் வைகல்" இதனாலறிக. (௬௬)

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் முன் கூறப்பட்ட துயரமொழிகள் சொல்லப்படுகின்றன.]

பெருகியமூப்பினிற்றளர்ந்துபேதுற்
றிருமுதுகுரவருமென்செய்கிற்பரோ
கருவுயிர்த்தயர்வுறுகாதற்பேடையுள்
ளுருகுமேயென்னநெட்டுயிர்ப்புவீங்கிற்றே

(இ - ள்.) பெருகிய மூப்பினில் தளர்ந்து - நிறைந்த முதுமையால் மெலிந்து, பேது உற்றும் - மதிமயக்கங் கொண்டிருக்கின்ற, இரு முது குரவரும் - (என்னுடைய) தாயுந் தகப்பனும், என் செய்கிற்பரோ - (இனி) யாது செய்வரோ, கரு உயிர்த்து - கருப்பத்தை யீன்று, அயர் உறு - சோர்வடைந்திருக்கின்ற, காதல் பேடை - (என்மேல்) அன்புடைய மனைவியானவள், உள் உருகுமே என்ன - மனமுருகுவாளோ என்று, நெடு உயிர்ப்பு வீங்கிற்று - பெருமூச்சு விட்டது, எ-று.

(க - து.) அரசனே! என் தாயுந் தகப்பனும் என் செய்வார்களோ என்மனைவி மனமுருகுவாளே என்று அன்னம் சொல்லிற்று என்பதாம்.

'என்செய்கிற்பரோ' என்றதனால் நானே அவர்களுக்கு ஏக புத்திரனென்றும் இனி மூப்புத் துன்பத்தோடும் என்னை இழந்த துன்பமும் இனைகொடுப்பாரில்லாத துன்பமுங் கொண்டு இறந்துவிடுவாரென்றுஞ் சொல்லியதாயிற்று. 'கருவுயிர்த்தயர்வுறும்' என்றதனால் அவளீன்று அதிக காலங் கழிந்ததில்லையென்றும், 'உள்ளுருகுமே' என்றதனால் அந்துன்பத்தோடு இணைபெறாத துன்பமும் என்னை இழந்த துன்பமுங் கூடுதலால் எப்படிப் பிழைப்பாளென்றுங் குறிப்பித்தது.

அன்னைமூப்பழிதரவார்கொலாற்றுவார்
மன்னனென்றபடுத்தலும்வெருவிவாவியிற்
றுன்னியாங்கிருந்தபுள்சொற்றபோழ்தினி
லின்னலங்கடலுளாழ்ந்திறக்குமேகொலாம்

(இ - ள்) அன்னை - (என்னுடைய) தாயானவள், மூப்பு - முதுமையினாலே, அழிதரவு - வருந்துதலை, ஆர் ஆற்றுவார் - எவர் நீக்குவார், மன்னன் - இவ்வரசனானவன், எற்படுத்தலும் - (என்னைப்) பிடித்தவளவிலே, வாவியில் - தடாகத்திலிருந்து, வெருவி - அஞ்சிப்போய், ஆங்கு - அவ்விடத்தே, துன்னி - நெருங்கி, இருந்த - தங்கிய, புள் - பறவைகள், சொற்ற போழ்தினில் - (இச்செய்தியைச்) சொன்னபோது, இன்னல் - துன்பமாகிய, கடலுள் - சமுத்திரத்தினுள், ஆழ்ந்து இறக்குமே - அமிழ்ந்து (அவள்) இறந்துபோவாளே, எ-று.

(க-து.) அரசன் என்னைப் பிடித்துக் கொண்டானென்று பறவைகள் சொன்னவளவில் என்தாய் இறக்குமென்றனனஞ் சொல்லியது என்பதாம்.

ஆங்கென்றது விண்ணுலகத்தின் மானசத்தடாகத்தைச் சுட்டிநின்றது. ஒருவேளை ஏற்பட்ட துயரத்தை யாற்றுவார் கிடைக்கினும் புத்திரசோகத்தாற் சாவாதிரார் என்றதாயிற்று. (௬௮)

புல்லுவிட்டஞ்சிறைநெகிழினும்பொருந்
தல்லல்கூர்பெடையவர்யாங்குறுமென்றிற்
சொல்லருமபுட்குலங்கலுழுந்துன்பமாய்ந்
தெல்லையிற்றுயரொடுமிறக்குமேசொலாம்

(இ-ள்.) புல்லு விட்டு - தழுவுதலை விட்டு, அம் சிறை நெகிழ்நும் - (என்) அழகிய சிறைகளானவை விலகினாலும், பொருந்து - மனம்பொருந்தல், அல்லல் கூர் பெடை - துன்ப மிகுகின்ற (என்) மனைவியானவள், அவர் - என்னவர், யாங்கு உறும் என்றில் - எவ்விடத்தே வந்தாரென்று வினவில், சொல் அரு - (அதற்கு உத்தரம்) சொல்லமாட்டாத, புள் குலம் கலுழும் - பறவைக்கூட்டமானது அழாநிற்கும், துன்பம் - அத்துன்பத்திலே, ஆய்ந்து - (என்செய்தியை) ஆலோசித்திருந்து, எல்லை இல் துயரொடும் - அளவில்லாத துன்பத்துடனே, இறக்குமே - (அவள்) இறந்துபோவாளோ, எ-று. கொல் - ஆம் - அசைகள்.

(க-து.) என் மனைவியானவள் என் செய்தியைக்கேட்டிறந்து போவாளென்று அன்னஞ் சொல்லியது என்பதாம்.

புல்லுதல் என்கிற தொழிற்பெயர் இறுதிநிலைகெட்டு வந்தது. றிதும் பிரியப்பொருந்த இதற்கு இக்கொடியசெய்தியைச் சொல் வாமாயின் இறந்துவிடுமென்று சொல்ல நாவெழாமல் அழுமெனக். அவ்வழுகையே அச்செய்தியைக் குறிப்பித் துணர்த்துகிற உத்தரமாம்.

அனிச்சமென்மலரினுநொய்யவாயசிறைத்
தனிப்பெடையமைக்குமென்றளிர்க்கையாலயன்
றுனிப்படுபிரிவெனுஞ்சுடுசொலென்றலை
நினைத்துமுன்னெவ்வணநிலவக்கோட்டினான்

(இ-ள்.) அனிச்சம் என் மலரினும் - அனிச்சமென்னப்பட்ட பூவினும், நொய்ய - மெல்லிய, ஆய சிறை - தேடத்தக்க சிறைகளை உடைய, தனி பெடை - ஒப்பற்ற (என்) மனைவியை, அமைக்கும் - உண்டாக்குவதாகிய, மெல் தளிர் கையால் - மெல்லிய தளிர்போலும் கையினாலே, அயன் - நான்முகக்கடவுள், துனி படு - துன்பம் விளைதற்குக் காரணமாகிய, பிரிவு எனும் - பிரிவென்கின்ற, சுடு சொல் - சுடாநின்ற சொல்லை, நினைத்து - கருதி, முன் - முன்னே, என் தலை - எனது தலையில், எவ்வணம் - எவ்விதமாக, நிலவ கோட்டினான் - விளங்க எழுதினான், எ-று

(க-து.) பிரமனெப்படிக்கு என்தலையி லெழுதினன் என்பதாம்.

“தனிப்பெடையமைத்த” என்ப பாடங்கூறிற் பெடையைப் படைத்தபின் அதனைப்படைத்தா னென்பது தோன்றுதலாலே முறை பிறழ் வென்னுங் குற்றந் தங்கும். ‘அனிச்சமென்மலரினும்’ என்றமை

யாலும், 'மென்றளிர்க்கையால்' என்றமையாலுங் காரணமாகிய கைக்கும், காரியமாகிய பெடைக்கும் மென்மையுந் தண்மையுஞ் சொல்லப்பட்டன. மெல்லிய தளிர்க்கையாகிய காரணத்திலிருந்து சுடுசொல் லெழுதலாகிய பகையான காரியம் பிறந்ததைச் சொல்லுதலால் உ - வது தகுதியின்மையணி. (௭௦)

வீழுமெனப் பிடித்தவிக் கொடுஞ்சொன் மென்னிறத்
தாழ்சிறை மடப்பெடை செவியிற் சார்தலு
மாழ்துயர்க் கடலிடை யாழ்ந்தி யானிலாப்
பாழ்படு திசையெலா மருண்டு பார்க்குமே

(இ - ள்.) வீழும் - (தன்னால்) இச்சிக்கப்பட்ட, என் பிடித்த - என்னைப் பிடித்த, இக் கொடுஞ் சொல் - இக் கொடுமையை யுணர்த்துகின்ற சொல்லானது, செவியில் சார்தலும் - (தன்) காதில் சேர்ந்தவுடனே, மென் நிறம் - மென்மையை ஒளிபொருந்திய, தாழ் - நீண்ட, சிறை - சிறைகளையும், மடம் - பேதைமையையுமுடைய, பெடை - (என்) மனைவியானவள், ஆழ் - ஆழம்பொருந்திய, துயர் கடலிடை - துன்பமாகிய கடலுள்ளே, ஆழ்ந்து - முழுகி, யான் இலா - நான் இல்லாமையால், பாழ் படு திசையெலாம் - பாழுடைந்த திக்குகளனைத்தையும், மருண்டு பார்க்குமே - மயங்கிப் பார்ப்பாளே, எ-று.

(க - து) என் மனைவியானவள் துன்பக்கடலுள்ளே மூழ்கி நானில்லாமையால் பாழுடைந்த திக்கனைத்தையும் மயங்கிப் பார்ப்பாளென்றன்னஞ் சொல்லியது என்பதாம்.

'திசையெலாம்' என்றதற்குக் கிழக்காதி யெட்டும் மேலுங் கீழும் ஆகிய பத்துத் திசைகளுங் கொள்க. இப்பறவை யொன்றில்லாமையால் திசைகளெல்லாம் பாழ்படுமோ வெனின் அத்திசைகளில் மற்றெல்லாப் பொருள்களு முண்டாயிருந்தும் தன்னை யமிழ்த்தியது சமுத்திரமென்கிறபடி உயிர்த்துணைவ னில்லாமையினாலே பாழ்பட்டனவாகத் தோன்றுமென்க. (௭௧)

பிரிவெனுமழல் சுடப் பெடையிறக்குமே
யரிதினிற் பெற்றவெம் பார்ப்பெலா மயர்ந்
திரைபெறாக் குடம்பையு ளரற்றியெய்திய
பரிவினிற் சாமெனப் பதைத்துச் சோர்ந்ததே

(இ - ள்.) பிரிவு எனும் அழல் சுட - பிரிவென்கின்ற நெருப்பானது (தன்னைச்) சுட, பெடை இறக்குமே - (என்) மனைவியானவள் இறந்துபோவாளே, அரிதினில் பெற்ற - அரிய தவத்தினாலே ஈன்ற, எம் பார்ப்பெலாம் - எம்முடைய குஞ்சுகளெல்லாம், அயர்ந்து - தளர்ந்து, இரை பெறா - இரையை எடுக்காமல், குடம்பையுள் - கூண்டிலுள்ளே, அரற்றி - கூவி, எய்திய பரிவினில் - (தமக்கு) நேரிட்ட துன்பத்தினாலே, சாம் என - இறந்துபோமென்று, பதைத்து சோர்ந்தது - துடித்து (அன்னம்) மூர்ச்சித்தது, எ-று.

(க-து.) பெண்சாதி பிள்ளைகள் இறக்குமென்றன்னம் மூர்ச்சித்தது என்பதாம்.

(க - து.) அரசன் அன்னத்தை விட்டான் என்பதாம்.

என்றலே பிடிக்கப்பட்டமையால் இப்பறவைக்கு இப்படிப் பட்டதுன்பம் விளைந்ததென்று அரசனுக்கு வியாகுலம் உண்டாயிற் றெனக. 'நோக்குறு மோகமே பிடித்ததன்ன' என்றமையால் உன்றற் சொல்லப்பட்டபடி பொன்னுக்காக உன்னைக் கொல்லுதற்குப் பிடித் திலே னென்றதாயிற்று (எச)

அன்னத்தைக்கண்ணுற்றபடலம் முற்றிற்று

---

## அன்னத்தைத் தூதுவிட்ட படலம்.

அன்னமானது நளன் தன்னை யாதொரு துன்பமுஞ் செய்யாமல் விடுத்ததைப்பற்றி அவனிடத்து வந்து தமயந்தியின் அழகு முதலியவற்றைச் சொல்லியதையும், அவனிடத்து விடைபெற்று அவளிடத்துப் போய் அவளை அவனுக்கு மனைவியாக இசையும்படிச் செய்ததையும் சொல்லுகின்றது

[முன்படலத்திலே தமயந்தியும் நளனும் ஒருவர் குணங்களை யொருவர்கேட்டு வருந்தின விதமும், அவன் அவ்வருத்தந் தொலைந்து பூங்காவனத்திற் சென்றதும் அங்கே தெய்வவன்னத்தைப் பிடித்துவிட்ட விதமுஞ் சொல்லி, இந்தப்படலத் தில் அவ்வன்னம் அரசனிடத்துவந்து தமயந்தியினழகைப் புகழ்ந்து அவனால் தூதுவிடப்பட்டுப் போய் அவளுடன்பாடு பெற்றுவந்த விதத்தைப் புணர்த்தத் தொடங்கினார். அவற் றுள் இப்பாட்டால் அன்னந் தன்னிடத்திற் சோர்ந்தமை சொல்லப்படுகின்றது ]

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிறைவடங் கிடந்து சுணங்குபூத் தொளிரும் பேரிள
வனமுலை திளைப்ப, நறவுகொப் புளிக்குந் தெரியல்சூழ்
மார்ப னாண்மலர் பொருவுமென் கரத்திற், றுறவுகொண்
டெழுந்த பொலஞ்சிறை யன்னந் தொல்வினைத் தொடர
றுத்தென்ப, நிறைநடற் றிளைக்கு மவரினிற் புற்று நீடினா
வாவிபுக் கதுவே.

(இ - ள்.) நறவுகொப்புளிக்கும் - தேனைக் கக்குகின்ற, தெரியல் சூழ் - பூமாலையினால் சூழப்பட்ட, மார்பன் - மார்பையுடைய நள மஹாராஜனானவன், பிறை வடம் கிடந்து - சந்திரஹாரமானது தங்கி யும், சுணங்கு பூத்து - தேமலானது படர்ந்தும், ஒளிரும் - விளங்கப் பெற்றுள்ள, பேர் இள வனம் முலை திளைப்ப - பெருமையு மிளமையு மழகும் பொருந்திய (தமயந்தியினுடைய) முலைகளை அனுபவிக்கும் படியாக, நாள் மலர் பொருவும் - அன்று பூத்த தாமரைமலர்போ லும், மெல் கரத்தின் - மெல்லிய (அவன்) கையினின்றும், துறவு கொண்டு - நீங்கி, தொல் வினை தொடர் அறுத்து - முன் செயலது

சம்பந்தத்தை யொழித்து, எழுந்து - புறப்பட்ட, பொலன் சிறை - பொன்மயமாகிய சிறைகளை யுடைய, அன்னம் - அன்னமானது, (துறவுகொண்டு) - துறவறத்தைக் கொண்டு, தொல் வினை தொடா அறுத்து - பழவினையாகிய சங்கிலியைக் கட்டறுத்து, இன்பம் நிறை கடல் - பேரின்பக்கடலில், திளைக்கும் அவரின் - முழுகியோர் போல, இன்பு உற்று - இன்பத்திலே மிகுந்து, நீள் திரை வாவி - நீண்ட அலைகளையுடைய தடாகத்தினகம், புக்கது - சென்றது, எ-று.

(க - து.) அன்னமானது தடாகத்தினிடத்துச் சென்றது என்பதாம்.

சங்கரு பொன்னுருவாம்போழ் சிறிதும் பெரிதுமாகப் படாவது. '[illegible]றவடங்கிடந்து சுவல் பகுக்கும் தொளிரும்' என்றதனால் அவற்றால் விளங்குகிற மறைமங்கையர் முலைகள் போலாது தமயந்தி முலைகள் அவற்றை விளக்குமென்று அம்முலைகளினியற்கையழகின் சிறப்பைக் குறிப்பித்த தாயிற்று. [illegible] முலையை அணிமொழிந்த தொகை யாக்கி அப்படிப்பட்ட முலைச்சுமையுடையவளாகிய தமயந்தி யெனினு மாம். அப்படிப்பட்ட முலைகளை [illegible] உரியது அரசனது நறவு [illegible] தெரிய [illegible] யாதலால் அதனை எடுத்துக் கூறினார். அவ்வன்னம் [illegible] தைமையாகத் தமயந்தியைக் [illegible] மாகக்கப் பட்டது. [illegible] துறவுகொள்ளுதலாகிய [illegible] விட்டு நீங்குதல், [illegible] என்கிற பற்றுக்களையொழித்தல். தொல்வினை [illegible] தொடரறு [illegible] பிடிபட்டுப் புலமை [illegible] யொழித்தல், [illegible] அரு தியாகத் தொடர்ந்து [illegible] வருகிறதைத் 'இன்ப நிறைகடல்' என்றார் உண்மையறி [illegible] பாட்டுகள் பெரும்பாலும் [illegible] குறிக்குஞ் சொல்லாகுமாறுஞ் [illegible] விளக்கங்களும், [illegible] எழுச்சிக்குத் திகட்டு [illegible] ஆசிரியவிருத்தங்கள். (௬)

[இதுமுதல் அன்னம் விடைபெற்றபின்பு நிகழ்ந்ததைச் சொல்லப் படுகின்றது.]

பொன்னிறத் தூவிப் பவளவாய்ச் செங்காற் பொற்புறு பசியசூட் டரச, வன்னமெய் யுதறிச் சிறையுளர்ந் தயலகு முன்னக்குழாத் திடைவதி தரலும், கன்னியி னிரதோ ளிறைகரந் தமூழ்க்குஞ் சிறையினைக் காண்டலும் வெருவி, முன்னைய தன்றெனத் திருந்தபுட் குலங்கள் முளரியந் தடத்தகன் றனவே.

(இ-ள்.) பொன் நிறம் தூவி - பொன்போலும் காந்திபொருந்திய இறகையும், பவளம் வாய் - பவளம்போலும் வாயையும், செம் கால் - சிவப்புநிறம்பொருந்திய அடிகளையும், பொற்பு உறு - அழகான் மிகுந்த, பசிய சூட்டு - பசுமைபொருந்திய உச்சிக்கொண்டையையு

முடைய, அரச அன்னம் - அரச வன்னமானது, மெய் உதறி - தன் னுடம்பை (சிலிர்த்து) உதறி, சிறை உளர்ந்து - சிறைகளை (மூக்கினாலே) கோதிக்கொண்டு, அயல் சூழ - (தன்னைச்சுற்றி) பக்கத்திலே வந்து சூழ் ந்த, அன்னம் குழாத்து இடை - அன்னங்களது கூட்டத்தினது நடு வில், வதிதரலும் - தங்கியவளவில், இருந்த புள் குலங்கள் - (அங்கு) இருந்த அப்பறவைக் கூட்டங்களானவை, கல் நவில் - மலைபோலச் செய்யப்பட்ட, திரள் தோள் - உருண்ட தோள்களையுடைய, இறை கரத்து அழுந்தும் - அரசனது கையிலே அழுந்திய, சிறையினை காணலும் - (அதன்) சிறகுகளைப் பார்த்தவளவில், முன்னையது அன்று என்று - அரசனால் தொட்டுக் கட்டப்பட்ட அரசவன்னம் அன் றென்று நினைத்து, வெருவி - அஞ்சி, முளரி தடத்து - தாமரையை யுடைய தடாகத்தினின்றும், அகன்றன - நீங்கிப்போயின, எ-று.

(க-து) தடாகத்தி லிருந்த வன்னங்களானவை இவ்வன்னம் முன்னைய தல்லவென்று நீங்கிப் போயின வென்பதாம்.

மெய்யுதறல் புழுதி உதிர்தற்கு, சிறையுளர்தல் இளைப்பாறுதற்கு. அரச வன்னமாதலால் பறவைக் கூட்டத்து நடுவே தங்கிய தெனக் முன்னைய நம்மின [illegible] இது வேறு பறவையென்று நினைத்தன வென்பதாயிற்று. ஆகவே வேற்றுப் பறவையைக் காணும் போது அஞ்சிப் பறந்துபோதல் பறவைகளுக்கியல்பாதலால் 'வெரு வின' என்று பறவையின் சாதித் தன்மையைச் சொல்லுதலால் தன் மை நவிற்சியணி. (உ)

[இதுமுதல் அவ்வன்னம் அரசனிடத்துப் [illegible] மீண்டுவந்து பேசத் தொடங்கினமை சொல்லப்படுகின்றது]

புள்ளின மிரிய மதுக்குடம் விரிந்தாற் போலுமென்
மலர்நறும் பொருட்டி, னுறையுறை யன்னங் கொலைத்தொ
ழில் சிறிது முறுபறி லிறையெனத் தேறிக், கள்ளவிழ்
கமல மலரென வகன்ற கரத்தினின் மீட்டும்வந் தெய்தி,
யள்ளிலை நெடுவே லண்ணற னருகி லதிசய மிகவிளைத்
துரைக்கும்

(இ-ள்) புள் இனம் இரிய - பறவைகளது கூட்டமானது அஞ்சியோட (அதன்பின்), மது குடம் - தேன் குடமானது, விரிந்தால் போலும் மென் - வாய்மலர்ந்ததாயின் ஒக்குமென்னப்படுகின்ற, மலர் - தாமரைப்பூவினது, நறு பொருட்டினுள் உறை - பரிமளம் பொருந் திய கொட்டையின்கண்ணே தங்கிய, அன்னம் - அவ்வன்னமானது, கொலை தொழில் - கொலையாகிய தொழிலில், சிறிதும் - சிறிதாயி னும், இறை - அரசனானவன், உருபறிலன் என தேறி - (என்னி டத்தே) செய்திலனென்று தெளிந்து, கள் அவிழ் கமலம் மலர் என - தேனையுடைய மலர்ந்த தாமரைப் பூவென்று (மயங்கியதுபோல), அகன்ற (முன்னேதான்) நீங்கப்பெற்ற, கரத்தினில் - கையின் கண்ணே, மீட்டும் வந்து எய்தி - திரும்பியும் வந்தடைந்து, அள் இலை நெடு வேல் - கூர்மைபொருந்திய இலைபோலும் நெடிய வேலை

வரும் என்னும் உயர்வு சிறப்பும்மை தொக்கது. நூலோரை மனுமுத லியோரென்று கூறி அவர் வேட்டைமன்னவர் தொழிலென்ப ரென் னுமாம். மிருகங்கள் பயிர்முதலியவற்றை யழித்தலாலும் பறவை கள் மலமூத்திராதிகளாலே பூஞ்சோலை பூந்தடாக முதலியவற் றைக் கெடுத்தலாலும் அவற்றைக் கொல்லுதல் குற்றவாளியைத் தண்டித்தல்போலு மாதலால் அரசர்க் குரியதென்று அறநூல் கூறு மென்க. 'புடவியில் விடுத்தலின்' என்றதனுல் எனக்கொடுப்பான் அரிய பொருளைக் கருதிச் சம்பாதிப்பதன்றி அவை யெளிதிற் கிடைப் பிற கைவிடுவா ரொருவருமில்லாத பூமியி லென்றதாயிற்று. விடுப் பதற்குக் காட்டியது, பேரன்பென்று எப்படியிருந்தாமெனிற் புகை யினுலே நெருப்பை யறிதல்போல அறநூல் விதியைய நோக்காது என்னயாவைநோக்கி விடுதலால் அன்பிருந்த தென்றதாயிற்று. ஏகாரம் - தேற்றப்பொருளில் வந்தது. அரசனுக்கிய உபமேயத்தை ஐங்கணைக் கிழவனுக்கிய உபமானச்சொல்லினலே யாருபெயராகச் சொல் லுதலால் உருவகவுயர்வுநவிற்சி யணி. அரச னிடுகை யிங்கே சிறப் பித்ததற்கு அவன் வடிவமேயன்றிச் செய்கையு மழகிதென்பது கருத்தாம். (சு)

[இதனுலே ஆயினை நீ வேண்டிய கேள்வரந் தருவேனென்று நளனுரைத்த உத்தரஞ் சொல்லப்படுகின்றது]

வருந்துமுன் புகன்ற கொடியவென் மொழியின் வரு
பிழை யனைத்தையு மின்னே, திருந்தலர்க் கடந்தோய் மகி
ழுமா செய்து திருத்துவ னின்றுசெய்வோன் வெய்தா,
விரிந்ததன் கதிரி னலைகட லுடுத்த மேதினி யிடத்தமைபைங்
கூழ்கள், கரிந்தன தளிர்ப்ப வெள்ளிவீ ழன்ன தண்மழை
பொழிவது கடுப்ப

(இ - ள்.) திருந்தலர் கடந்தோய் - பகைவரை வென்றவனே!, முன் - நான் பிடிபட்டிருந்தபோது, வருந்த - (நீ) வருந்தும்படி, புகன்ற - சொல்லப்பட்ட, என் கொடிய மொழியின் - எனது கொடி யதாகிய சொல்லினுல், வரு பிழை அனைத்தையும் - வந்த குற்றமுழு தையும், மகிழுமா - (வருந்திய நீ) மகிழும்படியாக, செய்து - (ஒரு பெரியவுபகாரத்தைச்) செய்து, அலை கடல் உடுத்த - அலைகளையுடைய கடலை மருங்கிடக்கொண்ட, மேதினி இடத்த - பூமியிலுள்ளனவா கிய, பைங்கூழ்கள் - பயிர்களானவை, (வருந்த - வருந்தும்படி,) இனம் செய்வோன் - சூரியனுனவன், வெய்து ஆ - கொடிதாக, விரிந்த தன் கதிரின் - விரிக்கப்பட்ட தனது கிரணத்தினுல், (வரு பிழையனைத் தையும் - வந்த குற்றமுழுதையும்,) கரிந்தன - வாடிய அப்பயிர்கள், தளிர்ப்ப - செழிக்கும்படியாக, வெள்ளி வீழ் அன்ன - வெள்ளி விழு துகள்போலும், தண் மழை - குளிர்ச்சியையுடைய மழையை, பொழி வது கடுப்ப - பொழிவதுபோல, இன்னே திருத்துவன் - (நான்) இப் போதே திருப்பேன், எ-று.

(க - து.) அரசனே! நான்செய்த குற்றத்தை நீர் மகிழும்படி தீர்ப்பேனென் றன்னஞ்சொல்லியது என்பதாம்.

வரசருமபோலனறி விசேடமாகப புரததலெனினுமாம். பறவை யென்னும் படாகக்கைப்பெயா தன்மையில்வந்தது இடவழுவமைதி. உடமபு நிலையாமைபறறி ஒல்லையினென்றது. "மறறறிவாநல்வினை யாமிளைய மென்னுது, கைததுண்டாம போழ்தே கரவா தறஞ்செய்மின, முற்றியிருநத கனியொழியத் தீவளியா, னைசாயுதிாதலு முண்டு" இதனுலறிக. இயறறுதி, அருடி என்னு முன்னிலை வினை முறறுகள ஏவறபொருளில் வநதன. ஆாததியெனகிற வடமொழி அருத்தியெனத் தறபவமாயிறறு, அதாவது தன்னுற் செயயபபட்டதைப் பினனே நீதெனறு அறிநது வருநதுதல புலலிய பறவை அல்லதுறறழுநத வீரும எனறவறருல் அவவுபகாரஞ் சிறிதா யிருந்தாலும என வருந்தத நோககிட பெரிதாகப் பாவிததது ஏறறுக்கொளளுதல உனக்குக் கடனு மெனறதாயிறறு. (ஙா)

[இதனுல் அனனம் தனசொலலை விருமபிக கேட்கவேண்டு மெனல் சொலலப படுகினறது.]

பொனனினிற செயத வள்ளவா யமுதம பூவையைக்
கிள்ளையை யருததிக, சனனலி னமிழ்திற் கனிநதமென்
சொறகள் பயிறறியுங் கேட்டுளங களிபபாா, மன்னவர் ம
ன்ன நின்னுளந் தேரு மடமொழி யாயினு மீதோ, ரனன
மென் சொலலெனு றதிசயஞ் சிறபப வகமலாந் தினிது
கேட டருளாய

(இ-ள்.) பொனனினில் செயத - கனகததினுலே செயயபபட்ட, வள்ளவாய அமுதம - கிண்ணததிலுளள அமிாததை, பூவையை - நாகணவாயப புளளையும, கிளளையை - கிளியையும, அருததி - குடிபபிதது, கனனலின - சாககரையினும, அமிழதின - அமிாததி னும், கனிநத மெல சொறகள - மதுரமுதிாநத மெலலிய சொறகளை, பயிறறியும் - கறபிததும, கேட்டு - (அவை பேசக) கேட்டு, உளம் களிபபாா - (உலகததாா) மனமகிழுவாா (ஆகையால), மன்னவா மனன - ராஜாதிராஜனே!, ஈது - இச்சொல்லானது, நின உளத்து ஏரு - உனது மனததில் ஏறமாட்டாத, மடம் - அறியாமையோடு கூடிய, மொழி ஆயினும் - சொலலாயினும, ஓா அனனம் - ஓரன்னததினது, மெல் சொல எனறு - மெல்லிய மொழியெனறு, அதிசயம் சிறபப - ஆச்சரியமானது சிறநதுதோனற, அகம மலாந்து - மனமகிழ்ந்து, இனிது கேட்டு அருளாய - (நீ) இனிதாகக் கேட்டருளு, எ-று.

(க - து.) தனசொல்லை விரும்பிக கேட்கவேண்டுமென்று அன்னஞ் சொல்லியது எனபதாம்.

'பயிற்றியுங் கேட்டுளங் களிப்பாா' என்றதனுல் அம்முயறசி செய்யாதிருகக அவை தாமாகவே வநது பேசுமாயின் யாாதான செவி கொடாா எனபது தோனறுகினறது. 'நினனுளததேரு மடமொழியா யினும்' என்றதனுல் என்சொல் பயனறறதாகத் தோன்றினும் பூவைககிளிகளின சொற்களபோல உன செவியறிவிற கினபஞ் செய்

தற்பொருட்டாவது இனிதாகக் கேட்கவேண்டு மென்றதாயிற்று. கேட்டருளாய் என்கிற முன்னிலை யெதிர்மறை வினைமுற்று உடன்பாட்டுப் பொருளில் வந்தது, வேண்டிக்கோடற் பொருள் பற்றி. இதற்கு "விதிசெயயா யென்னும் முன்னிலை வினைச்சொற் செய்யென் கிளவியாகிட னுடைத்தே" என்பதாம். அப்பரவைகளின் சொல்லிலே தீஞ்சுவை மிகுவித்தற்குக் காரணமாகாத பொன்னினிற் செய்த வள்ளவாயமுதம் அருந்துதலை அதற்குக் காரணமாகச் சொல்லுதலாற் கற்றோ நவிற்சியணி. உலகத்தார் பூவைக்கிளிகளின் சொல்லைக் கேட்கலாகிய பொதுப்பொருளால் அன்னத்தின் சொல்லையுங் கேட்கலாமென்னுஞ் சிறப்புப்பொருளைச் சாதித்ததால் வேற்றுப் பொருள் வைப்பணி. (எ)

[இதுமுதலிய பாட்டுக்களால் முன்னே அடிகள் கேட்டருடியென்று சொல்லப்பட்டதில் அதையென்று சுட்டப்பட்டது சொல்லப்படுகின்றது.]

குடவளை யினங்கள் வயிறுளைந் தீன்ற குருமணி கருவென வயிர்த்து, மடன்முறுக் கவிழுங் கமலமென் பொகுட்டில் வரிச்சிறைக் குருகடை கிடக்கும், தடநிறை வாளை பகட்டின முகளுந் தண்பணை விதர்ப்பநா டுடையோன், விடுசுடர் பரப்பி விளங்குபொற் கழலான் வீமனென் றுளனொரு வேந்தன்

(இ-ள்) குடம் வளை இனங்கள் - குடம்போலும் சங்கினங்களால், வயிறு உளைந்து ஈன்ற - (தம்) வயிறு நொந்து தரப்பட்ட, குருமணி - நிறம்பொருந்திய முத்துக்களை, கருவு என அயிர்த்து - முட்டைகளென்று மயங்கி, மடல் முறுக்கு அவிழும் - இதழ்களது கட்டவிழ்ந்த, கமலம் - தாமரைப்பூவினது, மெல் பொகுட்டில் - மெல்லிய கொட்டையினிடத்தே, வரி சிறை குருகு - நீட்சிபொருந்திய சிறைகளையுடைய நாரைகளானவை, அடை கிடக்கும் - அவயங்காக்கப்பெறுகின்ற, தடம் - தடாகத்தையும், நிறை வாளை - பருத்த ஆண் வாளைகளானவை, பகடு இனம் - எருமைக்கடாக்களுடைய இனத்தின்மேல், உகளும் - குதிக்கப்பெறுகின்ற, தண் பணை - தண்ணிய கழனிகளையும் உடைய, விதர்ப்பநாடு உடையோன் - விதர்ப்ப தேசத்தை உடையவனும், விடு சுடர் பரப்பி - வீசப்படுகின்ற கிரணங்களை விரித்து, விளங்கு - விளங்காநின்ற, பொன் கழலான் - பொன்னாலாகிய வீரக்கழலை யுடையவனும் ஆகிய, ஒரு வேந்தன் - ஓரரசனானவன், வீமன் என்று உளன் - வீமனென்று சொல்லப்பட்டு இருக்கின்றான், எ-று.

(க-து.) விதர்ப்பதேசத்தை யாளும் வீமராஜனென்னுமோரரச னிருக்கிறானென்றது என்பதாம்.

விதர்ப்பநாட்டி னிலவளநீர்வளங்களைப் புகழ்தலால் வீமனது செல்வச்சிறப்பும், அவன் வீரக்கழலின் விளக்கத்தைச் சொல்லுதலால் அவனரசாட்சிச்சிறப்புஞ் சொல்லியவாறும். ஆகவே பின் அவன்

மகளைக்குறித்துச் சொலலப்படுஞ சம்பநதத்திறகு அவளைத் தனக்குத் தகுநதவளுகக கொளளுதற்கு அடிபபடை செயததாயிறறு. குருகு-நாளையெனபது "குருகுவன்டான மெனபகொயயடி நாளையினபோ" இதனுலறிக. அநநாளைகள முததுகளைத தம முடடைகளெனறு மயங்கலால மயக்கவணி. (அ)

அருந்தவத் தமன முனியருள் வரத்தா லாயிழை யர
ம்பையர் தமமின, முருந்திள முறுவ ளுகமங் கையரின்
முகிழ்முலைப் புவிமடங் தையரின, வருநதியு முவமை கூ
றுதற் கரிதா வனப்பொரு வடிவெடுத தனைய, கருந்தட
நெடுங்கட கதிர்முலைத் துவர்வாயக் கனனியை யருதினிற்
பயந்தான்.

(இ - ள.) அரு தவம - அரிய தவததையுடைய, தமன முனி - தமனமுனியினிடமும, அருள வரததால - அருளாற பெறபபட்ட வரததினுலே, ஆய இழை - ஆராயநதெடுககபபடட ஆபரணஙகளையுடைய, அரம்பையா தமமின - தெயவ மஙகையருளளும, முருநது இள முறுவல - மயிலிறகினடிபோலும சிறிய பலலுகளையுடைய, நாக மங்கையரின - நாகலோக மஙகையருளளும, முகிழ முலை - தாமரை யரும்புபோலும முலைகளையுடைய, புவி மடநதையரின - பூலோகதது மஙகையருளளும, வருநதியும - வருநதமுயறறும, கூறுதறகு - சொல லுதறகு, உவமை அரிதா - உபமானம இலலாததாக, வனபபு ஒரு வடிவு - அழகானது ஒரு (மஙகை) வடிவததை, எடுததால அனைய - எடுததாறபோலும, கரு - கரிய, தடம - விசாலம்பொருநதிய, நெடு கண் - நெடிய கணகளையும், கதிர முலை - காநதிபொருந்திய முலைகளையும, துவா வாய - பவளமபோலும வாயையுமுடைய, கனனியை - ஒரு பெணணை, அரிதினில பயநதான - அரியசெயலால (அவவீமராஜன) பெறறுன, எ-று

(க - து.) தமனமுனிவரததால வீமராஜன ஒரு பெண்ணைபபெற்றுன் என்பதாம.

'அருந்தவததமனமுனி' எனறதனுல் அவன மேலான வரததைத் தருதற்கு வலலவனெனபது குறிககபபடுகினறது. தமனமுனிவர மெனனுது தமனமுனியருள வரததாலெனறதனுலே அம்முனி தனக்குச் செய்த வழிபாடடின மிகுதியால் வீமன்மேற கருணை கூர்ந்து கொடுககபபெறற தென்றதாயிறறு. அரம்பையாககு 'ஆயிழை' என்றும், நாகமஙகையாக்கு 'முருந்திள முறுவல்' எனறும, புவிமடைந்தையாககு 'முகிழ்முலையெனறும்' அடைகள கொடுககபபடுதலால் அவ்வவ் வுலகததிற சிறநத அரசமகளி ரொன்றுகொளக. வருந்தியுமுவமை கூறலாவது அவா குணஙகளையெல்லா மாராயநது ஒருபுடை யொப்பாகக்கூறுதல். இங்கே அரிதெனறது இன்மைப்பொருளில் வநதது. வடிவெடுததா லெனபது ஈறுகெட்டு வநதது. மூன்றுலகங்களினும் உபமான மில்லாமையால் 'வனபபொருவடிவெடுததனைய' என்றது. கண்களு முலைகளும் வாயும் போகத்திற சிறந்தவையாதலால் அவை சிறப்பிததுச் சொலலப்பட்டன. அரசனுக்கு அவள்மே லாசை பிறப்

பிறத்தற்கு இன்னும் விவாகமில்லையென்பது தோன்றக் 'கன்னி' என்றது. அரிதினிற்பயத்தல் - நெடுங்காலம் மகவில்லையென்று வருந்தி நோற்றமையால். (கூ)

களைகடிந் தொதுங்கும் கடைசியர் நெடுங்கண் காவி
மென் மலரெனக் கருதி, விளரிவண் டினங்க ளலமரும்
கழனி விதர்ப்பர்கோன் றவத்தினிற் றோன்றி, முளரியந்
தவிசி னினிதுவீற் றிருக்கு முகிழ்முலை மதர்விழித் திரு
வே, தளிர்நலங் கவற்று மலத்தக மலர்த்தாட் டமயந்தி
யெனும்பெயர் தரித்தாள்.

(இ-ள்) முளரி அம் தவிசில் - தாமரைப்பூவாகிய அழகிய ஆசனத்தில், இனிது வீற்றிருக்கும் - இனிதாக எழுந்தருளியிருக்கின்ற, முகிழ் முலை - தாமரையரும்புபோலும் முலைகளையும், மதர் விழி - மதர்த்த கண்களையுமுடைய, திருவே - ஸ்ரீதேவியே, களை கடிந்து - (பயிரில்) களையைப் பிடுங்கி, ஒதுங்கும் - நடக்கின்ற, கடைசியர் - உழத்தியருடைய, நெடு கண் - நெடிய கண்களை, காவி மென் மலர் என கருதி - நீலோற்பலங்களுடைய மெல்லிய மலர்களென்று நினைத்து, விளரி வண்டு இனங்கள் - விளரி ராகத்தைப்பாடுகின்ற வண்டுகளுடைய இனங்களானவை, அலமரும் - சுழலுகின்ற, கழனி - கழனிகளையுடைய, விதர்ப்பர் கோன் - விதர்ப்பதேசத்தாருக்கு அரசனாகிய வீமனது, தவத்தினில் தோன்றி - தவத்தினாலே பிறந்து, தளிர் நலம் - தளிர்களின் சிறந்ததை, கவற்றும் - வருத்துகின்ற, அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பையுடைய, மலர் தாள் - செந்தாமரை மலர்கள்போலும் பாதங்களையுடைய, தமயந்தி எனும் - தமயந்தியென்கின்ற, பெயர் தரித்தாள் - பெயரைத் தரித்திருக்கிறாள், எ-று.

(க - து.) இலக்ஷ்மியே தமயந்தியென்னும்பெயரைத் தரித்திருக்கிறாள் என்பதாம்.

'கடைசியர் நெடுங்கண் காவிமென்மலரெனக் கருதி' என்று அந்நாட்டிலுள்ள சாதாரணமான மகளிரழகைச் சிறப்பிக்கவே அரசன் மகளாகிய தமயந்தியினழகு இத்தன்மையதென்று விளங்குமாறறிக. திருவேயென்னும் தேற்றேகாரத்தால் பெயர்மாத்திரமே வேறு மற்றைக் குணங்களிற் சிறிதும் வேறுபாடில்லை யென்றதாயிற்று. கண்களைக் காவிமலரென மயங்குதலால் மயக்கவணி. தமயந்தியென்னும் பெயரினாலே புகழ் பொருளினது தன்மையை ஒழித்து அல்பொருளினது தன்மையை ஆரோபித்தலால் வஞ்சகவொழிப்பணி. (கO)

[இதுமுதற் பதினைந்து பாட்டுகளால் அன்னம் அவ்வுபகாரப்
பொருளாகிய தமயந்தி தலைமயிர்முதல் அடியளவும்
புகழ்தலால், இதற்குக் கூந்தற் சிறப்புச்
சொல்லப்படுகின்றது.]

நீனிற முகிலோ பசியசை வலமோ நெடுந்திரை கொ
ழித்ததெள் ளறலோ, பானலங் கொண்ட பணிமொழித

**துவர்வாய்ப் பைந்தொடி கரியமென் கூந்தற், றேனின முரன்று துதைந்துதா தாடுஞ் சினைமலர்த் தொடையொடும் வேய்ந்து, நானமும் புழுகுங் கமழ்தர நீவி நள்ளிருள் குடியிருந் ததுவே.**

(இ-ள்) பால் நலம் கொண்ட - பாலினது தித்திப்பை (தன்னிடத்தே) கொண்ட, பணி மொழி - வணக்கம்பொருந்திய சொல்லையும், துவர் வாய் - பவளம்போலும் வாயையும் உடைய, பைந்தொடி - தமயந்தியினது, கரிய மெல் கூந்தல் - கருமை பொருந்திய மெல்லிய கூந்தலென்று சொல்லப்படுகிற பொருள், நீல் நிறம் முகிலோ - நீலநிறம் பொருந்திய மேகமோ, பசிய சைவலமோ - பசுமைபொருந்திய கொடிப்பாசியோ, நெடு திரை கொழித்த தெள் அறலோ - நெடிய கடலலைகளாலே கொழிக்கப்பட்ட தெள்ளிய கருமணலோ, தேன் இனம் - வண்டுகளின் கூட்டமானது, முரன்று - ஒலித்து, துதைந்து - நெருங்கி, தாது ஆடும் - மகரந்தத்தில் விளையாடப் பெறுகின்ற, சினை மலர் தொடையொடும் - கோட்டுப் பூக்களாலாகிய மாலையையும், வேய்ந்து - சூட்டப்பெற்று, நானமும் - கஸ்தூரியையும், புழுகும் - புழுகையும், கமழ்தர - பரிமளிக்க, நீவி - தடவப்பெற்று, நள் இருள் - பாதியிரவி னிருளானது, குடி இருந்தது - குடியிருக்கப் பெற்றுளது (அப்பொருள்), எ-று. ஏ - அசை.

(க - து.) அன்னம் தமயந்தி கூந்தற்சிறப்பைச் சொல்லியது.

வெள்ளைமேகத்தை ஒழித்தற்கு 'நீனிறமுகில்' என்றார். பசிய சைவலம் - முற்றியகொடிப்பாசி. நெடுந்திரை யென்றதனால் கடலலையென்பது பெறப்பட்டது. தெள்ளறலென்றதனால் மாசொழித்துத் தூயதாக்கப்பட்டமை தோன்றுகின்றது. "கொண்டலுங் கூந்தற்பனையுங் கொன்றைக்காயும் மிருளுந், தண்டலையுங் காமணலுஞ் சைவலமும் - வண்டினமுந், தண்குழலை யொப்பாம" என்றவாறே உபமானங்களாகிய முகில் முதலியவற்றில் ஐயந்தோன்றிற் றெனக் கூந்தலென் றறிந்தபின் அதனிடத்தே சந்தேகம் பிறக்குமோவெனின் இங்கே பெயர்மாத்திரங் கூந்தலென்னப் படுவதனறிப் பொருள் அம்மேகமுதலிய மூன்று ளொன்றென்பதே கருத்தாமென்க. இவ்வுரை பின் வருவனவற்றிற்குங் கொள்க. கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, புதற்பூ என்னு நான்கனுள்ளே கோட்டுப்பூச் சிறந்ததாதலிற் 'சினைமலர்' என்றது, அவை சண்பகம், மகிழ், புன்னை முதலியவாம். தொடையொடும் என்றதில் ஒடுவுருபு செயப்படுபொருளில் வந்தது, உருபு மயக்கம், "யாதனுருபிற் கூறிற் றாயினும் பொருள்செல் மருங்கின் வேற்றுமைசாரும்" என்பது விதி. தொடையொடு மென்னும் உம்மையால் மற்றைக் கொடிப்பூ முதலியனவுங் கொள்ளப்படும். நள்ளிருளென்றது சந்திரனது தேய்வுக்கும் வளர்ச்சிக்கும் நடுநாளாகிய அமாவாசையி னிருளெனினுமாம், ஒளிக்குமுன் நீங்காது விளங்கலால் குடியிருந்த தென்றது. இருந்ததுவேயெனக் குற்றியலுகரத்தின் முன் வகரவுடம்படுமெய் வந்தது. கூந்தலின் கருமையொளியை அப்படிப்பட்ட இருளாகக் குறித்தலாலே தற்குறிப்

பணியாம். முதல்வாக்கியத்தில் வந்த ஐயவணியும் இதுவுஞ் சேர்த லால் சேர்வையணி. (கக)

[இதனால் நெற்றிச்சிறப்பும் புருவங்களின் சிறப்புஞ் சொல்லப்படுகின்றன.]

கணகவர் வனப்பிற சிந்துரந் தீட்டிக கவின்செய்
பொன் னிறத்ததாய்ச சிறந்த, தண்பிறைக் கொழுந்தொ
ன் றுளதெனிற் றிலகத தையலவா ணுதலினை நிகாக்குந்,
தெண்கட லமிழ்திற் கனிந்தவந் தீஞ்சொற சேயிழை மு
கதிதொளிர் புருவம, வெண்கதிாக குடையி லிரதியு மத
னும வைத்தகை விலலிணை பொருவும.

(இ - ள.) கண் கவா வனப்பின - கணகளின் பாாவையை (தனனிடத்தே) இழுததுககொள்ளுகினற அழகையுடைய, சிந்துரம் தீட்டி - (திலகததை) எழுதபபெறறு, கவின செய் - அழகைச் செய் கினற, பொன் நிறததது ஆய - பொன னிறததையுடையதாகி, சிறந் த - உயாநத, தண பிறை கொழுநது ஒனறு - குளிாச்சிபொருநதிய ஓ ரிளமபிறையானது, உளது எனின - உளதாயின, தையல் - தமயந் தியினது, திலகம் - (சிநதுர) திலகததையுடைய, வாள நுதலினை நிகாககும - ஒளிபொருநதிய நெறறியை (அது) ஒககும, தெள கடல் அமிழதின - தெளிநிய பாறகடலினது அமிாதமபோல, கனிநத - முதிாநத, அம் தீ சொல - அழகிய மதுரமபொருநதிய சொற்களையு டைய, சேயிழை முகதது - தமயநதியினது முகததிடததே, ஒளிர் புருவம - விளஙகாநினற (இரணடு) புருவஙகளும, இரதியும மதனும் - இரதிதேவியாலும மனமதனாலும, வெள கதிா - சநதிரனாகிய, குடை யில - குடையினகணணே, வைதத - வைககபபடட, கை வில் இணை - (அவா) கை விலலிரண்டையும, பொருவும் - ஒததிருககும, எ-று.

(க - து.) நெறறிச்சிறபபும புருவஙகளின சிறபபுஞ்சொல்லியது என்பதாம்.

சிநதுரம அதனாலே செயயப்பட்ட திலகத்தை யுணாத்தலால் ஆகுபெயா. உளதெனினிகாககுமெனறதனால இபபோதுள்ள பிறைக் கு அபபடிபபட்ட திலகமும் பொனனிறமு மில்லாமையால் ஒவ்வா தென்றதாயிறறு. அபபடிபபட்ட பிறை ஒன்றுளதாயி னெனறத னாலும் நுதலினை நிகாக்குமென உபமேயததை உபமான மாககுத லாலும இலபொரு ளெதிாநிலையணி. மனமதனுக்குச் சந்திரன் குடை யாதலால் 'வெண்கதிாக்குடையில' என்றது தமயநதியின் முகத்தைச் சோந்த விரண்டு புருவஙகளையும் அககுடையைச்சோநத அவவிரண்டு விற்களாகக் குறிததலாலே தற்குறிப்பணியாம். (கஉ)

[இதனால் கண்களின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

குமிழ்மிசை மறிந்து குழையெதிர் நடந்து கொலைத்
தொழின் மறலியைப் பயிற்றி, யமிழ்தினின் விளர்த்து
ணஞ்சினிற் கருகி யையரி சிதறிமை தோய்ந்து, கமலமெ

ன் மலரை வனம்புகுத் தியவேற் கணணிணை மான்மரு ணோக்கந், தமதெனக் கவர்ந்து கொண்டவோ மடமான் றடங்கணின் செயலகவர்ந் தனவோ.

(இ - ள.) குமிழ் மிசை மறிந்து - குமிழமபூவினது மேறபக் கத்தினால் தடையுறறு, குழை எதிர நடந்து - குழையெனப்படுகின்ற காதணிக்கு முன்பாகச் சென்று, கொலை தொழில் மறலியை பயிறறி - கொல்லுதலாகிய தொழிலை யமனுக்குக கறபிததது, அமிழ்தினில் விளாதது - அமிர்தததைபபாாகிலும (சுறறிடம) வெளுததது, உள - நடுவில, நஞ்சினில கருகி - விஷததினும் கறுததது, ஐ அரி சிதறி - அழகிய ரேகைகள் சிதறப்பெற்று, மை தோயந்து - அஞ்சனததிலே முழுகி, கமலம என மலரை - தாமரையெனப்படுகிற பூவை, வனம் புகுததிய - காட்டிலே [நீரிலே,] போகுமபடிசெயத, வேல - வேல் போலும, கண இணை - (தமயநதியின) கணகளிரணடும, மான - மா னினது, மருள நோககம - மருடசிபொருநதிய பாாவையை, தமது என - தம்முடையதென்று, கவாநது கொண்டவோ - வெளவிககொண் டனவோ, மடம மான - தமயநதியினுடைய, தடம கணின செயல் - விசாலமபொருநதிய கணகளினது செயகையை, கவாநதனவோ - (அம மான கணகள) வெளவிக கொணடனவோ, எ-று.

(க - து.) கண்களின சிறபபுச்சொல்லியது எனபதாம

குமிழென்னு புபமானச சொலலால மூககென்னு முபமேயஞ் சொலலபபடுதலால் உருவகவுயா வு நவிறசியணி. மேனமூககி னிரு பக்கததிலுந தடையுணடு செலலமாட்டாமையால் 'மறிந்து' எனறது. எதிரநடநதெனறதனால குழை காதைச குழவிடபபடட வொருகா தணி யெனக. அனறெனின ஆகுபெயராகவி அதனையுடைய காதென று கொள்க, மறிதலும எதிாநடததலுங கணகளுககுச சுபாவமாத லால் தன்மைநவிறசியணி கொலைததொழில மறலியைப் பயிறறுத லிலலாதிருககப பயிறறுதற சமபநததததைக கறபிததலால தொடா புயாவுநவிறசியணி. இதனாலே கொலைசெயதலில யமனிலும வலி யன வெனனுமபொருள தொணிககினறது. அமிழதும நஞ்சுஞ் சேரத் துச சொலலபபடுதலால அவை பாறகடலிற பிறநத தேவாமிாதமும் ஆலாகலமுமாம. கமலததை வனததிலே புகுததலாகிய சமபநதத் தைக் கறபிததலால தொடாபுயாவுநவிறசியணி இது சிலேஷையை அஙகமாககொணடு வநதது. வேறகண் உவமைததொகையணி. மரு ணோககம் - அஞ்சியனபோற பாாததல். கொணடனவோ கவாந்தன வோ எனச சநதேகததைச சொலலுதலால ஐயவணி. இஙஙனம் பல வணிகளுஞ் சோதலால் சேரவையணியாம். (௬௩)

[இதனாலே கபோலங்கள் மூககு இவற்றின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

வேனிலவேள் வனப்பு நோக்குதற் கமைதத விளங் குகண் ணாடியோ வொளிரும், பானலங் கண்வா டீட்டிய விடந்த சாணையின் படிவமோ கபோலங், கான்வழிந் தொ

ழுகுஞ் சண்பகமலரைக் கடிந்துமென் குமிழினைத் துரந்
துள, ளூனையு முருக்கு மொழுகுபொற் கொடிமூக் குவ
மையா முரைக்குமா றரிதே.

(இ-ள்) ஒழுகு - நேர்மைபொருந்திய, பொன் கொடி - பொன்
மயமாகிய பூங்கொடி போல்பவளது, கபோலம் - கதுப்பென்று
சொல்லப்படுகிற பொருள்களானவை, வேனில் வேள் - வசந்தகாலத்
திற்குரிய மன்மதனுடைய, வனப்பு நோக்குதற்கு - அழகைப்பார்த்
தற்காக, அமைத்த - (நான்முகனால்) உண்டாக்கப்பட்ட, விளங்கு
கண்ணாடியோ - விளங்குகின்ற கண்ணாடிகளோ, ஒளிரும் - விளங்கா
நின்ற, பால்மை கண் - கருங்குவளை மலர்போலும் கண்களாகிய,
வாள் - (அவனுடைய) வாள்களை, தீட்டிய கிடந்த - தீட்டுதற் பொ
ருட்டுத் தங்கிய, சாணையின் படிவமோ - சாணைக்கல்லினுடைய வடி
வங்களோ, கான் - வாசனையானது, வழிந்து - பெருகப்பெற்று, ஒழு
கும் - நீண்ட, சண்பகம் மலரை - சம்பகப் பூவை, கடிந்து - கோ
பித்து, மெல் குமிழினை - மெல்லிய குமிழம் பூவை, துரந்து - துரத்தி,
உள - (கண்டோர்) உள்ளத்தையும், ஊனையும் - உடம்பையும், உருக்
கும் - உருக்காநின்ற, மூக்கு - (அவளது) மூக்குக்கு, உவமை - உப
மானத்தை, யாம் - நாம், உரைக்கும் ஆறு - சொல்லும் வழி, அரிது -
இல்லை, எ-று.

(க - து.) கபோலங்கள் மூக்கு இவைகளின் சிறப்புச் சொல்லி
யது என்பதாம்.

ஒழுகு பொன் - மாற்றுயர்ந்து இளகிய பொன்னெனினுமாம். மன்
மதன் அழகிற்சிறந்தவனாதலால் 'வனப்பு நோக்குதற்கு' என்றும், கண்
ணின் அருகே யிருக்கையால் 'கண்வாள் தீட்டிய' என்றும், சொல்லிற்று.
காமன் சம்பந்தமான பொருள்களெல்லாங் காமநோயை வளர்க்கு
மாதலால் அவன் சம்பந்தமான கண்ணாடியுஞ் சாணைக்கல்லு மென்
றது. கபோலங்களை அப்படிப்பட்ட கண்ணாடிகளுஞ் சாணைக்கல்லு
களு மாகக் குறித்ததலாலே தற்குறிப்பணி. இதனை யுறுப்பாகக்
கொண்டு ஐயவணி வந்தது. சண்பகமணம் மூக்கின்சுவாசத் திருக்
கின்றமையால் அதற்கு 'கான்வழிந்து' என்கிற அடை கொடுக்கப்
பட்டது. சண்பகத்தைக் கடிதலுங் குமிழைத் துரத்தலு மில்லா
திருக்க அவைகளைக் கற்பித்ததலால் தொடர்புயர்வு நவிற்சியணி. உவ
மை இல்லை யென்றதனால் உபமானந்தொக்க தொகையுவமையணி.
இப் பலவுஞ் சேர்தலால் சேர்வையணியாம். (கசு)

[இதனால் காதுகள் வாய் பல்வரிசைகள் சொல்
இவைகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

வள்ளைவார் காது நோக்கின ருள்ள மகிழ்ந்தினி தாடு
பொன் னூசல், கள்ளவி ழாம்பற் செய்யவாய பவளக் கடி
கைவா ணகையொளிர் தரளந், தெள்ளிதிற் கோத்துப்
பவளவள் ளத்திற் சேர்த்திய தாகுமஞ் செறிசொல், கின்

ளையங் கிளவி குயின்மொழி யலதி யாதெனக் கிளக்கலா வதுவே.

(இ-ள்.) வள்ளை வார் காது - வள்ளையிலைபோல்கின்ற நீட்சி பொருந்திய (அவள்) காதுகளானவை, நோக்கினார் உள்ளம் - பார்த்தவருடைய மனமானது, மகிழ்ந்து - களித்து, இனிது ஆடு - இனிதாக ஆடப்பெறுகின்ற, பொன் ஊசல் - பொன்னூஞ்சல்களாகும், கள் அவிழ் ஆம்பல் - தேனையுடைய மலர்ந்த அல்லிமலர்போலும், செய்ய வாய் - சிவப்பு நிறம்பொருந்திய (அவள்) உதடானது, பவளக்கொடி கை - பவளத்துண்டாகும், வாள் நகை - காந்திபொருந்திய (அவள் வாயைச்சேர்ந்த) பல்வரிசையானது, ஒளிர் தரளம் - விளங்குகின்ற முத்துக்களை, பவள வள்ளத்தில் - பவளக் கிண்ணத்தினுள்ளே, தெள்ளிதின் கோத்து சேர்த்தியது ஆகும் - தெளிவுடையதாகக் கோத்துச் சேர்க்கப்பட்ட கோவையாகும், அம் செறி சொல் - அழகானிறைந்த (அவள்) சொல்லுக்கு, கிள்ளை கிளவி - கிளியினது சொல்லும், குயில் மொழி - குயிலினது சொல்லும், அலது - (உபமானங்கள்) அல்லாமல், யாது என - (வேறே) யாதென்று, கிளக்கல் ஆவது - சொல்லுதல் ஆகும், எ - று.

(கீ - து.) செவி வாய் பல்வரிசை சொல் இவைகளின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

வள்ளைவார்காது — உவமையணி. காதுகள் தோள்களினளவு தொங்கி ஊசல்போல அசைவுறுதல் கண்டோர்மனம் தம்மைச்சேர்ந்து களிகூர்ந் திருக்கப்பெறுதலாலே 'நோக்கினருள்ள மகிழ்ந்தினி தாடு பொன்னூசல்' என்றது. காதை அப்படிப்பட்ட ஊசலாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. 'கள்ளவிழாம்பல்' என்றதனால் ஆம்பலிலே தேன் போல வாயிலே நீருஞ்சுவைநீர் கொள்ளப்படும். உதட்டிலே பவளத் துண்டையும், வாயைச்சேர்ந்த பல்வரிசையிலே பவளக்கிண்ணத் தைச் சேர்த்த முத்துக்கோவையையும் ஆரோபித்ததனால், அவ் விரண்டும் உருவகவணிகள். உபமானத்திற் கேற்கப் பல்வரிசைக்கு வாயைச்சேர்ந்த வென்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. சொல்லுக்கழகு சுருங்கச்சொல்லல் முதலியன. கிள்ளையங்கிளவி சுரமபற்றியுஞ் சொற் பற்றியும் உபமானமாதலாலும், குயின்மொழி சுரமொன்றைப்பற்றி உபமானமாதலாலும் அதுமுன்னும் இது பின்னும் வைக்கப்பட்டன.()

[இதனாலே முகத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

ஒழுகொளி விரிந்த கதிர்மணி வண்ண னுந்தியந் தாமரை யுறைவோன், முழுமதிக் கலையு ணிறைந்தபே ரழகை மொண்டுகொண் டரிபரந் தகன்ற, மழைமதர் நெடுங் கட் டமயந்தி வதனம் வகுத்தனன் கரத்தினு லெடுத்த, புழைவழித் தோன்றும் விசும்பினை யன்றோ களங்கமென் றின்னமும் புகலவார்.

(இ - ள்.) ஒழுகு ஒளி - நீள்கின்ற காந்தியையுடைய, விரிந்த கதிர் மணி வண்ணன் - பரந்த கிரணங்களையுடைய நீல மணிபோ

னும் நிறத்தையுடைய திருமாலது, உந்தி - நாபியினுண்டாகிய, அம் தாமரை உறைவோன - அழகிய தாமரைப்பூவிலே வாசஞ்செய்கின்ற நான்முககக்கடவுள், முழு மதி கலையுள - பதினாறுகலைகளாலு நிறைந்த சந்திரனிடததே, நிறைந்த - நிரம்பிய, போ அழகை - உயாவாகிய சாரததை, மொணடு கொண்டு - (கையினாலே) மொண்டு கொண்டு, அரி பரந்து - இரேகைகள பாடரபபெற்று, அகன்ற - விசாலமாகிய, மழை - குளிாசசிபொருந்திய, மதா - களிததிருககினற, நெடு கண் - நெடிய கண்களையுடைய, தமயநதி வதனம - தமயநதியினது முகத்தை, வகுததனன - படைததான, கரததினால் எடுதத - கையினால் எடுககபபெறற, புழை வழி தோனறும - துவாரததின் வழியிலே காணபபடுகிற, விசுமபினை அனறே - (நீலநிறமுள்ள) ஆகாசததை யன்றோ, களஙகம் எனறு - களஙகமென்று, இனனமும் - இபபோ தும், புகல்வாா - சொலலுவாா (உலகததாா), எ-று.

(க - து.) தமயநதியினது முகததின் சிறபபுச சொல்லியது என் பதாம்.

மணியெனபது நவமணிகளுககுப் பொதுபபெயராகியும் சில விடங்களிலே நீலமணிககுச சிறபபுபபெயராகியும் வருதலாலே நீல மணியெனப பொருள கூறபபடடது. ஒரு பிரளய முடிவிலே நான் முககககடவுள திருமால வயிறறுட் சென்று அவனது நாபியிலே தோனறிய கமலததினவழியாக வெளிபபடடு அதிலிருககினறு னென் பது புராணகதை. 'பேரழகு' எனறது இஙகே சநதிரனது சிறநத பகுதி. 'அரிபரநதகன்ற மழைமதா நெடுங்கண்' எனனும் அடையை முகததுககுககொளளாது தமயநதிககுக கொளக. காரணமாகச் சொல் லபபட்ட சநதிர சாரததினாலே உயாவுடைய முகததழகாகிய காரி யந் தோன்றலாலே காரணப புனைவிலி புகழ்சசி யணி. 'புழைவழித தோனறும் விசுமபினையனறோ களஙகமென றினனமும் புகலவாா' எனவே, அது களஙகமனறு அபபகுதி எடுபபட்ட பளளததே தோன றுகிற நீல வாகாச மெனறதாயிறறு. களஙகததிலே அவ் வாகாசத தன் மையை ஆரோபிததறகு அதனது தனமையை ஒழிததலாலே ஒழிப் பணி. இப பலவுஞ் சோநது வருதலாற சேரவையணியாம. (கரு)

[இதனால் தோள்கள முன்னஙகைகள கைகள் இவறறின் சிறபபுச் சொலலபபடுகினறது.]

செய்யுறு மமுதப் பசுங்கரும் பேய்ப்பத் திரணடமு
கொழுகுமென் றடந்தோள், பெய்வளை முன்கைக் கிணை
யயன் வகுத்த பொருள்களிற் பேசுவ தெவனோ, வெய்ய
வன் கதிர்க ளலர்த்துசெங் கமல மெலலடிக் குடைந்தன
வென்றாற், கையிணை மலருக் கிணையென வுரைத்தல் கழி
மட னலதுவே றிலையே.

(இ - ள்.) மெல் தடம் தோள் - மெல்லிய பெரிய (தமயந்தியி னுடைய) தோள்களானவை, செய உறும் - கழனியிலிருக்கிற, அமு தம் - அமிர்தத்தையுடைய, பசு கரும்பு ஏய்ப்ப - பசிய கரும்புபோல,

திரண்டு - திரட்சிபொருந்தி, அழகு ஒழுகும் - அழகு பெருகப்பெற்றிருக்கும், பெய வளை - இடப்பட்ட வளையல்களையுடைய, முன் கைக்கு - (அவள்) முன்னங் கைகளுக்கு, இணை - உபமானம், அயனை வகுதத பொருளகளில் - பிரமனால் படைக்கப்பட்ட பொருள்களுளளே, பேசுவது எவன் - சொல்லத்தகுவது யாது, வெய்ய வன் கதிர்கள் - சூரியனுடைய கிரணங்களால, அலாதது - மலாத்தப படுகின்ற, செம கமலம - செந்தாமரை மலாகளானவை, மெல் அடிககு - மெலலிய வடிகளுக்கு, உடைந்தன என்றல - தோற்றன வென்று சொன்னால், இணை - இரண்டாகிய, கை மலருககு - கைக ளாகிய மலாகளுககு, இணை என உரைததல - உபமானமென்று சொல்லுதற்குககாரணம, கழி மடமை அலது - மிகுந்த அறியாமை யன்றி, வேறு இலை - மற்றொருகாரணம் இலலை, எ-று. ஏ-அசை.

(க - து.) தோள்கள முன்னங்கைகள கைகள இவைகளின சிறப புச் சொலலியது எனபதாம்.

செழுமையும் கிளர்ச்சியும நல்லநிறமும உபமேயததிலே குறிப் பிததறகு 'செயயுறு மழுதபபசுஙகருமபு' என்றது. பசுஙகரும் பேயபப—உவமையணி. எவனெனபது இனமைபொருளில வநதது. அயனவகுதத பொருளகளில ஒருபமானஞ் தோனறுமையால தொ கையுவமையணி. செஙகமலததிறகு 'வெயயவன கதிரக ளலாதது' என்ற அடை, அது தம்மியலபின மலாசசியையுடைய மெல்லடிக ளுககுத தோற்றறகுரிய குணத்தை யுடையன வெனனுங கருததை யுட்கொண் டிருததலாலே கருத்தடையணி. இதனாலே உபமேய மாகிய அவ வடிகளுக்கு விசேஷந தோனறுவதாகிய வேற்றுமை யணி தொனிககின்றது. கமலம் கீழ்பபட்ட வடிகளுககுத தோற்ற மையைச் சொலலவே மேறபட்ட கைகளுக கிணையாகாமை தோன றுதலாலே செயயுட பொருட்பேறணி. இவை பலவுஞ் சோதலாலே சோவையணியாம். (கள)

[இதனால் முலைகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

இழையிடை புகாது மார்பிடங் கொண்ட வேரிள வ னமுலை வள்ளைக, குழைபொருங் கண்ணி யெழிற்கடற் பிறந்த குமிழியோ வதனிடை நீந்த, விழைவுறு மதனும் பருவமு மமைத்து விளங்குபொற் குடங்கொலோ வத னிற், றழைசிறை நேமிப் புட்கொலோ கமல முகைகொ லோ வென்கொலசாற் றுவதே.

(இ-ள்.) வள்ளை - வள்ளைபோலுங் (காதுகளைச் சூழ்ந்த), குழை பொரும் - குழைகளோடு போாசெயகின்ற, கண்ணி - கண்களை யுடை யவளது, இழை - நூலும், இடை புகாது - நடுவிலே நுழையாதிருக் கும்படி, மாாபு - மாாபை, இடம் - (தமககு) இடமாக, கொண்ட - கவாந்த, ஏா இள வனம் - அழகும் இளமையும் சந்தனக்கோலமும் பொருந்திய, முலை - முலைகளென்று சொல்லப்படுகிற பொருள்களான வை, எழில் கடல் பிறந்த - அழகாகிய கடலின் கண்ணே உண்டாகிய,

குமிழியோ - குமிழிகளோ, அதனிடை - அக்கடலின் கண்ணே, நீந்த - நீந்துதற்கு, விழைவு உறு மதனும் - ஆசை கொண்ட மன்மதனும், பருவமும் - மங்கைப் பருவத்தினாலும், அமைத்து - உண்டாக்கப்பட்டு, விளங்கு பொன் குடம் கொல் - விளங்குகின்ற பொற்குடங்களோ, அதனில் - அக் கடலிலிருக்கின்ற, தழை சிறை - தழைந்த சிறைகளையுடைய, நேமி புள்கொல் - சக்கரவாகப்பறவைகளோ, (அதனில்) - அக்கடலிலே தோன்றிய, கமல முகைகொல் - தாமரை யரும்புகளோ, என - (இவற்றுள்ளே) யாது, சாற்றுவது - (என்று) சொல்லப்படுவது, எ-று. ஓ - கொல் - அசைகள்.

(க - து) முலைகளின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

'இழையிடை புகாது மாறுபிடங் கொண்ட' என்றதனாலே அம்முலைகள் அடிபரந்து நுனிசிறுத்து ஒன்றோடொன்று நெருங்கி விளங்குகின்றமை சொல்லப்பட்டதாயிற்று. நீந்துதல் — புனல்விளையாடலைக் குறித்தெனக. 'பருவம் எனப் பொதுப்படக்கூறினும் எல்லாப்பருவங்களினுஞ் சிறந்த மங்கைப் பருவமென்று கொள்க. ஆழநீரிலிறங்க வஞ்சி யோர்குட முதலியவற்றைப் பற்றி யிறங்குதல் உலகவழக்கம். முலைகளை அக் குமிழி முதலியனவாகக் குறித்ததனாலே தற்குறிப்பணிகள் இந்நான்கு தற்குறிப்புகளையும் அங்கமாகக் கொண்டு ஐயவணி வந்தது. இத் தற்குறிப்புகள் எழிற்கடலென்ற உருவகத்தாலே பிறப்பிக்கப்பட்டன. (கஅ)

[இதனால் வயிற்று மயிரொழுங்கின் சிறப்புச்
சொல்லப்படுகின்றது.]

மாலபுரி முலைமென் கமலநாண் முகையில வண்டு
வீழ் மாலையோ பசும்பொற் சேலைமீ தணிந்த மேகலை
மணியி னொருசுடா செவ்வனின் றதுவோ, நூலினு நுடங்
கு மருங்கிறு தனங்க னுணணிதிற சலாகைசோத் திய
தோ, வாலிளந் தளிரி னழகுவீற் றிருந்த வவ்வயி றணி
மயி ரொழுங்கே.

(இ - ள்.) ஆல் இளம் தளிரின் - ஆலமரத்தினது சிறு தளிரினது, அழகு வீறு இருந்த - அழகானது கொலு விருக்கப்பெற்ற, அ வயிறு - அத்தமயந்தி வயிற்றை, அணி - அலங்கரித்துக்கொண் டிருக்கிற, மயிர் ஒழுங்கு - மயிரொழுங்கென்று சொல்லப்படுகிற பொருளானது, மால் புரி - ஆசையைச் செய்கின்ற, முலை - முலைகளாகிய, நாள மெல் கமலம் முகையில் - மலரும் பருவத்தையுடைய மெல்லிய தாமரையினுடைய அரும்புகளில், வீழ் வண்டு - (வந்து) விழுகிற வண்டுகளது, மாலையோ - வரிசையோ, பசும் பொன் சேலைமீது - பசிய பொன்மயமாகிய புடவையின்மேல், அணிந்த - தரிக்கப்பட்டிருக்கிற, மேகலை - மேகலாபரணத்தினது, மணியின் - நீலமணியினது, செவ்வன் நின்றது - நேராக மேலெழுந்து நின்றதாகிய, ஒரு சுடரோ - ஒரு கதிரோ, நூலினும் - இழையினு மதிகமாக, நுடங்கும் மருங்கு - அசைகின்ற இடையானது, இறுது - ஒடியாதிருக்க,

அனங்கன் - மன்மதனால், நுண்ணிதின் சோத்தியது - நுண்ணிதாகச் சோக்கப்பட்டதாகிய, சலாகையோ - இருப்புக்கம்பியோ, எ-று.

(க - து.) வயிற்று மயிரொழுங்கின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

ஆடவர்க்கு மற்றை யவயவங்களினும் அதிக விருப்பஞ்செய்தல் பற்றி 'மாலபுரிமூலே' என்றது. மணமும் தேனும் வெளிப்படாமையால் வண்டுவீழ்தற் கியைபில்லாத விளமுகைகளை யொழிதற்கு 'நாண்முகை' என்றது. அதாவது அன்றைக்கு மலரும் பருவமுடைய வரும்பாம். வண்டுமாலையாவது வண்டுகள் இடைவிடுப்போகாமலொன்றனபின் னொன்றாகத் தொடரும் தொடர்ச்சி செவ்வனிற்றலாவது சாயவின்றி மேலே நிவந்திருத்தல். நூலினு நுடங்கு நுண்ணிய விடைக்குத் தகுதியாக 'நுண்ணிதிற் சலாகை' என்றது. செவி முதலிய வுறுப்புகளுக்குக் குழைமுதலியனபோல வயிற்றிற் கணியாயழகு செய்தலின் 'அணிமயிர்' என்றது. வயிற்று மயிரொழுங்கை அவ் வண்டுமாலை முதலியனவாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. இதனை அங்கமாகக்கொண்டு ஐயவணி வந்தது. உபமானமாகிய ஆலந்தளிரினது தன்மையை உபமேயமாகிய வயிற்றிலே ஆரோபித்தலாலே காட்சியணி, இதனாலே அம் மயிரொழுங்குக் கிடனசொல்வதுபோன்று வயிற்றுச் சிறப்புஞ் சொல்லியதாயிற்று. (கஞ)

[இதனால் வயிற்றுமடிப்புகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

படைப்புழி வேதன் கமலமென் மலரைப் பழிக்கு
மென் கரத்தி னடுவைப், பிடித்தலும் விரல்க ளழுந்திய
வரையோ பெட்புறு மங்கையம் பருவ, மடித்தலஞ் சேர்த்
தி யேறுதற் கமைத்த படிகொலோ வவ்வயி றணிந்த, மடிப்புறு வரையி னழகினுக் குவமை மற்றுநா முரைக்குமா
றெவனே.

(இ - ள்.) அவ வயிறு அணிந்த - அத தமயந்தியின வயிற்றினால் தரித்திருக்கிற, மடிப்பு - மடிப்புகளென்று சொல்லப்படுகிற பொருள்களானவை, படைப்பு உழி - (அவளைப்) படைத்தபோது, வேதன் - நான்முகக் கடவுளானவன், கமலம் என் மலரை - தாமரையெனப்படுகிற பூவை, பழிக்கும் - நிந்திக்கின்ற, மெல் கரத்தினால் - மெல்லிய கையினாலே, நடுவை பிடித்தலும் - இடையைப் பிடித்தவளவிலே, விரல்கள் - (அவன் கை) விரல்களானவை, அழுந்திய - அழுந்துதலா லுண்டாகிய, வரையோ - மடிப்புகளோ, பெட்பு உறு மங்கையம் பருவம் - விரும்பப்படுகின்ற மங்கைப்பருவமாகிய (பெண்), அடி தலம் சேர்த்தி - அடித்தலங்களை ஊன்றி, ஏறுதற்கு அமைத்த - ஏறுதற்காக (அவனாலே) உண்டாக்கப் பட்ட, படிகொல் - சோபானங்களோ, வரையின - அம்மடிப்புகளது, உறு அழகினுக்கு - மிகுந்த சௌந்தரியத்துக்கு, உவமை - உபமானம், நாம் உரைக்கு மாறு - நாம் சொல்லுமாறு, எவன - யாது, எ-று.

(க - து.) வயிற்று மடிப்புக்களின் சிறப்புச் சொல்லியது என் பதாம்.

'கமலமென் மலரைப் பழிக்குமென் கரம்' என்றதனால் அவன் மெல்லிய விடையைப் பிடித்தற்கு அக்கரந் தகுதி யுடைத்தென்ற தாயிற்று. நடுவைப்பிடித்தல் அதனளவை யறிதற் கெனக. 'விரல்க ளழுந்தியவரை' என்றதனால் அழுத்திப் பிடித்தானென்பதும், அங் ஙனம் பிடித்தபோது அங்குட்டம் பின்புறத்திற் செல்ல மற்றைச் சுட்டுவிரல் முதலிய நான்குவிரல்களும் முன்புறத்துச் சென்றழுந்த லால் அவற்றொன்றோடொன் றிடைவெளிகளி லெழும்பி மூன்று வரைக ளுண்டாயின வென்பதுந் தோன்றுகின்றன. வயிற்றுமடிப்பு களை அவ்விரல்க ளழுந்திய வரைகளாகவும், அப்படிகளாகவுங் குறித் தலாற் தற்குறிப்பேற்றவணிகள். இவை ஐயவணிக் கங்கம். இங்ஙனஞ் சிறப் பிக்கப்பட்டது வரையின் வடிவமையாதலால் வரையி னழகினுக் குவ மையென்று பின் வேறுகூறப்பட்டது. மற்றும் - அசைநிலை, எவ னென்பது இன்மைப் பொருளில் வந்தது. அழகினுக் குவமையில்லை யெனலால் உபமானந் தொக்க தொகையுவமையணி. (உ0)

[இதனால் இடையின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

சுணங்குபூத் தொருகாழ் மணிவடங் கிடந்த துணை
யிள வனமுலை சுமந்து, வணங்கினா டோறுந் தேய்ந்ததோ
பெருகும் வனப்பெனுங் கடலுளாழ்ந் ததுவோ, கணங்
கொளவண் டார்க்குங் கணைமதன் கண்ணே றெய்தலுங்
கழிந்ததோ வன்றி, யணங்கர வல்குற் றோமிசை வதியு
மனங்கனே விடையறி கிலேமால.

(இ - ள்.) இடை - (அத்தமயந்தியினது) இடையென்று சொல் லப்படுகிற பொருளானது, சுணங்கு பூத்து - தேமல் படரப்பெற்று, ஒரு காழ் மணிவடம் கிடந்த - ஓரளவாகிய சரங்களையுடைய ரத்ன ஹாரம் கிடக்கப்பெற்ற, துணை இள வனம் முலை - இரண்டாகிய இளமையும் சந்தனக்கோலமும் பொருந்திய முலைகளை, சுமந்து - சுமத்தலால், வணங்கி - வளைந்து, நாள் தோறும் தேய்ந்ததோ - தினந் தோறும் (சிறிதுசிறிதாகத்) தேய்ந்துபோயிற்றோ, பெருகும் - பொங் குகின்ற, வனப்பு எனும் கடலுள் ஆழ்ந்ததுவோ - அழகென்கிற கட லுள்ளே முழுகிப்போயிற்றோ, கணம் கொள வண்டு - கூட்டத்தைக் கொண்ட வண்டுகளானவை, ஆர்க்கும் - ஒலிக்கப்பெறுகின்ற, கணை - (பூ) அம்பையுடைய, மதன் கண் ஏறு எய்தலும் - மன்மதனது பார்வைக் குற்றமானது அடைந்தமாத்திரத்திலே, கழிந்ததோ - இறந்து போயிற்றோ, அன்றி - அல்லாமல், அணங்கு அரவு - அழ காகிய பாம்பின் படம்போலும், அல்குல் தோமிசை வதியும் - அல்கு லாகிய தேரின்மேலே இருக்கின்ற, அனங்கனே - அங்கமில்லாத மன் மதனே, அறிகிலேம் - (யாம்) அறிந்திலேம், எ-று.

(க - து.) இடையின் சிறப்புச்சொல்லியது என்பதாம்.

இடையானது நுண்ணிதாய்க் காணக் கூடா திருத்தல்பற்றி அதனை அதன்மேலே கனங்கொண்டிருக்கிற விரண்டு முலைகளாலும் அழுத்தப்பட்டுத் தேய்தற்கு வினைமுதலாகவும், அளவற்றிருக்கையால் அழகைக் கடலாக உருவகஞ்செய்து அக்கடலிலே மூழ்குதற்கு வினைமுதலாகவும், ஒருவ னொருபொருளை வியந் துற்றுப்பாராததால் அப்பொருள் அப்பார்வைக் குற்றந்தாங்கி யழிதல் உலகியல் பாதலால் மன்மதனது அப்படிப்பட்ட பார்வைக்குற்றந் தாங்கி அழிதற்கு வினைமுதலாகவும், அரசனுக்குத் தேர்போல மன்மதனுக்குப் பகை வெல்லுதற்குத் துணைக்கருவி யாகையால் அல்குலைத் தேராக வுருவகஞ்செய்து அதன்மேலிருக்கிற உருவமில்லாத மன்மதனுக்கும், குறித்தலாலே இங்ஙனங்கூறு தற்குறிப்பணிகள். இவற்றை அங்கமாகக் கொண்டு ஐயவணி வந்தது. இவற்றுள் முன்னைய மூன்றும் வினைப்பொருட் டற்குறிப்புகள். பின்னது வடிவப்பொருட் டற்குறிப்பு. இவ்வேறுபா டறிதற்கு 'அவற்றிடை அன்றி' என்னுஞ்சொல் வைக்கப்பட்டது. இரண்டாவது தற்குறிப்பு உருவகத்தா லுயவிக்கப்பட்டது.

[இதனால் அல்குற்சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

வெங்கதிர்க் கடவுள் கொடிஞ்சியந் தேர்க்கு வியப்
புற வாழியொன் றமைத்த, பங்கமி றொழிலின் பயிற்சியா
லனங்கன் பைங்கிளிக் கூந்தன்மான றேர்க்குச், செங்கரம்
வருந்த மலரயன் வகுத்த திகிரியோ செய்யபொற் றட்
டோ, வங்கர வல்கு லதனள வுரைக்கி னுடைவ ரவாவின
தளவே.

(இ - ள்.) அங்கு - அவ்வனையிடத்தைச் சேர்ந்த, அரவு - பாம்பின் படம்போலும், அல்குல் - அல்குலென்று சொல்லப்படுகின்ற பொருளானது, மலர் அயன் - தாமரைப்பூவிலிருக்கின்ற நான்முகக் கடவுளானவன், வெம் கதிர் கடவுள் - சூரிய தேவனது, கொடிஞ்சி அம் தேர்க்கு - மேன்மொட்டையுடைய அழகிய இரதத்திற்கு, வியப்பு உற - ஆச்சரியப்பட, ஆழி ஒன்று அமைத்த - ஒருருளையை அமைவித்த, பங்கம் இல் தொழிலின பயிற்சியால் - பழுதில்லாத தொழிலினது பழக்கத்தினாலே, அனங்கன் - மன்மதனது, பைங்கிளி கூந்தல் மான் தேர்க்கு - பச்சைக்கிளியாகிய குதிரையையுடைய இரதத்திற்கு, செம் கரம் வருந்த - செய்யகைகளானவை வருத்தமுற, வகுத்த திகிரியோ - (அவனாலே) படைக்கப்பட்ட ஒருருளையோ, செய்ய பொன் தட்டோ - (அக்கடவுளாலே அம்மன்மதனுக்குப் படைக்கப்பட்ட) செம்பொன்னினாற்செய்த தட்டோ, அதன் அளவு உரைக்கின் - அவ்வல்குலினது (பரப்பின்) அளவைச் சொன்னால், ஆடவர் - காளையரது, அவாவினது - (அதன்மேலுள்ளதாகிய) ஆசையினது, அளவே - அளவேயாகும் (அது), எ-று.

(க - து.) அல்குற் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

கொடிஞ்சி - தேர்மேன்மொட்டு, "கூவிரங்கொடிஞ்சி கூம்புதேர் மொட்டே" இதனாலறிக. பல வுருளைக ளின்றியமையாத தேர்க்கு

ஒருருவை அமையும்படியாகச்செய்தல் அரிய செயலாதலால் 'வியப்புற' என்றும், அங்ஙனஞ் செய்யப்பட்டது நெடுங்காலமாக நிலைபெறுத லாலே 'பங்கமிறெழில்' என்றும், கூறினார். பின்செய்யப்பட்ட விதற்கு 'செங்கரம் வருந்த' என்றலால் அதினுமிது சிறந்ததாகச் செய் யப்பட்டமை தோன்றுகின்றது. அங்ஙனம் அப்படிப்பட்ட உருவையும் பொற்றட்டுமாகக் குறித்தலாலே தற்குறிப்பணிகள். இவற்றை யுறுப் பாகக்கொண்டு ஐயவணிவந்தது. அதனளவு 'ஆடவரவாவினதளவு' எனவே அவ்வவாவி னளவைப்போலவே அல்குற் பரப்பி னளவைக் காணக்கூடா தென்றதாயிற்று "ஐயோவகலல்குல் சூழவருதற் காழி த்தோ வெய்யோாக கனைகாள் வேண்டுமே" என்றார் பிறரும். அல் குலி னளவு யாது, அது ஆடவரவாவினதளவென்பதுபட்டதொன்று கிற விரண்டு வாக்கியப் பொருள்களுக்கு ஐக்கியத்தைச் சொல்லுத லாலே காட்சியணி. (உ௨)

[இதனால் தொடைகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது]

மாந்தளிர் மேனி யரம்பையை வனப்பின் வென்ற
மான் றிரண்மணிக் குறங்கு, கூந்தலம் பிடியின் கொழுங்
கரந் துரந்து குலவிய கவின்குடி யிருந்து, சேந்தநுண்
பஞ்சின் மென்மைய வாகிச் செழுமணி மேகலை தாங்கி,
யேந்தெழிற் கன்னி யரம்பையின் குலங்க ளியாவையு
மெளிதின்வென் றனவே.

(இ - ள்.) மா தளிர் மேனி அரம்பையை - மாவினது தளிர்போ லும் வடிவத்தையுடைய அரம்பை யென்பவளை, வனப்பில் வென்ற - அழகினாலே வென்ற, மான் - தமயந்தியினுடைய, திரள் மணி குற ங்கு - திரட்சியும் அழகும்பொருந்திய தொடைகளானவை, கூந்தல் - கூந்தலையுடைய, அம் பிடியின் - அழகிய பெண்யானையினது, கொழு கரம் துரந்து - செழிய துதிக்கையைத் துரத்தி, குலவிய - விளங்கு கின்ற, கவின் குடி யிருந்து - காந்தியானது குடியிருக்கப்பெற்று, சேந்த - சிவந்த, நுண் பஞ்சின் - நுண்ணிய பஞ்சினும் மதிகமான, மென் மைய ஆகி - மெல்லியகுணத்தையுடையனவாகி, செழு மணி மேகலை தாங்கி - செழிய நவமணிகளாலாகிய மேகலையைச் சுமந்து, ஏந்து எழில் - ஏந்தப்பட்ட அழகையுடைய, கன்னி அரம்பையின் - இள வாழைகளுடைய, குலங்கள் யாவையும் - குலங்களையெல்லாம், எளி தில் வென்றன - வருத்தமில்லாமல் வென்றன, எ-று.

(க - து.) தொடைகளின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

'மாந்தளிர் மேனியரம்பை' என்றதனாலே அவ ளழகிற் சிறந்தவ ளென்றதாயிற்று. அரம்பை - தேவகன்னிகையரு ளொருத்தி. வென்ற வென்னும் பெயரெச்சங் குறங்கென்னும் பெயர்கொண்டது. 'அரம் பையை வனப்பின்வென்ற குறங்கு' எனவே அவளுடைய வெல்லா வவயவங்களி னழகுங்கூடி இவளது தொடையழகுக்குங் குறைந்த தென்றதாயிற்று. அரம்பைக்கு அவ்விருபொருள்களும் "அரம்பை தெய்வப்பெண்வாழை" இதனாலறிக. அவ்விரண் டரம்பைகளையும்

வெல்லுதலும், பிடியின் கரத்தைத் தரத்தலும் இல்லாதிருக்க அவற்றின் சம்பந்தத்தைக் கற்பித்தலாலே தொடர்புயர்வு நவிற்சியணி.

[இதனால் கணைக்கால்களின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

பூங்கழை குழைக்கும் வேனில்வேள் பகழி பொதிந்தபொன் னாவமவெங் கொடுப்ப, வாங்கவன் வெற்றி குறித்திட விரிஞ்ச னமைத்தகா களயவெரீஇ யரற்றத், தேங்கமழ் வாவி நீரிடைக் குளித்துச் சினைவரான் மறைந்திட வரையிற், றூங்குதேன் பெய்த பச்சிளங் கழையைத் தோழமை கொண்டன கணைக்கால.

(இ - ள்.) கணைக்கால் - (தமயந்தியினுடைய) கணைக்கால்களானவை, பூ கழை குழைக்கும் - அழகிய கருப்புவில்லை வளைக்கின்ற, வேனில் வேள் - வசந்தகாலத்திற்குரிய மன்மதனது, பகழி பொதிந்த - பூவம்புகளால் நிறைந்த, பொன் ஆவம் - பொன்மயமாகிய அம்புக்கூடானது, வெம் கொடுப்ப - (தோற்றுப்) புறங்கொடுக்கவும், ஆங்கு - அந்தக்காலத்தில், அவன் வெற்றி குறித்திட - அம் மன்மதனது வெற்றியை குறிக்கும்படியாக, விரிஞ்சன் அமைத்த - நான்முகனால் படைக்கப்பட்ட, காகளம் - காளமானது, வெரீஇ அரற்ற - அஞ்சியொலிக்கவும், தேன் கமழ் - தேன் மணக்கப் பெற்றிருக்கின்ற, வாவி நீரிடை - தடாகத்திலுள்ள நீரினகண்ணே, குளித்து - மூழ்கி, சினைவரால் மறைந்திட - சூலையுடைய வரால்மீனானது ஒளித்துக்கொள்ளவும் (செய்து), வரையில் தூங்கு - மலையினகண்ணே தங்கிய, தேன் பெய்த - தேனைவார்த்து வளர்க்கப்பட்ட, பசு இளம் கழையை - பசுமையு மிளமையும் பொருந்திய மூங்கிலோடு, தோழமை கொண்டன - நட்பைக்கொண்டிருந்தன, எ-று.

(க - து.) கணைக்கால்களின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

ஆவத்திற்குப் 'பகழிபொதிந்த' என்றும் 'பொன்' என்றும் அடைகள் சேர்த்தமையால் கணைக்காலில் ஆடவரது மனவலியைக் கெடுக்கின்ற குணமும் பொன்னிறமுங் கொள்க. மன்மதனுக்குக் காளமென்பட்டது குயிலாம். "கடிமுரசங் கயகுல் களிறுகுயில் காளங், கொடி மகரந் திங்கள் குடை" இதனாலறிக. குயில் வடிவத்திற்குங் காமுகரை வருத்துதற்கும் கொள்ளப்படும். சினைவராலுக்கு வயிறுபோலக் கணைக்காலிற்குப் பின்புற மேற்பக்கு பருத்திருத்தல் கொள்க. வெங்கொடுப்ப, வெரீஇயரற்ற, மறைந்திட, இவ்வினையெச்ச வடுக்கை முடித்தற்குச் செய்து என்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. ஆவமுதலியவை வெங்கொடுக்கச் செய்கை முதலியவற்றின் சம்பந்தத்தைக் கற்பித்தலாலே தொடர்புயர்வு நவிற்சியணி. மூங்கிலுக்குக் கண்டோரால் விரும்பப்படுகிற அதன் செழுமை முதலிய குணங்கள் தோன்றற்கு 'வரையிற்றூங்கு தேன்பெய்த' என்னுமடை கொடுக்கப்பட்டதுபோலும். தோழமை கொண்டன வென்றதற்கு அவைகளை யொத்திருக்கின்றன வென்பது கருத்து. (உ௪)

[இதனால் அடிகளின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

முருகவிழ் செய்ய கமலமுன் னெகிழ்ந்து முகமலர்ந்
துறுகணீர் சிந்தி, யொருபசுந் தாளின் வனத்தினின் றரிதி
னுஞற்றிய தவத்தினா லன்றே, விரிமல ரசோகின் றளிர்
நலங் கவற்றி மென்சிறை யனமென மிழற்றும், பரிபுர
மணிந்து பஞ்சியூட் டியபொற் பதத்தினைச் சிறிதுபோன்
றனவே.

(இ - ள்) முருகு அவிழ் - பரிமளமானது விரியப்பெற்றிருக்கின்ற, செய்ய கமலம் - செந்தாமரை மலர்களானவை, உள் நெகிழ்ந்து - மனமுருகி (உட்கட்டுவிட்டு), முகம் மலர்ந்து - முகக்கிளர்ச்சிகொண்டு (நுனி விரிந்து), உறுகண் நீர் சிந்தி - மிகுந்த ஆனந்தக் கண்ணீரை (தேனாகிய நீரை) பொழிந்து ஒரு பசு தாளில் - பசிய ஒரு காலினாலே (ஒருநாளத்தினாலே), வனத்தில் நின்று - காட்டிலே (நீரிலே) நின்று, அரிதின் உஞற்றிய - அரிதாகச் செய்த, தவத்தினால் அன்றே - யோகத்தினாலன்றே, விரி மலர் - விரிந்த மலர்களையும், அசோகின் தளிர் நலம் - அசோகத்தினது தளிர்களின் அழகையும், கவற்றி - துன்பப்படுத்தி, மெல் சிறை - மெல்லிய சிறைகளையுடைய, அன்னம் என - அன்னம்போல, மிழற்றும் - ஒலிக்கின்ற, பரிபுரம் அணிந்து - சிலம்பைத் தரித்து, பஞ்சி ஊட்டிய - செம்பஞ்சை அப்பப்பெற்ற, பொன் பதத்தினை - பொன்னிறம்பொருந்திய அடிகளை, சிறிது போன்றன - சிறியவளவில் ஒத்தன, எ-று.

(க - து.) பாதங்களின் சிறப்புச் சொல்லியது என்பதாம்.

தாமரைக்கு முகமலர்தல் சூரியன்முன்னே யாதலால் அது தவத்திற்குச் சொன்னது. வனத்திற்சென் றொரு தாளினின்று மனங்குழைந்து சூரியனை நோக்கி யானந்தக் கண்ணீர் பொழிந்து செய்யப்படுகிற யோகம் தாமரைக்குச் சிலேஷையாற் சொல்லப்பட்டது. 'பதத்தினைச் சிறிதுபோன்றன' என்றதற்கு அந்த யோகத்திற்குப் பயனாகத் தமயந்தியின் பத சாரூப்பியத்திற் சிறிது பெற்றன வென்பது பொருள். சரியை - கிரியை - யோகம் - ஞானம் - இவற்றிற்கு முறையே சாலோகியம் - சாமீப்பியம் - சாரூப்பியம் - சாயுச்சியம், இவை பயன்களா மென்பது சைவாகமத்திற் காண்க. பதத்தினைச் சிறிதுபோலுதற் கேதுவாகாத அத் தாமரையினது அப்படிப்பட்ட நிலைமையாகிய தவத்தைத் யேதுவாகக் குறித்தலாலே ஏதுத் தற் குறிப்பணி தாமரை தன்னாலே விரும்பப்பட்ட பத சாரூப்பிய முழுது மடையாமையைச் சொல்லுதலால் தகுதியின்மையணி. ஆதலாற் சேர்வையணி. (உரு)

[இதனால் நீ அவளை எங்கேகண்டாய் என்கிற வினாவோடு கூடிய வுத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

இத்தகை வனப்பின் மடவர றன்னை யெவ்வுழிக் கண்
டனை யென்னிற், பைத்தபாம் பல்கு லரம்பையர் வதியும்

பதிதுறந் திம்பரிற் போந்து, மொய்த்தபூம் பொய்கை கா ணிய தேய முழுவதுங் குறுகின னவற்றுட், கைத்தல மமர்ந்த நெலலியங் கனியிற் கண்டனன் விதர்ப்பர்கோ னகரில்

(இ - ள.) இ தகை வனபபின் மடவரல்தன்னை - இபபடிப் பட்ட அழகினையுடைய மங்கையை, எவவுழி கண்டனை எனனின் - எவ்விடததே பாாததாயெனறு வினுவினுல, பைதத பாம்பு அல் குல் - படம்விரிதத பாம்புபோலும அலகுலையுடைய, அரமபையா வதியும் பதி - தெயவமாதா தஙகபபெறறிருககினற நகரததை, துறந் து - விடடுநீஙகி, இமபரில போநது - இவவுலகததினகண் வநது, மொயதத பூ பொயகை - நெருஙகிய மலாகளையுடைய தடாகஙகளை, காணிய - பாாககுமபடியாக, தேயம முழுவதும் - தேசஙக ளனைத் தையும், குறுகினன - அடைநதேனுகி, அவறறுள - அநதேசங்களுள் ளே, கைததலம அமாநத நெலலி கனியின - உளளஙகையில் தங் கிய நெல்லிபபழததைபபோல, விதாபபாகோன நகரில - வீமராஜ னது படடணததில, கணடனன - (அவளைப) பாாததேன, எ - று. அம் - அசை.

(க - து.) இவவழகுளள தமயநதியை வீமராஜன பட்டினததிற கணடேனென றனனுந சொலலியது எனபதாம்.

பூம்பொயகைகாணுதல விளையாடுதற பொருடடெனக. அவ விடததே சில குறைவுகள உனனு லறியபபடா திருககலாகாதா வெ னின அபபடிககிலலை யெனறகு 'கைததலமமாநத நெலலியஙகனி' என்றது. நெலலிககனியை யுளளஙகையில வைததுப பாாபபோருக்கு அதனுருவ முழுவதும நனறுயக காணபபடுத லறிக. அனறியும அக் கனியின புறவாைகளாலே அகததுவிதது வாைகளையும் அளவறிதல் போல அவளபுறததுக குணங்களாலே அகததுக கருததின குணங் களையும் அளவறிதறகும் சொலலபபடட தெனினுமாம். (உ௬)

[இதனுலே அபபடி யுனனுற காணபபட்டவளை இஙகே
நினைததறகுக காரணம யாதெனகிற வினுவிறகு
விடை சொல்லபபடுகினறது.]

காண்டலு மவடகு நிகரா மகளிா தமமிலுங் கண்டி லேன் கதிததுப, பூண்டயங் கிளைய வனமுலை திளைக்கும் புயமுடை யிளைஞன்யா னுைத, தேண்டினன் மும்மை யுலகினுங் காணேன் றிருந்தலர்க் கசனியே றன்ன, வாண் டகாய் நின்னைக காண்டலு நினைந்தே னவ்வளைத் தோளி ணங் கினையே.

(இ - ள்.) திருந்தலாக்கு - பகைவருக்கு, அசனி ஏறு அன்ன - இடியுரு சிங்கமும்போலும், ஆண்டகாய் - ஆண்மையுடையவனே! காண்டலும் - கண்டவளவிலே, அவட்கு நிகா - அவளுக்கு நிகாவாளை, அரமகளிா தம்மிலும் கண்டிலேன் - தெய்வமங்கையருள்ளும் பாாத்

திலேன், கதித்து - பருத்து, பூண் தயங்கு - ஆபரணங்களால் விளங் காநின்ற, இளைய - இளமைபொருந்திய, வனம் முலை திளைக்கும் - சந் தனக் கோலத்தையுடைய முலைகளைத் தழுவுதற்குத் தகுதியுள்ள, புயம் உடை இளைஞன் - தோள்களை யுடைய காளை, யார் என்று - எவரென்று, தேடினன் - தேடினேன், மும்மை உலகிலும் கா ணேன் - மூன்றுலகங்களிலும் கண்டிலேன், நின்னை காண்டலும் - உன்னைப் பார்த்தவளவிலே, அ - அந்த, வளை தோள் - வளையலையணிந்த கைகளையுடைய, அணங்கினை - கன்னியை, நினைந்தேன் - நினைத் தேன், எ-று.

(க-து.) இவளுக்கு நாயகனை மூன்றுலகினுங் காணேன் உன்னைக் கண்டவளை நினைந்தேன் என்பதாம்.

முன்பாட்டிலே 'அரம்பையர் வதியும்பதி துறந்து' என்றதனாலே தனக்கிடம் தேவலோகமென்பதும், தேவமகளிரையெல்லாம் தானறிந் திருக்கையும் குறிப்பித்தலினாலே 'காண்டலுமடக்கு நிகரமகளிர் தம்மிலும் கண்டிலேன்' என்றது. சிகாவாளென்பது ஈறுகெட்டு நின்றது. அரமகளிர் தம்மினு மென்றவும்மை உயர்வுசிறப்பு. தேடின னென்னும் வினை எதுகைத்தொடைநோக்கி விரித்தல் விகாரமாய் வந்த ணகரம் பெற்று நின்றது. யாரென்னு மெழுவாய் வருவிக்க. 'மும்மையுலகிலுங் காணேன்' என்றதனால் தேவர் - உரகர் - மனிதர் - இம் மூத்திறத்தாருள்ளும் தக்கவனில்லை யென்றதாயிற்று. 'நின்னைக் காண்டலு நினைந்தேன்' என்றதனால் நெடுங்காலத்தின் முன்னே அவளைக் கண்டு இன்றளவும் அவளுக்குத் தக்கவனைக் காணாமையால் அவளை மறந்திருந்து இப்பொழுது உன்னுடைய பேரழகு அவளை நினைப்பிக்க நினைத்தேனென்றதாயிற்று. அழகொப்புமையால் நளனைக்கண்டு தம யந்தியை நினைந்ததனால் நினைப்பணி. (உஎ)

[இதனாலே நீ அவளுக்கு இன்றியமையாச் சிறப்பினை யென்
பதும் அவளும் உனக்கு இன்றியமையாச் சிறப்பின
ளென்பதுஞ் சொல்லப்படுகின்றன.]

கேழ்கிளர் தரள வடமிள முலையிற் கிடப்பினன் றே
சிறப் பெய்து, மாழை யொண் கண்ணி மார்பிடங் கொண்
டு வளரிள வனமுலை நினது, பாழியந் தடந்தோட் குவட்
டினை நெருங்கப் புல்லினன் றே பயன் பயக்கு, மாழியா
ய் நினக்கு வனப்பவ ளிலளே லலர்ந்தபா டலநிக ராமால்.

(இ-ள்.) ஆழியாய் - சக்கரவர்த்தியே!, கேழ் கிளர் - நிறத்தி னாலே விளங்காநின்ற, தரள வடம் - முத்து மாலையானது, இள முலை யில் - இளமைபொருந்திய முலையின்கண்ணே, கிடப்பின் அன்றே - கிடந்தாலன்றே, சிறப்பு எய்தும் - விளங்கும், மாழை ஒள் கண்ணி - மாவடுப்போலும் ஒளிபொருந்திய கண்களை யுடையவளது, மார்பு இடம் கொண்டு - மார்பை இடமாகக்கொண்டு, வளர் - வளர்கின்ற, இள வன முலை - இளமையுஞ் சந்தனக்கோலமும் பொருந்திய முலைக ளானவை, நினது - உன்னுடைய, பாழியம் தடம் தோள் - வலிமையும்

விசாலமும்பொருந்திய தோள்களாகிய, குவட்டினை - மலைகளை, ஒரு முங்க - அழுந்த, புல்லின் அன்றோ - சேர்ந்தாலன்றோ, பயன் பயக்கும் - விளங்கும்; நினக்கு - உனக்கு, வனப்பு - அழகானது, அவள் - அத்தமயந்தி, இலளேல் - இலளாயின், அலர்ந்த - மலர்ந்த, பாடலம் - பாதிரிப்பூவிற்கு, நிகராம் - ஒப்பாகும், எ-று.

(க - து.) சக்கிரவர்த்தியே! தமயந்தி முலைகளானவை உன்னுடைய தோளைச் சேர்ந்தால் பயனடையும், அவளில்லாவிடில் உனக்கழகு பயன்படாது என்பதாம்.

இளமுலையிற் சிறப்பெய்தும் மென்றும் தோட்குவட்டினைப் புல்லிற் பயன் பயக்கு மென்றுங் கூறவே மற்றை யிடங்களிலே வீணுமென்ற தாயிற்று, இதனாலே நீ அவளுக்கு இன்றியமையாச் சிறப்பினை யென்பது காட்டப்பட்டது. அன்றோ இரண்டும் உலகறிதேற்றத்தில் வந்தன. இங்கே தாளவட்டமும் வனமுலையுமாகிய உபமானோபமேயங்களையுடைய விரண்டு வாக்கியங்களிலே இளமுலைக்கும் அரசனுக்கும் பிம்பப் பிரதிபிம்ப பாவத்தைச் சொல்லுதலாலே எடுத்துக்காட்டுவமையணி. பாதிரிமலரிலே தக்குந்த காயுண்டாகாமைபற்றி 'அலர்ந்தபாடலநிகராம்' என்றது இதன் முதனூலிலே அவகேசியென்று சொல்லப்பட்டிருக்கிறது, அது அத்திமுதலிய பூவாதுகாய்க்கு மரங்களுக்கெல்லாங் கோளி யென்பதுபோலப் பூத்துக்காயாத மரங்களுக்கெல்லாம் பொதுப்பெயராம். இங்கே அவற்றுளொன்றாகிய பாதிரி சொல்லப்பட்டது. "அலங்கியுந் திங்கனிமிக் காக்கும் பலவினலா, பலங்கியும் பாடலப்பூப் பாழாகு - நல்கிசைகூா, நல்லோர்பாற் செல்வஞ் சிறிது நலம் பயக்கு, மல்லோர்பே ராக்கமும்வீ ணும்" என்பதனாலு மறிக. தற்கிழமைப்பொருளாகிய அழகைக்கூறவே பிறிதின்கிழமைப் பொருளாகிய அரசாட்சி செல்வமுதலியவையும் வீணுமென்பது தானேதோன்றுமெனக். இதனாலே அவள் உனக்குக் கிடைப்பாளாயின் உன்னழகு முதலியன யாவும் பயன்படுமென்பது தோன்றலால் அவள் உனக்கின்றியமையாச் சிறப்பினளென்பது காட்டப்பட்டது. அரசனாகிய புகழ்பொருளைத் தமயந்தியாகிய ஒருபொருளில்லாமையினாலே தாழ்வடைவதாகக் கூறலால் இன்மை நவிற்சியணி. இதுவும் பாடல நிகராமென்ற உவமையணியுஞ் சேர்ந்துவருதலால் சேர்வையணியாம். (உ௮)

[இதனால் தன்னுதவி வேண்டுமென்பதைக் காட்டுதற்கு அவளருமைகூறலும் ஆனால் எப்படி அவளை அடையலாமென்றதற்கு உத்தரமுஞ் சொல்லப்படுகின்றன.]

கரும்புயன் மன்றக்கு மதிக்கதிர் வேட்டல் கைரவ
மலர்பெறு ததுபோ, லரும்பிள முறுவ லிளமுலைப் போக
மையநீ யெய்துதற் கரிதால், விரும்பின ராகி யமரரு மிரு
ந்தார் விண்ணவ ரிடத்தவ ளார்வம், புரிந்திடா தனது
பேரொழி லவட னுளத்திடைப் பொறிப்பல்கா னுதியால்.

(இ-ள்.) ஐய - அரசனே!, அமரரும் - தேவர்களும், விரும்பினர் ஆகி இருந்தார் - (அத்தமயந்தியை) விரும்பியிருந்தார்; கைரவ மலர் -

அல்லிமலரானது, கரு புயல் மறைக்கும் - கரிய மேகத்தினாலே மறைக்கப்பட்டிருக்கின்ற, மதி கதிர் - சந்திரனது கிரணத்தை, வேட்டல் - அனுபவித்தலை, பெறுது - பெறமாட்டாது, அதுபோல் - அம்மலர் போல, அரும்பு இள முறுவல் - அரும்புகின்ற புன்சிரிப்பை யுடையவளாகிய (அத்தேவரால் விரும்பப்பட்டிருக்கின்ற) தமயந்தியினது, இளமுலை - இளமுலையினது, போகம் - அனுபவமானது, நீ எய்துதற்கு அரிது - நீ அடைதற்கு அரிதாயிருக்கும், விண்ணவரிடத்து - அத்தேவரிடத்தே, அவள் - அம்மங்கையானவள், ஆவம் புரிந்திடாது - ஆசையைச் செய்யாதிருக்கும்படியாக, உனது பேர் எழில - நினது ஒப்புயர்வில்லாத அழகை, அவள் உளத்து இடை - அவளது மனத்தின் கண்ணே, பொறிப்பல - (யான்) எழுதிவைப்பேன், காணுதி - (நீ என் வல்லமையைப்) பார், எ-று. ஆல, தன, — அசை.

(க - து) உன்னழகை தமயந்தி உள்ளத தெழுதுவேனென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

அமரர் - இந்திரன்முதலியோர். அமரரு மென்னும் உம்மை உயர்வு சிறப்பு. தான் முன்னறிந்தமையைச் சொல்லுதலால் இருக்கின்ற தென்றது இருந்தாலும் நிறந்தகாலத்தாற் கூறிற்று. 'விரும்பினராயமரருமிருந்தார்' என்னும் பதப்பொருளால் எய்துதலரிதெனப் பட்டதைச் சாதித்தலாலே செய்யுட்குறியணி. இதனை அங்கமாகக் கொண்டு உவமையணி வந்தது. 'உனது பேரெழிலவளுளத்திடைப் பொறிப்பல்'எனவே உன துயர்வொப்பில்லாத அழகைக் குறித்து அவளிடத்தே பலவிதத்தாலும் புகழ்ந்து அவளது நினைப்பைவிட்டு நீங்காதிருக்கச்செய்வே னென்றதாயிற்று. இங்ஙனஞ் செய்தல் அரிதாதலாலே தகுதிப்பறிப் பாரென்றதற்கு வல்லமை யென்னுஞ் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. (உக)

[இதனால் அப்படியே செய்யலாமே என்றோடு சொல்லுதலாற் பயனென்னென்றதற்கு உத்தரமும் அரசன் அதற்குக் காதல்கூர்மொழி சில சொன்னமையுஞ் சொல்லப்படுகின்றன.]

செய்தொழில் பயனு லுரைப்பரோ யன்றித் தெளிகுந ருரையினு லுரையார், உரைமுற் றுடன்பா டெய்துவான் முன்ன ரறைந்தன னென்மட வன்னம், பெய்தசொல் லமுத முள்ளெலாம் பரந்து பெருகிமேல் வழிதலபோ னகையாக், கையினுற் பசும்பொற் சிறகர்தை வந்து காதல் கூர் மொழிசில புகன்றான்.

(இ-ள்.) ஐய - அரசனே!, தெளிகுநர் - விவேகிகள், செய் தொழில் - (தம்மால்) செய்யப்படு முபகாரத்தை, பயனுல உரைப்பரோ அன்றி - (அதன்) காரியத்தினாலே சொல்லுவரோ யல்லாமல், உரையினுல் உரையார் - வாக்கினால் சொல்லார்; முற்று - முழுதும், உடன்பாடு - (உன்) சம்மதியை, எய்துவான் - அடையும்பொருட்டாகவே, முன்னர் அறைந்தனன் என - முன்னுகச் சொல்லினனென்று

சொல்லியதாக, மடம் அன்னம் - இளமைபொருந்திய அன்னத்தினு லே, பெய்த சொல் அமுதம் - பெய்யப்பட்ட சொல்லாகிய அமிர்தமா னது, உள் எலாம் பரந்து - உள்ளிடமெல்லாம் பரவி, பெருகி - பெருக் கெடுத்து, மேல் வழிதல் போல - மேலே (வாய்வழியால்) வெளிப்படு தல்போலும், நகையா - நகைசெய்து, கையினுல் - கரத்தினுலே, பசு பொன் - பசிய பொன்வடிவமாகிய, சிறகர் தைவந்து - சிறகுகளைத் தடவி, காதல் கூர் மொழி சில - ஆசைமிகுந்த சில மொழிகளை, புகன் ருன் - (அரசன்) சொன்னுன், எ-று.

(க - து.) அரசன் அன்னத்தைத் தடவிக்கொடுத்து ஆசையோடு சிலவார்த்தை சொல்லுவான் என்பதாம்.

முற்று மென்பதனும்மை தொக்கது. அம் முற்றுமென்னுஞ் சொல் சிறிதும் பிறிதொன்றைக் குறித்ததன்றெனினும் பொருள்பட நின்றது. உடன்பா டெய்தாமற்செய்தால் அங்ஙனஞ் செய்யப்பட டதை நீ அங்கீகாரஞ் செய்யாமற் போவாயாயின் என முயற்சி வினைத் திராப் பழிதரு மென்னும் பொருளைக்காட்டுதற்கு 'உடன் பாடெய்துவான் முன்னரறைந்தனன்' என்றது. இதனுலே பின் செய் யப்படு முபகாரத்தை முன்னே சொல்லுதல் தகா தென்றதாயிற்று. "செயதொழிற்பயனே யுளைப்பதையன்றி, ஐயமுறநிடுதி யென்ப தான முன்னா" என்வும் பாடமுண்டு, அப்பாடத்திற்கு இப்பொருள் அமையாமை காண்க. அன்றியும் ஐயமுறநிடுதி என நிறுவி நீ அங்கீ காரஞ் செய்வாயோ செய்யாயோவென்று நான் சந்தேகமுற்று எனப் பொருள்கூறினும் அமையும். முதலடியிற்சொல்லப்பட்ட பொதுப் பொருளாலே இரண்டாமடியிற் சொல்லப்பட்ட முன்னரறைதல் தகா தென்னுஞ் சிறப்புப்பொருளைச் சாதித்தலாலே வேற்றுப்பொருள் வைப்பணி. "பெய்தசொல்லமுதம்" குடவளையினங்கள் வயிறுளைந் தென்னும் பாட்டு முதலியவற்ற்ற சொல்லப்பட்டவை. சொல்லமு தம் - உருவகவணி. தெள்ளமுதமென்ப பாடங்கூறின் உருவகவயாவு நவிற்சியணியாம. அமுதத்தை அதிகமாகக் குடித்தவனுக்கு எதிர்த் துச் சிறிது வெளிப்படுமாதலின் வெண்மைபற்றி அவனது நகையை அவ்வெளிப்படு மமுதமாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. இது அவ் வுருவகத்தா லுய்விக்கப்பட்டது 'காதல் கூர்மொழி சில' என்றதற்கு அன்னத்தினுலே விரும்பப்படுகிற சில மொழியெனவும் தனது ஆசை மிகுதியை வெளிப்படுத்துகிற சில மொழியெனவு மிருபொருள் கொள்க. (௩0)

[இதுமுதலிய சிலபாடல்களாலே முன் காதல்கூர் மொழிசில வென்னப்பட்டவை சொல்லப்படுகின்றன.]

பொலன்சிறைப் பவளக் கடிகைவா யன்னநின் பொற் பினுக் குவமைவே றின்று, நலங்கெழு குணனு முரைப்ப தற் கரிது நல்லெழில பகருமுன் னூலோ, ரிலங்கெழி லளவு குணமென வுரைப்ப ரிதற்குமேற் கோளென நின் னைத், துலங்குறக் கண்டேன் விரகநோய் தீர்க்கு மருந்து நின் சொல்லின்வே றுளதோ.

(இ - ள்.) பொலன் சிறை - பொன்வடிவாகிய சிறைகளையும், பவளம் கடிகை வாய - பவளத் துண்டுபோலும் வாயையுமுடைய, அன்னம் - அன்னமே!, நின் பொறபினுக்கு - உனது அழகுக்கு, உவமை வேறு இன்று - வேறுவமை இல்லை, நலம் கெழு குணனும் - நன்மைபொருந்திய (உன்) குணமும், உரைப்பதற்கு அரிது - சொல்லுதற்கு அரிதாகும், நல் எழில் பகரும் - நல்ல வழகி னிலக்கணத்தைச் சொல்லுகின்ற, முன் நூலோர் - பழைய நூலோர், இலங்கு - (ஒரு பொருளின்மேல்) விளங்காநின்ற, எழில் அளவு - அழகி னளவாகவே, குணம் என - குணமும் (அதின்மிருக்கும்) என்று, உரைப்பர் - சொல்லுவார், இதற்கு - இந்த சித்தாந்தத்திற்கு, மேற்கோள் என - உதாரணமாக, துலங்கு உற - விளங்காநிற்க, நின்னை கண்டேன் - உன்னை (நான்) பார்த்தேன், விரகம் நோய் தீர்க்கும் மருந்து - விரகத்தாலாகிய காமவியாதியை நீக்குகின்ற ஔஷதம், நின் சொல்லின் வேறு உளதோ - உனது சொல்லைப்பார்க்கிலும் (எனக்கு) வேறு இருக்கின்றதோ, எ-று.

(க - து.) அன்னமே! என் விரகநோய்க்கு மருந்து உன் சொல்லேயல்லாது வேறுண்டோ என்றான் நளன் என்பதாம்.

'உவமை வேறின்று' என்றதனால் அதற்கு அதுவே ஒப்பென்றதாயிற்று. 'எழிலளவு குணமெனல்' எதிலே யெவ்வள வழகிருக்குமோ அதில் அவ்வளவு குணமிருக்கு மென்றல். நின்னை மேற்கோளெனக் கண்டே னென்றால் அவ்விரண்டிற்கும் நீ இடமாயிருக்கின்று யென்றதாயிற்று. எழிலளவு குணமெனப்பட்டதைச் சாதித்தற்கு முன் வாக்கியப்பொருள் ஏதுவாகையால் செய்யுட்குறியணி. 'விரகநோய் தீர்க்குமருந்து நின்சொலின் வேறுளதோ' என்றதற்கு அவளைக் கூட்டுதல் உன்னாலன்றி முடியா தென்பது கருத்து. (௩௧)

வெண்ணகைத் துவர்வா யணங்கெழில் பலரும் விளம்பினா நின்மொழி யவளென், கண்ணெதிர்ப் பட்டாள் போலுமெய்த் துணையாற் கருத்தினாற் காணலே காண்டல், னண்ணிமுற் றோன்றும் பொருளுநுண் ணியதே னுடற்கரியலா முகத்திற், பண்ணிய நோக்க நோக்குநர்க் கழகு பயப்பதை யன்றிவே றுளதோ.

(இ - ள்.) வெள் நகை - வெள்ளிய பற்களையும், துவர் வாய் - பவளம்போலும் வாயையுமுடைய, அணங்கு எழில் - தமயந்தியினது அழகை, பலரும் - (விதாபதேசத்தி லிருந்துவந்த) பலரும், விளம்பினர் - (எனக்குச்) சொன்னார் (ஆயினும்), நின் மொழி - உன் சொற்களாலே, அவள் - அம்மங்கை, என் கண் எதிர்ப்பட்டாள் போலும் - என்து கண்முன் பார்க்கப்பட்டவள் போலஙின்றாள்; மெய் - மெய்மையாக, துணையால் - நட்பாளனாலும், கருத்தினால் - (தன்) மனத்தினாலும், காணலே - (எல்லாவற்றையும்) காணுதலே, காண்டல் - காட்சியாகும், முன் நண்ணி - எதிரிட்டதே பொருந்தி, தோன்றும் பொருளும் - தோன்றுகின்ற பொருளையும், நுண்ணியதேல் -

றுட்பமானதாயிருக்கின், நாடுதல் கரியலா - காணுதற்குச் சான்று காத, முகத்தில் - முகத்திடத்தே, பண்ணிய - உண்டாக்கப்பட்ட, நோக்கம் - கண்ணானது, நோக்குநாக்கு - (அப்படித் துணைவனுளுங் கருத்திஞலும்) காண்கின்ற அறிவுடையோர்க்கு, அழகு - அழகை, பயப்பதை அன்றி - (அம்முகத்துக்குச்) செய்வதல்லாமல், வேறு உளதோ - மற்றொருபயனைச் (செய்தற்கு) இருக்கின்றதோ, எ-று.

(க - து.) அன்னமே உன் சொல்லானது தமயந்தி என்முன் வந்தாற்போலு மிருக்கின்றது என்று நளன் என்பதாம்.

ஆப்தவாக்கியப் பிரமாணத்திஞலே 'தினமொழியவ ளென்கண்ணெதிரப்பட்டாளபோலும்' என்றுனைக 'மெய்' எனலால சந்தேகவிபரீதங்க ளொழிக்கப்பட்டன. துணையெனனுமபெயா அமச்சுவேந்து எனபவைபோலப் பணபிககாயிறறு, தனமனமபோலவே துணைவனுமென்று அவனிடத்துள்ள நமபிககையை வெளிப்படுத்துதறகுக கருத்திஞலெனபது சொல்லப்பட்டது. இதஞலே தனகாட்சியிலுந துணைவனகாட்சியே உயாவின தென்றதாயிறறு. எங்குமுள்ள வெல்லாவறறையுந துணைவன வாயமொழியையுந தனகருத்தையுங் கொண்டு காணககூடுமாதலால அவற்றுற காணுதலே காட்சியென்றும், தூரத்தி லுள்ளவறறையேயனறிச சமீபத்திலுள்ள அணுமுதலிய நுண்ணியபொருளகளையுங கணணைககொண்டு காணககூடாமையால் அவற்றுற காணபார்க்கு இககணணுற பயனில்லையென்றுஞ் சொல்லப்பட்டன. "நணணிமுறறேனறும பொருளுளம பிரியிறுபடுதற கரியவான் முகத்திற பணணியநோக்கம்" எனபபாடங்கூறி அதற்கு எதிரேயுள்ள பொருளை மனந தனனைவிட்டுப பிரிந்தாற காணமாட்டாத கண்ணெனப பொருளகூறுவாருமுண்டு. அது இதன முதனான் முடிபின வேறுபடுமம அத்துணைச சிறப்பின்றி நிற்றலறிக. (ரூஉ)

முருந்திள முறுவ லழகுரைத் தெவரு மூட்டிய காம
வெந் தீயிற், சொரிந்திடு நெய்யிற் குணனெலா முரைத்தி
சொலலுமவ் வழலிடைப பெய்து, கரிந்தபைந் தளிரின்
வாடுமெற் குறிததுக் கனன்றுகூற் றுறுதிசை யமர்ந்து,
வருஞ்சிறு தென்றன் மலையவெவ விடங்கால வாளரா
வுயிர்ப்பென லாமால.

(இ-ள்.) முருந்து இள முறுவல் - மயிலிறகினடிபோலும் சிறிய பறகளை யுடையவளது, அழகு - அழகை, உரைதது - (எனக்குச்) சொல்லி, எவரும் - (விதாபபதேசத்து திருந்தவந்த) பலராலும், மூட்டிய - (அச்சொறகளாகிய விறகிலே) மூட்டப்பட்ட, காமம் வெந்தீயில் - காமமாகிய வெப்பம்பொருந்திய நெருப்பிலே, சொரிந்திடு நெய்யின் - சொரியப்பட்ட நெய்யாக, குணன் எல்லாம் உரைத்தி - (அவ) ளழகையெல்லாம் சொலலினை ; சொல்லும் - சொல்லப்பட்ட, அ அழலிடை பெய்து - அக் காமநெருப்பில் இடப்பட்டு, கரிந்த - கருகின, பை தளிரின் வாடும் - பசிய தளிராக வாடுகின்ற, என் குறித்து - என்னைக்குறித்து, கனன்று - சுட்டுக்கொண்டு, கூற்று உறு திசை -

யமனானவன் வாசஞ்செய்யப்பெற்ற தென்றிசையில், அமர்ந்து - பொருந்தி, வரும் சிறு தென்றல் - வருகின்ற இளந்தென்றலை, மலையம் - பொதியமலையிலுள்ள, வாள் அரா - ஒளிபொருந்திய பாம்புகளது, வெம் விடம் கால - கொடிய நஞ்சைப் பொழிகின்ற, உயிர்ப்பு எனல் ஆம் - ஊதுகாற்றென்று சொல்லலாம், எ-று.

(க - து.) தென்றற்காற்றைப் பாம்புகளினது உயிர்ப்பென்று சொல்லலாம் என்பதாம்.

அவர்போலத் தமயந்தியி னழகுமாத்திரமே யன்றி நீ அவள் பிறப்பு முதலியவற்றையுஞ் சொன்னாயென்றற்குக் 'குணன்' என்றும், அவற்றுளினி யறியவேண்டுவது சிறிதுமில்லையென்றற்கு 'எலாம்' என்றுங் கூறினனென்க. 'கூற்றுறு திசையமர்ந்து வருஞ் சிறு தென்றல்' என்றது சகவாசகுணம் பற்றி உயிர்க்கொலைசெய்யுந் தன்மைத் தென்பது தோன்றற்கென்க. பொதியமலையிலே சந்தனமரங்களின் மணம்பற்றிப் பாம்புகள் அதிகமா யிருத்தலால் 'மலையவெவ் விடங்கால வாளரா' என்றான். விறகிலே நெருப்பு மூட்டி நெய்வார்த்து அதனை யெரிவித்தற்கு ஊதுதல் உலகவழக்க மாதலால் அங்ஙனஞ் சொல்லப்பட்டது. தென்றலை அவ்வூதுகாற்றாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. இது உருவகத்தை அங்கமாகக்கொண்டு வந்தது. (ருங)

வெண்கதிர் பரப்பித் தணந்தவ ரிதய மெழுகென
வுருக்கும்வெண் டிங்கள், கண்கவர் வனப்பி னணங்கினை
நினைந்து கவலுமென் னுளத்தினைக் கன்றத், தண்கதிர்
பெறுவென் றழற்றுவெங் கதிர்கள் டனித்தனிக் கவர்வதற்
கன்றோ, வொண்சுடர் இரவி யிடத்தினிற் றிங்கள் தொறு
மினி துறவுசெய் குவதே

(இ-ள்.) வெண் கதிர் பரப்பி - வெள்ளிய கிரணங்களை விரித்து, தணந்தவர் இதயம் - பிரிந்தவரது மனத்தை, மெழுகு என உருக்கும் - (தீயிற்பட்ட) மெழுகென்னும்படி உருக்காநின்ற, வெண் திங்கள் - வெண்மையான சந்திரனது, ஒண் சுடர் இரவியிடத்தினில் - ஒள்ளிய கிரணங்களையுடைய சூரியனிடத்தே, திங்கள் தொறும் - மாதந்தோறும், இனிது உறவு செய்குவது - இனிதாக நட்பைச் செய்துவருவது, கண் கவர் வனப்பின் அணங்கினை - கண்களைக் கவர்கின்ற அழகையுடைய அத்தமயந்தியை, நினைந்து - எண்ணி, கவலும் என் உளத்தினை - துன்பப்படுகின்ற எனது மனத்தை, கன்ற - சுடுதற்கு, தண் கதிர் - சீதள கிரணங்கள், பெறு என்று - (வல்லமை) பெறுவனவல்லவென்று, அழற்று வெம் கதிர்கள் - சுடுகின்ற உஷ்ணகிரணங்களை, தனித்தனி - ஒவ்வொன்றாக, கவர்வதற்கு அன்றோ - வௌவுதற் கன்றோ, எ-று.

(க - து.) சந்திரன் என்னைச் சுடுதற்கே மாதந்தோறுஞ் சூரியனிடத்தில் உறவுசெய்கின்றானென்றனன் என்பதாம்.

சீதளகிரணத்தினாலே தணந்த பலரையுஞ் சுடாநின்ற சந்திரன் தன்னுள்ளத்தைச் சுடுதற்கு அக்கிரண முதவாதென்று சூரியகிரணத்தை வாங்குகிறதாகச் சொல்லலால் தன்னை அவரின் மேற்பட்ட மன

வலியை யுடையவனென்று அங்ஙனஞ் செய்கின்று னென்பது குறிப்பிக்கப்பட்டதாயிற்று. சந்திரன் அமாவாசைதோறுஞ் சூரியனோடுறவு செய்தற்குப் பயனுகாத அழற்றுவெங்கதிரக டனித்தனிக் கவாதலைப் பயனுக்கக் குறித்தலாலே பயனற்றகுறிப்பணி. (ரு௪)

[இதனால் அன்னத்தைத் தூதுவிடுதல் சொல்லப்படுகின்றது.]

காதலங் கடலின் கரைபெற்ற கயனுற காரண மின்றி
யே காட்டப், போதரும புணைய தாதியென் னுள்ளம்
புலம்புகொண் டினைவது தவிர்ப்பான, தூதுநீ போயமுன்
னுரைத்தவா முடித்த றேமறு புகழ்நினக் கென்ன, வாத
ரம பெருக நன்மொழி புகன்றவ் வனத்தினை மடந்தை
பால் விடுத்தான

(இ-ள்) காதல் அம கடலின் கரை பெற்றகு - ஆசையாகிய அழகிய கடலினது கரையை (நான்) பெறுதற்கு, காரணம இன்றி - ஏதுவில்லாமல், காட்ட - (அதனைக்) காண்பிக்க, அயனுல் - விதியினால், போதரும புணையது ஆதி - வந்த தெப்பமாகு, என உள்ளம - என மனமானது, புலம்பு கொண்டு - துன்பத்தைக்கொண்டு, இனைவது - வருந்துதலை, தவிர்ப்பான் - நீக்கும்படியாக, தூது - தூதாக, நீ போய - நீ சென்று, முன உரைத்த ஆறு - முன்னே (உன்னால்) சொல்லப்பட்டபடி, முடித்தல - நிறைவேற்றல், நினக்கு - உனக்கு, தோம அறு புகழ - குற்றமற்ற கீர்த்தியாகும, என்ன - என்று, ஆதரம பெருக - அன்பானது வளர, நல மொழி புகன்று - முகமன்சொற்களைச் சொல்லி, அ அன்னத்தினை - அந்த அன்னத்தை, மடந்தைபால விடுத்தான - தமயந்தியிடத்து அனுப்பினன், எ-று.

(க - து.) நளமஹாராஜன் அன்னத்தைத் தமயந்தியிடத்துத் தூதுவிட்டான் என்பதாம.

காதல - தமயந்திமேலாசை கரைபெறுதல் - அவளையடைதல். இங்கே காரணமின்மை - தன்முயற்சியில்லாமை. காரணமின்றி அயனுற்போதரும புணையென்வே என்முயற்சியாலன்றி முன்னே நல்வினையாற் கிடைத்த புணையென்றதாயிற்று. இம் முதலவாக்கியம் உருவகவணி. 'முன்னுரைத்தவா முடித்தி' என்வே நீதானே இதுகாரியத்திலே முயலாநிற்க நான் உன்னை முயலவித்தல் பிசைபட்ட மாவைப் பிசைதல் போலுமா மென்றதாயிற்று. முடித்தல் புகழெனக் காரண காரியங்களுக்கு ஒற்றுமையைச் சொல்லுதலால ஏதுவணி. தோமறு புகழ் - உலகமுள்ளளவும அழியாது நிற்கும் புகழ. (ருரு)

[இதனால் போம்போது அதற்குச் சொல்லப்பட்டவையும் பின் வருந்தி யிருக்கின்றபடியுஞ் சொல்லப்படுகின்றன.]

போதரு நெறியி னன்மைகள் பயக்க பொருந்துறு
கிளையொடு புல்லி, யாதரம பெருகு மளியனை மறவே
லாயிழை யருண்முகம் பெற்றுத், தீதற வினாவில் வருதி

யென் றுரைத்துத் திங்களி னருஞ்சுதை தீற்று, தாதவிழ்
தாம மாடமேற் றானுந் தனியுமா யிருந்துட றளர்ந்தான்.

(இ-ள்.) போதரும் நெறியில் - போகின்ற வழியில், நன்மைகள் - சுபங்களானவை, பயக்க - (உனக்கு) உண்டாருக, பொருந்து உறு கிளை யொடு புல்லி - பொருந்திய (உன்) சுற்றத்துடனே கூடி, ஆதரம் பெருகும் அளியனை - ஆசையானது வளரப்பெற்றிருக்கின்ற எளியேனை, மறவேல் - மறவாதே, ஆயிழை - தமயந்தியினது, அருள் முகம் பெற்று - அருளோடுகூடிய வாக்கை அடைந்து, தீது அற - குற்ற மற, வினையில் வருதி என்று உரைத்து - சீக்கிரத்தில் வாவென்று சொல்லி, திங்களின் - சந்திரனைப்போலும், அரு சுதை - அரிய சுண்ணச் சாந்தை, தீற்று - தீற்றப் பெற்றுள்ள, தாது அவிழ் தாமம் - பொடியையுடைய மலர்ந்த பூமாலைகளையுடைய, மாடமேல் - மேல்வீட்டிலே, தானும் - தானும், தனியும் ஆய இருந்து - ஒருவரு முடனில்லாமையு மாகி இருந்து, உடல் தளர்ந்தான் - உடம்பு தளரப்பெற்றிருந்தான், எ-று.

(க - து) நளன் அன்னத்தைத் தூதுபோயவாவென்று சொல்லி யனுப்பித் தனித்திருந்து உடல் வருந்தினான் என்பதாம்.

நன்மைகள் பயக்க வென்றது வாழ்த்து, மறவே லென்றது வேண்டிக்கோடல், வருதியென்றது விதி. முகம்—ஆகுபெயர். நீ மீண்டுவருதற்குக் காலநீட்டிப்புண்டாமாயின் அதுவரையில் என்னுயிர் நிற்கமாட்டாது, உன்முயற்சி வீணாய்ப் பழிப்படுமென்பது தோன்றற் குத் 'தீதறவினையில் வருதியென்றான்' என்க. விடுத்தபின் னுரைத்தல் பொருந்துமோவெனின், போகத் தொடங்குகையில் ஆசைமிகுதியாற் சொல்லுதலும் உலகவழக்க மாதலாலே பொருந்துமென் றறிக 'தா னுந் தனியுமாயிருந்து' என்றதனால் உயிர்போற் சிறந்த நட்பாளரை யும் விலக்கியிருந்தா னென்றதாயிற்று　　(௩௯)

[இதுமுத லிரண்டு பாட்டுகளால் அன்னத்தின்
செலவு சொல்லப்படுகின்றது.]

ஈங்கிவன் மாழ்காந் தன்னமென் சொல்லா லின்னுயிர்
தாங்கின னிருப்பத், தீங்கரும் பனுக்கு மாங்குயிற் கிளவி
செவ்விகண் களிப்புற நோக்கி, யாங்கணுற் றிறைப்
பகலேற் பகல தாக்குவ லெனமனம் வலியாப், பூங்கனி
நிறைநீர்ப் பொற்குட மெதிரப் போயது பொலன் சிறை
யன்னம்

(இ-ள்.) ஈங்கு - இவ்விடத்தே, இவன் - இவ்வரசன், மாழ்காந்து - அறிவுகலங்கி, அன்னம் - அன்னத்தினது, மென் சொல்லால் - மெல்லிய சொல்லால், இன் உயிர் தாங்கினன் - இனியதாகிய வுயிரைத் தாங்கினவனாகி, இருப்ப - இருக்க, தீ கரும்பு - மதுரமாகிய கன்னலை, அனுக்கும் - கெடுக்கின்ற, மா குயில் - மாங்குயில் (இசைபோலும்), கிளவி - சொல்லையுடையவளது, செவ்வி - அழகை, ஆங்கண் உற்று - அவளிருக்கின்ற இடத்தை அடைந்து, கண் களிப்பு உற நோக்கி -

(என்) கண் களிகூரப் பாரதது, இற்றை பகலை - இத்தினததை, நல் பகலது ஆக்குவல் என - நல்லதின மாககுவனென்று, மனம் வலியா - மனததிலெண்ணி, பூ கனி - அழகிய பழமும், நிறை நீா - நிறைந்த நீாையுடைய, பொன் குடம - பொறகுடமும், எதிர - தனக கெதிாப் பட, பொலன சிறை அனனம - பொற்சிறைகளையுடைய அனனமா னது, போயது - போயிறறு, எ-று.

(க-து.) அனனமானது நறசகுனங காணச சென்றது என்பதாம்.

அனனமென்சொல்லா லிஙஙனுயிாதாஙகுதல் அது தன விருப்பப பொருளைப பெறுதறகு உபாயமாகையாலே தைரியஙகொணடிருத தல். பூஙகனி - அவவனததி ஞோமரததின பழம். பழமும நிறை நீாக்குடமும் எதிாபபடின அவை விருமபபபட்ட காரியங கைகூடு மென்பதை முனனறிவிககினற நல்ல நிமிததஙகளாம். இது நிமித் தநூலிலே சொல்லபபடுவது. (ஙஎ)

கட்புலன் கதுவா துயர்ந்துபின னெவருங காண்வர
வெள்ளிடைப பறந்து, புட்செறி வாவி புகாதகல விசும்
பிற் பொன்னுரைத தாலெனப போகி, நுட்பமாய குநா
க்கு மதிசயம் பயபப நொடிவரைப புகுநததல் வன்னம்,
வட்கிவெண் மதியஞ் சவிகெட வொளிரு மாடமார் குண்
டின புரமே.

(இ - ள்.) அ அனனம - அவவனனமானது, கண - கடபொறிக ளுக்கு, புலன - விஷயமாக, கதுவாது - பறறபபடாமல, உயாநது - மேலெழுமபி, பின எவருமக காண்வர - (அதன) பினபு யாவருமக (தன் னைக) காண, வெள்ளிடை பறநது - ஆகாசததிற பறநது, புள செறி வாவி புகாது - பறவைகளானவை நெருஙகபபெறற தடாகஙகளிலே செல்லாமல, அகல விசுமபில - விரிவுள்ள ஆகாசமாகிய (உரை கல் லில்), பொன உரைததால் என - (தனசிறைகளின) பொனனை உரைத் ததுபோல, போகி - சென்று, நுடபம - காலநுடபததில, ஆய்குநாக கும் - ஆராய்கினறவருககும, அதிசயம பயபப - ஆசசரியமுணடாக, நொடி வரை - நொடியளவில, வெள் மதியம - வெளளைச சநதிரனு னது, வடகி - நாணி, சவி கெட - அழகுகெட, ஒளிரும - விளஙகா நினற, மாடம் ஆா குண்டினபுரம் - மாளிகைகளால நிறைந்த குண் டினபுரததிலே, புகுநதது - சென்றது, எ-று.

(க-து.) அன்னமானது குண்டினபுரததிற சென்றது என்பதாம்.

மேலெழும்புகிற விசையாற் காணபபடாமையாற 'கட்புலன கது வாதுயாந்து' என்றும், பின மேலிருந்து வழி நிதானிததுச செல்லுஞ் சிறிது காலததிலே யாவராலுங கணகளிகூரக காணபபடுதலால் 'எவ ருங் காண்வர வெள்ளிடைப் பறநது' என்றும, சுறறததோடு கூடி யின்புறுதலையும் வழியிடையிற சறறே தங்கி இளைப்பாறுதலையும் விட்டு அரசன் காரியததையே பெரிதாக நினைத்துபபோதலாற் 'புட் செறி வாவிபுகாது' என்றும், சொல்லப்பட்டன. உரைத்ததென்னும்

வினைமுற்று உரைத்தாலெனத் திரிந்தது. பறத்தல் வேகத்தினாலே அதன் பொன்னொளி தானாயாகவிழுதல் பறப்பி பொன்னுரைத்ததென்றுக் குறித்தலால தற்குறிப்பணி- 'நுட்பமாயகுகா' கீழே அக்நிழலைப் பார்த்து அக்கணத்திறறுனே மேலே பாரப்பவர். (௩௮)

[இதனால் வனக்காட்சி சொல்லப்படுகின்றது.]

மன்னுமாநகர்மேயவளனெலா
மன்னங்கண்ணுற்றதிசயித்தேகலு
முன்னங்கண்டதுமூசுவண்டார்த்தெழப்
பொன்னந்தாதவிழ்பபூந்துணர்ச்சோலையே.

(இ-ள்) அன்னம் - அன்னமானது, மன்னும் - நிலைபெற்ற, மாநகா - பெருமைபொருந்திய குண்டினபுரத்தில, மேய வளன் எல்லாம் - தங்கிய சிறப்புகளையெல்லாம, கண்ணுற்று - பார்த்து, அதிசயித்து - ஆச்சரியப்பட்டு, ஏகலும் - போமளவில், முன்னம் - (தன) எதிரே, மூசு வண்டு - மொய்க்கின்ற வண்டுகளானவை, ஆர்த்து எழ - ஒலிசெய்து எழும்பாநிற்க, பொன் தாது அவிழ - பொன்னிறம பொருந்திய பொடியுடனே விரிகின்ற, பூ துணா - மலாக கொத்துகளையுடைய, சோலை - (தமயந்தியினது) வனத்தை, கண்டது - பார்த்தது, எ-று.

(க - து) அன்னமானது குண்டினபுரத்தைப் பார்த்துப் போம்போது தமயந்தி வனத்தைக் கண்டது என்பதாம.

அரும்புகளாயிருக்கும்போது மொய்த்த வண்டுகள் விரியும்போது அருசியெழு மாதலால் ஆர்த்தெழவெனனும் வினையெச்சம் அவிழென்னும வினைகொண்ட தெனக அன்றி தன்சிறைக்காற்றால் அருசியெழக கண்டது என முடிக்கினு மமையும. (௩௯)

[இதனால அச்சமயத்திலே தமயந்தி அங்கே வருதற்கு நிமித்தஞ் சொல்லப்படுகினறது.]

சோலைவாயிற்சுடருநிலாமணி
யாலவாலத்தவிர்மதியாற்புனல்
காலவாய்ந்தகதிர்மணிமுல்லையின்
கோலநாண்மலர்கொய்வதற்கெய்தினள்.

(இ - ள்.) சோலைவாயில - அச்சோலையின்கண்ணே, ஆலவாலத்து - பாத்திகளில், சுடரும் நிலாமணி - விளங்குகின்ற சந்திரகாந்தங்கள், அவிா மதியால் - விளங்காநின்ற கிரணத்தினாலே, புனல் கால - நீரைக் கக்க, வாய்ந்த - (அதனால்) நிலைபெற்ற, முல்லையின் - முல்லைக்கொடிகளுடைய, கதிா மணி - கிரணத்தையுடைய முத்துப் போலும், கோலம் - அழகிய, நாள் மலா - அன்றுபூத்த மலாகளை, கொய்வதற்கு - பறிப்பதற்கு, எய்தினள் - (தமயந்தி)வந்தாள், எ-று.

(க-து.) தமயந்தி மலர் கொய்தற்குச் சோலைக்கு வந்தாள் என்பதாம்.

இப்பாட்டின் பொருள் செல்வமிகுதியைச் சொல்லுதலென்னு மிலக்கணத்தால் வீறுகோளணியும், சந்திரகாந்தத்தின் அவ்வளவு நீர்ப்பெருக்குக்கு முல்லைக்குரு சம்பந்த மில்லாமையிலே சம்பந்தத்தைக் கற்பித்தலென்னு மிலக்கணத்தால் தொடர்புயர்வு நவிற்சியணியும், ஆதலால் ஒரு தொடர்ப்பொருட் கலவையணியாம். (சo)

[இதனாலே காட்சி சொல்லப்படுகின்றது.]

மீதுலாயவெண்டாரகைநாப்பணிற்
சீதவொண்கதிர்த்திங்கள்கண்டாலென
மாதர்நோக்கினமடந்தையர்நாப்பணிற்
காதலகூர்தமயந்தியைக்கண்டதே

(இ-ள்.) மீது உலாய - ஆகாசத்திலே திரிகின்ற, வெள் தாரகை நாப்பணில் - வெள்ளிய நக்ஷத்திரங்களது நடுவில், சீதம் - குளிர்ச்சி பொருந்திய, ஒள் கதிர் - ஒள்ளிய கிரணங்களையுடைய, திங்கள் - சந்திரனை, கண்டால் என - கண்டதுபோல, மாதர் நோக்கின - அழகிய பார்வையையுடைய, மடந்தையர் நாப்பணில் - மாதர்களின் நடுவில், காதல் கூர் - விரும்பப்படுகிற, தமயந்தியை - தமயந்தியென்பவளை, கண்டது - (அவ்வன்னமானது) பார்த்தது, எ-று.

(க-து.) அன்னம் தமயந்தியைக் கண்டது என்பதாம்.

இவ்வுவமையினாலே தமயந்தியினுடைய தோழிகளெல்லாரும் ஒரு நிகரான அழகுடையவர்களாய் விளங்கலும் அவள் அவர்களுக்குள்ளே நடுநாயகமாய் விளங்கலுங் காண்க. (சக)

[இதனால் அவளை வியந்தமை சொல்லப்படுகின்றது.]

கண்ணுங்கையுமுகமுங்கமலமா
நண்ணுஞ்சண்பகநாண்மலர்மேனியா
வண்ணலவேளைவழிபடற்காற்றிய
வண்ணமாலைகொலென்றுமருண்டதே

(இ-ள்.) கண்ணும் கையும் முகமும் - கண்களும் கைகளும் வதனமும், கமலம் ஆ - தாமரை மலர்களாகவும், மேனி - வடிவமானது, நண்ணும் - பொருந்திய, நாள் சண்பகம் மலர் ஆ - அன்றுபூத்த சண்பகத்தினுடைய மலர்களாகவு நினைத்து, அண்ணல் - தலைவனாகிய, வேளை - மன்மதனை, வழிபடற்கு - பூசித்தற்பொருட்டு, ஆற்றிய - செய்யப்பட்ட, வண்ணம் மாலை என்று - அழகிய மாலையென்று, மருண்டது - மயங்கிறது (அன்னம்), எ-று. கொல் - அசை.

(க-து.) அன்னமானது தமயந்தியை மாலையென்று மயங்கியது என்பதாம்.

கமலமாக மலராக வென்கிற செயவென் வாய்பாட்டு வினையெச்சங்க ளீறுகெட்டு வந்தன. அவற்றை முடித்தற்குத் தோன்றலா

லென்னுஞ் சொல் வருவிக்கப் பட்டது. நாலுசாதிகளிலுஞ் சிறந்த பதுமினி சாதிக்கு "சண்பக மலரொனச் சிவந்த மேனியாள்" என்று சொல்லப்பட்டமையால் பதுமினிசாதியாள் என்றதாயிற்று. தமயந்தியை அப்படிப்பட்ட மாலையென்று மயங்குதலால் மயக்கவணியாம்()

[இது முதன் மூன்று பாட்டுகளால் பின் அன்னத்தின் செயல் சொல்லப்படுகின்றது.]

வழிந்துதெள்ளமுதூறவளர்ந்துமா
சொழிந்ததிங்களையூர்வளைந்தாலெனச்
செழுந்தண்கோதைதிருமுகமுள்ளுறச்
சுழன்றுதாழ்ந்ததுதூசிறையன்னமே.

(இ - ள்) தூ சிறை அன்னம் - பரிசுத்தமாகிய சிறைகளையுடைய அன்னமானது, வழிந்து - பெருகவெடுத்து, தெள் அமுது ஊற - தெள்ளிய வமிர்தமானது சுரக்க, வளர்ந்து - நிறைந்து, மாசு ஒழிந்த - குற்றத்தினின்று நீங்கிய, திங்களை - சந்திரனை, ஊர் வளைந்தால் என - பரிவேடமானது சூழ்ந்தது போல, கோதை - தமயந்தியினது, செழுந்தண் - செழுமையுங் குளிர்ச்சியும் பொருந்திய, திரு முகம் - அழகிய முகமானது, உள் உற - நடுவில் பொருந்த, சுழன்று தாழ்ந்தது - சுற்றி வந்து இறங்கிற்று, எ-று.

(க - து.) அன்னமானது தமயந்தியைச் சுற்றிவந்து இறங்கிற்று என்பதாம்.

'மாசொழிந்த திங்களை' என்றதற்குக் களங்கமில்லாத சந்திரன் ஒன்றுண்டாயின் அதனை யென்னும் பொருள்கூறி இல்பொருளுவமையாகிய வுமையும். சந்திரனுக்கு அமிர்தம்போல முகத்திற்கு மதுரவாக்குக் கொள்க. ஊர்வளைந்தாலெனச் 'சுழன்று' எனவே சுழற்சி வேகத்தினால் அந்த பொன்னொளி வலயமாக வீழ்ந்ததென்பது தோன்றுதலறிக. பறவைகள் ஆகாசத்திலிருந்து கீழே யிறங்கும்போது தங்குதற்குத் தகுந்த இடத்தைச் சுழன்றுகொண்டே பார்த்தல் சுபாவம். உவமையுந் தன்மைநவிற்சியுஞ் சேர்தலால் சேர்வையணி. (உங)

தெய்வத்தாமரைப்போதுறைசெல்வியுங்
கொவ்வைவாயயிராணியுங்கூறுமிந்
நவ்விநோக்கிக்கிணையெனநாட்டுத
லெவ்வமென்னவிகழ்ந்துவியந்ததே

(இ - ள்.) தெய்வம் - தெய்வத்தன்மை பொருந்திய, தாமரை போது உறை செல்வியும் - தாமரைப்பூவினகண் வாசஞ்செய்கின்ற திருமாதும், கொவ்வை வாய் அயிராணியும் - கோவைப்பழம்போலும் வாயையுடைய இந்திராணியும், கூறும் - சொல்லப்பட்ட, இ நவ்வி நோக்கிக்கு - மான்கண்போலுங் கண்களையுடைய இவளுக்கு, இணை என - உபமான மாவரென்று, நாட்டுதல் - நிறுத்துதல், எவ்வம் என்ன

குற்றமென்று, இகழ்ந்து - (அவ்விருவரையும்) இகழ்ந்து, வியந்தது - (அன்னம் இவளழகைக்குறித்து) ஆச்சரியப்பட்டது, எ-று.

(க - து.) அன்னமானது இலக்குமியையும் இந்திராணியையு மிகழ்ந்து தமயந்தியைப் புகழ்ந்தது என்பதாம்.

உபமானங்களுக்குக் குறைவைச் சொல்லுதலால் எதிர்நிலை யுவமையணி. (சச)

வேறு.

சுலவுற்றெதிர்போகிய தூவியனங்
குலவுற்றபொலன்சிறையைகுவியா
நிலனுற்றெறிநீள்சிறைமெலவளியா
லலைவுற்றமருங்கினளஞ்சினளால.

(இ - ள்) சுலவு உற்று - சூழ்ந்து, எதிர் போகிய - (தமயந்தி) முன்பு சென்ற, தூவி அன்னம் - இறகுகளையுடைய அன்னமானது, குலவு உற்ற - விளைவு பொருந்திய, பொலன் சிறையை குவியா - பொன் மயமாகிய சிறகுகளைக் குவித்து, நிலன் உற்று - பூமியினகண் பொருந்தி, எறி - (அப்போது) உதறப்பட்ட, நீள் சிறை மெல் வளியால் - விரிந்த (அதன) சிறகுகளது மெல்லிய காற்றோசையால், அலைவு உற்ற மருங்கினள் - அசைவுற்ற இடையையுடைய தமயந்தியானவள, அஞ்சினள் - அச்சமுற்றாள், எ-று

(க-து ) தமயந்தியானவள அன்னத்தின் சிறகுகளின் காற்றோசையா லச்சமுற்றாள் என்பதாம்.

வேறொன்றிற் கருத்துவைத் திருக்கின்றவளுக்குமுன்னே அன னஞ் சரேலென்று இறங்குஞ் சமயத்தில் விரித்த தடித்துக்கொள்ளுஞ் சிறைகளின் காற்றோசை ஆகஸ்மிகமாக வுண்டானதனால் அச்சமுண்டா யிற்றென்க. அன்றியும் 'அலைவுற்ற மருங்கினள்' என்றால் காற்றால் இடை முரியுமென றஞ்சினா ளெனினுமாம். தன்மைத்விசியணியாம். இதுமுதற் பததொன்பது பாட்டுகள் பெரும்பாலும் முதற்சீர் புளி மாச்சீரோனும் தேமாச்சீரோனும் பெற்று மற்றை மூன்றும் புளிமாச்சீர்க ளாகி வருகிற அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (சரு)

[இதனால் மங்கையர்கள் அதனிடத்துண்டான விருப்ப மிகுதி சொல்லப்படுகின்றது.]

பொறியின்வழிநெஞ்சுபுகுத்தியிடா
ரறிவின்னறிவாயவருமபொருளைப்
பிறிதொன்றறநோக்குதல்போற்பிறழு
மறியுண்கணின்மங்கையர்நோக்கினரால்.

(இ - ள்) பொறியின் வழி - ஐம்பொறிகளின் வழியிலே, நெஞ்சு புகுத்தி இடார் - மனத்தைச் செலுத்தாதயோகிகள், அறிவின் - ஞானக்கண்ணினாலே, அறிவாய - அறிவுருவாகிய, அரு பொருளை - பிர மத்தை, பிறிது ஒன்று அற - மற்றொருவிஷய சம்பந்தம் நீங்க, நோக் குதல் போல் - பார்த்தல்போல், மங்கையர் - தோழிகளானவர், (பிறிது

ஒன்று அற) - மற்றொரு விஷயசம்பந்தம் நீங்க, பிறழும் - புரளு கின்ற, மறி - மான்கண்போலும், உண் கணின - (மை) யுண்ட (மூக்க) கண்களாலே, (அறிவாய - ) அறிவையுடையதாகிய, (அரும்பொருளை -) அபூர்வமாகிய அன்னத்தை, நோக்கினா - பார்த்தார், எ-று. ஆல் - அசை.

(க-து.) பாங்கிமார்கள் அன்னத்தைப் பார்த்தார்கள் என்பதாம்.

அறிவின்னறிவாய என்ற ஒற்றிரட்ட வேண்டா விடத்துச் சந்த நோக்கி யிரட்டித்தது. உலகம் அருஞானமய மாகியும் பிரமம் ஞான மய மாகியு நிற்றலின் 'அறிவாய' என்றார். "அகரவுயிர்போ லறிவாகி யெங்கு, நிகரிலிறைநிறைந்து நிறைந்து" என்பதனானு மறிக. 'பிறிதொன் றற' அப்பிரம மன்றி யிரண்டாவ தொருபொரு ளில்லையாக வென்னு மாம். உவமை. (சசு)

[இதனால் தமயந்தி அதனை விரும்பிப் பிடிக்கத்தொடங் கினமை சொல்லப்படுகின்றது.]

அணித்தாயரிதாயவரும்பொருளைப்
பிணிப்பானசைவைத்தமாபெறறியர்போ
லணித்தாயவனங்கவர்வானசையான்
மணிபூணசையாதுவதிந்தனளால்

(இ - ள்) அணித்து ஆய - தேகத்தினு ளிருக்கின்றதாய், அரிது ஆய - (பெறுதற்) கரிதாகிய, அரு பொருளை - பிரமத்தை, பிணிப் பான - கண்டு பிடித்தற்பொருட்டு, நசை வைத்து - (அதனிடத்தே) ஆசைவைத்து, அமா பெற்றியா போல - அசைவற்று நிற்கின்ற மனச் செய்கையையுடைய முனிவர்போல், அணித்து ஆய அனனம கவா வான - சமீபத்திலே வந்த அன்னப்பறவையைப் பிடித்தற்பொருட்டு, நசையால் - (அதன்மேல் வைக்கப்பட்ட) ஆசையினாலே, மணி பூண் அசையாது - நவமணிகளாலாகிய ஆபரணமானது அசையாதிருக்கும் படி, வதிந்தனள் - (தமயந்தி) தங்கினள், எ-று.

(க - து.) தமயந்தி அன்னத்தைப் பிடிக்கும்படி யசைவற நிருந் தாள் என்பதாம்.

பிரமம் உடம்புதோறும் உயிர்க்குயிராய்க் கலந்து நிற்றலின் அணித்தா யென்றதற்குத் தேகத்தினு ளிருக்கின்றதா யென்ப பொருள் கூறப்பட்டது. 'பூணசையாது' எனவே வடிவ மசையாமை கூறப் பட்ட தாயிற்று. யோகிகள் மன மசையாமல் வைத்துப் பிரமத்தைக் காணுமாறு "வாயுநிறப மனநின்று மனந்தானிறப்ப பொறிநின்று, பாயபொறிக ணிற்பவிடா படுபுனபுலனக ணின்றனவா, லாயபுலன்க ணின்றமையா லகிலந்தோன்று துள்ளத்தே, தூயபரமானந்த பரஞ் சோதி தோன்றக்கண்டிருந்தார்" என்பதனாலறிக. உவமை. (சஎ)

[இதனால் அப்போது அன்னத்தின்செயல் சொல்லப்படுகின்றது.]

அவிர்பூஞ்ஞெலியாமலடக்கினளாய்க்
கவர்வான்வரல்கண்டுமகன்றிலதாய்த்

துவர்வாய்மயிறொட்டிடலாகுமெனு
நவைதீரனமெல்லநடந்ததுவே.

(இ - ள்.) அனனம் - அனனமானது, அவிா பூண் ஒலியாமல் - விளங்காநினற பூணகளை ஒலியாதிருகக, அடககினள ஆய - அடக்கினவளாகி, கவாவான வரல கணடும் - (தனனைப) பிடிக்குமபடியாக வருதலைப பாாததும, அகனறிலது ஆய - (தைரியததிறைல) ஓடிபபோகாததாகி, துவா வாய - பவளமபோலும வாயையுடைய, மயில் - மயிலபோலபவளாலே, தொட்டிடல் ஆகும எனும - பிடிககக் கூடுமெனகினற, நவை தீர - இகழ்ச்சியானது தீர, மெலல நடநதது - மெளள நடநதது, எ-று.

(க-து.) அனனமானது தமயநதி தனனைபபிடிககும்படி மெளள நடநதது எனபதாம.

'தொட்டிடலாகுமெனு நவைதீா' எனறலிற பிடிததற கெளிதெனறு மெண்ணததை அவளுக குணடாககி அவளகை தனமேல் விழ வருந்தோறும் தன குதிபபினாலே தபபிததுககொணடு அவண் முயற்சியை வீணாககிற றெனக. தீரவென வினையெச்சம ாறுகெட்டது. விரைந்து நடப்பிற பிடிபடாதெனறு தொடராளென அவணடைக் கேறப மெல்லநடநத தெனக. (சஅ)

புளினத்தடமேவியபோகுமன
மெளிதிற்றனகைம்மலரெயதுறுமோ
வுளம்வைத்தமையென்னெனவொண்ணுதலார்
நளினக்கைபுடைத்துநகைத்தனரால

(இ - ள்.) ஒள் நுதலாா - காநதிபொருந்திய நெறறியையுடைய தோழிகள், புளினம் - மணறகுனறுகளையுடைய, தடம் - தடாகததிலே, மேவிய போகும் - வாசஞ்செய்யும்படியாகப போகினற, அனனம் - அன்னமானது, எளிதில - எளிதிலே, தன கை மலா - தனனுடைய கைகளாகிய தாமரை மலாகளிலே, எய்துறுமோ - அடையுமோ, உளம் வைத்தமை என என - (எம்பிராட்டி அதனிடததே) மனம வைத்தமைக்குக் காரணம் யாதெனறு, நளினம் கை - தாமரைமலாபோலும் (தம்) கைகளை, புடைதது - தட்டி, நகைததனா - சிரிததாா, எ-று

(க - து.) தமயந்தி அன்னததைப்பிடிகக மனம் வைத்ததைப் பாங்கியாகண்டு கைதட்டி நகைத்தாாகள் எனபதாம.

புளினமென்றதறகுப் பறவைகளி னிணததையுடைய வெனினுமாம். தமயந்தியின முயற்சி வீணுதலைக்கண்டு இஙஙனம் பரிகாசஞ் செய்தா ரென்க. (சகூ)

[இதுமுத னுன்குபாட்டுகளாலே பிடித்தற்குச் செய்யு முயற்சி சொல்லப்படுகினறது]

புனைமேகலையீர்கைபுடைத்துநகைத்
தனமேகவியற்றுதலன்புகொலோ

தனியேகுவனின்மினெனத்தகையாத்
துனியோடுரைசெய்துதொடர்ந்தனளே.

(இ-ள்.) புனை மேகலையீர் - அலங்கரிக்கப்பட்ட மேகலாபரணத்தை யுடையவரோ!, கை புடைத்து நகைத்து - கைதட்டிச் சிரித்து, அன்னம் ஏக இயற்றுதல் - அன்னத்தை ஓடிப்போகச் செய்தற்குக் காரணம், அன்போ - (என்மேலுள்ள) அன்போ, தனி ஏகுவன் - தனியாக (நான்) போவேன், நின்மின் என - (நீர்) நில்லுமென்று, துனியோடு உரை செய்து - கோபத்தோடு சொல்லி, தகையா - ஆணையிட்டு, தொடர்ந்தனள் - (தமயந்தியானவள்) அதன்பின் போனாள், எ - று. கொல் - ஏ - அசைகள்.

(க - து.) தமயந்தியானவள் பாங்கிமாரை நிறுத்திவிட்டுத் தனியே அன்னத்தின்பின் போனாள் என்பதாம்.

கைபுடைத்த வொலியோடு மேகலையொலியு மெழுதல்தோன்றப் 'புனைமேகலையீர்' என்றாளென்க. 'அன்புகொலோ' என்லால் என்மேல் அன்பிலீ ராதலால் இங்ஙனஞ் செய்கின்றீ ரென்றதாயிற்று. தகைத்தல் என்பின்னே தொடருவீராயின் எனக்குத் துரோகஞ் செய்தவ ராகக்கடவீரென் றாணைகூறல். (ருo)

முகிழ்மென்முலைவாணுதன்மொய்குழலார்
நகைசெய்வதுகண்டுளநாணினளா
யகல்கின்றபொலன்சிறையன்னநிழ
னிகரென்னவொதுங்கினணேரிழையே.

(இ-ள்.) நேர் இழை - தகுந்த வணியையுடைய தமயந்தியானவள், முகிழ் மென் முலை - தாமரை யரும்புபோலும் மெல்லிய முலைகளையும், வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையும், மொய் குழலார் - நெருங்கிய கூந்தலையும் உடைய தோழிகள், நகை செய்வது கண்டு - பரிகாசஞ்செய்தலைப் பார்த்து, உளம் நாணினள் ஆய - மனத்திலே வெட்கமுற்றவளாகி, அகல்கின்ற - நீங்குகின்ற, பொலன் சிறை அன்னம் - பொன்மயமாகிய சிறைகளையுடைய அன்னத்தினது, நிழல் - நிழலானது, நிகர் என்ன - (தனக்கு) நிகராமென, ஒதுங்கினள் - நடந்தாள், எ-று.

(க - து.) அன்னந் தன்னிழல் தன்னோடு செல்லுதல்போல தமயந்தி அன்னத்தின்பின் சென்றாள் என்பதாம்.

தகையப்பட்ட தோழிகள் தனது பிடிக்கமாட்டாமையைக்கண்டு சிரித்தலால் நாணங்கொண்டா ளென்க. 'அன்ன நிழனிகரென்னவொதுங்கினள்' எனவே அந்நாணம் அவளது முயற்சியை எழுப்பலாவ் அதன் சாயைபோல விடாதுசென்றா ளென்க. உவமையணி. (ருக)

வடியுண்கணிமாமுலைதாங்கியதா
லிடுகும்மிடையென்படுமேகலெனப்
பிடிமென்னடைமங்கையர்பேசமறுத்
தடிமென்மலர்பேர்த்தனளாயிழையே.

(இ - ள்.) வடி உண் கணி - கூரமைபொருந்திய (மை) யுண்ட கண்களையுடையவளே!, மா முலை தாங்கியதால் - பெரிய முலைகளைச் சுமததலால், இடுகும் இடை - துவளுகினற (உன) இடையானது, என் படும் - (நடததலாலே) எனன பாடுபடும், ஏகல் என - போகாதே யென்று, பிடி மெல் நடை - பெண்யானைபோல மெல்லிய நடையை யுடைய, மங்கையா பேச - தோழிகள சொல்ல, மறுதது - (அதை) மறுதது, ஆய் இழை - ஆராயநது கொள்ளபபட்ட வணியையுடையவ ளாகிய தமயநதியானவள, அடி மெல் மலா - அடியுருககொண்ட மெல்லிய தாமரைமலாகளை, போததனள் - எடுததாள், எ-று.

(க - து.) தோழிமாா தடுக்கக கேளாது தமயநதி யன்னததைத் தொடாநதாள எனபதாம்.

'என்படும்' எனறதறகு இப்படியிருககிற இது யான நடநதுசெல் லின மிக வருந்துமெனறு நீதானே அறிவா யெனபதுபொருள. முன் னே எளிதிற றனகைமமல வெயதுறுமோ எனறு பிடிபடாமை கூறிக் கேளாமற் போகையாலே பினனும வருததங்கூறி மறுததா ரென்க. தகாததொழில செயயுமபோது விலககல தோழியா கடனுதலின "நகுதற பொருட்டனறு நட்டன மிகுதிககண, மேறசென றிடிததற் பொருட்டு" எனபதனுலு மறிக. 'அடிமெனமலா' எனலால அடிவருந் துதலுங கொளக. ஏக—முன்னிலை யேவலொருமை யெதிாமறை வினைமுறறு. மலராகிய வுபமானம நடததறசெயகையிலே உபயோ கிததறகு அடியாகிய உபமேயததி னுருவஙகொணடு வேறுபட்டதா கச் சொல்லலால திரிபணி. (ருஉ)

> செய்பபட்ட செழுங்கமலததிலனனங்
> கைப்பட்டதுபட்டதெனககருதா
> மைபபட்டமலர்ப்பொழிலமாதவிவாயப
> பொய்ப்பட்டமருங்கினள்புககனளே

(இ-ள்.) பொய் பட்ட மருங்கினள - பொயகூறுதறகிடமாகிய இடையையுடைய தமயநதியானவள, செய பட்ட - கழனியிலுண்டா கிய, செழு கமலததில் - செழிய தாமரைப பூவிலிருக்கினற, அன்னம் - அன்னமானது, கை பட்டது பட்டது என கருதா - (என) கையிலே அகப்பட்டது அகபபட்டதெனறு நினைததுககொண்டு, மை பட்ட - மேகத்தையளாவிய, மலா பொழில் - மலாகளையுடைய சோலையிலே, மாதவிவாய் - குருககததியினிடததே, புககனள் - சென்றுள, எ-று.

(க - து.) தமயந்தி அனனமகபபட்டதெனறு குருக்கததிமரத்தி னிடத்தே சென்றுள் எனபதாம்.

இருநதுஞ் சிறுத்துக் காணப்படாமை பற்றி இல்லையென்று கொள்ளபபடுதலாலே 'பொய்பபட்ட மருஙகு' எனறு சொல்லப்பட் டது. 'கருதாபபுக்கனள்' எனறதனுல் அடிபெயாக்குந் தோறும் அப்படி நினைத்தா ளெனக. பட்டதெனபது விரைவுபறறி அடுக்கி இறநத காலததிலே வநதது. புக்கன ளெனறதறகு அனனம் அவளை அப்படி

நினைக்கச்செய்து வருத்தித்துக் குருக்கத்தியின்கீழ்த் தனிப்படக் கொண்டுபோயிற்றென்பதே கருத்தாகக் கொள்க. (ருங)

[இதனால் அன்னம் நன்மொழிகள் பேசத்தொடங்
கினமை சொல்லப்படுகின்றது.]

தொடர்ந்தாள கலுழ்தூமுகமவேரொழுக
நடந்தாயிழையெய்த்தனளென்னநயந்
திடந்தேர்ந்தவளின்புறுநன்மொழிகண்
மடந்தாழிளவன்னமவழங்கியதே.

(இ - ள்.) மடம் தாழ் - அறியாமை போகிய, இள அன்னம் - இளமைபொருந்திய அன்னமானது, தொடர்ந்தாள் - (என்பின்னே) தொடர்ந்தவளாகி, கலுழ - விளங்குகின்ற, தூ முகம் - பரிசுத்தமாகிய முகத்தினின்றும், வேர் ஒழுக - வேர்வையானது ஒழுகாநிற்க, நடந்து - நடந்து, ஆயிழை எய்த்தனள் என்ன - தமயந்தியானவள் இளைத்தாளென்று, நயந்து - விரும்பி, இடம் தேர்ந்து - (தகுதியான) இடத்தை யறிந்து, அவள் - அந்தத் தமயந்தியானவள், இன்பு உறு - இன்பத்தை அடைதற்குக் காரணமானவைகளாகிய, நல மொழிகள் - நல்ல சொற்களை, வழங்கியது - சொல்லிற்று, எ-று.

(க - து.) அன்னமானது தமயந்தி இன்பமடைய நல்லவார்த்தைகளைச் சொல்லிற்று என்பதாம்.

இடந்தேர்தல் தனித்துப் பேசத்தக்க இடத்தை யறிதல். (ருச)

[இதுமுதல் இரண்டுபாட்டுகளாலே முன்சொல்லப்பட்ட நன்
மொழிகள் இவையென்று சொல்லப்படுகின்றன.]

கோடுந்தியகொம்மைமுலைப்பொறையால்
வாடுமிடைமாமயில்வாரலெனத்
தோடுண்குழன்மங்கையரிற்றுணைமா
வாடுந்தளிரங்கைமறித்தனபார்.

(இ - ள்.) துணை மா - பூங்கொத்துகளையுடைய மாமரங்களானவை, கோடு உந்திய - யானைக்கொம்புகளைக் கீழ்ப்படுத்திய, கொம்மை முலை பொறையால் - திரட்சிபொருந்திய முலைகளது பாரத்தினாலே, வாடும் இடை - வாடுகின்ற இடையை யுடைய, மா மயில் - பெருமைபொருந்திய மயிலே!, வாரல் என - (நடந்து) வராதே யென்று, தோடு உண் குழல் - மலரிதழ்களை உட்கொண்ட கூந்தலை யுடைய, மங்கையரின் - (உன்னுடைய) தோழிகள் போல், ஆடும் தளிர் அம் கை - அசைகின்ற தளிர்களாகிய அழகிய கைகளாலே, மறித்தன - (உன்னை) விலக்குகின்றன, பார் - (நீ அவற்றைப்) பார், எ-று.

(க - து.) மாமரங்களானவை தளிர்களாகிய விரல்களாலே வாராதே என்று விலக்குகின்றன பார் என்பதாம்.

'வடியுண்கணி' என்ற பாட்டிலே மங்கையா மறுத்தமையைச் சுட்டி இதிலே மங்கையரின்னை றுவமிக்கப்பட்டது. மாமரங்களை அங்ஙன மறிகின்றனவாகக் குறித்தலினாலே தற்குறிப்பணி. இதற்கு மங்கையரினென்னு முவமையும் தளிரங்கையெனனு முருவகமும் அங்கங்கள். (ருரு)

விண்ணின்னியங்குமமென்னைமேவரநீ
மண்ணின்னடந்தெவ்வணமவெளவுதியா
லெண்ணின்னிதுகண்டவாயார்நகையார்
பெண்ணின்னமுதேவரலபேதைமையே.

(இ - ள.) பெண் இன் அமுதே - பெண்களிலே இனிய வமிர்தம் போல் விளங்குகின்றவளே!, விண்ணில் இயங்கும - ஆகாசத்திலும் திரிகின்ற, என்னை மேவர - என்னை அடைதற்கு, நீ - நீ, மண்ணில் நடந்து - பூமியின்மேல் நடந்துவந்து, எவ்வணம் வெளவுதி - எவ்விதத்தினாலே பிடிக்கமாட்டுவாய், எண்ணின் - ஆலோசிக்குமிடத்து, இது கண்டவா - இச்செய்கையைப் பார்த்தவருள், யார் நகையார் - யாவர் சிரியார், வரல் - (மங்கைப்பருவமடைந்த வுனது) வருதல், பேதைமை - பேதைப்பருவத்தின் செயலா யிருக்கின்றது, எ-று.

(க - து.) தமயந்தியே! நீ என்னைப்பிடிக்க வருதலறிவீனமென் றன்னரு சொல்லிற்று என்பதாம்.

'விண்ணி னியங்கு மென்னை' யென்றதற்குப் பூமியிலன்றி ஆகாசத்தி லுஞ் சஞ்சரிக்கவல்ல வென்னை யென்றும், 'மண்ணினடந்து' என்றதற் குப் பூமியொன்றிலே மாத்திரஞ் சஞ்சரிக்கின்ற நீ அப்பூமியின்மேல் நடந் தென்றும், விரித்துரைத்துக் கொள்க. 'பெண்ணினமுதே' என லாலும், 'வரல்பேதைமை' எனலாலும் மங்கைப்பருவ முடைமை சொல்லப்பட்டது. 'விண்ணினியங்கும்' எனனும பதப்பொருளாலும் 'மண்ணினடந்து' என்னும் பதப்பொருளாலும் வெளவக்கூடாமையும் இம்முதல் வாக்கியப்பொருளாலே 'வரல் பேதைமை' என்றதையுஞ் சாதித்தலாலே இவ்விரண்டு செய்யுட் குறியணிகள் கலந்துவந்த கலவையணி. (ருசு)

[இதனால் அரசன் காரியத்துக்கு உபயோகியாகிய தன்வரலாற் றின் சிறப்பை யுணர்த்தத்தொடங்கிச் சுற்றமுமிடமு முணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

என்றின்மரபோதுமிவட்கியையப்
பின்னமமொழிபேசுவலென்றயனூ
ரன்னந்தனதன்புறுசுற்றமியாம்
பொன்னின்னகர்யாங்கள்பொருந்திடமே.

(இ-ள்.) என்று-என்றுசொல்லி, இவட்கு இயைய - இவளுக்குப் பொருந்த, பின் - பின்பு, அ மொழி - அவ்வரசன் காரியத்தை, பேசுவல் என்று - சொல்வேனென் றெண்ணிக்கொண்டு, இன் மரபு

ஓதும் - இனிதாகிய (தன்) வரலாற்றைச் சொல்லுகின்றது, யாம் - யாங்கள், அயன் - நான்முகக்கடவுளால், ஊர - செலுத்தப்படுகின்ற, அன்னம் தனது - அன்னவாகனத்தினது, அன்பு உறு - அன்புமிகுந்த, சுற்றம் - உறவினம், யாங்கள் - நாங்கள், பொருந்து இடம் - தங்கப்பெற்ற இடமானது, பொன்னின் நகர் - தேவநகரமாகும், எ-று.

(க - து) அன்னமானது தன்சாதியையும் இருக்கு மிடத்தையும் கூறிற்று எனபதாம்.

என்றென்றது முன்னிரண்டு பாட்டையுஞ் சுட்டிநின்றது. பின் சொல்லப்படுவதாகிய அரசனா காரியத்திற்கு உபயோகி யாதலால் 'இன்மரபு' என்றது. 'அன்புறுசுற்றம்' என்றதனால் நெருங்கிய சம்பந்த முடைமை சொல்லப்பட்டதாயிற்று 'பொன்னின்னகா பொருந்திடம்' என்றால் எமமோடு பயிலுதல் மனிதாகட்கு அரிதென்றதாயிற்று. தன்னினத்தையுந் தழுவிக்கொண்டு யாமென்றும் யாங்களென்றும் கூறிற்று. (ருஎ)

[இதனால் தனவடிவம் பொன்மயமா யிருக்கைக்குக் காரணமுணாத்தல் சொல்லப்படுகின்றது.]

மலர்மேலயன்மானதவாவியினுட
பொலன்மெல்லிதழ்பூத்தசெழுங்கமல
நலனுர்வளையம்பலநாளுமயின்
றுலவாதொளிர்பொன்னிறமுற்றனமால.

(இ-ள்.) மலா மேல் அயன் - தாமரைப் பூமேலுள்ள நான்முகனது, மானத வாவியினுள் - மானச தடாகத்திலுள்ள, பொலன் - பொன்மயமாகிய, மெல் இதழ் பூத்த - மெல்லிய இதழ்கள் விரியப் பெற்ற, செழு கமலம் - செழிய தாமரை மலாகளையும், நலன் ஆர - நலம்பொருந்திய, வளையம் - இளவிலைச்சுருளகளையும், பல நாளும் அயின்று - பல தினமும் தின்று, உலவாது - அழியாமல், ஒளிர - விளங்குகின்ற, பொன் நிறம் - பொன்னுருவத்தை, உற்றனம் - அடைந்தோம், எ-று.

(க - து.) அன்னமானது தனவடிவு பொன்னிறமுற்ற காரணஞ் சொல்லிற்று எனபதாம்.

மானதவாவி சத்தியலோகத்தி லுள்ளது காரணகுணம் காரியத்தில உளதா மென்பதுபற்றிப பொறசமலமாகிய தம்முணவின் குணந் தமக்குண்டானமை சொல்லிற்று. (ருஅ)

[இதனால் பூமியில் வந்தமைக்குக் காரணமுணாத்தல் சொல்லப்படுகின்றது.]

களிமாமயிலன்னவர்காதலுறு
மளிநாண்மலராங்கணைவேளனையா
னளன்மாநகர்நாண்மலர்வாவியினல
வளநோக்குறமண்ணிடைவந்தனமால்.

(இ - ள்.) களி - களிப்பைத்தருகின்ற, மா - பெருமைபொருந்திய, மயில் அன்னவர் - மயில்போலுஞ் சாயலுடையவராகிய மகளிரால், காதல உறும் - விரும்பப்படுகின்ற, அளி நாண் - வண்டுகளினொழுங்காகிய நாரியையும், மலர் ஐங்கணை - மலர்களாகிய பஞ்சபாணத்தையுமுடைய, வேள் அனையான - மன்மதனைப்போலழகினனாகிய, நளன - நளமஹாராசனது, மா நகர் - பெரிய பட்டணத்திலேயுள்ள, நாள் மலர் - அன்றுபூத்த மலர்களையுடைய, வாவியின - தடாகத்தினது, நல வளம் - நல்ல வளத்தை, நோக்கு உற - பார்த்தற்பொருட்டு, மண்ணிடை - பூமியினிடத்துக்கு, வந்தனம - (யாம் வானுலகத்தை விட்டு) வந்தோம, எ-று.

(க-து.) நளனது வாவியைப் பார்க்கப் பொன்னுலகத்தைவிட்டு இவ்வுலகிற்கு வந்தோமென்று றன்னஞ் சொல்லிற்று என்பதாம.

நளனமேல் அவளுக்கு ஆசையை யெழுப்புதற்கு அவனழகை இங்ஙனஞ் சிறப்பித்துச் சொல்லியது. 'வளநோக்குற' என்றதற்கு அதில விளையாடுதற்பொருட் டென்பது கருத்து. (ருகூ)

[உலகமெங்கு மொழிவில்லாத திரிவிலேயும் தளர்வுதோன்றுமைக்குக் காரணமுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

விண்ணம்புவி பாதலமேவுகினு
நண்ணுந்துயரின்றெனநலவரமுன்
றண்ணங்கமலத்திறைதந்தனன்மைக
கண்ணென்றயில்கொண்டகனங்குழையே.

(இ - ள்.) மை கண் என்று - மை யெழுதப்பெற்ற கண்களென்று (பெயர்வைத்து), அயில் கொண்ட - (நஞ்சம் பூசப்பெற்ற) வேல்களைக் கொண்டிருக்கிற, கனம குழையே - கனம்பொருந்திய காதணியையுடையவளே!, தண் கமலத்து இறை - குளிர்ச்சிபொருந்திய தாமரைப்பூவிலிருக்கின்ற தலைவன, [பிரமா], விண் அம் புவி பாதலம் - தேவலோகம் அழகிய பூலோகம பாதாளலோகம் இவ்வனைத்தையும, மேவுகினும் - (ஒழிவின்றி யடைந்து) திரியினும், நண்ணும் - (உன்னை) யடையக்கடவதாகிய, துயர் - (தளர்ச்சித) துயரமானது, இன்று என - இல்லையென்று, நல் வரம் - நல்ல வரத்தை, முன் தந்தனன் - முன்பு (எனக்குக்) கொடுத்தான, எ-று அம் - அசை.

(க - து.) தமயந்தியே யாங்கள் மூவுலகிற சென்றாலும் துன்பமில்லையென்று பிரமன் வரங்கொடுத்தானென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

ஒருகாலத்தில் நான்முகனுக்கு வாகனமா யிருந்ததற்காகக் கொடுத்தா னென்க. இவ்வரத்தால் தளர்ச்சியின்றி இப்பூமியிலுள்ள தேசங்களையெல்லாம் ஒழிவின்றிநோக்கித் திரிகின்றே னென்பது இசையெச்சம். கண்ணிற்கு மைபோல வேலிற்கு நஞ்சம் வருவிக்கப்பட்டது.

[இதனால் வேட்டைக்காரர் முதலானவர் பிடிப்பரென்னுமச்சம் எனக்கில்லையெனல் சொல்லப்படுகின்றது.]

கௌவைக்கடல்சூழ்தருகாசினியிற்
றெய்வத்திறமேவியசீர்நளனே
வெளவுற்றிடினன்றியிம்மானிடர்தா
மெவ்வெப்படிவெளவினுமெய்துவனோ.

(இ-ள்.) கௌவை கடல் சூழ்தரு - ஒலியையுடைய கடலாலே சூழப்பட்ட, காசினியில் - பூமியிலே, தெய்வம் திறம் மேவிய - தேவ போகத்தைப் பொருந்திய, சீர் நளன் - பாக்கியத்தை யுடைய நள மகாராஜன், வெளவுற்றிடின் அன்றி - பிடித்தாலன்றி, இ மானிடர் தாம் - இம்மனிதர்தாம், எவ்வெப்படி வெளவினும் - எந்தெந்தவிதமாகப் பிடித்தாலும், எய்துவனோ - அகப்படுவேனோ, எ-று.

(க - து.) அன்னமானது யான் நளன்கையி லகப்படுவதன்றி மற்றவர்கையி லகப்படேனென்றது என்பதாம்.

நளன் பிறப்பினாலே மானிடனாயிருந்தும் போகத்தினாலே தேவனாகத் தோன்றலின் அவனிடத்தே மாத்திரம் என்னைப் பிடித்தற்கு வல்லமையுண்டென்று கூறிற்றென்பது கருத்து. மானிடரெனப் பொதுப்படக் கூறினாரேனும் தகுதிப்பற்றி வேட்டைக்காரர் முதலியோரென்று கொள்க. வலை கண்ணி படைக்கல முதலியவற்றைக்கொண்டு பறவைகளை வெளவுமாறுபலவு முடைமைக்கு 'எவ்வெப்படி வெளவினும்' என்றது. (சுக)

[இதுமுத லிரண்டுபாட்டுகளாலே அந்தெய்வபோகம் இதுவெனல் சொல்லப்படுகின்றது.]

ஒளிர்பொன்னுலகத்துறையும்பர்பிரா
னளியாற்புகலேவலுமாற்றுகிலேம்
வளர்பூவுறைவானவனேவலுமிந்
நளனேவலுமேநனிசெய்குவமால்.

(இ - ள்.) ஒளிர் பொன் உலகத்து - விளங்குகின்ற தெய்வ லோகத்தின்கண், உறை - வாசஞ்செய்கின்ற, உம்பர் பிரான் - இந்திரனது, அளியால் - அன்பினாலே, புகல் - சொல்லப்பட்ட, ஏவலும் - ஏவலையும், ஆற்றுகிலேம் - (யாம்) செய்யோம், வளர் - வளர்கின்ற, பூ உறை - தாமரைப்பூவின்கண் இருக்கின்ற, வானவன் - நான்முகக் கடவுளது, ஏவலும் - ஏவலையும், இ நளன் - இந்த நளனது, ஏவலுமே - ஏவலையுமே, நனி - மிகுதியாக, செய்குவம் - (யாம்) செய்வோம், எ-று.

(க-து.) பிரமனேவலும் நளனேவலுஞ் செய்வேமென் றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

தனக்கடங்கினவென் றேவும் வல்லமை யில்லாமையால் 'அளியாற் புகலேவலும்' என்றது. நனி செய்தல் - அவர்சொன்ன வளவினு

மதிகமாகச் செய்துமுடித்தல். இங்ஙனங் கூறலால் இந்திரனைக் காட்டிலும் சிறந்தவன நளனென்று குறிப்பித்த தாயிற்று. (சுஉ)

துளிதூங்கியவானதிதோய்ந்துநறுங்
குளிர்தூங்குகுறுந்துளிமென்சிறையாற்
களிதூங்கியகாமவிடாயகல
நளன்மேனியில்வீசுவநன்குறவே.

(இ - ள்) துளி - துளித்தலோடு, தூங்கிய - தங்கிய, வான் நதி தோய்ந்து - ஆகாசகங்கையிலே முழுகி, நறு குளிர் - நல்ல குளிர்ச்சியானது, தூங்கு - நிலையுறப்பெற்ற, குறு துளி - சிறிய துளிகளை, மெல் சிறையால் - மெல்லிய சிறைகளினாலே, களி தூங்கிய - களிப்பானது தங்கும்படியாகவும், காமம் விடாய் அகல - காமத்தாலாகிய தளர்ச்சியானது நீங்கும்படியாகவும், நளன் - நளனது, மேனியில் - உடம்பில், நன்கு உற - நன்றாகப்பட, வீசுவம் - (யாம்) வீசுவேம், எ-று.

(க - து.) ஆகாயகங்கையிலே முழுகித் துளிகள் பொருந்திய இறகுகளினாலே நளனது திருமேனியில் வீசுவேம் என்பதாம்.

வீசுவமென்றது எதிர்கால முற்றாயினும் எதிர்காலமுற்றுகள் இப்படிப்பட்ட விடங்களிலே செய்யேமாத திரமே யுணர்த்துமெனக. நளனுக்கு வேறு மகளிரோடு கூட்டுறவும் இவை அப்படி வீசுதலும் பொய்யாதலிற் குற்றமன்றோவெனின் அன்று. "பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த, நன்மைபயக்குமெனின்" என்று சொல்லப்பட்டமையின். புரைதீர்ந்த நன்மையாவது இதனால் அவனை வசப்படுத்தித் தகுந்த நாயகியோடு சேர்த்தலாம். (சுங)

[இனி நளனுடைய பலவகைப்பட்ட குணங்களையுஞ் சொல்லத்
தொடங்கி இதனாலே செல்வமும் அழகும் வேலின
சிறப்பும் உணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கலித்துறை

தெள்ளாரமுதந்தெளிவொத்தவந்தீஞ்சொனல்லாய
வள்வார்முரசங்கறங்குமணிமுன்றிலவேந்தன்
கள்வாயுமிழ்பூங்கணையேந்தியகாமனன்று
னள்ளார்வணங்குநளனெனனுமோர்நாமவேலான்.

(இ - ள்.) தெள் ஆர் அமுதம் - தெளிவுபொருந்திய தேவாமிர்தத்தினது, தெளிவு ஒத்த - சாரம்போன்ற, அம் தீ சொல் நல்லாய - அழகிய தித்திப்பாகிய வாக்கையுடைய தமயந்தியே!, வள் வார் முரசம் - வலிபொருந்திய வாரினாலிறுக்கப்பட்ட முரசவாத்தியமானது, கறங்கும் - ஒலிக்கப்பெற்றிருக்கின்ற, மணி - நவமணிகளையுடைய, முன்றில் - வீட்டின் முன்னிடத்தையும், நளன் எனும் - நளனென்று சொல்லப்படுகிற, ஓர் நாமம் - ஒப்பற்ற நாமதேயத்தையும் உடைய, வேந்தன் - அரச (னொருவன), கள் - தேனை, வாய் உமிழ் - இதழ்வாயினால் கக்குகின்ற, பூ கணை - மலரம்புகளை, ஏந்திய - தாங்கு

கின்ற, காமன் அன்னன் - மன்மதன்போ லழகுடையவன, நள்ளார் - பகைவா, வணஙகும - (தன்னை) வணஙகுதற்குக காரணமாயிருக் கினற, வேலான் - வேறபடையை யுடையவன், எ-று.

(க-து.) தமயந்தியே! மனமதனுககொபபானவன நளனென்னும் பெயரையுடையவன என்பதாம.

'மணிமுனறில்வேந்தன், காமனனனன, நளளாா வணஙகு வே லான' என முறையே செல்வம அழகு வேறபடை இவறறின சிறப்புக் கூறியவாறு காணக. மணி - பலதேசத்தாராலும் திறையளககக் குவிக் கப்பட்டவை. இலமுன முனறிலென நிலைமாறிய இலககணபபோலி. இதுமுதல் கசு - பாடடுகள பெருமபாலும் இடையி லொருபுளிமாங் கனிசசீரும ஏனைநானகும் மாசசீாகளுமாகி வருகிற நெடிலடி நான்கு கொண்ட கலித்துறைகள். (சுச)

[இதனுலே பின்னும அழகினபுகழசசி சொலலபபடுகினறது.]

வணடார்வஞ்செய்துமதுவுண்டுமிழ்மாலைமார்பன
றிண்டோளெழிலகேட்டவரமபையச்செமமனமாரபந்
தண்டாதுபுலலபபெறுதாறபெயாசசார்புநாடி
யொண்டார்புனையுநளகூபரனறனனையுறறாள்.

(இ-ள) வணடு - வணடுகளானவை, ஆரவம் செய்து - விரும்பி, மது உணடு உமிழ - தேனைககுடித்து உமிழபபெறுகிற, மாலை மார் பன - பூமாலையையணிந்த மாரபையுடைய நளமகாராஜனது, திண் தோள - வலியதோளகளது, எழில - அழகை, கேடடு - (எமமிடத்திற்) கேட்டு, அ அரமபை - அந்த அரமபையானவள், அ செமமல - அவ் வரசனது, மாாபம - மாாபை, தணடாது - நீஙகாமல, புலல பெறு தால் - தழுவுதறகுப பெறுத காரணத்தால, பெயா - (அவன) பெயரி னது, சாாபு நாடி - சமபந்தததை ஆராயந்து, ஒள தாா புனையும் - ஒளளிய பொனனரிமாலையைச சூடுகினற, நளகூபரன தனனை - நள கூபரனை, உறறாள - அடைந்தாள, எ று.

(க - து) நளனழகை யரமபைகேட்டு நளனைக கூடபபெறுமை யால் நளன பெயாகொண்ட குபேரனுமகனாகிய நளகூபரனைச் சோந் தாள என்பதாம.

அரம்பைக்கு அகரசசுட்டு அழகிற சிறந்தவளெனறு பெயாபெற் று விளங்குகினறமையைக் காடடுகினறது. தண்டாதுபுல்லல் - தனக் குக் கணவனுகபபெறறு எந்நாளும் புணாதல. தணடாமை - நீங்கா மை, இது "ஆறுமை தண்டாமையா யிரணடு நீஙகாமை" என்பதனு லறிக. நளகூபரன - குபேரன்மகன. நளகூபரனைச் சோதற்கு ஏது வாகாத நளனது பெயாச்சாாபு நாடுதலை ஏதுவாகக் குறிததலாலே ஏதுத்தற்குறிப்பணி. இதனுலே அவனழகுககு ஒப்பு இல்லையென்பது குறிப்பிககப்படுகினறது. (சுரு)

[இதனாலே இசைபாடற் புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

ஏகாவிசும்பினளன்பாடலையாங்கள்கூற
மாகாதிபனிவ்வரிபாடலவருங்கொலென்று
பாகூறவீணைபயிலவோன்முகம்பார்த்துரைப்ப
வாகாவெனலாலவற்கப்பெயர்சேர்த்தினரோ

(இ - ள்.) யாங்கள் - யாம், விசும்பின ஏகா - பொன்னுலகத்திற்கு (இவ்வுலகத்திருந்து) போய், நளன - நளராசனது, பாடலை கூற - இசைபாடுந்திறப்பைச்சொல்ல, மாகாதிபன - தேவேந்திரன், இ வரி பாடல - இப்பாட்டுப் பாடுதல், வருங்கொல என்று - (உனக்கு) வருமோவென்று, பாகு ஊற - பாகினசுவை (போலுஞ் சுவை) பெருக, வீணை பயில்வோன - வீணைபாடுகிற ஒரு கந்தாவனது, முகம் பார்த்து உரைப்ப - முகத்தை நோக்கிச்சொல்ல, ஆ ஆ எனலால் - (யாம) ஹா ஹா வென்று இகழ்தலால், அவற்கு - அக்கந்தாவனுக்கு, அ பெயா - அந்த ஹாஹா என்கிற பெயரை சேர்த்தினா - வைத்தார், எ-று.

(க - து.) இந்திரனமுன் நளன பாடலை யாங்கள் சொல்ல இந்திரன் கந்தருவனைப் பார்த்து இப்பாடல்பாட வருமோவென, கந்தருவனென்னலாகாவெனலால அவனுக்கு ஆகாவென்றுபேர் கொடுத்தார்கள் என்பதாம.

மாகம என்னும ஆகாசத்தினபெயா ஆகுபெயராயத் தேவலோகத்தை யுணாததினறது. அது வருமொழியோடு மரம + அடி = மராடி என்பதுபோலப் புணாநதுநின்றது. கொல விறுப்பொருளில் வந்தது. வரி - பாட்டு. அது "வரிசுணங்கெழுத்துப்பாட்டு" என்பதனாலறிக. ஆகாவெனலா லென்றதற்கு அக்கந்தருவன என்னலாகாவெனலா லென்பபொருள கூறுவாருமுண்டு. அவனுக்கு அப்பெயர் அங்ஙனந் தற்பவமாய வந்த வடமொழிப பெயராதலால அது சிறப்பனறெனக. வடமொழிப்பெயராதல் அமரத்திலுங் காண்க. ஆகாவெனனும பெயாககு வேறுகாரணத்தைக் கறபித்தலால் பிறிதிலை நவிறசியணி. இதனால நளன இசைபாடலில அக்கந்தருவனிலும வல்லவனெனனும்பொருள தோனறுகினறது. (சுசு)

[இதனால் நறகுணப் புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

உலனூறுசெய்தவுயர்மாமணித்தூண்செயதோளா
னலன்யாமுரைப்பநசைகூரயிராணிகொம்மை
முலைமேற்பொடித்தபுளகத்தினைமொய்த்தசெங்கண்
மலர்கீரும்புவதிற்கண்டிலன்வானவேந்தன்

(இ-ள்.) உலன - திரண்டகல்லை, நூறு செய்த - பொடிசெய்த, உயா - உயாவாகிய, மா மணி தூண் - பெரிய வச்சிரத்தூண்கள் போல, செய் - செய்யப்பட்ட, தோளான் - தோள்களையுடைய நளமகாராஜனது, நலன் - நற்குணத்தை, யாம் உரைப்ப - யாங்கள் சொல்லக் (கேட்டு), நசை கூா - (அவன்மேல்) ஆசைமிக்க, அயிராணி-

இந்திராணியினுடைய, கொம்மை முலை மேல் - இளமைபொருந்திய முலைகளின்மேலே, பொடித்த - உண்டாகிய, புளகத்தினை - மயிர் சிலிர்த்தலை, மொய்த்த - (தன வடிவத்திலே) நெருங்கிய, செம் - செவ்விய, கண் மலர் - நேத்திராரவிந்தங்களில், நீர் அரும்புவதின் - ஆனந்த நீரானது தோன்றலால், வான் வேந்தன் - தேவேந்திரனானவன், கண்டிலன் - பார்த்திலன், எ-று.

(க - து.) நளன் கீர்த்தியைக்கேட் டிந்திராணி முலைகள் பூரித்ததை இந்திரனுக் கானந்தக்கண்ணீர் தோன்றலாற் கண்டிலன் என்பதாம்.

வச்சிரமணி மற்றைப்பலமணிகளையும் பேதிக்கு முறுதியுடைய தாதலின் 'உயர்மாமணி' எனப்பட்டது. நலன்—அவன் பலகுணங்களும். புளகம் — உவகைச்சுவையைப் பற்றிய விறல். இந்திரனுக்கு ஆயிரங்கண்களாதலின் 'மொய்த்த செங்கண்' என்றது. புளகத்தைக் கண்டால் உள்ளப்புணர்ச்சியின் குற்றநோக்கி மனைவியைத் தண்டிப்பனென்பதுகருத்து. (சுஎ)

[இதுமுத லிரண்டுபாட்டுகளாலே முகப்புகழ்ச்சி சொல்லப்படுகின்றது.]

முருகுண்டுவண்டுபயிறார்நளன்வாண்முகத்தைப்
பெருவெண்மதியநிகரெய்தப்பெற்றமையன்றே
கருதுங்கமலத்துறைநான்முகன்கைவருந்த
வருதிங்கடோறும்புதிதாகவகுத்தல்செய்வான்.

(இ - ள்) கருதும் - நினைக்கின்ற, கமலத்து உறை - தாமரைப்பூவின்கண் இருக்கின்ற, நான்முகன் - நான்முகக்கடவுள், வண்டு - வண்டுகளானவை, முருகு உண்டு - தேனைக்குடித்து, பயில் - வாசஞ்செய்யப்பெற்ற, தார் நளன் - மாலையையுடைய நளமகாராசனது, வாள் முகத்தை - காந்திபொருந்திய வதனத்திற்கு, பெரு வெள் மதியம் - கலைநிறைந்த சந்திரன், நிகர் எய்த - ஒப்பை அடைய, பெற்றமை அன்றே - பெற்றமையாலன்றே, கை வருந்த - (தன்) கைகள் நோவ, வரு திங்கள் தோறும் - வருகின்ற மாதந்தோறும், புதிதாக - நூதனமாக, வகுத்தல் செய்வான் - உண்டாக்குகிறான், எ-று.

(க - து.) நளன் முகத்துக்குச் சந்திரனொவ்வாமையாற் பிரமன் அச்சந்திரனை மாதந்தோறும் புதிதாகப்படைக்கின்றான் என்பதாம்.

கருதல்—நளன் முகத்துக் கொப்பாவ தொருசந்திரனைச் செய்ய நினைத்தல். வல்லவனொருவன் தன்னாலே தொடங்கப்பட்டது பல முறை கெடுமாயினும் அது செவ்வையாக முற்றுப் பெறுமளவும் தன் முயற்சியை விடானாதலால் 'வருதிங்கடோறும் புதிதாக' வகுக்கின்றானென்க. நான்முகன் மாதந்தோறுஞ் சந்திரனைப் புதிதாகப் படைத்தற்கு ஏதுவாகாத அந்நிகரெய்தப்பெற்றமையை ஏதுவாகக் குறித்தலினாலே ஏதுத்தற்குறிப்பணி. இதனாலே நளன் முகஞ் சந்திரனைப் பார்க்கிலுஞ் சிறந்து விளங்குகின்றமை தோன்றுகின்றது. (சுஅ)

கோணைக்களிற்றுநளன்வாணமுகங்கூறுகென்று
யாணர்த்திருமாலருள்செய்தலும்யாஙகள்கூற
நாணிக்கமலமயனோடுமுகிழ்ப்பநாடிப்
பூணிற்பொலிந்தமுலைப்பூமகட்புல்லுமன்றே.

(இ - ள்.) கோணை களிறு - மாறுபாடுபொருந்திய யானைகளையுடைய, நளன - நளமகாராஜனது, வாள் முகம் - காந்திபொருந்திய முகச்சிறப்பை, கூறுக என்று - சொல்லக்கடவீரென்று, யாணர - அழகிய, திருமால - மஹாவிஷ்ணு, அருள் செய்தலும் - சொல்லியவளவிலே, யாங்கள் கூற - யாம சொல்ல, நாணி - வெட்கி, கமலம - நாபிககமலமானது, அயனோடு - நானமுகனோடு, முகிழப்ப - குவிய, நாடி - (அததருணம) பாரதது, பூணின பொலிந்த - ஆபரணததினாலே விளஙகுகினற, முலை - முலைகளையுடைய, பூமகள - திருமாதை, புல்லும் - (அககடவுள) கூடுவான, எ-று. ஐ - சாரியை.

(க - து.) விஷ்ணு நளனமுகதத தழகைககசொலலென்ன நாங்கள் சொல்லத தமது நாபிககமலம பிரமனுடன மூட, அதைககண்ட விஷ்ணுவானவ ரிலக்குமியை அணைநதாா என்பதாம்.

திருமால் நளன முகததைப புகழவிததலாகிய கபடததினாலே நாபிககமலததைக் குவிவிதது நான்முகனை மறைதது மனைவியைப் புணாதலாகிய விருபபத்தை முடித்தலால் பிறிதினவிரசியணி. இதனாலே நளன்முகம அககமலததினுஞ் சிறநதமை தோனறுகினறது. ()

[இதனாலே பொறுமை பூபாரந்தாங்குதல்களின்
புகழ்ச்சி சொலலப்படுகின்றது.]

சிறைவண்டுதண்ணெனமுகைசூழ்ந்துபைந்தேறன்மாந்தி
யறைகின்றதண்டார்புனையுந்திறலாடலவேந்தன்
பொறைதேரினங்கட்புவிமாதினைப்பொஙகுசெஞ்சூட்
டிறைவாளரவைநிகரென்னவியம்பலாமே.

(இ - ள்.) சிறை வண்டு - சிறைகளையுடைய வண்டுகளானவை, தண் என் முகை சூழ்ந்து - குளிர்சசிபொருந்திய அரும்புகளைச் சுற்றிக்கொண்டு, பைநதேறல் மாநதி - பசிய தேனைககுடித்து, அறைகின்ற - ஒலிககப்பெறற, தண தாா புனையும் - குளிர்சசிபொருந்திய மாலையைத் தரிததிருககினற, திறல் - வலிமையாலுண்டாகிய, ஆடல் - வெற்றியையுடைய, வேநதன - நளமகாராஜனுடைய, பொறை - (குற்றம்) பொறுததலையும் பூபாரந தாஙகுதலையும், தேரின - ஆராயந்தால், அம் கண் - அழகிய இடத்தையுடைய, புவி மாதினை - பூமிதேவியையும், பொங்கு - விளங்காநினற, செம் சூடு - சிவபபாகிய சூட்டையுடைய, வாள் - காந்திபொருந்திய, இறை அரவை - (பாமபுகளுக்கெல்லாம்) தலைவனாகிய ஆதிசேஷனையும், நிகா என்ன - (அவனுக்கு) உபமானங்களாக, இயம்பலாம் - (அறிவுடையோருக்குச்) சொல்லுதல் கூடும், எ-று.

(க - து.) நளனை பொறுமையிலே பூமிதேவியையும் ஆதிசேஷனை யும் ஒப்பானவன என்பதாம்.

குற்றம் பொறுக்குங் குணத்துக்குப் பூமியும், பூபாரந் தாங்குத லுக்கு அனந்தனுமென்று கொள்க. முன்னத்தற்கு "அகழ்வாரைத் தாங் குநிலம்போலத் தம்மை, யிகழ்வார்ப் பொறுத்தறலே" என்றிருக்கையா லும், பின்னதற்கு இந்நூலிலே "பன்னகஞ் சுமந்த வைப்போர் தோ ளினிற் பரிக்கு மன்னாமன்னனை" என்று வருதலாலும், அவை உப மானமாதற் கேற்றல் காண்க. பொறையி னிருபொருளும் புகழ்பொ ருளாதலிற் புகழ்பொருட் சிலேடை. (எ0)

[இதனால் நளமகாராசனிடத்து உத்தம மங்கைய ரிருக்கையைக் குறிப்பித்தல் சொல்லப்படுகின்றது.]

புற்றுறுமாவமுறைவாளிப்புயங்கமுணணச்
செற்றூதமாவிநுகர்விக்குஞ்சிலைக்கையாற்குக்
குற்றேவல்செய்யுங்கொடியன்னவர்பானடக்கக்
கற்றூடரம்பைபயில்வானடைகாட்டுகிறபேன்

(இ - ள்.) ஆவம் ஆகும் - தூணியாகிய, புற்று உறை - புற்றினுள் இருக்கிற, வாளி - அம்புகளாகிய, புயங்கம் - பாம்புகளானவை, உண் ண - உண்ணும்படியாக, செற்றூர் ஆவி - பகைவரது பிராணவாயுவை, நுகர்விக்கும் - உண்பிக்கின்ற, சிலை - வில்லையுடைய, கையாற்கு - கை யையுடையவனாகிய நளமகாராஜனுக்கு, குறு ஏவல் செய்யும் - சிறிய ஏவல்களைச்செய்கின்ற, கொடி அன்னவர் பால் - பூங்கொடி போலப்பவ ரிடத்தே, நடக்க - நடத்தற்கு, கற்று - (யான்) கற்றுக்கொண்டு, ஆடு - (தெய்வச்சபையில்) ஆடுகின்ற, அரம்பை - அரம்பையானவள், பயில்வான - கற்கும்படியாக, நடை - அந்நடையை, காட்டுகிறபேன் - கற்பிப்பேன், எ-று. தம - அசை.

(க - து.) யாங்கள் நளனிடத்த தேவல்செய்யும் பெண்களிடத்து நடைபயின்று அரம்பைக்குக் கற்பிப்போம் என்பதாம்.

வாயு அருவ மாயினும் அதனை யுண்ணுதல் பாம்பிற்கு இயல்பாத லால 'ஆவிநுகர்விக்கும்' என்றது. ஆவ முதலியவற்றிலே புற்று முத லியவற்றி னுற்றுமையை ஆரோபித்தலாலே உருவகவணி. 'கற்றுக் காட்டுகிறபேன' என்றதனால் எனது நடையினும் அரம்பை நடையி னும் சிறந்துளது நளன குற்றேவல் செய்யு மகளிர் நடை யென்றதா யிற்று. குற்றேவல் - சாமரம் வீசுதல் அடைப்பை யேந்துதல் முத லியன. இங்கே நளனுக்குச் சொல்லப்பட்ட விசேஷணத்தால் அவன் யுத்த பராக்கிரமமுஞ் சொல்லப்பட்டதாயிற்று. (எக)

[இதனால் நள னந்தப்புரத்திலே தனக்குப் பழக்கமுண்டெனல் சொல்லப்படுகின்றது.]

அறைபொற்கழற்காலரசன்னகரஞ்சொனல்லார்
மறைசொற்கள்யாவுமறையாமலெனக்குரைப்பார்

பொறிமுற்றடக்கிப்புலன்போம்வழிபோக்கல்செய்யா
நெறியிற்பிறர்க்குப்புகலாதெனநெஞ்சிலெண்ணி.

(இ - ள்.) அறை - ஒலிக்கின்ற, பொன் கழல் - பொன்னாலாகிய வீரக்கழலணிந்த, கால் - பாதத்தையுடைய, அரசன் - நளமகாராஜன் து, நகர் - அரண்மனையிலுள்ள அம் சொல் நல்லார் - அழகிய சொல்லை யுடைய மாதரானவர், பொறி முற்று அடக்கி - ஐம்பொறிகளையும் அடக்கி, புலன் போம் வழி - ஐம்புலன்களையும் செல்லும் வழியில், போக்கல் செய்யா - (அவற்றைச்) செலுத்தாத, நெறியின் - ஒழுக்கத்தினாலே, பிறர்க்கு - அயலாருக்கு, புகலாது என - சொல்லாதென்று, நெஞ்சில் எண்ணி - மனதிலே நினைத்து, மறை சொற்கள் யாவும் - மறைக்கத்தக்க எல்லாச் சொற்களையும், மறையாமல் - ஒளிக்காமல், எனக்கு உரைப்பார் - எனக்குச் சொல்லுவார், எ-று.

(க - து) நளன் அரண்மனைப்பெண்கள் இரகசியங்களை என்னிடத்திற் சொல்வார்கள் என்பதாம்.

அந்தப்புரமாதர் சொல்லுவர் என்னும் பொதுப்பொருளினாலே உன் கருத்தைச் சொல் லென்னுஞ் சிறப்புப்பொருள் தோன்றுதலால் பொதுப்புனைவிலி புகழ்ச்சியணி. (எஉ)

[இதனால் அவளுக்கு நளன்மேற் காதலை யெழுப்புதல்
சொல்லப்படுகின்றது.]

திங்கட்கலையின்செழும்பூங்கதிர்செவ்விவாய்ப்பக்
கங்குற்கமலமலர்தோய்ந்துகளிப்புறுமற்
பைங்கட்குமுதமுறல்போலுநீபார்த்திவன்றன்
றொங்கற்புயந்தோய்ந்துறுமற்பிறமாதுதுய்த்தல்.

(இ-ள்.) திங்கள் கலையின் - சந்திர கலையினது, செழு - செழிய, பூ - அழகிய, கதிர் - (அமுத) கிரணத்தை, செவ்வி வாய்ப்ப - அழகானது பொருந்த, கங்குல் - இரவின்கண், கமல மலர் - தாமரை மலரானது, தோய்ந்து - சேர்ந்து, களிப்பு உறுமல் - மகிழ்ச்சியை அனுபவியாதிருக்க, பைங்கள் - பசிய தேனையுடைய, குமுதம் - (அத்தாமரை மலரிற்குறைந்த) அல்லிமலரானது, உறல் போலும் - (அப்படி அம்மகிழ்ச்சியை) அனுபவித்தல் போலும், நீ - நீ, பார்த்திவன் தன் - அரசனது, தொங்கல் புயம் - மாலையையுடைய தோள்களை, (செவ்வி வாய்ப்ப) - அழகானது பொருந்த, தோய்ந்து - சேர்ந்து, (களிப்பு) - மகிழ்ச்சியை, உறுமல் - அனுபவியாதிருக்க, பிற மாது - (உன்னிற் குறைந்த) மற்றொருத்தி, துய்த்தல் - (அப்படி அம்மகிழ்ச்சியை) அனுபவித்தல், எ-று.

(க - து.) நள னுன்னையல்லாது பிறமாதரைச்சேருதல் சந்திரனைத் தாமரைசேராது அல்லிசேருதல் போலிருக்கும் என்பதாம்.

தாமரை மலர்களினுஞ் சிறந் தழகாய்நிற்றலிற் 'செவ்விவாய்ப்ப' என்றது. "பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை" என்பதனாலு மறிக.

கமலமலர்களிப்புறுதல் - மலர்ச்சியுறுதல். நீ மகளிர் பலரினுஞ்சிறந்த அழகுடையவளா யிருந்தும் உனக்குத் தகுந்த நளனைப்பெறுதற்கு முயற்சிசெய்யாது உன்னிற்குறைந்தவள் அவனைச்சேர்ந் தின்புற விட்டிருத்தல் மடமையென்பது கருத்து. "பைங்கட்குமுத முறல்போலு நின்பாலுறுமற், றுங்கற்புயத்தான் பிறமாதரைத்தோய்தன்மாதோ" என்ப பாடங்கூறி, சந்திரகிரணங் கமலத்தைச் சேர்ந்து களிப்புறாமல் அல்லியைச் சேர்ந்து களிப்புறுதல் போலும் நளன் உன்னைச்சேர்ந்து களிப்புறாமற் பிறமாதரைச் சேர்ந்து களிப்புறுதல் என்ப பொருளுரைப்பாரு முண்டு. களிப்புறுதல் மலர்களுக்கன்றிக் கிரணத்திற்கு இயையாமையாலும் அரசனுக்குக் குறைவு தோன்றலாலும் அது முதனூன் முடிபின் வேறுபட்டும் பயன்படாமை யறிக. (எங)

[இதனால் அவளுக்கு நளனைப்பெறுதற்கு அனுகூல மிருக்கின்றபடி யுணர்த்துதல் சொல்லப்படுகின்றது.]

மயிர்வாய்ச்சிறுகட்பிடிமென்னடைவாய்ந்தநல்லாய்
செயிர்தீர்விதியின்றிறம்யார்கொறெளிந்தநீரா
ரயில்வேனளன்றனழகுன்னெழிலொத்தவாற்றாற்
பயினேயவின்பநினக்கன்றிப்பயன்படாதால்

(இ - ள்.) மயிர் வாய் சிறு கண் - மயிர் பொருந்திய சிறிய கண்களையுடைய பிடி - பெண்யானை (நடைபோலும்), மெல் நடை வாய்ந்த - மெல்லியநடை பொருந்திய, நல்லாய் - தமயந்தியே!, அயில் வேல் - கூர்மைபொருந்திய வேலையுடைய நளன் அழகு - நளமகாராஜனது அழகும், உன் எழில் - உனது அழகும், ஒத்த ஆற்றால் - (தம்மில்)ஒத்திருக்கின்ற காரணத்தினால், பயில் தங்கிய, நேயம் - (ஒப்புடை) அன்பாலுண்டாகும், இன்பம் - இன்பமானது, நினக்கு அன்றி - உனக்கல்லாமல் (மற்றொருத்திக்கு), பயன்படாது - கிடைப்பதில்லை, (அழகொத்திருந்தாலும் விதிசங்கற்பம் பிரதிகூலமாயிருந்தாலோவெனின்) செயிர் தீர் - குற்றத்தினின்றும் நீங்கிய, விதியின் - விதியினது, திறம் - கருத்தை, தெளிந்த - அறிந்த, நீரார் - குணத்தையுடையவர், யார் - எவர், எ-று.

(க - து.) தமயந்தியே உன்னழகும் நளமகாராஜனழகும் ஒத்திருக்கிறதால் அவனின்பமுனக்கே கிடைக்கும், வேறொருத்திக்குப் பயன் படாது, விதிவசமெவ்வாறோ என்பதாம்.

இங்கே அழகும் எழிலும் ஆண்மைவடிவும் பெண்மைவடிவும் பிறழ்ச்சியின்றி யமைந்த வனப்பாம். அன்றியும் உயர்குடிப்பிறப்பு, நல்லொழுக்கம், பருவம், அறிவு, செல்வம் முதலியனவும் ஒரோவழி அழகெனவும் படுமாதலின் அவையுமிங்கே யடக்கிக்கொள்ளப்படும். நும்மிருவருக்கும் அழகொத்தலால் அன்புமொத்து இன்பஞ் சிறக்குமென்பது தோன்ற 'நேயவின்பம்'என்றது. இருவர்க்கும் அன்பொக்குமாயி னின்பஞ்சிறக்குமென்பது "தாம்வீழ்வார் தம்வீழப்பெற்றவர் பெற்றாரோ, காமத்துக்காழில்கனி" என்பதனானு முணர்க. நினக்கன்றிப் பயன்படாதெனவே நீயே அவனுக்கு மனைவியாவை யென்ற

தாயிற்று. விதியென வாளா கூறாது 'செயிர்தீர்விதி' எனச் சிறப்பித்துக் கூறுதலால் விதி சங்கற்பமும் இந் நற்காரியத்திற்கு அநுகூலித்தே யிருக்குமென்பது குறிப்பிக்கப்பட்டது. யாரொன்றது ஒருவருமில்லையென்னும் பொருளில் வந்தது. (எச)

[இதனால அழகொத்திருக்கையினாலே விதிசங்கற்பமும் அநுகூலித்திருக்குமென்று துணிதற்கு உதாரணமுண்டோ வெனின் உண்டெனல் சொல்லப்படுகின்றது.]

விரைசேர்கமலவிதியுந்தகக்கூட்டுமென்க
திருவோடுசெங்கட்டிருமாலினைச்சேர்த்தலானும்
வரைமானைமுக்கட்பெருமானிடம்வைத்தலானு
மிரவோடுதண்ணென்கதிர்த்திங்களியைத்தலானும்.

(இ - ள்) திருவோடு - திருமாதோடு, செம் கண் திருமாலினை - செய்ய கண்களையுடைய விஷ்ணுவை, சேர்த்தலானும் - கூட்டினமையாலும், வரை மானை - பார்வதி தேவியை, முக்கண் பெருமானிடம் வைத்தலானும் - மூன்றுகண்களையுடைய கடவுளிடத்தே இருத்தினமையாலும், இரவோடு - இராத்திரியோடு, தண் என் கதிர் திங்கள் - குளிர்ச்சிபொருந்திய கிரணங்களையுடைய சந்திரனை, இயைத்தலானும் - பொருத்தினமையாலும், விரை சேர் கமலம் - வாசனைபொருந்திய தாமரைப்பூவி லிருக்கின்ற, விதியும் - நான்முகனும், தக - தகுதியாக, கூட்டும் எனக - (ஒருபொருளோ டொருபொருளைக) கூட்டுகிறானென் றறியக்கடவாய், எ-று.

(க - து) பிரமதேவன் திருமகளையுந்திருமாலையும் பார்வதியையும் பரமசிவனையும் இரவையுஞ் சந்திரனையும் சேர்த்தமையாலும் தகுதியாகவே ஒன்றோடொன்றைக் கூட்டுகிறான் என்பதாம்.

ஒருவர்க்கொருவர் தகுந்தவராகத் திருவோடு செங்கட்டிருமாலினைச் சேர்க்கை முதலிய உதாரணங்களால் விதி சங்கற்பமும் இதுகாரியத்திலே அநுகூலித்திருக்குமென்று அறியப்படுகின்றதென்பது கருத்து. 'விரைசேர்கமலம் நறும்போதினில் வீற்றிருக்கும்' எனப் பாடங்கூறி இதனைத் திருவுக் கடையாக்குதலு முண்டு. அப்போது இப்பாட்டிற்கு முடிக்குஞ்சொல் இல்லாமையாற் பின்பாட்டோடேனும் முன்பாட்டோடேனுஞ் சேர்த்துக் குளகமாக்கி முடிக்க வேண்டும், அங்ஙன முடித்தற்குப் பொருளியையாமையாற் பொருந்தாமையறிக. (எரு)

[இதனால் அவவனுமானமேயன்றி இதற்கு ஆகமப் பிரமாணமுமுண்டெனல் சொல்லப்படுகின்றது.]

போர்வேனளன்றன்புனைதாரகன்மார்புபுல்லு
மேரார்மகள்யாரொனயானயனோடுகேட்பக்
காரோதிநின்பேர்கழறுற்றனன்போலுமாங்குத்
தேரோதைதன்னாற்றெளிவுற்றிடக்கேட்டிலேன்யான்.

(இ - ள்.) கார் ஓதி - மேகம்போலும் கூந்தலையுடையவளே!, போர் வேல் நளன் - போர்செய்தற்குரிய வேலையுடைய நளமகாராஜனது, புனை தார் - சூட்டப்பட்ட மாலையையுடைய, அகல மார்பு - பரந்த மார்பை, புல்லும் - தழுவத்தக்க, ஏர் ஆர் மகள் - அழகினால் நிறைந்த மங்கை, யார் என - எவளென்று, யான் - நான், அயனோடு கேட்ப - நான்முகனை வினவ, நின் பேர் - நினது நாமதேயத்தை, கழறுற்றனன் போலும் - (அவன்) சொன்னான்போலும், ஆங்கு - அப்போது, தேர் - (அவனது) தேரினது, ஓதை தன்னால் - ஒலியினாலே, தெளிவு உற்றிட - ஐயந்திர, யான் கேட்டிலேன் - நான் (அதைக்) கேட்டறிந்திலேன், எ-று.

(க - து.) நளனுக்கு மனைவியாரென்று பிரமனை யான்கேட்க அவனுன்பேர் சொற்றனன்போலு மிருந்தது, தேரோசையாற்றெளிவுறக் கேட்டிலன் என்பதாம்.

ருஎ-ம் பாட்டில "அயனூரன்னந்தன் தன்புறுசுற்றமியாம்" என்றலின் அயனை வினவுதற்கு இயைபுடைமை பெறப்பட்டது. யாரென்றது பெண்பாலில் வந்தது. அது வியாதிணை முப்பாற்கும் பொதுவாதலின், இதற்கு "யாஅரென்னும் வினாவின் கிளவி யத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே" என்பதுவிதி. அயனோடென்பது உருபு மயக்கம், இதற்கு "யாதனுருபிற் கூறிற்றாயினும் பொருள் சென் மருங்கின் வேற்றுமைசாரும்" என்பதுவிதி. ஒருவேளை மற்றொருவனமே லவளுக்கு விருப்பமுண்டாயிருப்பின் தன்சொல்லைப் பொய்யென்று கொள்வளென்று 'நின்பேர் கழறுற்றனன்போலும்' 'தெளிவுற்றிடக் கேட்டிலேன்' என்றது. (எசு)

[இதனால் விதியின் செயலும் சொல்லும் அப்படியிருந்தாலும்
அவன் சுதந்தரனுகையால் இப்போது வேறு விதமாகச்
செய்யலாமே யென்றால் அதற்குத் தடையுண்
டென்ச் சொல்லப்படுகின்றது.]

குயின்மென்குதலைத்திருவேநினைக்கூடுமின்ப
மயில்கொண்டவொள்வேனளற்காகவமைத்திலானே
லியைபெண்ணியன்றிவிதிகூட்டலனென்னுஞ்சீர்த்தி
பயனின்றிமாறிப்பழியாகப்பயக்குமன்றே

(இ - ள்.) குயில் - குயிலிசைபோலும், மெல் குதலை திருவே - மெல்லிய மழலைச் சொற்களையுடைய தமயந்தியே!, நினை கூடும் இன்பம் - உன்னை அனுபவித்தடைவதாகிய இன்பத்தை, அயில் கொண்ட - கூர்மைகொண்ட, ஒள் வேல் - ஒளிய வேலையுடைய, நளற்கு ஆக - நளமகாராஜன்பொருட்டு, அமைத்து இலானேல் - படைத்திலனாயின், இயைபு - தகுதியை, எண்ணி அன்றி - நினைத்தல்லாமல், விதி - நான்முகனானவன், கூட்டலன் என்னும் - (ஒருவரோடொருவரைச்) சேர்க்கலனென்கின்ற, சீர்த்தி - கீர்த்தியானது, பயன் இன்றி - பயனில்லாமல், மாறி - வேறுபட்டு, பழி ஆக - நிந்தையாக, பயக்கும் - (அவனுக்கு) விளையும், எ-று. அன்று - ஏ - அசை.

(க - து.) தமயந்தியே, உன்னை நளனுக்காகப் படைத்திலனாயின் பிரமனுக்குப் பழிவிளையுமென் றன்னங்கூறிற்று என்பதாம்.

இங்ஙனங் கூறவே நளனை நீ நாயகனாகப் பெறுதற்கு விதியினாலுந் தடையுண்டாவதில்லை யென்று வலியுறுத்திக் கூறியவா றாயிற்று.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் இப்படி அவளுக்கு ஆசையை வளர்த்த அன்னம் அவள் கருத்தை அறிதற்காக வேறொன்றைச்சொல்லி முன்சொல்லப்பட்டதை முடித்தமை சொல்லப்படுகின்றது.]

கருந்தாரைவாய்வாள்பொருவுங்கயற்கண்ணிகேண்மோ
பொருந்தாதனயான்புகன்றேனதுநிற்கபூந்தாள்
வருந்தாவொதுங்கப்பிழைசெய்தனனைமாறவுள்ளம
பரிந்தார்வமுற்றப்புரிவேனென்பணித்தியென்று

(இ-ள்.) கரு தாரை வாய் - கருவிழிபொருந்திய, வாள் - வாளையும், கயல் - கெண்டையையும் பொருவும் - நிகர்க்கின்ற, கண்ணி - கண்களையுடையவளே!, கேள் - (நீ) கேளு, யான் - நான், பொருந்தாதன - (இப்போதைக்கு) வேண்டாத சொற்களை, புகன்றேன் - சொல்லினேன், அது நிற்க - அதுநிற்பதாக, பூ தாள் - மலர்போல (மெல்லிய உன) அடிகளானவை, வருந்தா - வருந்தி, ஒதுங்க - (என் பின்னே) நடந்துவரும்படியாக, பிழை செய்தனன் - குற்றத்தை (உனக்குச்) செய்தேன், மாற - (அது) தீர, உள்ளம் பரிந்து - உள்ளத்தில் அன்புற்று, ஆர்வம் - (உன) விருப்பத்தை, முற்ற - நிறைவேற, புரிவேன் - செய்வேன், என் - (அவ்விருப்பம்) யாது, பணித்தி என்று - (நீ) சொல்லென்றுசொல்லி, எ - று. மோ - முன்னிலையசை.

(க - து.) தமயந்தியே, விருப்பற்றசொற்களைச் சொன்னேன் அவைநிற்கட்டும், உனவிருப்பத்தை நிறைவேற்றுவேன் நீசொல்லென்றன்னஞ்சொல்லிற்று என்பதாம.

'வருந்தா வொதுங்க' என்றதற் கேற்பப் 'பூந்தாள்'என்றது. இப்பாட்டும் பின்வரும பாட்டும் குளகம். "குளகம பலபாட்டொரு வினைகொள்ளும்" என்பது விதி. (எஅ)

தோளாமணியைநிகர்த்தன்னமென்றூயமூரற்
கோளார்மதிவாண்முகத்தாளுட்குறிப்புநாடித்
தாளான்மையுள்ளங்குறிப்பிற்றெரிதன்மையோரின்
வாளாவதிந்ததணிப்பொற்சிறைவாய்ந்தவன்னம்.

(இ - ள்.) அணி பொன் சிறை வாய்ந்த - அழகிய பொன்மயமாகிய சிறைகள் பொருந்திய, அன்னம் - அன்னமானது, தோளா மணியை - தொளைக்கப்படாத முத்துகளை, நிகர்த்தது அன்ன - ஒழுங்குபடுத்தியதுபோலும், மெல் - மெல்லிய, தூய - பரிசுத்தமாகிய, மூரல் - பல்லொழுங்கையும், கோள் ஆர் - பெருமைபொருந்திய, மதி - சந்திரன்போலும், வாள் முகத்தாள் - காந்திபொருந்திய

முகத்தையுமுடைய தமயந்தியினது, உள் குறிப்பு நாடி - உட்கருத்தை ஆராய்ச்சி செய்துகொண்டு, ஆண்மை உள்ளம் - ஆழமாகிய (ஒருவா) கருத்தை, குறிப்பின் - அறியின, தாள் - (தமது) முயற்சியை, தெரி - (அதன் பின்பு) தெரிவிக்கும், தன்மையோரின் - குணமுடையவர்போல், வாளா வதிந்தது - சும்மா இருந்தது, எ-று.

(க - து.) அன்னமானது தமயந்தியுட்கருத்தை அறிந்து பேசாதிருந்தது என்பதாம்.

'தோளாமணியை நிறைத்தன்ன தூயமூரல்' என்றும் 'கோளாமதிவாண்முகம்'என்றும சொல்லபபட்டமையால், நளனசெயதிகேட்டுத தமயநதிககு நகையும் முககளிாசசியுந தோன்றினமை குறிப்பிக்கப பட்டதாயிறறு 'ஆணமை' இஙகே உள்ளக கருததை வெளிப்படுத்தாது ஆளுததறறன்மை யாதலின ஆழ மெனப் பொருள் கூறப்பட்டது. பெரியோா அபபடிபபட்ட பிறாகருததைத தாமறிவதன் முனனே தமது காரியததைக கெடினும் கெடுமென்று சொல்லாராதலால் அனனம அவள கருததையறிநத பினனே தனவரவின காரியததைச சொலலுதற கெணணிச சுமமா விருநத தெனக. தெரியெனறது தனவினை பிறவினைகளுககுப் பொதுவாதலின இஙகே பிறவினைபபொருளில வநதது 'உடகுறிபபு நாடித தாளாண்மையுள்ளங் குறிபபிற றெரிதனமையோரின' எனறதறகு முயறசியையுடைய உள்ளததை முககுறிபபிறை லாராயுந தனமையோாபோலத தமயந்தியுடகருததை முககுறிபபிறை லாராயநதிருந்ததெனப் பொருள் கூறுவாருமுளர். அது பொருநதுற கருத தனறெனக. (எக)

[இதனால் தமயநதி பேசததொடஙகினமை
சொலலபபடுகினறது ]

இவ்வாறுசெங்கான்மட வன்னமிருத்தலோடு
மைவ்வாணெடுங்கட் டமயந்திமனத்திலோர்ந்து
செவ்வாம்பலூறுஞ்செழுந்தேறறுளித்தலின்றி
யொவ்வாததீஞ்சொலகுயினாணவுரைக்கலுற்றாள்.

(இ - ள்.) இ ஆறு - இவ்விதமாக, செம் கால் மடம் அன்னம் - செய்யகால்களையுடைய இளமைபொருந்திய அனனமானது, இருத்தலோடும் - இருநதவளவில், மை வாள் நெடு கண் - அஞ்சன மெழுதப்பெற்ற வாள்போலும நீட்சிபொருந்திய கண்களையுடைய, தமயந்தி - தமயநதியானவள், மனததின் - மனத்தின்கண், ஓர்ந்து - ஆலோசிதது, செவ் வாம்பல் - செவ்வல்லிப் பூவிலிருந்து, ஊறும் - சுரக்கின்ற, செழு தேறல் - செழியதேனானது, துளிததல் இன்றி - சிந்துதல் (தன்னிடத்)தில்லாமல், ஒவ்வாத - நிகராகமாட்டாத, தீ சொல் - (தன்செவ்வாயி லிருந்துவருகிற) மதுரவாாததையை, குயில் - கோகிலமானது, நாண - வெட்கமுற, உரைக்கல் உற்றாள் - சொல்லத்தொடங்கினாள், எ-று.

(க - து.) தமயந்தி குயிலும் நாணச் சொல்லத்தொடங்கினள் என்பதாம்.

செவ்வாம்பலுக்கேற்பச் செவ்வாய் வருவிக்கப்பட்டது. 'ஆம்ப லூறுஞ் செழுந்தேறலுளித்தலின்றி யொவ்வாத தீஞ்சொல்' எனவே அல்லிமலரிலிருந்து வெளிப்படுந் தேன்போல் வாயிலிருந்து வெளிப் படுதலுந் தீஞ்சுவையு முடைய சொல்லென்ற தாயிற்று. உவமை யணி. (அ0)

[இதுமுதல் இரண்டுபாட்டுகளால் பூந்தாள் வருந்தா வொதுங்கப் பிழைசெய்தனன் என்றதற்கு மாறான உத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

(கலிவிருத்தம்)

பேதைநீர்மையிற்பெட்புறினியாங்கணு
மேதமெய்துறுமெனபர்சரதமே
யாதலானிற்றொடர்ந்தருமொய்துறத்
தீதிழைத்தனன்யானுன்றிறத்தினே

(இ-ள்.) பேதை நீர்மையில் - பேதைமைக்குணத்தினாலே, யாங்கணும் - எல்லாவிடங்களிலும், பெட்புறின் - விரும்பினால், ஏதம் - குற்றமும் (அதனால் விளைவதாகிய) துன்பமும், எய்துறும் - அடையும், என்பர் - என்றுசொல்வார் (பெரியோர்), சரதமே - (அது) சத்தியமே, ஆதலால் - ஆகையால், நின் தொடர்ந்து - உன்னைப் பின் சென்று, அரு - துன்பமானது (என்னை) அடைய, யான் - நான், உன் திறத்தின் - உன்னிடத்தே, தீது இழைத்தனன் - குற் றத்தைச் செய்தேன், எ-று.

(க - து.) தமயந்தியானவள் அன்னமே உன்னிடத்திற் குற்றஞ் செய்தேனென்றாள் என்பதாம்.

பேதைநீர்மையாவது - செய்தக்கதுவுந் தகாததும் பகுத்தறிய மாட்டாத்குணம். அது பெண்மைக்குச் சிறந்தகுணமாய நிற்றலிற் 'பேதைநீர்மையிற் பெட்புறின்' என்றாள். அது பெண்மைக்குச் சிறந்த தென்பது. "நுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும் பெண்ணறி வென்பது பெரும்பேதைமைத்தே" என்பதனாலறிக. இரட்டுற மொ ழிதலென்னு முத்தியால் ஏதத்திற்குக் குற்றமும் அதனால் வருந் துன்பமு முரைக்கப்பட்டன. அவ்விருபொருளும் "ஏதந்துன்பங் குற்றப்பேர்" என்பதனாலறிக. 'என்பர்சரதமே' யென்றாள், "பேதை மையுளெல்லாம் பேதைமை காதன்மை கையல்ல தன்கட்செயல்" என்பவாகலின். பேதைமையினாலே விஷய நியமமில்லாமல் எல்லாப் பொருள்களிலும் விருப்பம் வைத்தால் அதனாலே தான் பிறருக்கு அபகாரஞ் செய்யவும் பின்பு அதைக்குறித்துத் தான் மனம் வருந் தவு நேரிடும், அதையென்னிடத்துத் தானே காணலா மென்பது கருத்து. முன் வாக்கியத்தின் பொதுப்பொருளாற் பின்வாக்கியத் தின் சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள்வைப் பணி. (அக)

பளிங்கிற்றுன்னியபலபொருண்மற்றதில்
விளங்கித்தோன்றலபோலயான்செய்தவெம்பிழை
களங்கமறறவுன்னுள்ளத்திற்கண்டுகொற்
றுளங்கயான்பிழைத்தேனென்றுசொற்றதே.

(இ - ள்.) (களஙகமறற) - மாசற்ற, பளிஙகில் - கண்ணுடியிடத்து, துனனிய - கிடடி யிருக்கினற, பல் பொருள் - பலபொருளும், அதில - அதனுள், விளஙகி தோனறல் போல - பிரதிபிம்பித்தித தோன்றுதல்போல, (துனனிய) - (உன்னிடததுக்) கிட்டியிருக்கினற, யான - நான், செயத - (உனககுச்) செய்த, வெம பிழை - கொடிய பிழையானது, களங்கம அறற - மாசற்ற, உன உளளததில் - உனது நெஞ்சுள, கண்டு கொல் - பிரதிபிமபிததுத தோனறியோ, யான் - நான, துளங்க - நடுஙகுமபடியாக, பிழைததேன் என்று - (உனக்குக) குறறஞசெயதேனெனறு, சொற்றது - (நீ) சொலலியது, எ-று.

(க - து.) கணணுடியானது தனமுன்னுள்ள பொருளைத் தான் காடடுதலபோல எனகுறறததை நீயேறறுக்கொண் டெடுததுககாட்டிஞயென றனனுஞசொலலிறறு எனபதாம்.

பெரியோா தமககொருவ னொருபிழை செயதவிடத்து அவனை நோககி நானுன் னுனககுப பிழைசெயதேனெனறு கண்ணுடியானது தனமுனனுளள பொருளைத தன்னிடததே காடடுதலபோல் அவனிடததுளள பிழையைத தம்மிடததே காடடுவா ராதலால் அவர் கண்ணுடிபோற களஙகமினறி விளஙகுவார், நீ யவாகளிற சோந்துளாயாதலால அஙஙனஞ் சொனனுயெனபது கருதது. கண்டுகொல் - தோனறலைக்கணடோ வெனினு மாம. சொறறதென்றது இறந்தகாலம பறறிவநத தொழிறபெயா. இது உவமையணி. (அஉ)

[இதனுல மாற வுளளம்பரிந தாரவமுறறப புரிவே னெனறதற்கு உததரஞ்சொலலப படுகினறது.]

வேணடலசெயவலென்ருய்விழைவானினைக்
காண்டலன்றியெனவேணடுங்கதிரமதி
யீணடுநோககுநர்கண்களிப்பெய்துறச்
சேண்டயங்குவதன்றியென்செயயுமால.

(இ-ள்.) வேண்டல் - வேணடப்பட்டதை, செய்வல் என்ருய் - செய்வே னெனறுசொன்னுய், விழைவால் - ஆசையினுலே, நினே - (அழகிய) உன்னை, (கண்களிபபு எயதுற) - நேததிரானந்தததைஅடைய, காண்டல் அன்றி - காணுத லல்லாமல், என வேண்டும் - (எனக்கு) யாதுவேண்டும், கதிா மதி - கிரணத்தையுடைய சந்திரனவன், ஈண்டு - இவ்விடததிருந்து, நோககுநா - பாாப்பவர், கண்களிப்பு எய்துற - நேத்திரானநததததை யடைய, சேண் - ஆகாசத்திலிருந்து, தயங்குவது அன்றி - விளங்குவதல்லாமல், என் செய்யும் - யாதுபயனை (அவாககுச்) செய்வான், எ-று.

(க-து.) தமயந்தியானவள் அன்னமே யான்விரும்பியதைச் செய்வேனென்றாய்; உன்னைக் கண்டதேயல்லாமல் எனக் கென்னவேண்டுமென்றாள் என்பதாம்.

வேண்டல்—வேண்டப்படுபொருளை யுணர்த்தலால் ஆகுபெயர். அவ்வன்னத்தைக் காணுதலினுஞ் சிறந்தபொருள் தனக் கில்லையென்பது தோன்ற 'நினைக்காண்டலன்றி யெனவேண்டும்' என்றாள். சந்திரன் இங்கேயிருந்து பார்ப்பவர்க்குக் கண்களிப்பைச் செய்வதன்றி வேறே விசேஷமாகச் செய்யக்கிடந்த தொன்றில்லை; அதுபோல நீயும் எனக்குக் கண்களிப்பைச் செய்வதன்றி வேறே விசேஷமாகச் செய்யக்கிடந்ததொன்றில்லை என்பது கருத்து அன்னத்தையுஞ் சந்திரனையுங்குறித்துச் சொல்லப்பட்ட விரண்டுவாக்கியங்களுக்குப் பிம்ப பிரதி பிம்பபாவந் தோன்றலால் எடுத்துக்காட்டுவமையணி. (அங)

[இதனால் விரும்பப்பட்ட பொருள் எப்படிப்பட்ட தாயினுஞ்
சொல்லலாமெனின் அது கூடாதெனல்
சொல்லப்படுகின்றது.]

கொச்சகக்கலிப்பா.

விழையுமன் த்ததுமனத்தைவிட்டகலவதெனினன்றே
தழையவுரைதருநாவாற்சாற்றலாந்தகைமைத்தா
மெழுபுவிவாழ்கன்னியரிலிருவிசும்பிற்றருவினறுங்
கொழுநனைநல்குதியென்றுகூறுநளுமுளள்கொல்லோ.

(இ - ள) விழையும் - விரும்பப்படுகின்ற, மனத்தது - மனத்தினுள்ளதொன்று, மனத்தை - அம்மனத்தை, விட்டு அகல்வது எனின் அன்றே - விட்டு வெளிப்படுவதாயி னன்றே, தழைய - பெருக, உரைதரும் நாவால் - பேசுகின்ற நாவினாலே, சாற்றலாம் தகைமைத்து ஆம் - சொல்லப்படுந் தகுதியுடையதாகும், எழு புவி வாழ் கன்னியரில் - ஏழு தீவுகளிலேயும் வாழ்கின்ற பெண்களுள், இரு விசும்பில் தருவின - பெரிய வானுலகத்துள்ள கற்பக தருவினது, நறு கொழுநனை - பரிமளம்பொருந்திய செழிய அரும்பை, நல்குதி என்று - (கொணர்ந்து) கொடுவென்று, கூறுநளும் - சொல்வாளும், உளள்கொல் - இருக்கின்றாளோ, [அப்படியே, தருவின் - கற்பகதருப் போலும், நறு - நற்குணம்பொருந்திய, கொழுநனை - நளராஜனை, நல்குதி என்று - கொணர்ந்துகொடுவென்று, கூறுநளும் - சொல்வாளும், உளள்கொல் - இருக்கின்றாளோ,] எ-று.

(க - து.) தமயந்தியானவள் கொழுநனைத் தாவென்று சொல்பவளு முண்டோவென்று சிலேடையாகச் சொன்னாள் என்பதாம்.

மனத்தைவிட் டகலாமைக்குக் காரணம் மனம் அதனை யுறுதியாகப் பிடித்திருத்தலேயாம். 'கொழுநனை' எனவே மலரும் பருவத்துப் பேரரும் பென்றதாயிற்று. மலர்மேல் விருப்ப மகளிர்க் கியல்பாதலால் அதனை யெடுத்துக் காட்டினாள். கொழுநன் - தலைவன். "பிரானேகொழுந னரசனுதி யெனப்பதினைந்து முரைசெயப்

பொருட்கு மிறைவன்மேறறே'' எனபதனுலறிக. அது சிறப்புப்பறறி ளனை யுணாததிற்று. கணவனென்பாரு முளா. கிடைத்தறகரிய வொருவனைப் பெறவேண்டுதல் கிடைததற்கரிய கற்பகவரும்பைப் பெறவேண்டற கொபபாதலாற பழிபபுக்கிடமாதல் பறறி நாண முடையவ ளெபபடிக் கூறுவளெனபது கருதது. சிலேஷையி னிரு பொருளுக்கும் பிமப பிரதிபிம்ப பாவததால் எடுத்துக்காட டுவைம யணி. இதுமுத விருபத்துநாலு பாடடுகள பெரும்பாலுங காயச்சீர நான்குபெறறுக சுலிததளைமிகக வருகிற அளவடி நானகு கொண்ட தரவு கொசசகககலிபபாக்கள. (அச)

[இதனுலே தமயந்தியின சொல்லைக்கேட்டு அனனம் பேசத தொடங்கினமை சொல்லபபடுகின்றது.]

தழைசிறையமடவனமேசாற்றுதியென்றிவ்வாறு
குழைகிழிக்குமதர்நெடுங்கட்கொம்பர்மகிழ்நாணிெனுடு
மொழிவதுகேட்டையுற்றுமுகிழ்நகைவாணுதலுளத்தில்
விழைவுறுநன்மொழிகள்சிலமடவன்னமவிளம்புமால்.

(இ - ள.) தழை சிறைய மடம் அனமே - தழைத்த சிறகுகளை யுடைய இளமைபொருநதிய அனனமே!, சாறறுதி என்று - சொல் லெனறு, இவவாறு - இவவிதமாக, குழை கிழிககும் - குழையை யுடைய (காதைக) கிழிககினற, மதா நெடு கண் - மதாதத நீண்ட கண் களையுடைய, கொமபா - பூஙகொமபுபோல்பவள, மகிழ் - மகிழ்ச்சி யோடும், நாணிெனுடும் - வெடகததோடும், மொழிவது கேட்டு - சொல்வதை (ததான) கேட்டு, ஐயுறறு - சந்தேகிதது, முகிழ் நகை - (முல்லை) யரும்புபோலும பறகளையும், வாள் நுதல் - காநதிபொருந் திய நெற்றியையு முடையவளது, உளத்தில் - உள்ளத்தினகண்ணே, விழைவு உறு - விரும்பபபடும், சில நல் மொழிகள - சில நல்ல சொற் களை, மட அனனம் - இளமைபொருநதிய அனனமானது, விளம்பும் - (அவளுக்குச்) சொல்லும், எ-று.

(க - து.) தமயநதி சொறகளைக்கேட் டன்னஞ் சொல்லியது என் பதாம்.

கொம்பு கொம்பரென ஈறுதிரிநதது. மகிழ்—தன்விருப்பத்தை முடித்தற்கு உபாயங் கிடைததென றுண்டாகியது. ஐயமுற்றென் பது ஐயுற்று என விகாரப்பட்டது. ஐயம்—ஈனனமே லிவளுக்கு விருப்பமுண்டோ வில்லையோ வென்னுஞ் சந்தேகம். (அரு)

[இதனுல் அது நான் கேட்கததக்கதுதா னெனல் சொல்லபபடுகின்றது.]

தருவினறுங்கொழுநனையார்தருகவென்வுரைப்பளெனு
மரியமறைப்பொருளதனையான்கேட்கலாகாதோ
தெரியவருமறைப்பொருளைச்செவிப்புலத்திலுறநான்காம்
வருணமுடையவர்கேட்கலாகாதவாறேபோல்.

(இ - ள்.) தருவின் - கற்பகதருவினது, நறு - பரிமளம் பொருந்திய, கொழுநனை - செழிய அரும்பை, யார் - எவள், தருக என - கொடுவென்று, உரைப்பள் எனும் - சொல்வா ளென்றுசொல்லப்பட்ட, அரிய மறை பொருள் அதனை - அரிதாகிய இரகசியப் பொருளை, யான கேட்கல் ஆகாதோ - நான் கேட்கத்தகாதா, தெரிய அரு மறை பொருளை - அறிதற்கரிய வேதப்பொருளை, செவி புலத்தில் உற - காதிலே பொருந்த, ஈனகாம வருணம உடையவர் - சூத்திரர், கேட்கல் ஆகாத ஆறே போல் - கேட்கத்தகாத விதம்போல், எ-று.

(க - து.) அன்னமானது தமயந்தியே நீ சொன்ன இரகசியப் பொருளை யான் கேட்கலாகாதோ வென்று சொல்லிற்று என்பதாம்.

அம்மறைப்பொருளைக் கேட்டற்குச் சூத்திரர்போல இம்மறைப் பொருளைக் கேட்டற்கு யான் அனதிகாரியல்லேன், அதிகாரியே, அதனை நன்றாகச் சொல்லென்பது கருத்து. பின் மறைப்பொருள் - வேதவாக்கியம்; அன்றி வேதத்தினது ஆத்தமெனினுமாம். (அசு)

[இதனால் அப்பொருள் பெறுதற் கரியதாகையால் சொல்லுதற்கு நாணுகின்றேனெனின் அதற்குத்தக்க முத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

மனமுறுமோர்பொருளடைதலரியதோமனத்தாலு
நினைவரியபொருளினையுநிறையுடையோரடைகுவராற்
புனைமணிமேகலைதாங்கிப்புடையகன்றவகலல்குற்
கனியனையவந்தீஞ்சொற்கற்பகப்பூங்கொம்பன்னாய்.

(இ - ள்.) புனை - அலங்கரிக்கப்பட்ட, மணி மேகலை தாங்கி - இரத்தின மேகலையைச் சுமந்து, புடை அகன்ற - புடைபரந்த, அகல் அல்குல் - பரப்பையுடைய அரைக்கீழிடத்தையும், கனி அனைய - முக்கனிபோலும், அம தீ சொல - அழகிய மதுரம்பொருந்திய சொல்லையுமுடைய, கற்பகம் பூ கொம்பு அன்னாய - கற்பகத்தின் மலர்க்கொம்பு போல்பவளே!, மனம் உறும - மனத்தின்கண் இருக்கின்ற, ஓர் பொருள் - ஒருபொருளை, அடைதல் - பெறுதல், அரியதோ - (கற்பக வரும்பை) யடைதல்போல அரியதோ, [அரியதன்று], (அரியதென்றேன் சொல்லக்கூடாதெனின்) நிறை உடையோர் - யோகிகள், மனத்தாலும நினைவு அரிய - அம்மனத்தினாலும நினைத்தற் கெட்டாத, பொருளினையும் - பரபிரமத்தையும், அடைகுவர் - பெறுவார், எ-று.

(க - து.) தமயந்தியே! நினைத்ததையடைதல் அரிதன்றென் றன்னஞ் சொல்லியது என்பதாம.

'மனமுறுமோர் பொருளடைத லரியதோ' என்றதற்கு அப் பொருள் கட்பொறி முதலியவற்றிற்குப் புல னாகாதிருப்பினும் மனமொன்றற்காவது புலனா யிருக்கையால் உனக்கு அதனை யடைத லரிதன் றென்பது கருத்து. ஆணவமலந் தடையா யுயிரைச்செறிந்து நிற்கையால் சச்சிதானந்த சொரூபமாகிய பரப்பிரமத்தை நினைத்தல் மனத்திற்குக் கூடாமை யறிக. நிறை - அம்மனத்தைப் பொறிகளிற்

செலுத்தாது சமாதியினிறுத்தல். நில் என் முதனிலை நிறுவெனப் பிறவினையாய்ப் பின்பு நிறையெனத் தொழிற்பெய ராயிற்று. மனத்திற கெட்டாததையும அடைவனென்னு மொருபொருளைச சொல்லத் தண்டாபூபிக நியாயத்தினாலே மனத்திற கெட்டியபொருளை யடைதல் சொல்லவேண்டுவதில்லை என்னு மற்றொரு பொருள் தோன்றலால செயயுட்பொருட்பேறணி. (அஎ)

[இதனால் இது பொயசொல்லுவதென்று சொல்லாதிராதே யெனல் சொல்லப்படுகின்றது.]

பொய்ம்மைமொழிபுகன்றறியேம்புகலமனமெண்ணுகினு
மெய்ம்மையலதுரையாநாவேதநவிலபயிற்சியாற்
கொமமைவருமுலைவாய்மையுடையோரைககுறிததுரைப்பி
னெம்மைமுதலெடுததுரைபபரீரங்கமலத்திறைமுன்னும்.

(இ-ள்) கொம்மை வரு முலை - இளமைபொருந்திய வளர்கின்ற முலைகளை யுடையவளே!, பொயம்மை மொழி புகன்று அறியேம் - அசத்திய வார்த்தையைச் சொல்லியறியேம், புகல - (ஒரு சமயத்திலே) சொல்லுதற்கு, மனம எண்ணுகினும - மனமானது நினைத்தாலும், நா - (எமமுடைய நாக்குகளானவை) வேதம நவில பயிற்சியால - வேதங்களை ஓதிவருகின்ற பழக்கத்தினாலே, மெய்ம்மை (மொழி) அலது - சத்திய வார்த்தையையல்லாமல, உரையா - சொல்லாவாம, ஈரம கமலத்து - குளிர்ச்சிபொருந்திய தாமரைப் பூவிலுள்ள, இறை முன்னும் - நான்முகக்கடவுண்முன்னும், வாயமை உடையோரை - சத்தியத்தையுடையவரை, குறித்து உரைப்பின் - கருதிப் பேசின், எம்மை - எம்மையே, முதல் எடுத்து - முதலில் குறித்து, உரைப்பர - சொல்லுவார, எ-று.

(க - து.) தமயந்தியே! பொய்வார்த்தைகள் சொல்லியறியோம், சொல்லநினைக்கில வேதப்பயிற்சியால் நாக்கள் எழாவாம் என்பதாம்.

தன்னினத்தையுந் தழுவிப 'புகன்றறியேம' 'எம்மை' என்றது. புகலமனமெண்ணுகினு மென்னு முமமை மனமும் அப்படி எண்ணுகின்றதில்லை என்னும் பொருளைப பயத்தலால எதிர்மறை. சத்தியத்தைசசொல்லுகிற வேதத்தோடு பழகலால் நாவிற்கு அப்பழக்கக் குணம விடாதென்க. "பழக்கங்கொடியது பார்ப்பாறையிலுங்கோழி, கிழிக்கும பொலியைக் கிளறும - விழித்துங், குருடாக் கொளிப்பையாக் கூசிக்கோல்போடா, ரருளைப்பகுக்குமானமா" என்பதனாலு மறிக. தேவலோகத்துப பறவையாதலின வேதமோதுதற் குரித்தாயிற் றெனக. கமலத்திறை முன்னு மென்னு மெச்சப்பொருளில்வந்த வுயர்வுசிறப்பும்மையால் இந்திரன முதலியோரிடத்து முரைப்பரென்பது தோன்றுதல் காண்க. (அஅ)

[இதனால் ஆனால் நீ என்ன செய்யமாட்டுவா யெனின் அதற்குத்தரு முத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

பாட்டுவரிச்சுரும்புமுரல்பங்கயமெல்லரும்பேய்க்கு
மோட்டிளவெம்முலையெலாக்குமுடியாதபொருளுளதோ

சூட்டரவின்மேற்கிடந்ததொடுகடன்ஞாலத்திடைநீ
வேட்டதுகூறுதிகொணர்வல்விரைவினெனக்கூறியதால்.

(இ - ள்.) வரி சுரும்பு - இரேகைகளையுடைய வண்டுகளானவை, பாட்டு முரல் - பாட்டைப் பாடப்பெற்றிருக்கின்ற, பங்கயம் மெல் அரும்பு ஏய்க்கும் - தாமரையினது மெல்லிய அரும்பை நிகர்க்கின்ற, மோட்டு இள வெம் முலை - உயர்ச்சியும் இளமையும் விரும்பப்படுங் குணமும் பொருந்திய முலைகளை யுடையவளே!, எனக்கு முடியாத பொருள் உளதோ - என்னால் முடிவுபெறாத காரியமானது (ஒன்று) இருக்கின்றதோ, சூட்டு - உச்சிக் கொண்டையையுடைய, அரவின்மேல் - ஆதிசேஷன்மேல், கிடந்த - தங்கிய, தொடு கடல் - தோண்டப்பட்ட கடலாற் சூழப்பட்ட, ஞாலத்திடை - பூமியின்கண், வேட்டது - (உன்னால்) விரும்பப்பட்ட பொருளை, நீ கூறுதி - நீ சொல்லு, விரைவில் கொணர்வல் - சீக்கிரத்தில் (யான் அதனைக்) கொண்டுவருவேன், என கூறியது - என்று (அன்னந் தமயந்திக்குச்) சொல்லியது, எ-று. ஆல் - அசை.

(க-து.) தமயந்தியே! நீ இச்சித்ததைச்சொல் விரைவிற்கொண்டு வருவேனென்று அன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

சுரும்பு முரலுதலைப் பங்கயவரும்பிற்கு அடையாக்கியது மலரும்பருவத்துப் பெரியவரும்பென்று தோன்றுதற்கெனக். 'எனக்கு முடியாதபொருளுளதோ' எனவே அற்பமான பறவையென்று நினையாதே சிறிய வச்சாணி பெரிய தேரை நடத்துதல்போல் எப்படிப்பட்ட பெரிய காரியத்தையு முடிக்கின்ற வல்லமை யெனக்குண்டென்றதாயிற்று. (அக)

[இதனால் வேட்டது கூறுதி யென்றதற்குத் தரு முத்தரஞ் சொல்லப்படுகின்றது]

மருவுபுரிநரம்பிசைக்குமாடகநல்லியாழிசைகேட்
டுருகினளன்பாலவேட்கையுற்றனளென்றறிகிலலா
யரியபசும்பொன்னிறத்தவாய்தூவிமடவனமே
தெருமரலுற்றேன்விழைவுசெப்புமாறெவனென்றாள்.

(இ - ள்.) அரிய - பெறுதற்கரிய, பசும் பொன் நிறத்த - பசிய பொன்னினது உருவமுள்ள, ஆய் - தேடத்தக்க, தூவி - இறகுகளையுடைய, மடம் அன்னமே - இளமைபொருந்திய அன்னமே!, மருவு புரி - சேர்ந்த வலிக்கட்டுகளையும், நரம்பு இசைக்கும் - தந்திகளை இசைவிக்கின்ற, மாடகம் - முறுக்காணிகளையுமுடைய, நல் யாழ் - நல்ல வீணை யிசைபோல்கின்ற, இசை கேட்டு - (என்) சொல்லை (இவள்) கேட்டு, உருகினள் - மனங்குழைந்தவளாகி, அன்பால் - ஆசையினாலே, வேட்கை உற்றனள் என்று - (அச்சொல்லையே) கேட்க விருப்பங்கொண்டாளென்று, [இன்னுஞ் சிலேஷையால், உருகு - உள முருகாநின்ற, இன் - இனிமைபொருந்திய, நளன்பால் - நளனிடத்தே, வேட்கை உற்றனள் என்று - ஆசைமிகுந்தாளென்று,] அறிகில்லாய் -

அறியாயா, தெருமரல் உற்றேன் - மனச்சுழற்சியை யடைந்த நான், விழைவு - அவ்வாசையை, செப்பும் ஆறு - (வெளிப்படையாகச்) சொல்லும் விதம், எவன் என்றாள் - யாது என்று சொல்லினள் (தமயந்தி), எ-று.

(க-து.) அன்னமே யிசைகேட் டுருகி னளன்பா லாசை யுற்றனள் என் றறியாயா என்பதாம்.

வீணையிசை போல்கின்ற என்சொல்லை யிவள்கேட்டு மனங்குழைந்தவளாகி ஆசையினாலே இன்னுமச்சொல்லையே கேட்கவேண்டுகின்றாளென்றறியாயா வென்லால உன்சொல் கேட்குந்தோறுஞ் செவிக்கின்பஞ் செய்தலால் நான் இன்னும் அதனையே கேட்கவேண்டுகின்றேனல்லது பிறிதொன்றை வேண்டுகின்றிலேன் என்றாளென்பதாயிற்று. இப்பொருளிலே வேட்கைப்பெறலவேண்டுதல், வீணை யிசைபோலும் மென்சொல்லை இவள் கேட்டு உளமுருக நின்ற வினிமைபொருந்திய நளனிடத்தே விருப்பமுற்றாளென்றறியாயாவென்லால உன்சொல்லினாலே நளனுடைய குணங்களை நன்றாகவறிந்து அவனிடத்தே விருப்பமுற்றேன் என்றாளென்பதாயிற்று. இப்பொருளில் தமயந்தியை வினைமுதலாகவுடைய உருகென் வினைத்தொகை நளனென்பெயர் கொண்டுமுடிந்தது உற்றேனென்றது வினையாலணையும்பெயர். (கூ0)

[இதனால் அன்னம் பேசத்தொடங்கினமை
சொல்லப்படுகின்றது]

வேட்கைதனை துளத்தடக்கி மெய்நாணான் மறைத்திகலும், வாட்படைபோ னெடுங்கண்ணாள் வழங்கியசொற்பொருடேர்ந்து, நாட்கமல வள்ளவாய் நறும்போதி லமர்செய்ய, தாட்பவளக் கடிகைவா யடவன்னஞ் சாற்றுமால்.

(இ-ள.) நாள் கமலம் - அன்றுபூத்த தாமரையினது, வள்ளம் வாய் - கிண்ணம்போலும் வாயையுடைய, நறு போதில் அமா - நல்ல மலரில் வாசஞ்செய்கின்ற, செய்ய தாள் - சிவப்பு நிறம் பொருந்திய அடிகளையும், பவள கடிகை வாய - பவளத்துண்டம் போலும் வாயையும் உடைய, மடம் அன்னம் - இளமைபொருந்திய அன்னமானது, இகலும் - போர்செய்தற்குரிய, வாள் படை போல் - கட்காயுதம்போலும், நெடு கண்ணாள் - நெடிய கண்களையுடையவள், வேட்கை - (நளன்மேலுண்டாகிய) ஆசையை, தனது உளத்து அடக்கி - தன்னுடைய மனத்தினகண் வெளிப்படாமல் வைத்து, நாணால் - வெட்கத்தினால், மெய் - அவ்வாசை கொள்ளப்பட்டபொருளை, மறைத்து - (சிலேஷையால்) மறைத்து, வழங்கிய - சொல்லிய, சொல் பொருள் தேர்ந்து - வாக்கியார்த்தத்தை யறிந்து, சாற்றும் - சொல்லும், எ-று. ஆல் - அசை.

(க-து.) தமயந்தி நளனிடத் திச்சைவைத்து மறைபொருளாகச் சொன்ன சொல்லையறிந் தன்னஞ்சொல்லும் என்பதாம். (கக)

[இதனால் நீ எனனாலே மறைத்துச் சொல்லப்பட்டபொருளை யறிந்திலையா வெனபாயாயின அறிந்துளேனெனல் சொல்லப்படுகிறது.]

தருவினறுங்கொழுநனையார்தருகென்பாரொன்றதுவு
மருவுபுரிநரம்பிசைக்குமாடகநலவியாழிசைகேட்
டுரிகினளன்பாலவேட்கையுற்றனளென்றுரைத்ததும்யான்
கருதினனாற்பலகலையும்கற்றுணர்ந்ததெளிவினால்

(இ - ள்.) தருவின - கற்பகதருவினது, நறு கொழுநனை - வாசனைபொருந்திய செழிய அரும்பை, யாவா - யார, தருக எனபார் - தருகவென்று சொல்லுவார, எனறதுவும - என்று சொன்னதும், மருவு புரி - சேர்ந்த வலிக்கட்டுகளையும, நரமபு இசைக்கும - தந்திகளை இசைவிக்கின்ற, மாடகம் - முறுக்காணிகளையுமுடைய, நல யாழ் இசை கேட்டு - நல்ல வீணையின இசையைக்கேட்டு, உருகினள அனபால் - ஆசையால மனங் குழைந்தவளாகி, [மனமுருகநின்ற நளனிடத்தே], வேட்கை உற்றனள எனறு - ஆசை மிகுந்தாளென்று, உரைத்ததும - சொன்னதும, யான - நான, பல கலையும் - பலவகை நூலகளையும், கற்றுணர்ந்த - கற்று (அவற்றினபொருளை) அறிந்த, தெளிவினால் - தெளிவைககொண்டு, கருதினன - (நளனைககுறித்துச சொல்லப்பட்டவையென்று) அறிந்தேன, எ-று.

(க - து.) தமயந்தியே நீ சிலேடையாகச்சொன்னதை யானறிந்தேனென்றனனரு சொல்லிற்று எனபதாம்.

நளனைககுறித்துச சொல்லப்பட்டவைகளெனபது இசையெச்சம். கருதல—இங்கே அறிதறபொருளைப பயந்துநின்றது. பலகலை—வியாகரணம், தருக்கம், முதலியன. (கூஉ)

[இதனால இருவிசும்பிற றருவினறுங் கொழுநனை முதலிய வாக்கியப்பொருளை நீ அறிந்திருந்தால் அறியாய்போற சொல்லியதற்குக் காரணம யாதெனின அதனை யுணாத்தல் சொல்லப்படுகினறது.]

மறங்கிளருமதாநெடுங்கட்கன்னியாதமனமொன்றிற்
செறிந்துமுடன்பிரியுமெனத்தெளிவுடையோர்செப்புதலா
னறுந்துணரொண்சிலலோதிநயப்புறுநின்குறிப்புணாக
ளறிந்துமறியேன்போலவையுறவுற்றிருந்தனன்யான்.

(இ - ள்.) நறு துணா - நறியமலாகளையும், ஒள் சில் - ஒள்ளிய பொனவட்டத் தகட்டணியையுமுடைய, ஓதி - கூந்தலையுடையவளே!, மறம் கிளரும் - கொலைததொழிலால் விளங்காநின்ற, மதா நெடு கண் - மதாத்த நெடிய கண்களையுடைய, கன்னியாதம் - கன்னியாகளுடைய, மனம் - மனங்களானவை, ஒனறில் செறிந்தும் - ஒருபொருளில் அழுந்தியும், உடன பிரியும் எனா - விரைவில் (அந்நிலையில்) நீங்குமென்று, தெளிவுடையோா செப்புதலால் - அறிவுடையோா சொல்லுத

விஞலே, நயப்பு உறு - விரும்பப்படுகின்ற, நின் குறிப்பு உரைகள் - உன்னுடைய குறிப்புச் சொற்களின் பொருளை, யான அறிந்தும் - நான் தெரிந்தும, அறியேன போல - அறிந்திலேன போல, ஐயுறவு உற்று - சந்தேகமடைந்து, இருந்தனன - இருந்தேன, எ-று.

(க - து.) தமயந்தியே! பெண்கள மனங்கள விரைவிற பிரியு மென அறிவுளளோர சொல்லுதலால் உனகுறிப்புச சொறகளை நானறிந் தும் அறியாதுபோலச சந்தேகித்தேன என்றது அன்னம என்பதாம்.

மனமொன்றில் அழுந்தல - ஒருபொருளைப் பெறலவேண்டுமென்று மிகவிரும்பி அதனையே நினைந்திருத்தல். தெளிவுடையோர செப்புதல "இனம்போன றினமல்லார் கேண்மை மகளிர், மனமபோல வேறு படும்" என்பதனு லறிக. கன்னியாமன மொன்றி லழுந்தியும் உடனே நீங்குமெனச் சொலலுதலாலே உன்மனமும நளனிடத்தே இப்போது அழுந்தி நிற்பினும் இன்னுஞ் சிறிது பொழுதிலே விட்டு நீங்கும, ஆதலால உனது நிச்சயம அறியப்படாமைபற்றி அறியேன் போலச சந்தேகித திருந்தே னென்றதாயிற்று. (கூரு)

[இதனுல அன்றியும் நளன் அரசாக்கரசனு யிருக்கையால்
அவனுக்கு நிச்சயமல்லாத செய்தியைச் சொல்ல
லாகாதெனல் சொலலப்படுகின்றது.]

உலகமெலாமபொதுநீக்கியோராழிதனையுருட்டி
யலகிலபுகழ்ப்படாம்போர்த்தவரசாபிரானறிருமுன்னர்
மலர்பொதுளஞ்சிலவோதியையுறுமடநாணுற
சிலமொழிசொற்றனளென்னுச்செப்புவதுஞ்சீர்மைத்தோ

(இ - ள்.) உலகம் எல்லாம் - பூமி முழுதையும், பொது (பலவரசர்க்கும்) பொதுமையினின்றும நீக்குவித்து, ஓர் ஆழிதனை உருட்டி - ஒரு சக்கரத்தைச செலுத்தி, அலகு இல - அளவில்லாத, புகழ் படாம போர்த்த - புகழாகிய ஆடையை (அந்தப் பூமியின மேற) போர்த்திய, அரசர் பிரான் - ராஜாதி ராஜனது, திரு முன்னர்-சந்நிதானத்தில, மலர் பொதுள - மலர்கள நெருங்கப்பெற்ற, அம் சில் - அழகிய பொன்வட்டத் தகட்டணியையுடைய, ஓதி - கூந்தலை யுடையவள, ஐயுறறு - சந்தேகித்து, மடம் - அறியாமையோடுகூடிய, நாணுல - வெட்கத்திஞலே, சில மொழி - (உன்னைக்குறித்துச) சில சொற்களை, சொற்றனள என்னு - சொலலினளென்று, செப்புவதும - சொல்லுவதும், சீர்மைத்தோ - சிறப்புடைத்தாமோ, எ-று.

(க - து.) தமயந்தியே, நளராஜன் திருக்கொலுவின முன்னே யான்போய் அரசனே உன்னைக்குறித்துத தமயந்தி வெட்கத்தாற் சில சொற்கள் சொன்னுள என்று சொல்லுவது சிறப்பாகுமோ என றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

எலாமென்பது எஞசாப் பொருளில் வந்தது, மேனியெலாம் பசலையாயிற் றென்பதிறபோல். ஆணையைச் சக்கரமாகச் சொல்வது

செய்யுள்வழக்கு. 'புகழ்ப்படாம் போர்த்த' எனவே அவன் புகழ் பூமியெங்கும் வியாபித்திருக்கின்ற தென்றதாயிற்று. பெண்களுக்கு விவாகமளவும் தகப்பனுடைமையா யிருக்கவேண்டுதலிற் கருத்தின்படி முடியுமோ முடியாதோவென்று சந்தேகித்தல். 'சீர்மைத்தோ' எனவே ஐயம், மடம், நாணம், சொற்குறைவு இவற்று ளொன்றே சொல்லுதற்குத் தடையாமெனின் இந்நானகுஞ் சேர்ந்த இக்காரியத்தை நான் அதனாலவரும் பழிக்கஞ்சாது எப்படிச் சொல்லமாட்டுவே னென்றதாயிற்று. (கூச)

[இதனால் அப்படி தான் சொல்லுங்கால் குற்றம் யாதெனின் அதற்குத்தரு முத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

சந்தடுகிம்புரிக்கோட்டுக்கழைசுளியுங்கடாயானை
மந்தரத்தாற்பகைக்கடலைமதித்தடையும்வயவேந்தன்
சிந்தையைநின்பாற்பிணிப்பிற்றெள்ளமுதத்திருவேயுன்
றந்தைபிறற்களித்திடினென்வாய்மைதவறாதோ.

(இ - ள்.) தெள் அமுதம் திருவே - தெளிந்த பாற்கடலிற் பிறந்த திருமாதே !, சந்து அடு - கட்டுத்தறியை ஒடிக்கின்ற, கிம்புரி கோட்டு - பூண்கட்டியிருக்கிற கொம்புகளையுடைய, கழை சுளியும் - கரும்புகளை முறிக்கின்ற, கடா யானை - மதயானையாகிய, மந்தரத்தால் - மந்தரகிரியினாலே, பகை கடலை - பகைவரது (சேனையாகிய) பாற்கடலை, மதித்து - கடைந்து, அடையும் - அடையப்பட்ட, வயம் - வெற்றி (த்திருவை) யுடைய, வேந்தன் - நளமகாராஜனது, சிந்தையை - மனத்தை, நின்பால் - உன்னிடத்தே, பிணிப்பின் - (யான்) கட்டி வைத்தால், உன் தந்தை - உன்னுடைய தகப்பனானவன், பிறற்கு - மற்றொருவனுக்கு, அளித்திடின் - (உன்னைக்) கொடுப்பானே யானால், என் வாய்மை - எனது வாய்ச்சொல்லின் றன்மையானது, தவறாதோ - வழுவாகாதோ, எ-று.

(க - து.) தமயந்தியே நளனமனத்தை யான் உன்னிடத்தில் வசப்படுத்திவைத்தால் உன் பிதா உன்னைப் பிறருக்குக் கொடுத்துவிட்டால் எனசொற் பழுதாமென றன்னஞ் சொல்லிற்று என்பதாம்.

பகையென்னும் பண்புப்பெயர் பண்பிக்காயிற்று பகைக்கடலோடு ஆரோபித்தற் கிடமாகிய சேனையும், வயத்தோடு ஆரோபிக்கப்படுபொருளாகிய திருவும், வருவித்துக் கூட்டப்பட்டன. நளனுக்குன்மே லாசைபிறந்த லெளிதன் றெனபது தோன்ற இப்படிப்பட்ட வெற்றிச்சிறப்பை யடையாகக்கியது. உன்னைக்குறித்துப் பலவாறு புகழ்ந்தன்றி அவன் மனத்தை உன்னிடத்தே திருப்புதல் கூடாதென்பது படப் 'பிணிப்பின்' என்றது. அரசன மனத்தை யுன்னிடத்தே திருப்பியபின் உன்றந்தை யுன்னை மற்றொருவனுக்குக் கொடுத்தால் அவனுக்கு நம்பவைத்து மோசஞ்செய்தவ னாவேனென்பது தோன்ற 'என்வாய்மை தவறாதோ' என்றது. சந்தேகத்திற் கிடமில்லாத பொருளையே சொல்லவேண்டுமெனபது கருத்து. யானை முதலியவற்றிலே மந்தர முதலியவற்றை யாரோபித்தலால் உருவகவணி. ()

[இதனால் அது சந்தேகத்திற் கிடமாகையால் அதனைவிட்டு என் பிரதிக்கினை வழுவாமல் வேறுபகாரஞ் செய்வேனெனல் சொல்லப்படுகின்றது.]

என்னுளத்திலையுறல்போல்யார்க்களிப்பான்றந்தையென
வுன்னுளத்துமையமுளதாதலாலிஃதொழிக
பின்னொவையுரைததிடினுமுடிப்பலெனப்பேரெழில்கூ
ரன்னமடவரலுள்ளமறியுமாறுரைத்ததுவே.

(இ - ள்.) பெரு எழில் கூர - பெரிய அழகினால் மிகுந்த, அன்னம் - அன்னப்பறவையானது, என உளததில் ஐயுறலபோல் - எனது மனத்தில் சந்தேகமிருத்தல்போல், தந்தை - தகப்பனானவன், யாாக்கு அளிப்பான் என - யாருக்குக் கொடுப்பானோவென்று, உன உளத்தும் ஐயம் உளது - உனது மனததிலும் சந்தேகமானது இருக்கின்றது, ஆதலால் - ஆகையினாலே, இஃது ஒழிக - இக்காரியம் நீங்கக்கடவது, பின்னா - அதுவன்றி, எவை உரைததிடினும் - எந்தக் காரியங்களை (நீ யெனக்குச்) சொல்லினாலும், முடிப்பல என - (யான்) முடிப்பே னென்று, மடவரல் உள்ளம - தமயந்தியினது கருததை, அறியும் ஆறு - உணரும்படியாக, உரைததது - சொலலிற்று, எ-று.

(க - து.) தமயநதியே எனமனதிற சநதேக மிருக்கிறதுபோல உன்மனதிலுஞ் சநதேகமிருககிறது, இது நீங்க வேறுகாரிய மிருநதாற் சொல முடிப்பேனென றன்னஞ் சொலலிற்று என்பதாம்.

யாரக்களிப்பானோ வெனனும் ஓகாரந தொக்குவந்தது. உனக்கே சந்தேகததிற கிடமாகிய விககாரியததி லெனனைத் தூண்டுதல் நன் றன்றெனபது தோனற 'இஃதொழிக' என்றது. இஃதொன்று நீங்க லாக வேறே பலகாரியங்க ளுளவாயினும் உனககு முடிப்பேனென்றற்கு 'எவையும்' என்ப பன்மையாற கூறியது. (கசு)

[இதனால் தமயந்தி நாணம்விட்டுப் பேசத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது]

கன்னிமனஞ்சூழ்கிடந்தநாணென்னுங்கடியரண
மன்னமொழியெனும்படைகள்வழங்குதலுமழிந்ததான்
முன்னியுளந்தனிற்சிறிதுமுறுவலித்துமுகங்கோட்டி
யின்னமுதமுகுப்பதுபோலவெளிப்படையினியம்புமால்.

(இ - ள்.) கன்னி - தமயந்தியானவள், மனம் சூழ் கிடந்த - மனத்தைச் சூழ்ந்துகிடந்த, நாண் என்னும் - நாணமெனகின்ற, கடி அரணம் - காவலாகிய மதிலானது, அனனம் - அன்னத்தினது, மொழியெனும் படைகள - சொறகளென்கிற ஆயுதங்கள், வழங்குதலும் - மேற்சென்றவளவில், அழிந்ததால் - கெட்டமையால், சிறிது - சிறிது பொழுது, உளந்தனில் முன்னி - (தன்) மனததிலே ஆலோசித்து, முறுவலித்து - சிரித்து, முகம் கோட்டி - முகங் கவிழ்த்து, இன் அமுதம் உகுப்பது போல் - இனியவமிர்தத்தைச் சொரிவதுபோல, வெளிப்படையின் - வெளிப்படையினாலே, இயம்பும் - சொல்லு வாள், எ-று.

(க - து.) தமயந்தியானவள் வெளிப்படையாகச் சொல்லுவாள் என்பதாம்.

மனத்திலுள்ள பொருள்களை வெளிப்படாமற் காத்து நிற்றலால் நாணெனனுங் 'கடியரணம்' எனப்பட்டது. முன்னுதல் அதிரகசியமா கிய விக்கருத்தை யெப்படி வெளிப்படையாற் சொல்வதென் றுலோ சித்தல். நாணமழியினும அதன் பழககவாசனை சிறிதுநிற்கையாற் றிரிப்பும், முகஙகோட்டலும், உண்டாயின. நாணமுதலியவற்றிலே அரணமுதலியவற்றை யாரோபித்தலால் உருவகவணி. (கஎ)

[இதனால் நளனே தனககுத தலைவனெனறு நிச்சய முறுததல சொல்லபபடுகினறது.]

பிணையுயிர்க்குந்தாமரைக்குவெய்யவனுஞ்சேதாம்பன்
மருவுயிர்க்குநாண்மலர்க்குமாமதியுமலலாம
லுணைபெறுநற்றலைவர்பிறருளர்கொலலோபொலன்சிறைய
வரசமடவனமெனையுமனனளாயெண்ணுதியால.

(இ - ள) பொலன சிறைய - பொன்மயமாகிய சிறைகளையு டைய, மடம் - இளமைபொருநதிய, அரச அன்னம் - அரசவன்னமே!, பிணை உயிர்க்கும் தாமரைக்கு - வாசனையை வீசுகின்ற தாமரைப் பூவிற்கு, வெய்யவனும் - சூரியனும், சேதாம்பல் - செவ்வல்லியி னது, மரு உயிர்க்கும் - வாசனையை வீசுகினற, நாள் மலர்க்கு - பரு வமுளள பூவிற்கு, மா மதியும் - பெரியசந்திரனும், அல்லாமல் - அன்றி, பிற - அன்னியர்களாகிய, உணை பெறு - புகழ்பெறற, நல் தலைவர் உளர்கொல்லோ - நல்ல நாயகர் இருக்கினறனரோ?, [இல்லை], என்னையும் - என்னையும, அனனள் ஆய - அபபடிபபட்டவளாய், எண் ணுதி - (நளனனறி நாயகனில்லை யெனறு) எண்ணக்கடவாய், எ-று.

(க-து.) அனனமே! தாமரைக்குச சூரியனும் அல்லிக்குச் சந்திர னும் அனறி வேறுநாயக னில்லாதுபோல எனககு நளனையனறி நாயக னில்லையென் றெண்ணக்கடவாய என றுள எனபதாம்.

எபபடித் தாமரைமலர்க்குச் சூரியனும் அல்லிமலர்க்குச் சந்திரனு மன்றி வேறுநாயகரில்லையோ அபபடியே எனக்கு நளனன்றி வேறு நாயகனில்லை யெனறு தன்னிசசயததைக் கூறியவாறுயிற்று. (கஅ)

[இதனால் விபரீதம் பிரமாதம், சாதனக்குறைபாடு, வஞ்சவிருப்பு இவற்று ளொன்றும் பிறனைத தான் கணவனுகக் கொள் ளாமையை வலியுறுததித தன பிதாவினுலும் அது முடியாமையை யுணாத்துதல் சொல்லப் படுகின்றது.]

முயமுறேனளன்மார்பிலணியலணிகுவனன்றி
நமயல்புரிவேள்வரினுமன்றலந்தார்சூட்டுவனே
நெய்யொழுகுவேற்றுதைபிறற்களிப்பநேர்குவனேல்
வெய்யதழற்புகுந்தாவிவிட்டுனுமைநிறுத்துவனல்.

(இ - ள்.) ஐயம் உறேல் - (அன்னமே!) சந்தேகப்படாதே, ளன் மாாபில் - நளராஜனது மார்பின்கண், அணியல் அணிகுவன் ழன்றி - மாலையைச் சூட்டுவனே யல்லாமல், மையல் புரி வேள் வரி னும் - மயக்கத்தைச் செய்கின்ற மன்மதனானவன் வந்தானாயினும், ணறல் அம் தார சூட்டுவனோ - வாசனைபொருந்திய அழகிய மாலையை (யான) சூட்டுவேனோ, நெய் ஒழுகு - நெய்யானது ஒழுகப் பெறற, வேல் - வேலையுடைய, தாதை - (என) தகப்பனானவன், பிறற்கு அளிப்ப நேருவனேல் - மற்றொருவனுக்கு (என்னைக்) கொடுக்க உடன்படுவானாயின், வெய்ய தழல் புகுந்து - வெப்பம் பொருந்திய நெருப்பினுள் முழுகி, ஆவி விட்டு - உயிரைவிட்டு, உன் டை - உனது சொல்லை, நிறுத்துவன - (நளனிடத்தி) னிலைபெறுவிப் பேன், எ று.

(க-து.) அன்னமே! யான் நளனுக்கே மாலையிடுவேன், என்பிதா பிறனுக் கென்னைக் கொடுக்க வுடன்பட்டால் அக்கினியுள் வீழ்ந்திறந் துனசொல்லை நிலைநிறுத்துவேன் எனறாள் தமயந்தி என்பதாம்.

மூன்றுலகத்திலும் அழகாற சிறந்த மன்மதனை யொழிக்கவே மற்றை யாடவாகளையு மொழிததததாயிறறு. 'வெய்யதழறபுகுநதாவி விட்டு' என்றதனால் கொடுநதுயா விளைக்கு மரணமே நளனையன்றி மற்றொருவனை மணததலினும் இனிதெனறதாயிற்று. அரசனுக்குத் தனனைககுறிதது அன்னததாற சொல்லபபடுஞ் சொல்லை 'யுனனுரை' எனறாள். (கசு)

[இதனால் தனக்குள்ள நிச்சயத்தை யுணாத்தல் சொல்லபபடுகின்றது.]

ஊழியஞ்செய்திறம்வேந்தைவேட்டுள்ளமுருகுமெனை
வாழிமடவனங்கூட்டலரிதென்னைமதித்திடேல
கேழ்கிளர்தாமரையின்முகைகிளரொளித்தண்ணோற்கலரா
தேழ்பரித்தேரவற்காணினலர்ந்திடுதலியல்பன்றே.

(இ - ள்.) மடம் அன்னம் - இளமைபொருந்திய அன்னமே!, வாழி - வாழக்கடவாய், ஊழியம் செய் திறம் - அடிமைத்தொழில் செயயும்படிக்கு, வேந்தை - நளமகாராஜனை, வேட்டு - விரும்பி, உள் ளம் உருகும் எனை - மனமுருகாநினற எனனை, கூட்டல் - (அவ னுக்கு) மனைவியாக்குதல், அரிது - பெரிய வுபகாரமாகும்; என்னை மதித்திடேல் - (இனி) எனனை விசாரியாதே; (இப்படிப்பட்ட பிடி வாதமேன், குணமுள்ள மற்றொரு நாயகனைப் பெறிற் குற்றம் யா தென்றால்), கேழ் கிளர் தாமரையின் முகை - நிறத்தினாலே விளங் காநின்ற தாமரையினது அரும்புக்கு, கிளர் ஒளி தண்ணோற்கு - விளங் காநின்ற சீதளகிரணத்தையுடைய சந்திரனால், அலராது - மலரா மல், ஏழ் பரி தேரவன் காணின் - ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தை யுடைய சூரியனைக் கண்டால், அலர்ந்திடுதல் - மலாதல், இயல்பு அன் றே - சுபாவமன்றோ, எ - று.

(க - து.) தமயந்தியானவள் வெளிப்படையாகச் சொல்லுவாள் என்பதாம்.

மனத்திலுள்ள பொருள்களை வெளிப்படாமற் காத்து நிற்றலால் நாணென்னும் 'கடியரணம்' எனப்பட்டது. முன்னுதல் அதிரகசியமாகிய விக்கருத்தை யெப்படி வெளிப்படையாற் சொல்வதென ருலோசித்தல். நாணமழியினும அதன் பழக்கவாசனை சிறிதுநிற்கையாற் சிரிப்பும், முகங்கோட்டலும், உண்டாயின. நாணமுதலியவற்றிலே அரணமுதலியவற்றை யாரோபித்தலால் உருவகவணி. (கள)

[இதனால் நளனே தனக்குத் தலைவனென்று நிச்சய முறுத்தல் சொல்லப்படுகின்றது.]

விரையுயிர்க்குந்தாமரைக்குவெய்யவனுஞ்சேதாம்பன்
மருவுயிர்க்குநாண்மலர்க்குமாமதியுமல்லாம
லுரைபெறுநற்றலைவர்பிறருளர்கொலலோபொலன்சிறைய
வரசமடவனமெனையுமன்னளாயெண்ணுதியால்.

(இ - ள்) பொலன் சிறைய - பொன்மயமாகிய சிறைகளையுடைய, மடம் - இளமைபொருந்திய, அரச அன்னம் - அரசவன்னமே!, விரை உயிர்க்கும் தாமரைக்கு - வாசனையை வீசுகின்ற தாமரைப் பூவிற்கு, வெய்யவனும் - சூரியனும், சேதாம்பல் - செவ்வல்லியினது, மரு உயிர்க்கும் - வாசனையை வீசுகின்ற, நாள் மலர்க்கு - பருவமுள்ள பூவிற்கு, மா மதியும் - பெரியசந்திரனும், அல்லாமல் - அன்றி, பிறர் - அன்னியர்களாகிய, உரை பெறு - புகழ்பெற்ற, நல் தலைவர் உளர்கொல்லோ - நல்ல நாயகர் இருக்கின்றனரோ?, [இல்லை], என்னையும் - என்னையும், அன்னள் ஆய - அப்படிப்பட்டவளாய், எண்ணுதி - (நளனன்றி நாயகனில்லை யென்று) எண்ணக்கடவாய், எ-று.

(க-து.) அன்னமே! தாமரைக்குச் சூரியனும் அல்லிக்குச் சந்திரனும் அன்றி வேறுநாயக னில்லாதுபோல எனக்கு நளனையன்றி நாயகனில்லையென் றெண்ணக்கடவாய என்றாள் என்பதாம்.

எப்படித் தாமரைமலர்க்குச் சூரியனும் அல்லிமலர்க்குச் சந்திரனுமன்றி வேறுநாயகரில்லையோ அப்படியே எனக்கு நளனன்றி வேறு நாயகனில்லை யென்று தன்னிச்சயத்தைக் கூறியவாறாயிற்று. (கஅ)

[இதனால் விபரீதம் பிரமாதம், சாதனக்குறைபாடு, வஞ்சவிருப்பு இவற்று ளொன்றாற் பிறனைத் தான் கணவனாகக் கொள்ளாமையை வலியுறுத்தித் தன் பிதாவினாலும் அது முடியாமையை யுணர்த்துதல் சொல்லப் படுகின்றது.]

ஐயமுறேனளன்மார்பிலணியலணிகுவனன்றி
மையல்புரிவேள்வரினுமன்றலந்தார்சூட்டுவனோ
செய்யொழுகுவேற்றாதைபிறற்களிப்பனேர்குவனேல்
வெய்யதழற்புகுந்தாவிவிட்டுனுரைநிறுத்துவனால்.

(இ - ள்.) ஐயம் உறேல் - (அன்னமே!) சந்தேகப்படாதே, நளன் மாரபில் - நளராஜனது மார்பின்கண், அணியல் அணிகுவன் அன்றி - மாலையைச் சூட்டுவனே யல்லாமல், மையல் புரி வேள் வரினும் - மயக்கத்தைச் செய்கின்ற மன்மதனானவன் வந்தானாயினும், மனறல் அம் தார சூட்டுவேனோ - வாசனைபொருந்திய அழகிய மாலையை (யான) சூட்டுவேனோ, நெய் ஒழுகு - நெய்யானது ஒழுகப் பெறற, வேல் - வேலையுடைய, தாதை - (என) தகப்பனானவன், பிறற்கு அளிப்ப நேருவனேல் - மற்றொருவனுக்கு (என்னைக்) கொடுக்க உடன்படுவானாயின், வெய்ய தழல் புகுந்து - வெப்பம் பொருந்திய நெருப்பினுள் முழுகி, ஆவி விட்டு - உயிரைவிட்டு, உன் உரை - உனது சொல்லை, நிறுத்துவன - (நளனிடத்தி) னிலைபெறுவிப் பேன், எ று.

(க-து.) அன்னமே! யான் நளனுக்கே மாலையிடுவேன், என்பிதா பிறனுக் கென்னைக் கொடுக்க வுடன்பட்டால் அக்கினியுள் வீழ்ந்திறந் துனசொல்லை நிலைநிறுத்துவேன என்றாள் தமயந்தி என்பதாம.

மூன்றுலகத்திலும் அழகாற சிறந்த மன்மதனை யொழிக்கவே மற்றை யாடவர்களையு மொழித்ததாயிற்று. 'வெய்யதழற்புகுந்தாவி விட்டு' என்றதனால் கொடுந்துயர விளைக்கு மரணமே நளனையன்றி மறறொருவனை மணத்தலினும் இனிதென்றதாயிற்று. அரசனுக்குத் தன்னைக்குறித்து அன்னத்தாற் சொல்லப்படுஞ் சொல்லை 'யுன்னுரை' என்றாள். (கசு)

[இதனால் தனக்குள்ள நிச்சயத்தை யுணர்த்தல் சொல்லப்படுகின்றது.]

ஊழியஞ்செய்திறம்வேந்தைவேட்டுள்ளமுருகுமெனை
வாழிமடவனங்கூட்டலரிதென்னைமதித்திடேல
கேழ்கிளர்தாமரையினமுகைகிளரொளித்தண்ணேற்கலரா
தேழ்பரித்தேரவற்காணினலர்ந்திடுதலியல்பன்றே.

(இ - ள்.) மடம் அன்னம் - இளமைபொருந்திய அன்னமே!, வாழி - வாழக்கடவாய், ஊழியம் செய் திறம் - அடிமைத்தொழில் செய்யும்படிக்கு, வேந்தை - நளமகாராஜனை, வேட்டு - விரும்பி, உள்ளம் உருகும் எனை - மனமுருகாநின்ற என்னை, கூட்டல் - (அவ னுக்கு) மனைவியாக்குதல், அரிது - பெரிய வுபகாரமாகும்; என்னை மதித்திடேல் - (இனி) என்னை விசாரியாதே; (இப்படிப்பட்ட பிடி வாதமேன், குணமுள்ள மற்றொரு நாயகனைப் பெறிற் குற்றம் யா தென்றால்), கேழ் கிளர் தாமரையின் முகை - நிறத்தினாலே விளங் காநின்ற தாமரையினது அரும்புக்கு, கிளர் ஒளி தண்ணேற்கு - விளங் காநின்ற சீதளகிரணத்தையுடைய சந்திரனால், அலராது - மலரா மல், ஏழ் பரி தேரவன் காணின் - ஏழு குதிரைகள் பூட்டிய ரதத்தை யுடைய சூரியனைக் கண்டால், அலர்ந்திடுதல் - மலர்தல், இயல்பு அன் றே - சுபாவமன்றோ, எ - று.

(க - து.) அன்னமே! விதியின் சம்பந்தத்தினாலே நளனையிச் சித்து மனமுருகு மென்னை அந்நளனோடு கூட்டுவித்தல் உனக்குப் பெரிய காரியமல்லவென்று சொன்னாள் என்பதாம்.

வாழிய வென்னும் வியங்கோளி னீற்றின் யகர வுயிர்மெய்கெட்டு வாழி யென நின்றது. 'ஊழியஞ்செய் திறம்வேந்தை வேட்டுள்ள முருகுமென்னைவாழிமட வனங்கூட்டலரிது" எனவே, தனக்கு நானூழி யக்காரியாம் பதத்தைப்பெற விரும்பும்படி யிருக்கின்ற வப்படிப் பட்ட நளனுக்கு மனைவியாம்பதம் எனக்குக் கிடைத்தால் அது எப்ப டிப்பட்ட பெரும்பேறு யிரா தென்றதாயிற்று. 'என்னை மதித்தி டேல்' எனவே இப்படிப்பட்ட நிச்சயத்தை அறிவிக்கப்பட்ட நீ என்னை யினிச் சோதித்தல் அரைபட்டமாவை யரைத்தல்போலுமாம்; ஆதலால் கூட்டுதற்கு வேண்டு முயற்சி செய்யென்றதாயிற்று. தாம ரையைக் குறித்துச் சொல்லப்பட்ட வுபமான வாக்கியத்தால் எப்படி தாமரையரும்பு சூரியனையன்றிச் சீதளகிரணத்தை யுடையவனா யிருந் தாலுஞ் சந்திரனை விரும்புகிற தில்லையோ வப்படியே நான நளனை யன்றிக் குணமுடையவனா யிருந்தாலும் மற்றொருவனை விரும்பே னென்னும்பொருள் பெறப்பட்டது. நளனிற சிறந்த குணமுடையவ னொருவ னில்லாதிருக்கவுந் தனது நிச்சயத்தை நம்புவித்தற்கு இங் ஙனங் கூறினாள். தாமரைச்செய்தியாகிய அல்பொருளி னொப்புமை யின் சம்பந்தத்தால் தமயந்தி செய்தியாகிய புகழ்பொருள் தோன் றுதலால் ஒப்புமைப் புனைவிலி புகழ்ச்சியணி. "ஊழியல் பிறறிறல் வேந்தைவேட்டுள்ள முருகுமென்னைவாழிமட மனங்கூட்டலரி தென்ன மதித்திடேல் கேழ்கிளர் தாமரையின் முகைகிளரளி தண்டேனுகர' என வழங்குகின்றபாடம் இதன்முதனூல் முடிபிற்குச் சிறிதும ஒவ் வாமற பொருட்சிறப்பு மிலதாய் நிற்கின்றது. (௧00)

[இதனால் தனது நிச்சயத்தை யறிவித்து அன்னத்தினது நிச்சயத்தை வினவுதல் சொல்லப்படுகின்றது.]

வாடடிறல்சேர்வயவேந்தின்மணிப்புயத்தென்முலைதிளைப்
கூட்டுதியேலுயிர்வாழ்வல்கூட்டாயேலுலகறிய [பக்
மூட்டழலிற்புகுந்தாவிமுடித்திடுவலொளிகெழுசெஞ்
சூட்டுமடவனமிவற்றுளென்செய்வான்றுணிந்தனையால்.

(இ-ள்.) ஒளி கெழு - காந்திபொருந்திய, செம் சூட்டு - செய்ய வுச்சிக் கொண்டையையுடைய, மடம் அன்னம் - இளமைபொருந் திய அன்னமே!, வாள் திறல் சேர் - வாளினது போரினால் சேர்ந்த, வயம் வேந்தின் - வெற்றியையுடைய நளமகாராஜனது, மணி புயத்து - அழகிய தோள்களிடத்து, என் முலை திளைப்ப கூட்டுதியேல் - என் னுடைய முலைகளானவை அழுந்தும்படியாக (என்னை அவனோடு) சேர்ப்பாயானால், உயிர் வாழ்வல் - உயிர்வைத்திருப்பேன்; கூட்டா யேல் - சேர்க்காயானால், உலகு அறிய - உலகத்தாரறிய, மூட்டு அழலில் புகுந்து - மூட்டப்பட்ட நெருப்பினுள் மூழ்கி, ஆவி முடித் திடுவல் - உயிரை விட்டுவிடுவேன்; இவற்றுள் - (கூட்டலுங் கூட்

டாமையுமாகிய) இவ்விரண்டனுள், என் செய்வான் துணிந்தனை - எது செய்யும்படியாக (நீ) நிச்சயித்தாய், எ-று.

(க-து.) அன்னமே! நீ என்னை நளனோடு சேர்த்தால் உயிரைவைத் திருப்பேன, சோக்காவிட்டால் உயிரை விட்டுவிடுவேன் என்றாள என்பதாம்.

'கூட்டுதியே லுயிரவாழ்வல்' என்றும், 'கூட்டாயே லுலகறிய மூட்டழலிற் புகுந்தாவி முடித்திடுவல்' என்றும், கூறுதலாலே கூட்டிப் பிழைப்பிக்கவுங் கூட்டாம லிறபபிக்கவும் வல்லமை உனக் குண்டாயிருத்தலால் உன்னையே தஞ்சமாக நம்பியிருக்கிற வெனனைப பிழைபபித்தாற் புகழும் புண்ணியமும் உண்டாமென்றும், அது செயயாயாகிற் பழியும பாவமும் உண்டாமென்றும், குறிபபிததவாறு யிற்று. தனது தீப்பாய்தலை யாவரும் புகழ்தற் பொருட்டுத் தன ஹுததமசிநதையை வெளிப்படுத்தவேண்டு மென்பதுபற்றி 'உலகறிய' என்றாள். (க0க)

[இதனால் அக்கூட்டலுதவியின் பெருமை கூறல் சொல்லப்படுகின்றது.]

உயிருதவிசெய்தவர்க்கொன்றுற்றக்காலுணர்வுடையோர்
செயிரறுதம்முயிரளித்துச்செய்நன்றிக்கடன்கழிப்பார்
மயர்வறவென்னுயிரினுஞ்சீர்வாய்ந்தநளன்றனையளிப்பி
னயர்வறுமோதிமமதற்குக்கைம்மாறேதறிகிலன்யான்.

(இ-ள்.) அயாவு அறு ஓதிமம் - (மனச்) சோாவறற அன்னமே!, உணாவு உடையோா - அறிவுடையோா, உயிா உதவி செய்தவாக்கு - (ஆபத்துவந்தபோது தம்) உயிரைக் காபபாறறினவாக்கு, ஒன்று உற றக்கால் - ஓராபத்து வந்ததாயின், செயிா அறு - குற்றமறற, தம் உயிா அளித்து - தம்முடைய உயிரைக் கொடுதது, செய நன்றி கடன கழிப்பாா - (அவராற்) செய்யபபட்ட வுபகாரமாகிய கடனைத் தீாப பாா, மயாவு அற - மயக்கமானது நீங்க, என உயிரினும - எனது உயிரைக்காட்டிலும், சீா வாய்ந்த - சிறப்புப் பொருந்திய, நளன்றனை அளிப்பின் - நளராஜனைக் கொடுபபாயானால், அதறகு - அவ்வுபகாரத் திற்கு, கைம்மாறு - எதிருபகாரம், ஏது - யாது, யான் - நான், அறிஇலன் - (அதனை) அறியேன், எ-று.

(க - து.) அன்னமே! உயிரக் குதவிசெய்தவாக்கு உயிாக்குதவி செய்வாாகள் உணாவுடையவாகள்; என்னுயிரினுஞ் சிறந்த நளனை நீ எனக்குக்கொடுத்தால் உனக்கென்ன பிரதியுபகாரஞ் செய்வேன் என் றாள் என்பதாம்.

யாது அறியேனெனவே யில்லை யென்றதாயிற்று. கடன்கழிப் பாரென உலகத்தின்மேல் வைத்துக்கூறினும் நீ எனக்கு உயிருதவி செய்யின் உன்பொருட் டென்னுயிரைக் கொடுத்து அக் கடனைத் தீர்ப் பேன் என்பதே கருத்தாகக் கொள்க. அதற்கு 'கைம்மாறே தறி கிலன்யான்' என்றதற்கு உயிாக்குயிரே யீடாமாதலின் என்னுயிரின்

மேற்பட்ட நளனுக் கிடாக நளனிற் கீழ்ப்பட்ட வென்னுயிரைக் கொடுத்து அக்கடனைத் தீர்க்கக் கூடாமையால் நீ அவனை எனக்குக் கொடுத்து என்னை உனக்கு இனி யெனறென்றைக்குந் தீரக்கமாட்டாத கடன்பட்டவ ளாக்கெனபது கருத்து. (கOஉ)

[இதனால் ஈடில்லாதவுதவி செய்தலாற் பயன் யாதெனின்
அதற்குத்தரு முத்தரஞ் சொல்லப்படுகின்றது.]

கைம்மாறுநினக்காற்றலரிதெனினுங்களிப்பினுளஞ்
செம்மாந்துன்செயிரறுசீரோவாதுசெப்புவலயா [த்
னெம்மாவியிறந்துபடாதிருக்குங்கொல்வினைவினிற்போய்
தெம்மாறுசுடர்வேலான்றிருவருள்பெற்றிடாயெனினே.

(இ - ள்.) கைம்மாறு - பிரதியுபகாரத்தை, நினக்கு ஆற்றல் - உனக்குச் செய்தல், அரிது எனினும் - இல்லையாயினும், களிப்பின - மகிழ்ச்சியினாலே, உளம் செம்மாந்து - உள்ளத்தில் இறுமாந்து, உன செயிர் அறு சீர் - உனது குற்றமற்ற குணத்தை, ஓவாது - இடைவிடாமல், யான் செப்புவல் - நான் சொல்லுவேன், (ஆனால் அதை நன்றாக வாலோசித்து வினையாமற் செய்வேனெனபாயாயின்) வினைவினில் போய் - சீக்கிரத்திற் சென்று, தெவ் மாறு - பகைவரும் (நடபினராய்) வேறுபடுதற்குக் காரணமாகிய, சுடர் வேலான - ஒளியையுடைய வேலையுடையவனது, திரு அருள் பெற்றிடாயெனின் - அழகிய வருளைப் பெறாயாயின், எம் ஆவி - எம்முடைய வுயிர்களானவை, இறந்துபடா - நீங்கிப்போகாமல், இருக்குங்கொல் - இருக்குமோ, எ-று.

(க - து.) அன்னமே! நானுனக்குப் பிரதியுபகாரஞ்செய்த லரிதென்றாலும உன்புகழ்ச்சியை இடைவிடாது சொல்லுவேன, நீவினைவிற்போய் நள னருளைப் பெறாவிடில் எங்க ளுயிர் களிருக்குமோ என்றாள் என்பதாம்.

ஈடில்லாத வுபகாரத்தைச் செய்யுஞ் சீராதலாற 'செயிரறுசீர' என்றாள். 'உன் செயிரறு சீரோவாது செப்புவல்' எனவே என்னாலே யுலகத்திலே பெரும்புகழுண்டாதலே யுனக்குப பய னென்றதாயிற்று. அன்றியும் "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என் றிருக்கையால் பின்னே தான் செய்யக் கடவதாகிய நன்றி பாராட்டலைக் காட்டித் தீர்ன் அவ வுபகாரத்திற்குப் பாத்திரமா யிருக்கையைக் குறிப்பித்தவா றாயிற்று தா னிறக்கும்போது அது பொறாது தாயரும் பாங்கியரும் இறப்பரென்பது கருதி அவரையுந் தழுவி 'எம்மாவி' எனப் பன்மையாற் கூறினாள். பகைமைப்பொருளை யுணர்த்துந் தெவ் வென்பதின் வகரமெய் வருமொழி மகரத்தைநோக்கி மகரமெய் யாயிற்று. "தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க, தூங்காது செய்யும்வினை." என் றிருக்கையால் விரைந்து செய்யத்தகுவதாகிய இக் காரியமுயற்சியில் தாமசியஞ் செய்யாதே யென்னுங் கருத்தால் வினைவினிற்போய் அருள்பெறறிடாயெனின் 'எம்மாவி யிறந்துபடா திருக்குங்கொல்' என்றாள். (கOங)

[இதுமுதல் மூன்றுபாட்டுகளால் பின்பு அன்னஞ் செய்யத்தகு மவற்றை யறிவித்தல் சொல்லப்படுகின்றது.]

என்குறைநீவயவேந்தற்கியம்புதியேல்வடங்கிடந்து
பொன்பிதிர்மின்சுணங்கார்ந்தபொம்மலிளமுலையினர்பா
லன்புறுநலலமயமதிலறையற்கவறைகுதியே
னன்குரைதீங்காமவர்பானயப்புற்றதன்மையினால்.

(இ - ள்.) என் குறை - எனது குறையை, நீ - நீ, வயம் வேந்தற்கு இயம்புதியேல் - வெற்றியையுடைய நளமகாராஜனுக்குச் சொல்வாயாயின், வடம் கிடந்து - முத்துவடமானது தங்கப்பெற்று, பொன் பிதிர் மின் - பொன்பொடிபோல விளங்குகின்ற, சுணங்கு ஆர்ந்த - தேமலால் நிறைந்த, பொம்மல் இள முலையினர்பால் - பொலிவும் இளமையும் பொருந்திய முலையினரிடத்து, அன்பு உறு - அன்புற்றிருக்கின்ற, நல் அமயமதில அறையற்க - நல்ல சமயத்தில் (அதனைச்) சொல்லாதே, அறைகுதியேல - (அப்போது) சொல்வையேயானால், அவர்பால - அவரிடத்தே, நயப்பு உற்ற தன்மையினால் - இன்பமுற்ற குணத்தினாலே, நன்கு உரை - (உனது) நல்லசொல்லும், தீங்கு ஆம - (அவனுக்குக்) குற்றமுள்ளதாகும், எ-று.

(க -து.) அன்னமே! நீ என குறைகளை அரசனிடத்திற் சொல்லுவையேயானால அரசன் பெண்களிடத தன்புள்ள சமயத்திற் சொல்லாதே, சொன்னால் நல்வார்த்தையும் குற்றமாய்விடும் என்றாள் என்பதாம்.

பொம்மலுக்கு அப்பொருள் "பொம்மலேபொலிவுஞ்சோறும்" என்பதனாலறிக. எப்படி நீரைக்குடித்தது அதனாலே திருப்தியடைந்திருக்கிறவருக்கு அப்போது தெளிவுந் தீஞ்சுவையும் பரிமளமுஞ் சீதளமு முடையதா யிருந்தாலும் வேறுநீர விரும்பப்படாதோ அப்படியே ஒருத்தியைப் புணர்ந்து அவளாலே திருப்தியடைந் திருக்கிறவனுக்கு அப்போது பல குணங்களு முடையவளா யிருந்தாலும் வேறொருத்தி விரும்பப்படா ளாதலால், 'நன்குரை தீங்காமவர்பா னயப்புற்றதன் மையினால்' என்றாள். (கoச)

வேற்றரசர்திறைகொணரும்வேலையிலுஞ்சொல்லற்க
மாற்றரசர்பால்வெகுளுமமயத்தும்வகுத்துரையே
றேற்றமுடைமதிவல்லோர்தேர்ச்சியிலுந்தெரிந்துரையேல்
சாற்றினுரைத்தனவெல்லாந்தவறுதலறிதியே.

(இ - ள்.) வேறு அரசர் - பிற வரசருடைய, திறை - இறைப்பொருளை, கொணரும் வேலையிலும் - வருவிக்கின்ற காலத்திலும், சொல்லற்க - சொல்லாதொழிக; மாறு அரசர்பால் - பகை யரசரிடத்து, வெகுளும் அமயத்தும் - கோபஞ்செய்கின்ற காலத்திலும், வகுத்து உரையேல் - சொல்லாதே; தேற்றம் உடை - தெளிவை உடைய, மதி வல்லோர் தேர்ச்சியிலும் - மந்திரிகளோடு ஆலோசனைசெய்யுங் காலத்திலும், தெரிந்து உரையேல் - சொல்லாதே; சாற்றின் - (நீ)

சொல்லின், உரைத்தன எல்லாம் - (உன்னால்) சொல்லப்பட்டனவெல்லாம், தவறு ஆதல் - குற்றமுடையன வாதலை, அறிதி - (நீ) அறிவாய், எ-று.

(க - து.) அன்னமே! அரசர் திறை தரும்போதும் பகையரசரைக் கோபிக்கும்போதும் மந்திரிகள் மதிசொல்லும்போதும் என் வார்த்தைகளைச் சொல்லாதே, யான் சொன்னதெல்லாஞ் சொல்லென்றாள் என்பதாம்.

செல்வப்பொருளிலே சென்றிருக்கிற மனமானது தத்துவப்பொருளிலே சென்றிருக்கிற யோகிமனம்போற் பிறிதொன்றிலே விரைந்து திரும்பாதாதலாலும், கோபத்தால் கலங்கிய மனத்திற்கு நற்செய்தியும் பித்தத்தாற் குணம்வேறுபட்ட வாய்க்குச் சர்க்கரைபோற் கசக்குமாதலாலும், மந்திரிகளோடு செய்யும் ஆலோசனைவேளையிலே சொல்வது கனவுவேளையிலே சொல்வதுபோல செவியிலே நுழையாதாதலாலும், அப்படிப்பட்ட சமயங்களிலே சொல்லலாகாதென்றாள். வருத்துநை, தெரிந்துரை, இவை ஒருசொற்றன்மைப்பட்டு வந்தன. ()

பொறிசெறித்த மாண்பினராய்ப் பொருந்தலர்ச்செற் றிருநி
செறிதரு மாறீட்டியருவினைவாங்குசெயலினரு [தியஞ்
முறுபிழையுட்சிறிதியற்றினொறுத்திடுவர்வயவேந்த
ரறுதிபெறநீமொழியுமமயமறிந்துரைத்தியால்.

(இ-ள்.) பொறி செறித்த - ஐம்பொறிகளையும் அடக்கிய, மாண்பினர் ஆய் - நற்குணமுடையவராகி, பொருந்தலர் செற்று - பகைவரை வென்று, இரு நிதியம் - அதிக திரவியத்தை, செறிதரும் ஆறு - நெருங்குமாறு, ஈட்டி - சேர்த்து, அரு வினை - பெரிய தொழில்களை, வாங்கு செயலினரும் - (தம்மிடத்து) வாங்கிய செய்கையை யுடையவரும், உறு பிழையுள் - (பலவாய்) உறுகின்ற குற்றங்களுள், சிறிது இயற்றின - சிறிய வொருகுற்றத்தைச் செய்தாலும், வயம வேந்தர் - வெற்றியையுடைய அரசராயினோர், அறுதி பெற - (தம்மின்) ஒழிவை அடைய, ஒறுத்திடுவர் - (அப்படிப்பட்டவரையும்) தண்டிப்பார்; (ஆதலால்) நீ - (விவேகியாகிய) நீ, மொழியும் அமயம் அறிந்து உரைத்தி - சொல்லுதற்குரிய காலத்தைத் தெரிந்து சொல்லு, எ-று.

(க - து.) அன்னமே! பகைமன்னரை வென்று பாக்கியஞ் சம்பாதித்துத்தரும் வல்லவர்களும் அற்ப குற்றஞ்செய்தால் அரசர் தண்டிப்பாராகையால் குற்றமின்றிக்காலமறிந்து கூறென்றாள் என்பதாம்.

பொறிசெறித்தலாவது அரச னொருவரோடு ரகசியம் பேசும்போது தான் செவிகொடுத்துக் கேளாமையும், கண்ணாற்பாராமையும், முதலியன. "எப்பொருளுமோரார் தொடரார்மற் றப்பொருளை, விட்டக்காற் கேட்கமறை" என்பதனானு மறிக. நல்லகுணத்தையும் பகைவெல்லு முபாயத்தையும் பொருள்சேர்க்கு முத்தியையும் எவரிடத்தே காண்கின்றாரோ அவரை அரசர் பெரிய வுத்தியோகத்தில் வைப்பரென்க. பெரிய தொழில்களாவன—மந்திரித்துவம், சேனாதிபத்தியம்

ஙியாயாதிபத்தியம் முதலியனவாம். அப்படி பலவிதத்தாலும் தமக்கு உதவிசெய்தவனாயே சிறிது பிழையா லொறுத்தல் அரசாக்குச் சுபா வகுண மாதலால் அச்சயமயத்திலே சொன்னல் நமதுகாரியம எப்படி முடியும் என்பது கருத்து. (கoசு)

உளத்தனவாண்முகத்தனவாயுதிக்குமவைகுறிப்பினுற்
றெளித்துரைத்தல்சீர்மைத்தேதூதர்செயலிற்றுகும்
விளக்கமுறநீயலதியாரறிவரிவைமெலியுமெனே
யளித்திடுதிவினைவினிற்போயாய்தூவிமடவனமே.

(இ - ள்.) ஆய் தூவி - மிக மெல்லிய இறகையுடைய, மடம் அன்னமே - இளமைபொருந்திய அன்னமே!, உளத்தன - (ஒருவா) மனத்திலுள்ள குணங்களானவை, வாள் - ஒளிபொருந்திய, முகத்தன ஆய- முகத்திடத்தனவாகி, உதிக்கும் - தோன்றும்; அவை - அக்குணங்களை, குறிபபினுல் தெளிதறு - (அம்முகக்) குறிப்பினுலே அறிநது, உரைத்தல் - சொல்லுதல், சீாமைத்தே - சிறப்புடைததாகும், தூதா செயல் - தூதரது தொழிலானது, இற்று ஆகும் - இததன்மைததாகும், இவை - (நளன் மனததிலுள்ள) இவறறை, விளக்கம் உற - விளங்குதலுற, நீ அலது - நீயல்லாமல், யாா அறிவா - (வேறே) யாவா அறியவல்லவா; வினைவினில் போய - சீக்கிரத்தில் (நளமகாராஜனிடதுப்) போய, மெலியும் எனே - வருந்துகினற என்னே, அளிததிடுதி - காப்பாற்று எ-று. ஆல் - ஆசை.

(க - து.) அன்னமே! அகததிலுள்ளவை முகத்திற காட்டும், முகக குறிபபறிந்து சொல்லுதல் தூதா திறமாகும், நளனமனத் துள்ளவை நீயல்லாமல் யாரறிவாாகள் சிக்கிரம்போய எனனைக் காபபாற்று என றாள் என்பதாம.

உளததன—விருப்பு வெறுப்பு முதலியன. அவை முகத்தனவாயுதிக்குமென்றது, "அடுத்ததுகாட்டும் பளிங்கேபோனெஞ்சங் கடுத ததுகாட்டு முகம்" என்பதனுலும், இவை குறிப்பினுல் 'தெளித்துரைத்தல் சீாமைத்தே' என்றது, "குறிப்பிறகுறிப்புணாவாரை யுறுப்பினுள், யாதுகொடுத்துங் கொளல்" என்பதனுலும் அறிக. தெளிந தெனறபாலது தொடை நோககித் தெளிதெென விகாரப்பட்டது. விளக்கமுறல் - ஐயந்திரிபின்றி யறியநிறறல். 'நீயலதியாரறிவா' எனவே விவேகியாகிய நீயே யறியவல்லா யென்றதாயிற்று. (கoஎ)

[இதனுற் பின்பு அன்னஞ் சில சொற்கள் பேசத்தொடங்கினமை சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்ன வாங்கு வெளிப்படையிற் குயிலு நாண வின்னமிழ்திற், கன்னற் பாகிற் கோற்றேனிற் கனியிற் கனிந்த மொழிநவிலும், பொன்னம் பாவை யன்னுடன் னுள்ளந் தேர்ந்து மகிழ்புரியா, வன்னங் கண்ணு லருந்துதல்போ னேக்கிச் சிலசொல் லறையுமால்.

(இ - ள்.) என்ன - என்று, அன்னம் - அன்னமானது, ஆங்கு - அந்தச்சோலையினிடத்து, வெளிப்படையின் - வெளிப்படையினாலே, குயிலும் நாண - கோகிலமும் வெட்கமுற, இன் அமிழ்தின் - இனிதாகிய வமிர்தத்தினும், கன்னல் பாகின - சாக்கரைக் குழம்பினும், கோல் தேனின் - கொம்புத் தேனினும், கனியின் - முக்கனியினும், கனிந்த மொழி - சுவைமிகுந்த இந்தச்சொற்களை, நவிலும் - சொல்லிய, பொன் - பொன்மயமாகிய, அம் - அழகிய, பாவை அன்னாள் - பாவைபோல்பவளது, உள்ளம் தேர்ந்து - கருத்தை யறிந்து, மகிழ்புரியா - மகிழ்ந்து, கண்ணால் அருந்துதல்போல் - கண்களால் விழுங்குதல்போல், நோக்கி - (அவளைப்) பார்த்து, சில சொல் அறையும் - சில சொற்களைச் சொல்லும், எ-று.

(க - து.) அன்னமானது தமயந்தியைப்பார்த்துச் சிலசொற்களைச் சொல்லும் என்பதாம்.

பொன்னம்பாவை யன்னாடன் னுள்ளம் - நளனிடத்துப் பற்றிய அவளது மனோநிச்சயம். தனேத தூதனுப்பிய வரசன காரியங் கைகூடுதலால் மகிழ்ந்ததென்க. கண்ணா லருநதுதல்போ.லநோக்கல் - அதிக விருப்பத்தோடு பார்த்தல், இது உலக வழக்கச்சொல் லாதலால் உலகவழக்கு நவிற்சியணி. இதுமுத லிருபத்தாறு பாட்டுகள் பெரும்பாலும் மூனறுஞ்சீரும காய்ச்சீர்களும் மற்றை நான்குசீர்களும் மாச்சீர்களும் ஆகி வருகிற கழிநெடிலடி நான்குகொண்ட ஆசிரிய விருத்தங்கள். (க0அ)

[இதனால் நிச்சயமிருந்தாற் காரியம் எளிதின் முடியுமெனல் சொல்லபபடுகின்றது.]

சுணங்கு பூத்துக குலிசச்செப் பெனலாய்ச் சுருங்கி நுழைநுசுப்பு, வணங்கித் தேம்ப வருமுலையா யுரைத்த மாற்ற மெய்யாமே, இணங்கு வாயில் யார்வேண்டு நளற்கு நினக்கு மிதயத்து, ளணங்கு நோய்செய் தலர்தூற்று மனங்க னொருவ னிருக்கவே.

(இ - ள்.) சுணங்கு பூத்து - தேமலானது படரப்பெற்று, குலிசம் செப்பு எனல் ஆய் - இங்குலிகத்தினலாகிய செப்புகளென்றாகி, நுழை நுசுப்பு - நுண்ணிய இடையானது, சுருங்கி - இளைத்து, வணங்கி - வளைந்து, தேம்ப - வருந்த, வரு முலையாய் - வளாகின்ற முலைகளை யுடையவளே !, உரைத்த மாற்றம் - (உன்னாற்) சொல்லப்பட்ட சொல்லானது, மெய்யாமேல் - சத்தியமாயின், நளற்கும் நினக்கும் - நளராஜனுக்கும் உனக்கும், இதயத்துள் - மனத்தின்கண், அணங்கு நோய் - வருத்தஞ்செய்கின்ற (காம) நோயை, செய்து - உண்டாக்கி, அலா தூற்றும் - பழிமொழியைப் பரப்புகின்ற, அனங்கன் ஒருவன - மன்மதனொருவன், இருக்க - உளனாக, இணங்கு - (உம்மிருவரையும) பொருந்துதற்கு, வாயில் - சந்திசெய்வோர், யார் வேண்டும் - (உங்களுக்கு) எவர் வேண்டும, எ-று.

(க - து.) தமயந்தியே, நீ சொன்னசொல் மெய்யானால் இருவ ரையுங் கூட்டிவைக்க இடையில் மன்மதனொருவனிருக்க வேறேயொ ருவர் வேண்டுமோவென வன்னஞ்சொல்லிற்று என்பதாம்.

இங்குலிக மென்றபாலது குலிகமென முதற்குறைந்தது. இங் குலிகச்செப்பை உபமானமாக்கியது செந்நிறமும் ஒளியும் பற்றி யெனக. அனங்கனொருவனிருக்க இணங்குவாயில் யார்வேண்டும் என வே உம்மிருவரையுங் கூட்டுதற்கு மன்மதனொருவனே போதுமாகை யால் இதுகாரியத்திலே யானசெய்யக்கிடந்த வுபசாரமொன்றுங் கண்டிலே னென்றதாயிற்று. இணக்கெனனும் பிறவினை தொடைநோ க்கி இணங்கென விகாரமாயிற்று. (க0கூ)

[இதுமுத லொன்பது பாட்டுகளால் அன்னம் நளனுடைய
காட்சிமுதலிய அவத்தைகளை யுணர்த்தத்தொடங்கி
இதனாலே செவிப்புலக்காட்சி யுணர்த்தல்
சொல்லப்படுகின்றது.]

கடலசூழ் புவியிற் பாதலத்தி லமர ருலகிற் கவின்றி கழுங், கொடிநே ரிடையாள் யாரென்ன நின்னை யாங்கள் கூறுதலும், படியேழ் புரக்கும் வேந்துளத்துப் படைவே ள் பகழி புகுவழிபோய், மடமா னோக்கி நீயுறைதல் மறந் தாய் கொலலோ மறைத்தனையோ.

(இ - ள்.) மடம் - இளமைபொருந்திய, மான் நோக்கி - மான (கண்) போலுங் கண்களையுடையவளே!, படி ஏழ் புரக்கும் வேந்து - ஏழு தீவுகளையும் காக்கின்ற நளமகாராஜனானவன, கடல் சூழ் புவி யில் - கடலானது சூழப்பெற்ற பூலோகத்திலும், பாதலத்தில் - நாக லோகத்திலும், அமரர் உலகில் - தேவலோகத்திலும், கவின் திகழும் - அழகினாலே விளங்காநின்ற, கொடி நேர் இடையாள் - கொடிபோ லிடையையுடைய மங்கை, யார் என்ன - எவளென்றுவினவ, யாங் கள் - நாங்கள், நின்னை கூறுதலும் - உன்னைச் சொல்லுதலும், படை வேள் - படையையுடைய மன்மதனது, பகழி - பாணமானது, புகு வழி - சென்ற வழியால், போய் - சென்று, உளத்து - (அவன) மனத் தினகண், நீ உறைதல் - நீ இருக்கையை, மறந்தாய் கொல் - மறந்தா யோ, மறைத்தனையோ - (எனக்கு) ஒளித்தனையோ, எ-று.

(க - து.) தமயந்தியே நளமஹாராஜன் அழகுள்ளபெண் யா ரென் றெங்களைக்கேட்க யாங்களுன்னைச சொல்லுதலும் மன்மதபா ணஞ் சென்றவழியே நீ போயிருந்ததை மறந்தாயோ அல்லது மறைத் துச் சொல்லுகிறாயோ வென் றன்னஞ் சொல்லியது என்பதாம.

நாங்கள் உன்னுடைய குணாதிசயங்களைச்சொல்ல என்றுகேட டறிந்தானோ அன்றுமுதலாக வுனமேலாசைகொண்டு மன்மதபாணங் களினாலே வருந்தி உன்னை நினைத்திருக்கின்றா னென்பது கருத்து. மறத்தற்குப் பேதைமையும், மறைத்தற்கு நாணமும், காரணங்களா கும். கேட்டறிதலும் பார்த்தறிதலோடொத்தலிற் காட்சியாதலறிக.()

[இதனால் சித்திரக்காட்சி சொல்லப்படுகின்றது.]

ஈட்டு மணிகள் பலதெளித்துன் னெழுதற் கரிய திரு
வுருவங், கோட்டுங் கிழிதான் முலைகோட்டப் பரப்பின்
றென்னுங் கொடிமருங்கு, தீட்ட வனைகோ னுதிநுண்மை
யிலதென் றெண்ணித் திகைக்குமுளம், வேட்டு நெடுங்க
ண் ணிமையாம னோக்கித் தளரும் வேல்வேந்தே.

(இ - ள்.) வேல் வேந்து - வேற்படையையுடைய நளமகாராஜ னானவன், உன - உனது, எழுதற்கு அரிய - (சித்திரக்காரரா)லெழுது தற்கரியதாகிய, திரு உருவம் - (உனது) அழகிய வடிவத்தை, ஈட்டு - (தன்னால்) சம்பாதிக்கப்பட்ட, பல மணிகள் - பலவகையாகிய மணி களை, தெளித்து - பதித்து, கோட்டும் - எழுதுகிறான்; முலை - (உன) முலைகளை, கோட்ட - எழுதுதற்கு, கிழி - படத்தில், பரப்பு இன்று எனனும் - அகலம் இல்லையெனகிறான, கொடி - பூங்கொடிபோலும, மருங்குல் - (உனது) இடையை, தீட்ட - எழுதுதற்கு, வனை கோல் - தூரிகைக்கோலினது, நுதி - நுனியினுடைய, நுண்மை இலது என்று எண்ணி - கூர்மையானது இல்லையென்று நினைத்து, திகைக்கும் - திகைக்கிறான், உளம் - மனத்தில், வேட்டு - விரும்பி, நெடு கண் இமையாமல் - நெடியகண்களானவை இமையாதிருக்க, நோக்கி - (அவ் வடிவத்தைப்) பார்த்து, தளரும் - வருந்துகிறான, எ-று.

(க-து.) நளமஹாராஜன் உனது திருவுருவத்தை யெழுதுகிறான், உன் கனதனங்களை யெழுதப் படமகல மில்லையென்கிறான், உனதிடை யை எழுதுதற்குத் தூரிகைக்கோல் கூர்மையில்லையென்கிறான், உனது ருவத்தை இமையாது நோக்கி வருந்துகிறான் என்பதாம்.

மணிகள் பலதெளித்தலாவது ஒன்பதுவகை மணிகளிலே எவ் வெம்மணி யெவ்வெவ் வுறுப்பிற்கு ஒத்திருக்குமோ அவ்வம் மணியை அவ்வவ்வுறுப்பைச்செய்யு மிடத்துப் பதித்தலாம். அவையாவன கண் ணுக்கு நீலமும், பல்லுக்கு முத்தமும், அதரத்துக்குப் பவளமும் போல்வனவாம். விநோதோபாயமாகத் தமயந்திக்குச் சமானமாக வெழுதப்பட்ட சித்திரமாதலால் அதனைப் பார்த்தலுங் காட்சியா மெனக. (கஃக)

[இதனால் வேட்கையும் உள்ளுதலும் சொல்லப்படுகின்றன.]

பருந்துங் கழுகுங் கொடியினமு மருந்தப்பகைஞ ரு
டறடிந்து, விருந்து செய்யுஞ் சுடர்வடிவேல வேந்த னுயி
ரு நீயென்னும், பொருந்துங் காமப் பிணிநீக்கிப் புலம்பு தீ
ர்த்தின் னுயிரளிக்கு, மருந்து நீயே யென்றெண்ணி மகிழ்
துங் குளத்தோ டிருந்தயரும்.

(இ - ள்.) பருந்தும் - சேனங்களும், கழுகும் - எருவைகளும், கொடி இனமும் - காக்கைக்கூட்டங்களும், அருந்த - தின்னும்படியாக, பகைஞா - பகைவருடைய, உடல் தடிந்து - உடம்புகளை துணித்து,

விருந்து செய்யும் - (அவற்றிற்கு) விருந்துசெய்கின்ற, சுடா வடிவேல் - ஒளியும் கூரமையும் பொருந்திய வேலையுடைய, வேந்தன் - நளமகா ராசனானவன், உயிரும் - (தன்) உயிரும், நீ என்னும் - நீயாக வேண் டுகிறான், பொருந்தும் - (தனனைப) பற்றிய, காமம் பிணி - காமநோ யை, நீக்கி - ஒழிதது, புலம்பு தீர்த்து - (அதனாலாகின்ற) துன்பத தைத் தீர்வித்து, இன உயிர - (தன) இனிதாகிய உயிரை, அளிகரும் - காப்பாறறும், மருந்தும் - ஒளஷதமும், நீயே எனறு எண்ணி - நீயே யாக (இடைவிடாது) நினைதது, மகிழ் தூங்கு - மகிழ்ச்சியில் பரவ சப்பட்டிருக்கினற, உளத்தோடு - மனததுடனே, இருந்து - தங்கி, அயரும் - வருந்துகிறான், எ-று

(க - து.) தமயந்தியே நளமஹாராஜன உன்னைத் தன்னுயிராக நினைக்கிறான், அன்றியுந் தன்காமநோயைத்தீர்த்து உயிரைக்காப்பாறறு மருந்தும் நீயே என்றெண்ணுகிறான் எனறுசொல்லிற்று என்பதாம்.

அரசனுக்குச் சொல்லப்பட்ட வெகுளிச் சுவையைப்பறறிய விசே டணம் உவகைச்சுவை சொல்லபபடு மிவவிடததிற்குப் பொருநது மோ வெனின் அரசனது விகரமற பராக்கிரம தைரியததைக் காட்டி இப்படிபபட்ட தைரியமும் உன பொருட்டு இபபோது அழிநத தென்று அறிவிததறகு அவவிசேடணஞ் செயதவாற பொருநது மென்க. இதுபோல வருவன பிறவும் இபபடியே யமைததுக்கொளக. அவளைத் தன்னுயிரபோற சிறநதபொருளாகப பெறல்வேண்டுதலால வேட்கையும், அவளாலனறித தனகாமநோய தீராதெனறு அதறகு மருந்தாக இடைவிடாது நினைததிருததலால் உளளுதலும் ஆயின. ()

[இதனால் உள்ளுதலாலாகிய வேறறுபபலவெறுட்புச சொல்லப்படுகினறது.]

தேற்று ரொளிரு மணிமௌலி யிடறித தேயந்து விளங்குநகக, கூற்று மென்னு மாலயானைப் பிடரிற் றோ ன்று மெழிலகுறியா, வாற்று ராகி யாடவரும் பெண்மை விரும்பு மடல்வேந்தன், வேற்றோர் பொருளி லைம்புலனு ம் விழையா வாக மெலியுமால்.

(இ-ள்.) தேறறா - பகைவரது, ஒளிரும் மணிமௌலி - விளங் காநின்ற நவமணிகளாலாகிய மகுடததில், இடறி - தாக்குண்டு, தேய்ந்து விளங்கும் - தேய்தலால் விளங்காநின்ற, நகம் - நகங்களை யுடைய, கூற்று ஆம் எனனும் - (கொலையிலே) யமனெனப்படுகின்ற, மால் யானை - பெரிய யானையினது, பிடரில் தோன்றும் - எருத்தத் தில் காணப்படுகின்ற, எழில் குறியா - (தனது) அழகை நினைத்து, ஆட வரும் ஆற்றர் ஆகி - புருஷரும் பொறுக்க மாட்டாதவராகி, பெண் மை விரும்பும் - பெண்வடிவத்தை விரும்பப் பெறுகின்ற, அடல் வேந்தன் - வெற்றிவேந்தனானவன், வேறு ஓர பொருளில் - (உன்னி டத்தன்றி) வேறொருபொருளிடத்து, ஐம்புலனும் - பஞ்சவிஷயங்க ளும், விழையா ஆக - விரும்பப்படாதனவாக, மெலியும் - தளர்கின் றான், எ-று.

(க - து.) நளமஹாராஜனானவன் உன்னையல்லாமல் வேறொரு பொருளிடத்தி லிச்சைவைத்திலன் என்றுசொல்லிறறு என்பதாம்.

ஆடவருமென்னு மும்மை வுயர்வுசிறப்பு. தம தாண்வடிவத்திற் ருழ்ந்த பெண்வடிவமாகிய குற்றத்தால் நளனைப் புணாதலாகிய குணம உண்டாதல்கூடு அதனைபபெறல் வேண்டுதலால் வேண்ட லணி. வேற்ரொ பொருளி லைம்புலனும் விழையாவாக மெலியுமென வே உணவு முதலியவற்றையும் வெறுத்து உனனையே விரும்புகின் றன னென்றதாயிற்று. ஐம்புலன — சுவை - ஒளி - ஊறு - ஓசை - நாற்றம என்பன. ஐமபுலனகளும் ஒருத்தியிடத்தே யுளவென்பது "கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியுமைம்புலனு, மொண்டொடி கண் ணேயுள" என்பதனாலறிக. விழையா வென்னுஞ் செயவினை செயப் பாட்டுவினைப் பொருளிலே வந்தது. (ககரு)

[இதனால மெலிதல் சொல்லபபடுகின்றது.]

கார்க்கும் வெண்மை யளித்திருண்ட கரிய கூந்தற் கனங்குழையா, யாரகுஞ் சுரும்பு மிசைத்தேனும் வண டுஞ் சுழலு மைங்கணைவேள, போர்க்கு மெலிந்தோ வெ ணடிங்கள் பொழியு நிலவிற் றேமபியோ, பார்க்குந் தோ றும் புதிதாக வுடல மெலியும பார்வேந்தே.

(இ - ள்.) கார்க்கும் - மேகத்திற்கும், வெண்மை அளித்து - வெள்ளை நிறத்தைக் கொடுத்து, இருண்ட - கறுத்த, கரிய கூந்தல் - பெரிய கூந்தலையும், கனம குழையாய் - கனம்பொருந்திய குண்டலத் தையு முடையவளே!, பார வேந்து - பூமியையுடைய நளமகாரா சன, ஆர்க்கும் சுரும்பும் - ஒலிசெய்கின்ற பொறிவண்டுகளும், இசை தேனும் - இசைபாடுகின்ற தேனவண்டுகளும், வணடும - கருவண்டு களும, சுழலும் - சுழலப்பெறுகின்ற, ஐங்கணை வேள - பஞ்சபாணத் தையுடைய மன்மதனது, போர்க்கு மெலிந்தோ - சண்டையினால் இளைத்தோ, வெள திங்கள் - வெள்ளிய சந்திரனது, பொழியும் - சொ ரியப்பட்ட, நிலவின - நிலாவினாலே, தேம்பியோ - வருந்தியோ, பார்க்குந்தோறும் - காணுந்தோறும், புதிதாக - நூதனமானதாக, உட லம் - உடமபு, மெலியும - இளைக்கப் பெறுகின்ருன, எ-று.

(க - து.) தமயந்தியே! நளமஹாராஜனானவன் மன்மதன் போரி னாலேயோ சந்திர கிரணங்களாலேயோ உடலிளைக்கப்பெறுகின்றான் என்றுசொல்லிறறு என்பதாம்.

'கார்க்கும் வெண்மை யளித்திருண்ட' என்றதற்கு மேகத்தைப் பார்க்கிலு மிகக் கறுத்த வென்பதுபொருள். பார்க்குந்தோறும் புதி தாக வுடல் மெலிதலாவது முன்பார்க்கப்பட்ட வளவிற் பின் பார்க்கப் படுகிறவளவு குறைந்து போதலாலே வேறுபட்டுத்தோன்றல். ()

[இதனால் நாணுவரை யிறத்தல் சொல்லப்படுகின்றது.]

அலர்வார் பகழி துரந்துதுரந் தாக மெலிவித் திடுதே லன்றிச், சிலைவேள் வேந்த னியல்பனைத்துங் கவர்ந்தான்

போலுந் தீங்கிழைத்துன், முலைமேற் கூடப் பெறுமெனி
லோ வதுவு மியற்று முதுக்குறைவற், றுலையாக் காமங்
கொடுன்றொழும்பு முழப்ப நாணு மிழக்குமால்

(இ - ள.) சிலை வேள் - கருப்புவில்லையுடைய மன்மதனானவன், வார - நெடிய, அலா பகழி - மலாகளாகிய பாணங்களை, தூரந்து தூரந்து - செலுத்திச்செலுத்தி, ஆகம் மெலிவித்திடுதல் அன்றி - உடம்பை இளைப்பித்த லல்லாமலும், வேந்தன் - அரசனுடைய, இயல்பு அனைத்தும் - (பாவத்தையஞ்சுதல் இழிதொழிணைல் முதலாகிய) சுபாவகுணமுழுதையும், கவாந்தான் போலும் - வெளவிககொண்டானோ, (ஏனெனறால்) தீங்கு இழைத்து - பாவத்தைச் செய்து (அதனாலே), உன் முலைமேல் - உன் கொங்கைகளின்மேலே, கூட பெறு மெனிலோ - கூடபெறலா மென்றாலோ, அதுவும் - அப்பாவத்தையும், இயற்றும் - (அஞசாது) செயவான்; முதுக்குறைவு அற்று - பேரறிவறறு, உலையா - கெடாத, காமம் கொடு - காமததைக் கொண்டு, உன் தொழும்பும் - உன்னிடததே (செய்யப்படுவதாகிய) அடிமைததொழிலிலும, உழபப - முயலுதறகு, நாணும் - நாணத்தையும், இழககும் - விடடுவிடுவான், எ-று.

(க-து.) தமயந்தியே! நளன் பாவஞ் செய்தாவ துன்னைக் கூடப் பெறுவானாகில் அதுவுஞ்செய்வான் , பேரறிவிழந்து காமத்திலழுந்து நாணத்தையும் விடுகிறான எனபதாம.

பாவம் கொலை முதலியன. பெணணேவல் இழிதொழிலாதல் "பெண்ணேவல செயதொழுகு மாண்மையி னுணுடைப்பெண்ணே பெருமையுடைத்து" எனபதனு லறிக, ஆயினும அது காமமிகக வாடவாக்குரிததாதல "மடுககோ கடலின விடுதிமி லனறி மறிதிரைமீன், படுககோ பணிலம் பலகுலிக் கோபரன் றில்லைமுன்றிற், கொடுக்கோ வளைமறறு நும்மையாக காயகுற்றேவல்செயகோ, தொடுக்கோ பணியீரணியீா மலாநுரு சுரிகுழற்கே" என்பதனு லறிக. மனமதனை வேநதனியல்பனைததுங கவாநதவனுகக குறிததலால் தற்குறிப்பணி. 'உலையாக காமககொடுந் துயரமுழந்து' என்றும பாடமுணடு. ஆக்கஞ் செப்பறகுத தடையாகிய நாணததினிழப்பை யிங்஖னங் கூறவே அதுவுந் தோனறுத லறிக.　　　(ககரு)

[இதனால் மறத்தல் சொல்லப்படுகின்றது.]

நின்சீ ருருவு வெளிப்படுத னோக்கி நோககி நிலைதளரு, மென்பூ டுருக விளமுலைமேற் புலலு முனிந்தா யெனவருந்து, மன்போ டீ தீர்த்தனன்போ னகைக்கு மகன்றூ யெனவெளியிற், பின்போ தருநல் லுணர்விழந்த பித்தர் போலப் பேதுறுமால்.

(இ - ள்.) நின் சீர உருவு - உனது சிறப்புப்பொருந்திய வடிவமாண்டு, வெளிப்படுதல் - தோன்றுதலை, நோக்கி நோக்கி - பார்த்துப்பார்த்து, நிலை தளரும் - (தன்னறிவு) நிலை தளருகின்றான்;

என்பு ஊடு உருக - எலும்பும் உள்ளுருக, இள முலைமேல் - இளமை பொருந்திய (அவ்வடிவத்தின்) முலைகளினமேல், புல்லும் - தழுவுகின்றான்; முனிந்தாய் என - ஊடினையென்று, வருந்தும் - வருந்துகின்றான்; அன்போடு - ஆசையினால், ஊடல் - அவ்வூடலை, தீர்த்தனைபோல் - நீக்கினவன்போல், நகைக்கும் - சிரிக்கின்றான்; அகன்றாய் என - நீங்கினையென்று, வெளியில் - வெறுவெளியில், பின் - (அவ்வடிவத்தின்) பின்னே, போதரும் - போகின்றான்; நல் உணர்வு இழந்த - நல்லறிவைத் துறந்த, பித்தர்போல - பித்தம்பிடித்தவர் போல், பேதுறும் - மறவியுற் றிருக்கின்றான், எ-று.

(க - து.) தமயந்தியே! நளன உன துருவெளி தோற்றத்தைக் கண்டு நிலை தளருகிறான், உன்னுருவெளியைத் தழுவுகிறான், பிணங்கினையென்று வருந்துகிறான், பிணக்கு நீக்கினவன்போல நகைக்கிறான், உருவெளியின்பின் போகிறான், நல்லறி விழந்திருக்கிறான என் றன்னைச் சொல்லிற்று எனபதாம்.

உருவு வெளிப்படுதல் - விருப்பத்தா லிடைவிடாது சிந்திக்கப் பட்ட வுருவுபோல்வது புத்தி விகாரத்தினாலே வெளியிலே தோன்றுதல். பகையில்லாமையால் ஒருகாலத்திலே கூடத்தக்க இத்தளர்தல், புல்லுதல், வருந்தல், நகைத்தல், பின்போதல், என்கிற பலவற்றிற்குக் கூட்டத்தைச் சொல்லுதலினாலே கூட்டவணி. வெறுவெளியிலே அவ்வுருவு தோன்றுதலைச் சொல்லவே நோக்குவ வெல்லா மவையே போலுதலுஞ் சொல்லப்பட்டதாயிற்று. (கக௬)

[இதனால் மயக்கஞ் சொல்லப்படுகின்றது.]

புலவுநாறும்வேலவேந்தர்சேனைப்புணரிகடந்தெதிரற்
றுலவுநிடதக்கடாயானையுனதுவிரகப்பேராற்றி
னலையினிலைகாண்பரிதாகியந்தோவாழ்ந்துமயங்கியதாற்[ய்
சிலைகொணுதலாய்பின்னர்வருமவத்தைசேராதருள்புரியா

(இ - ள்.) சிலை கொள் நுதலாய் - வில்வடிவத்தைக் கொண்ட நெற்றியையுடையவளே!, புலவு நாறும - (பகைவர்) ஊனால் நாறுகின்ற, வேல் வேந்தர் - வேலையுடைய அரசரது, சேனை புணரி கடந்து - சேனையாகிய கடலைத் தாண்டி, எதிர் அற்று - எதிரியில்லாமல், உலவும் - திரிகின்ற, நிடதன் கடா யானை - நளனாகிய களிறனது, உனது - உன்சம்பந்தமாகிய, விரகம் பேர் - விரகமென்கின்ற பெயரையுடைய, ஆற்றின் அலையின் - ஆற்றினது அலையில், நிலை காண்பு அரிது ஆகி - நிலையைக் காணமாட்டாததாகி, ஆழ்ந்து - முழுகி, மயங்கியது - மூர்ச்சித்தது; அந்தோ - ஐயோ, பின்னர் வரும் - (அம் மயக்கத்தின்பின்) வருவதாகிய, அவத்தை - (சாக்காடாகிய) அவஸ்தையை, சேராது - அடையாமல், அருள் புரியாய் - அருள்செய்வாயாக, எ-று.

(க - து.) தமயந்தியே! நளனென்னும் யானையானது உனது காமக்கடலாற்றில் முழுகி மயங்கியது; அதற்கு மரணமாகிய பத்தா

மவத்தைச்சாரா தருள்புரிவாயாக என் றன்னஞ்சொல்லிற்று என்ப தாம்.

கிடதன் கடாயானை கிடதக் கடாயானையென விகாரப்புணர்ச்சியா யிற்று. பல்லாயிரவீரா கூட்டத்தாற்றேனறிய தென்னும் பெருமை பற்றிச் சேனையை ஆறெனறுது கடலெனறும, ஒருத்தியாற ரேன் றியதென்னுஞ் சிறுமைபற்றி விரகத்தைக் கடலென்றது ஆறெனறும, உருவகஞ் செய்ததென்க. ஆற்றளவாகிய காரணத்திற்குப் பெருமை யாகிய தருமங் குறைவா யிருப்பக் கடலைக் கடந்த யானை முழுகுத லாகிய காரியம் பிறத்தலைச் சொல்லுதலாலே பிறிதாராயசசியணி. இதற்கு உருவகம் அங்கம். கொடுமை பற்றிக்கூற நாவெழாமையாற் சாக்காட்டைப் பின்னா வருமவதைதை யென்று கூறிற்று. (கஎ)

குடங்கை யணையிற் பகைவேந்தர் துயிலுங் கொற்ற முற்றத்து, மடங்க லனைய போர்மீளி யின்ன வாறு மதிம யங்கித், தடங்கொண் முலையா யெனைத்தூது நின்பால் வி டுத்தான் றளர்ந்திடேன், முடிந்த ததுவு மிருவீரு முன் னர்ச் செய்த தவப்பேற்றால்.

(இ-ள்.) தடம் கொள் முலையாய் - மலைவடிவத்தைக் கொண்ட முலைகளையுடையவளே!, பகை - தன்னோடு பகைத்த, வேந்தா - அரச ரானவா, குடங்கை அணையில் - உள்ளங்கையாகிய தலையணையில், துயிலும் - நித்திரைசெய்யப்பெற்ற, கொற்றம் - வெற்றிபொருந்திய, முற்றத்து - முற்றத்தையும், மடங்கல் அனைய - ஆண்சிங்கம்போலும், போர் - போர்த்தொழிலையுமுடைய, மீளி - அக்காளையானவன், இன்ன ஆறு - இப்படிப்பட்டவிதமாக, மதி மயங்கி - அறிவு கலங்கி, நின்பால் - உன்னிடத்து, தூது - தூதாக, எனை விடுத்தான் - என்னை அனுப்பி னன், தளர்ந்திடேல் - (நீ) வருந்தாதே, இருவீரும் - நீங்களிருவரும், முன்னா - முற்பிறப்பிலே, செய்த தவம் பேற்றால் - செய்த தவத் தின்பயனாலே, அதுவும் - அக்காரியமும், முடிந்தது - முடிவுபெற்றது, எ-று.

(க - து.) தமயந்தியே! நளமஹாராஜனனவன் இவவாறு மதிம யங்கி உனனிடத் தென்னை யனுப்பினன நீவருந்தாதே, முற்பிறப்பி லிருவருஞ் செயப்பெற்ற தவத்தா லதுவு முடிநதது என றனனஞ் சொல்லிற்று என்பதாம.

ஒருவாக்கொருவா பெறுதற கரியபொருளாக நிற்றலால் 'இரு வீரு முன்னாச்செய்த தவப்பேற்றால்' என்றது. 'அது' என்றது தூதிற் குப் பயனாகிய விவாகத்தைச் சுட்டிநின்றது. வினைவுபற்றி முடியு மென்றது 'முடிந்தது' என இறநதகாலத்தாற் கூறப்பட்டது. (கஅ)

[தன்முயற்சி பயன்பட்டமைபற்றி அவனைப்புகழ்தல்
சொல்லப்படுகின்றது.]

முருகன் வேலு முக்கண்ணன் முடித்த புனிற்றுப் பி றைக்கொழுந்தும், திருவின் கொழுநன் பாயலுங்கண் டில

க நுதல்பே ரகலல்கு, லுருவ மாகத் தனிக்கவர்ந்த வுனக்
குக் கலுழி மதமொழுகும், கரடக் களிற்று நளனுள்ளங்
கவரு மாறு வியப்பாமோ.

(இ-ள்.) முருகன் வேலும் - சுப்பிரமணியனது வேலையும், முக்கண்ணன் முடித்த - பரமசிவன் முடியிற்றரித்த, புனிற்று பிறை கொழுந்தும் - புதிய பிறைச்சந்திரனையும், திருவின் கொழுநன் - திருமாலினது, பாயலும் - (பாம்பாகிய) சயனத்தையும், கண் - கண்ணினதும், திலகம் நுதல் - பொட்டையுடைய நெற்றியினதும், பேர - பெரிய, அகல் அல்குல் - பரந்த அல்குலினதும், உருவம் ஆக - வடிவங்களாக, தனி கவர்ந்த - தனித்து வௌவிய, உனக்கு - நினக்கு, கலுழி - கான்யாறுபோல், மதம் ஒழுகும் - மதநீரானது இழியப்பெற்ற, கரடம் களிறு - கதுப்பையுடைய யானைபோலும், நளன் உள்ளம - நளமகாராசனது உள்ளத்தை, கவருமாறு - வௌவுமாறு, வியப்பாமோ - ஆச்சரியமாமோ, எ-று.

(க-து.) தமயந்தியே! நளமஹாராஜனது மனதை வௌவுதலுனக் காச்சரியமாமோ என றன்னஞ்சொல்லிற்று என்பதாம்.

முருகன்முதலிய மூவர்களுந் தலைமைக் கடவுளராதலே யன்றி 'முருகன்' எனவே கட்டிளமையோ னென்பது தோன்றலால அவன் பெரும்போர்க்குரிய கைப்படையையும், 'முக்கண்ணன்' எனவே பகையை யெரிக்கு நெற்றிக்கண்ண னென்பது தோன்றலால் அவன்முடிக் கணிகலமாகச் சூடப்பட்ட பிறையையும், 'திருவின்கொழுநன' எனவே பெருஞ்செல்வச் சிறப்பினனென்பது தோன்றலால அவ னறிதுயிற்குரிய பாயலையும், கவர்தலரிதாதல் காட்டப்பட்டமை யறிக. அவர் பன்மையும் இவ ளொருமையுந் தோன்றத் 'தனிக்கவர்ந்த' என்றது. கடவுளராகிய அம்மூவர்களுடைய அப்பொருள்களைக் கவர்தலாகிய வொருபொருளைச் சொல்லத் தனைடாபூபிக நியாயத்தினாலே ஒருமனிதனுகிய நளனதுள்ளத்தைக் கவர்தல் சொல்லவேண்டியதில்லையென்னு மற்றொருபொருள் தோன்றுதலால செய்யுட் பொருட்பேறணி. இங்ஙனங்கூறவே அவ்வேற்படை முதலியவைபோற சிறந்து விளங்கும் கண் முதலியவற்றை யுடையையாதலின அரசன உன்னழகுக்கு எளிதிலே மயங்குவா னென்றதாயிற்று. (கககூ)

[இதுமுத லிரண்டுபாட்டுகளால் காரியமுடிவை அதன் பின்விளைவைக் காட்டி வலியுறுத்தல் சொல்லப்படுகின்றது.]

பொன்னே யமுதே மொழிக்கரும்பே பூந்தா மரை
யிற் றிருவேநின், மின்னே ரிடைதேய்ந் தறவருந்த விம்மு
முலையி லலலாம, லென்னே தொய்யிற் றெழிலனைத்து
மெழுத லாமே யென்றெண்ணி, மன்னே யுரைக்கு மெங்
களுடன் மதுவார் பொழிலி னிடையிருந்தே.

(இ-ள்.) பொன்னே - தங்கமே!, அமுதே - அமிர்தமே!, மொழி கரும்பே - சொல்லாகிய (சாரத்தை) யுடைய கன்னலே!, பூ

தாமரையில் திருவே - அழகிய தாமரைமலரிடத்துள்ள சீதேவியே!, நின் - உனது, மின் நோ இடை - மினபோலும் இடையானது, தேய்ந்து - இளைதது, அற வருநத - மிகவும் நோவ, விம்மும முலையில் அல்லாமல் - பருக்கின்ற முலைகளிடத் தல்லாமல், தொயயில - சந்தனக் கோலத்தினது, தொழில அனைததும - வேலை முழுவதும், என்னே - என்னாகும், எழுதலாமே என்று - (மறறென்றனில்) எழுதலாமோ வெனறு, எண்ணி - ஆலோசிதது, மனனே - நளமகாராசனே, மது ஆர - வண்டுகளானவை ஒலிசெய்யப் பெறறிருககினற, பொழிலினிடை - சோலையினகண், இருந்து - தஙகி, எங்களுடன - எங்களோடு, உரைக்கும் - (இனிச) சொல்லுவான், எ-று.

(க - து.) தமயந்தியே! உன்னை நளன மணந் துன் முலைகளிற் றொய்யி லெழுதிப பாராதது வியநது சொல்வான எனபதாம்.

இனி வினாவிலே யுனனை மணநது னமுலையிலே தொய்யி லெழுதிபபாராதது அவவிரண்டிறகுந் தகுநதிருககிறபடியை யாலோசிதது அதனை வியநது சொல்வா னெனறது. (கஉ0)

இன்பக கலவிக கரணங்க ளியாவு மியற்றி யிருவீரு,
மன்புற் றவச முறுமேனி யயாதீர் வதறகெம் பொலன்சி
றையான், முன்புற றுயர்வா னதிப்புனலின் மூழ்கித் தண்
ணென் குறுந்திவலை, நன்கிற் றெறிப்ப வீசுதற்குக் கால
மணிததாய் நண்ணியதே.

(இ - ள்) இருவீரும் - நளமகாராசனும் நீயும், இன்பம் - சுகத்தைத் தருகின்ற, கலவி - புணாச்சியினுடைய, கரணங்கள் யாவும் - கரணஙகள யாவறறையும், இயறறி - செயது, அனபு உற்று - (ஒருவாமே லொருவா) அனபுமிகுந்து, அவசம உறும - பரவசபபடுமா றுண்டாகும், மேனி அயா - (உங்கள) உடம்பினுடைய தளாசசியானது, தீாவதறகு - நீஙகுதறபொருட்டு, உயா வான நதி - உயாவாகிய ஆகாச கஙகையினது, புனலில் மூழ்கி - நீரினகண் முழுகிவநது, முன்பு உறறு - முன்னிருநது, எம பொலம் சிறையால் - எமது பொன்னுருவமாகிய சிறைகளினாலே, தண் என குறு திவலை - குளிாச்சிபொருந்திய சிறிய துளிகள, நன்கின தெறிபப - நனறாகப் பட, வீசுதற்கு - வீசுவதறகு, காலம் - காலமானது, அணித்தாய் நண்ணியது - சமீபிதது வந்தது, எ-று.

(க - து.) தமயந்தியே! நீங்க ளிருவரும் புணர்ந் திளைப்புறுந் திருமேனியிலே ஆகாயகங்கை நீாத்துளிபொருந்திய என் னிறகுகளினால் வீசுதற்குக் காலஞ் சமீபமாயிற்று என்றது.

கலவிக்கரணங்களாவன — ஆலிங்கனம் - ரு, சும்பனம் - கக, அமிாதநிலை - கரு, நகக்குறி - அ, பற்குறி - அ, குரல் - அ, தாடனம் - அ, ஆ கூச. இவை. "ஆலிங்கனமைந்தும் மிதழ்ப்பானம் பதினொன்றும மமிாதம் பதினைறும் முகிலொழுதுங் குறியெட்டுங், கோலம்புனை தந்தக்குறி யெட்டுங் குரலெட்டுங் குவிதாடன மிரு நான்

மகாம்கூடுங் கலவிக்கே.” என்பதனாலறிக. இவற்றினியல்பு கொக்கோக முதலிய நூல்களிற்காண்க. (கஉக)

[இதனால் ஆற்றுதல் சொல்லப்படுகின்றது.]

கொலலும் வேலுங் கூர்வாளும் கூற்றுங் கொடிய கடல்விடமும், வெலலு நெடிய கருங்கண்ணாய் வேல்வேந் திடத்தி யான்விரைவிற், செல்லு மளவு நீவருந்தேல செல் விற் றிகழ்பூண் வனமுலைகள், புல்லும் வேட்கைத் தேரூர்ந் து வேந்துன் னகரம் புகுவானால.

(இ - ள்.) கொல்லும் வேலும் - கொலைசெய்கின்ற வேலையும், கூர் வாளும் - கூரிய வாளையும், கூற்றும் - யமனையும், கடல் - கடலிற்பிறந்த, கொடிய விடமும் - தீய ஆலகாலத்தையும், வெல்லும் - வெல்லுகின்ற, நெடிய - நீட்சிபொருந்திய, கரு கண்ணாய் - கரிய கண்களையுடையவளே!, யான - நான, வேல வேந்திடத்து - வேலையுடைய அரசனிடத்தே, விரைவில் - சீக்கிரத்தில், செல்லுமளவும் - போமளவும், நீ வருந்தேல் - நீ வருந்தாதே, செல்லின - போனால், திகழ் பூண் - விளங்குகின்ற ஆபரணத்தையும், வனம் - சந்தனக் கோலத்தையுமுடைய, முலைகள - முலைகளை, புல்லும வேட்கை - தழுவுதலைக் குறித்த துணையாகிய ஆசையினாலே, வேந்து - அரசனானவன, தேர ஊர்ந்து - தேரைச் செலுத்தி, உன் நகரம் - உனது பட்டணத்தில், புகுவான - வருவான, எ-று. ஆல் - அசை.

(க - து.) தமயந்தியே! நீ வருந்தப்படாதே, நான் போனால் நளன் உனது நகரத்திற்கு வருவானென்ன றன்னஞ் சொல்லிற்று என்ப தாம்.

வேந்துன்னகரம் புகுமளவும் வருந்தா தென்னாது ‘வேல்வேந் திடத்தி யான்விரைவிற் செல்லுமளவும வருந்தேல்’ என்றமையால் கேட்டவளவிலே வருவா னென்றதாயிற்று. (கஉஉ)

[இதனால் அன்னம் விடைபெறுமாறு சொல்லப்படுகின்றது.]

மடைவாய்த் தவழுஞ் சூற்சங்கம் வனசப் பொகுட் டின் மணியுயிர்ப்பப், பெடைநா ரைகடங் கருவென்று வ டைசேர நிடதப் பெருமான்பால, விடைதா வென்ன மட வன்னஞ் சிறகர் நீவி விருப்பினொடும், படைவா ணெடுங் கட் பசுந்தோகை முகம னுரைகள் பணித்தனளால்.

(இ - ள்.) மடைவாய் தவழும் - மடையின்கண் ஊர்கின்ற, சூல் சங்கம் - கருப்பத்தையுடைய சங்குகளானவை, வனசம் பொகுட் டில் - தாமரைமலர்களுடைய கர்ணிகையில், மணி உயிர்ப்ப - முத்து களை ஈன்றிட, பெடை நாரைகள் - பெண்நாரைகளானவை, தம் கருவு என்று - தமமுடைய முட்டைகளென்று, அடை சேர - அவயங்காக் கின்ற, நிடதம - நிடததேசத்தையுடைய, பெருமான்பால் - அரசன்கட் (செல்ல), விடை - உத்தரவை, மடம் அன்னம் - இளமைபொருந்திய

அன்னமானது, தா என்ன - கொடுவென்றுசொல்ல, சிறகர் நீவி - (அதன்) இறகைத் தடவி, விருப்பினொடும் - ஆசையோடும், படை வாள - வாட்படைபோலும், நெடு கண் - நெடிய கண்களையுடைய, பசு தோகை - பச்சைமயில்போலபவள், முகமன உரைகள் - உபசாரவார்த்தைகளை, பணித்தனள - சொல்லினாள், எ-று. ஆல் - அசை.

(க - து.) அன்னமானது நளனிடத்துச் செல்ல உத்தரவு தா வென்று கேட்கத் தமயந்தி உத்தரவு கொடுத்தாள என்பதாம.

உபசாரவார்த்தைகளாவன — அன்னத்தினுடைய நற்குண நற் செய்கைகளைப புகழுஞ் சொற்களும் அதற்குத் தன வணக்கத்தைக் காட்டுஞ் சொற்களுமாம். (கஉ௩)

[இதனால் அன்னஞ் சென்றவாறு சொல்லப்படுகின்றது.]

இவ்வா றிருந்து நன்மொழிக ளியம்பு வேலை யமுதூ றுஞ், செவ்வாய மடந்தை சிறடியின சுவடு நோக்கிச் சில தியரு, மைவா ணெடுங்கட் டோழியரும் வரக்கண் டயிர் ப்ப ரிவனென்று, வெவ்வாய் வடிவேல வேந்தன்பா லன் னம் விரைவி லேகியதே

(இ-ள்.) இவ்வாறு இருந்து - இவ்விதமா யிருந்து, நல் மொழிகள் - நல்லவார்த்தைகளை, இயமபு வேலை - சொல்லிமுடித்த சமயத்தில், அமுது ஊறும் - அமிர்தமானது சுரக்கின்ற, செவவாய - செய்ய வாயையுடைய, மடந்தை - தமயந்தியினது, சிறு அடியின் சுவடு நோக்கி - சிறிய வடிகளது சுவட்டைப் பார்த்துக்கொண்டு, சிலதியரும் - தாதிகளும், மை - அஞ்சனமபொருந்திய, வாள நெடு கண் - வாள்போலும் நெடிய கண்களையுடைய, தோழியரும் - பாங்கிகளும், வர கண்டு - (தேடிக்கொண்டு) வர (அவர்களைப) பார்த்து, இவா - இம்மங்கையா, அயிரப்பா என்று - சந்தேகிப்பாரென்று நினைத்து, வெம் வாய - வெவ்விய வாயினகண், வடி - கூர்மையையுடைய, வேல் - வேலையுடைய, வேநதனபால் - அரசனிடத்து, அனனம - அன்ன மானது, விரைவில் ஏகியது - விரைவிலே போயிற்று, எ-று. ஏ-அசை.

(க - து.) தமயந்தி இவவாறு சொல்லுகையில் பாங்கியருந் தோழியரும் வருதலைக்கண்டு அன்ன மிவாகள் சந்தேகிப்பார்களென்று நளனிடத்துச் சென்றது என்பதாம்.

'இவ்வாறிருந்து' என்றது அன்னத்தின் சிறகு நீவிக்கொண் டிருந்தபடியைச் சுட்டிநின்றது. அயிர்த்தல் - இவ்வன்ன மிதுவரைக்கு மிவளிடத்தே தனியாகவிருந்துகொண்டு என்னகாரியத்தைப் பேசிய தோ வென்று சந்தேகித்தல். (கஉ௪)

[இதனால் அதன்பின் தமயந்திநிலை சொல்லப்படுகின்றது.]

அன்ன முரைத்த மொழியமுத மருந்தித் தெவிட்டா வாரமுதக், கன்னற் குதலை யிருகண்ணுங் கருத்து மதன் பின் றொடர்ந்தேகப், பொன்னம் பாவை தழற்பெய்தா

லென்ன வுருகிப் புலம்புகொண்டாங், கின்னற் கடலின்
கரைகாணு திருந்தா ளிருந்த வேலேதனில.

(இ - ள்.) அன்னம் உரைத்த - அன்னத்தினால் சொல்லப்பட்ட, மொழி அமுதம் அருந்தி - சொல்லாகிய அமிர்தத்தை உட்கொண்டு, தெவிட்டா - வெறுக்காத, ஆர் அமுதம் - உண்டற்குரிய அமிர்தமும், கன்னல் - சாக்கரையும் போலும், குதலே - மழலைச்சொற்களை யுடையவள், இரு கண்ணும் - (தன்) இருகட்பார்வையும், கருத்தும் - மனமும், அதன் பின - அவ்வன்னத்தினபின், தொடர்ந்து ஏக - பற்றிக்கொண்டு போக, பொன பாவை - பொன்மயமாகிய பாவையை, தழல் பெய்தால் என்ன - நெருப்பின்கண் இட்டால் (அது) போல, உருகி - கரைந்து, புலம்புகொண்டு - இரங்கி, ஆங்கு - அவ்விடத்து, இன்னல் கடலின - துன்பமாகிய கடலினது, கரை காணாது - கரையைக்காணாமல், இருந்தாள - இருந்தனள, இருந்த வேலேதனில் - (அப்படி) யிருந்தசமயத்தில், எ-று. அம - அசை.

(க-து.) தமயந்தி கருத்தும் கண்ணும் அன்னத்தினபின் செல்லத் துன்பக்கடலின் கரை காணாதிருந்தாள் என்பதாம்.

அன்னத்தின் வாக்கு அமிர்தம்போல மதுரித்து எவ்வளவு கேட்பினும் போதுமென்னு மமைதியைத் தாராததா யிருக்கையால் 'அன்னமுரைத்த மொழியமுத மருந்தித் தெவிட்டா' எனப்பட்டது. இன்னல் - அன்னத்தால் வளர்க்கப்பட்ட நளனாசையைப்பற்றி யுண்டாகிய துன்பம. இன்னற்கடலின் கரைகாணாமை அக்கடலினுட்பட்டிருத்தல்.

[இதுமுதல் இரண்டுபாட்டுகளான மகளிர் தளர்ச்சியைக்குறித்து வினவுமாறு சொல்லப்படுகின்றது.]

ஆய வெள்ளம் புடையெய்தி யனிச்ச மலரின் றாது றைப்பச், சேய நிறமாஞ் சீறடிகள் கன்றச் செங்கா லனந் தொடர்ந்து, மேய தென்ன மதிகொலலோ முருகு விம்ம நறவுமிழுந், தூய மலர்பபங் கயப்போதைத் துறந்தெம் மனையிற் புகுந்திருவே.

(இ - ள்.) ஆய வெள்ளம் - வெள்ளம்போலு மங்கையர் கூட்டமானது, புடை எய்தி - பக்கத்தில் அடைந்து, முருகு விம்ம - வாசனை யானது பெருக, நறவு உமிழும் - தேனைக் கக்குகின்ற, தூய மலர் - பரிசுத்தமலராகிய, பங்கயம போதை துறந்து - தாமரைப்பூவை விட்டு, எம் மனையில் புகும் திருவே - எமது வீட்டின்கண் வந்த சீதேவியே!, அனிச்சம் மலரின் - அனிச்சப் பூவினது, தாது - மகரந்தமானது, உறைப்ப - உறுத்த, சேய நிறம் ஆம் - சிவப்புநிறமாகின்ற, சிறு அடிகள் கன்ற - சிறியவடிகள் வாட, செம் கால் அன்னம் - செய்ய கால்களையுடைய அன்னத்தை, தொடர்ந்து - (பிடிக்கும்படியாகப்) பின்சென்று, மேயது - (இங்கே) அடைந்ததற்குக்காரணமாயது, என்ன மதி - என்ன அறிவு, எ-று.

(க - து.) தமயந்தியே! அன்னத்தைத் தொடர்ந்து சென்ற தென்னமதி என்றார்கள் பாங்கிமார்கள் என்பதாம்.

முன்பாட்டிலே இருந்தவேலைதனில், என்றதனோடு 'ஆயவெள்ளம்புடையெய்தி' என்றதைக் கூட்டுக. எய்தியென வினையெச்சம் வருந்தாது கமழுமென்னும் பாட்டில் என்னவென வினைகொண்டது. 'என்னமதி' எனவே நல்லறிவனறென்ற தாயிற்று. (கஉசு)

மையன்மதவெங்களியானைவீமன்வரத்தாலவருந்திருவே
கையுமுகமுமரிபரந்தகண்ணுமுருகுகொப்புளிக்கும்
செய்யகமலமெனவீழுமளிகளோச்சுந்திறத்தானோ [வே.
தொய்யிலெழுதுதடமுலைகள்சுமந்தோமேனிதுவண்டது

(இ - ள்.) மையல் - மயக்கஞ்செய்கின்ற, மதம் - மதத்தாலுண்டாகிய, வெம் களி - வெவ்விய செருக்கையுடைய, யானை - யானையையுடைய, வீமன் வரத்தால் - வீமராஜனது வரத்தினாலே, வரும் திருவே - (மகளாய்ப்) பிறந்த திருமாதே!, கையும் - (உன) கைகளையும், முகமும் - முகத்தையும், அரி பரந்த கண்ணும் - இரேகையானது படரப்பெற்ற கண்களையும், முருகு கொப்புளிக்கும் - தேனை உமிழ்கின்ற, செய்ய கமலம் என - செந்தாமரை மலர்களென்று மயங்கி, வீழும் அளிகள் - (வந்து) வீழ்கின்ற வண்டுகளை, ஓச்சும் திறத்தானோ - ஓட்டுஞ் செயலாலோ, தொய்யில் எழுது - சந்தனக் கோலத்தை எழுதப்பெற்ற, தடம் முலைகள் சுமந்தோ - மலைபோலும் முலைகளைத் தாங்கியோ, மேனி துவண்டது - உடம்பானது வாடியது, எ-று. ஏ - அசை.

(க - து.) வீமராஜன் பெற்றெடுத்த தமயந்தியே! உன் தவயவத் தாமரைகளில் விழுந்த வண்டுகளை ஓட்டுமவகையினாலோ, உனது கனதனங்களைச் சுமந்தோ திருவுருவந்தளர்வடைந்தது என்றாகள் என்பதாம்.

ஒரு தொழிலை யிடைவிடாது செய்வோர்க்கும் அதிபாரஞ் சுமப்போர்க்கும் உடம்பு வாடியிளைக்குமாதலால் அங்ஙனம் வினவினார்.

அன்னந் தொடரு மயர்வதுவோ வயலார் விழியூ றடைந்ததுவோ, பன்னும பொழிலவாய்ப பலவலகை யெதிர்ந்தே மருட்டப் பயந்ததுவோ, பொன்னங் கிளியே மடமயிலே புகலவாய்க குயிலே பூங்கமல, மன்னுந் திருமானேயன்ன வணங்கு வாய்ந்த மரகதமே

(இ - ள்.) பொன் அம் கிளியே - அழகிய பொற்கிளியே!, மடம் மயிலே - இளமயிலே!, புகல் வாய குயிலே - கூவும் வாயையுடைய குயில்போல்வாளே!, பூ கமலம் மன்னும் - அழகிய தாமரையில் நிலைபெற்றிருக்கும், திருமானே அன்ன - இலக்குமிக்கொப்பான, அணங்கு வாய்ந்த - அழகு பொருந்திய, மரகதமே - மரகதம் போல்பவளே!, அன்னம் தொடரும் - அன்னப்பறவையைப்பற்றித் தொடர்ந்த, அயர்வதுவோ - வருத்தமோ, அயலார் - அயலவர்களது, விழி ஊறு - கண்ணேறு, அடைந்ததுவோ - சேர்ந்ததுவோ, பன்னும - சொல்லும், பொழில் வாய் - சோலையினிடத்து, பல அலகை - பல பேய்கள்,

எதிர்ந்து மருட்ட - எதிர்ப்பட்டு வெருட்ட, பயந்ததுவோ - பய மடைந்ததுவோ (அம்மேனி), எ-று.

(க-து.) தமயந்தியே! அன்னத்தின்பின் சென்ற வருத்தமோ, அயலார்கண்பட்டதோ, பேயால்வந்தகோளோ என்பதாம்.

[இதனால் அவள் மனையிற் சோகசப்படடவாறு சொல்லப்படுகின்றது.]

தாதுகமழுமலர்த்திருவேயென்னச்செவிலித்தாயாபலர்
பூதியணிந்தாங்கயினிநீர் சுழற்றித்தெய்வம்பராய்ப்போற்றி
காதன்மயிலைகொடுவந்துகடிமாமனையிற்பசுந்தேறற் [க்
சீதமலர்மெல்லணைமீதுசேர்த்தாரவளுஞ்செயலிழந்தாள்.

(இ - ள்.) தாது கமழும் - மகரந்தமானது மணக்கப்பெற்ற, மலர் திருவே என்ன - தாமரைப்பூவிலுள்ள திருமாதே! என்று சொல்ல, பலர் - பலராகிய, செவிலித்தாயர் - வளர்த்த தாய்மாரானவர், பூதி அணிந்து - திருநீற்றை (நெற்றியில்) இட்டு, அயினிநீர் சுழற்றி - ஆலாத்தியைச் சுற்றி, தெய்வம் பராய - குலதெய்வத்தைப் பிரார்த்தித்து, போற்றி - துதிசெய்து, காதல் - ஆசையைத் தருகின்ற, மயிலை - மயில்போல்பவளை, கொடு வந்து - கொண்டுவந்து, கடி மா மனையில் - காவலையுடைய பெரிய மாடத்தின்கண், பசு தேறல் - பசியதேனையும், சீதம் - குளிர்ச்சியையுமுடைய, மலர் மெல் அணைமீது சேர்த்தார் - மலர்களாகிய மெல்லிய சயனத்தின்மேல் இடத்தினார், அவளும் - அத்தமயந்தியும், செயல் - (தன) செய்கைகளை, இழந்தாள் - இழந்தனள், எ-று.

(க - து.) வளர்த்த தாயமார்கள் தமயந்திக்கு விபூதியணிந்து ஆலஞ்சுற்றிக் குலதெய்வத்தைப்போற்றி மனையிற்கொணடுவந்து மலரணையிற் சேர்த்தார்கள் என்பதாம்.

செவிலித்தாயர் - அவளுக்கு நல்லறிவும் நல்லொழுக்கமுங் கற்பித்து வளர்த்த மாதர்கள். செயலிழத்தல்—உண்ணல், உடுத்தல், அணிதல் முதலிய செயல்களை மறத்தலாம். பூதியணிதலும், அயனிநீர் சுழற்றலும், அச்சமுதலியவற்றா லுண்டாகிய குற்றங்களைதற்கென்க. (கஉக)

[இதனால் அன்னம அரசனைக்கண்டமை சொல்லப்படுகின்றது.]

ஈங்கிவ் வாறு மயிலவருந்தி யிருப்ப வினவண் டிசை
யிழற்றுங், தேங்கொள் பொழிலவாய் முகையவிழ்ந்து செ
ங்தே னிறைக்கு மலர்வாவிப், பாங்க ரமளி மிசைவிரித்த
பனிமென் போது கரியவளர, ரோங்கற் றிணிதோள் வய
வேந்தை யன்னங் கண்ணுற் றுவந்ததால்.

(இ - ள்.) மயில் - மயில்போல்பவள், ஈங்கு - இக்குண்டினபுரத்தின்கண், இவ்வாறு - இவ்வண்ணமாக, வருந்தி இருப்ப - (காமநோ

யால்) வருந்தி இருக்க, அன்னம் - அன்னமானது, இனம் வண்டு - கூட்டமாகிய வண்டுகளானவை, இசை மிழற்றும் - இராகத்தைப் பாடப்பெற்ற, தேன் கொள் - வாசனையைக் கொண்ட, பொழில்வாய் - சோலையின்கண், முகை அவிழ்ந்து - அரும்புகளானவை விரிந்து, செம் தேன் நிறைக்கும - செய்ய தேனினாலே நிறைக்கப் பெறுகின்ற, மலா வாவி பாங்கா - மலாகளையுடைய தடாகத்தின் பக்கத்தில், அமளிமிசை விரித்த - சயனத்தின்மேல் பரப்பப்பட்ட, பனி மெல் போது - குளிர்ச்சிபொருந்திய மெல்லிய மலாகளும், கரிய - கருகும்படியாக, வளா - படுத்திருக்கின்ற, ஓங்கல் திணி தோள் - மலை போலும் திடமுற்ற தோள்களையும், வயம - வெற்றியையு முடைய, வேந்தை கண்ணுற்று - நளமகாராசனைப் பாாததது, உவந்தது - மகிழ்ந்தது, எ-று. ஆல் - அசை.

(க - து.) இவ்வாறு தமயந்தி குண்டினபுரத்தில் வருத்தமுற்றிருக்க அனனமானது நளனைககண்டு மகிழ்வடைநதது என்பதாம்.

'பனிமென்போது கரியவ்ளா' எனவே அதிக காமவெப்பங் கொண்டிருந்தபடி சொல்லபபடடதாயிறறு. அரசன காமநோயாற் படும் பாட்டைநோக்கி அவன தான வருமளவு முயிாபொறுத் திருந்தமையைக்குறித்து மகிழ்தலால் 'அனனங கண்ணுறறுவநதது' எனறாா. ()

[இதுமுத லிரண்டுபாடடுகளால அபபோது அரசனிருப்புச் சொலலபபடுகினறது]

பொன்னஞ் சிறைய மடவன்னம் போது முன்னா் வேலவேந்து, தன்னந் தனியோ துணையென்னுந் தடங்கண் பொருந்தா தோவென்னு, மின்னுந் தூதே கியவன்ன மீளா திருந்த தென்னென்னு, மின்னி னுருவு வெளிப்படுத லேக்கி நோககி வெய்துயிாககும்.

(இ - ள்.) வேல் வேநது - வேலையுடைய நளமகாராஜனானவன், பொன அம சிறைய - பொனமயமாகிய அழகிய சிறகுகளையுடைய, மடம் அனனம் - இளமைபொருந்திய அனனமானது, போதுமுன்னர் - செல்லுதறகுமுன, தனனந தனியோ - தனனந்தனியாக விருக்கையோ, துணை எனனும் - (எனக்குத) துணை யென்று சொல்லுவான்; தடம் கண் - விசாலம்பொருந்திய கண்களையுடையவள், பொருந்தா தோ என்னும் - உடனபடாளோவென்று சொல்லுவான், தூது ஏகிய அன்னம் - தூதாகச் சென்ற அன்னமானது, இனனும் மீளாது இருந்தது - இதுவரையிலும் திரும்பிவாராமைக்குக் காரணம், என் எனனும் - யாதென்று சொல்லுவான் ; மின்னின் உருவு - மின்னல் போல்பவளது வடிவமானது, வெளிபபடுதல் - வெளியிலே தோன்றுதலை, நோக்கி நோக்கி - பாாத்துப்பாாததது, வெய்து உயிாக்கும் - சுடுமூச்செறிவான், எ-று.

(க - து.) அன்னம்போகுமுன்னம் நளனானவன் எனக்குத்தனித்திருத்தலோ துணை, தமயந்தி யுடன்படாளோ, அன்னம் வாராதிருந்த

தென்னவோ என்று உருவெளியைநோக்கிச் சுடுமூச்செறிவான் என்பதாம்.

தனியென்பது சிறப்புப்பற்றித் 'தன்னந்தனி' என வந்தது. தடங்கண் சொன்னேனுக்கத்தால் அஃறிணைமுடி பேற்றது. அன்னம் விரைவிலேதானே திரும்பியதாயினும் அரசனுக்குக் கணமும் நெடுங்காலமாகத் தோன்றலால் 'இன்னும்' என்றான். (கஙக)

மீண்ட தன்ன மெனவெண்ணி வினவு மொருகாழ்
மணிமுத்தம், பூண்ட பொம்மன் முலையென்னோ புகன்ற
தென்னு மருந்தாமற், காண்டல் செயினுங் கேட்பினுமெ
ன் னுள்ள மயகுருங் களிநறவைத், தூண்டல செய்யா ம
ணிவிளக்கைக் கொணர்ந்தாய் கொலலோ வெனச்சோ
ரும்.

(இ - ள்.) அன்னம் - அன்னமானது, மீண்டது என எண்ணி - திரும்பிவந்ததெனறு நினைதது, வினவும் - விஞவுவான, மணி முத்தம் - அழகிய முததுகளையுடைய, ஒரு காழ் பூண்ட - ஒருசாததை மேறகொண்ட, பொம்மல் முலை - பொலிவுபொருநதிய முலைகளையுடையவள், என்னோ புகனறது - என்னசெயதியையோ சொல்லினள, எனனும - எனறுசொல்வான, அருநதாமல் - உண்ணபபடாமல், காண்டல்செயினும் - கண்டாலும, கேடபினும் - கேட்டாலும், என உள்ளம் - எனது மனததை, மயகரும் - மயககாநினற, களி நறவை - தேன் குழமபை, தூண்டல் செய்யா - தூண்டப்படாத, மணி விளக்கை - இரததினதீபததை, கொணாநதாய கொலலோ என - கொண்டுவந்தாயோவெனறு, சோரும் - தளருவான, எ-று

(க-து.) நளஞனவன அன்னம் வந்ததெனபான், தமயந்தி யென்ன சொனனளெனபான, தமயநதியைக கொணடுவந்தாயோ வெனபான் என்பதாம.

'அருந்தாமற் காண்டல்செயினுங் கேட்பினு மென்னுள்ள மயக்குங் களிநறவை' எனவே அருந்துங்கால உளளமயககுதல் சொலலவேண்டாவாறாயிறறு. இவவாறே "உளளககளிததலுங காணமகிழ்ததலுங், களளுககில் காமததிற்குண்டு" எனறமை யறிக மணிவிளக்கெனவே மறறைத தீவிளககுபபோல மழுங்குதலின்றி யெப்போதும் விளங்குதல் கொளக. (கஙஉ)

[இதனால் அன்னஞ் சொல்லுதலும் அரசன மகிழ்தலும் சொல்லப்படுகினறது.]

திருந்தார் மௌலி மணியுரிஞ்சித் திகழுங் கழற்காற்
றேர்வேந்தே, வருந்தேல் வருந்தே லீவேண்டின் வாராத
னவு முளகொல்லோ, முருந்தேர் முறுவன் முகம்பெற்று
வந்தே னெனலு மூர்ச்சைதெளிந், தருந்தா வமுத மருந்
தினன்போற் பலகாற் கேட்கு மகமகிழும்.

(இ - ள்.) திருந்தா மௌலி - பகைவருடைய மகுடத்திலுள்ள, மணி உரிஞ்சி - நவமணிகளைத் தேய்த்து, திகழும் கழல் கால் - விளங்காநின்ற வீரக்கழலையுடைய பாதத்தையும், தோ - மகாரதத்தையுமுடைய, வேந்தே - அரசனே!, வருந்தேல் வருந்தேல் - வருந்தாதே வருந்தாதே; நீ - (இப்படிப்பட்ட) நீ, வேண்டின் - பெற விரும்பினால், வாராதனவும் - (உனக்குக்) கிடையாதபொருள்களும், உளகொல் - (உலகத்தில்) உண்டோ; முருந்து ஏா - மயிலிறகின் அடிபோலும், முறுவல் - பற்களையுடைய தமயந்தியின், முகம் - முகத்தை, பெற்று வந்தேன் எனலும் - அடைந்து வந்தேனென்ற அளவில், அருந்தா - (முன்) உண்ணப்பட்டிலாத, அமுதம் அருந்தினன்போல் - தேவாமிர்தத்தை உண்டவன்போல், மூர்ச்சை தெளிந்து - மூர்ச்சை நீங்கி, பல கால் கேட்கும் - பலதரம் கேட்பான், அகம் மகிழும் - உள்ளத்தின்கண் களிப்பான், எ-று.

(க - து.) நளச்சக்கிரவாத்தியே! வருந்தாதே வருந்தாதே, நீ வேண்டினால் வாராதபொருள்களுளவோ தமயந்தி திருமுகம்பெற்று வந்தேனென் றன்னஞ் சொன்னவுடன் மூர்ச்சைதெளிந் தெழுந்து நளன பலகால்கேட்டு மன மகிழுவான் என்பதாம்.

அரசன் தன தொப்பற்ற மனவலிமையை மறந்து வருந்துதலை நோக்குதலால் அதனை நினைப்பித்தற்குத் 'திருந்தாமௌலி மணியுரிஞ்சித திகழுங்கழற்கால்' என்னும் விசேடணங் கொடுத்துக் கூறியது. 'வருந்தேல்' என்பது ஆற்றுதற பொருளி லடுக்கிவந்தது; இதற்கு "இசைநிறை யசைநிலை பொருளொடு புணர்தலென் றவைமூன்றென்ப வொருசொல்லடுக்கே" என்பது விதி. மேற்சொல்லப்பட்ட மனவலிமை யுடையவனுக்கு எண்ணப்பட்ட பொருள்கள் யாவும் எளிதிற் கைகூடுமென்றற்கு 'நீவேண்டின வாராதனவு முளகொல்லோ' என்றது. "எண்ணியவெண்ணியாங் கெய்துபவெண்ணியார், திண்ணியராகப்பெறின்" என்றாராகலின். அதனாலே அவ ளுடன்பட்டமை குறிப்பிக்கப்பட்டதாயினும் பின்னும் அதனை நன்றாக அறிவித்தற்கு 'முருந்தோ முறுவன் முகம்பெற்று வந்தேன்' என்றது. முகம்பெறல் ஒருவர் தஞ்சொல்லை மற்றொருவா முகத் திருப்பமின்றி விருப்பத்தோடு கேட்டுடன்படப் பெறலாம். (௬௫௫)

[இதனால் அரசனது செய்தியை நிறுத்திப் பின்வருங் கைக்கிளைப்படல முதலியவற்றால் தமயந்திக்கு நேரிட்ட காமநோய்த் துன்பமும் அதுபற்றிப் பின்னடந்த செய்தியும் சொல்லப்படுகின்றன.]

அன்ன முரைத்த வின்சொல்லி னாவி தாங்கி யதனோடு, பின்னு மடமான் பேரழகும் பெருகு துயரும் விளம்பியது, மின்னு முரைத்தி யுரைத்தியெனக் கேட்டிங் கிவ்வாறிவனிருப்ப, மின்னுண் மருங்கு றுயாமுமேல் விளைந்த வாறும் விளம்புவாம்.

(இ - ள்.) அன்னம் உரைத்த - அன்னத்தினாற் சொல்லப்பட்ட, இன் சொல்லின் - இனிய சொற்களால், ஆவி தாங்கி - உயிரைப்

பொறுத்திருந்து, பின்னும் - (அதற்குப்) பின்னும், மடம் மான் - இளமைபொருந்திய மான்போல்பவளது, பேர அழகும் - பெரிய வழகையும், பெருகு துயரும் - (காமத்தா லவளிடத்தே) வளாகின்ற துன்பத்தையும், விளம்பியதும் - (தன்னைக்குறித்து அவளாற்) சொல்லப்பட்ட செய்தியையும், இன்னும் - இனனமும், உரைதி உரைதி எனறு - சொல்லு சொல்லென்று, கேட்டு - வினவிக்கொண்டு, அதனோடு - அவ்வன்னத்தோடு, இங்கு - இவ்விடததே, இவ்வாறு இவன இருப்ப - இவ்விதமாக இந்நளன் இருக்கும்போது (உண்டாகிய), மின் நுண் மருங்குல் - மினபோலும் நுண்ணிய இடையையுடையவளாகிய தமயந்தியினது, துயரமும் - துன்பததையும், மேல் விளைந்த ஆறும் - பின்பு நடந்த செயதியையும், விளம்புவாம் - (யாம்) சொல்லுவாம், எ-று.

(க - து.) அன்னஞ்சொனன இனிய சொற்களால் நளமஹாராஜனவன் உயிரை விடாதிருந்து தமயநதி யென்னசொனன ளினனஞ்சொல்லு சொல்லெனறு கேட்டு நளனிருக்கத தமயநதிபடுந் துயரததைச் சொல்லுவாம் எனபதாம்.

அன்னத்தின் சொல்லைக் கேட்டு அரசன் இனி எபபடியும் அவளைப் பெறலாமென்று நிச்சயங்கொண்டு உயிரபொறுத் திருத்தலால் 'அன்ன முரைத்த வின்சொல்லி னுவி தாங்கி' எனறார். கேட்கபபட்ட தொருபொருள தமமால் விரும்பபபட்டதா யிருப்பின அவ்விருப்ப மிகுதியாற பினனும் பின்னுங் கேட்பராதலால் பின்னும் 'இனனு முரைததி யுரைததி' எனறு னென்க. அன்றியுங் கேடகுந்தோறுந் தன காமநோய்ககு மருந்தாய் நிற்றலின், அங்ஙனங் கேட்டானெனினுமாம். (கஙச)

அன்னத்தைத் தூதுவிட்டபடல முற்றும்.

## *கைக்கிளைப் படலம்.

கைக்கிளையெனபது ஒருதலைக் காமம்; அது ஆண்பாற் கைக்கிளையும பெண்பாற கைக்கிளையும் என விருவகைப்படும்; அவற்றுள் இது பெண்பாற் கைககிளையாம்.

[இப்படலத்தில் இதுமுதலிய பாட்டுகளால் தமயந்தி தந்தையாற் பின் செய்யப்படும் சுயம்வரத்திற்குக் காரணமாக அவள் காமநோயிற் படும்பாடு சொல்லப்படுகின்றது.]

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கொங்குவிம்முகோதையோடுகோதைதாழவாண்முகம்
பங்கயத்தைமற்றொர்பங்கயத்துவைத்தபான்மைபோ
லங்கைசேர்த்திமைக்கணீலவாலிசிந்தவைகிய
மங்கைமென்முலைத்தடத்துமாரன்வாளியேவினான்.

* கை - சிறுமை, கிளை - உறவு.

(இ - ள்.) கொங்கு விம்மு - வாசனையானது விரியப்பெற்ற, கோதையோடு - பூமாலையோடு, கோதை தாழ - கூந்தலானது அவிழ்ந்து தொங்கவும், பங்கயத்தை - (ஒரு) தாமரைப்பூவை, மற்றொர பங்கயத்து - மற்றொரு தாமரைப்பூவிலே, வைத்த பான்மைபோல் - வைத்த தன்மைபோல், வாள் முகம் - ஒளிபொருந்திய முகத்தை, அங்கை சேர்த்தி - உள்ளங்கையிலே வைத்து, மை கண் - மை யெழுதப்பெற்ற கண்களிலிருந்து, நீலம் ஆலி சிந்த - கரிய நீர்த்துளிகளானவை உதிரவும், வைகிய - இருக்கின்ற, மங்கை - தமயந்தியினுடைய, மெல் முலை தடத்து - மெல்லிய முலைகளிடத்து, மாரன வாளி ஏவினான் - மன்மதனானவன் பூவம்புகளைச் செலுத்தினான், எ-று.

(க - து.) தமயந்தி கனதனத்திடத்து மன்மதன் கணைதொடுத்தான் என்பதாம்.

முகமுங் கையுந் தாமரை மலர்போலுதலால் 'பங்கயத்தை மற்றொர பங்கயத்து வைத்த பான்மைபோல்' என்றார். கண்ணீர் மையைக் கரைத்துக்கொண் டொழுதலின் 'நீல வாலி' எனப் பட்டது. வைகிய வென்பதைச் செய்யிய வென்னும் வினையெச்சமாக்கி இருக்கும்படியாக வெனப் பொருள்கூறினு மமையும். இப்படலத்துப் பாட்டுகளெல்லாம் பெரும்பாலும் ஈற்றுச்சீர் விளச்சீரும் ஏனைச்சீர்கள் மாச்சீர்களுமாகி வருகிற எழுசீர்க்கழிநெடிலடி நான்குகொண்ட ஆசிரியவிருத்தங்கள். (க)

செப்புநேர்முலைக்கன்வேனிலவேடொடுத்ததேமல
ரப்புமாரிகாமவெம்மைசெய்யவாற்றலாமையா
லெப்புவிக்கும்வேந்தெழிற்கடற்படிந்துமீண்டுமால
வெப்புநோயர்நீரின்மூழ்கின்வெம்மையாறுமேகொலாம்.

(இ - ள்.) வேனில் வேள் தொடுத்த - வசந்தகாலத்திற்குரிய மன்மதனால் எய்யப்பட்ட, தே மலர் - வாசனைபொருந்திய மலராகிய, அப்பு மாரி - அம்பாகிய (நீரினது) மழையானது, செப்பு நேர் முலைக்கண் - செப்புப்போலும் முலைகளை யுடையவளாகிய தமயந்தியிடத்து, காம வெம்மை செய்ய - காம சுரத்தை யுண்டாக்க, ஆற்றலாமையால் - பொறுக்கமாட்டாமையால், எ புவிக்கும் - எல்லாத தேசங்களுக்கும், வேந்து - அரசனாயுள்ள நளமகாராஜனது, எழில் கடல் படிந்தும் - அழகாகிய கடலுள்ளே முழுகியும், மீண்டும - (அக்காமசுரமானது அவளுக்கு) மிகும்; வெப்பு நோயர் - சுரவியாதியை யுடையவர், நீரில் மூழ்கின - நீரினுள் முழுகினால், வெம்மை - அச்சுரமானது, ஆறுமேகொல் - தீருமோ, எ-று.

(க - து.) தமயந்தியானவள் காமாக்கினியால் நளனழகென்னுங் கடலிற் படிந்தும் அவளுக்குக் காமக்கனல் மிகும் என்பதாம்.

"மெல்லொற்றுத் தொடாமொழி மெல்லொற் றெல்லாம, வல்லொற றிறுதிக கிளையெழுத் தாகும்" என்பதனால் அம்பு அப்பு என விகாரப்பட்டது. அப்பென்பது நீருக்குப பெயராதலால் அம்பாகிய நீரென விருபொருள் கூறப்பட்டது. மழையிலே நனைந்தவர்களுக்குச்

சுரமுண்டா மாதலால் 'அப்புமாரி காமவெம்மை செய்ய' என்றார். அழகாகிய கடலிலே படிதலாவது அவ்வழகை யிடைவிடாது நினைத்தல். காய்ச்சலுடையாளிகள் நீரிலே முழுகினால் அது பின்னும் அதிகமாக விஷமிப்பது வைத்தியநூலிற் சொல்லப்பட்டபடி அநுபவசித்தமாதலின் 'வெம்மையாறுமேகொல்' என்றார் ஈற்றடியின் பொதுப்பொருளால் முன் மூனறடியின் சிறப்புபபொருளைச் சாதித்தலால் வேற்றுப்பொருள் வைப்பணியாம். இதறகு எழிலாகிய கடல், அம்பாகிய நீா என்கிற வுருவகங்களும், கடற் படிதலாலே வெப்பந் தீாதலாகிய விருப்பததைப் பெறாமல் அவ வெபப மிகுதலைப் பெறுவதாகிய தகுதி யின்மை யணியும் அஙகங்கள் ஆதலால் உறுப்புறுப்பிக் கலவையணி. (உ)

அலலலுற்றழுங்கும்வாடுமாவிசோருமெல்லிதழ்ப்
பல்லவங்கடீயுமாறுபாயலிற்படுத்திடு
மொல்லையிற்பதைக்குநெட்டுயிர்ப்புவீங்கும்வார்கழை
விலலிவாளிதன்னையார்விலக்குவார்கொலென்னுமால.

(இ - ள்.) அல்லல் உற்று - துன்பமுற்று, அழுங்கும் - வருந்துவாள், வாடும் - வாடுவாள், ஆவி சோரும் - உயிர்சோாவாள்; மெல் இதழ் - மெல்லிய பூவிதழ்களும, பல்லவங்கள் - தளிாகளும், தீயும் ஆறு - (தன்னுடல் வெப்பத்தாற்) கருகும்படியாக, பாயலில் படுத்திடும் - சயனத்தின்கண் படுப்பாள், ஒல்லையில் பதைக்கும் - விரைவில் துடிப்பாள்; நெடு உயிாப்பு வீங்கும் - பெருமூச் செறிவாள்; வாா கழை வில்லி - நெடிய கருப்புவில்லையுடைய மன்மதனது, வாளி தன்னை - அம்பை, யாா விலக்குவாா எனனும் - யாவா விலக்கவல்லவா என்று சொல்லுவாள், எ-று. கொல், ஆல் - அசைகள்.

(க - து.) தமயந்தியானவள் மன்மத பாணத்தை யாா விலக்குவாாகள் எனறு சொல்லுவாள் என்பதாம்.

ஒன்றற்கொன்று பகை யில்லாமையால் ஒருகாலத்திற கூடத்தக்க அழுங்குதல், வாடல், ஆவிசோாதல், படுத்திடல், நெட்டுயிர்ப்பு வீங்கல், மன்மதனம்பை யாா விலக்குவாரென்று சொல்லுதல் என்கிற பல பொருளகளுக்குக் கூடுதலைச் சொல்லுதலால் கூட்டவணியாகும். அச்சுரத்தாற் பம்மபாடு சொல்லப்பட்டது. (ஙு)

மைம்மறந்தநீலவொண்கண்வார்புனற்சொரிந்தியாழ்
கைம்மறந்தகூடலெண்ணிமெல்விரல்கள்கன்றின
பொம்மல்வெம்முலைத்தடங்கலன்றுறந்தபூமறந்
தம்மெலோதிசோர்ந்ததுள்ளமார்வமோடழிந்ததே.

(இ - ள்.) நீலம் - கருங்குவளை மலாபோலும், ஒள் கண் - ஒள்ளிய கண்களானவை, வாா புனல் - தாரையாயிழிகின்ற நீரை, சொரிந்து - பொழிந்து, மை மறந்த - அஞ்சனத்தை மறந்தன; கை - கைகளானவை, யாழ் மறந்த - வீணை (வாசித்தலை) மறந்தன; கூடல் - கூடற் (சுழிகளை), எண்ணி - (தொட்டு) எண்ணி, மெல் விரல்கள் கன்றின - மெல்லிய விரல்களானவை வாடின; பொம்மல் - பொலிவு

பொருந்திய, வெம் முலை தடம் - விருப்பத்தைத் தருகின்ற முலைகளி னிடங்களானவை, கலன் துறந்த - ஆபரணங்களை நீத்தன; அம் - அழ கிய, மெல் ஓதி - மெல்லிய கூந்தலானது, பூ மறந்து சோர்ந்தது - மல ரை மறந்து தளர்ந்தது; உள்ளம் - நெஞ்சமானது, ஆவமோடு - ஆசையோடு கூடி, அழிந்தது - நிலைகெட்டது; எ-று. ஏ - அசை.

(க - து.) தமயந்தி கண்கள் மை மறந்தன, கைகள் வீணையை மறந்தன, விரல்கள் கூடற்குறி யெண்ணி வாடின, முலைகள் ஆபர ணங்களை நீத்தன, கூந்தல் பூ மறந்து சோர்ந்தது, நெஞ்ச மாசையி லழிந்தது என்பதாம்.

மறத்தற்கு ஒழிந்து நிற்றலென்பது கருத்து. கூடல்—ஆகு பெயர், கூடற்சுழியாவது தலையோடுகடைவந்து கூடுமாயின் தம் மெண்ணங் கைகூடுமென்று குறிபார்த்தற்கு மகளிரால் கண்மூடி விரலாலே நிலத்திலே வலயமாகச் செய்யப்படுவது. அது பல செய்து அவற்றைக் கூட்டி இத்தனையென் றறிதற்கு விரலா லொவ்வொன்று கத் தொட் டெண்ணுவ ளெனக. "ஆழிதிருத்தும் புலியூருடையா னருளினளித், தாழிதிருத்து மணற்குன்றி னீத்தகன் றாவருகென், றூழிதிருத்திச் சுழிக்கணக் கோதிநை யாமலைய, வாழிதிருத்தித் தரக் கிற்றி யோவுள்ளம் வள்ளலையே" என்பதனாலறிக. அவை செய்தற் குப் பொருமற் பல விரல்களுங் கொள்ளப்பட்டமை தோன்றற்கு விரலென்னது மென்மையும் பன்மையுங்கூட்டி 'மெல்விரல்கள்' என் றார். (ச)

மழைமதர்ககண்முலைகள்செய்யமார்பனைத்துமென்மைநே
ரிழைபுகப்பெறுதுவிம்மியேர்பெறக்கவர்ந்ததாற்
கழைகுழைத்துமாரனெய்தகணையினுள்ளமூடுபோய்
நுழைவதற்கிடம்பெறுதுநொய்துதைத்துமீளுமால்.

(இ - ள்.) மழை மதர் கண் - குளிர்ச்சிபொருந்திய செருக்கை யுடைய கண்களையுடையவளது, முலைகள் - முலைகளானவை, செய்ய மார்பு அனைத்தும் - சிவப்பாகிய மார்பிடம் முழுதையும், மென்மை நேர் - மென்மையு நேர்மையும் பொருந்திய, இழை புக பெறுது - ஒருநூலும் நுழைதற்குச் சந்தில்லையாக, விம்மி - பருத்து, ஏர் பெற - அழகு பெற, கவர்ந்ததால் - வௌவினதால், கழை குழைத்து - கருப் பு (வில்லை) வளைத்து, மாரன் எய்த - மன்மதனுல் செலுத்தப்பட்ட, கணையின் - அம்புகளால், உள்ளம் - நெஞ்சமானது, ஊடுபோய் - உள ளுடைந்து, நுழைவதற்கு - (அவ்விரு முலைகளுக்கும் நடுவே) புகுந்து வெளிப்படுதற்கு, இடம் பெறுது - வழிபெறுமல், நொய்து - சிதைந்து, உதைத்து - (அவற்றினடியை) உதைத்து, மீளும் - திரும்பிவி டும், எ-று. ஆல் - அசை.

(க - து.) தமயந்திமுலைகள் மிகவும் பூரித்ததால் மன்மதபாணங் தைக்காமற்றிரும்பும் என்பதாம்.

ஓரிடத் தொருவனுக்குப் பகைவன் அம்புகளால் வருத்தமுண் டாம்போது அவ்விடம்விட் டோடிப்போகாதிரா னதலின் மார்பி

னுள்ளே மன்மதபாணம்பட்டு வருந்திய நெஞ்சம் அவ்விடம்விட்டுப் பலமுறை யோடி முலைகளி னடியை முட்டித் திரும்பிய தென்க. நெஞ்சம் படபடவென்று அடித்துக்கொள்வதை அங்ஙனங் கூறினார். இங்கே அம்புகள்பட்டும், நெஞ்சம் வெளிப்பட்டுப் போகாமைக்கு ஆயுண்மிகுதி யேதுவாயிருப்ப முலைகளின் செறிவை யேதுவாகக் குறித்தமையால் ஏதுத்தற்குறிப்பணி, 'கணைகளுள்ளமூடுபோய் நுழைவதற் கிடம்பெறாது நொய்துதைத்து மீளும்'எனப் பாடங்கூறி முலை நெருக்கத்தால் மார்பிலே நுழையமாட்டாமல் மன்மதபாணஞ் சிறிதுதைத்துத் திரும்பிவிடுமென்று பொருள் கூறுவாருமுண்டு. அது முதநூற் கருத்துக்குச் சிறிதும் ஒவ்வாமற் போவதுமன்றிக் காமநோயை மிகுதியாக வுற்றில ளென்னுங் கருத்தை யுட்கொண் டிருத்தலாற் பொருந்தா தென்க. முதனூன் முடிபுக்கு முழுது மொத்திருக்கவேண்டின் "தழைதலுற்ற காமவெம்மை சாதலாற் பிளப்புறீஇ - விழைதலுற்றநெஞ்சகம் வெளிப்படாதிருந்ததே" எனப் பாடங் கூறல்வேண்டு மென்க. (௫)

சுழித்தகூடல்கூடுறாதுநீர்சொரிந்துநாடொறு
மழித்தகண்கடுயிலும்வேலையணிதயங்குமார்பகத்
திழைத்தவாரமுலைதிளைப்பவெய்துபோழ்திலிறைவனை
விழித்துநீரடக்குமாயமென்கொலென்றுமெலியுமால்.

(இ-ள்.) சுழித்த - சுழிக்கப்பட்ட, கூடல் - கூடம் (சுழியானவை), கூடுறாது - கூடாமற்போக, நீர் சொரிந்து - நீரைப் பொழிந்து, நாள் தோறும் - தினந்தோறும், அழித்த கண்கள் - கெடுத்துக்கொண்டுவந்த கண்களே, துயிலும் வேலை - தூங்கப்பெறுகின்ற காலத்திலே, அணி தயங்கும் - ஆபரணங்களாலே விளங்காநின்ற, மார்பகத்து - (என்) மார்பிலுள்ள, இழைத்த ஆரம் முலை திளைப்ப - தேய்க்கப்பட்ட சந்தனத்தையுடைய (என்) முலைகளைத்தழுவ, எய்து போழ்தில் - அடைகின்ற சமயத்தில், விழித்து - இமைகளைத்திறந்து, நீர் - நீங்கள், இறைவனை - (என்னுடைய) தலைவனாகிய நளமகாராசனை. அடக்கும் மாயம் - மறைக்கின்றதாகிய வஞ்சவித்தையானது, என் கொல் என்று - எத்தன்மைத் தாகுமென்று சொல்லி, மெலியும் - தளர்வாள், எ - று. ஆல் - அசை.

(க - து.) கண்களே! நித்திரையிலே நளனைக் கூடுஞ் சமயத்திலே விழித்துக்கொண்டு அந்நளனை யடக்கும் வஞ்சனை யென்னவென்பாள் என்பதாம்.

கண்கள் கூடற்சுழிகளை யழித்தற்கன்றித் தன் வருத்தத்திற்காகவே நீர் சொரியினும் அந்நீரால் அச்சுழிகள் குலைதல்பற்றிப் பின்னும் வருத்த மிகுதலால் தனக்குத் தீங்கு செய்தனவாகக்கொண்டு அவற்றிற்கு நிந்தைதோன்ற 'சுழித்தகூடல் கூடுறாது நீர்சொரிந்து நாடொறுமழித்த கண்கள்' என்றாள். தான் காணுதற்குக் கருவியாயுள்ள கண்கள் அவற்றாலன்றித் தானாகவே காணப்பெற்ற தலைவனை விழித்து மறைத்தல் பெரியதோர் மாயைவித்தை யாதலின் 'மாயமென்' என்றாள். அன்றித் தான் தலைவனைக்காணாது துயருறும்போது தன்மேலன்புடையனபோன்று அழுது நீர்சொரிந்து அவனைக் கண்டபோது

பகை யுடையனபோன்று விழித்து மறைத்தலின் அங்ஙனங் கூறினானெனினுமாம். "துஞ்சுங்காற்றோண்மேலராகி விழிக்குங்கா னெஞ்சத் தராவா விரைந்து" என்றவாறே இது கனவுமிலே. (கூ)

வாட்டடங்கண்மானையாவிவாட்டமாரன்வார்சிலை
பூட்டியெய்தபகழிதைத்தபுழைநுழைந்துதென்றல்போ
யீட்டுகின்றகாமவெந்தழற்பிழம்பையெரியெழ
மூட்டிமேலெழுந்ததாகுநெட்டுயிர்ப்புமுடிவினே

(இ-ள்.) நெடு உயிர்ப்பு - பெருமூச்சானது, மாரன் - மன்மதனாகிய வேடனானவன், வாள் - வாளபோலும், தடம் - விசாலம்பொருந்திய, கண் - கண்களையுடையவளாகிய, மானை - மானை, ஆவி - உயிரினைக் கண், வாட்ட - வருத்துதற்கு, வார் சிலை - நெடிய விலலிலே, பூட்டி எய்த - தொடுத்துச் செலுத்தப்பெற்ற, பகழி தைத்த - அம்புகளானவை தைத்தலாலாகிய, புழை - தொளைகளில், நுழைந்து போய - (ஒருவரு மறியாமற) புகுந்து சென்று, ஈட்டுகின்ற - (நட்பாகச) சேர்க்கப்படுகின்ற, காமம் - காமமாகிய, வெம் - வெப்பம் பொருந்திய, தழல் பிழம்பை - நெருப்பினது செறிவை, எரி எழ - எரிய, மூட்டி - மூள்வித்து, முடிவின் - (அச்செய்கை) முடிவில், மேல் - புறத்தே, எழுந்தது - புறப்பட்டதாகிய, தென்றல் - தென்காற்றே, ஆகும் - ஆகும, எ-று. ஏ - அசை.

(க - து.) தமயந்தி பெருமூசசானது மன்மதபாணந் தைத்த புழையிலே தென்றற்காற்றானது நுழைந் தக்கினியை மூள்வித்து மேலெழுந்ததற் கொப்பாகும எனபதாம்.

மானை யென முதற பொருளில் ஐயுருபு வந்தமையால் ஆவிக்குக் கண்ணுருபு விரிக்கப்பட்டது. இதற்கு "முதன் முனைவரிற கண்ணென் வேற்றுமை சினைமுன்வருத றெள்ளிதென்ப" என்பது விதி. தீயிடுவோா பிறரறியாமற் கள்ளவழியாற் செல்வ ராதலின் 'புழை நுழைந்து' என்க. காற்றிற்கு நெருப்பு நட்பாதலால் மூட்டியது. நட்பாதல் "எரிசுசிசிகியேயார விறைவன்காற றின்சகாயன்" என்பதனாலறிக. அக்காற்றுப் பின்பு தனக் குரியவழியாகிய மூக்கினாற் புறப் படுதலால் முன் பிறரறியாமற் புழைவழியாற் சென்றமை அனுமிக்கப்பட்டது. தமயந்தியை மானாக வுருவகஞ் செய்ததற் கேற்ப மாரனை வேடனாக வுருவகஞ் செய்யலாயிற்று. பெருமூச்சை அப்படிப்பட்ட தென்றலாகக் குறித்தலால் பொருட்டற் குறிப்பணியாம். (எ)

செயிர்ப்பின்மாரனெய்யவாவியில்லையுண்டுசிறிதெனா
வயிர்ப்பவாடிவிரகவெம்மையழலின்மூழ்கியவுருவும்
பயிர்ப்பில்கோதைநெஞ்சுநோய்கள்பரிவினோடுமழலுநெ
டுயிர்ப்புமாத்ததோநடுக்கமுற்றதுத்தரீயமேல். [ட்

(இ - ள்.) மாரன் - மன்மதனானவன், செயிர்ப்பின் எய்ய - கோபத்தினால் (அம்புகளைச்) செலுத்த, ஆவி - உயிரானது, இல்லை - இல்லையெனவும், உண்டு சிறிது எனா - சிறி துண்டெனவும், அயிர்ப்ப - ஐயங்

கொள்ள, வாடி - தளர்ந்து, விரகம் - விரகமாகிய, வெம்மை அழலின் மூழ்கி - வெப்பம்பொருந்திய நெருப்பினுள் முழுகி, அருா உறும் - வருத்தத்தை யடைந்த, பயிாப்பு இல் - அருவருபபுக் குணமிழந்திருக்கின்ற, கோதை - மங்கையினது, நெஞ்சுள் நோய்கள் - நெஞ்சத்தினுளுண்டாகிய நோய்களை, பரிவினோடும - இரக்கத்தினாலே, அழலும் நெடு உயிாப்பு - சூடுபொருந்திய பெருமூச்சானது, உரைத்தது - சொல்லியதனால், மேல் - (அந்நெஞ்சத்தின்) மேலிடத்துள்ள, உத்தரீயம் - உத்தரீயமானது, நடுக்கம் உற்றதோ - நடுக்கத்தை அடைந்ததோ, எ-று. [ஓகாரம் - உற்றதிற் கூட்டப்பட்டது.]

(க - து.) தமயந்தி நெஞ்சுநோய்களை நெட்டுயிாப்பானது காட்டியது என்பதாம்.

இல்லையோ வுண்டோ வென வருகிற ஐய வோகாரங்கள் தொக்கு வந்தன. அருாறும் என்ற பெயரெச்சவினை நெஞ்சென்னும் வினைமுதற் பெயாகொண்டது. நெஞ்சென்பது மனத்திறகும் அம்மனத்திற்கிடமாகிய மாாபிறகும் பெயராதலால் அவ்வொறறுமைபற்றி 'நெஞ்சுளோய்கள்' என்றார், "நெஞ்சென்ப மனமார்பின்பேர்" இதனாலறிக. அரசமகளிா் அரையிற் பாவாடையுடுத்து மார்பின்மே லுத்தரீயஞ் சோப்பது வழக்கம். ஒருவரிடத்திற்கு இடையூறு நேரிடக்கண்டோாக்கு இரக்கமுண்டாமாதலின் 'பரிவினோடும்' என்றார். தனக்காதாரமாகிய நெஞ்சிற்கு நோயுண்டானமையால் ஆதேயமாகிய வுத்தரீயம் அஞ்சி நடுங்கிய தென்க. உததரீயததினது நடுக்கத்திற்கு ஏதுவாகாத பெருமூச சுரைததலை யேதுவாகக் குறித்தலாலும் உரைததலாகியவிடயம் இல்லாமையாலும் இல்புலவேதுத் தற்குறிப்பணி. பயிர்ப்பில் கோதை காமநோய்களெனவும பாடமுண்டு. (அ)

மையரிக்கண்வதனமங்கைவடிவமைந்தசிறடிச்
செய்யபங்கயங்களுண்டுமிழ்ந்தசெய்யகதிர்கொலோ
தொய்யில்வெம்முலைத்தடஞ்சுமந்துநொந்துவாடிய
வையநுண்மருங்குன்மெய்யழன்றெழுந்தவெம்மையே.

(இ - ள்.) தொய்யில் - சந்தனக் கோலத்தினையுடைய, வெம்முலை - விருப்பஞ்செய்கின்ற முலைகளாகிய, தடம் சுமந்து - மலைகளைத் தாங்கி, நொந்து - வருந்தி, வாடிய - இளைத்த, ஐயம் - (உண்டோ வில்லையோவென்னும்) சந்தேகத்தைத்தருகின்ற, நுண் மருங்குல் - நுண்ணிய இடையையுடையவளது, மெய் - உடம்பிலிருந்து, அழனறு எழுந்த - சுட்டுக்கொண்டு புறப்படுகின்ற, வெம்மை - வெப்பமானது, மை அரி கண் - அஞ்சனத்தையும் இரேகைகளையும் உடைய கண்களும், வதனம் - முகமும், அங்கை - உள்ளங்கைகளும், வடிவு அமைந்த - அழகால் நிறைந்த, சிறு அடி - சிறிய அடிகளுமாகிய, செய்ய பங்கயங்கள் - செந்தாமரை மலாகளாலே, உண்டு - (அதற்கு முன்) உட்கொண்டு, உமிழ்ந்த - (அப்போது) கக்கப்படுகின்ற, செய்ய கதிர்கொல் - சூரியகிரணமோ, எ-று.

(க - து.) தமயந்தி உடம்பிலெழுந்த சூடானது இவளது அவயவத் தாமரைகள் உண்டுமிழ்ந்த சூரிய கிரணமோ என்பதாம்.

'செய்யகதிர்' எனவே சூரியகிரணமென்பது பெறப்பட்டது. அக்கிரணத்தைத் தங்களுக்கு நாயகனாகிய சூரியனாலே தரப்பட்ட தென்கிற விருப்பத்தாலுண்டன வென்க. காமவெம்மையை அப்படிப்பட்ட கிரணமாகக் குறித்தலாலே பொருட்டற்குறிப்பணி, இதற்கு உருவகம் அங்கம், ஆதலால் உறுப்புறுப்பிக்கலவையணி. (கூ)

அலைத்தடங்கணருவிபாயவாரவண்டலழியுமென்
முலைத்தடத்தினூடுதோன்றுமுகமுநீலவொண்கணுஞ்
சிலைத்தடக்கைமாரன்மாதுசிந்தைமீதழுந்திட
வுலைத்துவிட்டகமலம்வெய்யவுற்பலத்தையொத்தவே.

(இ - ள்.) தடம் கண் - விசாலம்பொருந்திய கண்களிலிருந்து, அலை அருவி பாய - அலையையுடைய வெள்ளமானது பாய்தலினாலே, ஆரம் வண்டல் - சந்தனக் குழம்பானது, அழியும் - அழியப்பெற்ற, மெல் முலை தடத்தினூடு - மெல்லிய முலைப்பரப்பினுள்ளே, தோன்று - காணப்பட்ட, முகமும் - முகத்தினது (நிழலும்), நீலம் - கருமைபொருந்திய, ஒள் கண்ணும் - ஒள்ளிய கண்ணினது (நிழலும்), சிலை - (கருப்பு) வில்லையுடைய, தடம் கை - பெருமைபொருந்திய கையையுடைய, மாரன் - மன்மதனால், மாது - மங்கையினது, சிந்தை மீது அழுந்திட - நெஞ்சின்கண் அழுந்த, உலைத்து விட்ட - இழுத்து விடப்பட்ட, கமலம் - தாமரைப்பூ (அம்பையும்), வெய்ய உற்பலத்தை - கொடிய நீலோற்பலப்பூ (அம்பையும்), ஒத்த - ஒத்திருந்தன, எ-று.

(க - து.) தமயந்தி முலையினிடத்துத் தோன்று முகமுங் கண்களும் மன்மதனது தாமரைப்பூங் கணையையும் நீலோற்பலக் கணையையும் ஒத்திருந்தன என்பதாம்.

முகமுங் கண்ணும் அவற்றி னிழல்களுக்காதலால் ஆகுபெயர்கள். நீலோற்பலங் கொல்லுகின்ற பாணமாதலால் 'வெய்யவுற்பலம்' என்றார். "முல்லை கிடைகாட்டு மாதே முழுநீலங், கொல்லுமத னம்பின குணம்" என்பதனா லறிக. அவள் தலை வளைத்திருக்கும்போது முகமுங் கண்களும் முலைமேற் பாய்ந்த கண்ணீரிலே பிரதிபிம்பித்தன வென்க. அந்நிழல்களை அப்படிப்பட்ட மன்மதபாணங்களாகக் குறித்தலால் பொருட்டற்குறிப்பணி. முகத்தையுங் கண்களையும் வைத்த முறையே கமலத்தையு முற்பலத்தையும் வைத்தலால் நிரனிறையணி. இவ்விரண்டுஞ் சேர்தலால் சேர்வையணி. (க0)

வேயைவென்றபசியதோளணங்குகாமவெம்மையாற்
றீயின்மேயதளிரின்வாடியழிதல்கண்டுசிந்தியா
யேயநெஞ்சமழியமைக்கணீரிறைப்பநிலைதளர்ந்
தாயவெள்ளம்விரகவெம்மையாற்றுவான்றணிந்ததே.

(இ - ள்.) ஆய வெள்ளம் - (வெள்ளம்போலும்) மகளிர்கூட்டமானது, வேயை வென்ற - மூங்கிலை ஜயித்த, பசிய தோள் - பசுமை பொருந்திய தோள்களையுடைய, அணங்கு - தெய்வப்பெண்போல்

பவள், காமம் வெம்மையால் - காமத்தினது வெப்பத்தால், தீயில் மேய - நெருப்பில் விழுந்த, தளிரின் வாடி - தளிரபோல் மெலிந்து, அழிதல் கண்டு - வருந்துதலைப் பார்த்து, சிந்தியா - (இதற்கு நாஞ் செய்யக்கடவ தியாதென்று) ஆலோசித்து, நேயம் நெஞ்சம அழிய - அன்பையுடைய மனமானது வருந்தவும், மை கண் - மையையுடைய கண்களானவை, நீர இறைப்ப - நீரைப் பொழியவும், நிலை தளாந்து - நிலைசோர்ந்து, விரகம் வெம்மை - விரகத்தாலாகிய (அக்காம) வெப்பத்தை, ஆறறுவான் - தணிக்கும்படியாக, துணிந்தது - நிச்சயித்து, எ-று.

(க - து.) தமயந்தியினது காம வெப்பத்தைத் தணிக்கும பொருட்டுப் பெண்கள் கூட்டம் புறப்பட்டது என்பதாம். (கக)

மதுப்பிலிற்றுசோலைவாயின்மணிதெளித்தநீரதாம்
புதுப்புனற்றடத்திலிந்துகாந்தவேதிகைப்புறத்
துதித்ததிங்கள்வாண்முகத்தணங்கைமாரனொண்கணை
வெதுப்புகின்றதொழியவாசமெல்லணைக்கிடத்தினர்.

(இ - ள்.) மது பிலிற்று - தேனைத் துளிக்கின்ற, சோலைவாயில் - பொழிலின்கண், மணி தெளித்த - முத்துகளைத் தெளித்தலாலாகிய, நீரது ஆம் - குணமுடையதுபோல்வதாகிய, புது புனல் தடத்தில் - புதிய நீரையுடைய குளக்கரையில், இந்து காந்தம் வேதிகை புறத்து - சந்திரகாந்தத்தாலாகிய மேடையினமேல், வாசம் மெல் அணை உதித்த - பரிமளம் பொருந்திய மெல்லிய (பூ) அணையின்மேல் உதயமாகிய, திங்கள - சந்திரனபோலும், வாள் முகத்து - காந்திபொருந்திய முகத்தையுடைய, அணங்கை - தெய்வமாதுபோல்பவளை, மாரன - மன்மதனது, ஒள் கணை - ஒள்ளிய அம்பானது, வெதுப்புகின்றது ஒழிய - சுடுகின்றது நீங்கும்படியாக, கிடத்தினா - படுக்கவைத்தார்கள், எ-று.

(க - து) பாங்கியர் தமயந்தியைச் சோலையிற் றடாகக்கரையில் சந்திரகாந்தமேடைமேற பூவணையிற கிடத்தினாகள் என்பதாம.

'திங்கள் வாள்முகத் தணங்கு' என்றதனால் திஙகள்போல் விளங்குகிற அவள் முகத்தொளியைச் சோந்து தண்ணீர்சொரிந்து வெடபமொழிக்கு மென்பதுபற்றிப் பகற்காலத்திலே சநதிரகாந்த மேடையிலே சோததின ரென்க. பகலென்பது பின குரவவிழ்ந்த வென்னும் பாட்டாலறிக. 'வாசமெல்லணை' எனலால் பூவணையெனபது பெறப்பட்டது. (கஉ)

மலயவெற்புயிர்த்தோர்காதம்வாசநாறுமாரமு
மலைகடற்பிறந்திலங்குமணிகொள்கோவையாரமு
முலையின்வெப்பினீறதாகிமுழுமெயும்புதைத்தலாற்
சிலைமதற்குவெருவியீசனுருவெடுத்தலசிவணுமே.

(இ - ள்.) மலயம் வெற்பு உயிாத்து - பொதிய மலையினால் தரப்பட்டு, ஓா காதம - ஒரு காதமளவாக, வாசம் நாறும் - வாசனை

வீசுகின்ற, ஆரமும் - சந்தனமும், அலை கடல் பிறந்து - அலைகளையுடைய கடலின்கண் உண்டாகி, இலங்கும் - விளங்குகின்ற, அணிகொள் - அழகைக்கொண்ட, கோவை ஆரமும் - வடங்களிலுள்ள முத்துகளும், முலையின் வெப்பின் - முலைகளது (காமசுர) வெப்பத்தினால், நீறது ஆகி - சாம்பலாகி, முழு மெய்யும் புதைத்தலால் - (தமயந்தியின) உடம்பு முழுதையும் மறைத்தலால், (தமயந்தியானவள்) சிலை மத நகு - வில்லையுடைய மன்மதனுக்கு, வெருவி - அஞ்சி, ஈசன் உருவு - பரமசிவனது வடிவத்தை, எடுத்தல் சிவனும் - எடுத்தவள்போலும், எ-று.

(க - து.) சந்தனமும் முத்துகளும் தமயந்தி முலை வெப்பதினாலே நீறாகித் திருமேனிமுழுதையு மறைத்தலால் மனமதனுக்குப் பயந்து சிவனைபபோல வடிவெடுத்தாள்போலு மிருநதது எனபதாம.

சந்தனமும் முத்தும் முலைகளின்மேலே தரிக்கப்பட்டு அவற்றின் வெப்பத்தால் அவ்விடங்களிலே நீறாயினும் அந்நீறு அவள் கிடை பொருந்தாது புரளும்போது சரீரமுழுதும் படிதலால் 'முலையின வெப்பி னீறதாகி முழுமெயும் புதைததலால்' எனறார. பரமசிவன் முன்னொரு காலததிலே மன்மதனை யெரிததலால் தன வடிவ முழுது முள்ள நீற்றைக்காணின் தனனை அவனெனறு அஞ்சுவானென்று அப் பரமசிவ னுருவெடுத்தாளாகக கூறினார. எடுத்தலென்னுந் தொழிற பெயா ஆகுபெயராய் வினைமுதலுக் காயிற்று. அக்காரணததினாலே தமயந்தியை ஈசனுருவெடுததாளாகக் குறிததலால் தற்குறிப்பணி ()

வளைத்தடக்கைவெம்மைதீரவாரமேல்வளைத்ததிற்
றெளித்தவாசநீர்நிறைத்துமுத்தணிந்தசெவ்விவான்
முளைத்ததிங்கடாரகைக்குலங்களோடுமொய்த்துமா
துளத்தவேளையார்வமோடுகாணவந்ததொத்ததே.

(இ - ள்.) வளை - வளையல்களையுடைய, தடம் கை - பெரிய கைகளையுடையவளது, வெம்மை தீர - (காமசுர) வெபபானது நீங்க, ஆரம மேல் வளைதது - சநதனததால் (மாாபின்) மேல் (கரை) கோலி, அதில் - அதனடுவில், தெளிநத வாசநீா நிறைதது - தெளிந்த பனி நீரால் நிறைவித்து, முதது - முத்துகளை, அணிநத செவ்வி - (சுற்றிலும்) அணிந்தமையாலுண்டாகிய அழகானது, மாது உளதத - தமயநதியினது நெஞ்சிலிருக்கினற, வேளை - மனமதனை, காண - பாாக்க, வான் முளைத்த - ஆகாசததிலே தோன்றுகினற, திங்கள - சந்திரனவன, தாரகை குலஙகளோடு மொயதது - உடுக் கூட்டங்களுடனே நெருங்கி, ஆாவமோடு வந்தது - (அங்கே) ஆசையோடு வந்திருத்தலா லுண்டாகிய அழகை, ஒத்தது - நிகாத்தது, எ-று.

(க-து.) தமயந்திமாாபில் சந்தனத்தைவளைத்துப் பனிநீரைவிட்டு முத்துகளையணிந்த அழகானது சநதிர நட்சத்திரஙகளோடு தமயந்தியுள்ளதது மன்மதனைக் காணவந்ததை ஒத்திருந்தது என்பதாம்.

தெளிந்த வென்பது எதுகை நோக்கி வலித்தல்விகார மாயிற்று. அப்பனிநீா சந்திரன்போன்றும், அதனைச் சூழ்ந்த முத்துக்கள் சந்திர

னைச் சூழ்ந்த வுடுக்கள் போன்றுந், தோன்றின வென்க. சந்திரன் உடுக்களுக்குத் தலைவனுதலால் 'தாரகைக் குலங்களோடு' என்ருா. "வீபத்துடுபதி யமுத கிரணன்" என்பதனுலு மறிக. சந்திரனுக்கு மன்மத னட்பாளனுதலால் ஆவமோடு காணவந்த தென்ருா. அவ் வணிந்த வழகை அபபடி சந்திரன வந்த வழகாகக் குறித்தமையால் தற்குறிப்பணியாம். (கச)

பூசுசாந்தமெய்யினிற்பொருக்கெழுந்துதீந்தன
வீசுமாலவட்டநெஞ்சில்விரகவெம்மைமூட்டின
வாசம்வீசுநெட்டுயிர்ப்பின்மாலைதீந்துவாடின
வாசைநோயின்வெம்மைதன்னையாற்றலாகுமேகொலாம்.

(இ - ள்.) பூசும் சாந்தம் - பூசப்பட்ட சந்தனமானது, மெய் யினில் - உடம்பின்கண், பொருக்கு எழூந்து - பொருக்காக எழும்பி, தீந்தன - கரிந்தன; வீசும் ஆலவட்டம - வீசப்பட்ட சிவிறிகளா னவை, நெஞ்சில் - நெஞ்சினுள்ள, விரகம் வெம்மை மூட்டின - விர கத்தாலாகிய நெருப்பை மூள்வித்தன, மாலை - மாலைகளானவை, வாசம் வீசும் - வாசனையை வீசுகின்ற, நெடு உயிர்ப்பின் - பெரு மூச்சினுலே, தீந்து வாடின - கருகிப் புலாந்தன; ஆசை நோயின் - காமநோயினது, வெம்மைதன்னை - வெப்பததை, ஆற்றல் ஆகுமே கொல் - (ஒருவரால்) ஆறறலாமோ, எ-று. ஆம் - அசை.

(க - து.) சந்தனங்கள் தீந்தன, ஆலவட்டங்க ளக்கினியை மூட் டின, பெருமூச்சால் மாலைகள வாடின, ஆகையால் காமாக்கினியை யவிக்கலாகுமோ என்பதாம.

வெம்மையென்னும் பண்புப்பெயா பண்பியாகிய நெருப்பிற் காத லால் ஆகுபெயா. சிவிறியின் காறறுப் படுந்தோறும் நெருப்பு மூளு தல்போல இவள்காம மூளுதலால் 'மூட்டின' எனருா. தமயந்தி பது மினியாதலால் அவள் மூச்சிறகு வாசனை சொல்லப்பட்டது. 'நெட்டு யிாப்பின் மாலை தீந்து வாடின' எனவே அப்பெருமூச்சு மிகவும் வெப் பமுடைத் தென்றதாயிறறு. (கரு)

ஐயரிககண்மாதின்மெய்யழன்றவெம்மையாற்றலாத்
தொய்யில்வெம்முலைப்புதைத்ததோடவிழ்ந்ததாமரை
மையன்மாமதத்தயானைநளன்மணந்திவ்வாறுதன்
கையினுற்பிடிப்பனென்றுகாட்டுமாறுபோன்றதே.

(இ-ள் ) ஐ அரி கண்-பஞ்சவரிகளை யுடைய கண்களையுடைய, மா தின் - மங்கையினது, மெய் அழன்ற வெம்மை - உடம்பிற சுடுகின்ற (காம) வெப்பத்தை, ஆற்றலா - பொறுக்கமாட்டாமல், தொய்யில் - சந்தனக்கோலத்தை யுடைய, வெம் முலை - விருப்பஞ்செய்கிற முலை களை, புதைத்த - சுருங்கி யமுக்குகின்றனவும், தோடு அவிழ்ந்த - இதழ்களானவை விரியப்பெற்றனவும் ஆகிய, தாமரை - தாமரை மலா கள், மையல் - மயக்கத்தைத் தருகின்ற, மா மதத்த யானை - பெரிய மதத்தையுடைய யானையையுடைய, நளன் - நளமகாராசனுனவன்,

மணந்து - (உன்னை) விவாகஞ்செய்து, இவ்வாறு - இவ்வண்ணமாக, தன கையினுல் - தன்னுடைய கைகளாலே, பிடிபபன் என்று - பற்று வானென்று, காட்டும் ஆறு போன்ற - காட்டுந்தன்மையன போன் றன, எ-று.

(க - து.) தமயந்திமுலைகளைப் பாங்கியரால அமுக்கப்பட்ட தாமரைமலாகளானவை நளன்விவாகஞ்செய்து அவன்கையா லிவவாறு பிடிப்பானென்று காட்டல்போன றிருநதன என்பதாம்.

அத்தாமரை மலர்கள நளன கைகளபோன்றும், அம்மலாகளி னிதழ்கள் அக்கைகளின் விரல்களபோன்றும் இருததலால் அவை காமசுர வெபபததால் சுருங்கி முலைகளை யழுததுதல் கையினுற பிடித் தல்போன்ற தெனக. 'வெம்மையா றறுவான' எனவும் பாட முண்டு. அத்தாமரைகளை அப்படிக் காடடுவனவாகக் குறித்தலால் பொருட்டற் குறிபபணி. (கசு)

குரவவிழ்ந்தகோதைவாண்முகங்குளிர்ந்ததிங்களென்
றுருகியிந்துகாந்தநீருகுப்பவெம்பியுரைசெய்வா
ளிரவுதிஙகளென்றுபேர்மறைத்தெழுந்தவிரவியும்
வருதலின்றியிரவிகாந்தமழலவதென்னவாறெனு.

(இ - ள.) அவிழ்ந்த - மலாந்த, குரவு - குராமலாகளைக்கொண்ட, கோதை - கூந்தலையுடையவளது, வாள முகம - காநதி பொருந்திய முகததை, குளிாநத திஙகள் என்று - சீதளமபொருந்திய சந்திர னெனறு மயஙகி, இநது காநதம - (தனக்கிடமாகிய) சநதிரகாந்தமா னது, உருகி - உருகி, நீா உகுபப - நீரைப பொழிய, வெம்பி - வெந்து, இரவு - இரவில், திங்கள என்று - சநதிரனெனறு சொல்லபபட்டு, போ மறைதது - (சூரியனெனகிற தனனியற) பெயரை மறைதது, எழுந்த இரவியும் - உதயமாகிக்கொண்டிருந்த சூரியனும், வருதல் இனறி-வாராதிருக்க, இரவிகாந்தம்-இச்சூரியகாந்தமானது, அழல்வது என்ன ஆறு எனு - தீயைபபொழிவது என்னகாரணததா லென்று, உரை செயவாள - சொல்லுவாளானுள், எ-று.

(க - து.) தமயந்தியானவள் காமமிகுதியால் சநதிரனைச் சூரிய னென்றும், சந்திரகாந்ததைதச் சூரியகாந்தமெனறும், நீாபொழிதலைத் தீப்பொழிதலென்றுஞ் சொனனுள எனபதாம்.

தனது தாபமிகுதிக்குக் காரணமாதல்பறறிச் சந்திரனைச் சூரிய னென்றும், சந்திரகாநதத்தைச் சூரியகாநதமென்றும், நீாபொழி தலைத தீப்பொழிதலென்றும கூறினுளெனக. முகததைச் சந்திர னென்று மயங்குதலால் மயக்கவணி. பேரொன்கிற சொல்லினுலே சந் திரன் சந்திரகாந்தம இவறறின றன்மையை யொழித்தலாலே வஞ் சக வொழிப்பணி. (கஎ)

[இதமுத லிரண்டு பாட்டுகளால் மன்மதன்
போாசெல்லப்படுகின்றது.]

உருவிலானெதிர்ந்துவெயயகன்னல்விற்குனித்துட
னருணவொண்ணிறத்தசோகவனலவம்பிறைத்தலும்

புரிநரம்பிரங்குசொல்லிபுருவவிற்குனித்துநேர்
வருணவாளிவிடுதல்போன்மழைக்கணம்பிறைக்குமே.

(இ-ள்.) உருவிலான் - மன்மதனானவன், எதிர்ந்து - முன்னுற்று, வெய்ய கன்னல் வில் குனித்து - கொடிய கருப்புவில்லை வளைத்து, உடன் - உடனே, அருண ஒள் நிறத்த - சிவப்பாகிய வொள்ளிய நிறத்தையுடைய, அசோகம் - அசோகமலாகளாகிய, அனல் அம்பு இறைத்தலும் - ஆக்கிநேயாஸ்திரத்தைச் செலுத்திய வளவில், புரி நரம்பு - கட்டையுடைய (வீணையினது) தந்தியானது, இரங்கு - இரங்கப்பெறுகின்ற, சொல்லி - சொல்லையுடையவள், புருவ வில் குனித்து - (தன்) புருவமாகிய வில்லை வளைத்து, நேர - (அவ்வாக்கிநேயாஸ்திரத்துக்கு) எதிராக, வருண வாளி விடுதல் போல் - வருணாஸ்திரத்தைச் செலுத்துதல்போல, மழை கண் - குளிர்ச்சிபொருந்திய கண்களால், அம்பு இறைக்கும் - நீரைப் பொழிவாளானாள், எ-று.

(க - து.) மன்மத னக்கினியாஸ்திரந் தொடுத்தவளவில், தமயந்தி புருவமாகிய வில்லைவளைத்துக் கண்ணீராகிய வருணாஸ்திரந் தொடுத்தாள் என்பதாம்.

ஆக்கிநேயாஸ்திரம் அக்கினியைத் தெய்வமாகக்கொண்டது. வருணாஸ்திரம் வாயுவாஸ்திரம் எனபவற்றுக்கும் அப்படியே பொருள் கொள்க. அனலையவிப்பது நீராதலாலே ஆக்கிநேயாஸ்திரத்துக்கு எதிர வருணாஸ்திரஞ் சொல்லப்பட்டது. அசோகமலராகிய ஆக்கிநேயாஸ்திரந் தாங்கப்பெறாது தமயந்தி கண்ணீர பொழிதலை அதற்கு எதிர வருணாஸ்திரஞ் செலுத்துதலாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. இதன் முதனூலிலே சந்திரன் ஆக்கிநேயாஸ்திரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இதிலே நிலாததோற்றம் பின சொல்லப்படுதலால் அது பொருந்தாதாயிற்று. (கஅ)

தூயதிங்கள்வெண்குடைக்கருப்புவில்லிதொடுமலர்ச்
சேயதேறல்வருணவாளிமுனிவினிறசெலுத்தலும்
வேயைவென்றதோளினாள்வெதும்பியுள்ளம்விம்முறு
வாயுவாளிபோலநெட்டுயிர்ப்பெறிந்துவாடுமே.

(இ - ள்.) தூய திங்கள் வெண் குடை - பரிசுத்தமாகிய சந்திரனாகிய வெள்ளைக்குடையையும், கருப்பு வில்லி - கருப்பு வில்லையுமுடைய மன்மதனால், தொடு - எய்யப்பட்ட, மலர - மலர்களது, சேய தேறல் வருண வாளி - செந்தேனாகிய வருணாஸ்திரத்தை, முனிவினில் செலுத்தலும் - கோபததாற் செலுத்தியவளவில், வேயை வென்ற தோளினாள் - மூங்கிலை ஜயித்த தோள்களையுடையவள், வெதும்பி - வெம்பி, உள்ளம் - உள்ளததில், விம்முறு - வருந்தி, வாயு வாளி போல் - வாயுவாஸ்திரத்தை (ச்செலுததுதல்) போல, நெடு உயிர்ப்பு எறிந்து - பெருமூச்சு விட்டு, வாடும் - சோர்வாளானாள், எ-று.

(க - து.) மன்மதனானவன் மலர்த்தேனாகிய வருணாஸ்திரந் தொடுத்தபோது தமயந்தியானவள் பெருமூச்சாகிய வாயுவாஸ்திரந் தொடுத்தாள் என்பதாம்.

மழையைத் துரப்பது காற்றுதலால் வருணாஸ்திரத்துக்கு வாயு வாஸ்திரம் பகையாத லறிக. பூநதேனுகிய வருணாஸ்திரம் பொறுமல் தமயந்தி பெருமூச்சுவிடுதலே அதறகு எதி வாயுவாஸ்திரஞ் செலுத் துதலாகக் குறித்தலாலே தற்குறிப்பணி. (கக)

[இதமுத லிரணடுபோட்டுகளாலே தமயந்தி காமநோயின் கொடுமையை மகளிர்கருக் கூறுமாறு சொல்லப்படுகின்றது.]

கூறுமங்கையீருளங்கொதித்துவெம்புகாமநோய்
தேறுகின்றிலீரிதென்கொறேவியைப்பிரிந்ததா
லாறணிந்தும்விரகவெம்மையழலவெடித்ததன்றுகொ
னீறணிந்தகடவுளுக்குநெற்றியிற்கணானதே.

(இ-ள்.) கூறு மங்கையீர - (என்னிடத்தே குறைவைச்) சொல் லுகின்ற மாதரே!, உளம் கொதிதது - (என்) உள்ளமானது கொதிப புற்று, வெம்பு காம நோய் தேறுகின்றிலீர் - வெம்புதற்குக் காரண மாகிய காம நோயின் (கொடுமையை) அறிகினறீரில்லை, இது என் - இது என்னபேதைமை, நீறு அணிந்த கடவுளுக்கு - விபூதி யைப் பூசிய பரமசிவனுககு, நெறறியில் - நெற்றியினிடத்து, கண் ஆனது - (நெருப்புக்) கண்ணானது, தேவியை பிரிந்ததால் - (தன்) மனைவியை நீஙகியதால், ஆறு அணிநதும் - கங்கையை (முடியினமே லே) தரிததும், வெடிததது - (அந்நெறறியைப்) பிளநது தோன்றிய தான, விரகம் வெம்மை - காமமாகிய வெப்பததையுடைய, அழல் அன்றுகொல் - நெருப்பனறோ, எ-று.

(க - து.) பெண்களே! காமக்கனற கொடுமையை நீங்க ளறிய வில்லை, சிவன் உமையைப் பிரிந்தகாலத்துக் கங்கையைத்தரித்தும் அக் காமாக்கினி நெற்றிக்கண்ணுக வெடிதத தல்லவோ எனபதாம்.

தேவியையென்னும் ஐயுருபு நீக்கப்பொருளில் வந்தது. தக்கன் கடவுளை யிகழ்ந்து வேள்விசெய்தபோது அவன் மகளென்னு முறை பற்றிவந்த தாக்ஷாயணியெனகிற பேரை யொழிததுப் பார்வதியென் கிற பெயரைக் கொள்ள மலையரசனிடதது வளாந்தபோது அவளைப் பிரிந்திருந்தமை கொள்க. தலைமேற் கங்கையிருக்கவும் காமத்தீ யடங் காமல் உள்ளே பொங்கி யெழுநது நெறறியளவுஞ் சென்று அக்கங் கைத்தடையா லுச்சியைப் பிளநது செல்லமாட்டாமல் நெற்றியைப் பிளந்து வெளிப்பட்ட தென்க. கடவுளுக்கே அப்படி நேரிட்டதாயின் மெல்லிய வொரு சிறு பெண்பாலாகிய எனக்கு எப்படி யிராதென்ற தாயிற்று. கடவுள் காமத்தாற் படும்பாட்டைச் சொல்லித தண்டா பூபிக நியாயத்தினுலே தான் படும்பாடு தோனறச்செய்தலாற் செய் யுட் பொருட்பேறணி. (உ0)

பண்ணமைந்ததீஞ்சொலீர்பழிப்பதென்னைமாநிலத்
துண்ணயந்ததலைவர்வீயினுயிரையன்னமாதரா
ரொன்னுகின்றகாமமென்னுமெரியழற்குவெந்தழ
றண்ணிதென்றுமூழ்கியந்தவெம்மையைத்தணிப்பரால்.

(இ - ள்.) பண் அமைந்த - பாடடிசைபோல் நிறைந்த, தீ சொலீர் - மதுரம்பொருந்திய சொறகளை யுடையவரே!, பழிபபது என்னை - பழிப்பதறகு யாதுகாரணம், மா நிலதது - பெரியபூமியின்கண், உள் நயந்த தலைவா வீயின - உள்ளத்தில் விரும்பப்பட்ட (தங்) கணவரானவா இறந்துபோனால், உயிரை அன்ன மாதரார் - (அக்கணவா) உயிரபோலும் மங்கையரானவா, எண்ணுகினற - சிந்திக்கப்படுகின்ற, காமம் எனனும் எரி அழறகு - காமமாகிய நெருப்புக்கு, வெம் தழல் - வெப்பம் பொருந்திய நெருப்பானது, தணணிது என்று - குளிர்ச்சியுள்ளதா யிருககினற தென்று நினைத்து, மூழ்கி - (இநநெருப்பினுள்ளே)மூழ்கி, அந்த வெம்மையை - அககாமநெருபபின வெபபத்தை, தணிப்பா - நீக்குவாாகள், எ-று. ஆல் - அசை.

(க-து.) மாதாகளே! உலகிற பெணாகள் தங்கள் கணவாக ளிறந்தபோது காமாககினிககுப பயந்தல்லவா தீபபாய்கிறாகள் என்பதாம்.

'உயிரையன்ன மாதா' எனவே கறபுடைமகளி ரென்றதாயிற்று. வெந்தழ றண்ணிதென்று மூழ்கல் - உடன்கட்டை யேறல், அல்லது தீப்பாயதல். கணவருடனிறநதவா வானுலகததிலே பழையபடியே அவருக்கு மனைவியரா யிருந்து காமசுகததை யனுபவிபபரொன்பது அறநூலிற் சொல்லப்படுதலாலே அவவெம்மையைத் தணிப்பரொன்றாள். காமநோய் பொறுமை மகளிாககெல்லாம இயல்பா யிருக்க நீங்கள பேதைமையால் எனனைப பழிக்கினறீ ரொன்றதாயிறறு. அப்படி மரணமடைதற்கு ஏதுவாகாத அததணணிதெனறு முழுகலை யேதுவாகக் குறித்தலால் ஏதுததற்குறிப்பணி. (உக)

என்றுகூறிநுழைநுசுப்பிறுங்கொலென்னவினமணிக
குன்றுபோலெழுந்துவீங்குகொம்மைவெம்முலைததடம
பொன்றயங்குபசலைபோர்ப்பமம்மர்நோய்பொறுக்கலா
மன்றலோதிதுயருழநதுமதிமயஙகுகாலையில.

(இ - ள்.) எனறு கூறி - எனறுசொல்லி, நுழை நுசுபபு இறுங் என்ன - நுண்ணிய இடையானது ஒடியுமென, இனம - இனமாகிய, மணி குனறு போல் எழுநது - மணிகளினை மயமாகிய மலைபோல் உயாந்து, வீஙகு - பருததிருககின்ற, கொம்மை வெம முலை தடம் - இளமைபொருநதிய விருபபததைத தருகினற முலைகளினிடஙகள், பொன் தயஙகு பசலை போாபப - பொனபோல் விளஙகாநினற பசப்புநிறததினால் மூடிககொள்ள, மம்மா நோய் - காமநோயை, பொறுககலா - பொறாமல், மன்றல் ஓதி - வாசனைபொருந்திய கூநதலை யுடையவள், துயா உழநது - துனபததினால் வருந்தி, மதிமயங்கு காலையில் - அறிவு கலஙகப்பெறுகினற காலத்திலே, எ-று.

(க - து.) தமயந்தியானவள் காமவிரகத்தைச் சகியாமல் அறிவு கலங்குங் காலததில் என்பதாம்.

இப்பாட்டும் பின்பாட்டும் குளகம். (உஉ)

நையுநுண்மருங்குல்காமவெம்மைபற்றுநாண்மலர்
கையிலங்குவாண்முகங்கருந்தடங்கண்மெல்லடித

தூய்யபங்கயந்தொடிற்சுடுங்கொலென்னவெண்ணியோ
வெய்யவன்கரஞ்சுருக்கிவேலைபுகவொளித்ததே.

(இ - ள்.) நையும் நுண் மருங்குல் - தேய்கின்ற நுண்ணிய இடையை யுடையவளது, காமம் வெம்மை - காமத்தீயினது வெப்பத்தை, பற்று - கொண்டிருக்கின்ற, கை - கைகளும், இலங்கு வாள் முகம் - விளங்காநின்ற ஒளிபொருந்திய முகமும், கரு தடம் கண் - கரிய விசாலம்பொருந்திய கண்களும், மெல் அடி - மெல்லிய அடிகளுமாகிய, நாள் மலர் - அன்றுபூத்த மலர்களாகிய, தூய பங்கயம் தொடில் - பரிசுத்தம் பொருந்திய தாமரை மலர்களைத் தொட்டால், சுடும் என்ன எண்ணியோ - சுடுமென்று நினைத்தோ, வெய்யவன் - சூரியனானது, கரம் சுருக்கி - (தன்) கிரணமாகிய கைகளைச் சுருக்கிக் கொண்டு, வேலை புக்கு ஒளித்தது - மேற்கடலுள்ளே முழுகி மறைந்தது, எ-று.

(க - து) சூரியனானவன் தமயந்தியினுடைய அவயவத்தாமரைகளைத் தொட்டால் சுடுமென்று நினைத்தோ அஸ்தமனமாயினான் என்பதாம்.

சூரியன் தாமரைக்கு நாயகனாதலால் அவற்றைத் தொடுதல் அவனுக்குரித்தாயிற்று. சூரியன் எல்லாவற்றுக்கும் வெப்பஞ் செய்பவனாயிருந்தும் தமயந்தியின் காமவெப்பத்துக்கு அஞ்சினானெனவே அவ்வெப்பத்தின் கொடுமை சொல்லவேண்டாவாயிற்று. கரஞ்சுருக்குதற்கு ஏதுவாகாத அவ்வெண்ணத்தை யேதுவாகக் குறித்தால் ஏதுத்தற்குறிப்பணி. (உ௩)

கைக்கிளைப்படல முற்றும்

## மாலைப்படலம்.

[இப்படலத்தால் முன்சொல்லப்பட்ட தமயந்தியின் காமநோய் மிகுதற்குக் காரணமாகிய மாலையின் வரவு சொல்லப்படுகின்றது]

கலிநிலைத்துறை

ஒற்றையாழியான்படமெனவுறுபகற்சிறுவன்
கற்றைவார்கதிர்க்கயிற்றினாலவிடுதலுங்கதித்து
முற்றுறுமுலைநெட்டுயிர்ப்பெறிதலான்மொத்துண்
டற்றுவீழ்ந்தபோற்குடதிசைக்கடலுளாழ்ந்ததுவே.

(இ - ள்.) ஒற்றை ஆழியான் - சூரியனானது, படம் என உறு - (தனக்குக்) காற்றாடியாக உறப் பெற்ற, பகல் சிறுவன் - பகலாகிய சிறியோனானவன், கற்றை - திரளாகிய, வார் கதிர் கயிற்றினால் விடுதலும் - நெடிய கிரணமாகிய கயிற்றைக் கொண்டு (அதை யாகாசத்தின் கண்) விட்டவளவில், கதித்து - பருத்து, முற்று உறு முலை -

முற்றாத முலைகளையுடைய தமயந்தியானவள், நெடு உயிர்ப்பு எறிதலான் - பெருமூச்சை விடுதலினால், மோதது உண்டு - தாக்குண்டு, அறறு வீழ்ந்தபோல் - (அக்கயிறு) அற்று வீழ்ந்ததுபோல, குட திசை கடலுள் - மேற்குத் திசையிலுள்ள சமுத்திரத்தினுள், ஆழ்ந்தது - (அது) மூழ்கிறறு, எ-று.

(க - து.) பகல் எனனுஞ் சிறுபிள்ளை சூரியனைக் காற்றுடியாகக் கிரணக்கயிற்றாற் கட்டிவிட்டவளவில் தமயந்தியின் பெருமூச்சால் கயிறற்று அக்காற்றுடி மேறகடலில் வீழ்ந்து மூழ்கிறறு எனபதாம்.

வீழ்ந்தது என்பது வீழ்ந்த எனத் துவ்விகுதி குறைந்துநின்றது. இதனால் மாலைபபொழுது வருதறகுக் காரணமும், அப்பொழுது உள தாகுந் தமயந்தி வருத்தமும் சொல்லப்பட்டன. பிரிந்தோரை மாலை வருத்துமென்பது "காதலரில்வழி மாலைகொலைக்களத், தேதிலாபோல வரும்" என்பதனு லுணர்க. சூரியனிற படமும், பகலிற சிறுவனும், கதிரிற கயிறும ஆரோபித்தலால் உருவகவணி. சூரியன மேறகடலுள் இயல்பாய வீழ்தலைக் கதிர்க்கயிறற்று வீழ்வதாகக் குறித்தமையால் முன்னுருவகத்தை யுறுப்பாகக்கொண்ட பொருட்டற்குறிப்பணி. (௧)

புதைத்தகாரிருட்படமொழித்தித்துணைபபோது
முதித்தகீழ்த்திசைமகட்புணர்ந்தாயெனவூடிக
கொதித்துமேற்றிசையணங்கலத்தகப்பதங்கொடுமே
லுதைத்ததாலெனச்சிவந்ததுவெய்யவனுடலம்.

(இ-ள்.) புதைத்த - மறைத்த, கார இருள் படம் ஒழித்து - கரிய விருளாகிய போர்வையைக்களைந்து, இததுணை போதும் - இவ்வளவுகாலமும், உதித்த - உதயஞ்செய்யப் பெற்ற, கீழ்த்திசை மகள் புணர்ந்தாய் என - (நீ) கிழக்குத்திக்காகிய மாதை கூடிக்கொண்டிருந்தாயென்று, மேல் திசை அணங்கு - மேற்குத்திக்காகிய மாதானவள், ஊடி - பிணங்கி, கொதித்து - வெப்பமுற்று, அலத்தகம பதம் கொடு - செம்பஞ் சூட்டப்பெற்ற அடிகளைக்கொண்டு, மேல் உதைத்தது ஆம் என - வடிவத்தின்மேல் உதைக்கப்பெற்றதுபோல், வெய்யவன் உடலம் சிவந்தது - சூரியனது வடிவஞ் சிவப்பையடைந்தது, எ-று.

(க - து.) மேற்குத்திசைப் பெண் காலுதை பட்டது போலுஞ் சூரியன்மேனி சிவந்தது என்பதாம்.

சூரியனுக்குச் செந்நிறம் இயற்கையாயினும் காலையினு மாலையினு மிகுந்து தோன்றுமெனக. மாலையிற சிவததறகுக் காரணம மேற்றிசைமாதினுடைய அலத்தகப்பதத துதையெனவே காலையிற சிவத்தற்குக் கீழ்த்திசைமா துதையாமெனக் கொள்க. தலைவனோ டூடுதற்குப் பலகாரணங்க ளுளவேனும் பிறமாதரை நயந்தானெனப் பிணங்குவதே மகளிர்க்கு இயல்பாமென்பது தோன்ற 'கீழ்த்திசைமகட் புணர்ந்தாயென வூடி' என்றார். தாயைப் புணர்ந்தோ னென்பது தோன்ற 'உதித்த கீழ்த்திசைமகட் புணர்ந்தாய்' என்றார். அவளைக்

கண்டுழி ஊடுதல்மாத்திரத்தி னடங்காது அழற்சினமு மிகுமாதலால் ஊடியென்றெழியாது 'கொதித்து' என்றார். திசைகளை மாதராகச் சொல்லியது உருவகம். சூரியன அபபோ தடைந்த சிவப்பை அவ் வுதையின் சிவபபாகக் குறித்தலால் பொருட்டற்குறிப்படணி. (உ)

சகரர்தொட்டவெண்டிரையெறிதடங்கடற்புகுதும்
புகரில்வெங்கதிர்க்கடவுண்முனைபோக்கியகதிர்க
ணிகரினித்திலங்குளிப்பவனீர்நிலையறிவா
னகல்நெடுங்கடல்விடுத்தபொற்கழையெனலாமால

(இ-ள்.) சகரர் தொட்ட - சகரரென்னப்பட்ட வரசர்களாலே தோண்டப்பட்டிருக்கிற, வெள் திரை எறி - வெள்ளிய அலைகளை வீசுகின்ற, தடம் கடல் புகுதும் - விசாலம்பொருந்திய கடலினகண் புகுகின்ற, புகர் இல் - குற்றமில்லாத, வெம் கதிர் கடவுள் - சூரிய தேவனாலே, முன் போக்கிய கதிர்கள் - முன்னே செலுத்தப்பட்ட கிரணங்களானவை, நிகர் இல் நித்திலம் - ஒப்பில்லாத முத்துக்க ளைக் (குறித்து), குளிப்பவன் - (அக்கடலிலே) மூழ்குவோன், நீர் நிலை அறிவான் - நீராழத்தை யறியும்பொருட்டு, அகல் நெடு கடல் விடுத்த - விரிந்த நெடிய கடலிலே விடப்பட்ட, பொன் கழை எனலாம் - பொன்மூங்கில்களென்று சொல்லலாம், எ-று.

(க-து.) கடலிற் சூரியனாற் செலுத்தப்பட்ட கிரணங்களானவை அக்கடலின் முத்தெடுக்க மூழ்குவோர் ஆழம்பார்க்க விடுத்த மூங்கில் களபோன் றிருந்தன எனபதாம்.

சகரவரசனும் வேள்வியின்பொருட்டு விடப்பட்ட குதிரையை இந்திரனபறறிப பாதாளலோகத்திற் றவஞ்செய்திருந்த கபிலமுனி வன் புறத்துக் கட்டிவைக்க, அதைத் தேடும்பொருட்டு அவனுடைய புதல்வராகிய சகரர் அறுபதினாயிரவராலுந் தோண்டப்பட்ட படி யால் சகரர்தொட்ட கடலென்றார். கடலைச் சாகரமெனபதும் இதனா லென வறிக. இரவியின்முன் செல்லுகின்ற கதிர்களில் நீராழம் பார்க்கும் மூங்கிலை ஆரோபித்தலால் உருவகவணி. (ங)

மையுண்கண்ணியைமதிவரின்வருத்துமென்றிரங்கி
யையபோகலென்றும்பலவாய்மலர்ந்தனவாவி
வெய்யவன்செழுங்கரங்களைவிழைவொடுந்தமது
கையினாலுறப்பிடித்தெனகுவிந்தனகமலம்.

(இ-ள்.) மை உண் கண்ணியை - அஞ்சனத்தைக்கொண்ட கண் களை யுடையவளாகிய தமயந்தியை, மதி வரில் - சந்திரனானவன் வந்தால், வருத்தும் என்று இரங்கி - வருத்துவானென்று மனமிரங்கி, ஐய போகல் என்று - சாமி (இவளைக் கைவிட்டுப்) போகாதேயென்று (சொல்வனபோல்), வாவி - குளங்களிலே, ஆம்பல் வாய் மலர்ந்தன - அல்லி முகைகள் முகமலர்ந்தன, வெய்யவன் - சூரியனது, செழு கரங் களை - செழிய (கிரணங்களாகிய) கைகளை, விழைவொடும் - ஆசை யோடும், தமது கையினால் - தம்முடைய கைகளால், உற பிடித்த என -

பொருந்தப் பிடித்தனபோல, கமலம் குவிந்தன - தாமரைமலர்கள் கூம்பின, எ-று.

(க - து.) சந்திரன்வரின் தமயந்தியை வருத்துவானென்று சொன்னதுபோல ஆம்பல்க ளலர்ந்தன, சூரியனைப் போகாதேயென்று கையாற பிடித்தல்போலுங் கமலங்கள் குவிந்தன என்பதாம்.

வாவியில் ஆம்பல் வாய்மலர்ந்தன தாமரை குவிந்தனவெனக் கூட்டுக.

சூரியனது இருததல் தனனுயகன் வரவிற்குத் தடையாயினும். தமயந்தியின வருததத்திற கிரஙகி யிருக்க வேண்டிகவொண்டா னென் பது தோன்ற 'ஆம்பல் வாய மலாநதன' என்றும், தனனுயக னென் னுஞ் சுதநதரம்பற்றிக் கையினற பிடித்துத் தடுத்தானென்பது தோனற 'கமலம பிடிததன' எனறும் சொல்லினா. மாலைபபொழு தில் அல்லி தாமரைகடகு இயல்பாகிய மலாதலையுங் குவிதலையும் சொல்லுதலும் பிடிததலுமாகக் குறித்தமையால் பொருட்டறகுறிப் பணி. (ச)

பொருவிலாழியொன்றுருட்டியெப்புவனமும்விளககு
மிரவிமன்னவனிறத்தலுமெதிர்ந்தபுன்மாலை
பரவைமாநிலமுழுவதும்பரிப்பவனிறப்ப
விரவுவெங்தொழிற்குறுநிலவேந்துபோன்றுளதே.

(இ-ள்.) பொருவில் ஆழி ஒனறு உருட்டி - ஒப்பில்லாத ஒருசக் கரததைச செலுததி, எ புவனமும் விளக்கும் - எல்லா வுலகஙகளை யும் ஒளிவிககினற, இரவி மனனவன இறததலும் - சூரியனுகிய அரசன இறந்தவளவில, [அஸதமிததவுடனே], எதிாந்த - தோன் றிய, புல் மாலை - புலலிய மாலைக்காலமானது, பரவை மா நிலம் முழுவதும் - கடல் சூழ்ந்த பெரியவுலக முழுதையும், பரிப்பவன் இறப்ப - காபபாற்றுகினற அரசன இறநதுபோக, விரவு - (அததரு ணத்திலே) வியாபிககினற, வெம் தொழில் - கொடிய செயகையை யுடைய, குறு நில வேந்து போன்று உளது - சிறியநிலததை யாளு மரசனபோ லிருந்தது, எ-று.

(க - து.) சூரியன சென்றவளவிலே மாலைக்காலம் வந்து சமப விததது தனிசசெஙகோல்வேநத னிறந்தபின்பு குறுநில வேர்தன் பெருநிலமாள வந்தது போலும் என்பதாம்.

"இறப்பேசா மிகுதிபோக்காம்" என்றதனுல் ஈண்டு சூரியன் இறத்தல் போதலும், அரசனிறததல் சாதலுமாகப பொருள்கொள்க. உலக முழுவதும் புரத்தல்செயத அரசன் நீங்கிய வளவிற் றேன்றி ஏழைகளை வருததுதலால் 'வெங்தொழிற குறுநில வேந்து' என்றும் சூரிய னீங்கிச் சந்திரன் றேன்றுதற கிடையே தோன்றிச் சிறிது பொழுதுகின றழிவதாதலிற் 'புனமாலை' என்றும் சொல்லினர். மா லைக்குக் குறுநிலமன்னரை ஒப்புமை சொல்லலால் உவமையணி. (ரு)

காலமென்னுமோர்வணிகன்மேலகன்றவான்கல்லின்
ஞாலநீளிருள்சிப்பவனலங்கொள்பொன்னுக

வேலுமாறுரைத்தெனவொளிசெக்கர்வானிருண்ட
நீலவார்குழலுயிர்சுடவெழுந்தசெந்நெருப்பே.

(இ-ள்.) காலம் எனனும் ஓர் வணிகன்-காலமாகிய வொருவைசிய னுனவன், மேல் அகன்ற - மேலாகப்பரந்த, வான கல்லின் - ஆகாச மாகிய (உரை) கல்லிலே, ஞாலம் நீள இருள் - பூமியினிடத்து மிக்க விருளை, சீப்பவன் - கெடுப்பவனுகிய சூரியனை, நலம் கொள பொன் ஆக - நற்குணத்தைக்கொண்ட கனகமாக, ஏலும் ஆறு - பொருந்து மாறு, உரைத்தது என - உரைத்ததுபோல, ஒளிர் வான் செக்கர் - விளங்குகின்ற செவ்வானமானது, இருண்ட நீலம் - இருளுற்ற நீல நிறமபொருந்திய, வார் குழல் - நெடிய கூந்தலையுடைய தமயந்தியி னது, உயிர் சுட - ஆவியைச் சுடுதற்பொருட்டு, எழுந்த - தோன்றிய, செம் நெருப்பு - செந்தீயே (ஆம்), எ-று.

(க - து.) செவ்வானந் தோன்றியது தமயந்தியுயிரைச் சுடவெ ழுந்த செந்தீக்கொப்பா யிருந்தது எனபதாம.

காலத்தில் வணிகனையும், ஆகாயத்தில் உரைகல்லையும், சூரிய னிற் பொன்னையும் ஆரோபித்தலால் உருவகவணி. செவ்வானத் திற் பொன்னுரைத்தாலென்னுந் தற்குறிப்பணி மேறசொல்லிய உருவகவணியை உறுப்பாகக் கொளளுதலால் உறுப்புறுப்பிக் கல வையணி. செவ்வானத்திற் செந்தீக் குறிக்கப்பட்டமையால் பொருட் டறகுறிப்பணி. இதனுள் இரணடணிகள் சேர்ந்து வருதலாற சேர வையணி. (சு)

செய்யவெங்கதிரிறத்தலுமவனுழைச்சிறந்த
மொய்கொள்பேரொளிவனிதைக்குமூட்டுசெந்தழலின்
வெய்யநீரதாய்ப்பரந்தெழுசெக்கர்வான்மெலிந்த
வையநுண்ணிடையணங்கினுக்கென்கொலாயமையும.

(இ - ள.) செய்ய வெம் கதிர் இறத்தலும் - செந்நிறம்பொருந் திய சூரியனுனவன் அஸதமித்த வளவில், அவனுழை - அவனிடத்தே, சிறந்த - சிறப்புற்றிருந்த, மொய கொள - மொயத்தல்கொண்ட, பேர் ஒளி வனிதைக்கு - பெரிய சாயாதேவிக்கு, மூட்டு - மூட்டப்பட்ட, செம் தழலின் - சிவந்தநெருப்புப்போல், வெய்ய நீரது ஆய - கொடிய குணத்ததாய், பரந்து - விரிந்து, ஒளிர் - விளங்கா நின்ற, செக்கர் வான்- செவ்வானமானது, மெலிந்த - காமநோயா லிளைத்த, ஐயம நுண் இடை அணங்கினுக்கு - உண்டோ வில்லையோ என்று சந்தேகித்தற்கிட மாகிய நுண்ணிய விடையையுடைய தமயந்திக்கு, என்கொல ஆய் அமையும் - எப்படிப்பட்டதாயிருக்கும், எ-று.

(க - து.) சூரியனிறந்தவுட னவன் மனைவி சாயாதேவிக்கு மூட்டு நெருப்பைப்போ லிருக்குஞ் செவ்வானமானது தமயந்திக் கெவ்வாறு யிருக்கு மென்பதாம.

இருவகைப் புணர்ச்சியுள் உள்ளப்புணர்ச்சியின் வழித்தாகிய மெய்யுறுபுணர்ச்சி யுற்றோர்க்கு விருப்பின் திண்மை சிறிதொழிந்து

திற்குமாயினும், தலைவனீங்கியவளவி லியாகளும் பொறுது சககமனஞ் செய்வளொன்பது தோன்ற 'ஒளிவனிதைகரு மூட்டு செந்தழலின்' என் ரூர். "மருவுகாதலராருயி மாய்ந்திடி, லெரியின் மூழ்கியிறந்து படுவ தறீ, கருநெறிததலை வைக்குமடிக்கடி, புரவிநன்மகப்பேறு பொருந்து வார்." செக்காவானததை ஒளிவனிதைககு மூட்டுசெந்தழலாகக் குறித்தமையால் தறகுறிபபணி. (எ)

தணைத்தலெண்ணிமெயதளர்வுறுநேமியம்பறவை
புணர்த்தவஞ்சிறைப்புல்லுவிட்டொழியநெட்டுயிர்ப்பாற்
றுணர்த்தமெளவலவண்டூதநீள்கங்குன்முன்றோன்றிற்
பணைத்தவெம்முலைப்பாசிழையலகுலென்படுமே.

(இ - ள்.) தணத்தல் எண்ணி - பிரிவை நினைத்து, மெய் தளாவு உறு - உடம்பு தளாசசி யடைகின்ற, நேமி பறவை - சக்கரவாகப் பற வைகள், நெடு உயிடபால் - பெருமூச்சோடு, புணாத்த - கலந்த, அம் சிறை - அழகிய சிறகுகளின், புல்லு விட்டு ஒழிய - தழுவுதலை விடுத்து நீங்கவும், வண்டு - வண்டுகளானவை, துணாதத மௌவல் ஊத - கொத்துகளாகப்பூத்த முல்லை மலரிலே ஆரவாரிக்கவும், நீள் கங்குல்முன் - நெடியமாலையானது, தோன்றின் - உதிக்குமாயின், பணைதத வெம் முலை - பருதத விருப்பஞ் செய்கின்ற முலைகளையும், பசு இழை அல்குல - பசிய வாபரணததைககொண்ட அல்குலையுமுடை ய தமயந்தியானவள், என்படும் - என்னபடுவாள, எ-று. அம்-அசை.

(க - து.) சகோரங்கள் புணாச்சிவிட்டு நீங்கவும், வண்டுகள் சத திக்கவும், மாலைக்கால முதிக்குமானல் தமயந்தி எனனபாடுபடாள் என்பதாம்.

ஒழிய ஊத வென்னும் வினையெச்சங்கள் தோன்றியவென்னும் வினைகொண்டு முடிந்தன. புணாந்த புணாத்தவென எதுகைநோக்கி விகாரமாயிற்று. இடைவிடாமற கூடுதலுறற பகுப்பறிவில்லாத சக்கரவாகப் பறவைகள பிரியவும், மன்மதனது அம்பாய்ப் பிரிந்த வர்க்குக் கிடைகாட்டும் முல்லைமலரில் வண்டுகளாகிய வின்னுஞ்போாக் குறியாகிய ஒலியைச் செயயவும், மாலைப்பொழு துண்டாகுமளவில் படுந்துன்பம் அளவிறந்த தாகலின் 'என்படும்' என்றூா. மாலையிற காம நோய் மிகுமென்பது "காலையரும்பிப பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந்நோய" என்பதனுற் காண்க (அ)

அங்கண்வானகமுழுவதுமவிரொளிபரப்பிக்.
கங்குல்வாயடர்தாரகையெழுந்தனகடலுட்
பொங்குவெங்கதிர்மணிவிழுந்தெனத்திசைபுரப்போ
ரெங்குநாடுதற்கெடுத்தவஞ்சுடரொனவியையும்.

(இ-ள்.) கங்குல்வாய் - இரவின்கண், அம் கண் - அழகிய விடத் தையுடைய, வாகனம் முழுவதும் - ஆகாயததி னிடமெங்கும், அவிா ஒளி பரப்பி எழுந்தன - விளங்காநின்ற ஒளியை விரித்துக்கொண்டு தோன்றினவையாகிய, அடா தாரகை - நெருங்கிய உடுக்களானவை,

கடலுள் - சமுத்திரத்தினுள், பொங்கு - விளங்காநின்ற, வெம் கதிர் மணி - சூரியனாகிய மணியானது, விழுந்து என - விழுந்ததென்று, திசை புரப்போா - திக்குப்பாலகா, எங்கும் - எவ்விடங்களிலும், நாடு தறகு - தேடுதறபொருட்டு, எடுத்த - ஏநதிய, அம் சுடா என - அழகிய தீபங்கள்போல், இயையும் - பொருந்தும், எ-று.

(க - து.) நட்சத்திரங்களின் தோற்றங்களானவை சூரியனாகிய மணி கடலில் விழுந்ததென்று திக்குப்பாலக ரம்மணியைத தேட எடுத்த தீபங்களைப் போன்றிருந்தன என்பதாம்.

திக்குப்பாலகரது காப்புப் பெரும்பாலுஞ் சந்திரசூரியாபொருட் டாதலால் அவருக்குத தேடல் சொல்லப்பட்டது. 'கங்குல்வாயடர் தாரகை' எனவால் பகலிற சூரியனொளியால் மழுங்கிநிற்கு மென்க. 'வெங்கதிர மணி' என்பது உருவகவணி. தாரகைகளில் தீபங்களைக் குறித்தலால் தற்குறிப்பணி. (கூ)

கருத்தினூடெழுகாமமென்கொடுங்கனல்கனற்ற
வருத்தியுற்றவராருயிர்க்குளகினையயில்வா
னுருத்துவெங்கதிர்ப்பாகெறிந்துடுப்புகர்முகத்த
விருட்கடாககளிறிருநிலத்திறுத்ததையன்றே.

(இ-ள்.) உடு புகா முகதத - தாரகைகளாகிய புள்ளிகளையுடைய முகத்தினையுடைய, இருள் கடா களிறு - இருளாகிய மதயானை, உருதது - கோபிதது, வெம் கதிா பாகு எறிந்து - சூரியனாகிய பாகனை வீசி, கருததினூடு - நெஞ்சினுள், எழு காமம் என - வளாகின்ற காம மெனகிற, கொடும் கனல் கனற்ற - கொடிய தீயானது சுடாநிற்க, அருத்தி உறறவா - ஆசையைபபொருந்தினவருடைய, ஆா உயிா குள கினை - நிறைந்த உயிராகிய தழையை, அயிலவான் - உண்ண, இரு நிலத்து - பெரிய பூமியினிடத்து, இறுததது - தங்கியது, எ-று. அன்று, ஏ - அசைகள்.

(க - து.) இருளாகிய மதயானையானது சூரியனாகிய பாகனைக் கொன்று காமிகளது உயிராகிய தழைகளை யுண்ணும்பொருட்டுப் பூமி யில் வந்தது என்பதாம்.

'ஆருயிாக்குளகினை யயில்வான்' என்பதினால் இருள் பிரிந்தவர்க்கு மரணவேதனையொதத வேதனையை விளைககுமென்க. குளகு - விலங் குண்ணும் தழை. "இலைநுகாவிலங்கி னுணவுகுளகெனப" உயிரிற் குளகையும், வெங்கதிரிற் பாகனையும், உடுவிற புகரையும், இருளிற் களிறறையும் ஆரோபிததலால் உருவகவணி. (க0)

தோட்டுமென்மலர்ப்பூங்கணைதுரப்பமெல்லளிநாண்
பூட்டுபைங்கழைகுழைத்தெதிர்வேனிலான்புகழைத்
தீட்டுதாரகையெழுத்தொளிசிறந்திடவணிவான்
கூட்டுமையெனச்செறிந்ததுகூரிருட்பிழம்பே.

(இ-ள்.) தோடு மெல் மலா - இதழ்களையுடைய மெல்லிய பூக்க ளாகிய, பூ கணை துரப்ப - அழகிய வம்புகளைச்செலுத்த, மெல் அளி நாண் பூட்டு-மெல்லிய வண்டுகளாகிய நாரியைப் பூட்டிய, பை கழை

குழைத்து - பசிய கருப்புவில்லை வளைத்து, எதிர் வேனிலான் புகழை - எதிர்க்கின்ற மன்மதனது கீர்த்தியை, தீட்டு - எழுதப்பட்ட, தாரகை எழுத்து - உடுக்களாகிய எழுத்துக்களினது, ஒளி சிறந்திட - ஒளி விளங்குதற்கு, அணி வான் - அழகிய வாகாயமானது, கூட்டும் மை என - கூட்டிய மை போல், கூர் இருள் பிழம்பு - மிகுந்த இருளினது திரட்சி, செறிந்தது - நெருங்கியது, எ-று.

(க - து.) இருட்கூட்டமானது மன்மதனது கீர்த்தியை எழுதப் பட்ட நட்சத்திர வெழுத்தொளி சிறப்படைய ஆகாயத்தினுற கூட்டிய மைபோ லிருந்தது என்பதாம்.

வேனிலானை எழுவாயாக்கி அவன தனது புகழைத்தீட்டிய தாரகையாகிய எழுத்தொளி சிறந்திட அணிவதற்குக் கூட்டு மையெனப் பொருள்கொள்ளினு மமையும். தாரகையிலெழுத்தை யாரோபித்தலா லுருவகவணி. இருளில மையைகுறித்தலால் தறகுறிப்பணி. இது முன்னுருவகத்தை யுறுப்பாகக் கொண்டமையால் கலவையணி. (கக)

பட்டகாரிருட்கங்குல்போதரப்பட்டர்திசைக
ளெட்டினுள்ளனபொருள்கவர்ந்தேகிலனென்று
விட்டிலங்கொளிவெய்யவன்றனதுமெல்விரலாற்
சுட்டியெங்கணுங்காட்டல்போற்சுடர்வனசுடர்கள்.

(இ-ள்.) பட்ட - உண்டாகிய, கார் இருள் கங்குல் போதர - கரிய இருளையுடைய இரவானது வர, படர் திசைகள் எட்டின் - பரந்த எட்டுத்திக்குகளிலும், உள்ளன - இருக்கின்றனவாகிய, பொருள் கவர்ந்து - பொருள்களை யபகரித்துக்கொண்டு, ஏகிலன் என்று - (நான்) போகவில்லையென்று, ஒளி விட்டு - காந்தியைவீசி, இலங்கு - விளங்காநின்ற, வெய்யவன் - சூரியனுனவன, தனது மெல் விரலால் - தன்னுடைய மெல்லிய விரலினால், சுட்டி - குறித்து, எங்கணும் - எவ்விடங்களிலும், காட்டல் போல - காட்டுதல்போல, சுடர்கள் சுடர்வன - தீபங்கள் விளங்குவன, எ-று.

(க - து.) சூரியன் எண்டிக்கிலுமுள்ள பொருள்களைக் கவர்ந்தேகிலனென்று இரவினுக்குத தன்விரலாற் சுட்டிக்காட்டல்போல் பிரகாசிக்கின்றன தீபங்கள என்பதாம்

பிறர்பொருளைப் பாதுகாப்போர அவ்விடத்தைவிட்டு நீங்குமிடத்துப் பினகாப்பவர்க்குத தங்காப்பிலுள்ள பொருள்களை யொப்பித்தல் உலகவழக்கமாதலிற் பகலிற்காத்த சூரிய னீங்குமிடத்து இரவிற்காக்குஞ் சந்திரன் வருதற்குப் பொழுது நீட்டித்தலால் அவ்வுடைமையைக் காத்தற்குரிய அவன் மனைவியாகிய இராமடந்தைக்கு ஒப்பிக்குமிடத்துச் சொன்மாத்திரத்தா புலப்படாதென்பது தோன்ற 'வெய்யவன் றனது மெல்விரலாற் சுட்டிக்காட்டல்' என்றார். அம் மாலைக்காலத்திலே உண்டாகிய தீபங்களில் சூரியன் விரலை யாரோபித்தலால் தற்குறிப்பணி. (கஉ)

மாலைப்படலம் முற்றும்.

---

# நிலாத்தோற்றுபடலம்.

[இப்படலத்தால் அம்மாலைக்குப் பின்வரும் நிலவினது தோற்றஞ் சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை.

வெவ்வராவினைவிண்டொடர்மந்தரம்பிணித்துக்
கவ்வைமிக்கெழக்கடவுளர்கடைந்திடுங்காலைப்
பவ்வவெண்டிரையுயிர்த்தசெம்பதுமைவாண்முகம்போற்
றெய்வவொண்கதிர்பரப்பிமீதெழுந்ததுதிங்கள்.

(இ - ள்.) கடவுளா - தேவாகள், வெம் அராவினை - வெவ்விய வாசுகியென்னும் பாம்பை, விண் தொடா - ஆகாயமுகட்டை அளாவிய, மந்தரம் - மந்தரமலையின்கண், பிணித்து - கயிறுகக்கட்டி, கவ்வை - ஒலியானது, மிக்கு எழ - அதிகரிக்க, கடைந்திடும் காலை - மதிக்குங் காலத்தில், வெள் திரை பவ்வம் - வெள்ளிய அலைகளையுடைய பாற்கடலானது, உயிாத்த - ஈன்ற, செம் பதுமை - சிவந்த நிறத்தையுடைய இலச்சுமியினது, வாள் முகம் போல் - காந்திபொருந்திய முகததைப்போல், தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, ஒள் கதிா பரப்பி - ஒளிபொருந்திய கிரணங்களை விரித்து, திங்கள் - நிலவானது, மீது எழுந்தது - ஆகாயத்தின்கண் உதித்தது, எ-று.

(க - து.) திருப்பாற்கடல் கடையும்போ ததிறபிறந்த திருமகள திருமுகத்தைப்போலுஞ் சந்திர னுதயமாயிற்று என்பதாம்.

கடவுளரு முடிவுகால மடைந்ததென்று நடுநடுங்கக் கொடிய கடுவைத தநததென்பாா வெவ்வராவென்றும், பெரியமலையென்பாா விண்டொடா மந்தரமென்றும், மறறையராற கடைதற கரிதென்பாா கடவுளா கடைந்திடுமென்றும், ஒருவா கருப்பத்திற் றோன்றினளல்லளென்பாா பௌவவெண்டிரை யுயிாத்தவென்றும், மாதா முகத்துக்கு உபமானமாகு மதி யிவள்முகத்துக் குவமேயமாகுமென்பாா பதுமை வாண்முகம் போலவென்றும், நெடுந்தூரத்தற்று மிருளையோட்டு மெனபாா தெய்வவொண்கதிா பரப்பியெனறும், இவ்விடத்தி லுதித்ததென்பாா மீதெழுந்ததென்றும் சொல்லினாா. திருவின்முகத்தை உபமானமாகவும் சந்திரனை உபமேயமாகவும் சொல்லுதலால் உவமையணி (க)

செறிந்தவாழ்கடற்செல்வனுமவனுழைச்சிறந்தாங்
குறைந்தவாருயிர்த்துணைவியர்பலருமுள்ளுவந்து
நிறைந்ததெண்டிரைநீர்குடைந்தாடலினிகலி
யெறிந்தமென்மலர்ப்பங்கெனவெழுந்ததுதிங்கள்.

(இ - ள்.) செறிந்த - மிகுந்த, ஆழ் கடல் செல்வனும் - ஆழ்ந்த சமுத்திரராஜனும், அவனுழை - அவனிடத்து, சிறந்து - சிறப்பையடைந்து, ஆங்கு உறைந்த - அச் சமுத்திரத்தின்கண் தங்கிய, ஆர் உயிர் - நிறைந்த உயிரபோன்ற, துணைவியா பலரும் - மனைவிய ரனைவரும், உள் உவந்து - மனமகிழ்ந்து, நிறைந்த - நிறைவையடைந்த,

தெள் திரை நீர - தெளிந்த அலைகளையுடைய நீரில், குடைந்து - குளித்து, ஆடலின் இகலி - விளையாடற்கண் பகைத்து, எறிந்த - வீசிய, மெல் மலர் பந்து என - மெல்லிய பூச்செண்டுபோல, திங்கள் எழுந்தது - நிலவானது தோன்றிற்று, எ - று. இகலியென்பதை வலிந்தெனினு மொக்கும்.

(க - து.) சமுத்திரராஜனு மவன் மனைவியரும் நீராடும்போது அவர்கள் பகைத்தெறிந்த பந்தைப்போலு மெழுந்தது சந்திரன் எனபதாம்.

கடல்வேந்த னென்றமையால் அவனுயிரத்துணைவியா நதிமாதரெனக் கொள்க. உதயமாகிய சந்திரனிடத்து மலர்ப்பந்தைக் குறித்தமையால் தற்குறிப்பணி. (உ)

கதிர்செய்நித்திலங்கறங்குதெண்டிரைக்கரத்தெறியு
முதிர்பனிக்கடன்முகட்டினின்முளைத்தொளிர்திங்கள்
விதியின்மாலையாந்துணைவியைவீங்கிருட்டலைவன்
வதுவையாற்றுவான்வைத்தபொற்குடமெனவயங்கும்.

(இ - ள்.) கதிர் செய் நித்திலம் - கிரணத்தைச் செய்கின்ற முத்துகளை, கறங்கு - ஒலிக்கின்ற, தெள் திரை கரத்து எறியும் - தெளிந்த அலைகளாகிய கைகளால் வீசுகின்ற, முதிர் பனி கடல் - முதிர்ந்த குளிர்ச்சியையுடைய கடலினது, முகட்டினில் முளைத்து - உச்சியில் தோன்றி, ஒளிர் திங்கள் - விளங்காநின்ற நிலவானது, விதியின் - விதியினால், மாலை ஆம் துணைவியை - மாலைக்காலமாகிய மனைவியை, வீங்கு இருள் தலைவன் - மிகுந்த இருளாகிய நாயகன், வதுவை ஆற்றுவான் - மணஞ் செய்யும்பொருட்டு, வைத்த - வைக்கப்பெற்ற, பொன் குடம் என - பொன்னாலாகிய குடத்தைப்போல், வயங்கும் - விளங்கும், எ-று.

(க - து.) சந்திரனுதயமானது இருளாகியநாயகன் மாலைக்காலமாகிய மனைவியைக் கலியாணஞ்செய்யும்பொருட்டு வைத்த பொற்குடம்போலு மிருந்தது என்பதாம.

விவாகத்தில் கரணம் பிழைக்கின் மரணந் தருமென்பது அறநூலிற் சொல்லப்பட்டதாகலின விதியினவைத்த பொற்குட மெனரா. மாலைப்பொழுதிற் றுணைவியையும், இருளிற் றலைவனையும், ஆரோபித்தலால் உருவகவணி. சந்திரனிடத்துப் பொற்குடத்தைக் குறித்தலால் தற்குறிப்பணி. இத்தற்குறிப்பு உருவகத்தை யங்கமாக வுடைமையின் உறுப்புறுப்பிக் கலவையணி. (ந)

தெள்ளுதெண்டிரைக்கருங்கடலெழுந்தவெண்டிங்கள்
புள்ளவாங்கணைமதனைப்பூம்புனலாட்ட
வள்ளிதழ்க்கருங்குவளைபெய்திரவெனுமடந்தை
வெள்ளிவெண்குடமேந்தினளாமெனவிளங்கும்.

(இ - ள்.) தெள்ளு - கொழிக்கின்ற, தெள் திரை - தெளிந்த அலைகளையுடைய, கரு கடல் எழுந்த - கரிய கடற்கண் தோன்றிய,

வெள் திங்கள் - வெள்ளிய சந்திரனுனது, புள் அவாம் - வண்டுகளா லவை விரும்புகின்ற, கணை - மலாககணைகளையுடைய, மதனனை - மன் மதனுக்கு, பூ புனல் ஆட்ட - அழகிய நீரினாலே அபிடேகஞ்செய்ய, இரவு எனும் மடந்தை - இரவாகிய மடந்தையானவள், வள் இதழ் கரு குவளை - கூரிய இதழ் களையுடைய நீலோற்பலமலரை, பெய்து - மேலேசூடடி, வெள்ளி வெள் குடம் - வெள்ளியினாலாகிய வெள்ளிய குடத்தை, ஏந்தினள் ஆம் என - ஏந்தினாளென்று சொல்லும்படியாக, விளங்கும் - (களங்கத்தோடு) விளங்கும், எ-று.

(க - து.) சந்திரனுதயமான திரவென்னும் பெண்ணனவள் மன் மதனுக் கபிஷேகஞ்செயய நீலோறபலஞ் சூட்டி வெள்ளிக்குடத்தை யேந்தினள்போலும் விளங்கும் என்பதாம்.

புள் - வண்டு, "புள்ளுவண்டவிட்டம்புட்போ" என்பதனு லறிக. அவாவும் என்பது அவாமென உகரங் குறைந்தது. இரவு மன்மத னர சுக்குரிய காலமாதலால் பட்டாபிடேகமில்லாமல் அரசுசெய்யக் கூடா மையின், 'புனலாட்ட இரவெனுமடந்தை வெள்ளிவெண்குட மேந்தி னள்' என்றார். மடநதையா அவன் ஏ௫ழிற்குக் காரணமாகையால் இராமடந்தைக் கபிடேகஞ்செய்பு மூயாவு சொல்லப்பட்டது. இர வெனுமடந்தை யென்றது உருவகவணி. களங்கமென்னு முவமேயத் தைவிட்டுக் கருங்குவளையெனு முவமானமாத்திரத்தை கூறுதல் தல் உயாவுநவிறசியணி. சந்திரனிடத்திலே வெள்ளிக்குடத்தைக் குறித்தலால் தற்குறிப்பணி. (ச)

புலவுநாறுவெஞ்சுறவெறி பொருதிரைமுகட்டி
னிலவுகொப்புளித்துயரியநிகரிலவெண்மதிய
மலகிறுரகைமீன்பயிலாரிருட்கடலி
லுலகமாழ்தலுமெழுந்தபுற்புதமெனவொளிரும்.

(இ - ள்) புலவு நாறு - புலானுற்ற நாறுகின்ற, வெம் சுறவு எறி - வெவ்விய சுறாமீன்களை எறியும், பொரு திரை - கரையின் மோதுகின்ற அலைகளையுடைய கடலினது, முகட்டின் - உச்சியில், நிலவு கொப்பு ளித்து - சந்திரிகையை உமிழ்ந்து, உயரிய - எழுந்த, நிகர் இல் வெள் மதியம் - ஒப்பில்லாத வெள்ளிய சந்திரனுனது, அலகு இல் தாரகை மீன - கணக்கில்லாத உடுக்களாகிய மீன்களானவை, பயில் - சஞ்சரிக் கின்ற, ஆர் இருள் கடலில் - நிறைந்த அந்தகாரமாகிய சமுத்திரத்தில், உலகம் ஆழ்தலும் - உலக முழுகிப்போதலும், எழுந்த - அதிலிருந்து மேலெழுந்த, புற்புதம் என - குமிழியைப்போல, ஒளிரும் - விளங் கும், எ-று.

(க - து.) சமுத்திரத்திடத் துதித்த சந்திரனுனது இருட்கடலெ ழுந்த நீர்க்குமிழியை ஒக்கும் என்பதாம்.

வான்மீனில் மீனையும் இருளிற் கடலையும் ஆரோபித்தலால் உரு வகவணி. சந்திரனில் நீர்க்குமிழியைக் குறித்தலால் பொருட்டற் குறிப்பணி. இத்தற்குறிப்பு உருவகத்தை அங்கமாக வுடைமையால் கலவையணி. (ரு)

திரைநெடுங்கடல்வயிறுளைந்தீன்றவெண்டிங்க
ணிரைசெழுங்கதிர்க்கரங்களாலம்பரநீவ
விரவுகின்றபுன்மாலையாந்தெரிவையுள்வெள்கி
யருணவெங்கதிர்ச்சுடரினையொளியறவவித்தாள்.

(இ-ள்.) திரை நெடு கடல் - அலைகளையுடைய நெடிய கடலானது, வயிறு உளைந்து ஈன்ற - வயிறு நொந்து பெற்ற, வெள் திங்கள் - வெள்ளிய சந்திரனவன், நிரை - வரிசையாகிய, செழு கதிர் - செழுமையுள்ள கிரணங்களாகிய, கரங்களால் - கைகளால், அம்பரம் - ஆகாயமென்னுந் தனதாடையை, நீவ - தடவ, விரவுகின்ற - கலக்கின்ற, புல் மாலை ஆம் தெரிவை - புல்லிய மாலைக்காலமாகிய பெண்ணானவள், உள் வெள்கி - உளளத்தில் நாணி, அருணம் - சிவப்பாகிய, வெம் கதிர் சுடரினை - சூரியனாகிய தீபத்தை, ஒளி அற - ஒளி நீங்க, அவித்தாள் - அவித்தனள், எ-று.

(க - து.) சமுத்திர மீன்ற சந்திரனவன் கிரணக்கரங்களால் மாலைக்காலமாகிய பெண்ணின் வஸதிரதைதத்தடவ அப்பெண்வெட்கிச் சூரியனாகிய விளக்கை அவித்தாள் என்பதாம்.

அம்பரமென்பது ஆகாயமும் ஆடையும். "அம்பரங்கடல்விண் சோம்" என்பதனாற் காண்க. தினமுங் கலந்து நீங்குந் தன் புருடனாயினும் நாணிறகெடாது என்றும் ஒருதன்மைத்தாய்ப் பழகுங் குணமுள்ள குலமடந்தைபோல் சந்திரன் கதிர்க்கரங்களால் ஆகாயமாகிய கலையைத் தடவ மாலைமாது நாணந் தலைக்கொண்டு சூரியனாகிய தீபத்தை யவிததா ளென்றார். கதிரிற் கரங்களையும் மாலைப்பொழுதிற் றெரிவையையும் வெங்கதிரிற் சுடரினையு மாரோபித்தலால் உருவகவணி. அம்பரமென்றது முன் சொல்லப்பட்ட உருவகம் ஏதுவாகக்கொண்டு அம்பரமென்னும் அம்பரமெனப் பொருளகொள்ளுதலிற் றொடர்புருவகவணி. (சு)

குறைவில்வெண்மதிதோன்றமென்குமுதநாண்முகையிற்
சிறகர்வண்டுபாண்முரலனும்முயிரினிற்சிறந்த
விறைவன்வார்திரைக்கடன்முகட்டெழுந்தனனென்னு
வறையவந்ததூதர்கள்சொலிற்றோன்றியதன்றே.

(இ - ள்.) குறைவு இல் வெள் மதி - கலைகணிரம்பிய வெள்ளிய சந்திரனவன், தோன்ற - உதயமாக, மெல் குமுதம் - மெல்லிய அல்லிகளுடைய, நாள் முகையில் - புதிய அரும்புகளில், சிறகர் வண்டு - இறகுகளையுடைய வண்டுகள், பாண் முரலல் - இசைகளைச் செய்தல், நும் உயிரினில் - உம்முடைய உயிரைக்காட்டிலும், சிறந்த - சிறந்திருக்கின்ற, இறைவன் - நாயகனனவன், வார் திரை கடல் - நெடிய அலைகளையுடைய கடலினது, முகடு - உச்சியில், எழுந்தனன் என்னு - புறப்பட்டா னென்று, அறைய வந்த தூதர் - சொல்லவந்த தூதர்களுடைய, சொலில் - சொல்லைப்போல், தோன்றியது - தோன்றியது, எ-று.

(க - ரு.) சந்திர னுதயமாக அல்லிமலரில் வண்டுக ளொலிசெய்தல் உங்கள் நாயகன் புறப்பட்டானென்று சொல்லவந்த தூதர் சொல்லைப்போலு மிருந்தது என்பதாம்.

ஒருவரபால் காடோறும் பயன்பெறறு வருபவா தம்மா லடுக்கப்பட்டவ ருயிரிற் சிறந்தபொரு ளடைவது தாம் முன்னாதெரிந்து அதை யவாக்கு விரைந்து சொல்லி யவ்வின்பத்தைத் தாமுமடைவா, அதுபோல் என்றும் அல்லிமலரிற் றேனுண்டு வண்டினம்பாடல் அவற றிற்குத் தலைவன் வரவுகூறுந் தூதாசொல்லிற ரேன்றிய தென்றுா. எந்தத் தூதுகளினும் வண்டு தூதிற்குச் சிறந்ததென்பது வண்டுவிடு தூதிற காண்க. வண்டினிசையிற றூதாகள் சொல்லைக் குறித்தமை யால் தற்குறிப்பணி. (எ)

தெண்பனிக்கடற்றிரையினிதுயிர்த்தவெண்டிங்க
டண்புனற்றடத்தாம்பன்மெல்லிதழ்த்துகிறைவங்
கொண்கரத்தினெகிழ்த்தலுநாணமீதூரக்
கண்புதைத்தெனக்குவிந்தனகடிகமழ்கமலம்.

(இ - ள்.) தெள் பனி திரை கடல் - தெள்ளிய குளிர்ச்சிபொருந்திய அலைகளையுடைய கடலானது, இனிது உயிாத்த - இனிதாக ஈனற, வெள் திங்கள் - வெள்ளிய சநதிரன், தண் புனல் தடத்து - தண்ணிய நீரையுடைய தடாகத்திலுள்ள, ஆம்பல் - அல்லியினுடைய, மெல் இதழ் துகில் - மெல்லிய இதழ்களாகிய ஆடையை, ஒள் கரத்தினால் - ஒள்ளிய (கிரணமாகிய) கையினால், தைவந்து-தடவி, நெகிழ்த்தலும் - அவிழ்ததவளவிலே, கடி கமழ் கமலம் - வாசனை மணக்கின்ற தாமரை, நாணம் மீது ஊர - (அச்செய்கையைக்கண் டுண்டாகிய) நாணம் அதிகரிக்க, கண் புதைததது என - கண்களை மூடிக்கொண்டனபோல், குவிந்தன - முகிழ்த்தன, எ-று.

(க - ரு.) கடலீன்ற சந்திரனவன் கிரணக்கரங்களால் அல்லிகளினிதழாகிய வஸ்திரங்களை யவிழ்த்தவளவில் தாமரைகள் வெட்கிக் கண்களை மூடிக்கொண்டனபோலுங் குவிந்தன என்பதாம்.

புலவா தொன்றுதொட் டோக்கு முறைப்படி சந்திரன் அல்லி மனைவியினது இதழ்த்துகிலை நெகிழ்த்தலு மென்றதற் கேற்பச் சூரியன் மனைவியாகிய தாமரை குவிதலை நாணிக் கண்களை மூடிக்கொண் டனபோல் முகிழ்த்தன வெனக்கொள்க. இதழ்த்துகிலென்றது உருவகவணி. கரத்தினால் என்றவிற் கரமாகிய கரமென்று முன் னுருவக வேதுவாகப் பொருள்கொள்ள வேண்டலில் தொடாபுருவகவணி. கமலம் கண்புதைத்தென வென்றல் தற்குறிப்பணியாம். (அ)

களிசெய்காமநோய்விளைத்திடுமிரவெனுங்கன்னி
நளிகொள்வெண்மதிகலங்கிளர்வாண்முகமதனற்
றெளிநிலாக்கதிர்த்தேறல்கொப்புளித்தலுஞ்சிறந்த
வொளிகொள்வான்மகிழ்பூத்தெனவிளங்கினவுடுக்கள்.

(இ - ள்.) களி செய் - களிப்பினைச் செய்கின்ற, காமம் நோய் விளைத்திடும் - காமமாகிய நோயை உண்டாக்கும், இரவு எனும் கன்

னி - இரவென்னு மங்கையானவள், களி கொள் - குளிர்ச்சியைக் கொண்ட, வெள் மதி - வெள்ளிய சந்திரனாகிய, நலம் கிளா - நன்மை விளங்காநின்ற, வாள் முகம் அதனால் - காந்திபொருந்திய முகத்தைக் கொண்டு, தெளி - தெளிந்த, நிலா கதிா - ஒளிபொருந்திய கிரணமாகிய, தேறல் - மதுவை, கொப்புளித்தலும் - உமிழ்தலும், சிறந்த - சிறக்கப்பெற்ற, ஒளி கொள் - ஒளியைக்கொண்ட, வான - ஆகாயமாகிய, மகிழ் - மகிழமரமானது, பூத்தது என - மலாந்ததுபோல, உடுக்கள் - தாரகைகள், விளங்கின - ஒளி செய்தன, எ-று.

(க - து.) இரவாகிய பெண்ணானவள் சந்திரனாகிய முகத்தைக் கொண்டு கிரணமாகிய தேனைக் கொப்புளிக்கச் சிறப்புற்ற வாகாயமாகிய மகிழமரங்கள் பூத்தனபோலும நட்சத்திரங்களுதயமாயின என்பதாம்.

மாதா சுவைக்க மகிழமர மலாவ தென்பதுபற்றி இரவென்னுங் கன்னி மதிமுகத்தாற் சுவைக்க வான்மகிழ்ற் றாரகைமலா பூத்தன வென்றா. உருவகத்தை அங்கமாகக்கொண்ட பொருட்டற்குறிப்பணி.

நள்ளிருட்குறும்பெறிந்தெழுநளிர்மதிச்செலவன்
விள்ளுமாம்பல்வாய்க்கங்குலாந்தெரிவையைவேட்ப
வள்ளிவான்மகள்சிதறுவெண்பொரியெனவமைந்த
புள்ளிமீனினமகலிருவிசும்பினிற்பொடித்த.

(இ-ள்.) அமைந்த - நிறைந்த, புள்ளி - பொறிகளாய, மீன் இனம் - தாரகைகளுடைய கூட்டங்களானவை, நள் இருள் - மிக்க இருளாகிய, குறும்பு - குறுநிலமன்னனை, எறிந்து - அழித்து, எழு - தோன்றிய, நளிர் மதி - குளிர்ச்சிபொருந்திய சந்திரனாகிய, செல்வன் - அரசிளங் குமரனானவன், விள்ளும் ஆம்பல் - மலாகின்ற செவ்வல்லிப்பூவாகிய, வாய் - வாயையுடைய, கங்குல் ஆம் தெரிவையை - இரவாகிய மங்கையை, வேட்ப - மணஞ்செய்ய, வான் மகள் - ஆகாயமாகிய மாதானவள், அள்ளி சிதறு - (கைகளா)லள்ளி இறைத்த, வெள் பொரி என - வெள்ளிய பொரிகளைப்போல, அகல் இரு விசும்பினில் - அகன்ற பெரிய ஆகாயத்தின்கண், பொடித்த - தோன்றின, எ-று.

(க - து.) சந்திரன் இரவென்னும்பெண்ணை மணஞ்செய்ய வாகாயமென்னும் பெண்ணானவள் அள்ளித்தூவிய பொரிகளைப்போல நட்சத்திரங்களுதயமாயின என்பதாம்.

மணமுதலிய செய்யும்போது பொரியிறைத்தல் விதியென்பது விவாக கற்பத்திற் சொல்லப்பட்டது. இது பொருட்டற்குறிப்பணி. ()

திங்கள்வேந்துவெண்டாரகைத்துணைவியர்செறிய
வங்கண்வானகத்தெழுதலுமாரழுதுருக்கும்
பொங்குவெண்கதிர்வெள்ளியம்பிரம்புயார்போர்த்த
துங்கவல்லிருட்குறுநிலவேந்தினைத்துரந்த.

(இ - ள்.) திங்கள் வேந்து - சந்திரனாகிய அரசனானவன், வெள் தாரகை - வெள்ளிய உடுக்களாகிய, துணைவியர் செறிய - மனைவியா

(தன்னோடு) செருங்கிவா, அம் கண் - அழகிய இடத்தையுடைய, வான கத்து - ஆகாயத்தின்கண், எழுதலும் - தோன்றிய வளவில், ஆா அமுது உகுக்கும் - நிறைந்த அமிர்தத்தைச் சிந்துகின்ற, பொங்கு வெள கதிர் - மிகுந்த வெள்ளிய கிரணங்களாகிய, வெள்ளி பிரம்பு - வெள ளிப் பிரம்புகளானவை, பாா போாத்த - பூமியை மூடிய, துங்கம - உயாவுள்ள, வல இருள் - வலிய இருளாகிய, குறு நில வேந்தினை - குறுநிலமன்னனை. துரந்த - துரத்தின, எ-று. அம் - சாரியை.

(க - து.) சந்திரனாகியவரசன் நட்சத்திரங்களாகிய மனைவிக ளோடு வானத்திலுதித்தவளவில் அவன் கிரணமாகிய பிரம்புகள இருளாகிய குறுநிலவரசனைத் துரத்தின என்பதாம்.

திங்களெழ அவனது கிரணத்தால் இருணீங்கின தெனபாா கதிா வெள்ளிபபிரம்பு இருளைத் துரந்த வென்றா. சந்திரனில் வேந்தனை யும் கிரணத்திற் பிரமபினையும் இருளிற குறுநிலவேந்தனையும ஆரோ பித்தலால் உருவகவணி. (க௪)

தாழும்வண் டிமிர் தண்மலர் ததடஞ் சினைத்தருவி
னீழலெங்கணுந் துயலவருகின்றனநெடுநீ
ராழிவெண் டிரைமுகட்டெழுமவிர்மதிககதிா வாள்
போழும்வல்லிருட்டுணிபலபதைப்பனபோலும்.

(இ - ள்.) வண்டு இமிா - வண்டுகளொலிக்கின்ற, தண் மலா - குளிாசசிபொருந்திய மலாகளையுடைய, தாழுமி - தாழ்நத, தடம் சினை தருவின் - விசாலம்பொருந்திய கிளைகளையுடைய மரததினுடைய, நீழல் - நிழல்களானவை, எங்கணும் - எவ்விடத்தும், துயல்வருகின்றன - அசைகின்றன, நெடு நீா ஆழி - நெடிய நீரையுடைய கடலினது, வெள் திரை முகடு - வெள்ளிய அலைகளினுடைய உசசியில, எழும் - தோன்றும், அவிா மதி - காந்திபொருந்திய சந்திரனனவன், கதிா வாள் - கிரணங்களாகிய வாளினாலே, போழும் - பிளக்கப்பட்ட, வல் இருள் துணி - வலிய இருளினது துண்டங்கள், பல பதைப்பன போலும் - அநேகம் பதைப்பனவற்றை யொக்கும், எ-று.

(க-து) தருக்களினி ழல்களசைவன எவைபோலவெனின் சந்திர கிரணங்களென்னும் வாட்களால் வெட்டுப்பட்ட இருட்டுண்டங்கள் பதைப்பனபோலாம் என்பதாம்.

தாழுஞ் சினையென முடிக்க. நிலவினிற் காற்றினு லலைகின்ற மரத்தினீழல் நிலத்திலசைவதில் வெட்டுப்பட் டுயிரிறக்கும் இருளின பதைப்பைக் குறித்தலால் தற்குறிப்பணி. (க௫)

செருவின்மாண்டவரரம்பையர்ச்சேர்குவரன்றே
பொருவில்வெண்மதிபொழிகதிர்வாளினுற்போழ்ந்த
விருளுமின்னகிற்கொழும்புகையுருவெடுத்தெழில்சே
ரரமடந்தையர்கருங்குழற்கற்றைசென்றடைந்த.

(இ - ள்.) செருவில் மாண்டவா - போரின்கண் இறந்தவர், அரம்பையா சோகுவா அன்றே - அரம்பையரை அடைகுவ ரன்றோ,

பொரு இல் வெள் மதி - ஒப்பில்லாத வெள்ளிய சந்திரனைவன், பொழி கதிா - பொழிகின்ற கிரணமாகிய, வாளினல் - கத்தியினல், போழ்ந்த இருளும் - வெட்டப்பட்ட அந்தகாரமும், இன் அகில் கொழும் புகை - இனிய அகிற்கட்டைகளினது கொழுமிய தூமத்தினது, உருவு எடுத்து - வடிவெடுத்து, எழில் சோ - அழகுபொருந்திய, அர மடந்தையா - தெய்வ மங்கையருடைய, கரு குழல் கற்றை - கரிய மயிர்முடியை, சென்று அடைந்த - போய்ச் சோகதன, எ-று.

(க - து.) போரின்மாண்டவ ரரம்பயரைச் சோகுவர் ஆகையால் சந்திர கிரணவாளால் வெட்டப்பட்ட இருளும் அகிறபுகை வடிவெடுத தரம்பையரின் கூந்தலே யடைந்தன என்பதாம்.

போர்க்களத்திற பகைவரோடெதிாத் திறந்தவாகள் தேவ ருப சரிக்கத் தமக்குரிய வரம்பையரோடுகூடி வீரசுவாக்கத்தில் மகிழ்ந் திருப்பவராகையால், அவ்வாறு மதியோடு எதிாத்திறந்த விருளும் தனக்குரிய வவா குழறகற்றையை யடைந்ததென்க. முறகூறப்பட்ட பொதுப்பொருளாற பிறகூறப்பட்ட சிறப்புப்பொருள் சாதிககப்படு தலால் வேறறுப்பொருள் வைப்பணி. (௪௩)

களிகொள்வண்டினமாம்பல்சேர்ந்திசைபயில்காட்சி
யொளிரும்வெண்மதிதுரத்தலுமுடைந்தகாரிருள்போ
யளியின்மெல்லுருவெடுத்தவனருந்துணைவியர்பா
லெளிமையின்னுரையிரங்கிவீழ்ந்திசைப்பனவியையும்.

(இ - ள்.) களி கொள் வண்டு இனம் - மகிழ்ச்சியைக்கொண்ட வண்டுக்கூட்டங்கள், ஆம்பல் சோந்து - அல்லிமலாகளை யடுத்து, இசை பயில் காட்சி - இராகத்தைப் பாடுகின்ற தோற்றமானது, ஒளிரும் வெள் மதி - விளங்காநின்ற வெள்ளிய சந்திரனைவன, துரததலும் - துரத்தியவளவிலே, உடைந்த காா இருள் - சிதைந்த கரிய இருளானது, போய் - (தன்னுருவு) நீங்கி, அளியின் - வண்டுகளுடைய, மெல் உரு எடுத்து - மெல்லிய வுருவங்கொண்டு, அவன் - அச்சந்திரனுடைய, அரு துணைவியாபால் - அருமையாகிய மனைவியரிடத்து, எளிமை இன் உரை - எளிமையாகிய இனிய சொற்களை, இரங்கி - புலம்பி, வீழ்நது - அடிபணிந்து, இசைப்பன இயையும் - சொல்வனவற்றை யொக்கும் எ-று.

(க - து.) அல்லிமலாகளில் வண்டுகள்சேர்ந் திசைபாடுங் காட்சி யானது சந்திரன் றுரத்தியவளவில் சிதைபட்ட விருட்களானவை வண்டுருக்கொண்டு அச்சந்திரன் மனைவியரிடத் திரங்கிச் சொல்வன போலு மிருந்தது என்பதாம்.

ஒருவரா லிடுக்கணுற்றவர் தங்குறை முடித்தற்கு நினைத்து அவன் நட்பாளர் முதலியோரினும் அவனுயிர்த்துணைவியரை யடுத்து எளிதின் முடிப்பரென்பது தோன்ற 'அவனருந்துணைவியர்பா லெளிமை யின் னுரையிரங்கி வீழ்ந்திசைப்பன வியையும்' என்றார். வண்டினிசையும் இருளின் வேண்டுகோளாகக் குறித்தலால் தற்குறிப்பணி. (௪௪)

முள்ளரைச்செழுமுளரியுமுருகுகொப்புளிக்கு
மள்ளலங்கயத்தாம்பலுமுறவெனவறிந்தேம்
கள்ளுலாமலர்முகிழ்த்தவக்கடிமலர்க்கமலப்
பிள்ளைவண்டினுக்கூறுதேன்பெரிதளித்ததனால்.

(இ - ள்.) கள் உலாம் மலர - தேனொழுகுகின்ற அல்லிப்பூவா னது, முகிழ்த்த - குவிந்த, அ கடி மலா கமலம் - அப்படிப்பட்ட வாச னையுள்ள தாமரைமலரினது, பிள்ளை வண்டினுக்கு - பிள்ளையாகிய வண் டுக்கு, ஊறு தேன் - சுரக்கின்ற தேனை, பெரிது அளித்ததனால் - மிக வுங் கொடுத்ததனால், அள்ளல் - சேற்றையுடைய, அம் கயத்து - அழ கிய தடாகத்திலுள்ள, முள் அரை - முட்களுள்ள தாளையுடைய, செழு முளரியும் - செழிய தாமரைப்பூவும், முருகு கொப்புளிக்கும் - தேனை உமிழ்கின்ற, ஆம்பலும் - அல்லிப்பூவும், உறவு என - தம்மு ளுறவுடையனவென்று, அறிந்தேம் - (நாம்) அறிந்துகொணடோம், எ-று.

(க - து.) அல்லிமலாகளானவை தாமரைகளிலுள்ள வண்டுகளுக் குத் தேன்கொடுத்தமையால் இரண்டுமுறவென் றறிந்தோம் எனப தாம்.

தாமரையின் பிள்ளையாகிய வண்டினுக்கு அல்லி தேனைக்கொடுத் தலால் மலாகின்ற காலவேற்றுமைபற்றிப் புறத்தே பகையுடையன போலத் தோன்றினும் அகத்தே நட்புடையனவென்பாா 'உறவென வறிந்தேம்' என்றாா. முளரியும் ஆம்பலும் உறவெனவறிந்தேமென்றது தற்குறிப்பணி. இவ்வாக்கியப் பொருள் கமலப் பிள்ளை வண்டினுக்கு அல்லி தேனளித்த தென்னும் பின் வாக்கியப்பொருளாற் சாதிக்கப் படுதலாற் செய்யுட்குறிப்பணி. (கரு)

கங்குலெய்தியகாரிருட்கருங்கடறெளியத்
திங்களென்சுடர்த்தேற்றினாற்தேற்றலுஞ்சிறந்து
பொங்குவெண்ணிலாதெளிந்தநன்னீரெனப்பொலிந்த
பங்கமென்னநீடருநிழல்படியினிற்படிந்த.

(இ - ள்.) கங்குல் எய்திய - இரவில் அடைந்த, காா் இருள் கரு கடல் - கரிய இருளாகிய கறுத்த கடலானது, தெளிய - கலக்கந்தீர, திங்கள் என் - சந்திரனென்னும், சுடர் தேற்றினால் - காந்தியையுடைய தேற்றாம்வித்தினாலே, தேற்றலும் - உரைத்துத் தெளிவித்தவளவில், சிறந்து - சிறப்புப்பெறறு, பொங்கு வெள் நிலா - விளங்குகின்ற வெள்ளிய சந்திரிகைகள், தெளிந்த - தெளிவையடைந்த, நல் நீர் என- நல்ல நீரபோல், பொலிந்த - பொலிவையடைந்தன, நீள் தரு நிழல் - நெடிய மரங்களுடைய நிழல்களானவை, படியினில் - பூமியின்மேல் பங்கம் என்ன - சேறுபோல், படிந்த - படிந்தன, எ-று.

(க-து.) இருட்கடலானது தெளியச் சந்திரனென்னும் தேற்றாம் வித்தினாலே உரைத்துத் தெளிவித்தவளவில் அவன் கிரணங்களே நீா போலிருந்தன தருக்களி னிழல்களானவை சேற்றைப்போலிருந்தன என்பதாம்.

இருளில் கடலையும் திங்களில் தேற்றும்வித்தையு மாரோபித்த லால் உருவகவணி. நிலா நன்னீரெனத் தருநிழல் பங்கமென்ன என றலால் உவமையணி. (௧௬)

அகல்விசும்பெனுமாவின்மென்மடியெனத்தோன்றித்
திகழும்வெண்மதியுமிழ்தருசெழுங்கதிர்த்தீம்பால்
முகைநெகிழ்ந்துதேன்பிலிற்றியமுல்லையம்புறவி
னுகள்புனிற்றிளங்கன்றெனச்சகோரநின்றுண்ணும்.

(இ - ள்.) அகல் விசும்பு எனும் - அகன்ற ஆகாய மென்கிற, ஆவின் - பசுவினது, மெல் மடி என - மெல்லிய மடியைப்போல், தோன்றி - உண்டாகி, திகழும் வெள் மதி - விளங்காநின்ற வெள் ளிய சந்திரன், உமிழ்தரு - சொரிகின்ற, செழு கதிர - செழிய நில வாகிய, தீ பால் - மதுரம்பொருந்திய பாலை, முகை நெகிழ்ந்து - அரும்புகளை விரிந்து, தேன் பிலிற்றிய - தேனைத் துளித்த, முல்லை - முல்லைக்கொடியையுடைய, அம் புறவின் - அழகிய முல்லைநிலத்தின் கண், சகோரம் - சகோரப் பறவையானது, உகள் - துள்ளுகின்ற, புனிற்று இள - மிகுந்த இளமையையுடைய, கன்று என - கன்று போல், நின்று - நிலைபெறறு, உண்ணும் - குடிக்கும், எ-று.

(க - து.) ஆகாயமென்னும் பசுவினது மடியாகத்தோன்றுஞ் சந் திரனது கிரணமாகிய பாலை முல்லைநிலத் திளங்கன்றைப்போற சகோ ரங்க ளுண்ணும் எனபதாம்.

ஆகாயத்திற் பசுவினையும் சந்திரனில் மடியையும் நிலவினிற் பா லையு மாரோபித்தலால் உருவகவணி. சகோரங் கன்றென வென்ற லால் உவமையணி. (௧௭)

நன்கமைந்தசாளரத்தூறுநகைநிலாக்கொழுந்தை
யன்பினீடுகூர்வாயினாற்சகோரங்களருந்தன்
மின்செய்வெள்ளிவெண்கம்பியைவிளங்குநூலச்சிற்
பொன்செய்கம்மியர்குறட்டினால்வாங்குதலபோலும்.

(இ - ள்.) நன்கு அமைந்த சாளரத்து - அழகுபொருந்திய பல கணியினுள், உறு - அடைகின்ற, நகை நிலா கொழுந்தை - ஒளிபொ ருந்திய சந்திரனுடைய இளங்கிரணங்களை, அன்பின் - ஆசையோடு, நீடு கூர வாயினால் - நீண்ட கூரிய வாயினால், சகோரங்கள் - சகோ ரப்பறவைகள், அருந்தல் - உண்ணுதல், மின் செய் - காந்தியைச் செய் கின்ற, வெள்ளி வெள் கம்பியை - வெள்ளியினாலாகிய வெள்ளிய கம்பி யை (மாட்டி), விளங்கு நூல் அச்சில் - விளங்காநின்ற கம்பியச்சென் னுங் கருவியில், பொன் செய் கம்மியா - பொன்வேலைசெய்யுங் கம் மாளா, குறட்டினால் - குறட்டினாற்பறறி, வாங்குதல் போலும் - இழுத் தலை யொக்கும், எ-று.

(க - து.) பல்கணியுட் பொருந்துஞ் சந்திரகிரணங்களைச் சகோ ரங்களுண்ணுதல் எதுபோலெனின் பொற்கொல்லர் வெள்ளிக்கம்பி யைக் கம்பியச்சிற்குறட்டால் இழுத்தல்போலும் என்பதாம்.

நூல்போல் வெள்ளிக்கம்பியைச் செய்தலாற் கம்பியச்சை நூலச் சென்றா. சாளரமிடமாகச் சகோரப்புள் சந்திரிகையை யுண்ணல் அக்கம்மாளா கம்பியச்சில் வெள்ளிக்கம்பி யிழுப்பதுபோ லெனலால் உவமையணி. (கஅ)

துலங்குவெண்மதித்தூநிலாக்கதிரினின்றிலங்கு
பொலங்கொண்மாடமேற்புதுநிலாமணிபுனல்பொழித
னலம்பெய்நேமியம்புட்குலம்பிரிவுளநலியப்
புலம்புமாறுகண்டுள்ளநெக்குருகுதலபோலும்.

(இ-ள்) துலங்கு வெள் மதி - விளங்குகின்ற வெள்ளிய சந்திர னது, தூ நிலா கதிரில் - பரிசுத்தமாகிய சந்திரிகையில், நின்று இலங்கு - நிலைபெறறு ஒளிாகின்ற, பொலம் கொள் - அழகினைக்கொண்ட, மாட மேல் - உப்பரிகைமேற் பதித்த, புது நிலா மணி - புதிய சந்திரகாந்தங் கள், புனல பொழிதல் - நீரைச சொரிதலானது, நலம் பெய் - சுகத் தைத்தருகின்ற, நேமி புள் குலம் - சக்கரவாகப பறவைகளின் கூட டத்தினது, பிரிவு - ஆண்பெணகளின பிரிவானது, உளம் நலிய - (அவற்றின்) மனததை வருதத, புலம்பும் ஆறு - (அவை) வருநதுந்தன் மையை, கண்டு - (அச்சந்திரகாநதஙகள) கண்டு, உள்ளம் - (தம) தள் ளம், நெக்கு உருகுதல் போலும் - கனாநதுருகுதல் போலும், எ-று. அம் - அசை.

(க-து.) சந்திரகிரணஙகளால் சநதிரகாந்தம் நீரைபபொழிதலா னது சகோரங்கள் பிரிதலைககண்டுருகுதலபோலுமெனபதாம்.

நிலாமணி புனல் சொரிதலில் உளள நெகக்குருகுதலைக குறிதத லால் தற்குறிபபணி. (கக)

இன்னகாரிருட்கங்குலுக்கெல்லைகாண்கிலளாயக
கன்னலஞ்செழுங்கழனிசூழ்விதர்ப்பநாடளிகரு
மன்னர்மன்னவனருந்தவபபேற்றினல்வந்த
பொன்னவாஞ்சுணங்கணிமுலைப்பூங்கொடிபுலம்பும்.

(இ - ள்.) கன்னல் - கரும்புகளையுடைய, அம் - அழகிய, செழு - செழுமையுள்ள, கழனி சூழ் - வயல்கள சூழ்ந்த, விதாப்ப நாடு - விதாப்ப தேசத்தை, அளிக்கும் - காக்கின்ற, மன்னா மனனவன் - அரசாக்கரசனுகிய வீமனது, அரு தவம் பேறறினல் வநத - அரிய தவப பலத்தினல் தோனறிய, பொன அவாம் - பொன விரும்புகின்ற, சுணங்கு அணி முலை - தேமலணிந்த தனத்தினையுடைய, பூ கொடி - மலாக்கொடி போல்பவளாகிய தமயநதி, இன்ன - இத்தன்மைத்தா கிய, கா இருள் கங்குலுக்கு - கரியவிருளையுடைய இரவிற்கு, எல்லை காண்கிலள் ஆய் - அளவு காணுதவளாகி, புலம்பும்-புலம்புவாள், எ-று.

(க - து.) தமயந்தியானவள் இவ்விராக்காலத்தினளவு காணுதவ ளாயப் புலம்புதலுறுவா ளாயினள் என்பதாம்.

நிலாத்தோற்றுபடல முற்றும்.

## சந்திரோபாலம்பனப் படலம். *

[இப்படலத்தால் மேலுதித்த சந்திரனை விரகநோய்கொண்ட தமயந்தியானவள் நிந்தித்தல் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

விரிதெண் டிரைநீர்க் கருங்கடல்வான் முகட்டிலெ ழுந்த வெண்டிங்காண், மருவு திரைநீர்ச் சுவற்றுசிகை வ டவை யிடத்தோ மைவிளர்ப்பக், கருகும் கொடிய வெவ் விடத்தின் கண்ணோ தணந்தா ருயிர்பருக, வெரிவெங் கதி ரா லுடல்வெதுப்ப யாண்டுக் கற்றா யறியேமால்.

(இ - ள்.) விரி தெள் திரை - விரிந்த தெள்ளிய அலைகளை யுடைய, நீர் கரு கடல் - நீரையுடைய கரியகடலினது, வான் முகட்டில் - உயர்ந்த உச்சியில், எழுந்த - உதயஞ்செய்த, வெள் திங்காள் - வெள்ளிய சந்திரனே, தணந்தார் - பிரிந்தவர்களுடைய, உயிர் பருக - உயிரைக் குடிக்க, எரி வெம் கதிரால் - எரிகின்ற வெவ்விய கிரணத்தி னால், உடல் வெதுப்ப - உடலைச்சுட, மருவு - பொருந்துகின்ற, திரை நீர் - அலையையுடைய நீரினை, சுவற்று - சுவறச் செய்கின்ற, சிகை - கொழுந்தினையுடைய, வடவையிடத்தோ - வடவைத் தீயிடத்தோ, மை விளர்ப்ப - அஞ்சனமும் வெள்ளிதாக, கருகும் - கருகிய, வெம் விடத்தின்கண்ணோ - வெவ்விய விடத்தினிடத்தோ, யாண்டு கற்றாய் - (இவ்விரண்டினுள்) எதனிடத்துக் கற்றுக்கொண்டாய், அறியேம் - (யாம் அதனை) அறிந்திலேம், எ-று.

(க - து.) சந்திரனே வெவ்விய கிரணங்களாலே பிரிந்தவருடலைச் சுட வடவாமுகாக்கினியிடத்துக் கற்றாயோ விஷத்தினிடத்துக்கற்றா யோ எவ்விடத்திற்கற்றாய் என்பதாம்.

ஆல் - அசை. திங்களென்பது உயர்திணைப்பெயராதலில் திங்கா ளென விளித்தற்க ணீற்றயனீண்டது. மைவிளர்ப்பவென்பதில் உயாவு சிறப்பும்மை தொக்கது. கடலினிடத்து வடவைத்தீயும் விடமுந் தோன்றுதல் பற்றி அதிற்றோன்றிய சந்திரனுக்கு அவற்றினிடத்திற் கற்றுக்கொள்ளுதல் சொல்லப்பட்டது. அவனதுகதிர தண்ணியவா யிருந்தும் பிரிந்தவரைச் சுடுதல்பற்றி எரிவெங்கதி ரெனப்பட்டது. அறியேமென்பது தனபோலியோரையுந் தன்னுடன்படுத்துக் கூறிய உளப்பாட்டுத தன்மைப்பன்மைவினைமுற்று. வடவையிடத்தோ விடத் தின்கண்ணோவென்றது ஐயவணி. அறியோமென்றது தற்குறிப்பணி.()

செய்ய கமல மலர்கூம்பச் சேர்ந்த கொடிய வெண் டிங்காள், வெய்ய கதிர்வாள் வீசி யுயிர் வீட்டி யதனாற் புகழ் பெறுக, பொய்யி றவத்தி னிற்பயந்த புணரி வேந்தின்

* தென்றல் செக்கர் முதலியவற்றை வெறுப்பனவாகச் சில செய்யு ளிருப்பினும் சந்திரனை நிந்தித்தல் பெரும்பான்மைபற்றி கமு கந் தோட்டமென்றாற்போல இப்படலத்துக்கு அப்பெயரிடப்பட்டது.

குலம்வாழ்க, மையல் கூரொன் றனைநாளும் வருத்தா தொ
ழியல் வேண்டுமால்.

(இ - ள்.) செய்ய கமலம் மலா கூம்ப - சிவந்த தாமரைப் பூக்க ளானவை குவிய, சோநத - அடைந்த, கொடிய வெள் திங்காள்-கொடு மை பொருந்திய வெள்ளிய சந்திரனே, மையல் கூா - மயக்கமிகுந்த, என்றனை - எனனை, நாளும் - எந்நாளும், வருத்தா து ஒழியல்வேண்டும் - வருத்தஞ்செய்யாமல் தவிரவேண்டும், வெய்ய கதிா வாள் வீசி - வெவ் விய கிரணமாகிய வாளை வீசி, உயிா வீட்டி - என்னுயிரைக்கொன்று, அதனல் - அக்கொலைத்தொழிலினலே, புகழ் பெறுக - கீாத்தியைப் பெறககடவாய், பொய் இல் - பொய்தவிாநத, தவத்தின் - தவத்தினல், நின் பயந்த - உன்னைபபெற்ற, புணரி வேநதின் குலம் - கடலரச னுடைய மரபு, வாழ்க - வாழக்கடவது, எ-று. ஆல் - அசை.

(க - து.) கொடுமையுள்ள சந்திரனே! என்னை வருத்தா தொழி வாயாக; கிரணவாளால் வெட்டிய புகழ்பெறுவாயாக; உன்னைப் பெற்ற வருண ராஜன் குலமும் வாழ்க என்பதாம்.

பலநாளுந் துன்பபபடுதலில் இறத்தல் ஒருநாளைத் துன்பமென் பாள் உயிா வீட்டியதனுற் புகழ்பெறுக வென்றுள. "சாத - லொருநா ளொருபொழுதைத் துனபமவைபோ, லருநவையாற்றுதலின்று" நீ புகழ்பெறுக, நினகுலம் வாழ்க, என்றுளேனும் நீ நிந்தையடைக, நின் குலங் கேடடைக வெனபது கருத்து. வருத்தாது உயிாவீட்டிப் புகழ் பெறுகவெனப் பொருள்படலால் வஞ்சபபுகழ்ச்சியணி. (உ)

விரவு கரிய கூரிருள்வாய் வெயயோ னென்னக் கதிர் பரப்பி, மருவு கொழுநாப பிரிந்தாளை வருத்தா நிற்கு மா மதியே, திரைசெய கடல்பொன் னுருக்கியபோற் செங் கே ழெய்தப புலரியெழு, மிரவி கதிராற் சவிமழுங்கி யிருத்தல் யானே காண்குவனுல.

(இ - ள்.) விரவு - (உலகமெஙகனும்) கலந்த, கரிய கூா இருள் வாய் - கறுத்த மிகக விருளினிடததில, வெய்யோன் எனன - சூரிய னெனறுசொல்ல, கதிா பரபபி - கிரணங்களை விரிதது, மருவு கொழுநா பிரிந்தாளை - (தம்மை) மணந்த தலைவனைபபிரிந்த மாதனை, வருததா நிறகும் மா மதியே - வருததுகினற பெரிய சந்திரனே, திரை செய் கடல் - அலைகளை யுண்டாக்குகின்ற கடலானது, பொன் உருக்கிய போல் - பொன்னை யுருக்கியதுபோல, செம கேழ் எய்த - செந்நிறமடைய, புலரி எழும் இரவி கதிரால் - விடியறகாலத்தில் எழுகின்ற சூரிய கிரணத்தினுல், சவி மழுங்கி - ஒளிகெட்டு, இருத்தல - இருக்கையை, யானே - நானே, காண்குவன் - பாாபபேன், எ-று. ஆல - அசை.

(க - து.) மகிழ்நனைப்பிரிந்த மாதனை வருத்துகின்ற சந்திரனே! நீ சூரியகிரணத்தா லொளிமழுங்கியிருத்தலை யானே காண்பேன் என் பதாம்.

உருக்கியது உருகியவெனக் கடைகுறைந்தது. ஒருவாக்குத் தீங்கிழைப்பவ ரவர் கண்முன்னே கேடுறுவரென்பது கருத்து. வெய் யோனெனன வென்றது உவமையணி. கடல் பொன்னுருக்கியபோ லென்றது தற்குறிப்பணி. (௩)

கன்று குணிலாக் கனியுகுத்தோன் கடலி னமுதங்
கடைந்தெடுப்பக், குன்ற மிடலுங் கலையனைத்துந் தகர்ந்
துள் ளாவி குறைந்திலையே, துன்று கதிர்வெண் கலைமதி
யே சுலவு திரைநீர்க் கடல்குடித்த, வன்று கலச முனிவ
யிற்றி லற்று யென்னி லழலாயே.

(இ-ள்.) துன்று கதிர் வெள் கலை மதியே - நெருங்கிய கிரணங் களையுடைய வெள்ளிய கலைகளையுடைய சந்திரனே, கன்று குணில் ஆ- பசுவின்கன்றை குறுந்தடியாகக்கொண்டு, கனி உகுத்தோன் - விளங் கனியை உதிர்த்த நாரணனானவன், கடலின் - பாற்கடலிலே, கடைந் து - மதித்து, அமுதம் எடுப்ப - அமிர்தத்தை எடுத்தலவேண்டி, குன் றம் இடலும் - மந்தரமலையை நாட்டியவளவில், கலை அனைத்தும் தகர்ந் து - பதினாறுகலைகளும் உடைந்து, உள் ஆவி - உள்ளேயிருக்கின்ற உயிர், குறைந்திலை - நீ குறைந்தாயில்லை, கடல - கடலினுடைய, சுலவு திரை நீர் - சுழல்கின்ற அலைகளையுடைய நீர்முழுவதையும், குடித்த - பானம்பண்ணின, அன்று - அந்நாளில், கலச முனி வயிற்றில் - அகத் தியமுனிவனுடைய வயிற்றினிடத்தில், அற்றாய் என்னில் - நீ சீர ணித்தாயானால், அழலாய - (இன்று) சுடமாட்டாய், எ-று.

(க-து.) வெள்ளிய சந்திரனே! திருமாலானவர் திருப்பாற்கடலி லமுதங் கடைந்தெடுக்க மந்தரமலையை யிட்டவளவில் கலைகள் கெட் டாவி குறைந்திலை, அந்நாளில் கடலைக்குடித்த அகத்தியர்வயிற்றிற் சீரணித்தாயென்னில் என்னைச்சுடாய் எனபதாம்.

கண்ணன் கன்றுமேய்த்துக்கொண் டிருந்தபோ தவனை வஞ்சித் துக் கொல்லும்படி கன்றி னுருக்கொண்டிருந்த தேனுகாசுர னென்பவ னைக் குறுந்தடியாகக்கொண்டு விளவினுருவாயிருந்த வசுரனை விளங் கனி யெறிதல்போல வடித்த தவ்விருவரையுங் கொன்றானெனப் பாக வதத்திற் சொல்லப்பட்டது. உருமாறிவந்த பகைவரையுங் கொன்ற சூழ்ச்சியுடைய நாரணன் கடலின்கண் மந்தரமலையிட்டுக் கடைந்தும் தனது உதராக்கினியில் வாதாவியைச் சீரணிக்கச்செய்த அகத்திய முனி கடனீரோடுண்டும் நீ நசியாமலிருப்பது எனது தவக்குறையென் பது கருத்தாகக் கொள்க. (௪)

மட்டு விரியு மலர்வாளி வருந்துந் தமியே னுயிர்சோ
ரப், பட்ட புழையி லழலுமிழுங் கதிர்கள் சுருக்கிப் பார்
வேந்தி, னெட்டு வரையு மிகழ்ந்துபொலங் கிரியோ டிகலு
மிருதடந்தோ, டொட்ட கதிர்மென் கரத்தாலென் னுட
லந் தொடுவாய் சுடர்த்திங்காள்.

(இ-ள்.) சுடர் திங்காள் - ஒளியையுடைய சந்திரனே, (நீ) வருந்தும - (விரகத்தினால்) வருந்துகின்ற, தமியேன் உயிர் சோர - தனியேனாகிய வென்னுடைய ஆவிசோர, மட்டு விரியும் மலர் வாளி - தேனொழுகுகின்ற மலரம்புகள், பட்ட புழையில் - தைத்த துவாரத்தில், அழல் உமிழும் - அக்கினியை யுமிழ்கின்ற, கதிர்கள் சுருக்கி - கிரணங்களை யடக்கிக்கொண்டு, பார் வேந்தன் - புவிக்கரசனாகிய நளமகாராசனுடைய, எட்டு வரையும் இகழ்ந்து - அட்டகுலகிரிகளையும் இகழ்ச்சிசெய்து, பொலம் கிரியோடு இகலும் - மேருமலையுடனே பகைக்கின்ற, இரு தட தோள் - இரண்டாகிய பெரிய புயங்களை, தொட்ட - தீண்டிய, கதிர் மெல் கரத்தால் - கிரணங்களாகிய மெல்லிய கைகளால், என் உடலம் - என்னுடைய தேகமுழுவதையும், தொடுவாய் - தீண்டுவாயாக, எ - று.

(க-து.) சந்திரனே! நளனைத்தொட்டகரத்தாலென்னைத் தொடுவாயென்றாள், எ-ம.

மேருமலை எல்லா மலைகளினும் பெரிதாயும் அட்டகுலவரைகள் அதனிற் சிறியவாயும் இருத்தலால் நளன் புயங்கள் இகலுமென்றும் இகழ்ந்தென்றுஞ் சொல்லப்பட்டன. அழலுமிழு கின்கதிர்கள் நளன் றோட் பரிசத்தால் தண்ணியவாகுமெனப்பாள "தொட்ட கதிர்மென் கரத்தாலென்னுடலந் தொடுவாய்"என்றாள். கதிர்மென்கரமென்றது உருவகவணி, இருதடந்தோள் தொட்டமென்கரத்தால் என்னுடலம் தொடுவாயெனபது அச்செய்கையால் குளிர்ச்சிபெறு மென்பது கருத்தாகலின் வல்லோர்நவிற்சியணி. (ரு)

அல்லி னிருண்மாக் கடல்சுவற்றி யளியன் முலைமே
லழலூற்றிக், கொல்லுங் கொடிய வெண்டிங்காள் கொப்புளிக்
கு நினது கதிர்சிறிது, புல்லும் பொழுதி லொழியாது
புனல்கான் றிந்து காந்தமெனுங், கல்லு முருகு மெனி
லுலகி லெவரோ யாவி கரையாதார்.

(இ-ள்.) அல்லின் இருள் - இராவிலுண்டான இருளாகிய, மா கடல் சுவற்றி - பெரிய கடனீரைச் சுவறச்செய்து, அளியன் முலைமேல் - எளியளாகிய (வென்னுடைய) தனத்தின்கண், அழல் ஊற்றி - அக்கினியைச் சொரிந்து, கொல்லும் - கொல்லாநின்ற, கொடிய வெள் திங்காள் - கொடுமைபொருந்திய வெள்ளிய சந்திரனே, கொப்புளிக்கும் - கொப்புளிக்கின்ற, நினது கதிர் - உன்னுடைய கிரணங்கள், சிறிது புல்லும் பொழுதில் - கொஞ்சம் பொருந்தும்பொழுதும், ஒழியாது - ஓயாமல், இந்துகாந்தம் எனும் கல்லும் - சந்திரகாந்தமென்னுங் கல்லும், புனல் கான்று - நீரைக்கக்கி, உருகும் எனில் - கரையுமேயானால், உலகில் - உலகத்தில், ஆவி கரையாதார் - (மென்மையாகிய) உயிர் கரையாதவர், எவர் - யாவர், எ-று.

(க-து.) சந்திரனே! உன்கிரணங்களாற் கல்லு முருகுமானால் உலகத்தில் யாதார் முருகாதவர் என்றாள் என்பதாம்.

உலகமுடிவி லாயிரங் கிரணங்களோடு தோன்றிக் கடனீரனைத்தையுஞ் சுவற்றி மலைகளையுருக்கிச் சீவகோடிகளையெல்லா மழிக்கின்ற சண்டபானுவின் விரத்தாந்தந் தொனிக்கச் சந்திரனுக்கு இருடகடலைச் சுவறச்செய்தலும், மலைக்கொப்பாகிய மூலமே லழலூற்றுதலும், காமிகளைக் கொல்லுதலும் கூறப்பட்டன. நெருப்பு முதலியவற்று லுருகப்பெறாத வன்மைபொருந்தியகல்லுஞ் சந்திரகிரணத்தா லுருகுமெனில் மெல்லிய மகளுயி ருருகுதல் வியப்போ வெனபாள் "எவரோயாவிகளையாதார" என்றாள். வன்மையுள்ள கல்லே யுருகுமளவில் மென்மையுள்ள உயிருருகு மென்னும்பொருள் விளுவினறிப் பெறப்படுதலால் தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணி. (௬)

பணந்தா ழரவுண் டுமிழ்மதியே யமிழ்தி னோடும் பல தேவ, கணந்தாம் வெருவும் விடத்தொடும்வந் ததனா லன்றோ கணவர்புய, மணந்தா ருள்ளங் குளிர்ப்பேறத் தண்ணென் கதிர்கள் வழங்குவதுந், தணந்தா ருள்ள மிகவெதும்பத் தழல்போ லுருக்குந் தன்மையுமே.

(இ - ள்.) தாழ் பணம் அரவு - வளைந்த படத்தையுடைய சர்ப்பமானது, உண்டு உமிழ் மதியே - விழுங்கி உமிழப்பெற்ற சந்திரனே, கணவர் புயம் - தலைவருடைய புயத்தை, மணந்தார் உள்ளம் - சேர்ந்தவர்களுடைய மனமானது, குளிர்ப்பு ஏற - குளிர்ச்சியை யடைய, தண் என் கதிர்கள் - குளிர்ச்சியாயிருக்கின்ற கிரணங்களை, வழங்குவதும் - கொடுப்பதும், தணந்தார் உள்ளம் - பிரிந்தவர்களுடைய மனமானது, மிக வெதும்ப - மிகவும் வாட, தழல் போல் - அக்கினியைப் போல், உருக்கும் தன்மையும் - உருக்குகின்ற குணமும், அமிழ்தினோடும் - அமிர்தத்துடனேயும், பல தேவ கணம் - பலவாகிய தேவ கூட்டங்கள், வெருவும் விடத்தொடும் - பயப்படுகின்ற நஞ்சுடனும், வந்ததனால் அன்றோ - பிறந்ததனாலன்றோ, எ-று.

(க - து.) அரவுண்டு கக்கிய சந்திரனே! மணந்தார்க்குத் தண்கதிர்களும் தணந்தார்க்கு வெங்கதிர்களும் வழங்குவது அமிர்தத்துடனும் விஷத்துடனும் பிறந்த குணமோ என்றாள் என்பதாம்.

மணந்தார்க்கும் தணந்தார்க்கும் ஒரு தன்மையவாகச் செய்யாமை நின் குற்றமன்று, நீ பழுத்தறகிடமாக நிலனுடன் வந்தவைகளுடைய குற்றமெனபது கருத்து. அமிழ்தினோடும் விடத்தோடும் என்னு முறையே குளிர்ப்பேற மிகவெதும்ப வென்றமையால் நிரனிறையணி. (எ)

வடவா நலத்தி னுடன்பிறந்தாய் வளர்பூங் கலையொன் றெய்தியபின், படர்வார் சடையோ னழல்பரப்பு நுதற்கணோடு பயின்றிருந்தாய், சுடர்கால் கலைக ணிறைந்துமுழு மதியாங் காலைத் தொடரரவின், விடவா யுறைந்தாய் மதியேநீ வெம்மை கால்வ தரிதேயோ.

(இ-ள.) மதியே - சந்திரனே, வடவா நலத்தினுடன் பிறந்தாய் - வடவாமுகாக்கினியுடனே உதித்தாய், வளா - வளாகின்ற, பூ கலை ஒன்று எய்திய பின் - அழகிய கலையொன்றனை அடைந்தபின்பு, படா - படாகின்ற, வார சடையோன - நெடிய சடையினையுடைய பரமசிவனது, அழல் பரப்பும் - அக்கினியை விரிக்கின்ற, நுதல் கண்ணோடு பயின்று இருந்தாய் - நெற்றிக்கண்ணுடனே பழகிக்கொண்டிருந்தாய, சுடா கால் - கிரணங்களை யுமிழ்கின்ற, கலைகள் நிறைந்து - பதினாறுகலையு நிறைந்து, முழு மதி ஆகும் காலை - பூரணசந்திரனான பொழுது, தொடா - தொடருகின்ற, அரவின - பாம்பினுடைய, விடம் வாய - விடமுள்ள வாயிலே, உறைந்தாய - தங்கினாய், (ஆகையால்) நீ - நீ, வெம்மை காலவது - வெப்பத்தைத்தருவது, அரிதேயோ - அரிதாகுமோ, எ-று.

(க - து.) சந்திரனே! வடவாமுகாக்கினியுடன் பிறந்தாய், ஒரு கலைபெற்றபின பரமசிவ னெற்றிக்கண்ணோடு பழகியிருந்தாய், பாம்பின வாயி லுறைந்தாய, நீ அக்கினியைக் கக்குத லரிதோ என்றாள் என்பதாம்.

ஒருவனுக்குப பிறக்குமிடமும் பழகுமிடமும் உறையுமிடமும் நல்லிடமாயிருக்கில் நற்குணமும, தீயிடமாயிருக்கில தீக்குணமு முண்டாகும, ஆதலால் இம்மூவிடமும உனக்குத் தீயவா யிருத்தலினால் பிறாக்குத் துன்பஞ்செய்கின்று யென்றாள. பிறக்குமிடம பழகுமிடம் உறையுமிடமென்னு மூன்றனு ளொன்று கொடிதா யிருந்தாலு மவன் செய்யுங் கொடுமை யளவற்றதா யிருக்க, மூன்றிடமுங் கொடியன வாக வுடைய நீ செய்யுந் தீமை கூறவேண்டாவென்பது தோன்ற "வெம்மைகால்வதரிதே" என்னப்பட்டது சந்திரனுக்குப பிறத்தல் பழகல உறைதலென்பவைகள் முறையாகச் சொல்லப்பட்டமையால் முறைநிற பாச்சியணி. (அ)

தொய்யின் முலைகள் பசப்பூரத் துணைவர்ப் பிரிந்து துயிறுறந்த, மையன் மடவா ருயிர்கவர்வான் கூற்றம போல வருமதியே, யைய மிலையுன் னுடற்களங்க மழலுங் கொடிய விடமன்றே, வெய்ய பகுவாய்க் கரும்பாந்தள் விழுங்கி யாற்று துமிழ்ந்ததுவே.

(இ-ள்.) துணைவா பிரிந்து - கணவனைப் பிரிதலினாலே, தொய்யில் முலைகள் - சந்தனக்கோலத்தை யெழுதப்பெற்ற தனங்களானவை, பசப்பு ஊா - வேறுபட்டநிறத்தையடைய, துயில் துறந்த - நித்திரையை யொழிந்த, மையல் மடவா - மயக்கத்தையுடைய மங்கையரது, உயிா கவாவான - ஆவியைக் கொள்ளையிடும்பொருட்டு, கூற்றம் போல - எமனைப்போல, வரு மதியே - வருகின்ற சந்திரனே, ஐயம் இலை - (அதற்குச்) சந்தேகமில்லை, உன் உடல் களங்கம் - உன்னுடைய உடலிலுள்ள கறையானது, அழலும் - சுடாநின்ற, கொடிய - கொடுமை பொருந்திய, விடம் அன்றே - நஞ்சமென்றன்றோ, வெய்ய பகு வாய் - வெவ்விய பிளப்பாகிய வாயையுடைய, கரு பாந்தள் - இராகு

வென்னும் பாம்பானது, விழுங்கி - (உன்னை) உண்டு, ஆற்றாது - தாங்க மாட்டாமல், உமிழ்ந்தது - கக்கியது, எ-று.

(க - து.) மாதருயிரைக் கவரும்பொருட்டு யமனபோல்வந்த சந்திரனே! உன்னுடறகளங்கம் கொடிய விடமெனறல்லவா கரும்பாம்பு உன்னை விழுங்கி யுமிழ்ந்துவிட்டது என்றாள என்பதாம்.

துணைவரைப பிரிந்து ஊனுறககமறற மாதருககு மரணவேதனை யொத்த துனபஞ்செயதலபறறிச சந்திரனுககுக கூறறுவனை யுவமை கூறப்பட்டது. சந்திரனுடைய களஙகததை விடமாகக குறிததமையால் தற்குறிபபணி (கூ)

சுடர்கான் றெழுந்த வெண்டிங்கா ளென்னே சுடுதி யாரமுதத், துடனீ பிறந்த பாறகடலின் றன்மை யுணரா யானுலு, மடலார் கமலப் பொகுட்டுறையும் புத்தேள் காணு மறைக்கொழுந்தின், படர்வார் சடையில வீற்றிருககும் பான்மை யேனு மறிந்திலையே.

(இ - ள.) சுடா கானறு எழுநத - கதிாகளை வீசிககொணடு உதிதத, வெள் திங்காள் - வெளளிய சநதிரனே, எனனே சுடுதி - யாது காரணததாற் சுடுகினறாய, ஆா அமுதததுடன் - நிறைநத அமிாதி னுடனே, நீ பிறந்த - நீ யுதிதத, பால் கடலின தனமை - பாறகடலி னுடைய குணத்தை, உணராயானாலும் - அறியாயெனினும், மடல் ஆா - இதழ்க ணிறைநத, கமலம பொகுட்டு உறையும் - தாமரை மலாககொட்டையில் தங்குகினற, புததேள காணு - பிரமன் காணக் கூடாத, மறை கொழுநதின - வேதததுச்சியிலிருககும் பாமசிவனு டைய, படா வாா சடையில் - படாநத நெடிய சடாபாரத்தில், வீற்று இருக்கும் - சிறப்புடனே யிருககினற, பானமையேனும் - தனமையை யானாலும, அறிந்திலை - அறிநதாயிலலை, எ-று.

(க - து ) சநதிரனே! ஏன சுடுகிறாய? தேவாமிாததுதோடு திருப பாற்கடலிற பிறந்ததனமையை யறிநதாயில்லையாயினும் சிவனது திருமுடியில வீறறிருககுநதனமையு மறிநதிலையோ என்றாள் எனப தாம்.

நற்குலததில் நல்லோருடன் பிறந்து பெரியோரைச் சேர்ந்து பெருமைபெறறிருககினற நீ யாதொரு பயனுமினறி இததீச்செய்கை செய்வது தகாதென்பது கருதது. பாறகடல் அமுது, பாமசிவன் இவைகளி னுறவுண்டாகியுஞ் சந்திரனுக்கு அக்குண மூண்டாகாமை சொல்லப்பட்டமையால் இகழ்ச்சியணி. (௪௦)

தருவு மணியு மிருநிதியுந் தண்ணங் கமல மலர்த்தவி சிற், றிருவு முயிர்த்த பாற்கடலிற் றெள்ளா ரமுதத் துடன்பிறந்தாய், பெருவெண் மதியே நீயுறைதல் பெம் மான் மௌலி கதிரமிழ்தி, னுருவ மனங்க னுறவொன்றும் விடுத்தி யேன்மற் றனைகரார்.

(இ - ள்.) பெரு வெள் மதியே - பெரிய வெள்ளிய சந்திரனே, தருவும் - கற்பகவிருக்ஷத்தையும், மணியும் - சிந்தாமணியையும், இருநிதியும் - சங்கநிதி பதுமநிதி யென்னு மிரண்டினையும், தண் - குளிர்ந்த, அம் - அழகிய, கமல மலர் தவிசில் - தாமரைமலராகிய ஆசனத்தி லிருக்கின்ற, திருவும் - திருமகளையும், உயிர்த்த - பெற்ற, பால் கடலில் - பாற்கடலினிடத்தே, தெள் ஆர் அமுதத்துடன் பிறந்தாய் - தெளிந்த நிறைந்த அமிர்தத்துடனே தோன்றினாய், நீ உறைதல் - நீ வாசம்பண்ணுமிடம், பெம்மான் மௌலி - பரமசிவனுடைய சடைமுடி, கதிர் - (உன்னுடைய) கிரணங்கள், அமிழ்தின் உருவம் - அமிர்தத்தினுடைய வடிவம், (ஆகையால்) அனங்கன் - மன்மதனுடைய, உறவு ஒன்றும் - சம்பந்த மொன்றனையும், விடுத்தியேல் - விடப்பெற்றாயானால், உனை நிகர் - உன்னை நிகராவார், ஆர் - யாவர், எ-று.

(க - து) சந்திரனே! ஐந்தரு கௌஸ்துவமணி இருநிதி அமுது திருமாது இவற்றோடு பாற்கடலிற் பிறந்தாய், நீ வாசம் பண்ணுதல் சிவனது திருமுடி உனது கிரணங்க ளமிர்தத்தி னுருவம், மன்மதனுற வொன்றைமாத்திரம் விடுத்தால் உன்னை நிகர்ப்பவர் யார் என்றாளென்பதாம்.

நிகராவா ரொன்று முற்றுவிருத்தி நிகரொன்றத் தொகக்குகின்றது. பிறப்பிடத்தினாலும் உறையுமிடத்தினாலும் உனக்குண்டாயிருக்கின்ற மேன்மையை விரிக்கிளந்த துன்பஞ்செய்வதற் கேதுவாயிருக்கிற பழமையிடமொன்று விழுக்கின்று யென்பாள் 'அனங்கனுறவொன்றும் விடுத்தி' யென்றாள். ஒருவனுக்குக் குடிப்பிறப்பு முதலியவற்றா லுளதாகும் குணத்தினும் பழகுமினத்தா லுளதாகுங் குணமே பெரும்பாலென்பது "நிலத்தியல்பா னீர்திரிந்தற்றாகு மாந்தர்க், கினத்தியல்ப தாகு மறிவு." என்பதனா லறிக. அனங்கனுற வொன்றினை விடுகையில் சந்திரனுக்குச் சிறப்புச் சொல்லப்படுகையால் இன்மைநவிற்சியணி. (கக)

திங்கட் புலியை வீழ்த்தியுயிர் செகுப்ப மடவீ ரரமி யத்திற், றங்கப் படிமக் கலஞ்சேர்மி னதனுட் புகுதுந் தாழாமே, துங்கக் கருந்தா துகப்புடைக்குந் தொழிலோர்க் கூவிக் கூட்டமெடுத், தங்கைத் தலத்தா லறைதிரெனப் பணிப்பீ ராவி யளிப்பீரே.

(இ-ள்.) மடவீர் - தோழியரே, திங்கள் புலியை - சந்திரனாகிய புலியை, வீழ்த்தி - வீழச்செய்து, உயிர் செகுப்ப - உயிரை நீக்க, அரமியத்தில் - நிலாமுற்றத்தில், தங்கம் படிமம் கலம் சேர்மின் - தங்கத்தினால் வரம்புசெய்யப்பட்ட கண்ணாடியை வையுங்கள்; அதனுள் - அக்கண்ணாடியினுள், புகுதும் - (திங்கட்புலி) நுழையும், தாழாமே - தாமசியாமல், துங்கம் - உயர்ச்சிபொருந்திய, கரு தாது - இரும்பை, உக புடைக்கும் - உதிர அடியாநின்ற, தொழிலோர் - தொழில் செய்வோராகிய கொல்லரை, கூவி - அழைத்து, கூடம் எடுத்து - சம்மட்டியெடுத்து, அங்கை தலத்தால் - அழகிய கையினாலே, அறைதிர் என - அடியுங்களென்று, பணிப்பீர் - சொல்லுவீர்களானால், ஆவி - என துயிரை, அளிப்பீர் - காப்பவராவீர், எ-று.

(க-து.) தோழிமாரகளே! சந்திரனென்னும் புலியை நிலா முற்றத் திற்றள்ளிக் கண்ணடியைச் சேருங்கள் அதற்குள் அப்புலி வந்துபுகும். கொல்லரைக் கூப்பிட்டுச் சம்மட்டியெடுத் தடிக்கச் சொல்லுங்கள் என்னுயிரைக் காப்பீர்கள் என்றாள் என்பதாம்.

எதிர் நின்று கொல்லுதற்குக்கூடாத புலியைப் போனுட்படுத்திக் கொல்லுதல்போல அப்புலியையுஞ் செய்கவென்பாள், 'தங்கப்படிமக் கலஞ் சேரமின்' என்றாள். கற்றுணர்ந்த தமயந்தியானவள் திங்களைக் கொல்லுதற்கு இவ்வளவு உபாயஞ்சொல்லியது வண்டு முதலியவற் றைத் தூது அனுப்புதல்போலக் காம மயக்கத்தாற் கூறியதெனக் கொள்க. திங்களைப் புலியென்று உருவகஞ்செய்து கண்ணடியைப் போனென உருவகஞ் செய்யாமையால் ஏகதேச வுருவகவணி. (கஉ)

சுடரும் வடவை யுலகழலத் தோன்று தமைத்த திரை யாழி, படரு மழன்மா மதியதனை யாற்று தாற்றி விடுத்த தெனிற், படரு மிதழிப் புரிசடையெம் பரம னமர ருயிர் புரப்பான், கொடிய விடமுண் டதுபோல வுண்டா லத னாற் குறையுண்டோ.

(இ - ள்.) சுடரும் வடவை - பிரகாசியாநின்ற வடவைத்தீயா னது, உலகு அழல - உலகத்தைச்சுட, தோன்றுது - வெளிப்படாமல், அமைத்த - (அதைத்) தன்னுள்ளடக்கிய, திரை ஆழி - அலைகளையுடைய கடலானது, அடரும - நெருங்கிய, அழல் - சுடாநின்ற, மா மதியதனை - பெரிய சந்திரனை, ஆற்றது - பொறுக்காமல், அரற்றி-அழுது, விடுத்த தெனில் - விட்டதானால், படரும இதழி - படராநின்ற கொன்றை மாலையையணிந்த, புரி சடை - கட்டப்பட்ட சடாபாரத்தையுடைய, எம் பரமன் - எம்முடைய கடவுள், அமரர் உயிர் புரப்பான - தேவர்க ளுடைய ஆவியைக் காக்கும்பொருட்டு, கொடிய - கொடுமைபொருந் திய, விடம - விடத்தை, உண்டது போல - புசித்ததுபோல், உண் டால் - (இதனையும்) புசித்தால், அதனல் - அச்செயகையால், குறை உண்டோ - குறைபாடுளதோ, எ-று.

(க-து) வடவாக்கினியுள்ள கடலும் கனலாகிய சந்திரனைக் கக்கி விட்டது, பரமசிவன் தேவர்களைக் காக்கும்பொருட்டு விடத்தை யுண் டதுபோலச் சந்திரனையுமுண்டாற் குறையுண்டோ வென்றாள் என்ப தாம்.

அரற்றலாவது அழுதலும் ஒலித்தலுமாம் "அரற்றலே யழுகை யோசை" என்பதனு லறிக. சந்திர னுதிக்குங் காலத்திற் கடன் மிக வொலித்தலி னங்ஙனங் கூறப்பட்டது. வடவைத்தீயைத் தன்னு ளடக்கிய கடலானது திங்களை விடுத்த தென்பதனால் அதனினுமிது பெருந்தீ யெனக்கொள்க. தேவருயிரைப் புரக்கக் காளகூடத்தை யுண்ட பேரருளையுடைய பரமசிவன் விரகிகளுடைய வுயிரைப் புரக்க விதனை யுண்ணுத தவர்கள் தவக்குறை யென்பது கருத்து. (கங)

விரிந்த திரைப்பாற் கடற்பிறந்த விடமோ ரிரண்டி லோர்கடவுண், மருந்தி னுகர்ந்த கரியவிட மீட்டு முலகில்

வந்ததோ, பரந்து கனலு மதிக்கலையாம் வெள்ளை விடத்தைத் தேவர்பல, ரருந்த வருந்த நாளுளும் வளர்வ தெவன்கொ லறியேமால்.

(இ-ள்) விரிந்த திரை பால் கடல் - விரியப்பெற்ற அலைகளையுடைய பாற்கடலிலே, பிறந்த - தோன்றிய, விடம் ஓர் இரண்டில் - இரண்டு விஷங்களில், ஓர் கடவுள் - ஒப்பற்ற பரமசிவனானவன், மருந்தின் நுகர்ந்த - அமிர்தத்தைப்போல் புசித்த, கரிய விடம் - கறுத்த விஷமானது, மீட்டும் - மீளவும், உலகில் வந்ததோ - உலகத்திலே தோன்றியதோ, பரந்து - பரவி, கனலும் - சுடாநின்ற, மதி கலை ஆம் - சந்திரனது கலையாகிய, வெள்ளை விஷத்தை - வெண்ணிறத்தையுடைய விடத்தை, தேவர் பலர் - தேவர்களநேகர், அருந்த அருந்த - புசிக்கப் புசிக்க, நாள் நாளும் - நாடோறும், வளர்வது - வளருகின்றது, எவன் கொல் - என்னகாரணமோ, (யாம்) அறியேம் - அறிகிலேம், எ-று. ஆல் - அசை.

(க-து.) சிவனுண்டவிட மீண்டு முலகில் வந்ததோ? வெள்ளை விடத்தைத் தேவர்களருந்த வருந்த வளர்வ தெவன்கொலோ வென்றாள் என்பதாம்.

கடலினுண்டாகிய விரண்டு விடங்களுள் கரியவிடம் ஒருவனுண்ண நசிக்க இவ்வெள்ளைவிடம் தேவர் பலருண்ண நசித்தும் பினனும் வளர்வதனால் அதனினுமிது கொடிதென்க. ஒருவனசெய்கை முற்றுப் பெறுதலும் பலர்செய்கை முற்றுப்பெறாமையும ஆச்சரியத்திற் கேதுவாகலின் எவ னெனபபட்டது. அறியேமெனபது விரகிகளுடைய ஊழ்வினையின் கொடுமை இவ்வளவென வறியேமெனக் கொள்க. மதிக் கலையாம் வெள்ளைவிடமென்றது உருவகவணி. வெள்ளை விடத்திற்கு மீட்டுத் தோன்றுதல் அதிகமாகச் சொலலப்பட்டமையால் வேற்றுமையணி. (கச)

நிரைத்தண் டரளக் கோவையென நிலவு காலும் வெண்ணகையீர், விரைத்தண் கலவைச் செழுஞ்சேறென் றழலை யிறைத்து மெய்வெதுப்பித், திருத்து மலர்ப்பூஞ் சேக்கையென விலவேள் பிரிந்தா ருயிர்செருக்கு, மரத்தந் தோய்ந்த வாளியணை கிடத்த லென்மே லன்பேயோ.

(இ-ள்.) நிரை - வரிசையாகவிருக்கின்ற, தண் தரளம் கோவை என - தண்ணிய முத்துக்கோவையைப்போல, நிலவு காலும் - ஒளியைத் தருகின்ற, வெள் நகையீர் - வெள்ளிய பற்களையுடைய மங்கையரே, விரை - வாசனைபொருந்திய, தண் - தண்ணிய, செழு-செழிய, கலவை சேறு என்று - கூட்டுவருக்கஞ்சோந்த சந்தனக்குழம்பென்று, அழலை இறைத்து - தீயை வீசி, மெய் வெதுப்பி - தேகத்தைச்சுட்டு, திருத்தும் மலர் - காம்பு களையப்பெற்ற மலரினாற்செய்யப்பட்ட, பூ சேக்கை என - அழகிய மெத்தையென்று, வில் வேள் - வில் லேந்திய மன்மதனானவன், பிரிந்தார் - பிரிந்தவர்களுடைய, உயிர் செருக்கும் - ஆவியை போக்குகின்ற, அரத்தம் தோய்ந்த - உதிரந்தோய்ந்த, வாளி

அணை - பாண மெததையின்மேல், கிடத்தல் - படுக்கவைத்தல், என மேல் - என்னிடதது, அன்பேயோ - அன்புதானே, எ-று.

(க-து.) முதது வரிசையை யொத்த பறகளையுடைய பெண்களே! கலவைச் சாநதெனறு கனலையிறைத் துடலைச்சுட்டு மலாச் சயன மென்று மன்மத பாணத்தி லென்னை வளர்த்த லன்புதானே வென் றுள் என்பதாம்.

கோயொன்றிருக்க மருநதொனறு கொடுபபோனாபபோல விரக கோயைத் தீாபபதற் கேற்றவைகளைச் செய்யாமையா லதை விாததி செய்வதற் கேறறவைகளைச் செயவது அனபுடையாாசெய லனறென் பது தோன்ற 'அன்பேயோ' எனனபபடடது. சேறென்றழலையி றைத்து என்றதும் மலாச்சேக்கையெனா வாளியணைகிடத்த லென்ற தும் ஒழிப்பணி. (சுடு)

பணந்தா ழலகுற் பைந்தொடியீர் பதுமத் திறைக்கும் வானவர்க்குங், கணஞ்சே ருலகின் மன்பதைககுங் காலங் கணித்த கலைவல்லோர், மணந்தார் தமக்கோ ரிமைப்பொ ழுது மாறுக் காதன் மகிழ்நர்புயந், தணநதார்க் கூழி யாகு மெனச் சாற்று திருந்த தகையென்னே.

(இ-ள்.) பணம் - பாமபின்படம், தாழ் - வணங்குகினற, அல்குல் - அல்குலையுடைய, பைநதொடியீா - பசிய பொன்னாறசெயத வளையலை யுடைய மங்கையாோ, பதுமதது இறைக்கும் - தாமரைமலாிலிருககின்ற பிரமனுக்கும், வானவாகளும் - தேவாகளுக்கும, உலகின் - மண்ணுல கில், கணம் சோ - கூட்டமாகச் சேரப்பெறற, மனபதைககும் - மனி தாககும, காலம் கணித்த - வாழ்நாளை நிச்சயிதத, கலை வல்லோா - சோதிடநூல் வல்லோா, மாறு காதல் - நீங்காத விருபபுள்ள, மகிழ்நா புயம் - தலைவா புயங்களை, மணநதாா தமககு - கூடினவாகளுக்கு, ஓா இமை பொழுது - ஒரு மாததிரையாயிருநத காலம், தணந்தாாக்கு - (அப்புயஙகளைப்) பிரிநதவாககு, ஊழி ஆகும் என - ஊழிக்காலமாகு மென்று, சாற்றாது இருந்த தகை எனனே - சொல்லாதிருந்த முறை யென்னகாரணம், எ-று.

(க-து.) பெண்களே! பிரமனுக்கும் தேவாகளுக்கு மக்களுக்குங் காலத்தைக குறித்த கலை வல்லோா மணநதாாக கிமைப் பொழுதா னது தணந்தாாக கூழிகால மாகுமெனறு சொல்லாதிருநத தென்ன வென்றாள் எனபதாம்.

பிரமாவுககு ஒருநாள மனிதாக்குப் பிரளயமும, தேவாக்கொரு நாள் மனிதாககு வருஷமுமா யிருக்குங்கால் வேறுபாடுகளைக் கணித நூற்சொல்லிய கணிதா இதனைச் சொல்லாதது அறியாமையே யென் பதுதோனற என் னெனபபட்டது. (சுசு)

குதலை மொழியீர் மெய்வெதுப்புங் கொடுந்தீ யாற்ற வேண்டுதிரோற், பொதிய வரையி னறுஞ்சாந்தம் பூசி முலை மேற் புகைந்தழலக், கதலி யிளம்பூங் குருத்தகனல் வீசி

வீசிக் கனற்றுவதென், மதியின் றழலை யவிப்பதற்கோர்
மருந்துண் டாகிற் செய்வீரே.

(இ-ள்.) குதலை மொழியீர் - மழலைச்சொற்களையுடைய மங்கையரே, மெய் வெதுப்பும் - உடலதனைச் சுடுகின்ற, கொடு தீ ஆற்ற - கொடிய வெப்பத்தைத்தணிக்க, வேண்டுதிரேல் - விரும்புவீர்களானால், பொதிய வரையின் - பொதிய மலையிற்பிறந்த, நறு சாந்தம் - பரிமளம் பொருந்திய சந்தனத்தை, பூசி - பூசுதல்செய்து, முலைமேல் - தனத்தின்மேல், புகைந்து அழல - புகைவிட்டெரிய, கதலி இள பூ குருத்து அதனால் - வாழையினுடைய அழகிய இளங்குருத்தால், வீசி வீசி - இடைவிடாமல் வீசுதல்செய்து, கனற்றுவது - சுடும்படி மூள்விப்பது, என் - என்னகாரணம், மதியின் தழலை - சந்திரகிரணமாகிய நெருப்பை, அவிப்பதற்கு - தணிப்பதற்கு, ஓர் மருந்து உண்டு - ஒரு மருந்து உள்ளது, ஆகில் - உம்மால் செய்யக்கூடுமானால், செய்வீர் - (அதனைச்) செய்வீர்களாக, எ-று.

(க-து.) பெண்களே! காமாக்கினியை நீக்க விரும்புவீர்களானால் முலைமேற் சந்தனத்தைப் பூசி வாழைக்குருத்தால் வீசிச் சுடுவதெனன? சந்திர கிரணமாகிய நெருப்பை யவிப்பதற் கோர்மருந்துண்டு; உங்களாற் கூடுமாகிற் செய்யுங்கள் எனபதாம்.

மொழியாலன்றிச் செயலாற் பயனிலீரெனபது தோன்றக் குதலை மொழியீ ரென்றும், விரகாக்கினியைத் தணிப்பதற்குத் தக்கவாறு செய்யும் திறத்திரல்லீ ரெனபது தோன்ற வேண்டுதிரே லென்றும், எண்ணியபய னெய்தப்பெறாத முயற்சியான மெய் வருந்துவது வீணென்பது தோன்ற என்னென்றும், இத்தீ கடனீர் முதலியவற்றாலவிக்கப்பெறாத பெருந்தீயென்பது தோன்ற நெருப்பவிப்பதற்குச் சாதனமாகிய நீராகக்கூறாது மருந்தென்றும், தலைவனைப் பொருத்தலன்றிப் பிறிது மருந்தின்றென்பது தோன்ற உண்டாகிற் செய்வீரென்றுங் கூறினள். ஓர் மருந்துண்டென்று குறிப்பிக்கவேண்டியதைக் குறித்தலால் குறிப்புமொழியணி. (கஎ)

அந்தா மரையின் மடநல்லீர் மலய முயிர்ப்ப வலர்
பொதுளுஞ், சந்தா டவியிற் றவழ்ந்துநறுந் தண்ணெ
னருவி தோய்ந்துமலர்ப், பைந்தா தாடி முருகுயிர்த்துப்
பசும்பொற் சிறுசா ளரநுழையு, மந்தா னிலமின் றழல்வ
தெல்லாந் தமியே னிழைத்த வல்வினையே.

(இ-ள்.) அம் தாமரையின் - அழகிய தாமரைமலரி லிருக்கின்ற, மட நல்லீர் - திருமகளையொத்த மங்கையரே, மலயம் உயிர்ப்ப - பொதியமலையானது பெற, அலர் பொதுளும் - மலர்கள் நிறைந்திருக்கின்ற, சந்த அடவியில் - சந்தனக்காட்டிலே, தவழ்ந்து - ஊர்ந்து, நறு - நல்ல, தண் என் அருவி தோய்ந்து - குளிர்ச்சியாயிருக்கின்ற அருவிநீரில் படிந்து, மலர் பை தாது ஆடி - மலர்களினுடைய பசிய மகரந்தங்களை யளாவிக்கொண்டு, முருகு உயிர்த்து - வாசனையை வீசி, பசு பொன் - பசியபொன்னாற்செய்த, சிறு சாளரம் - சிறிய பலகணி

வழியால், நுழையும் - நுழைகின்ற, மந்தானிலம் - தென்றற்காற்றானது, இன்று அழல்வதெல்லாம் - இன்று சுடுவதெல்லாம், தமியேன் இழைத்த - தனிமையுடையேனாகிய யான் செய்த, வல் வினையே - தீவினையே, எ-று.

(க-து.) இலக்குமிக்கொப்பான பெண்களே! தென்றற்காற்றானது பலகணி வாயிலில் நுழைந்து என்னைச் சுடுவது யான் செய்த கொடு வினையாகும் என்றா ளென்பதாம்.

பிறப்பு முதலியவற்றால் தண்மையே யியல்பாகவுடைய தென்றலானது என்னைவிற சுடுத லதன் குற்றமன்று, என்குற்ற மென்பாள் 'தமியேனிழைத்த வல்வினையே' என்றாள். தென்றற்குப் பிறத்தல் தவழ்தல் சீராட்டுப் புழுதியாட்டு என்னும் பிள்ளைப்பருவச்செயல் தோன்றச் சொல்லுதலால் சுருங்கச்சொல்லணி. (கஅ)

கொங்கு விரியு மலர்க்குழலீர் கொழுநர்ப் பிரிந்தார் வருந்துறவா, னெங்குங் குருதி யிறைத்ததுபோற் குடபாற் றிசையி னெழுஞ்செக்கர், பொங்கு வடவைக் கொழுந் தீயே யதனு லன்றேர் பூசுரரக, ளங்கை நிறையப் புனல் வாரி யிறைத்து நாளு மவிப்பதுவே.

(இ - ள்.) கொங்கு விரியும் - வாசனையானது விரியப்பெற்ற, மலர் குழலீர் - மலரையணிந்த கூந்தலையுடைய மங்கையரே, கொழுநர் பிரிந்தார் - கணவரை நீங்கினவர்கள், வருந்து உற - வருத்தத்தை யடைய, வான எங்கும்-ஆகாயமுழுவதும், குருதி இறைத்தது போல்-உதிரத்தை வீசட்டெற்றதுபோல், குட பால் திசையின் - மேற்குத்திசையிலே, எழு - எழுகின்ற, செக்கர் - செவ்வானமானது, பொங்கு-மிகுந்த, வடவை கொழு தீயே - வடவையென்னும் பெயரையுடைய செழிய அக் கினியே, அதனுல் அன்றோ - அதனுலல்லவா, பூசுரர்கள் - பிராமணர் கள், அம் கை நிறைய - அழகிய கை நிறைய, புனல் - சலத்தை, வாரி இறைதது - அள்ளிச் சொரிந்து, நாளும் - நாடோறும், அவிப்பது - அத்தீயை யணைப்பது, எ-று.

(க-து.) கூந்தலையுடைய பெண்களே! கணவரைப் பிரிந்த மாதரை வருத்தும்பொருட் டெழுந்த செவ்வானமானது வடவாமுகாக் கினியே, அதனுலல்லவா பிராமணாகள நாள்தோறு நீரைவாரி இறைத் தவிக்கிறாக ளென்றாள எனபதாம.

பூமிக்குச் சுரர்களாக விருப்பவர்கள் சிவகாருண்ணியமுடைய அந்தணராதலா லவரோ விரகிகளைச்சுட வெழுந்த தீயையும் அவிக்க வேண்டுதலின் பூசுரர்க்கு அதனை யவிப்பது கூறப்பட்டது. நெருப்பை யவிப்பதற்குச் சாதனம் நீரின்றிப் பிறிதொன் றன்றென்பது தோன் றப் புனலைவாரி யெனப்பட்டது. குருதி யிறைத்ததுபோ லெழுஞ் செக்கரென்றது தற்குறிப்பணி. செக்கரைத் தீயென்றது பூசுரர்கள் நீரிறைதது அவிப்பதனுல் சாதிக்கப்படுதலால் தொடர்நிலைச்செய்யுட் குறிப்பணி. (கக)

புனைமென் கொடியீர் நிலவருந்தென் புள்ளின் பார்ப்
பை யருட்கலச, முனிவன் றன்பா லலைபுரட்டு முந்நீர் குடிக்
கும் விஞ்சையினை, யினிதி னுணர வைத்திடுமின் வைத்
தாற் குணபா லெழுந்துவெய்தாய்க், கனலுங் கொடிய
வெண்டிங்கட் கதிர்வெங் கடலை யருந்தாதோ.

(இ - ள்.) புனை - அலங்கரிக்கப்பட்ட, மெல் கொடியீர் - மெல்
லிய மலர்க்கொடிபோன்ற மங்கையரோ, நிலவு அருந்து - சந்திரிகை
யைப் புசிக்கின்ற, என் புள்ளின் பார்ப்பை - என்னுடைய சகோரக்
குஞ்சினை, அருள் கலச முனிவன்பால் - கிருபையுடைய கும்பத்திற்
பிறந்த அகத்திய முனிவனிடத்து, அலை புரட்டும் - அலைகளைப் புரட்டு
கின்ற, முந்நீர் குடிக்கும் விஞ்சையினை - கடற்சலத்தைப் பானம்பண்
ணுகின்ற கல்வியை, இனிதின் உணர - இனிதாக அறிய, வைத்திடு
மின் - வையுங்கள், வைத்தால் - வைக்கப்பெற்றால், குணபால் எழுந்து -
கீழ்த்திசையில் உதயமாகி, வெய்து ஆய் - வெவ்விதாய், கனலும் -
சுடுகின்ற, கொடிய - கொடுமைபொருந்திய, வெள் திங்கள் - வெள்ளிய
சந்திரனுடைய, கதிர் வெம் கடலை - கிரணமாகிய வெய்ய சமுத்தி
ரத்தை, அருந்தாதோ - (அது) குடியாதோ, எ-று.

(க - து.) பெண்களே! எனது சகோரக்குஞ்சினை அகத்திய
ரிடத்து கடலைக்குடிக்கும் வித்தையைக் கற்பியுங்கள், கற்பித்தால்
சந்திரகிரணக் கடலைக் குடியாதாவென்றாள் என்பதாம்.

யாதொருதுறைக் கற்கவேண்டுவது இளமைப்பருவத் தாதலால்
புள்ளின்பார்ப் பெனப்பட்டது. காமந்தகமென்னும் பொருணூலில்
விஷத்தைக் கண்டவளவிற் கண்சிவக்கு மியல்பினையுடைய சகோரத்
தை விஷசோதனையின் பொருட்டு அரசர் வளர்க்க வேண்டுமென்று
சொல்லப்பட்டபடி தன் வீட்டில் வளர்க்கப்பட்டதாதலின் என்புள்
ளின்பார்ப் பெனப்பட்டது. கடலைக் குடிக்கக்கற்ற சகோரப்பற
வைக்குத் தண்டாரூபிக நியாயத்தால் சந்திரகிரணத்தைக் குடிப்பது
எளிதிற் சித்திப்பதாகச் சொல்லப்பட்டமையால் தொடர்நிலைச் செய்
யுட் பொருட்பேறணி. (உ0)

பதும மலர்மெல் லணைகிடத்திப் பனிநீர் தெளித்துச்
சாந்தணிந்து, முதிர்வெங் காமக் கனலவிப்பான் முயலா
நின்ற மொய்குழலீர், ரதிரும் கடல்வான் முகட்டிலெழுந்
தழற்றுங் கொடிய கதிர்பரப்பு, மதியங் குளிர மருந்தறி
வீர் வடவைத் தழலு மவிப்பீரோ.

(இ - ள்.) பதும மலர் - தாமரை மலரிதழ் பரப்பிய, மெல் அணை
இடத்தி - மெல்லிய மெத்தையில் படுக்கவைத்து, பனி நீர் தெளித்து -
பனி நீரை இறைத்து, சாந்து அணிந்து - சந்தனத்தைப் பூசி, முதிர் -
முதிர்ந்திருக்கின்ற, வெம் காமம் கனல் அவிப்பான் - வெவ்விய காமத்
தீயைத் தணிக்கும்பொருட்டு, முயலாநின்ற - முயலுகின்ற, மொய்
குழலீர் - நெருங்கிய கூந்தலையுடைய மங்கையரோ, அதிரும் கடல் -

ஒலிக்கின்ற கடலினது, வான் முகட்டில் எழுந்து - மேலாகிய உச்சியிலே உதித்து, அழறும் - சுடுகின்ற, கொடிய - கொடுமைபொருந்திய, கதிர பரப்பும் - கிரணங்களை விரிக்கின்ற, மதியம் - சந்திரன், குளிர - குளிர்ச்சிபெற, மருந்து அறிவீர - மருந்தை அறிவீர்கள், வடவை தழலும் அவிப்பீர - வடவாமுகாக்கினியையுந் தணியச்செய்வீர, எ-று. ஏ - ஈற்றசை.

(க - து.) தாமரையணையிற்கிடத்திப் பனிநீர தெளித்துச் சந்தனத்தைப் பூசிக் காமாக்கினியை யவிக்கும்பொருட்டு முயற்சிசெய்யும் பெண்களே! சந்திரன்குளிர மருந்தறிவீர்கள், வடவாமுகாக்கினியையு மவிப்பீர்கள் என்றாள் எனபதாம.

ஒரு கரும முடித்தற்கேற்றகருவி இதுவென்று மிதுவனறென்று முணராது செய்பவாகளைபபோல, விரகத்தீயை யவிப்பதற்கேற்ற தலைவற் கூட்டத்தைவிட்டு அதனை மிகுவிக்கின்ற மலாசசேசகைகிடத்தன்முதலிய ஏலாதவைகளைச் செயகின்றீரெனபது தோன்ற "காமக கனலவிபபான முயலாநினற மொயகுழலீா" எனறாள். யாவரு மனுபவசித்தமா யறியபபடுகினற மதியைக குளிாவிககும இறைவறகூட்டமாகிய மருநதை முனனை ரறியீாக ளென்பாள, அறிவீரென்றாள். இதனை முனனரறிநதால் பினனா வடவைததழலை யவிககும் அரிய வகையையு மறிவீாகளென்பாள், "வடவைத்தழலு மவிப்பீா" என்றாள. இவளுடையைக் காமததினதாக வறியாது தணித்தறகு முயலு மஙகையரை "மதியங்குளிர மருநதறிவீா வடவைததீயு மவிப்பீா" என்று வஞ்சகமாகப புகழ்தலால வஞசபபுகழ்ச்சியணி. (உக)

துணர்ததா ரளக மடநலலீர் சுடுவெங் காமக கொடுந்
தீயைத், தணிப்பா னெண்ணிக கொடுவந்த தண்ணென்
கதிர்கால வெண்டரள, மணிததாழ் வடமும வியன்சினைத்
தே மாவின் றளிரு மெஞ்ஞான்று, மணிததா யிருந்த வட
வையும்வெங் கானிற தீயு மமைத்தனவே.

(இ-ள்.) துணா தாா-பூநதொததுகளையுடைய மாலையையணிந்த, அளகம - கூநதலையுடைய, மடம் நலலீா - இளமைபொருநதிய மங்கையரே, சுடு - சுடுகினற, வெம காமம - வெவவிய ஆசையாகிய, கொடு தீயை தணிப்பான - கொடிய தீயைத தணிககும்பொருட்டு, எண்ணி - கருதி, கொடு வந்த - கொண்டுவந்த, தண் என கதிா கால் - குளிர்ச்சி பொருநதிய கிரணங்களை வீசுகினற, வெள் தரளம் மணி - வெள்ளிய முத்துக்களாலாகிய, தாழ் வடமும் - தொங்கிய கோவையும், வியன் சினை - பருத்த கிளைகளையுடைய, தேம் மாவின் தளிரும் - வாசனை பொருந்திய மாங்கொழுந்தும், எஞ்ஞான்றும - எந்நாளும், அணித்தாய் இருந்த வடவையும் - சமீபமாயிருக்கப்பெற்ற வடவா முகாக்கினியாகவும், வெம் கானில் தீயும் - வெவ்விய காட்டுத்தீயாகவும், அமைந்தன - ஆயின, எ-று. ஏ - ஈற்றசை.

(க - து.) கூந்தலையுடைய மாதாகளே! காமாக்கினியைத் தணிக்கும்பொருட்டுக் கொண்டுவந்த முத்தாரங்களு மாந்தளிர்களும் வடவா

முகாக்கினிபோலும் காட்டுத்தீயைப்போலு மிருந்தன வென்றாள் என்பதாம்.

சைத்தியோபசாரத்தின்பொருட்டு மேலே அணிவதற்குரிய கீழே பரப்புதற்குமான மணித்தாழ்வடமும் மாவின்றளிரும் சமீபத்திலே கொணர்ந்துவரும்பொழுதே அவைகள் தமயந்திக்குப் பெருந்தீப்போன்றிருந்தன வெனக. அவைக ளெப்போது கொண்டுவரப்பட்டனவாயினும் மிகுந்த துன்பத்தை விளைத்தலால் எழுஞாயிறு மெனப்பட்டது. தமயந்தி விரகவெப்பத்தைத் தணிக்கவெண்ணிக் கொண்டுவந்த தாரவடமும் மாவின் றளிரும் அதைச்செய்யாவிடினும் வீணாகாது வெப்பத்தை மிகச்செய்தலாகிய வினிட்டம் கிடைத்தலால் தகுதியின்மையணி. (உஉ)

மழலைத் தீஞ்சொன் மதர்நெடுங்கண் மடவீர் கொடுந்தீக் கடவுளும்வெஞ், சுழல்கட் பகுவாய் நிருதியுங்கா ரிருள்போ னிறத்த சுடர்கருஞ்சி, யழல்கட் கூற்று முவந்துறையுந் தென்பாற் றிசைநின் றசைந்துவரும், குழவித் தென்ற லாருயிரைக் குடியா தன்பு கூராதே.

(இ - ள்) தீ மழலை சொல் - மதுரம்பொருந்திய குதலைச்சொல்லையும், மதா நெடு கண் - களிப்புப்பொருந்திய நெடிய கண்களையுமுடைய, மடவீா - மங்கையரே, கொடு தீ கடவுளும் - கொடிய அக்கினி தேவனும், வெம் - வெவ்விய, சுழல் கண் - சுழல்கின்ற கண்களையும், பகு வாய - பிளப்பாகிய வாயினையுமுடைய, நிருதியும் - நிருதியென்னு மரக்கனும், கார இருள்போல் நிறத்த - கரிய இருளைப்போன்ற நிறத்தினையும, சுடா குஞ்சி - செந்நிறச சிகையையும், அழல் கண் - அழலைச செய்கின்ற கண்களையுமுடைய, கூற்றும் - யமனும, உவந்து உறையும் - மகிழ்ந்து வசிக்கின்ற, தென்பால் திசை நின்று அசைந்து வரும் - தென்றிசையிலிருந்து உலாவிவருகின்ற, குழவி தென்றல் - இளந்தென்றலானது, ஆா உயிரை குடியாது - நிறைந்த விரகிகளுடைய வுயிரைப் பானம பண்ணுமல், அன்பு கூராது - அன்புமிகாது, எ-று.

(க - து.) மங்கையரே! தீக்கடவுளும் நிருதியும் யமனும் வாசம் பண்ணுந் தென்றிசையிலிருந்து வரும இளந்தென்றலானது என் னுயிரைக் குடியா தன்புகொள்ளாது என்றாள் என்பதாம்.

தன்னைச் சோந்தவாகளைக் கொல்லுதல்பற்றித் தீக்கடவுட்குக் கொடிய தீயென்றும், தன்னைக்கண்டோாகள் கலங்கி யஞ்சும்படி அரக்கனு மிருத்தல்பற்றிச் சுழல் கட் பகுவாயென்றும், எவ்வளவு மனவலிமையை யுடையோாகளையும் உயிரைப்பிரிக்குங் காலத்து நடுங்கச்செய்யும் உருவினனும் நிறமுடையனென்பதுடற்றிக் கூற்றுவனுக்குச் சுடாசுருஞ்சி யழற்கண் ணென்றும் அடைகொடுத்தார். பாம்பு குட்டியாயிருப்பினுங் கொல்லுதல்போலக் காற்று குழவித்தென்றலா யிருப்பினுங் கொல்லு மென்பதுபட ஆருயிரைக்குடியாதன்புகூரா தெனப்பட்டது. தணந்தாரை வருத்தும் தென்றலின் கொடுமைக் கேதுவாகாத தீ கூற்று நிருதி யுறைகின்ற தென்றிசையை யேதுவாக்கிக் கூறுதலால் ஏதுவேற்றுமையணி. (உஙூ)

விளரிச் சுரும்பர் பாண்முரல விரிதண் படலைத்
துழாய்மார்ப, னொளிருந் திகிரிச் சுடர்ப்படையென் றோரா
துள்ளம் வெருவியதோ, *குளிர்வெண் மதியை நஞ்சு
யிர்க்குங் கூர்முள் ளெயிற்றுக் கரும்பாந்த, ளெளிதிற்
கவர்ந்தும் விழுங்காம லென்னே வாளா வுமிழ்ந்ததுவே.

(இ - ள்.) விளரி சுரும்பர் - விளரி ராகத்தைப்பாடுகின்ற வண்டுகளானவை, பாண் முரல - இசையைப்பாட, விரி தண் துழாய படலை மார்பன் - விரிந்த தண்ணிய துளபமாலையையணிந்த மார்பினையுடைய நாரணனது, ஒளிரும் - பிரகாசியாநின்ற, திகிரி சுடர் படை என்று - சக்கரமாகிய ஆயுதமென்றெண்ணி, ஓராது - இன்னதென்றறியாமல், உள்ளம் வெருவியதோ - மனம் பயந்ததோ, குளிர் வெள் மதியை - குளிர்ச்சிபொருந்திய வெள்ளிய சந்திரனை, நஞ்சு உயிர்க்கும் - விடத்தைத்தருகின்ற, கூர் முள் எயிறு கரு பாந்தள் - கூரிய முட்கள் போன்றபற்களையுடைய இராகுவென்னும் கரும்பாம்பானது, எளிதில் கவர்ந்தும் - இலேசாகப் பற்றியும், விழுங்காமல் - உட்கொள்ளாமல், வாளா உமிழ்ந்தது - வீணே உமிழ்ந்து விட்டது, என் - என்னகாரணம், எ-று. ஏ - அசை.

(க - து.) கரும்பாம்பானது சந்திரனைத் திருமாலின் சக்கரமென்று பயந்ததினாலோ விழுங்கியும் உமிழ்ந்துவிட்டது என்றான் என்பதாம்.

இராகுவானது திருமாலுடைய சக்கரப்படையானது தன்னை விடுக்கப்பட்ட பகைவர்களைச் சேதியாமல் விடாதென்பதை யநுபவத்தா லறிந்துளதாதலின் வெருவியெனறும், சந்திரன் அதன் வடிவா யிருப்பினும் தன் வாய்க்குட்பட்டபின்பு சந்திரனென்னு முணர்ச்சி யுண்டாகவேண்டியிருக்கவும் டன்னைட்பயத்தா லுண்மை யுணராது உமிழ்ந்தபடியால் வாளாவெனப்பட்டது. திங்களைத் திகிரிப்படை யாக மயங்குதலின் மயக்கவணி. (உ௪)

முழைவாய் திறந்து தெழித்தடரு மூரி யெருமைப்
பெரும்பகடேர்ந், தொழியா துவரி சூழ்கிடந்த வுலகில் வாழ்
பல் லுயிர்கவர்ந்து, பழிகூர் வெய்ய கருங்கூற்றைத் தரும
னெனப்பேர் பகர்ந்திடுவோர்க், கழன்மா மதியைத் தண்
மதியென் றுரைக்கு மாற்ற மரிதேயோ.

(இ - ள்.) முழை வாய் திறந்து தெழித்து - குகையையொத்த வாயைத்திறந்து பேரொலிசெய்து, அடரும் - போர்செய்கின்ற, மூரி - வலிமைபொருந்திய, பெரு எருமை பகடு ஊர்ந்து - பெரிய எருமைக் கடாவைச் செலுத்தி, ஒழியாது - நீங்காமல், உவரி சூழ் கிடந்த - கடலானது சூழப்பெற்றிருக்கின்ற, உலகில் - உலகத்திலே, வாழ் - வாழ்கின்ற, பல் உயிர் கவர்ந்து - பலவாகிய வுயிர்களை வௌவி, பழி கூர் - நிந்தை மிகுந்த, வெய்ய - வெவ்விய, கரு கூற்றை - கரிய யமனை, தருமன் என பேர் பகர்ந்திடுவோர்க்கு - தருமராசனென்று பேர் சொல்லு

வோர்க்கு, அழல் மா மதியை - வெம்மையைச் செய்கின்ற பெரிய சந்திரனை, தண் மதி என்று உரைக்கும் - குளிர்ந்த சந்திரனென்று சொல்லுகின்ற, மாற்றம் - சொல்லானது, அரிதேயோ - அரிதோ, எ-று.

(க-து) உலகிற் பல்லுயிரைக்கொல்லும் யமனைத் தருமராஜனென்று போற்றிச்சொல்வோர் வெம்மதியைத் தண்மதியென்று சொல்லுத லரிதோ வென்றாள் என்பதாம்.

மழைவாய் மற்றவாய்களிலும் பெருவாயாம். "மழைவாய்திறந்து தெழித்தடரு மூரியெருமை" என்றதனால் தன்னொலியினாலும் பகைவரைக் கொல்லுகின்ற கொடிய தென்றதாயிற்று. "வாழ்பல்லுயிர் கவர்ந்து பழிகூறவெய்ய கருங்கூற்று" என்றதனால் எத்துணையுங் கண்ணோட்டமின்றி யாவரையுங் கொல்லுங் கொடியோ னென்றதாயிற்று. பிராரத்தானுபவார்த்தத்தி லுயிரைப் பிரிப்பவனும் அவரவர்கள் செய்த புண்ணியபாவங்கட் கீடாக நீதிக்கியைய தண்டிப்பவனுமா யிருப்பினுங் கொல்லுந்தொழிலே தன்றொழிலாக வுடையவ னாதலால் அவனுக் கப்பெயர் கூறலாகாதென்றாள் "கூற்றைத் தருமனெனப் பேர் பகர்கிற்போர்" என்றாள் எவ்விடத்திலுள்ள வெல்லாவுயிரையுங் கொல்லுகின்ற யமனைத் தருமனென்று சொல்லுவோர்க்குத் தண்ட பூமிக வியாபகத்தால் தனக்கெதிர்ப்பட்டவைகளை மாத்திரங் கொல்லுகின்ற அழன்மதியைத் தண்மதியெனல் எளிதென்பது தோன்றுதலால் தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி. (உரு)

அறுகான் முரலு நறுங்கூந்தற் சீதை யொருத்தி யாவி
யுய்யப், பெறுவான் வரைக ளனைத்து நெடுங் கடல்வாய்ப்
பெய்த பெருங் கவிகள், சிறுகா லுயிர்க்குந் தமிழ்வரையை
முந்நீ ரகத்திற் சேர்த்தியவே, லுறுகா தலரைத் தணந்
துறையு மடவார் பலரு முய்வாரே.

(இ-ள்.) அறுகால் முரலும் நறு கூந்தல் - வண்டுகளானவை ஒலிக்கப்பெற்ற வாசனைபொருந்திய அளகத்தையுடைய, சீதை ஒருத்தி - சீதை யென்னுமொரு மங்கையானவள், ஆவி உய்ய பெறுவான் - உயிர் பிழைக்கப் பெறும்பொருட்டு, வரைகள் அனைத்தும் - மலைகள்யாவும், நெடு கடல்வாய் பெய்த - நெடிய கடலினிடத்தே இட்ட, பெரு கவிகள் - பெரிய வானரங்கள், சிறு கால் உயிர்க்கும் தமிழ் வரையை - இளந் தென்றற்காற்றைக் கொடுக்கின்ற பொதியமலையை, முந்நீரகத்தில் - அக்கடலினிடத்து, சேர்த்தியவேல் - சேர்த்தனவாகில், உறு காதலரை தணந்து உறையும் - பொருந்தப்பெற்ற துணைவரை நீங்கி வசிக்கின்ற, மடவார் பலரும் - பல மாதர்களும், உய்வார் - பிழைப்பார்கள், எ-று.

(க-து.) சீதையின்பொருட்டு மலைகளைக் கடலிற்போட்ட குரங்குகள் பொதியமலையையுங் கடலிற்போட் டிருக்குமாயின் கணவரைப் பிரிந்த மாதர்கள் பலரு முயிர்வாழ்ந்திருப்பார்கள் என்பதாம்.

"வரைக ளனைத்து நெடுங்கடல்வாய்ப் பெய்த பெருங்கவிகள்" என்றதனால் இவ்வுலகில் வாழும் வானரங்களைப் போல்வனவல்ல, தெய்வத்தன்மையுள்ள வானரங்களென்றதாயிற்று. அவை யெவ்வளவு உயர்ந்தவைகளாயினும் குரங்கினமாதலால் ஒருத்தி யுயிர்பிழைத் தற்பொருட்டு அநேகமலைகளைக் கடலிடத்தேபோட்டு அநேகருயிர் பிழைத்தற்பொருட்டு இவ்வொருமலையை அதனிடத்திற் போடாது விட்டவென்க. வானரங்கள் சிறுகாலுயிர்க்குந் தமிழ்வரையையுங் கடலினிடத்துப் போட்டால் மடவார்பலர்க்கு முய்தல் கூடுமென யூகித்தலால் உய்த்துணர்வணி. (௨௬)

சீதை யொருத்தி காதலனைத் தணந்து ளாரிற் சிறப்பு டைய, ளாத லுணர்ந்தே மருகிருந்தோ ரரக்க மாத ராதலி னாற், காத லுளர்போற் றோழியர்சூழ்ந் திவ்வா றியற்றிற் கழிதுயரா, லேத முழந்துள் ளுயிர்சோரு மென்போ லயர் வுற் றிருப்பாளே.

(இ - ள்.) சீதை ஒருத்தி - சீதையென்னு மொருத்திமாத்திரம், காதலனை தணந்துளாரில் - கணவனை நீங்கினவர்களில், சிறப்புடையள் ஆதல் - சிறப்புடையளாதலை, உணர்ந்தேம் - அறிந்தோம், அருகு இருந்தோர் - பக்கத்திலிருந்தவர்கள், அரக்கர் மாதர் ஆதலினால்-இராக் கத மங்கையராகையினாலே, தோழியர் - தாதியர்கள், காதல் உளர் போல் - ஆசையை யுடையவர்களைப்போல், சூழ்ந்து - சுற்றிக்கொண்டு, இவ்வாறு இயற்றில் - இந்தப்பிரகாரஞ் செய்தால், கழி துயரால் - மிகுந்த துன்பத்தினாலே, ஏதம் உழந்து - வருத்த மிகப்பொருந்தி, உள் உயிர் சோரும் - உள்ளேயிருக்கின்ற ஆவி சோர்வையடைந்திருக் கின்ற, என் போல் - என்னைப்போல, அயர்வுற்று - துன்பத்தைப்பொ ருந்தி, இருப்பாள் - இருப்பாள், எ-று.

(க - து.) கணவரைப் பிரிந்தவரிற் சீதையொருத்தி காமச்சாந்தி யால் வருத்த மடையாதவள், தோழியர் எனக்குச் செய்தல்போல வளுக்குஞ் செய்யில் வருத்த மடைந்திருப்பாள் என்பதாம்.

விரகிகளுக்குச் செய்யப்படுஞ் சைத்தியோபசாரங்கள் நெருப்பிற் பெய்த நெய்போல் அவர்களுற்றநோயை மேன்மேலும் வளரச்செய் வனவாதலின் அவ்வாறுசெய்யு மியல்பிலராகிய அரக்கமாதராற் சூழப் பட்டிருந்த சீதைக்கு அத்துயர முள்ளவளவில் அதிகரியா திருத்த லால் "சீதையொருத்தி காதலனைத் தணந்துளாரிற் சிறப்புடையள்" என்றாள். அரக்கர் தேவரை மானிடரைக் கொன்றுதின்ன விரும்புவ தன்றி அவர்களுக் குபசாரஞ் செய்யாரென்பது கருத்து. கொடுஞ் செயலையுடைய அரக்கமாதர் சூழ்தலாலுண்டாகிய சீதையின் வருத் தத்தைக் குற்றமாகவுஞ் சொல்லுதலால் இலேசவணி. (௨௭)

கொங்கிற் பொலிந்து நறவுயிர்க்குங் கொன்றைத் தொடைய லணிகுழகன், றிங்கட் கலைக ளனைத்துமொளிர் செம்பொற் சடையிற் கரந்தனனே, வெங்கட் டுளைவா

ளெயிற்றரவம் விழுங்கி யுமிழா திருந்ததோ, கங்குற்
பொழுதுந் தனியாழி செலுத்தா நிற்குங் கதிரோனே.

(இ - ள்.) கொங்கில் பொலிந்து - வாசனையினலே பிரகாசித்து, கறவு உயிர்க்கும் - தேனைத் துளிக்கின்ற, கொன்றை தொடையல் அணி குழகன - கொன்றைமலராறசெய்த மாலையைத தரிக்கப்பெற்ற பரமசிவன, திங்கள கலைகள அனைத்தும் - சந்திரனுடைய பதினறு கலைகளையும், ஒளிர செம பொன சடையில கரந்தனனே - பிரகாசியாநின்ற சிவந்த பொனவடிவமாயிருக்கினற சடாபாரத்தில் ஒளித்து வைத்தானே, வெம் கண் - வெவவிய கணகளையும், வாள - ஒளிபொருந்திய, துனை எயிறு அரவம் - தொளையையுடைய பறகளையுமுடைய பாம்பானது, விழுஙகி உட்கொண்டு, உமிழாது இருநததோ - கக்காமலிருந்துவிட்டதோ, கஙகுல் பொழுதும் - இராத்திரி காலத்திலும், தனி ஆழி - ஒப்பபற்ற சக்கரத்தை, கதிரோன - சூரியனுனவன், செலுத்தாநிறகும் - செலுத்துகின்றான், எ-று.

(க - து.) இரவிலுஞ் சூரியனுனவன் சக்கரத்தைச் செலுத்தி நிற்கின்றான், சந்திரகிரணங்க ளனைத்தையும பரமசிவன சடையிலொளித்துவைத்தானே கரும்பாம புல்லுமிழாதிருந்ததோ என்றான் என்பதாம்.

இரவிற்றேன்றி வெட்பத்தைச் செய்கின்ற சந்திரனிடத்தில் சடையிற் கரந்தனனே உமிழாதிருந்ததோவென ஏதுவைக்கூறி அவன் றன்மையை யொழித்து இரவினறன்மை கூறுதலால் ஒழிப்பணி. ()

வடுக்கண் டுயிலா தறவருந்து மடவார் தமையும்
படைத்தவரைத், துடைக்கும் படிவெவ் விடங்காலுஞ்
சுடர்மா மதியு மமைத்தழலின், விடுக்குங் கதிர்க டொடிற்
கனற்றும் வெம்மைக் காற்று திதழ்க்கதவ, மடைக்குங்
கமலத திடையொளிக்கு மருமா மறையோன் வாழியவே.

(இ-ள்.) வடு கண் துயிலாது - மாவடுபோன்ற கண்கள் நித்திரை செய்யாமல், அற வருந்தும் - மிகவும் வருந்தப்பெற்ற, மடவார்தமையும் படைத்து - மகளிரையும் உண்டாக்கி, அவரை துடைக்கும்படி - அம்மகளிரை யழிக்கும்படி, வெம் விடம் காலும் - வெவ்வியவிடத்தைக் கக்கப்பெற்ற, சுடர் மா மதியும் அமைத்து - காந்திபொருந்திய பெரிய சந்திரனையும் படைத்து, அழலின் - தீயைப்போல், விடுக்கும் கதிர்கள் - (அவனால்) விடப்பட்ட கிரணங்களை, தொடில் - தொட்டால், கனற்றும் வெம்மைக்கு - சுடுகின்ற வெப்பத்திற்கு, ஆற்றாது - தரிக்காமல், இதழ் கதவம் அடைக்கும் - இதழாகிய கதவுகளை அடைக்கப்பெற்ற, கமலத்திடை ஒளிக்கும் - தாமரைவீட்டில் ஒளித்துக் கொள்ளும், அரு - அரிய, மா மறையோன் - பெரிய வேதத்தற்குரிய பிரமன், வாழிய - வாழக்கடவன், எ-று.

(க - து.) பெண்களையும் படைத்து அவர்களையழிக்கச் சந்திரனையும் படைத்து அவன் கிரணம்படிற் சுடுமென்று தாமரையி லொளிக்கும் பிரமதேவன் வாழக்கடவன் என்றான் என்பதாம்.

நான்முகனெனவன் மடவாரையும் படைத்து, அவரை வருத்தும் படிச் சந்திரனையும்படைத்து, அச்சந்திரன் தனையும் வருத்துமென்று கமலத்திடை யொளித்தா னெனறதனுல் பிறருக்குக் கேடுவிளைப்பவை களை யமைத்தவன அவைகளே தனக்குங் கேட்டை விளைக்குமென்று அருசுவ னெனபதும், இன்னது செய்யி னின்னது பயக்குமென்னும் அறிவிலி யென்பதும் பெறப்பட்டன. இப்படிச்செய்தோ ஞசமடைக வென்பாள மறையோன் வாழியவெனறதனுல் வஞ்சப்புகழ்ச்சியணி.()

தண்ணங் கதிர்வெண் மதியென்பார் தழலாய் முடிந் த தென்னளவும, வணண வரிவின் மதன்பகழி மலரா மென்பா ரவையுமுயி, ருண்ணு மரவக் கணைபோல வுடற் ஞ நின்ற வொருபாவிப், பெண்ணொன் றயறாற் றிடப் பிறந்தேற் கினனு மேதாம் பேருலகே.

(இ - ள்.) (சந்திரனை) தண் அம் கதிர - தண்ணிய அழகிய கிர ணங்களையுடைய, வெள மதி எனபார - வெள்ளிய சந்திரனென்று சொல்லுவார, என அளவும் - என மட்டும், தழலாய முடிநதது - (அது) அக்கினியாயவிட்டது, வண்ணம - அழகிய, வரி வில் - நெடிய கருப்பு வில்லையுடைய, மதன பகழி - மனமதனுடைய பாணங்கள், மலா ஆம் என்பார - மலரென்று சொல்லுவாாகள், அவையும் - அம்மலாகளும், உயிா உண்ணும் - உயிரை யுண்கினற, அரவம கணை போல - சாபப பாணங்களபோல, உடற்றுகினற - கொல்லுகினறன, ஒரு பாவி பெண் என்று - ஒப்பறற பாவியாகிய பெணணொனறு, அயல துாற்றிட - அய லாா பழிக்க, பிறநதேறகு - பிறந்த எனககு, பேர உலகு - பெரிய இவ்வுலகி லுளளவைகளில, இனனும ஏது ஆம - இனி எது எதுவாமோ (யான) அறியேன, எ-று.

(க - து ) சந்திரனைக குளிாச்சியென்பாாகள, அதென்னளவில் நெருப்பாயிற்று , மன்மதபாணஙகளை மலரெனடாாகள, அவை யென் னுயிரைக் கொல்லு மரவககணையாயின என்றாள எனபதாம்.

அறியேனென்பது சொல்லெச்சம். மனிதா பிறவியிற் பெண்பிறப் பிழிந்ததெனபாள், பாவிப்பெண்ணொன்று பிறந்தேறகெனறும், இவ் வுலகோா தண்ணிய வென்பவைகள் வெச்செனவாயிருக்கின வெச் செனவா யிருப்பவைகள் எப்படியிருக்குமோ வெனபாள "இன்னு மேதாமபேருலகு" என்றுஞ் சொல்லினுள். (௩0)

திரைசெய் கரிய கடற்பிறந்த திங்கட் கொழுந்துந் தமிழ்ப்பொதிய, வரையில் வளர்நத நறுஞ்சாந்தும் வய வாள் வேந்தர் மார்பேற்கும், தாள வடமு முருகுயிர்க்குந் தண்ணென் மலரும் பைந்தொடிதன், விரக வனலை மேன் மேலு மூட்டும் விறகு போன்றனவே.

(இ-ள்.) திரை செய் கரிய கடல் பிறந்த - அலைகளைச் செய்கின்ற கறுத்த கடலினிடத்தே தோன்றிய, திங்கள் கொழுந்தும் - பால சந் திரனும், தமிழ் - தமிழ்தோன்றிய, பொதிய வரையில் வளர்ந்த -

பொதியமலையில் வளரப்பெற்ற, நறு சாந்தும் - வாசனையுள்ள சந்தனமும், வயம் - வலிமைபொருந்திய, வாள் வேந்தர் - வாட்படையையுடைய அரசர்களுடைய, மார்பு ஏறகும் - மார்புகள் ஏற்றற்குரிய, தரள வடமும் - முத்துமாலையும், முருகு உயிர்க்கும் - வாசனையைத் தருகின்ற, தண் என் மலரும் - குளிர்ச்சியாயிருக்கின்ற மலரும், பைந்தொடி தன் - பசியவளையலணிந்த தமயந்தியினுடைய, விரக அனலை - காமத்தினாலுண்டாகிய தீயை, மேல் மேலும் - மேலுமேலும், மூட்டும் - அதிகரிக்கச்செய்கின்ற, விறகு போன்றன - விறகுகளைப்போலிருந்தன, எ-று.

(க - ரை.) சந்திரனும், சந்தனமும், முத்துவடமும், மலர்களும், தமயந்தி காமாக்கினியை மூட்டும் விறகுகளைப்போலிருந்தன என்பதாம்.

சந்திரன் சந்தனம் தரளவடம் மலர் அடைமொழிகளோடு கூறப்பட்டமையால் மிகவுங் குளிர்ச்சிசெய்வனவெனக் காட்டுகின்றன. இப்படிப்பட்டவைகளாயினும் விறகுகள் நெருப்பை விருத்தி செய்வனபோல இவைகள் விரகத்தன்பத்தை விருத்திசெய்வன வெனக்கொள்க. எப்படியென்னில் தலைவனைக்கூடு மின்பத்திற்குத் துணையாயுள்ள இந்நான்கு மிருக்கின்றனவே அவனில்லையே யெனனுநினைப்பை யுண்டாக்கி அத்துயரத்தை மிகுவித்தலாம். சந்திரன் முதலியவற்றில் விரகாக்கினியை விருத்திசெய்யும் விறகினைக் குறித்தமையால் தற்குறிப்பணி.()

நறைகொப் புளிக்கு மலர்வாளி நலிய வாற்று துயிர்ப
பொறைகொண், டுறைதற் கரிதென் றிகல்வேழ முண்ட
கனிபோ லுள்ளுடைந்து, மறுவற் றொளிரு மதிமுகத்து
மானேர் நோக்கி விடுத்திடவும், பெறுதற் கரிய வுருவிதெ
னப் பிரியா திருந்த தின்னுயிரே

(இ - ள்.) நறை கொப்புளிக்கும் - தேனை உமிழுகின்ற, மலர் வாளி - மலர்க்கணைகளானவை, நலிய - வருத்த, ஆற்றுது - பொறுத்தவளாகி, உயிர் பொறை கொண்டு - உயிர்ப்பாரஞ் சுமந்து, உறைதற்கு அரிது என்று - வாழ்தற்கு அருமையதென்று, இகல் வேழம் உண்ட கனி போல - பகைமைபொருந்திய யானையுண்ட விளங்கனிபோல், உள் உடைந்து - மனந்தளர்ந்து, மறு அற்று ஒளிரும் - களங்கமற்று விளங்குகின்ற, மதி முகத்து - சந்திரன்போன்ற முகத்தையுடைய, மான் நேர் நோக்கி - மானையொத்த பார்வையையுடைய தமயந்தி, விடுத்திடவும் - (தன்னை) விட்டுவிடவும், பெறுதற்கு அரிய உரு இது என - இஃது பெற்றிடுவதற்கு அரிய வடிவமென்று, இன் உயிர் - அவளினிய வுயிரானது, பிரியாது இருந்தது - விட்டு நீங்காமலிருந்தது, எ-று.

(க - ரை.) மலர்க்கணை வருத்த தமயந்தி வேழமுண்ட கனிபோல மனம்வருந்தியும் பெறலரிய திருவுருவென்று உயிர் விடாதிருந்தாள் என்பதாம்.

உள்ளுடைந்தும் விடுத்திடவும் என்னும் உம்மைகள் கீழ்ப்போன வேட்கைமுதலிய எட்டவத்தைகளையுந் தழுவிநின்றன. உள்ளுதல் - மூர்ச்சித்தலாம், விடுத்திடல் - சாக்காடாம். இவ்வவத்தைகள் பத்தும் இவளடைதலால் இனி மெய்யுறுபுணர்ச்சி நிகழாவிட்டால் இவளுயிர் பிரியாதிராதெனபார், "பெறுதற்கரிய வருவிதெனப் பிரியாதிருந்த தின்னுயிர்" என்றார். தமிழ்நூலிற் பத்தவத்தைகளில் தலைமகட்குச் சில வவத்தைமாத்திரம் சொல்லியிருக்கின்றன வெனினும் இந்நூல் வடநூலினின்று மொழிபெயர்க்கப்பட்டதாதலின் அச்சயம்பற்றிக் கூறினரெனக. (௩௨)

தார்வாய் முரலு மினவண்டின் சிறைமெல் வளியா
லிடைதளர்ந்து, சோர்வா டிதலை பரந்தமுலைத் துணையி
னுப்பண் மைதோய்ந்த, கூர்வா ணெடுங்க ணீர்வார்தல்
கொற்ற மாரன் விரகமெனு, மீர்வாள் கைக்கொண் டுயிர்
போழ்தற் கெற்று நூல்போன் றிருந்ததுவே.

(இ-ள்.) தார்வாய் முரலும் - மலர்மாலையினிடத்தில் ஒலிக்கின்ற, இனம் வண்டின் - கூட்டமாயுள்ள வண்டுகளுடைய, சிறை மெல் வளியால் - இறகினுடைய மெல்லிய காற்றால், இடை தளர்ந்து சோர்வாள் - இடைவருந்தி சோர்பவளாகிய தமயந்தியானவள், திதலை பரந்த - வேறுபட்ட நிறத்தையடைந்த, முலை துணையின் நாப்பண் - இரண்டு தனங்களின் நடுவே, மை தோய்ந்த - அஞ்சனமானது கலந்த, கூர் வாள் நெடு கண் - கூரிய வாட்படையை யொத்த நெடிய கண்களினின்றும், நீர் வார்தல் - நீரொழுகுதல், கொற்றம் மாரன் - வெற்றி பொருந்திய மன்மதனுடைய, விரகம் எனும் ஈர் வாள் - பிரிவென்கின்ற அரிவாளை, கைக்கொண்டு - கையிற்கொண்டு, உயிர் போழ்தற்கு - உயிரைப் பிளத்தற்கு, எற்று நூல் போன்று - எற்றிய நூலை யொத்து, இருந்தது - இருந்தது, எ-று.

(க-ரை.) தமயந்தி இருதனங்களினடுவே மைக்கண்ணின் நீரொழுகுதல் மன்மதனுடைய வாளைக் கைக்கொண்டு உயிரைப் பிளத்தற்கு நூல்போட்டதை ஒத்திருந்தது என்பதாம்.

"சிறைமெல்வளியா லிடைதளர்ந்து சோர்வாள்" என்றதனால், மிகவு மெல்லிய விடையினளென்றாயிற்று. எற்றுநூலாவது மரமறுப்போர் கோணுதலின்றிச் செவ்விதா யறுத்தற்பொருட்டுச் செய்யப்பட்ட கரிக்கோடாம். மை தோய்ந்தொழுகிய கண்ணீரில் மன்மதனது எற்றுநூல் குறிக்கப்பட்டமையால் தற்குறிப்பணி. (௩௩)

புலவுந் திரைசூழ் நிலவலயம் புரக்கும் வேந்தை யிப்
பிறப்பி, னலமுற் றுறவினுடனே வதற்கு நவைதீர் தவ
முன் னியற்றுதே, னிலவத் துவர்வாய் மடநல்லீ ரின்னும்
பிறந்து புணர்வனென, நிலவுத் தழலிற் புகுந்திறப்ப நினை
யா நிற்கு நேரிழையே.

(இ-ள்.) புலவும் திரை சூழ் நிலம் வலயம் - புலால்நாற்றத்தையுடைய கடல்சூழ்ந்த பூமண்டலத்தை, புரக்கும் வேந்தை - காக்கின்ற நளமகாராசனை, இப் பிறப்பில் - இந்தப்பிறப்பில், நலம் முற்று உற - இன்பமானது நிறைவுபெற, ஈண்டு அணைவதற்கு - இவ்விடத்தில் தழுவுதற்கு, நவை தீர் தவம் - குற்றம் நீங்கிய தவத்தை, முன் - முற்பிறப்பில், இயற்றுதேன் - செய்யாத யான், இலவம் துவர் வாய் - இலவிதழ்போன்ற சிவந்த வாயையுடைய, மடம் நல்லீர் - இளமை பொருந்திய மடவீர், இன்னும் பிறந்து - இன்னமும் உதித்தாவது, புணர்வன் என - கூடுவேனென்று, நிலவு தழல் புகுந்து - சந்திரிகையாகிய தீயின மூழ்கி, இறப்ப - உயிரை நீக்க, சேர் இழை - தமயந்தியானவள், நினையாநிற்கும் - நினைக்கின்றாள், எ-று.

(க-து.) நளனை இப்பிறப்பிற் கூடுதற்கு முற்பிறப்பிற் றவஞ் செய்யாத தமயந்தியானவள் இனிப்பிறந்து நளனைப் புணர்வனென்று சந்திரகிரணத் தழலிற் புகுந்திறக்க நினைக்கின்றாள் என்பதாம்.

நெருப்புமுதலியவற்றில் தாமாயிறப்பவர்கள் அப்பொழுது கருதியபடி மறுமையி லடைவரென்பது புராணசித்தமாதலின், "இன்னும் பிறந்து புணர்வனென நிலவுத்தழலிற் புகுந்திறப்ப நினையாநிற்கும் சேரிழை" என்றார். (௩௪)

மன்றற் குழலார் வளிவிலக்கி வயங்கு சுடர்காத்
தென மாரன், வென்றிக் கொடியி னுருவமைந்த மடமான்
முலையில் வீசாமற், குன்றிற் பிறந்து தாதளைந்து குளிர்
தூங்க ருவி தோய்ந்துநறுந், தென்றற் குழவி நுழைந்து
வருஞ் சிறுசா ளரங்க டாழ்செறித்தார்

(இ-ள்.) மன்றல் குழலார் - பரிமளம்பொருந்திய கூந்தலையுடைய மகளிர், வளி விலக்கி - காற்றினாலுண்டாகு மிடையூற்றை நீக்கி, வயங்கு சுடர் காத்தது என - பிரகாசியாநின்ற விளக்கைக் காத்தாற்போல, மாரன் - மன்மதனுடைய, வென்றி கொடியின் - வெற்றி பொருந்திய கொடியைப்போல, உருவு அமைந்த - வடிவமானது அமையப்பெற்ற, மடமான் முலையில் - தமயந்தியினுடைய தனத்தில், வீசாமல் - மோதாமல், குன்றில் பிறந்து - பொதியமலையில் தோன்றி, தாது அளைந்து - மலர்ப்பொடியைப் பூசிக்கொண்டு, குளிர் தூங்கு - குளிர்ச்சி பொருந்திய, அருவி தோய்ந்து - அருவிநீரில் முழுகி, நறு தென்றல் குழவி - நறிய இளந்தென்றல், நுழைந்து - புகுந்து, வரும் - வருகின்ற, சிறு சாளரங்கள் - சிறிய பலகணிகளினுடைய, தாழ் செறித்தார் - தாழைப் பந்தித்தார்கள், எ-று.

(க-து.) பாங்கிமார்கள் தென்றற்காற்று நுழையுஞ் சாளரவாயிற் கபாடங்களைச் சாத்தினார்கள் என்பதாம்.

வளி விலக்கிச் சுடர்காத்தலாவது விளக்கு நிலைபெறும்படித் திரை முதலிய போடுதலாம். இவளுருவைக் கண்டளவில் துறவியர் முதலிய பலரும் மன்மதனுக் கிணங்கலின் "மாரன்வென்றிக் கொடியி னுருவமைந்த மடமான்" என்றார். (௩௫)

வெந்தீ யதனிற் பெய்தளிர்போன் மெலிந்து விளை
யாட் டயர்செழும்பூம், பந்தோ டரிய கழங்கணிகள் பல
வுந் துறந்து மலர்மகளை, யந்தா ரகலத் திருத்தியபோர்
வேந்தன் பெயரே யறைகுதலாற், செந்தார்ப் பசிய கிள்ளை
யொன்றுந் துறவா திருந்தாள் சேயிழையே.

(இ-ள்.) வெம் தீயதனில் - வெவ்விய நெருப்பினில், பெய் தளிர் போல் - போடப்பட்ட தளிரைப்போல, மெலிந்து - (விரகாக்கினியால்) வாடி, விளையாட்டு அயர் செழு பூ பந்தோடு - விளையாடுவதற்குரிய செழிய அழகிய பந்துடனே, அரிய கழங்கு - அரியவாகிய அம்மனைகளை யும், அணிகள் பலவும் - பலவாபரணங்களையும், துறந்து - நீக்கி, மலர் மகளை - திருமாதை, அம் தார் அகலத்து - அழகிய மாலையணிந்த மார்பி னிடத்திலே, இருத்திய போர் வேந்தன் - இருக்கச்செய்த போரை விரும்பிய நளமகாராசனது, பெயரே அறைகுதலால் - பெயரினையே சொல்லுதலால், செம் தார் - சிவந்த இரேகையையுடைய, பசிய - பசு மைநிறத்தைப்பொருந்திய, கிள்ளை ஒன்றும் - கிளியொன்றனையும், சே யிழை - தமயந்தியானவள், துறவாது இருந்தாள் - நீக்காமல் இருந் தனள், எ-று.

(க - து.) தமயந்தியானவள் தீயிற்போட்ட தளிரைப்போல மெலிந்து பந்து வாபரண முதலியவைகளை நீக்கி நளன பெயரைச் சொல்லுங் கிளியொன்றைமாத்திரம் நீக்காதிருந்தாள் எனபதாம்.

தீயதனிற் பெய்தளிரென்றமையாற் மெலிதற்கு விரகாக்கினியும், மெலிந்தென்றமையால தளிருக்கு வாடுதலும, வருவிக்கப்பட்டன. மலர்மகளை "அந்தாரகலத் திருத்திய போர்வேந்தன்" என்றமையால் பெருஞ் செல்வததையும பெருவிறலையு முடையோ னென்றதாயிற்று.

அலைவாய் விடத்தி னுடன்றோன்றி யாவி கவரும்
வெண்ணெருப்பே, யுலையாப் புவன மனைத்துமழ லொ
ருங்கு கொளுத்து நுதற்கண்ணன், றலைமே லுனது கலை
யொன்றே தரித்தா னென்றான மிகவுமுயிர்க், கொலைசூழ்
குநரி னின்போலுங் கொடியா ருளரோ கூறென்றாள்.

(இ-ள்.) அலைவாய் - கடலினிடத்தே, விடத்தினுடன் தோன்றி- விடத்தினுடனே பிறந்து, ஆவி கவரும் - உயிரை வௌவுகின்ற, வெண் நெருப்பே - (சந்திரனெனப்பட்ட) வெள்ளிய நெருப்பே, உலையா புவனம் அனைத்தும் - கெடாத உலகம் யாவையும், அழல் - தீயால், ஒருங்கு கொளுத்தும் - ஒன்றாய்க் கொளுத்துகின்ற, நுதல் கண் ணன் தலைமேல் - நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன் தலைமீது, உனது கலை ஒன்றே - உன்னுடையபங் கொன்றனையே, தரித்தான் என்றால் - தரிக்கப்பெற்றானேயாகில், மிகவும் - அதிகமாக, உயிர் கொலை சூழ்குநரில் - உயிரைக்கொல்லக் கருதுவோர்களில், நின் போ லும் கொடியார் உளரோ - உன்னைப்போலும் கொடுமையை யுடைய வர்கள் இருக்கின்றார்களோ, கூறு என்றாள் - சொல்லென்றாள், எ-று.

(க - ரை.) விஷத்துடன்பிறந்து உயிரைக்கவரும் சந்திரனே! உலகம்யாவையுங் கொளுத்தும் பரமசிவன் தலைமே லுன்கலை யொன்றைத் தரித்தானென்றால் உயிரைக் கொல்பவர்களி லுன்போலுங் கொடியவ ருண்டோவென்றாள் என்பதாம்.

உலகமனைத்தையு மொருங்குகொளுத்தும் ஊழித்தீயைத் தன் கண்ணிற் றரித்த பரமசிவனுக்கு உடலல்லாத தலையினிடத்தில் உன் பதினாறுபங்கி லொருபங்கன்றி அதிகமாகத் தரிக்கக் கூடாதாயின் உன் முன் மெல்லியராகிய மாத ருயிர்வாழ்தல் கூடாதென்பது கருத்து. ()

சந்திரோபாலம்பனப்படலம் முற்றும்.

---

## மன்மதோபாலம்பனப்படலம்.

[முன்னே சந்திரனை நிந்தித்த தமயந்தியானவள் இப்படலத்தால் மன்மதனை நிந்தித்தல் சொல்லப்படுகின்றது.]

(கலிவிருத்தம்.)

மங்குலூடுமறைந்துயிர்வாட்டுமித்
திங்கடன்னைவெறுத்ததுதீங்கெனு
வங்கமூடொளித்தாருயிர்கூட்டுணுந்
துங்கவேளைவெறுக்கத்தொடங்கினாள்.

(இ - ள்.) (தமயந்தியானவள்) மங்குலூடு மறைந்து - மேகத்தினிடத்திலே ஒளித்திருந்து, உயிர் வாட்டும் - ஆவியை வாட்டுகின்ற, இ திங்கடன்னை வெறுத்தது - இந்தச் சந்திரனை வெறுததுப்பேசினது, தீங்கு எனு - குற்றமென்று நினைத்து, அங்கமூடு ஒளித்து - தேகத்தினுள்ளே மறைத்துநின்று, ஆர் உயிர் - நிறைந்த ஆவியை, கூட்டுணும் - கொள்ளை கொள்கின்ற, துங்கம் வேளை - உயர்வுபொருந்திய மன்மதனை, வெறுக்க தொடங்கினாள் - வெறுததல்செய்ய ஆரம்பித்தாள், எ-று.

(க - ரை.) தமயந்தியானவள் சந்திரனை வெறுத்தது குற்றமென்று மன்மதனை வெறுக்கத்தொடங்கினாள் என்பதாம்.

'மங்குலூடு மறைந்துயிர் வாட்டுமித் திங்கடன்னை வெறுத்தது தீங்கு' என்றது தூரத்திலிருந்து துன்பஞ்செய்கின்றவனை வெறுப்பது காட்டி லழுவதுபோலப் பயனின்றென்றும், புறப்பகைக்கு மிகவும் அஞ்சவேண்டுவ தின்றென்று மாயிற்று. 'அங்கமூடொளித் தாருயிர் கூட்டுணுந் துங்கவேளை வெறுக்க' என்றதனால் அகத்திலிருந்து துன்பஞ்செய்கிறவனை வெறுப்பதினாலே சிறிதுபய னுண்டென்றும் உட்பகைக்கே அஞ்சவேண்டுமென்று மாயிற்று. "வாள்போற் பகைவரை யஞ்சற்க வஞ்சுக, கேள்போற் பகைவர் தொடர்பு" என்பதனு லறிக.()

மையுமென்னுயிர்காமறப்பூங்கணை
யெய்யும்வேளொன்றியம்புவல்கேட்டியால்

வெய்யசெந்தழலேந்திவெண்ணீறணி
யையன்முன்னுறி லாண்டொழில் காண்பனால்.

(இ - ள்.) கையும் என் உயிா - வாடுகின்ற என்னுடைய வுயிரி னது, காமம் அற - பெயரற, பூ கணை எய்யும் - பூவம்பை யெய்கின்ற, வேள் - மன்மதனே!, ஒன்று இயம்புவல் கேட்டி - ஒன்றுசொல்லு வேன் கேட்பாயாக, வெய்ய செம் தழல் - வெவ்விய சிவந்த தீயை, ஏந்தி - தாங்கி, வெள் நீறு அணி - வெள்ளிய விபூதியைத் தரித்திருக் கின்ற, ஐயன் முன் - பரமசிவனெதிரே, உறில் - (அம்பெய்யப்) பொ ருந்துவையானால், ஆண் தொழில் - நின்னாண்மைச் சேவகத்தை, காண் பன் - காணுவேன், எ-று. ஆல் - அசை.

(க - து.) என்னுயிாப்பெயா நீங்க மலாக்கணை யெய்யு மன்மத னே! கேள், சிவனிடததிற் சென்று கணை செலுத்துவாயானால் உன் சேவகத்தைக் காண்பேனென்றாள் என்பதாம்.

குடிசையிற் குதிரை கடததுவோனைப் போலத் தன்கீழ்வாழும் விரகிகளிடத்தே தன்னாண்மையைக் காட்டுகின்றவ னென்பது தோன்ற, 'கையுமென்னுயிா நாமறப் பூங்கணை யெய்யும வேள்' என் றாள். தன் பகைவாமுன்னே கிறக வஞ்சுகினறவ னென்பது தோன்ற 'ஐயன் முன்னுறி லாண்டொழில் காண்பன' என்றாள். ஆண் டொழில் — அஞ்சாமை, வீரம், ஊக்க முதலியவாம். அவாமுன் ஆண்மைசெல்லாதென்பதாம். அக்கடவுளை யொழிந்தவர்முன் செல்லு மென்பதுங் கருத்து. காமமெனபது காம் எனக் கடைகுறைந்தது. (உ)

அலரின்மீதுறையந்தணனெய்திட
மலரையன்றிவடிக்கணைநல்குமேற்
சிலையெனக்கழைகொண்டதிறலினே
யுலகில்யாவருயிர்கொண்டிருப்பரே.

(இ - ள்.) அலரின்மீது உறை அந்தணன் - தாமரை மலரின் மேல் வசிக்கின்ற பிரமனானவன, எய்திட - எய்யும்படி, மலரை அன்றி - பூங்கணையல்லாமல், வடி கணை - வடிக்கப்பெற்ற (இரும்பு முதலியவறறு லாகிய) பாணங்களை, நல்குமேல் - கொடுப்பானேயா னால், கழை - கரும்பினை, சிலை என கொண்ட - வில்லாகக்கொண்ட, திறலினேய் - வலிமைபொருந்திய மன்மதனே, உலகில் - உலகத் தில், யாவர் - எவர்கள், உயிர் கொண்டு - சீவனுடன், இருப்பர் - இருப்பார்கள், எ-று.

(க - து.) மன்மதனே! உனக்குப் பிரமதேவன் மலர்க்கணையல் லாது வடிக்கணை கொடுத்திருப்பானாகில் உலகத்தில் யாவரே யுயிர் வைத்திருப்பார்கள் என்றாள் என்பதாம்.

உனது துன்மார்க்கத்தையறிந்து நான்முகன் இப்படிச் செய்தா னென்பது கருத்து. (௩)

அருவமாயணுவாயமனத்தையும்
விரைகொள்வாளிவிடுத்துப்பிளத்தலாற்
பொருவில்வேள்கட்புலனிற்புலப்படு
முருவுபோழ்தலுனக்கரிதன்றரோ.

(இ - ள்.) அருவம் ஆய் - அரூபமாகியும், அணு ஆய - அணுவடிவாயு மிருக்கின்ற, மனத்தையும் - மனதினையும், விரை கொள் - வாசனையைக்கொண்ட, வாளி விடுத்து - மலரம்புகளை எய்து, பிளத்தலால் - பிளக்கின்றபடியால், பொருவில் வேள் - ஒப்பில்லாத மன்மதனே, கண் புலனில் - சேதுரோத்திரியத்திற்கு, புலப்படும் - விடயப்படுகின்ற, உருவு - வடிவங்களை, போழ்தல் - பிளத்தல், உனக்கு அரிது அன்று - உனக் கெளிதாம், எ - று. அரோ - அசை.

(க - து.) மன்மதனே! அருவத்தைப்பிளக்கு முனக்கு உருவத்தைப் பிளத்தலரிதோ என்றாள என்பதாம்.

மனத்தையு மென்றது உயர்வு சிறப்பும்மை. கட்புலனுக்கு விடயப்படாத மனத்தையும் பிளத்தலால் என்னுடலைப் பிளத்த லெளிதென்பாள் 'கட்புலனிற் புலப்படு முருவுபோழ்த லுனக்கரிதன்று' என்றாள். உருவைப் பிளத்தல் மனதைப் பிளத்தலா லெனச் சாதிக்கப்படுதலால் செய்யுட் குறிப்பணி. (௪)

மன்றனாறுமதுமலர்வாளிகொண்
டின்றெனாருயிரீருந்தகைமையாற்
குன்றவில்லிகொடுந்தழற்கண்ணில்வேள்
பொன்றினானெனல்பொய்யெனவேண்டுமால்.

(இ - ள்.) மன்றல் நாறும் - வாசனையானது மணக்கின்ற, மது மலர் வாளி கொண்டு - தேனையுடைய மலரம்புகளைக் கொண்டு, இன்று - இப்பொழுது, என் ஆர் உயிர் - என்னுடைய நிறைந்த ஆவியை, ஈரும் தகைமையால் - அறுக்கின்ற முறைமையினாலே, குன்றம் வில்லி - மேருவில்லேந்திய பரமசிவனுடைய, கொடு தழல் கண்ணில் - கொடிய தீ விழியில், வேள் - மன்மதனானவன், பொன்றினான் எனல் - இறந்தானென்று சொலவது, பொய் என வேண்டும் - பொய்யென்று சொல்லவேண்டும், எ-று. ஆல் - அசை.

(க -து.) மன்மதனானவன் பூவம்புகொண் டென்னுயிரைப் பிளத்தலால் இவ னெற்றிக்கண்ணா லெரிந்தானெனல் பொய்யென்றாள் என்பதாம்.

பொய்யென் றொழியாது எனவேண்டு மென்றதனால் இதிகாச புராணங்கள் பொன்றினானெனக் கூறுதலால் பொய்யென லாகாது மெய்யென வேண்டுமென்றும், ஆயின் அவமிருத்துவை யடைந்தபடியால் பிசாசனாகி யென்னை வருத்துகின்றானெனவேண்டு மென்றும், சகத்துற்பத்திக்குக் காரணனாகிய காமதேவனாதலால் பிசாசனாதல் கூடாதென்றும், பரமசிவனது தழற்கண்ணால் மடிந்தவன் முறைபடி

யும் பிழைத்தானெனல் அசம்பவமென்றும், அவன் பிழைத்து என்னை வருத்துவது அவருடைய ஆற்றல் குறைவாலன்று விரகிகளுடைய பாவத்தினுலாதலின் அசம்பவ மன்றெனா வேண்டுமென்றும் பொருள் படுதல் காண்க. வே ளிறவாமையை யிருந்தமையாற் சாதித்த லால் செய்யுட்குறிப்பணி. (௫)

கூற்றமென்னக்கொலைபுரிவேனிலா
னூற்றிதழ்க்கமலத்திறைநொன்மைய
வாற்றல்சான்றமலர்க்கணையைந்தல
தேற்றநல்கினுலகினையென்செயான்.

(இ - ள்.) கூற்றம் என்ன - யமனென்னும்படி, கொலை புரி வேனிலான் - கொலைத் தொழிலைச் செய்கின்ற வசந்தகாலத்திற்குரிய மன்மதன், நூறு இதழ் கமலத்து இறை - நூறிதழ்களையுடைய தாம ரைமலரி லிருக்கின்ற பிரமனுனவன், நொன்மைய - நுட்பமாகிய, ஆற்றல் சான்ற - வலிமையுள்ள, மலர் கணை - பூவம்புகளை, ஐந்து அலது - ஐந்தன்றி, ஏற்றம் - அதிகமாக, நல்கின் - கொடுத்தால், உல கினை - உலகத்தை, என் செயான் - என்ன துன்பஞ் செய்யமாட் டான், எ-று.

(க - து.) யமன்போற் கொலைசெய்யு மன்மதனுனவன் பிரம னைங்கணைமே லதிக கணைகளைத்தரி னுலகத்தை யென்செய்யமாட் டான் என்றாள் என்பதாம்.

எல்லாவற்றையும் நியதி செய்கின்ற பிரமனுனவன் மன்மதனை கொடுமையைக்கண்டு உலகத்திற் கிரங்கி மெல்லிய பூவைக் கணையா கச்செய்து, அவையும் ஐந்தன்றி அதிகமாகக் கொடுத்திலனெனபது கருத்து. (௬)

அருவமாயுமென்னுவிபதைத்துளம்
வெருவுமாறுவினைசெயும்வேனிலான்
கருமிடற்றிறைகண்ணிலெரிந்திடா
துருவமெய்தினுலகமுமுய்யுமே.

(இ-ள்) அருவம் ஆயும் - அருவமடைந்தும், என் ஆவி பதைத்து - என்னுடைய உயிர் பதைத்து, உளம் வெருவும் ஆறு - மனம் பயங் கொள்ளும்படி, வினை செயும் வேனிலான் - (மலர்க்கணைகளைத்)தொடுக் கின்ற வசந்தகாலத்திற்குரிய மன்மதனுனவன், கரு மிடறு இறை கண்ணில் - நீலகண்டத்தையுடைய பரமசிவனது நெற்றிக் கண்ணி னுல், எரிந்திடாது - எரிக்கப்படாமல், உருவம் எய்தில் - வடிவத் தைப் பெற்றிருப்பானுனல், உலகமும் - உலகமும், உய்யுமே - பிழைக் குமா, எ-று.

(க - து.) அருவமடைந்திருந்தும் என்னுவி பதைக்க வம்பெய்யு மன்மதனுனவன் உருவ மடைந்தா னுலகம் பிழைக்குமா என்றாள் என்பதாம்.

"உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே" என்பவாகலின், இங்கே உலகமென்றது சிதேந்திரியராகிய முனிவரையெனக் கொள்க. சரீர மில்லா திருக்கும்போதும் இவ்வளவு துன்பஞ் செய்கின்றவன் மற்ற வீரர்கள்போலச் சரீரமுண்டா யிருக்குமாயின் சிதேந்திரிய ரென்ப தில்லாமற்போய்விடு மென்பாள் 'உருவமெய்தி னுலகமு முய்யுமே' என்றாள். (எ)

விரிந்தவேணிவிமலன்வெகுளியா
லெரிந்துளாரிற்பிழைத்தவர்யாவரே
கரிந்தவேள்பிழைத்தெய்வதுகன்னியர்
புரிந்ததீவினையின்புணர்ப்பாகுமே.

(இ - ள்.) விரிந்த வேணி விமலன் - விரியப்பெற்ற சடையை யுடைய பரமசிவனுடைய, வெகுளியால் - கோபத்தினால், எரிந்துளாரில் - எரிக்கப்பட்டவர்களிலே, பிழைத்தவர் யாவர் - பின்னும் பிழைத்தவர்கள் எவர், கரிந்த வேள் - சாம்பலான மன்மதன், பிழைத்து - (பின்னும்) பிழைத்து, எய்வது - பாணங்களை யெய்வது, கன்னியர் புரிந்த - மாதர்கள் செய்த, தீ வினையின் புணர்ப்பு ஆகும் - பாவத்தினுடைய சம்பந்தமாகும், எ-று.

(க - து.) சிவன் கோபத்தா லெரிந்தவரிற் பிழைத்தவர் யாவர்? மன்மதன் பிழைத்தெய்வது மாதர்கள்செய்த தீவினையின் சம்பந்த மாம் என்றாள் எனபதாம்.

பரமசிவனுடைய வெகுளியால் எரிந்த திரிபுரர் முதலியோர் பின்னும் பிழைத்தில ரென்க. 'கன்னியர்புரிந்த தீவினையின் புணர்ப்பு' என்று மாதரைப்பழித்தலில் மிகவும் கொடியனென மன்மதன் பழிப் புத் தோன்றுதலால் வஞ்சப்பழிப்பணி. (அ)

சடிலமன்றுபைந்தார்குழற்பின்னல்கார்
மிடறுதோன்றல்விடமன்றுகானமே
யுடல்விளர்ப்புவெண்ணீறன்றுருவிலா
யடர்வதென்னையரனலன்காண்டியால்.

(இ - ள்.) உருவிலாய் - வடிவமில்லாத மன்மதனே, அடர்வது என்னை - (என்னுடன்) போர்செய்வ தென்ன, சடிலம் அன்று - சடையன்று, பைந் தார் குழல் பின்னல் - பசிய பூமாலையையணிந்த கூந்தலின் பின்னல் வேணி, கார் - கருமை, மிடறு தோன்றல் - கழுத்தினிடத்தில் தோன்றுதல், விடம் அன்று - நஞ்சமன்று, கானமே - கஸ்தூரியாம்; வெள் நீறு அன்று - வெள்ளிய விபூதியன்று, உடல் விளர்ப்பு - சரீரத்தினது வெண்ணிறமாம்; அரன் அலன் - (ஆதலால்) பரமசிவனல் லன், காண்டி - (நீ) காண்பாயாக, எ-று.

(க - து.) மன்மதனே! சடையல்ல கூந்தலின் பின்னல்; கண்டக் கறுப்பு விஷமல்ல கஸ்தூரி; பூசும் வெண்ணீறல்ல உடல்வெளுப்பு; நான் சிவனல்ல என்னிடத்தி லேன்போர்செய்கிறாய் என்றாள் என்ப தாம்.

மன்மதனுக்குந் தனக்கும் பகையின்மையா லவன் தன்னைவருத் துதற்குக் காரணம் தன்னுடற்குறியா லவன் பகைக்குரிய பரமசிவ னென்று நினைப்பேயாகு மென்றெண்ணி அதனைச்சொல்லி யொழிக் தா ளென்க. கூந்தன் முதலியவற்றிற் சடைமுதலிய பிராந்தியைக் கற்பித்தொழித்தலால் மயக்கவொழிப்பணி. (௯)

கொன்செய்வாளிகுளித்தசெம்புண்ணிடைத்
துன்பமெய்தத்தழல்சொரிந்தாலென
வன்பர்போலநின்றாரமிறைப்பரா
லென்செயாருயிர்த்தோழியரின்னுமே.

(இ - ள்.) உயிர் தோழியர் - உயிரையன்ன தோழியரா யிருந் தவர்கள், அன்பர் போல நின்று - (இப்பொழு தென்னிடத்) தன்புடை யவர்போல (எனைச்சூழ்ந்து) நின்று, கொன் செய் - அச்சத்தைச் செய்கின்ற, வாளி - மன்மதபாணங்கள், குளித்த செம் புண்ணிடை - தைத்த சிவந்த புண்ணினிடத்திலே, துன்பம் எய்த - (யான்) துன்பத்தையடைய, தழல் சொரிந்தால் என - நெருப்பைச் சொரிந் ததுபோல, ஆரம் இறைப்பர் - சந்தனக்குழம்பை வீசுவார்கள், இன் னும் - இன்னமும், என் செயார் - யாதுசெய்யார்கள், எ-று.

(க - து.) தோழிமார்கள் மன்மதபாணம் பட்ட புண்ணிடத்துத் தீயைப்போலுஞ் சந்தனத்தை யிறைக்கிறார்கள், இன்னு மென்செய்ய மாட்டார்கள் என்றாள் என்பதாம்.

இருந்தவரென்றும் இப்பொழுதென்றும் பொருளுக் கேற்பக் கூட்டப்பட்டன. தோழியர் செயயு முபசாரமாகிய குணத்தைக் குற்றமாகக் கூறலால் இலேசவணி. (௧௦)

தேற்றுவார்சிலர்தேங்கமழ்வாசநீர்
தூற்றுவார்சிலர்தொல்குலதெய்வதம்
போற்றுவார்சிலர்பூண்முலைச்சாந்தினு
லாற்றுவாரினழற்றுகின்றார்சிலர்.

(இ - ள்.) சிலர் - (தோழிகளிற்) சிலரானவர், தேற்றுவார் - தேறச்சொல்லுவார்கள்; சிலர் - சிலரானவர், தேம் கமழ் - வாசனை பரந்து மணக்கின்ற, வாசம் நீர் - பனிநீரை, தூற்றுவார் - வீசுவார் கள்; சிலர் - சிலரானவர், தொல் குல தெய்வதம் - தொன்றுதொட் டாராதித்து வருகின்ற குலதெய்வத்தை, போற்றுவார் - பிரார்த் தனை செய்வார்கள்; சிலர் - சிலரானவர், பூண் முலை - ஆபரணத் தையணிந்த தனத்தின் வெப்பத்தை, சாந்தினுல் - சந்தனக்குழம்பி னுல், ஆற்றுவாரின் - தணிப்பவர்களைப்போல, அழற்றுகின்றார் - வெப் பமிகச் செய்வார்கள், எ-று.

(க - து.) சிலர் தேற்றுவார்கள், சிலர் பனிநீரை வீசுவார்கள், சிலர் குலதெய்வத்தைப் போற்றுவார்கள்; சிலர் சந்தனத்தா லாற்று வார்கள்போலச் சுடுகின்றார்கள் என்பதாம்.

தேற்றுதலாவது நின்னால் விரும்பப்பட்ட நாயகனை நீபெறுவை, உன்றந்தையும் உன் விருப்பிற்கு மாறுகச் செய்யான் என்பன சொல்லி அவள் மனவருத்தத்தைப் போக்கல். தெய்வதம் போற்றுதலாவது தாம் வழிபடுங் கடவுளை நோக்கி இவளுக்கிஷ்டஞ் சித்தியாகவும துன்பம் நீங்கவும் அருள்செய்கவென்று வேண்டிக் கோடல். (கக)

இன்னவாறுமகளிரியற்றவுங்
கன்னன்மாரன்கணையுயிரீரவும்
பொன்னின்வார்முலைமுத்தம்பொரிந்திடத்
தன்னையும்மறந்தாடமயந்தியே.

(இ - ள்.) இன்ன ஆறு - இவ்விதமாய், மகளிர் இயற்றவும் - தோழிகள் உபசாரஞ்செய்யவும், கனனல் மாரன் - கருப்புவில்லேந்திய மன்மதனுடைய, கணை - பாணங்கள், உயிர் ஈரவும் - ஆவியைப் பிளக்கவும், பொன்னின் வார - பொன்னினாற்செய்த கச்சையணிந்த, முலை - தனங்களின்மீ தணிந்த, முத்தம் பொரிந்திட - முத்துக்கள் நீறுகவும், தமயந்தி - தமயந்தியானவள், தன்னையும் மறந்தாள் - தன்னையு மறந்துவிட்டாள், எ-று.

(க - து.) இவ்வாறு பெண்கள் செய்யவும், மன்மதன் பாணமெய்யவும், முத்துக்கள் பொரிந்திடத் தறந்தாள் தமயந்தி தன்னையு மறந்தாள் என்பதாம்.

மன்மதபாணஞ் செய்கின்ற வெம்மையானது தோழியர்கள் செய்கின்ற சைத்தியோபசாரத்தினாலுந் தணியாமல் மூர்ச்சித்தாளென்க. இயற்றவும் ஈரவும் பொரியவும் என்னுமெச்சங்கள் மறந்தாளென்னும் வினைகொண்டன. (கஉ)

நாவிமென்குழனன்னுதற்றோழியர்
காவியங்கட்கதிர்முலைக்கன்னியைப்
பூவின்மெல்லணைசேர்த்திப்புடையிருந்
தாவியுண்டுகொலோவென்றழுங்குவார்.

(இ - ள்.) நாவி மெல் குழல் - கத்தூரியணிந்த மெல்லிய கூந்தலையும், நல் நுதல் - நல்ல நெற்றியையுமுடைய, தோழியா - தோழிகள், காவி - கருங்குவளைபோன்ற, அம் - அழகிய, கதிர் - காந்திபொருந்திய, முலை - தனங்களையுடைய, கன்னியை - தமயந்தியை, பூவின் மெல் அணை - மலரினால் செய்யப்பட்ட மெல்லிய மெத்தையின்மேல், சேர்த்தி - படுக்கச்செய்து, புடை இருந்து - பக்கத்திலிருந்து, ஆவி உண்டுகொலோ என்று - உயிரானது உண்டோ இல்லையோவென்று, அழுங்குவார் - வருந்துவார், எ-று.

(க - து.) தோழிமார்கள் தமயந்தியை மலரணையிற் கிடத்தி உயிருண்டோ வில்லையோவென் றழுவாரகள் என்பதாம்.

மூர்ச்சையுஞ் சாக்காடோ டொக்குமாதலின் அவளுயிரைக் குறித்துச் சந்தேகித்தற் கிடமுண்டாயிற் றென்க. கைக்கிளைப்படலத்தி

லே மதுப்பிலிற்றென்னுஞ் செய்யுளில் மெல்லணைக்கிடத்தினு ரென்றும், சந்திரோபாலம்பனப் படலத்திலே பதுமமலர் மெல்லணைக்கிடத்தி யென்றுங்கூறி மீண்டும் பூவின்மெல்லணைசேர்த்தி யென்றுங் கூறல் கூறியதுகூற லாமெனின் பெருஞ்செல்வாக்குப் பல வணைகள் பரப்பப்பட்டிருத்தலும் ஒவ்வொன்றும் சிறிது சிறிதுகாலம் படுத்தலால் வாடி கழிபடுதலு மியல்பாதலால் கூறியதுகூற லாகாது. அன்றியும் முன்னுள்ள வணையினும் மெல்லியவணையிற் கிடத்தினுரென்றுமாம். ஆவியுண்டுகொலோ வென்றதனுல் இல்லையோவென்பது வருவிக்கப்பட்டது. (௧௩)

எண்ணியெண்ணியிரங்குவதென்னுயிர்ப்
புண்ணிகழ்ந்ததுயிர்துறந்தாளலள்
வண்ணமென்றுவர்வாய்துடிக்கின்றது
கண்ணிமைத்தனகாணுமென்பார்சிலர்.

(இ - ள்.) சிலர் - (அத்தோழிகளிற்) சிலர், எண்ணி எண்ணி - நினைத்து நினைத்து, இரங்குவது என் - புலம்புவதென்ன, உள் உயிர்ப்பு நிகழ்ந்தது - உள்ளே மூச்சு அசைந்தது; உயிர் துறந்தாள் அலள் - ஆவி நீங்கினவளல்ல, வண்ணம் - அழகிய, மெல் துவர் வாய் - மெல்லிய பவளம்போன்ற வாயானது, துடிக்கின்றது - துடியாநின்றது; கண் - கண்களானவை, இமைத்தன - இமைத்தல் செய்கின்றன; காணும் என்பார் - பாருமென்பார்கள், எ-று.

(க - து.) தோழிகளிற்சிலர் அழவேண்டியதென்ன? உயிரிருக்கின்றது, வாய் துடிக்கின்றது, கண்களிமைக்கின்றன பாரென்பார்கள் எனபதாம்.

இந்நிகழ்ச்சிகளால் அம்மூர்ச்சை தெளிந்தன வெனவறிதல் இதனுற் கூறப்பட்டது. எண்ணி யெண்ணி யிரங்கலாவது இவள் சாக்காடுறின் இவளாற் செய்யப்பெற்ற சிறப்பு முதலியவெல்லாம் இழக்கப்படுவோ மென் றிரங்கலால் தன்மை நவிற்சியணி. (௧௪)

மைத்தடங்கணீர்மாற்றுமின்சோர்ந்துவீ
ழுத்தரீகமுயர்முலைசேர்த்துமின்
கொத்துநாண்மலரோடுங்குலைந்துசோர்
மொய்த்தகூந்தன்முடிமினென்பார்சிலர்.

(இ-ள்.) சிலர் - (தோழிகளிற) சிலரானவர், மை தடம் கண் நீர் - அஞ்சனந் தீட்டிய விசாலம்பொருந்திய கண்களின்நீரை, மாற்றுமின் - மாற்றுங்கள்; சோர்ந்து வீழ் உத்தரீகம் - சோர்வை யடைந்து வீழ்கின்ற மேற்போர்வையை, உயர் முலை - உயர்ந்த தனத்தின்மேல், சேர்த்துமின் - சேருங்கள்; கொத்து - கொத்தாகிய, நாள் மலரோடும் - அன்றலர்ந்த பூக்களுடனே, குலைந்து சோர் - அவிழ்ந்து சோர்கின்ற, மொய்த்த கூந்தல் - நெருங்கிய குழலை, முடிமின் என்பார் - முடியுங்களென்று சொல்லுவார், எ-று.

(க - து.) தோழிகளிற் சிலர் கண்ணீரைத் துடையுங்கள், மேற போர்வையால் முலையை மூடுங்கள், அவிழ்ந்த கூந்தலை முடியுங்கள் என்பார்கள் என்பதாம.

இனி ஏற்பாடு அணித்தாகலின் இவளுடைய தந்தை முதலியோர் வருதற்குமுன்னமே முன்போல ஆடையணிமுதலியவற்றைத் திருத்த முயல்கின்றாரென்பது கருத்து. இதுவும் தன்மைநவிற்சியணி. (கரு)

சுடரும்வெண்மதிதூற்றுந்தழல்சுட
விடரின்மூழ்கியிறந்துபடுமுன
மடவரற்கிடர்மாற்றுவன்யானெனக்
கடன்முகட்டிற்கதிரவன்றேன்றினான்.

(இ - ள்.) சுடரும் வெண் மதி - பிரகாசியாநின்ற வெள்ளிய சந்திரனைவன், தூற்றும் - தூற்றுகின்ற, அழல் சுட - தீயானது சுடுதல்செய்ய, இடரில் மூழ்கி - துன்பத்தில் முழுகி, இறந்து படும் முனம் - உயிர்நீங்குமுன்னே, மடவரற்கு - தமயந்திக்கு, இடர் - துன்பத்தை, யான் - நானே, மாற்றுவன் என - நீக்குவன் என்பவன் போல், கடல் முகட்டில் - கடலினுச்சியில், கதிரவன் - சூரியன், தோன்றினன் - உதயமானான், எ-று.

(க - து.) சந்திரனாகிய நெருப்புச்சுட தமயந்தி துன்பத்திலமுழ்கி யிறக்குமுன் சூரிய னுதயமாயினன் என்பதாம்.

சந்திரனும் மன்மதனும் இரவின் மிகுகின்ற தமயந்தியின் றுயரம் பகல்வர வொருபுடை நீங்குமென்பார், 'இடர் மாற்றுவன் யானெனக் கடன்முகட்டிற் கதிரவன் றோன்றினன்' என்றார். இரவி யுதயத்தில் தமயந்தி வருத்த நீக்குவிப்போன் றன்மையைக் குறித்த லால் தற்குறிப்பணி. (கக)

மன்மதோபாலம்பனப்படலம் முற்றும்.

---

# இந்திரப்படலம்.

[இப்படலத்தால் தமயந்தியின் சுயம்வரத்திற்கு இந்திரன் முதலிய தேவர்வரவு சொல்லப்படுகின்றது.]

(கலிவிருத்தம்.)

இடுக்கணெய்தவிகந்துகளித்துளார்
நடுக்கமெய்தநலிதருவேந்தரின்
விடுத்ததண்கதிர்த்திங்கள்விளங்கொளி
கெடுத்துவெய்யவன்கீழ்த்திசைத்தோன்றினான்.

(இ - ள்.) இடுக்கண் எய்த - துன்பத்தை (அங்காட்டிலுள்ளோர்) அடைய, இகந்து - அதிக்கிரமித்து, களித்துளார் - செருக்கடைந்த குறுநிலமன்னர், நடுக்கம் எய்த - நடுக்கத்தை யடைய, கலிதரு வேந்

தரின் - வருத்துகின்ற அரசனைப்போல, விடுத்த - (தமயந்தி வருந் தும்படி) விடுக்கப்பெற்ற, தண் கதிர் திங்கள் - குளிர்ச்சிபொருந்திய கிரணங்களையுடைய சந்திரனுடைய, விளங்கு ஒளி கொடுத்து - விளங் குகின்ற காந்தியை அழித்து, வெய்யவன் - சூரியனானவன், கீழ்த் திசை - கிழக்குத்திக்கில், தோன்றினன் - உதித்தான், எ-று.

(க - து.) குறுநிலமன்னரை தன்பமடையப் பெருநிலமன்னர் புறப்பட்டாற்போலச் சந்திர பிரகாசத்தைக் கெடுத்துச் சூரிய னுதய மாயினன் என்பதாம்.

ஏழையரை வருத்தியவர்க்குக் கேடு தாமே வருமாதலில் தம யந்தியை வருத்திய சந்திரனும் ஒளியிழந்தா னென்க. கேடுதாமே வருதல், "பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா, பிற்பகற் றாமேவரும்" இதனாலறிக. வேந்தனைப்போல வெய்யவன் கீழ்த் திசைத் தோன்றினா னென்றமையால் உவமையணி. (க)

வையமேழுடைமன்னனிறத்தலும்
வெய்யபாசறைவிட்டகல்வேளிரி
னையசெங்கதிராதவன்றோன்றுமுன்
செய்யவான்விட்டகன்றதுதிங்களே.

(இ-ள்.) வையம் ஏழ் உடை மன்னன் - ஏழு தீபங்களையுமுடைய அரசனானவன், இறத்தலும் - வந்து தங்கினமாத்திரத்தில், வெய்ய பாசறை விட்டு - வெவ்விய படைவீட்டைவிட்டு, அகல் - நீங்குகின்ற, வேளிரின் - குறுநில வேந்தரைப்போல், ஐய செம் கதிர் ஆதவன் - அழகிய சிவந்த கிரணங்களையுடைய சூரியனானவன், தோன்றுமுன் - உதிக்குமுன்னே, செய்ய வான் விட்டு - சிவந்த ஆகாயத்தைவிட்டு, திங்கள் அகன்றது - சந்திரனானது நீங்கியது, எ-று.

(க - து.) சூரிய னுதயமாகுமுன்னே சந்திர னீங்கினன் என்ப தாம்.

இதுவும் உவமையணி. (உ)

அன்னகாலையிலாய்வளைத்தோழியர்
மென்னல்வாட்டுநிலவுக்கதிர்மதி
யின்னுமெய்திலிறந்துபடுமெனா
வுன்னியன்னையொடுற்றவைகூறினார்.

(இ - ள்.) அன்ன காலையில் - அப்பொழுதில், ஆய் வளை தோழி யர் - ஆராய்ந் தெடுக்கப்பட்ட வளையலையணிந்த தோழிகள், மென் னல் வாட்டு - நேற்றைப்பொழுதில் வாட்டிய, நிலவு - பிரகாசம்பொ ருந்திய, கதிர் மதி - கிரணங்களையுடைய சந்திரனானவன், இன்னும் எய்தில் - இன்னமும் வந்தால், இறந்து படும் என உன்னி - (தம யந்தி) மரணத்தை யடைவாளென்று நினைத்து, அன்னையொடு - தா யுடனே, உற்றவை கூறினார் - அடைந்த காரியங்களைச் சொல்லினார் கள், எ-று.

(க - து.) தோழிமார்கள் தமயந்தி தாயாகிய காஞ்சனமாலை யிடத்து நடந்த காரியங்களைச் சொன்னார்கள் என்பதாம்.

'தோழியா' என்றது உயிர்த்தோழியரை. செவிலியும் நற்றாயும் அன்னைய ராதலின் ஈண்டு 'அன்னை' என்றது செவிலியையெனக் கொள்க. தலைவி பாங்கிக் கறத்தொடுநிற்றலும், பாங்கி செவிலிக் கறத்தொடுநிற்றலுஞ் செவிலி நற்றாய்க் கறத்தொடுநிற்றலும், நற்றாய் தந்தையன்னையாக் கறத்தொடுநிற்றலும் விதியென்க. (ங)

அத்திறந்தெரிந்தாய்மலர்க்கோதைவெண்
முத்தமூரன்முதுக்குறைந்தாளென
வுய்த்துரைத்தனளோடைப்புகர்முக
மத்தமால்கரிமன்னவர்மன்னற்கே.

(இ - ள்.) அ திறம் தெரிந்து - அச்செவிலிசொல்லிய திறத்தைத் தெரிந்துகொண்டு, ஆய் மலர் கோதை - ஆராய்ந்தெடுக்கப்பட்ட மலர் களையணிந்த கூந்தலையுடைய நற்றாயானவள், வெள் முத்தம் மூரல் - வெள்ளிய முத்துக்களையொத்த பற்களையுடைய தமயந்தியானவள், முதுக்குறைந்தாள் என - பேரறிவடைந்தாளென்று, ஓடை - பட்ட மணிந்த, புகர் முகம் - புள்ளிபெற்ற முகத்தையுடைய, மத்தம் மால் கரி மன்னவர் - மதங்கொண்ட பெரிய யானையையொத்த மன்னற்கு [வீமராசனுக்கு], உய்த்து - அவ்விடத்திற் கருத்தைச் செலுத்தி, உரைத்தனள் - சொல்லினாள், எ-று.

(க - து.) காஞ்சனமாலை யதையறிந்து தமயந்தி பேரறிவடைந் தாளென்று தன்கணவனாகிய வீமராசனுக்குச் சொன்னாள் என்பதாம்.

தடங்கொள்வெம்முலைசாற்றியமாற்றமு
நுடங்குசிற்றிடையாக்கமுநோக்கிய
மடங்கலேறனையான்மணநாட்டிய
முடங்கல்போக்கினன்மொய்கழல்வேந்தர்க்கே.

(இ - ள்.) தடம் கொள் - பெருமையைக்கொண்ட, வெம் முலை - விருப்பத்தைத்தருகின்ற தனத்தையுடைய துணைவியானவள், சாற்றிய மாற்றமும் - சொல்லிய சொல்லையும், நுடங்கு சிறு இடை - வளையாநின்ற சிறியவிடையையுடைய தமயந்தியினது, ஆக்கமும் நோக்கிய - பருவத்தையும் கண்ட, மடங்கல் ஏறு அனையான் - ஆண் சிங்கத்தையொத்த வீமராசனானவன், மணம் நாட்டிய முடங்கல் - விவாகமானைக் குறிக்கப்பெற்ற ஓலையை, மொய் கழல் வேந்தர்க்கு - நெருங்கிய வீரக்கழலினையுடைய அரசர்க்கு, போக்கினன் - செலுத்தி னான், எ-று.

(க - து.) வீமராசன் தன்மனைவி சொன்னசொல்லையும் தமயந்தி பருவத்தையும் பார்த்துத் திருமணவோலையைத் தேசத்தரசர்களுக் கனுப்பினான் என்பதாம்.

தலைவியின் சொறகுறியாலும், தமயந்தியின் மெய்க்குறியாலும், அந்தப்புரத்தி னிகழ்ந்த ஆரவாரத்தினாலும் இந்நோய்க்குக் காரணங் கண்ட வீமராசன், வடிவும் அழகும் நற்குணமும் நற்செய்கையும் நிறைந்த தன்மகளின் கருத்துக்கிசைந்த அரசன் இன்னனென்பது தெளியக்கூடாமையால் சுயம்வரம் காட்டிய விவாகவோலையை அரசர்யாவருக்கும் விடுத்தானென்க. (௫)

வேலைசூழ்புவிமன்னர்க்குவேந்தர்கோ
னேலைபோக்கியதோர்ந்துயர்கற்பக
மாலைதாழ்முடிவாசவற்கோதுவான்
ஞாலமேத்திசைநாரதன்போயினான்.

(இ - ள்.) வேந்தா கோன் - வீமராசனானவன், வேலை சூழ் புவி மன்னாக்கு - கடல்சூழ்ந்த பூமண்டலத்தையாளுகின்ற வரசாக்கு, ஓலை போக்கியது - ஓலையைச் செலுத்தியதை, ஓாந்து - அறிந்து, உயர் கற்பக மாலை - உயாநத கற்பகத்தினுடைய மலாமாலை, தாழ் - தாழ்கின்ற, முடி வாசவற்கு - மகுடமணிந்த இந்திரனுக்கு, ஓதுவான் - சொல்லும்பொருட்டு, ஞாலம் ஏத்து - உலகத்தாா துதிக்கின்ற, இசை - புகழையுடைய, நாரதன் - நாரதமுனிவன், போயினான் - போனான், எ-று.

(க - து.) நாரதமுனிவனானவன் வீமராசன் அரசருக் கோலை விட்டதையறிந்து தேவேந்திரனுக்குச் சொல்லும்பொருட்டுப் போனான் என்பதாம்.

திரிலோக சஞ்சாரியாகிய நாரதமுனிவன் இச்சுயம்வர அதிசயத்தை இந்திரனுக்குச்சொல்லி அவனையும் இதற்கு வருவித்தல் சிறப்பென்று நினைத்துப் பொன்னுலகத்திறகுச் சென்றானென்க. (௬)

[இதுமுத லைநதுபாட்டுகள் ஒருதொடர். இவ்வைந்து பாட்டுகளாலும் இந்திரலோகத்தின் சிறப்புச் சொல்லப்படுகின்றன.]

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வானவரொள் சுடரெறிக்கு முடிதாழ்த்து வினைகழற் கால்வணங்கி யேத்தத், தேனிமிருங் கற்பகநாண் முகை யுடைந்து பசியநறுந் தேற லூற்ற, மேனகைசா மரையி ரட்ட வுருப்பசிவெள் ளடையுதவ விளநிந் திஞ்சொற், பானலங்கட் டிலோத்தமைமென் சதிமுறையிற் பதம் பெயர்க்கும் பாணி தூங்க.

(இ - ள்.) வானவர் - தேவர்களுடைய, ஒள் சுடர் எறிக்கும் - ஒள்ளிய காந்தியை வீசுகின்ற, முடி - மகுடங்களை, தாழ்த்து - தாழச் செய்து, வினை கழல் கால் - வீரக்கழலையணிந்த பாதத்தை, வணங்கி ஏத்த - தாழ்ந்து புகழவும், தேன் இமிரும் - வண்டுகளானவை ஒலிக்கின்ற, கறபகம் - கற்பகத்தினுடைய, நாள் முகை உடைந்து - அன்

துப்பிதழ்மடந்தைபாற்றூதுபோகெனச்
செப்பியதெவன்கொலெஞ்சிந்தையோர்ந்துமே.

(இ - ள்.) எப்பொருள் ஆயினும் - எந்தப்பொருளானாலும், யாவர் உள்ளமும் - எவர்களுடைய மனமும், கைப்படு நெல்லி கனியின் - உள்ளங்கையிற்பட்ட நெல்லிப்பழத்தைப்போல, காணும் - அறிகின்ற, நீர் - நீவிர், துப்பு இதழ் - பவளம்போன்ற அதரத்தையுடைய, மடந்தையால் - தமயந்தியிடத்து, தூது போக என - தூதுபோவென்று, எம் சிந்தை ஓர்ந்தும் - எங்களுடைய மனதைத் தெரிந்தும், செப்பியது - சொல்லியது, எவன்கொல் - என்கொல், எ-று. அம் - அசை.

(க - து.) எல்லாமறிந்த நீர் தமயந்தியிடத்துத் தூதுபோவென்று சொல்லிய தென்னவோவென்றான் என்பதாம்.

என்னுள்ளம் அவனிடத்தும் அவனுள்ளம் என்னிடத்தும் ஒருமித்து நின்றதென்பது தோன்ற எஞ்சிந்தை யோர்ந்துமெனத் தன்மைப் பன்மையாகச் சொல்லினா. "ஒருதலையா னின்னாது காமங் காப்போல, விருதலை யானு மினிது" என விருத்தலால் ஒத்தகாமமுள்ள வெனக்கன்றி ஒருதலைக்காமமுள்ள வுனக்குச் சந்தபொருந் தாதென்பது கருத்து. நெல்லியங்கனியி லென்றமையால் உவமைபணி. (கஉ)

[நீயே செல்லென்று இந்திரனுக்கு நளன் சொல்லல்.]

வழங்கியதும்முரைமறாதுசென்றியான்
மொழிந்தனனாயினுமுன்னரோயெனை
விழைந்தவத்தளிரியலவெள்குறாதுளங்
குழைந்துநும்பான்மணம்பொருந்தல்கூடுமோ.

(இ-ள்.) வழங்கிய நும் உரை - சொல்லிய உம்முடைய சொல்லை, மறாது - மறுக்காமல், யான் சென்று - யான்போய், மொழிந்தனன் ஆயினும் - சொன்னேனானாலும், முன்னரோ எனை விழைந்த - முன்னமே என்னை விரும்பிய, அத்தளிரியல் - அத்தமயந்தி, வெள்குறாது - நாணாமல், உளம் குழைந்து - மனங் கரைந்து, நும்பால் - உம்மிடத்தில், மணம் - விவாகத்திற்கு, பொருந்தல் கூடுமோ - சம்மதிப்பாளோ, எ-று.

(க - தி.) உமதுசொல்லை நான் சொன்னேனானாலும் என்னைவிரும்பிய தமயந்தி உம்மை விரும்புவாளோ என்றான் என்பதாம்.

'யான் விழைந்தவென்னில் தன்னறிவுக் கேலாதென்பது பற்றி 'எனை விழைந்த' என்றான். விழைந்தவளாதலால் யான் சொல்லுவதற்கு எதிர்மொழி கொடுத்தற்கே நாணும்; அன்னாள் நாணுமவள் எவ்வாறு நின் விவாகத்திற்குச் சம்மதிப்பாளென்பது கருத்து. (கங)

[என்னுள் முற்றுமோவென்ற நளனுக்கு இந்திரன் சொல்லியது.]

என்னவேந்துரைத்தலுமிசைத்தசொன்மறு
[illegible]

னபுள்ளானது, முன் உரைத்தவை அனைத்தும் - (தூதுபோய்வந்து) முன் சொல்லியசெய்தி யாவையையும், என்னும் - நினைப்பான், எ-று. ஆல் - அசை.

(க - து.) இவ்வாறுசொல்வான் பேசாது துன்பப்படுவான் மயங்குவான் தன்னையுமறப்பான் நல்ல தருமமென்று சிரிப்பான் வெதும்புவான் அன்னஞ் சொன்னவற்றை நினைப்பான என்பதாம்.

காம்பீர நடையுடையவ னாதலால் 'விள்ளா தயாநிருக்கும்' என்றும், செய்வதுந் தவிர்வதுந் தோன்றாமையால் 'ஏழுறும்' என்றும், இப்படிப்பட்ட சிந்தையுடையவ னாதலின் 'தனையு மறக்கும்' என்றும், சத்தியமிவ்வாறு வருத்துவதாதலின் வஞ்சப் புகழ்ச்சியாத் 'தருமநன்றெனப் புன்னகை கோட்டிய' என்றும், இதனால் அகத்தில் அதிகதாப முண்டாகையால் 'மெய்புழுங்கும்' என்றும், தருமத்திற் குடன்பட்டவனாகையால் இனி தனக்குக் கிடையாமெனனும் நிச்சயத்தால் 'வெய்துயிர்த்து' என்றும், பெறுதற்கரும்பொருளின்மேல் விருப்பம் அதிகரித்தலால், அன்னமுன்னுரைத்தவை யனைத்தும் நினைனும்' என்றுஞ் சொல்லினா. வருத்தமிகுதியின் நகைசெயவது "இடுக்கண் வருங்கா னகுக அதனை யடுத்தூர்வ தஃதொப்ப தில்" என்றறிக. பகையில்லாமல் ஒருகாலத்திலே கூட்டத்தக்க எவ்வும் அடாநிருக்கு முதலிய பலவற்றிற்குக் கூட்டத்தைச் சொல்லுதலின் கூட்டவாணி. (கூ0)

முற்றிழைவனமுலைமுயங்குநன்னலம்
பெற்றிலனெனினும்வேள்பெய்யும்வாளியால்
மற்றுயிரிறப்பினும்வானவேந்தொடு
சொற்றதுமறக்கிலனென்றுசொல்லுவான்.

(இ - ள்.) முற்று இழை - முற்றுப்பெற்ற ஆபரணங்களையணிந்த தமயந்தியினது, வனப்பு முலை - அழகிய தனங்களை, முயங்கும் நன்னலம் - தழுவுகின்ற நல்ல சுகத்தை, பெற்றிலன் எனினும் - பெறுமற்போனேனாயினும், வேள் - மன்மதனுடைய, பெய்யும் வாளியால் - சொரிகின்ற பாணங்களினாலே, உயிர் இறப்பினும் - ஆவிபோயினும், வான வேந்தொடு - இந்திரனுடனே, சொற்றது - சொல்லியதை, மறக்கிலன் என்று - மறக்கமாட்டேனென்று நிச்சயித்துக்கொண்டு, சொல்லுவான் - சொல்லுவான், எ-று.

(க - து.) தமயந்தி இன்பத்தைப் பெறாமற்போனாலும் மன்மதன் கணையா லுயிர்போயினும் இந்திரனோடு சொன்னதை மறக்கிலேன் என்றான் என்பதாம்.

மற்று - அசைநிலை. இம்மைப்பயனைத் துரும்பென நினைத்து மறுமைப்பயனை விரும்பிய காம்பீர நடையை யுடைய சத்தியசந்தனாகையால் இவ்வாறு கூறினனென்க. (கூக)

[தூதுபோகச்சொல்லிய இந்திரனைக்குறித்து நளன் சொல்லல்.]

எப்பொருளாயினும்யாவருள்ளமுங்
கைப்படுமெல்லியங்கனிநிற்காணுநீர்

மலர்ந்த அரும்புகள் உடைபட்டு, பசிய - பசுமைபொருந்திய, நறும் தேறல் ஊற்ற - நறிய தேனைச்சொரியவும், மேனகை - மேனகையா னவள், சாமரை இரட்ட - கவரிகளை அசைக்கவும், உருப்பசி - உருப்ப சியானவள், வெள்ளடை உதவ - தாம்பூலத்தைக் கொடுக்கவும், விளரி - விளரியென்னு மிசையையொத்த, தீ சொல் - மதுரம்பொருந்திய சொல்லையும், பானல் அம் கண் - நீலோற்பலம்போன்ற அழகிய கண் களையுமுள்ள, திலோத்தமை - திலோத்தமையானவள், மெல் - மெல் லிய, சதிமுறையில் பதம் பெயர்க்கும் - தாளவொத்தின் முறைப்படி பதம் பெயர்த்தற்குரிய, பாணி நவக - அபிநயஞ் செய்யவும், எ - று.

(க - து.) தேவர்கள் வணங்கவும், கற்பகத்தருக்கள் தேன்சொ ரியவும், மேனகை சாமரைபோடவும், உருப்பசி தாம்பூலங் கொடுக்க வும், திலோத்தமை யபிநயஞ்செய்யவும் என்பதாம். (எ)

தண்டரள மணிமுறுவ லயிராணி வரிபரந்த தடங் கட் காமர், வண்டுபகட் டெழின்மார்பின் மந்தார நறுந் தெரியன் மலரின் வீழப், புண்டரிகச் செழுங்காடு பூத்த தென விழிமலர்கள் பொலிந்து தோன்றத், தெண்டிரை வா யமிழ்தமெனத் தெள்விளித்தே னரமகளிர் செவியி னூற்ற.

(இ - ள்) தண் - குளிர்ந்த, தரளம் - முத்துக்கள் போன்ற, மணி முறுவல் - அழகிய பற்களையுடைய, அயிராணி - இந்திராணியின், வரி - இரேகைகளானவை, பரந்த - பரவப்பெற்ற, தடம் - விசாலம் பொருந்திய, கண் காமர் வண்டு - கண்களெனனும் அழகிய வண்டுக ளானவை, பகடு - பெருமைபொருந்திய, எழில் மார்பின் - அழகிய மார்பிலணிந்த, மந்தாரம் நறும் தெரியல் - மந்தாரத்தின் நல்ல மாலை யினுடைய, மலரின் வீழ - பூவில் மொய்க்கவும், புண்டரிகம் - தாமரை யின், செழு காடு பூத்தது என - செழுமையுள்ள வனம் பூத்ததென் னும்படி, விழி மலர்கள் பொலிந்து தோன்ற - நேத்திரமலர்கள் பிர காசித்து விளங்கவும், தெண் - தெள்ளிய, திரைவாய் - கடலிடத்துண் டாகிய, அமிழ்தம் என - அமிழ்தம் என்று சொல்ல, தெள்விளி தேன் - தெள்விளியென்னு மிசைத்தேனை, அரமகளிர் - அரம்பையரானவர் கள், செவியின் ஊற்ற - காதினிடத்திலே சொரியவும், எ-று.

(க - து.) இந்திராணி கண்கள் மந்தாரமாலை மலரில் வீழவும், ஆயிரங்கண்கள் விளங்கவும், அரம்பையர்கள் பாடவும் என்பதாம். (அ)

மருவுயிர்க்கு நறுந்துணர்மென் மலர்பொதுளும் பொ லந்தருவு மணியு மானு, மிருநிதியும் விழிக்கடையி னருளுக்கு முறைமுறையின் றேவல் கேட்பக், கருவிளர்கண் வேர்வரைப்பிற் கந்தருவ மடமகளிர் கனிந்த பாடற், கருவி முறை பிறழாமன் மாடகயாழ் நரம்புளருக் குழலியார்ப்ப

(இ - ள்.) மரு உயிர்க்கும் - வாசனையை வீசுகின்ற, நறும் - நறிய, துணர் - கொத்தாகிய, மெல் மலர் - மெல்லிய மலர்களானவை, பொருளும் - நெருங்கிய, பொலம் தருவும் - பொன்மயமாகிய ஐந்தருவும், மணியும் - சிந்தாமணியும், ஆனும் - காமதேனுவும், இரு நிதியும் - சங்கநிதி பதுமநிதியென்னு நிதிகளிரண்டும், விழி கடையின அருள் நோக்கி - கடைக்கண்களினுடைய அருளைப் பார்த்து, முறை முறை நின்று - வரிசை வரிசையாக நின்று, ஏவல் கேட்ப - ஏவலைக் கேட்கவும், கரு நிரை - கிளைத்தவர்களுடைய, கண் கவர் வனப்பின் - கண்களைப் பற்றிக் கொள்கின்ற அழகினையுடைய, கந்தருவ மடம் மகளிர் - இளமைபொருந்திய கந்தருவ மாதர்கள், கனிந்த பாடல் - முதிர்ந்த பாடல்களாலே, சுருதி முறை பிறழாமல் - ஒலியினுடைய வரிசைகள் வேறுபடாமல், மாடகம் யாழ் நரம்பு - முறுக்காணியோடுங்கூடிய வீணையினுடைய நரம்பினை, உளரும - தடவுகின்ற, தழனி ஆர்ப்ப - ஒலியானது ஒலிக்கவும, எ - று.

(க - து.) ஐந்தருவும, சிந்தாமணியும், காமதேனுவும், சங்கநிதியும், பதுமநிதியும், ஏவல்கேட்கவும், கந்தருவமாதர்கள் வீணைவாசிக்கவும் என்பதாம். (௯)

மருங்கிலொரு புடைவிசித்த குற்றுடைவாள் வட்டுடையின் வயங்க வோர்பால், பொருவகுலிசப் படைகமஞ்சூல் முகிலினிடை விளங்குமின்னிற் பொலிவு காட்டச், சுரும்பிமிரு மிலவோதிப புலோமசைசெம பஞ்சடிமென் சுவடு தோய்ந்து, விரிந்ததடம் புயம்பவளக் கொடிபடர்ந்த குலவரையின் விளங்கித் தோன்ற

(இ - ள்.) மருங்கில் - இடையில், ஒரு புடை விசித்த - ஒரு பக்கத்திற் கட்டிய, குறு உடைவாள் - குறியவாளானது, வட்டுடையின் வயங்க - அரைக்கவசத்தின்மீது பிரகாசிக்கவும், ஓர் பால் - ஒரு பக்கத்தில், பொரு - போர்செய்கின்ற, குலிசப்படை - வச்சிராயுதமானது, கமம் - நிறைவுபொருந்திய, சூல - கருப்பத்தையுடைய, முகிலினிடை - மேகத்தினிடத்திலே, விளங்கு மின்னின - பிரகாசிக்கின்ற மின்னலைப்போல், பொலிவு காட்ட - காந்தியைக் காண்பிக்கவும், சுரும்பு இமிர - வண்டுகளானவை ஒலிக்கின்ற, அம் சில் ஓதி - அழகிய பொன்வட்டத் தகட்டினையணிந்த கூந்தலையுடைய, புலோமசை - இந்திராணியினுடைய, செம் பஞ்சு அடி - செம்பஞ்சுக் குழம்பணிந்த பாதங்களினுடைய, மெல் சுவடு தோய்ந்து - மெல்லிய தழும்பு பொருந்தி, விரிந்த - விரியப்பெற்ற, தடம் புயம் - விசாலம் பொருந்திய தோள்களானவை, பவளம் கொடி படர்ந்த - பவளக் கொடிகள் படரப்பெற்ற, குலம் வரையின் - குலகிரிகளைப்போல, விளங்கி தோன்ற - பிரகாசித்துத் தோன்றவும், எ-று.

(க - து.) ஒருபக்கத்தி லுடைவாள் பிரகாசிக்கவும், மற்றொரு பக்கத்தில் வச்சிராயுதம் பிரகாசிக்கவும், இந்திராணி காற்பட்ட புயங்கள் பிரகாசிக்கவும் என்பதாம். (௰)

விஞ்சையரிக் கரரவுண ருரகர்புவி முழுதாளும்
வேந்தர்யாரு, மஞ்சலிசெய் திருமருங்கும் புடைசூழ
முனிவர்குழா மாசிகூற, வெஞ்சலில்பல வளஞ்சிறப்ப வரி
யணையில் வீற்றிருக்கு மிமையோர் வேந்தைக், கஞ்சமல
ரயனளித்த மறைபயினா ரதனிருகண் களிப்பக் கண்டான்.

(இ - ள்.) விஞ்சையர் - விச்சாதரர்களும், இக்கரர் - இக்கரர்களும், அவுணர் - அசுரரும், உரகர் - நாகரும், புவி முழுதும் ஆளும் - பூலோகமுழுதையு மாட்சிசெய்கின்ற, வேந்தர் யாரும் - அரசர்கள் யாவரும், அஞ்சலி செய்து - வணக்கஞ்செய்து, இரு மருங்கும் - இரண்டுபக்கத்திலும், புடை சூழ - நெருங்கிச்சூழவும், முனிவர் குழாம் - முனிவர் கூட்டங்கள், ஆசி கூற - ஆசீர்வதிக்கவும், எஞ்சல் இல - குறைவில்லாத, பல வளம் சிறப்ப - பலவாகிய வளங்களானவை மிக, அரி அணையில் வீற்றிருக்கும் - சிங்காசனத்தில் வீற்றிருக்கின்ற, இமையோர் வேந்தை - இந்திரனை, கஞ்சம் மலர் அயன் - தாமரைமலரி லிருக்கின்ற பிரமனானவன், அளித்த - பெற்ற, மறை பயில் - வேதத்தைப் பயிற்சிசெய்கின்ற, நாரதன் - நாரதமுனிவன், இரு கண் களிப்ப - தனதிருகண்களும் களிப்பையடைய, கண்டான் - பார்த்தான், எ-று.

(க - து.) விஞ்சையர்களும் இக்கரர்களும் அசுரர்களும் நாகர்களும் புவியரசர்களும் புடைசூழவும், முனிவர்கள் ஆசீர்வதிக்கவும், சிம்மாசனத்திலிருக்கு மிந்திரனை நாரதன் கண்டான் என்பதாம்.

வானவரெல்லாம் பாட்டுமுத லிலக்கப்பாட்டிலும் வந்த எந்த வென்பதுமுதலிய வினையெச்சங்கள் வீற்றிருக்கு மென்னும் பெய ரெச்ச வினையையும், அது இமையோர் வேந்தென்னும் பெயரையுங் கொண்டு முடிந்தன. (கக)

பொன்னகரந் தனிபுரக்கும் புரந்தரனா ரதமுனிவன்
புகுதலோடு, முன்னரியற் றியதவத்தி னெய்துபய னிப்
பிறப்பின் முடிந்ததாமென், றன்னமுனி வரனுவப்ப வருக்
கியபாத் தியமுதலா வனைத்துநல்கி, யின்னமுத முருவன
போ லினிதுரைக்கு முகமனொடு மிருக்கை யீந்தான்.

(இ - ள்.) பொன் நகரம் - அமராவதியை, தனி புரக்கும் - ஒப்பறக் காக்கின்ற, புரந்தரன் - இந்திரனானவன், நாரதமுனிவன் புகுதலோடும் - நாரதமுனிவன் அடைந்தமாத்திரத்தில், முன்னர் இயற்றிய - முற்பிறப்பில் யான்செய்த, தவத்தின் எய்து பயன் - தவத்தினாலே அடையவேண்டிய பிரயோசனம், இ பிறப்பில் முடிந்ததாம் என்று - இந்தப்பிறப்பில் முற்றுப்பெற்றதாமென்று, அன்ன முனிவரன் உவப்ப - அந்த நாரதமுனிவன் மகிழ்ச்சியடைய, அருக்கியம் பாத்தியம் முதல் ஆ - அருக்கியபாத்தியமுதலாக, அனைத்தும் நல்கி - யாவையும் கொடுத்து, இன் அமுதம் - இனியஅமிர்தமானவை, உருவன போல் - சொரிவனபோல, இனிது உரைக்கும் - இனி

தாகச் சொல்லுகின்ற, முகமனொடும் - உபசாரத்துடன், இருக்கை ஈந்தான் - ஆசனத்தைக் கொடுத்தான், எ-று.

(க - து.) தேவேந்திரன் நாரதன வந்தமாத்திரத்தில் ஆசனங் கொடுத்தான் என்பதாம். (சஉ)

உருகியுளங் களிசிறப்ப வாயிரங்கண் மலராலு மொ
ருங்கு நோக்கி, யருமறையோ யிவணீங்கி நெடுங்கால மெ
வ்வுலகி லடைந்தா யென்னப், பொருவரிய தவமுனிவன்
வானவர்கோன் முகநோக்கிப் புணரி சூழ்ந்த, விருநிலத்திற்
கடவுணதிப் புனலாடி யித்துணைநா ளிறந்த தென்றான்.

(இ - ள்.) உருகி உளம் - மனமுருகி, களி சிறப்ப - களிப்புமிக, ஆயிரம் கண் மலராலும் - ஆயிரங்களாகிய தாமரைமலராலும், ஒருங்கு நோக்கி - ஒருமிக்கப்பார்த்து, அருமறையோய - நாரதமுனி யே, இவண் நீங்கி - இவ்விடம்விட்டு, நெடு காலம் - நெடுங்காலமாக, எ உலகில் - எந்தவுலகத்தில், அடைந்தாய என்ன - போயிருந்தாயென்று கேட்க, பொரு அரிய - ஒப்பில்லாத, தவம முனிவன் - தவத்தை யுடைய நாரதமுனிவன், வானவர் கோன் முகம் நோக்கி - இந்திர னுடைய முகத்தைப் பார்த்து, புணரி சூழ்ந்த இரு நிலத்தில் - சமுத்திரஞ்சூழ்ந்த பெரிய பூமியினிடத்தில், கடவுள் நதி புனல் ஆடி - தெய்வத்தன்மையுள்ள நதிதீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து, இத் துணை நாள் - இவ்வளவுநாள், இறந்தது என்றான் - கழிந்ததென்றான், எ-று.

(க - து.) தேவேந்திரன் நாரதனைப்பார்த்து இவ்வளவுநாளெங் கே போனீரென்று கேட்க, நாரதன் பூலோகத்திற் தீர்த்தமாடப் போ னேனென்றான் என்பதாம். (சங)

என்றுமுனி வரனுரைப்பக் கடல்புடைசூழ் நிலவல
யத் திகல்வேன் மன்னர், துன்றுசமர் துறந்தனர்கொல்
சுடர்க்கதிர்போழ்ந் தரமகளிர் துணைமென் கொங்கை,
மன்றல்விழைந் திங்கெமக்கோர் நல்விருந்தாய் வரலொ
ழிந்த வாறேதென்றான், குன்றினிருஞ் சிறையரிந்த சுடர்
வயிரப் படைசுமந்த குவவுத் தோளான்.

(இ-ள்.) என்று - இப்படியென்று, முனிவரன் உரைப்ப - நாரத முனிவன் சொல்ல, குன்றின் - பர்வதங்களுடைய, இரு சிறை அரிந்த - பெரிய இறகுகளை அறுத்த, சுடர் வயிரம் படை சுமந்த - பிர காசம்பொருந்திய வச்சிராயுதத்தைத் தாங்கிய, குவவு தோளான் - திரட்சிபொருந்திய புயங்களையுடையவனுகிய இந்திரன், கடல் புடை சூழ் - கடலாற் புடைசூழப்பட்ட, நிலம் வலயத்து - பூமண்டலத்தில், இகல் - போர்செய்கின்ற, வேல் மன்னர் - வேற்படையேந்திய அரச ரானவர், துன்று சமர் - நெருங்கிய போரை, துறந்தனர்கொல் - விட்டு தனரோ, சுடர் கதிர் போழ்ந்து - சூரியமண்டலத்தைப் பிளந்துக்

கொண்டு, அரமகளிர் - அரமங்கையருடைய, துணை மெல் கொங்கை - இரண்டாகிய மெல்லிய தனத்தினுடைய, மங்கறல் விழைந்து - மணத்தை விரும்பி, இங்கு - இவ்விடத்தில், எமக்கு - எமக்கு, ஓர் நல் விருந்து ஆய - ஒப்பற்ற நல்லவிருந்தாகி, வரல - வருதலை, ஒழிந்து ஆறு - நீங்கியவிதம், ஏது என்றான் - என்னகாரணமென்றான், எ-று.

(க - து.) இப்படி நாரதனைச்சொல்லத் தேவேந்திரன் உலகத்தரசா யுதத்தை விட்டார்களோ, வீரசொர்க்கத்துக்கு வாராதிருந்த வகையென்ன வென்றான் என்பதாம்.

புண்ணியத்தினால் கிடைத்த சம்பத்துக் குறைவுபடாது சற்பாத்திரமாயிருந்து வளர்ப்பவராதலால் விருந்தென் றொழியாது 'நல்விருந்து' என்றார். பொய்சொல்வாரை யொருவருஞ் சேராததுபோல் பூலோகத்தில் அரசாங்கம் செய்து மனிததேகம் விடுத்துத் திவ்வியதேகம் பெற்று விருந்தாய் வாராமல் தன்னுடைய சம்பத்தைத்தானே யநுபவித்திருக்கும்படி யிருத்தலால் 'வரவொழிந்தவாறேது' என்றான். தானே யநுபவித்தலை இனமொழிதனபது "இரத்தலின் னினனது மன்றகிரப்பிய தாம்ம தமிய ருணல்" இதனாலறிக. (கஎ)

கன்னலங்கமு கெழில்காட்டும் தண்பணைசூழ் விதர்ப்பநகர் காவல் பூண்ட, மன்னனருந் தவப்பேற்று லுலகில் வனப் பனைத்துமொரு வடிவ மாகி, யன்னநடை வாய்ந்து மதர் விழியெனவானை முகத்தினிரண் டயில்வே றாங்கிப், பொன்னவிர்பூண் முலையென்னப் பொருப்பேந்தி யிருநிலத்திற் பொலிந்த தன்றே.

(இ - ள்.) கன்னல் - கருமபுகளானவை, கமுகு - கமுகைப்போலும், எழில் காட்டும் - அழகுடையதாய் வளர்ந்து காட்டுகின்ற, தண் பணை சூழ் - தண்ணிய வயல்களாற் சூழப்பட்ட, விதர்ப்ப நகர் - விதர்ப்பதேசத்தை, காவல் பூண்ட - காக்குந்தொழிலை யடைந்த, மன்னன் - வீமராசனுடைய, அரு தவம் பேற்றால் - அரியதவப்பேற்றினாலே, உலகில் - உலகத்திலிருக்கின்ற, வனப்பு அனைத்தும் - அழகெல்லாம், ஒரு வடிவம் ஆகி - ஒருருவாகி, அன்னம் நடை வாய்ந்து - அன்னத்தினடையைப் பொருந்தி, மதர் விழி என - மதர்த்தகண்களென்று சொல்லும்படி, வான் முகத்தின் - ஒளிபொருந்திய முகத்தினிடத்திலே, இரண்டு அயில் வேல் தாங்கி - கூரியவிரண்டு வேற்படைகளைத் தாங்கிக்கொண்டு, பொன் அவிர் பூண் - பொன்னினாற் செய்யப்பட்டுப் பிரகாசிக்கின்ற ஆபரணங்களை யணிந்த, முலை என்ன - தனங்களென்று சொல்லும்படி, பொருப்பு ஏந்தி - இரண்டுமலைகளைத் தாங்கி, இருநிலத்தில் - பெரிய பூவுலகில், பொலிந்தது - பிரகாசித்தது, எ-று.

(க - து.) விதர்ப்பதேசத் தரசனாகிய வீமன்றவத்தால் உலகத் தழகெல்லா மொருவடிவாகித் தமயந்தி உதித்தாள் என்பதாம். (கஅ)

ஆங்கவண்மேல் விழைவின்றாய் நின்னுலகிற் போக முயின் னெயிர்து மன்னனன், மாங்குயிலின் றீங்குதலை மொ

மொழிக்கிணையாச் சிறிதேனு மதிக்க கில்லார், பூங்கமல முகை யனைய பொறிசுணங்கா ரிளமுலையின் பூசல் வேட்டு, வீங் குதடம் புயமெலிய விளைத்திடும்வா ளமர்துறந்தார் வேந்த ரெல்லாம்.

(இ-ள்.) ஆங்கு - அவ்விடத்தில், அவள்மேல் - அத்தமயந்தி யென்னு மாதினிடமேல், விழைவினார் ஆய - விருப்பையுடையவராகி, வின் உலகில் - உலனுடைய வுலகத்தில், போகமும் - போகத்தையும், இன் அமிர்தும் - இனிய அமிர்தத்தையும், அவளுடைய, மா குயிலின் - மாமரத்திலுள்ள குயிலின்மொழியையொத்த, தீ குதலை மொழிக்கு - மதுரம்பொருந்திய மழலைச்சொல்லுக்கு, இணை ஆக - ஒப்பாக, சிறிதேனும் - அற்பமாயினும், மதிக்ககில்லார் - மதியாதவர்களாய், பூ கமலம் முகை அனைய - அழகிய தாமரை யரும்பையொத்த, பொறி - புள்ளிகளபோன்ற, சுணங்கு ஆர் இள முலையின் - தேமல் நிறைந்த இளமைபொருந்திய தனங்களுடைய, பூசல் வேட்டு - போரை விரும்பி, வீங்கு - பருத்த, தடம் புயம் - விசாலம்பொருந்திய தோள்கள், மெலிய - வாட, விளைத்திடும் வாள் அமர் - செய்கின்ற வாட்படையாற் செய்யும் போரை, வேந்தர் எல்லாம் - அரசர்யாவரும், துறந்தார் - விட்டனர்கள், எ-று.

(க-து.) அரசர்கள் தமயந்தியின் கலந்திடப்போரை விரும்பி வாட்போரை விட்டார்கள் என்றுண ரென்றதாம். (௧௬)

அத்தகைய மடவரலோ ராண்டகையை யுளத்தமைத் தா ளவளை யீன்ற, முத்தநெடுங் குடைவேந்த னிலவலய மினிதளிக்கு முதல்வர்க்கெல்லா, முய்த்துரைச் சுயம் வரமென் றோலைபோக் கினனதனை யுரைப்பா னெண்ணி, யித்தலைவெய் தினனென்று னின்னிசைநூன் முழுதுணர்ந் த யாழ்வல் லோனே.

(இ-ள்.) அத்தகைய மடவரல் - அப்படிப்பட்ட குணத்தை யுடைய தமயந்தியானவள், ஓர் ஆண் தகையை - ஒரு ஆண்மகனிற் சிறந்தவனை, உளத்து அமைத்தாள் - மனத்தினகண் வைத்தாள்; அவளை ஈன்ற - அவளைப்பெற்ற, முத்தம் நெடு குடை வேந்தன் - முத்தினாற்செய்த நெடிய குடையையுடைய வீமராசனானவன், நில வலயம் - பூமண்டலத்தை, இனிது அளிக்கும் - இனிதாகப் புரக்கின்ற, முதல்வர்க்கு எல்லாம் - தலைமைபூண்ட வரசர்களுக்கும், உய்த்து உரை - கருத்தைச்செலுத்தி அறிய, சுயம்வரம் என்று - சுயம்வரமென்று, ஓலை போக்கினன் - எழுதப்பட்ட ஓலையைச் செலுத்தினன்; அதனை - அச்செய்தியை, உரைப்பான் எண்ணி - உரைக்கும்படிக்கு நினைத்து, இத்தலை எய்தினன் என்றான் - இவ்விடத்தில் வந்தேனென்று சொன்னான், இன் இசை நூல் முழுது உணர்ந்த - இனிய இசைநூல் முழுவதையும் அறிந்த, யாழ் வல்லோன் - யாழில் வல்ல நாரதமுனிவன், எ-று.

வலிமை பொருந்திய மன்மதனுடைய பாணங்கள் போர்செய்ய, ஆற்றான் ஆகி - பொறுக்கமாட்டாதவனாய், கரு தடம் கண் தமயந்தி - விசாலம்பொருந்திய கண்ணையுடைய தமயந்தியினுடைய, கதிர் முலையும் - காந்திபொருந்திய தனங்களும், வார் காதும் - நெடியசெவிகளும், கழை மென் தோளும் - மூங்கில்போன்ற மெல்லிய தோளும், முருக்கின் இள முறுவலும் - மயிலிறகின் முதனைப்போன்ற சிறிய பற்களும், வாள் முகம் மதியும் - ஒளிபொருந்திய முகமாகிய சந்திரனும், உருவெளி ஆய - உருவெளித்தோற்றமாய, முன்னர் தோன்ற - எதிரே தெரிய, வருந்தி - வருத்தப்பட்டு, அயிராணி முதல - இந்திராணி முதலாகிய, அரமடையர்பால - அரமகளிரிடத்தில், உறு கலையும் - மிகுந்த கலைத்தையும், அன்றே மறந்தான் - அன்றுமுதல் மறந்துவிட்டான், எ-று.

(க-து.) தேவேந்திரன் மன்மதபாணத்துக்குச் சகியாதவனாய்த் தமயந்தி யுருவெளியாகத் தோற்ற வருத்தப்பட்டிந்திராணி முதலி யோ ரின்பங்களை மறந்தான் என்பதாம். (கக)

மன்னுலகின் மடவாரை விழைந்தனனெம் மிறைவ
னென வருந்தி மாழாந், தென்னெனிலெம் மெழிலனலு மிள
மையுநன் றாயவென விகழ்ந்து கூறி, வெண்ணிலவு பொழி
தரள முறுவலயி ராணிமுதல விண்ணில வாழு, மொண்
ணுதன்மங் கையர்மடநாண் மீதூர வோவியம்போன்
றுணர்வு தீர்ந்தார்.

(இ-ள்.) மண் உலகின் மடவாரை - பூலோகத்தி லிருக்கின்ற ஒரு பெண்ணாகிய தமயந்தியை, விழைந்தனன் - விரும்பினான், எம் இறைவன் என - எம்முடைய அரசனென்று, வருந்தி - வருத்தப்பட்டு, மாழாந்து - மயக்கமடைந்து, என் எனில் - என்னுமிடத்தில், எமது எழில் நலனும் - நம்முடைய அழகினுடைய நன்மையும், இளமையும் - இளமைப்பருவமும், நன்று ஆய என - நல்லதாயவென்று, இகழ்ந்து கூறி - பழித்துச்சொல்லி, வெள் நிலவு பொழி - வெள்ளிய பிரகாசத்தைப் பொழிகின்ற, தரளம் முறுவல் - முத்தினையொத்த பற்களையுடைய, அயிராணி முதல் - இந்திராணி முதலாகிய, விண்ணில் வாழும் - தெய்வலோகத்தில் வாழ்கின்ற, ஒள் நுதல் - ஒள்ளிய நெற்றியையுடைய, மங்கையர் - மாதர்கள், மடம் - அறியாமையும், நாண் - நாணும், மீது ஊர - அதிகரிக்க, ஓவியம் போன்று - சித்திரத்தையொத்து, உணர்வு தீர்ந்தார் - அறிவு நீங்கினார்கள், எ-று.

(க-து.) இந்திராணி முதலான மங்கையர்கள் தமதரசன் தமயந்தியை இச்சித்தானென்று சித்திரத்தையொத் தறிவிழந்தார்கள் என்பதாம்.

அயிராணிமுதல் விண்மாத ரென்றமையால் அச்சபையிலிருந்த மேனகை உருப்பசி திலோத்தமை அரம்பை முதலிய தெய்வ மங்கையராம். இவர்கள் அழகு முதலியவற்றில் மிக்கவரென்று மதித்திருந்த தம்மைத் தாமே வெறுத்துக்கொண்டு மானமுடையவ ராகை

யால் புறத்திற் சொல்லாமல் சித்திரம்போல அசைவற்றிருந்தன ரென்க. ஓவியம்போ லென்றமையால் உவமையணி. (உ0)

மதர்நெடுங்க ணரமகளி ரிவ்வாறு துயருழப்ப மனத்திறோராத், ததைமலர்க்கற் பகநறுந்தார் மணிமார்பன் றுயர்கூர்ந்து தருமன்வெய்ய, கதழெரிப்புத் தேள்வருண னுடனேகக் கொடிஞ்சியந்தேர் கடிதிற்றூண்டி, யதிரு நெடுந் திரையாழி சூழ்புவியி னொல்லையின்வந் தடைந் தான் மன்னோ.

(இ - ள்.) மதர் நெடு கண் - மதர்த்த நெடிய கண்களையுடைய, அரமகளிர் - அரம்பையரானவர்கள், இவ்வாறு - இந்தப் பிரகாரம், துயர் உழப்ப - துன்பப்பட, மனத்தின் ஓரார் - மனத்தின்கண்ணே எண்ணாமல், ததை மலர் - நெருங்கிய மலர்களையுடைய, கற்பகம் நறு தார் - நறிய கற்பகமாலையணிந்த, மணி மார்பன் - அழகிய மார்பையுடைய இந்திரன், துயர் கூர்ந்து - துயரமிகுந்து, தருமன் - யமனும், வெய்ய - வெவ்விய, கதழ் எரிப்புத்தேள் - வேகம்பொருந்திய அக்கினி தேவனும், வருணன் - வருணனும், உடன் ஏக - உடனேகவர; கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, அம் தேர் - அழகிய இரதத்தை, கடிதில் தூண்டி - சீக்கிரத்திலே செலுத்தி, அதிரும் - அதிர்கின்ற, நெடு திரை ஆழி சூழ் - நெடிய அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட, புவியின் - பூவுலகில், ஒல்லையில் வந்து அடைந்தான் - விரைவில் வந்து சேர்ந்தான், எ-று. மன் - ஓ - அசை.

(க - து.) இந்திரன் அரமையர் முதலானவர்கள் துன்பப்படுதலை யறியாமல் துன்பப்பட்டு யமன், அக்கினிதேவன், வருணன், இவர்களுடன் தேரிலேறிப் பூமியிலே வந்தான் என்பதாம். (உக)

இந்திரப்படல முற்றும்.

---

ஆ பாடல் - ச0எ.

---

## நளன்றூதுப்படலம்.

[இப்படத்தால் இந்திரன் முதலிய நால்வர்பொருட்டுத் தமயந்தியினிடத்து நளன்றூதுசென்றமை சொல்லப்படுகின்றது]

(கலிவிருத்தம்.)

அண்டருலகத்திறைவனவ்வழியிறுப்ப
மண்டுபுனல்வானவளர்பூகமடல்கீறுந்
தண்டலையுடுத்தநிடதந்தனிபுரக்கு
மொண்டிறலுடைக்குரிசில்செய்திறமுரைப்பாம்.

(இ - ள்.) அண்டர் உலகத்து இறைவன் - தேவருலகத்தை யாளுகின்ற இந்திரன், அவ்வழி இறுப்ப - அவ்விடத்தில் தங்க, மண்டு

புனல் வாளை - நெருங்கிய நீரிலிருக்கின்ற வாளைமீன்களானவை, வளர் பூகம் - வளர்கின்ற கமுகினுடைய, மடல் கீறும் - பாளைகளைக் கிழிக்கின்ற, தண்டலை உடுத்த - சோலைகளை உடுக்கப்பெற்ற, நிடதம் - நிடததேசத்தை, தனி புரக்கும் - ஒப்பறக் காக்கின்ற, ஒள் திறல் உடை குரிசில் - ஒள்ளிய வலிமையையுடைய நளமகாராசன், செய் திறம் - செய்தகாரியத்தை, உரைப்பாம்-(யாம்) சொல்லுவோம், எ-று.

(க-து.) தேவேந்திர னவ்விடத்திருக்க நளன் செய்கையைச் சொல்லுவாம் என்பதாம். (௧)

அன்னமுரைசெய்தவெழிலாயிழையைநெஞ்சத்
துன்னியயர்வோடுமுயிருண்டிலைகொலென்னக்
கன்னன்மதனைங்கணைகருத்திடைகுளிப்ப
மன்னவர்கண்மன்னன்மதிமாழ்கியயர்காலை.

(இ-ள்.) அன்னம் உரை செய்த - அன்னப்புள்ளானது சொல்லிய, எழில் ஆயிழையை - அழகிய தமயந்தியை, நெஞ்சத்து உன்னி - மனத்தினிடத்து நினைந்து, அயர்வோடும் - சோர்வுடனே, உயிர் - உயிரானது, உண்டு இலைகொல் என்ன - உண்டோ இல்லையோ வென்று சொல்ல, கன்னல் மதன் ஐங்கணை - கருப்புவில்லையேந்திய மன்மதனுடைய பஞ்சபாணங்களும், கருத்திடை குளிப்ப - கருத்தினிடத்துத் தைக்க, மன்னவர்கள் மன்னன் - இராசாதிராசனாகிய நளமகாராசன், மதி மாழ்கி - அறிவு மயங்கி, அயர் காலை - துவண்டிருக்குஞ் சமயத்தில், எ-று.

(க-து.) நளன் தமயந்தியை நினைந்து வருந்தப்பட்டுக்காலத்தில் என்பதாம்.

மன்மதபாணம் பிரயோகிக்குமிடம் வெவ்வேறு யுள்ளதேனும் அன்பப்படுவது கருத்தொன்றே யாதலால் 'கருத்திடைகுளிப்ப' என்றார். "செஞ்சி லரவிந்த நீளுற்பல மாகமைமுல்லை, வஞ்சம் விழியி லசோகமாம் - வஞ்சியரே, சென்னிமிசை முலையிதழ் கீழ் மல்குலிலே, பின்னிலவே ளெய்வா னிலை" இதனால் அவ்விடங்கள் காண்க. (௨)

பூகமடல்கீறியிளவாளைபுனல்காலு
மேகமிசைதாவிடுமவிதர்ப்பநகர்மன்ன
னுவகையொடளித்தவுயிரோவியமிருக்குந்
தோகைமணவோலைகொடுதூதுவரடைந்தார்.

(இ-ள்.) பூகம் மடல் கீறி - கமுகம்பாளையைக் கிழித்து, இள வாளை - இளமைபொருந்திய வாளைமீன்களானவை, புனல் காலும் - நீரைச்சொரிகின்ற, மேகமிசை தாவும் - மேகத்தின்மீது தாவுகின்ற, விதர்ப்ப நகர் மன்னன் - விதர்ப்பதேசத்தையாளுகின்ற வீமராசனானவன், உவகையொடு அளித்த - மகிழ்ச்சியுடனே பெற்ற, உயிர் ஓவியம் இருக்கும் - உயிரையுடைய சித்திரத்தை ஒப்பாயிருக்கின்ற, தோகை

மனை ஓலை கொடு - தமயந்தியினுடைய கலியாண வோலையைக் கொண்டு, அரசர் அடைந்தார் - அரசர்கள் சேர்ந்தார்கள், எ-று.

(க - து,) அரசர்கள் தமயந்தி கலியாண வோலையைக் கொண்டு வந்தார்கள் என்பதாம். (௬)

முடங்கலின்வரைந்தவுரைமுற்றுமுணராமுன்
றடம்புயம்வளர்ந்தனவரைக்குவமைசாலக்
குடங்கையினகன்றவிழிகோநகரிசெல்வான்
மடங்கலனையானுளமகிழ்ச்சியொடெழுந்தான்.

(இ - ள்.) முடங்கலின் வரைந்த - ஓலைச்சுருளில் எழுதப்பட்ட, உரை - சொல்லுகளை, முற்றும் உணராமுன் - முழுவதும் அறியாமுன்னே, தடம் புயம் - பெரிய தோள்களானவை, வரைக்கு உவமை சால - பர்வதங்களுக்கு உவமைபொருந்த, வளர்ந்தன - பருத்தன; குடங்கையில் உள்ளங்கைபோல, அகன்ற விழி - பரந்த கண்களையுடைய தமயந்தியினது, கோநகரி செல்வான் - குண்டின புரத்துக்குச் செல்லும்பொருட்டு, மடங்கல் அனையான் - சிங்கவேற்றினை யொத்த நளமகாராஜன், உளம் மகிழ்ச்சியொடு - மனக் களிப்பினுடனே, எழுந்தான் - எழுந்தனன், எ-று.

(க - து.) நளன் திருமணவோலையின் செய்தியறியுமுன் புயங்கள் பூரித்தன, விதர்ப்பதேசத்துக்குச் செல்லும்பொருட் டெழுந்தான் என்பதாம். (௭)

கொய்யுளைவயப்புரவிகோடியுழைபோத
மையன்மதவாரணமருங்குறநெருங்க
வெய்யதிறல்வாளுழவர்வேலைபுடைசூழ
மொய்த்திரையளக்கரினியம்பலமுழங்க.

(இ - ள்.) கொய்ய உளை - கொய்துகட்டிய புறமயிரையுடைய, வயம் புரவி கோடி - வலிமைபொருந்திய கோடிகுதிரைகள், உழை போத - பக்கங்களிலேவரவும், மையல் - மயக்கம்பொருந்திய, மத வாரணம் - மதயானைகள், மருங்கு உற நெருங்க - பக்கத்திலே நெருங்கிவரவும், வெய்ய திறல் - வெவ்விய வலிமைபொருந்திய, வாள் உழவர் வேலை - வாட்படையையுடைய காலாள்களாகிய கடலானது, புடை சூழ - பக்கங்களிலே சூழ்ந்துவரவும், மொய் - மொய்க்கப் பெற்ற, திரை அளக்கரின் - அலைகளையுடைய கடல்போல, இயம் பல - பலவாத்தியங்கள், முழங்க - ஒலிக்கவும், எ-று.

(க - து.) கோடிகுதிரைகள் சூழ, யானைகள் நெருங்க, சுத்த வீரர்கள் சூழ, கடல்போல வாத்திய முழங்க என்பதாம்.

இப்பாட்டில் போத வென்பதுமுதலிய வினையெச்சங்கள் பின் பாட்டில் போனானென்னு முற்றுவினையைக்கொண்டு முடிந்தன (௮)

விரிகதிரெறிக்குமதிவெண்குடைநிழற்றத்
தரளகைமாதர்பலர்சாமரையிரட்ட

வெரிமணியிமைக்குமுடிமன்னவரிறைஞ்சத்
திருவளருமார்பனுயர்தேரின்மிசைபோனான்.

(இ-ள்.) விரி கதிர் எறிக்கும் - விரியப்பெற்ற கிரணங்களை வீசுகின்ற, மதி - சந்திரனையொத்த, வெள் குடை நிழற்ற - வெள்ளிய குடைகள் நிழலைச்செய்யவும், தரளம் நகை மாதர் பலர் - முத்தினையொத்த பற்களையுடைய அநேகமகளிர்கள், சாமரை இரட்ட - கவரிகள்வீசவும், எரி மணி இமைக்கும் முடி மன்னவர் - காந்தியையுடைய மணிகள் பிரகாசிக்கின்ற மகுடத்தையுடைய அரசர்கள், இறைஞ்ச - வணங்கவும், திரு வளரும் - திருமாதானவள் வளர்கின்ற, மார்பன் - மார்பையுடையவனாகிய நளமகாராஜன், உயர் தேரின்மிசை - உயர்ந்த தேரின்மேல், போனான் - போயினான், எ-று.

(க-து.) வெண்குடை பிடிக்க, பெண்கள் சாமரைவீச, மன்னவர்வணங்க, நளன் தேரேறிச் சென்றான் என்பதாம். (௬)

தேர்நடவுகம்பலைசெவிப்புகுதலோடும்
வார்கடன்முழக்கொலிகொலோமழைமுழக்கோ
சார்வதெனவையமுறும்வானவர்கண்மு
னேர்கெழுமுமாடநிடதத்திறையெதிர்ந்தான்.

(இ-ள்.) தேர் நடவு கம்பலை - தேரைச் செலுத்துகின்ற ஒலியானது, செவி புகுதலோடும் - காதினிடத்து நுழைந்த மாத்திரத்தில், வார் கடல் முழக்கு ஒலிகொலோ - நெடிய கடலொலியோ, மழை முழக்கோ - மேகத்தின் ஒலியோ, சார்வது என - அடைவதென்று, ஐயம் உறும் வானவர்கண் முன் - ஐயமடைகின்ற தேவர்களுக்கு முன்னே, ஏர் கெழுமும் மாடம் - அழகானது பொருந்திய மாளிகைகளையுடைய, நிடதத்து இறை - நிடதத்தேசத்தரசன், எதிர்ந்தான் - எதிர்ப்பட்டான், எ-று. கொல் - ஐயப்பொருள்.

(க-து.) நளன் தேவர்களுக்கு முன்சென்றான் என்பதாம். (௭)

வேறு.

பொற்படந்தேர்மிசைப்பொலிந்துதோன்றிய
மற்றடந்தோளினனைவனப்புநோக்கினா
ருற்றதோர்வியப்பினுக்குள்ளமீந்துதாம்
வெற்றுடம்பாயினார்விண்ணுளோரெலாம்.

(இ-ள்.) பொன் படம் தேர்மிசை - அழகிய பெரிய தேரின்மீது, பொலிந்து தோன்றிய - பிரகாசித்து வந்த, மல் தடம் தோளினன் - மற்போர் செய்கின்ற பெரிய தோள்களையுடைய நளமகாராஜனது, வனப்பு நோக்கினார் - அழகைப் பார்த்தார், உற்றது ஓர் வியப்பினுக்கு - அதனாலடைந்ததாகிய ஒப்பற்ற ஆச்சரியத்துக்கு, உள்ளம் ஈந்து - மனத்தைக்கொடுத்து, விண் உளோர் எல்லாம் - இந்திரன் முதலிய நால்வரும், வெறு உடம்பு ஆயினர் - உயிர்நீங்கிய உடம்பு போலானார், எ-று.

(க - து.) இந்திரன் முதலானவர்கள் தேரின்மேலேறிய நளனழகைக் கண்டு மனதை நளனிடத்திற் செலுத்தி வெறிய வுடம்பினரானார்கள் என்பதாம்.

ஆச்சரியத்தால் அபகரிக்கப்பட்ட மனத்தை யுடையவராயினரென்பது கருத்து. (அ)

மாயிருஞாலத்துவந்துமன்னர்கோ
னேயபேரழகுகண்டிமைப்பினாட்டமோ
ராயிரம்பெற்றபேரடைந்துளேனெனச்
சேயுயர்விசும்பினுக்கிறைவன்செப்பினான்.

(இ - ள்.) மா இரு ஞாலத்து வந்து - மகத்தாகிய பெரிய பூமியில் வந்து, மன்னர் கோன் - நளனுடைய, ஏய பேர் அழகு கண்டு - பொருந்திய பெரிய அழகினைப் பார்த்து, இமைப்பு இல் - இமைத்தலில்லாத, நாட்டம் ஓர் ஆயிரம் - ஆயிரங்கண்களை, பெற்ற பேறு - பெற்றபேற்றினை, அடைந்துளேன் என - இன்று அடையப்பெற்றேனென்று, சேய் உயர் விசும்பினுக்கு இறைவன் - தூரமாக உயர்ந்த சுவர்க்கத்துக் கரசனாகிய இந்திரன், செப்பினான் - சொல்லினான், எ-று.

(க - து.) இந்திரன் பூமியில் வந்து நளனழகைக்கண்டு தான் ஆயிரங்கண் பெற்றதற்கு இன்று பயன்பெற்றேனென்றான் என்பதாம்.

இப்படிப்பட்ட அழகுள்ள புருஷனைக் கண்டதில்லை யென்பது கருத்து. (கூ)

மண்டமர்கடந்தவேன்மன்னர்மன்னனைக
கண்டுமற்றொருவர்தோள்காமுற்றீர்ந்தொடை
தொண்டைவாய்மடமயிலசூட்டுமோவெனத்
தெண்டிரைக்கனைகடற்செல்வன்கூறினான்

(இ - ள்.) மண்டு அமர் கடந்த - நெருங்கிய போரைச் செயித்த, வேல் மன்னர் மன்னனை கண்டு - வேற்படையை யுடைய அரசர்க்கரசனை நளமகாராஜனைப் பார்த்து, மற்று ஒருவர் தோள் - வேறொருத்தர் புயங்களை, காமுற்று - ஆசைப்பட்டு, தொண்டை வாய் - கோவைக் கனிபோன்ற வாயை யுடைய, மட மயில் - தமயந்தியானவள், ஈர்ந்தொடை - குளிர்ச்சிபொருந்திய மாலையை, சூட்டுமோ என - தரிப்பாளோவென்று, தெள் திரை - தெள்ளிய அலைகளையுடைய, கனை கடல் செல்வன் - ஒலிக்கின்ற கடலுக்கரசனாகிய வருணன், கூறினான் - சொல்லினான், எ-று.

(க - து.) நளனைக்கண்ட தமயந்தியானவள் வேறொருவனுக்கு மாலையிடுவாளோ வென்று சமுத்திரராஜன் சொன்னான் என்பதாம். ()

பாந்தண்மேற்கிடந்தபார்பரிக்குந்திண்டிறல்
வேந்தனுக்கேதொடைவேய்ந்திலாளெனி
லேந்திழையெழிலமென்கொலாமெனக்
காந்துவெங்கதழெரிக்கடவுள்சாற்றினான்.

(இ - ள்.) பாந்தள்மேல் கிடந்த - ஆதிசேடன்மீ திருந்த, பார் - பூமியை, பரிக்கும் - சுமக்கின்ற, திண் திறல் வேந்தனுக்கே - திண்ணிய சௌரியத்தையுடைய நளமகா ராஜனுக்கே, தொடை வேய்ந்திலாள் எனில் - மாலையைச் சூட்டாளே யானால், ஏந்திழை - தமயந்தியினுடைய, எழில் நலம் - அழகினது நன்மை, என்கொல் ஆம் என - என்னபிரயோசன மாகுமென்று, காந்து - காந்துகின்ற, வெம் கதம் - வெவ்விய வேகத்தையுடைய, எரி கடவுள் - அக்கினிதேவன், சாற்றினன் - சொல்லினன், எ-று. கொல் - அசை நிலை.

(க - து.) நளனுக்குத் தமயந்தி மாலை யிடாளேயானால் இத்தமயந்தி யழகு என்ன பயனடையுமென்று அக்கினிதேவன் சொன்னான் என்பதாம். (கக)

கழைசுளிபுகர்முகக்களிப்பியானையா
னிழைசுடரெறிப்பவந்திறுத்ததேந்திழை
விழவினுக்காயின்யாமீண்டுபோதலே
யழகிதென்றறைந்திட்டானரோ.

(இ - ள்.) கழை சுளி - கரும்புகளை முறிக்கின்ற, புகர் முகம் - புள்ளிபெற்ற முகத்தையுடைய, களி நல் யானையான் - களிப்புப்பொருந்திய நல்ல யானையையுடைய நளமகாராஜன், இழை - ஆபரணங்கள், சுடர் எறிப்ப - காந்தியை வீச, வந்து இறுத்தது - வந்து தங்கியது, ஏந்திழை - தமயந்தியினுடைய, விழவினுக்காயின் - விவாகத்துக்கானால், யாம் மீண்டு போதலே - நாம் திரும்பிச் செல்லுதலே, அழகிது என்று - அழகையுடையதென்று, அந்தகன் - யமதருமனவன், அறைந்திட்டான் - சொல்லினன், எ-று. அரோ - அசை.

(க - து.) நளன் தமயந்திக்கு மாயகனானால் நாம் மீண்டுபோதலுத்தமமென்று யமன் சொன்னானென்பதாம். (கஉ)

போர்த்தொழிலவயிரவாட்பொருவிலண்ணல்செந்
தார்ப்பசுங்கிளியனுடார்பெறுதுபோய்க்
கார்க்குழலரம்பையர்கமலவாண்முகம்
பார்ப்பதெவ்வாறெனப்பரிவிற்கூறினன்.

(இ - ள்.) போர் தொழில் - போர்செய்கின்ற தொழிலையுடைய, வயிர வாள் - வச்சிராயுத மேந்திய, பொருவு இல் அண்ணல் - ஒப்பில்லாத இந்திரனானவன், செம் - சிவந்த, தார் - மாலையையுடைய, பசும் கிளி அனாள் - பசுமை பொருந்திய கிளியை நிகர்த்தவளாகிய தமயந்தியினுடைய, தார் பெறாது - மாலையைப் பெற்றுக்கொள்ளாமல், போய் - சென்று, கார் குழல் அரம்பையர் - கரிய கூந்தலையுடைய அரமாதருடைய, கமலம் வாள் முகம் - தாமரை மலர்போன்ற ஒளிபொருந்திய முகத்தை, பார்ப்பது - நோக்குவது, எவ்வாறு என - எவ்வாறென்று, பரிவில் - துன்பத்தினால், கூறினன் - சொல்லினன், எ-று.

(க - து.) இந்திரன் தமயந்தி மாலையைப் பெறாதுபோய் அரம்பை முதலியோர் முகத்தை எப்படிப் பார்ப்பதென்று சொன்னான் என்பதாம்.

சந்தேகத்தா லிந்திர னிவ்வாறு கூறினன். (கங)

ஆரத்தமுண்டொளிரும்வா ளவுணர்ச்செற்றுநந்
திருத்தகுசெல்வமுஞ்சிறப்புநல்கிய
விரைத்துணரலங்கலான்வீரசேனன்போன்
றிருத்தலாலிவனைநளனென்னவேண்டுமால்.

(இ - ள்.) ஆரத்தம் உண்டு - உதிரத்தைப் பானம் பண்ணி, ஒளிரும் வாள் - பிரகாசிக்கின்ற வாட்படையையுடைய, அவுணர் செற்று - அசுரர்களைக் கொன்று, நம் - நம்முடைய, திரு தகு - திருவிற்குத் தக்க, செல்வமும் - செல்வத்தையும், சிறப்பும் - சிறப்பையும், நல்கிய - கொடுத்த, விரை துணர் - வாசனை பொருந்திய பூங்கொத்துக்களையுடைய, அலங்கலான் - மாலையை யுடையவனாகிய, வீரசேனன் போன்று - வீரசேன ராஜனை யொத்தவனாகி, இருத்தலால் - இருந்திடலால், இவன் - இவனை, நளன் என்னவேண்டும் - நளமகாராஜனென்று சொல்லவேண்டும், எ-று.

(க - து.) அசுரர்களைக்கொன்று நமது செல்வத்தைக்கொடுத்த வீரசேனனை யொத்திருத்தலால் இவன் அவன்மகனாகிய நளனெனச் சொல்லவேண்டுமென்றா னிந்திரன் என்பதாம்.

மிகுந்த வலிமையுடையரென்பதுதோன்ற 'ஆரத்தமுண்டொளிரும் வாளவுணர்' என்றும், அவர்களால் முழுவது மிழந்ததைத்தோன்றத் 'திருத்தகு செல்வமுஞ் சிறப்புநல்கிய' என்றும், வெற்றிமாலையணிந்தோனென்பது தோன்ற 'விரைத்துணரலங்கலான்' என்றும் சொல்லினர். முன் னொருகாலத்திலே தன்னைப் புறங்கண்ட அசுரர்களைவென்று தெய்வலோகத்தை நிலைநிறுத்தி இழந்த செல்வத்தையுஞ் சிறப்பையுந் தந்த வீரசேனனைப் போலுதலால் அவன் குமாரனாகிய நளனென்று இந்திரன் நிச்சயித்தான். தந்தைபோலும் புதல்வனென்பது "செங்கோலாய செழுமுனை மறுமச, செக்கலேயாகி வினைதவா வெங்கோல, வயனிறையக் காக்கும் வளவயலூர, மகனறிவு தந்தையறிவு."— இந்நூற் காண்க. (கச)

சேற்றிதழ்த்தாமரைமலரத்தெண்கட
றோற்றுசெங்கதிரெனத்தோன்றுநின்னையா
மேற்றநல்லோரையிலெழுந்தாலன்றே
யாற்றெதிர்ப்பட்டனமலங்கல்வேலினாய்.

(இ - ள்.) அலங்கல் வேலினாய் - வெற்றிமாலையணிந்த வேற்படையேந்திய நளமகாராசனே, சேறு - சேற்றிலிருக்கின்ற, இதழ் தாமரை - இதழ்களையுடைய தாமரைகள், மலர - விகசிக்க, தெண் கடல் - தெள்ளிய கடலினிடத்து, தோற்று - தோன்றுகின்ற, செங்கதிர் என - சூரியனைப்போல, தோன்றும் நின்னை - வந்த உன்னை, யாம் - யாங்கள், ஏற்ற - தக்க, நல் ஓரையில் - நல்ல இராசியில், எழுந்தால் அன்றே - புறப்பட்டபடியா லல்லவா, ஆறு - வழியில், எதிர்ப்பட்டனம் - எதிர்ப்பட்டோம், எ-று.

(க - து.) சூரியன்போலத் தோற்று முன்னை நல்ல இலக்கினத்திற் புறப்பட்டபடியால் வழியிற் கண்டனமென்றார்கள் என்பதாம்.

ஓரை - இராசி "ஓரையே மாதாகூடி விளையாட லுடனிராசி" உவமையணி. (கரு)

இவனழற்கடவுண்மற்றிவன்வெங்கூற்றுவ
னுவனெறிகடற்கிறையொழிந்துநின்றயான்
கவனவாம்பரியுளமுணருங்காவல
வவிரொளிமணிமுடியமரர்வேந்தனே.

(இ - ள்.) கவனம் - வேகத்தையுடைய, வாம் பரி உளம் - தாவுகின்ற குதிரையினுடைய கருத்தை, உணரும் காவல - அறியும் நளமகாராஜனே, இவன் அழல் கடவுள் - இவ னக்கினிதேவன், இவன் வெங் கூற்றுவன் - இவன் வெப்பம்பொருந்திய யமன், உவன் - அவன், எறி கடற்கு இறை - அலையை வீசுகின்ற கடற்கரசனாகிய வருணன்; ஒழிந்து நின்ற யான் - இவரொழியநின்ற யானேனெனில், அவிர் - பிரகாசிக்கின்ற, ஒளி மணி - காந்தியையுடைய மணிகளா லிழைக்கப்பட்ட, முடி - கிரீடத்தையுடைய, அமரர் வேந்தன் - தேவர்க்கரசனாகிய இந்திரன், எ-று.

(க - து.) குதிரைக் கருத்தை யறியு நளராஜனே, இவன் அக்கினிதேவன், இவன யமன, இவன் வருணராஜன, யான இந்திரன என்றான் என்பதாம். (கசு)

உன்னுழைவேண்டுவதொன்றுண்டாங்கது
பின்னர்யாங்கூறுதுமென்றுபெட்புறும்
பொன்னகர்க்கிறையவனிருந்தபோதினின்
மன்னவனவரடிவணங்கினனரோ.

(இ - ள்.) உன்னுழை வேண்டுவது - உன்னிடத்தில் (யாம்) விரும்புவது, ஒன்று உண்டு - ஒருகாரியமுண்டு, அது - அதனை, பின்னர் யாம் கூறுதும் என்று - பின்பு யாம சொல்லுவோமென்று, பெட்பு உறும் - விருப்பமடைந்த, பொன் நகாக்கு இறையவன - இந்திரனானவன், இருந்த போதினில் - இருந்தபொழுதில், மன்னவன - நளமகாராசன், அவா அடி - இந்திரனமுதலிய அந்நால்வா பாதங்களையும், வணங்கினன் - வணங்குதல்செய்தான், எ-று. அரோ - அசை.

(க - து.) உன்னிடத்தில் வேண்டுவ தொன்றுண்டு, அதைப் பின்னே சொல்வேனென் றிந்திரன்சொல்ல நள னிந்திரன் முதலியோரை வணங்கினன் என்பதாம். (கஎ)

[இனி ஆறுபாட்டால் நளனுடைய சிந்திப்புச் சொல்லப்படுகின்றது.]

உண்டெனகிழ்ந்திறைஞ்சியவுலங்கொடோளினன்
விண்ணுலகாள்பவர்க்கரியமேம்பொருள்

மண்ணுலகாள்பவர்மாட்டுவைகுமோ
வெண்ணின்மறறிவருளம்யாவதாங்கொலோ.

(இ - ள்) உள் நெகிழ்ந்து - உள்ளம் குழைந்து, இறைஞ்சிய — வணங்கிய, உலம் கொள் தோளினான் - திரளகல்லினுடைய வலிமையைகொண்ட தோள்களையுடைய நளமகாராசன், விண் உலகு ஆள்பவாக்கு - தேவலோகத்தை யாளுகின்றவாககு, அரிய மேல் பொருள் - அருமையாகிய மேன்மைபபட்ட பொருள், மண் உலகு ஆள்பவாமாட்டு - மணணுலகாள்பவரிடத்து, வைகுமோ - இருக்குமோ, எண்ணில் - எண்ணுமிடத்தில், இவா உளம் - இவருடைய மனம், யாவது ஆம் கொலோ - யாதாகுமோ, எ-று. கொல - ஐயம், ஓ - அசை.

(க - து) அவ்வாறு வணஙகிய நளன விண்ணுட் டரசாக் கரிய பொருள் மணணுட் டரசாககுக கிடைககுமோ, இவா கருதழதென்னவோ என்றான் எனபதாம.

மண்ணுலகததோா வருந்தித தவஞ்செயது பெறற்குரியது பொன்னுலகம், அதனை யாளுகினற தலைமைபெற்ற இந்திரனுககும் அரிய பொருளுணடோ, ஆயின அது நமபா லுளதாகுமோ, ஆதலின் இஃதியாதோவென ஐயுறறன னெனக. மண்ணுலகெனறதனுல் விண்ணுலகைப் பொனனுலகெனக கொள்ளபபட்டது. (கஅ)

குறிப்பறிந்தீதலேகொடைமற்றின்றென
மறுத்தலேகேட்டபின்வழங்கலாதலிற்
பெறறகருமாவியுமபெட்பினீகுவன்
றிறப்படவிவருளந்தெரிந்ததிலலையால்.

(இ-ள்.) குறிப்பு அறிந்து - (ஒருவா) குறிப்பினைத் தெரிந்து, ஈதலே - கொடுததலே, கொடை - கொடுததலாகும், கேட்ட பின் - கேட்ட பின்பு, வழங்கல் - கொடுத்தல், இன்று என மறுத்தலே - இல்லையென்று தடுத்தலே யாகும், ஆதலின் - ஆகையினலே, பெறற்கு அரும் ஆவியும் - பெறுதற்கரிய உயிரையும், பெட்பில் - அன்பினலே, ஈகுவன் - கொடுப்பேன், திறப்பட - நிச்சயமாக, இவா உளம் - இவருடையமனம், தெரிந்ததில்லை - தெரியவில்லை, எ-று. ஆல் - அசை.

(க - து.) குறிப்பறிந்து கொடுத்தலே கொடையாகும், கேட்டபின் கொடுததல் மறுத்தலாகும்; ஆகையால் என்னுயிரையுங் கொடுப்பேன் உண்மையாக இவருள்ளத்தை யறிந்திலேன் என்றான் என்பதாம்.

உம்மை - உயாவுசிறப்பு. குறிப்பறிதலாவது தன்னிடத்தொன்றை விரும்பிவருபவனது முகக்குறிகளா லவன் கருத்தையறிதல். அது "உயிாக்கொலை, புரிந்தவா முகக்குறி, யுணாக்கும்" என்பதனு லறிக. அஃதறிந்தீதலாவது "இலனென்னு மெவ்வ முரையாமை யீதல், குலனுடையான் கண்ணே யுள" இதனுலறிக. கேட்குமிடத் துண்டாம் மானமிழத்தல் அச்சப்படுதல் முதலியவருத்தும் இல்லையென்னும்போதுண்டாகும் வருத்தத்தோ டொப்பாதலின் இன்றென மறுத்தலே

கேட்டபின் வழங்கலென்றா. கொடுக்கும் பொருளின் முடிவாகிய ஆவி யெனினும் அனபோடு கொடுப்பே னென்றதாம. (கக)

ஒளிமுகமிழப்பவந்துற்றநாணமீக்
கிளர்தரவிலலெனககிளககுமூர்ச்சனை
தெளிதரமுகத்தினிற்றெளித்தற்கன்றுகொல்
நளிபுனலபொருளொடுநலகுகின்றதே.

(இ - ள்.) முகம் - முகமானது, ஒளி இழபப - ஒளிநீஙக, வந்து உற்ற நாணம் - வந்து மிகுநத நாணமானது, மீ கிளாதர - அதிகரிக்க, இல் என கிளககும் - இல்லையெனறு சொலலும், மூாச்சனை - மூாச்சையானது, தெளிதர - தெளியும்படி, முகததினில் - முகத்தினிடத்தில், தெளிததற்கு அன்றுகொல - தெளிததறகல்லவா, நளி புனல் - குளிாந்த நீரை, பொருளொடு - திரவியததுடனே, நல்குகினறது - கொடுக்கினறது, எ-று. ஏ - அசை.

(க - து.) அகமலாநது கொடுதல முக மலரும்பொருட்டு என்பதாம்.

நாணந தலைக்கொண்டு எனககில்லையென்று சொல்லும் பொழுதுண்டாகு மூாச்சைதெளிதறகு முகததிற றெளிபபுத தண்ணீரைப் பொருளொடு கொடுப்ப தென்க. விதிபபடி கொடுக்கு நீரில் மூாச்சை தெளிதற் பொருட்டெனக குறித்தலால் தற்குறிப்பணி. (உ0)

ஐந்தருநீழலினரசுவைகிய
விந்திரன்முதலினோரீகென்றென்னுழை
வந்துயர்பெரும்புகழ்வழங்கினாரிவர்
சிந்தனைமகிழ்வுறவென்கொலசெய்வதே.

(இ - ள்.) ஐந்தரு நீழலின் - பஞ்சதருவி னிழலிடத்து, அரசு வைகிய - அரசிருக்கினற, இந்திரன் முதலினோா - இந்திரனுதியோராகிய நால்வரும், ஈக என்று - தருவாயென்று, என்னுழை வந்து - என்னிடத்தில் வந்து, உயா பெரு புகழ் - உயாந்த பெரிய கீாத்தியை, வழங்கினா - கொடுததாாகள், இவா - இவாகளுடைய, சிந்தனை - மனங்கள், மகிழ்வு உற - மகிழ்ச்சிபொருந்த, என் செய்வது - யாது செய்வது, எ-று. ஏ - அசை.

(க - து.) இந்திரன் முதலானவாக ளென்னிடத்தில் வந்து ஈந்தருள்செய் என்றாாகள், இவாகள் மனமகிழும்படி என்செய்யலாமென்றான் என்பதாம்.

யாது விரும்பினும் இக்கிரனுக் கொருகுறை யில்லையென்பது தோன்ற 'ஐந்தருநிழலி னரசுவைகிய' வென்றாா. யாசகாகள் எதைக் கேட்க நினைத்தார்களோ அதைக் கொடுத்தாலல்லாமல் அவராற் றரப்பட்ட புகழ் நில்லாதென்பது கருத்து. (உக)

உரவுநீர்க்கருங்கடலுடுத்தமாநிலத்
தருளுடனிம்மையினளித்தவான்பொருண்

மருவியமறுமையில்வழங் குபான்மையா
லிரவலர்தமரினுமினியராவரே.

(இ - ள்.) உரவு நீர கரு கடல் - ஒலிக்கின்ற நீரையுடைய கரிய கடலை, உடுத்த - ஆடையாகத்தரித்த, மா நிலத்து - மகத்தாகிய பூமியில், அருளுடைய - கருணையுடையோர், இம்மையில அளித்த - இப்பிறப்பிற் கொடுத்த, வான் பொருள - மேலாகியபொருளை, மருவிய மறுமையில் - பொருந்திய மறுபிறப்பில், வழங்கு பான்மையால் - கொடுக்கின்ற தன்மையால், இரவலா - யாசகாகள, தமரினும் - தம்மவரினும, இனியா ஆவா - இனிமையுடையவராவா, எ-று.

(க - து.) இப்பிறப்பிற் கொடுத்தபொருள் மறுபிறப்பில் வருமாதலால் யாசகாகள் உறவினரைப்பாாககிலும் இனிமை யுடையவர்களாவாரகள். என்பதாம.

தம்மவா - உறவோா. இப்பிறப்பிற் கொடுப்பதை மறுபிறப்பிலவரிருக்கு மிடத்திற்குச் சென்று தருடவ ராதலால் யாசகரைத் தம்மவரினும் இனியரொன்றூா "அற்றூ ரழிபசி தீர்த்த லஃதொருவன், பெற்றூன் பொருளவைப்புழி." அது கொடுப்பவருக்கு ஆஸ்தியென்பது இதனுலறிக. (உஉ)

உடைப்பெரும்பொருளினையுலகிலூதியங்
கிடைப்பதற்களித்தலிலகிளர்நிரப்பினு
லடுத்துவந்தேற்குநர்ககாாவமீதுறக
கொடுக்கிலொன்றேபலகோடியாகுமால.

(இ - ள்.) உடை பெரு பொருளினை - தமதாகவுடைய பெரிய திரவியத்தை, உலகில் - உலகத்தில், ஊதியம் கிடைப்பதற்கு - இலாபம் கிடைக்கும்பொருட்டு, அளித்தலில - கொடுப்பதிலும், கிளா நிரப்பினுல் - மிகுந்த வறுமையினுல், அடுத்து வந்து - அனுசரித்துவந்து, ஏற்குநாக்கு - யாசிப்பவாக்கு, ஆாவம் மீதுற - ஆசை அதிகரிக்க, கொடுக்கில் - கொடுத்தால், ஒன்றே பல கோடி ஆகும் - ஒருபொருளே பலகோடிப் பொருளாகும், எ-று. ஆல் - அசை.

(க - து.) தமக்குள்ள பொருளை இலாபங் கிடைக்கும்பொருட்டுக் கொடுப்பதிலும் யாசகருக்குக் கொடுக்கு மொன்றே பலகோடியாகும் என்பதாம்.

உலகத்திலே ஒருவருக்கு இலாபத்திற்குக் கொடுப்பதைக் காட்டிலும் யாசகாக்குக் கொடுப்பதில் அநேகங்கோடி இலாபம் உண்டென்பதாம். (உங)

[நளன்சொல்லுதல்.]

என்றுமற்றினையனவெண்ணிவண்ணவான்
குன்றெனப்பணைத்துயர்குவவுத்தோளினன்
வன்றிறல்வாசவன்வதனநோக்கிமற்
றின்றுநீகேட்டியென்றுரைத்தன்மேயினன்.

(இ-ள்.) என்று - இப்படியென்று, இனையன எண்ணி - இத்தன்மையவாக நினைந்து, வண்ணம் வான் குன்று என - அழகிய மேலாகிய மலையைப்போல, பணைத்து உயர் - பருத்து உயர்ந்த, குவவு தோளினன் - திரட்சிபொருந்திய தோளையுடைய நளமகாராசன், வன் திறல் வாசவன் - மிகுந்த வலிமைபடைத்த இந்திரனுடைய, வதனம் நோக்கி - முகத்தைப்பார்த்து, ஒன்று நீ கேட்டி என்று - ஒருசெய்தி நீ கேட்பாயாக வென்று, உரைத்தல் மேயினன் - சொல்லத்தொடங்கினான், எ-று. இரண்டும் மற்றும் அசைநிலைகள்.

(க - து.) நள னிவ்வாறு நினைத்துத் தேவேந்திரன் முகத்தைப் பார்த்துச் சொல்லத்தொடங்கின னென்பதாம். (உ௪)

என்னருந்தவத்தினன் றெனது தொல்குல
முன்னையோ ரருந்தவ முயன்ற பான்மையாற்
பொன்னகர் துறந்துநீர் போதப் பெற்றனன்
சொன்னவை மறுக்கிலன் சொல்க வென்றனன்.

(இ - ள்.) என் அரு தவத்தின் - என்னாற்செய்யப்பட்ட அரிய தவத்தினாலே, அன்று - அன்றாகும், எனது தொல் குலம் - என்னுடைய பழைய குலத்திற்றோன்றிய, முன்னையோர் - பெரியோர்கள், அரு தவம் முயன்ற பான்மையால் - அரியதவத்தை முயன்று செய்தபடியினாலே, பொன் நகர் துறந்து - தெய்வலோகத்தை நீங்கி, நீர் போத பெற்றனன் - நீவிர் இங்கே வரப்பெற்றேன், சொன்னவை மறுக்கிலன் - சொல்லிய செய்திகளை மறுக்கமாட்டேன், சொல்க என்றனன் - சொல்லக்கடவீ ரென்றான், எ-று.

(க - து.) என் றவத்தாலல்ல, என்குலத்தோர் செய்தவத்தால் நீங்க ளிங்கேவரப் பாக்கியம்பெற்றேன், தாங்கள் சொல்பவற்றைத் தடுக்கேன் சொல்லுங்க ளென்றான் என்பதாம்.

மேன்மையுள்ள நீவிர் வருதற்கு ஏற்றதவம் யானொருவன் செய்தது போதா தாதலால் எனக்கு முற்பட்டவர் செய்த தவமாகு மென்றான். (உரு)

[நளனுக்கு இந்திரன் சொல்லுதல்.]

ஆங்கது கேட்டவா னரசன் பொற்பினால்
வீங்குதோண் மாரனை வென்ற நீயலால்
யாங்குள ரவன்றொடுத் தெய்யு மின்னறாப்
பூங்கணை யால்வருந் துயரம் போக்குவார்.

(இ - ள்.) ஆங்கு - அவ்விடத்தில், அது கேட்ட - அம்மொழியைக் கேள்விப்பட்ட, வான் அரசன் - இந்திரனென்பவன், பொற்பினால் - அழகினால், வீங்கு தோள் மாரனை - பருத்த தோளையுடைய மன்மதனை, வென்ற - வெற்றிகொண்ட, நீ அலால் - நீ யொருவனல்லாமல், அவன் தொடுத்து எய்யும் - அம்மன்மதனென்பவன் நாரியிற்றொடுத்து பிரயோகஞ் செய்கின்ற, இன் நறா - இனிய தேனொழுகுகின்ற, பூ கணையால் -

மலரம்பால், வரும் துயரம் - வருகின்ற துயரத்தை, போக்குவார் - நீக்குவார், யாங்கு உளர் - எவ்விடத்திலுளர், எ-று.

(க - து.) அவ்வார்த்தையைக் கேட்ட இந்திரனானவன் உன்னையல்லாது மன்மதபாணத்தை நீக்குபவர் யார் என்றான் என்பதாம்.

பருத்ததோளையுடைய மன்மதனை அழகினால் செயித்த நீயல்லாமல் அவன் வாளியால் வருந்துன்பத்தை நீக்குவோர் பிறர்யார். அழகினாலென்றதை வீங்குதலோடுங் கூட்டுக. அன்றி வென்ற வென்பதோடுங் கூட்டிப் பொருள்கொளின் மிகுந்த வழகுள்ளவனென்னும் பொருள்படுதலால் துன்பம் நீக்குதற்கு வல்ல ஏதுவில்லையாயிற்று. முற்படியாயின் காமனை வென்றவனென்றலில் சிதேந்திரியன் எனனும் பொருள் படலால் அத்துன்பம் நீங்கியவன் பிறர்க்கும் அத்துன்பத்தை நீக்குவானென்பது பெறலும். (௨௬)

வெயில்விரிமணிமுடிவீமனலகிய
மயிலியன்மதர்விழிவளைக்கைமங்கைபாற்
செயிரறுதூதுநீசெலலவேண்டுமென்
றுயிரிரப்போரினுமுளையககூறினான்.

(இ - ள்.) வெயில் விரி - பிரகாசம் விரிகின்ற, மணி முடி - மணிகள் பதித்த முடியையுடைய, வீமன நலகிய - வீமராசன் பெற்ற, மயில் இயல் - மயிலையொத்த சாயலும, மதர் விழி - களிப்புமிக்க கண்களும், வளை கை - வளையலையணிந்த கைகளையுமுடைய, மஙகைபால் - தமயந்தியிடத்தில, செயிர் அறு - குற்றமற்ற, தூது நீ செல்லவேண்டும் என்று - நீ தூதுபோகவேண்டு மென்று, உயிர் இரப்போரினும் - உயிரைககொடுவென் றிரப்பவராப் டாககிலும, உளைய - வருந்த, கூறினான் - சொல்லினான், எ-று.

(க - து.) இந்திரன் நளனைப்பார்த்து தமயந்தியிடத்துத் தூது செல்ல வேண்டுமென்றான் என்பதாம்.

நளனால் விரும்பப்பட்ட உயிரினுஞ் சிறந்த தமயந்தியினிடத்து அவனை தூதுசெலலுதலில் ஒருவ ருயிரிரத்தற்கு ளுளதாந் துன்பத்தினும் அதிக வருத்தமிருத்தலால 'உயிரிரப்போரினு முளையக்கூறினான்' என்றார். (௨௭)

திருததகுசெவியிடைச்சிலையினூடுற
வுருககியசெம்பினையூற்றினலென
மருத்துவன்றீமொழிகேட்டுமன்னர்கோன்
கருத்தழிந்தாருயிர்கலங்கினனரோ.

(இ-ள்.) திரு தகு செவியிடை - அழகுபொருந்திய காதினிடத்திலே, சிலையினூடு - உலைமூக்கில், உற - பொருந்த, உருககிய செம்பினை - உருக்கப்பெற்ற செம்பை, ஊற்றினால் என - ஊற்றியதுபோல, மருத்துவன் - இந்திரனுடைய, தீ மொழி - தீயையொத்த சொல்லை, கேட்டு - கேள்விப்பட்டு, மன்னர்கோன் - நளமகாராசனானவன், கருத்து

அழிந்து - நினைவுமறந்து, ஊா உயிர் - நிறைந்த ஆவி, கலங்கினான் - கலக்கமுற்றான், எ-று.

(க - து.) நளன் உருக்கியசெம்பினைக் காதி லூற்றினாற்போலும், இந்திரன் கொடுமொழிகேட்டுக் கருத்தழிந்து உயிர்க்கலக்க மடைந் தான் என்பதாம்.

தான் விரும்பிய தமயந்தியை யபகரிக்கத் தன்னையே தூதுசெல் லச் சொன்னதாதலால் நளனுக்கு இந்திரன் சொல்லியது தீமொழியா யிற்று. செம்பையூற்றினாலெனை வெனலால் உவமையணி. (உஅ)

குருமணிமேகலைகுவளைக்கண்கொலோ
பொருமதன்பகழியோபொய்ம்மைதீதெனுந்
தருமமோவுயிர்நிலைதளர்ந்துவாடுமென்
மருமமீதூன்றியவாளிற்போழ்வதே.

(இ - ள்.) குரு மணி - நிறம்பொருந்திய இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற, மேகலை - மேகலாபரணமணிந்த தமயந்தியினது, குவளை கண்கொலோ - நீலோற்பலம்போன்ற கண்ணோ, பொரு மதன் பகழி யோ - போர்செய்கின்ற மன்மதனுடைய பாணமோ, பொய்ம்மை தீது எனும் - பொய்யுரை குற்றமென்று சொல்லும், தருமமோ - அற மோ, உயிர்நிலை தளர்ந்து - சீவநிலையானது தளர்ச்சியடைந்து, வாடும் என் - மெலிவேனாகிய வென்னுடைய, மருமமீது - மார்பினிடத்தில், ஊன்றிய வாளில் - தைக்கச்செய்த வாளாயுதத்தைப்போல், போழ் வது - பிளக்கின்றது, எ-று.

(க - து.) தமயந்தியின் கண்ணோ, மன்மதன் பாணமோ, பொய் யுரை தீதென்னுந் தருமமோ, என்னுடைய மார்பில் வாளாயுதம்போ லும் பிளப்பது என்றான் நளன் என்பதாம்.

மேகலை - எட்டுச்சரமுள்ளது. தமயந்தி கண்ணோ மன்மத பாண மோ பொய்யுரை தீதென்னுந் தருமமோ எனமார்பினிடத்தில் வாட் படைபோலும் பிளப்பதெனக் கூட்டுக. கண்கொலோ பகழியோ தரு மமோ வெனலால் ஐயவணி. வாளிற்போழ்வதே யெனலால் உவமை யணி. இவ்விரண்டுங் கலந்து வருதலால் கலவையணி. (உக)

என்னும்விள்ளாதயர்ந்திருக்குமேமுறுந்
தன்னையுமறக்குமெய்த்தருமநன்றெனப்
புன்னகைகோட்டுமெய்புழுங்குமவெய்துயிர்த்
தன்னமுன்னுரைத்தவையனைத்துமெண்ணுமால.

(இ - ள்.) என்னும் - இப்படி யென்று சொல்லுவான்; விள்ளாது - பேசாமல், அயர்ந்திருக்கும் - துன்பப்படுவான்; ஏமுறும் - மயங்கு வான்; தன்னையும் மறக்கும் - தன்னையுமறப்பான், மெய் தருமம் - உண்மை பொருந்திய அறம், நன்று எனு - நல்லதென்று, புல் நகை கோட்டும் - புன்சிரிப்புக் கொள்ளுவான்; மெய் புழுங்கும் - உடல் வெதும்புவான்; வெய்து உயிர்த்து - அச்சமடைந்து, அன்னம் - அன்

முன்னினுநினைத்தவையனைத்துமுற்றுமா
லன்னநீயேகிலேதரியதாகுமே.

(இ - ள்.) என்ன - இப்படியென்று, வேந்து உரைத்தலும் - நளமகாராஜனவன் சொல்லலும், இசைத்த சொல் - சொல்லிய சொல்லினை, மறாதின்னை - மறுக்காத உன்னையும், மெய் பரதனை - உண்மையையுடைய பரதனையும், நிகர் இல பார்த்தனை - ஒப்பில்லாத அருச்சுனனையும், முன்னினும் - நினைத்தாலும், நினைத்தவை அனைத்தும் - நினைத்த காரியங்களெல்லாம், முற்றும் - முடியும், அன்ன நீ - அத்தன்மையையுடைய நீயே, ஏகில - போனால், ஏது - எந்தக்காரியம், அரியது ஆகும் - அருமையை யுடையதாகும், எ-று. ஆல் - அசைநிலை.

(க - து.) உன்னையும் பரதனையும் அருச்சுனனையும் நினைத்தால் நினைத்தகாரிய முடியும், நீயேபோனால் காரியமரிதோ என்று னிந்திரன் என்பதாம்.

பரதன் அரச்சுனன் எனப் பொதுப்படக்கூறினும் சகுந்தலை புத்திரனாகிய பரதனும் ஏகையபுத்திரனாகிய கார்த்தவீரிய அரச்சுனனுமெனக் கொள்க. பரதனை இராமனிளவலென்றும், பார்த்தனை வீமனிளவலென்றும், பொருள் கொளவாருமுண்டு. அவ்வாறுகொள்ளிற் காலவேற்றுமைப படலாலும் வடநூலுரையுடன் மாறுபடலாலும் சான்றோ ராட்சி யல்லாமையாலும் மரபுவழு வாதலாலும் இழுக்காமெனச.

"தரைதிருத்த தியசீா வைனிய னென்னுந் தனிக்குடைப பிரிதுவேந் தினையும, விரைமலா ந் தொடையே கையனறு கார்த்த வீரிய வருச்சுனன றனையும், உரைச்குந தலைபுத்த திரனெனும் பரத நாடு நளனையு மொருசெயறகுப, புரையறச சொல்லும் பொழுதுமுன் னினரப பொருளபெறீஇ விரைந்துமீள குவராஸ்".

இச்செயயுள வடநூலுரை மேறகோளின்படி இவ்வுரை காரரால் மொழிபெயாககபபடடது. பிறாககும உன்னினைப்பால் முடியுங்காரியம நீயேசெனறால முடிதறகுச சந்தேகமில்லை யென்றலால செய்யுட் பொருட்பேறணி. (ருசு)

[நளன தூதுசெல்லச சம்மதித்தது.]

இனையனவாசவனியம்புமெல்லையின்
வனைமலர்கோதைதன்வயத்தனாகியுந்
தனியறனிழுக்குறுத்தகையனாதலி
னனையதறகியைநதனனலங்கலவேலினன்.

(இ - ள்.) வாசவன் - இந்திரனானவன், இனையன இயம்பும் எல்லையில் - இத்தன்மையவாகிய சொற்களைச் சொல்லுகின்ற பொழுதில், வனை மலர் கோதைதன் - மலரையணிந்த கூந்தலையுடைய தமயந்தியினது, வயத்தனாகியும் - வசப்பட்டவனாயிருந்தும், தனி அறன் - ஒப்பற்ற தருமத்தினின்றும், இழுக்கு உறா தகையன் ஆதலின் - கெடுதலடையாத குணத்தை யுடையவனாதலால், அனையதற்கு - அவ்விந்திரன்

சொன்னதற்கு, அலங்கல் வேலினன் - வெற்றிமாலையைத்தரித்த வேற்படையேந்திய நளமகாராசன், இயைந்தனன - உடன்பட்டான், எ-று.

(க - து.) நளன் தூதுபோகச் சம்மதித்தான் என்பதாம். (௩௫)

[நீ செல்லத் தடையுளதோ வென்ற இந்திரனுக்கு
நளன் சொல்லியது.]

பொருந்தியமன்னர்கோன்பொம்மல்வெம்முலைத்
திருந்திழைகடிநகர்ச்சேமமாகிய
வருந்திறல்வாயிலோரறிவுறுதுபோய்
வருந்திறன்யாதெனமறித்துங்கூறினன்.

(இ - ள்.) பொருந்திய மன்னாகோன் - சம்மதிப்பட்ட நளன், பொம்மல் வெம் முலை - பொலிவுபொருந்திய விருப்பததைத தருகின்ற தனங்களையும், திருந்து இழை - திருததமாகிய ஆபரணஙகளையு மணிந்த தமயந்தியினுடைய, கடி நகா - புதுமைபெற்ற நகாக்கு, சேமம் ஆகிய - காவலாகிய, அரு திறல் வாயிலோா - அரிய வல்லமையையுடைய வாயில் காப்பவா, அறிவ உறுது போய் - அறியாமற் புகுந்து, வரும் திறன் யாது என - வருகினறவிதம எப்படியென்று, மறிததும் கூறினன் - மறுபடியுஞ் சொல்லினன, எ-று.

(க - து.) நளன் தமயந்தி யரண்மனைக்காவலாள ரறியாது போய் வரும்வித மெப்படியென்றான் எனபதாம். (௩௬)

[மறைந்துசெல்வதற்கு உபாயமுளதோவென்ற
நளனுக்கு இநதிரனருளியது.]

விட்புலந்தனிபுரந்தருளுமவேந்தர்கோ
னட்பொடுமினியனநவின்றியாவர்க்கும்
கட்புலனுலுருக்காண்கிலாததோர்
நுட்பநூல்விஞ்சையைநுவன்றிட்டானரோ.

(இ - ள்.) விண் புலம் - விண்ணுலகததை, தனி - ஒப்பற, புரந்தருளும் வேநதாகோன் - காககினற இந்திரனனவன், நட்டொடும் - சிநேகத்துடனே, இனியன நவின்று-இன்சொற்களைச சொல்லி, யாவாக்கும் - எவாகளுக்கும், கண் புலனால் - கனைணறிவினல், உரு காண் இலாது - வடிவததை அறியப்படாததாகிய, ஓா நுட்ப நூல் விஞ்சையை - ஒருநுண்ணிய நூலிற்சொல்லும் மந்திரத்தை, நுவன்றிட்டான் - சொல்லினன், எ-று.

(க - து.) இந்திரன் நளனுக் கருபமாகும் வித்தையைக் கற்பித்தான் என்பதாம்.

விஞ்சை—மந்திரத்துக்காதலால் ஆகுபெயா. (௩௭)

பெறலரும்விஞ்சையும்பெற்றுவானவர்க்
கிறையவனிணையடியிறைஞ்சிவண்டிமிர்

நறைமலர்க்கூந்தலாணகரிநண்ணுவா
னறைகழலிலங்குதாளரசனேகினன்.

(இ - ள்.) பெறல் அரும் விஞ்சையும் - பெறுதற்கரிய மந்திரத்தையும், பெற்று - பெற்றுக்கொண்டு, வானவர்க்கு இறையவன் இணை அடி - இந்திரனுடைய இரண்டடிதங்களையும், இறைஞ்சி - வணங்கி, வண்டு இமிர் - வண்டுகள் ஒலிக்கின்ற, நறை மலர் கூந்தலாய் - தேனொழுகுகின்ற மலரையணிந்த அளகபாரத்தையுடைய தமயந்தியினது, நகரி நண்ணுவான் - குண்டினபுரத்திலே சேரும்பொருட்டு, அறை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலானது, இலங்கு தாள் - பிரகாசிக்கின்ற பாதத்தையுடைய, அரசன - நளன, ஏகினன் - போனான், எ-று.

(க - து.) நளன் மந்திரத்தைக்கற்று இந்திரனை வணங்கிச்சென்றான் என்பதாம்.

நெடுநாள் தவஞ்செய்த யோகிகளும் அடைதற் கரிதாதலிற் 'பெறலரும் விஞ்சை' எனப்பட்டது. எடுத்தகருமம் இடையூறின்றி யினிது முடியும்பொருட்டு உலகவழக்கப்படி கடவுளை வணங்குவது முறைமையாதலின் 'வானவர்க்கிறையவ னிணையடியிறைஞ்சி' எனப்பட்டது. இதுமுதல் ஙு-பாட்டுகளால் குண்டினபுரத்துக்குச் செல்லுதல் சொல்லப்படுகின்றன. (ஙூஅ)

பன்னமைகூந்தன்மான்றேரிற்பார்புக
ழண்ணலுமிமையவராரவம்பின்செல
மண்ணிடைவானவர்மகளிர்தம்மொடும்
விண்ணிழிந்திருந்தனநகரமேயினன்.

(இ - ள் ) பன் அமை - கல்லணையமைந்த, கூந்தல் - புறமயிரையுடைய, மான - குதிரைகட்டிய, தேரில் - இரதத்தில், பார புகழ அண்ணலும் - பூமியிலுள்ளார புகழ்கின்ற நளமகாராசனும், இமையவர் ஆரவம் - தேவர்களுடைய ஆசையானது, பின் செல - பின்னேடு தொடர, மண்ணிடை - மண்ணுலகத்தில், வானவர் மகளிரொடும் - அரம்பையருடன், விண் - சுவர்க்கமானது, இழிந்து இருந்தது அன்ன - இழிந்திருந்ததையொத்த, நகரம் - குண்டினபுரத்தை, மேயினன் - பொருந்தினன், எ-று.

(க - து.) நளன் குண்டினபுரத்திற் போயினன் என்பதாம்.

இது குண்டினபுரமென்னும் பெயரினலேமாத்திரம் வேற்று நகராகத் தோன்றுவதன்றிச் சகலசம்பத்து நிறைந்திருக்கின்ற படியால் அமராவதி யென்பதற்குச் சந்தேகமில்லை யென்பது கருத்து. ஆரவம் பின்செல வென்றது உடனிகழ்ச்சியணி. மண்ணுலகத்துள்ள இந்நகரை வானவர் மகளிரொடு மண்ணினிழிந்த விண்ணெனக் குறித்தமையால் தற்குறிப்பணி. (ஙகூ)

வாம்பரித்தேரினின்றிழிந்துவண்டுளர்
தேம்பொதிநறுமலர்த்தெரியுன்மார்பினன்

காம்புறழ்தோளினாள்செவ்விகாண்குறு
மேம்பலிற்கோநகரெய்தினனரோ.

(இ-ள்.) வாம் பரி தேரினின்று இழிந்து - தாவுகின்ற குதிரையையுடைய தேரினின்று மிறங்கி, வண்டு உளா - வண்டுகளானவை ஒலிக்கின்ற, தேன் பொதி - வாசனை நெருங்கிய, நறு மலர் - பரிமளம் பொருந்திய மலராற்றொடுத்த, தெரியல் - மாலையணிந்த, மார்பினன் - மார்பை யுடையவனாகிய நளமகாராசன், காம்பு உறழ் தோளினாள் - மூங்கிலை ஒத்த தோளினையுடையவளாகிய தமயந்தியினது, செவ்வி காண்குறும் - அழகைக் காணவேண்டுமென்கிற, ஏம்பலின் - ஆசையினாலே, கோ நகர் - குண்டினபுரத்தை, எய்தினன் - அடைந்தான், எ-று.

(க - து.) நளன் தமயந்தியைக்காண வாசையால் குண்டின புரத்தையடைந்தான் என்பதாம். (சo)

[இதுமுதல் உரு-பாட்டுகளால் நளன் செல்லுகையி னிகழ்ந்தவை சொல்லப்படுகின்றது ]

உருகுதங்கொழுநர்பாலூடிநீத்தநல
விரைகமழ்தெரியலுமின்செயாரமுங்
குருமணிக்கலன்களுங்குலவுவீதிவா
யெரிமணிப்பூணினனிடறியேகினன்.

(இ - ள்.) உருகு - விருப்பத்தால் தளர்கிற, தம் கொழுநர்பால் - தம்முடைய கணவரிடத்து, ஊடி - பிணங்கி, நீத்த - நீக்கிய, நல் விரை கமழ - நல்ல வாசனை வீசுகின்ற, தெரியலும - மாலையும், மின் செய் ஆரமும் - பிரகாசத்தைச்செய்கின்ற பதக்கமும், குரு மணி கலன்களும் - நிறம்பொருந்திய ரத்தினாபரணமும், குலவு - பிரகாசிக்கின்ற, வீதிவாய் - வீதியினிடத்தில், எரி மணி பூணினன் - ஒளியையுடைய மணிகள் பதித்த ஆபரணத்தையுடைய நளமகாராசன், இடறி ஏகினன் - காலிடறிக்கொண்டு போனான், எ-று.

(க - து.) நளன் பூமாலை இரத்தினாபரண மிவற்றை இடறி நடந்தான் என்பதாம்.

மிகுந்த அன்புடையோரென்றதற்கு 'உருகுதங்கொழுநர்' என்றும், அவரிடத்தும் ஊடினாலன்றி இன்பம பயவாமையால் 'ஊடி' என்றும், ஊடலில் தம்மெய்யி லணிவனவற்றில் வெறுப்புண்டாதலில் 'நீத்த' வென்றும், செல்வச்செருக்கினால் நாடோறும் கழித்தெறிவதாதலில் 'குலவுவீதிவாய்' என்றும், காலால் நடந்து செல்வோனாதலில் 'இடறி யேகினன்' என்றும் சொல்லினார். செல்வ மிகுதியைச் சொல்லுதலால் வீறுகோளணி. (சக)

மணங்கவர்வனப்பமைவடிவினன்றியுங்
கனம்பயில்வாயிலோர்காண்குறுவகை
சினங்கொள்கூரிலையவேற்செம்மல்போதலா
லனங்கனென்றுரைப்பதற்கையமில்லையே.

(இ-ள்.) மனம் கவர்-மனத்தைக் கவர்ந்துகொள்ளுகின்ற, வனப்பு அமை வடிவின் - அழகு அமைந்த வடிவினாலும், அனறியும் - அல்லா மலும், கனம் பயில் - மேகங்கள் சஞ்சரிக்கின்ற, வாயிலோா - வழியி லிருக்குங் காவலாளர்கள், காண்கு உறு வகை - காணுதவிதம், சினம் கொள் - கோபங்கொண்ட, கூா இலைய வேல் - கூாமைபொருந்திய இலையையுடைய வேற்படையேந்திய, செம்மல் - நளமகாராசன், போதலால் - செல்கிறபடியால், அனங்கன் எனறு - அருவத்தையுடை யவனுகிய மன்மதனெனறு, உரைபபதற்கு - சொல்லுவதற்கு, ஐயம் இல்லை - சந்தேகம் இல்லை, எ-று.

(க - து.) நளன அருபமாய்ச் செல்லுதலால் மன்மத னென்று சொல்லுவதற்குச் சந்தேகமில்லை, எனபதாம.

இது தற்குறிப்பணி. (சஉ)

கண்ணகன்மணிககடைக்காவலாளர்தா
நண்ணினரெவரெனவெவரைநாடினுந்
தண்ணறுந்தெரியலான்றன்னையாமென
வெண்ணிவெம்மடங்கலினெருத்தங்கோட்டுமால்.

(இ- ள்.) கண் அகல் - இடமகனற, மணி கடை - அழகிய வாயிலி லிருககின்ற, காவலாளா தாம் - காவல்செயவோா, நண்ணினா எவா என- வந்தவாகள் யாவரெனறு, எவரை நாடினும் - யாரைநாடிப் பாாக்கினும், தன் நறும் தெரியலான் - தண்ணிய பரிமளம்பொருந்திய மாலையை யுடையவனுகிய நளமகாராசன, தன்னை ஆம் என எண்ணி - தன்னை யாருமென்று நினைத்து, வெம் மடங்கலின - வெவ்விய சிங்கத்தைப போல, எருத்தம் கோட்டும் - திரும்பிபபாாப்பன், எ-று.

(க - து.) வாயில்காப்பாா யாாயாரென, நளன் தன்னையென்று திருமபிப் பாாப்பான், என்பதாம்.

இவாகள் நம்மை எவ்வாறு பாாததாாகளென்கிற ஆச்சரியத்தி னுலே திரும்பிப்பாாததா னெனக. சிஙகததுக்குத தான வந்தவழி யைத் திரும்பிப்பாாதத லியறகை யெனக. மடங்கலி னென்றமை யால் உவமையணி. மறைநதுசெலலு பவனியல்பு கூறுதலால் தன்மை நவிற்சியணி. இவ்விரண்டுங் கலததலால் கலவையணி. (சஙு)

மலர்பயில்வாவிதோய்மாதர்நுண்டுகி
லலைபுனலனைதலுமல்குறோன்றலாற்
கலைவலான்கண்முகிழ்த்தேகக்காண்குறான்
முலைமுகடழுந்துறவொருத்திமுட்டினுள்.

(இ - ள்.) மலா பயில் - மலாகள் நெருங்கிய, வாவி தோய் - தடாகத்தில் முழுகிய, மாதா - மடவாருடைய, நுண் துகில் - நுண் ணிய ஆடையானது, அலை புனல் நனைதலும் - அலைவீசுகின்ற நீரிலே நனைந்தவளவில், அல்குல் - நிதம்பமானது, தோன்றலால் - தெரித லால், கலை வலான் - அறநூலில் வல்லவனுகிய நளமகாராசன், கண் முகிழ்த்து ஏக - கண்களை மூடிக்கொண்டு போக, காண்குறான் - காண

ளாகி, முலை முகடு - தனங்களினுடைய உச்சி, அழுந்துற - அழுந்தும் படி, ஒருத்தி - (எதிர்ப்பட்ட) ஒருமங்கை, முட்டினுள் - முட்டி னுள், எ-று.

(க - து.) நளன் வாயிலொடு மாதரல்குலைக்கண்டு கண்மூடிச் செல்லுதலால் எதிரில்வரு மொருத்தி முலைமுகடழுந்த முட்டினுள் என்பதாம்.

அறத்தின்வழி நிற்போனுதலால் பிறா மாதாகளுடைய மறைத்தற்குரிய உறுப்புககளை நோககுதலிற பாவம் உண்டாகுமென் றஞ்சிக் கண்களை மூடிக்கொண்டான், பினபு எதிரப்பட்டவளுக்கு இவனுருத் தெரியாமையாலும் இவன கண்களை மூடிக்கொள்ளுதலாலும் அவள் வருவது தெரியாமல் முட்டிககொணடன ளென்க. (சச)

காமுறுமொருததிதன்வதனங்கண்டகண்
கோமகன்முகிழ்ததலாறகோதைமார்முக
மாமதியென்பதுமன்னனசெய்யகண்
டாமரையென்பதுந்தககவாயவே.

(இ - ள்.) காமுறு - விரும்புதற்குரிய, ஒருத்தி - ஒருமங்கையி னுடைய, வதனம் - முகததை, கணட கண் - பாாததகணகளை, கோ மகன் - நளமகாராசன, முகிழ்ததலால் - மூடிக்கொள்ளுதலால், கோதைமாா முகம் - மாதருடைய முகம், மா மதி என்பதும் - பெரிய சந்திரனென்று சொல்வதும், மனனன - இந்த நளமகாராசனுடைய, செய்ய கண் - சிவந்தகணகள், தாமரை என்பதும் - தாமரைமலரென்று சொல்வதும், தக்க ஆய - தகுதியாயின, எ-று. தன் - அசை.

(க - து.) நளன் ஒருபெண்முகத்தைக் கண்டகண்களை மூடலால் பெண்கள்முகஞ் சந்திரனென்பதும் நளன்கண்கள் தாமரையென்பதுஞ் சரியே என்பதாம்.

இவன் விரகமுடையோ னுதலால் அந்த மங்கையா முகத்தைக் கண்டு மனமயங்கிற் பாவமுண்டென்று மூடிக்கொண்டான். அது அவா முகத்தைச் சந்திரனென்பதையும் இவன் கண்களைத் தாமரை யென்பதையும் நிச்சயப்படுத்தியது. தக்கதாயவெனலால் தகுதியணி()

செய்யகண்முகிழ்த்திடல்விழித்தறீதெனு
வையனுங்கடைக்கணுனேக்கவன்பிதென்
றெய்யும்வேள்கணைமலரிதயமோர்ந்துமால்
பொய்யெனவருச்சனைபுரிதல்போன்றதே.

(இ - ள்.) செய்ய கண் முகிழ்த்திடல் - சிவந்தகண்களை மூடிக கொள்வதும், விழித்தல் - விழிப்பதும், தீது எனு - குற்றமென்று நினைத்து, ஐயனும் - நளமகாராசனும், கடைக்கணுல் நோக்க - கடைக் கண்ணினுலே பாாக்க, அன்பு இது என்று - இது ஆசையினுலே பார்ப் பதென்று, எய்யும் - பிரயோகஞ் செய்கின்ற, வேள் - மன்மத னுடைய, கணை மலா - பாணமலாகள், இதயம் - கருத்தை, ஓர்ந்து

அழுந்து, மால் - மயக்கமானது, பொய் என - பொய்யென்று, அருச்சனை - பூசை, புரிதல் போன்றது - செய்வதுபோலுமாயிற்று, எ - று.

(க - து.) நளன் கடைக்கண்ணூற்பார்க்க அன்பான பார்வையென்று மன்மதனறிந்து பாணந்தொடுக்க அப்பாணம் அருச்சனைசெய்த மலருக் கொப்பாயிற்று என்பதாம்.

கண்களைமூடில் எதிரப்படுமோரை தெரியாமல் முட்டிக்கொள்வதாலும், திறக்கில் அவர்களது அழகியவடிவ நோக்குதலிற் பாவமுண்டாதலாலும் இப்படியன்றிக் கடைக்கண்ணாலே நோக்கினன். அங்ஙனம் நோக்குவதை அன்புநோக்கென்று நினைத்து மன்மதன்றொடுத்த மலரம்புகள் அவன் மனத்தையறிந்து மயக்கமில்லாமையால் வீணாகாது அர்ச்சனை செய்வதாயிற் றெனக. (சசு)

தெரிவையென்றுருவெளியோடுசெப்பிய
வரசனதுரையசரீரியாமென
வெருவியமாதர்சொற்கேட்டுவெள்குறு
வுருவெளியிதுவெனவுள்ளந்தேறினன்.

(இ-ள்.) தெரிவை என்று - தமயந்தி யென்று, உரு வெளியோடு - உருவெளித்தோற்றத்துடனே, செப்பிய - சொல்லிய, அரசனது உரை - நளமகாராசனுடைய சொல்லை, அசரீரி ஆம் என - ஆகாய வாணி வாக்கென்று, வெருவிய மாதர் - பயந்த மாதருடைய, சொல் கேட்டு - சொல்லைக்கேட்டு, (அந்நளமகாராசனவன்) வெள்குறு - நாணி, உரு வெளி இது என - உருவெளித்தோற்ற மிதுவென்று, உள்ளம் தேறினன் - மனத் தெளிவை யடைந்தான், எ - று.

(க - து.) உருவெளியோடு சொல்லிய நளன்சொல்லை மாதர் அசரீரிவாக்கென்று சொல்ல நளன் தெளிவடைந்தான் என்பதாம்.

உருவெளித்தோற்றமாவது தன்னால் விரும்பப்பட்ட பொருள் போல் எதிரே தோன்றுதல். செப்பியவுரையென்பது இந்திராதிகள் தமயந்திக்குச் சொல்லும்படி தன்னொடு சொல்லிய செய்திகளாம். அவைகளைக்கண்டுந் தன்விருப்புக் குரியவற்றைப் பேசாமல் இவ்வாறு சொன்னனென்று பொருள்கொள்வா னென்னெனில். அறத்தின்வழி தூதுசெல்வோர்க்கு வழுவாதலாலும் இதற்கு முன்னூலாகிய வடமொழியு ளிருத்தலாலு மெனக்கொள்க. மாதர்க்கு அச்ச மியற்கையாதலின் இது தெய்வமோ மாயமோவென அசரீரிக்குவெருவினா ரெனக. அவாகளுரையால் உருவெளித்தோற்றத்தோடு சொன்ன ரகசியமான தன் சொல் வெளிப்பட்டதென்று தெளிந்து நாணுற்றா னென்க. (சஎ)

விழைவெனும்பாகெறிந்தமரர்விஞ்சையாந்
தழைமுகபடாத்தமைதறுகண்வாரணங்
கழைமதனியற்றியகருங்கண்மங்கைய
ரழகெனும்படுகுழியாழ்ந்ததில்லையால்.

(இ - ள்.) விழைவு எனும் - ஆசை யென்கிற, பாகு - பாகனை, எறிந்து - தள்ளி, அமரர் விஞ்சை ஆம் - தேவர்களுடைய மந்திரமா

கிய, தழை - தழைந்த, முகபடாதது - முகபடாமாவைய்ருமில்ல, அமை - பொருந்திய, தறு கண் - அஞ்சாமையையுடைய, வாரணம் - யானையானது, கழை மதன் - கருப்புவில்லேந்திய மன்மதன, இயற்றிய - செய்த, கரு கண மங்கையா - கரிய கண்களையுடைய மாதருடைய, அழகு எனும் - அழகென்றுசொல்லும், படுகுழி - பள்ளததில், ஆழ்ந் தது இல்லை - அழுந்தியதில்லை, எ - று. ஆல் - அசை.

(க - து.) நளனெனனும் யானை மாதரழகென்னும் படுகுழியில் வீழ்ந்ததில்லை எனபதாம்.

நளனை யானையாகவும், விழைவைப் பாகனகவும், விஞ்சையை முகபடாமாகவும், ஆரோபித்ததனால் உருவகவணி. தூது செல்லுமிடத்து அறத்தினவழி மகளிர்விழைவை நீக்கியோனுதலில் அவர்கள் அழகில் மயங்கவில்லை யெனபது கருத்து. (சஅ)

அங்கலுழ்மேனியவணங்கைநாடொறு
மெங்கணுங்காணுறுமயககமேனைய
பங்கயவாண்முகப்பாவைமாரையம
மங்கையென்றெண்ணுறுமயககந்தீர்த்ததே.

(இ - ள்.) அம் கலுழ் மேனிய - அழகானது ஒழுகின்ற மேனி யை யுடைய, அணங்கை - தமயந்தியை, நாடொறும் - எந்நாளும், எங்கணும் - எவ்விடத்திலும, காணுறும் மயககம் - (உருவெளித்தோற்றமாகக்) காணுகினற மயக்கமானது, ஏனைய மற்றைய, பங்கயம் - தாமரை மலர்போன்ற, வாள முகம் - ஒளிபொருந்திய முகத்தையுடைய, பாவைமாரை - மகளிரை, அ மங்கை என்று - அந் தத் தமயந்தியெனறு, எண்ணுறும் மயககம் - நினைக்கின்ற மயக்கத தை, தீர்த்தது - நீக்கியது, எ - று.

(க - து.) நளனுக்குத தமயந்தியென்கிற மயக்கமற்றது என்ப தாம்.

அழகு மிகுதிபற்றிக் கலுழெனப்பட்டது. உருவெளித்தோற்றத் துக்கு நிகராகிய அநதப்புரததுமஙகையா வடிவங்களில் நளனுக்குத் தமயந்தியெனனு மயக்கம் ஏனுண்டாகவில்லையெனில் அதனுறுதியா லெனக. (சகூ)

கணங்குழைமுகத்தியர்கதிர்த்துவிம்மிய
கணங்கவிரிளமுலைச்சுவடுதாககியு
மணிந்தகுங்குமமெழிலகலமூழ்கியு
மணந்தனர்போன்றனன்மன்னரேறனன்.

(இ - ள்.) மன்னா ஏறனன் - அரசர்களுக்கு ஆண்சிங்கத்தை யொதத நளன், கணம் குழை - கூட்டமாகிய மணிபதித்த குண்டலங் தரிதத, முகததியர் - முகத்தையுடையவராகிய மாதா, கதிர்தது - காந்திபொருந்தி, விம்மிய - பருதத, கணங்கு அவிா - தேமலானது பிரகாசியாநின்ற, இள முலை - இளமைபொருந்திய தனஙகளுடைய, சுவடு - தழும்புகள், தாக்கியும் - மோதப்பெற்றும், அணிந்த குங்கு

மம் - தரித்த குங்குமக்குழம்புகள், எழில் - அழகிய, அகலம் மூழ்கி யும் - மார்பினிடத்து மூழ்கப்பெற்றும, மணர்தனா - கூடினவாகளை, போன்றனன் - ஒத்தனன், எ - று.

(க-து.) நளன் மார்பில் மாதா தனங்க ளழுந்தப்பெற்றும் குங்கும மூழ்கப்பெற்றும் புணர்ந்தவரை ஒப்பாயினன் என்பதாம்.

கூடினவர்க்குள்ளகுணம் இவனிடத்துண்டாதலின 'மணந்தனா போன்றனன' என்றார். இது உவமையணி. (௫0)

விளங்கிழையொருத்திபேரணியிலவேந்தெழி
றுளங்கலுமதிசயந்தோன்றநோககினள்
வளங்கெழுபுகழினன்மறையககாண்கிலா
ளுளம்புகுந்தொளித்ததவ்வுருவென்றெண்ணினள்.

(இ - ள்.) விளங்கு இழை ஒருத்தி - ஆபரணத்தை யணிந்த ஒரு மாதானவள், பேர - பிரகாசியாநின்ற, அணியில் - பெரிய தன்னாபர ணத்தில், வேந்து எழில் - அரசனுடைய அழகானது, துளங்கலும் - பிரகாசித்தலும், அதிசயம் தோன்ற - ஆச்சரியம் உண்டாக, நோக் கினள் - பார்த்தாள், வளம் கெழு புகழினன - வளம்பொருந்திய கீர்த்தியையுடைய நளன, மறைய - மறைந்துபோக, காண்கிலாள் - காணாதவளாகி, உளம் புகுந்து - மனத்தினிடத்து நுழைந்து, ஒளித் தது - ஒளித்துக்கொண்டது, அ உரு என்று - அவ்வடிவமென்று, எண் ணினள் - நினைத்தாள், எ - று.

(க - து.) ஒருத்தி தன்னாபரணத்தில் நளன் வடிவு தோன்றப் பார்த்தாள், நளன மறைய அவவடிவு தன்னுளத்துட் புகுந்ததென றெண்ணினள் என்பதாம்.

உளம்புகுந்தொளித்த தென்றால் நளனுடைய நிழன்மாத்திரம் அவளுடைய அணியினின்றும் நீங்கியதல்லது அந்நளன் அவள்மனத் தைவிட்டு நீங்கவில்லை யென்பது கருத்து. மறைதலில் உளம் புகு தலைக் குறித்தலால் தற்குறிப்பணி. (௫௧)

வாட்டிறன்மன்னவன்வனிதைபேரெழி
றீட்டியொண்கதிருமிழ்செய்யவார்வடஞ்
சூட்டினனகலவிவ்வுருவுதோன்றயார்
கோட்டினரெனச்சிலர்குறிப்பினுடுவார்.

(இ - ள்.) வாள் திறல் மன்னவன் - வாளாயுதத்திலே வல் லமைபெற்ற நளமகாராசனானவன், வனிதை - தமயந்தியினுடைய, பேர எழில் தீட்டி - பெரிய அழகை எழுதி, ஒள் கதிர் உமிழ் - ஒள்ளிய கிரணங்களை உமிழ்கின்ற, செய்ய - சிவந்த, வார - நெடிய, வடம் - ரத்நமாலைகளை, சூட்டினன் - தரித்தனனாகி, அகல - நீங்க, இ உருவு தோன்ற - இந்த வடிவந்தெரிய, யார கோட்டினர் என - எவர்கள் செய்தாரென்று, சிலர - சிலா, குறிப்பின் - குறிப்பினாலே, நாடுவார் - தேடுவார்கள், எ - று.

(க-து.) நளன் தமயந்தி வடிவத்தையெழுதிய இரத்தினபரணஞ் சூட்டிப்போக வடிவத்தை யாரொழுதினோனறு சிலா தேடுவாாகள், என்பதாம்.

விஞ்சையைவிட்டு உருத்தெரிய நிற்பினும் ஒருவராலும் வெல்லக் கூடாமைதோன்ற 'வாட்டிறல மன்னவனை என்றும், உருவெழுதுவ திலுங் கைபோயவ னெனபது தோனற 'வனிதைபேரெழிறீட்டி' என் றும், அவளிடத்தில் மிகுந்த அனபுள்ளவ னெனபதுதோனற 'வடஞ் சூட்டினன' எனறும, அறிவினுல் அவவன்பையும நீககினுனெனபது தோன்ற 'அகலவ' எனறும், இபபடிப்பட்ட உருவமெழுதினனைக் காண வேண்டுமென்கிற அவாவினாலும் இவனுருத தெரியாமையினாலுஞ் 'சிலா குறிபபினுவோா' என்றுஞ் சொல்லினா. ஒருநாளுநகாணுதவடிவை இவன் எவ்வா றெழுதினனெனில் முனனே வெணணகைத்துவாவா யணங்கெழில பலருமவிளமபினா நினமொழியவளென கன்னெதிாப் பட்டாள்' எனறிருபபதாலும், அனனபபுளளானது தாமரைஇலையி லெழுதிக்காட்டியதெனறு வட நூலி விருத்தலாலுமென்க. (ருஉ)

பூந்துகள்செறிந்தகோமறுகிற்போகிய
வேந்தருளமுந்துமவ்விடங்கணேகுரு
மாந்தளிர்மேனியர்வையங்காவல்செய
வேந்தர்தாளிலககணமேயதென்னென்பார்.

(இ - ள்.) பூ துகள செறிநத - மகரந்தப்பொடிகள் நெருங்கிய, கோ மறுகில் - அரசவீதியில், போகிய ஏந்தல் - சென்ற நளமகாராச னுடைய, தாள் அழுநதும - பாதங்கள அழுந்துகினற, அ இடங்கள் - அந்தவிடங்களை, நோககுறு - பாாதது, மா தளிா மேனியா - மாந்தளிா போன்ற வடிவததையுடைய மஙகையா, வையம் காவல் செய் வேந் தா - உலகததைக காததல்செயகினற அரசருடைய, தாள் - பாதங் களிலிருககும, இலககணம - இலககணங்கள, மேயது - (இவ்வடிச் சுவட்டிற்) பொருந்தியது, என எனபாா - என்ன ஆச்சரியமெனபாா கள், எ - று.

(க - து.) மகரந்த நிறைந்த இராஜ வீதியில் நளன் அடிவைத்த விடத்தை மாதாகள கண்டு அரசாக ளடிச்சுவடு பொருந்திய தெனன வெனபாாகள, எனபதாம்.

வேந்தா தாளிலக்கணமென்பது சக்கிரரேகை முதலியவாம். அம் மாதா சாமுத்திரிகநூலிலும் வல்லவராகையால் இது அறிந்தன ரென்க.

கள்ளவிழ்கோதையரெறிந்தகந்துகம்
வள்ளன்மார்புற்றெதிர்மறிந்துவீழ்தலுந்
தள்ளருமதிசயமெய்தித்தத்தமில்
வெள்ளிடைப்பட்டிவண்மீண்டதென்னென்பார்.

(இ-ள்.) கள் அவிழ் - தேனொழுகுகின்ற, கோதையா - மாலையை யணிந்த மாதா, எறிந்த கந்துகம் - வீசிய பந்துகள், வள்ளல் - நள மகாராசனுடைய, மாாபு உற்று - மாாபினிடத்திலே பொருந்தி, எதிா மறிந்து வீழ்தலும் - எதிராக மறிபட்டு வீழ்ந்தவளவில், தள்ள

அரும் - தள்ளுதற்கரிய, அதிசயம் எய்தி - ஆச்சரியத்தை யடைந்து, தததமில் - தங்கள் தங்களுக்குள்ளே, வெள்ளிடை பட்டு - வெளியிடத்திற்பட்டு, இவண் மீண்டது - இவ்விடத்தில் திரும்பியது, என் என்பார - என்னவென்று சொல்லுவார்கள், எ - று.

(க - து.) மாதாகளெறிந்த பந்துகள் நளன்மார்பில்பட் டெதிராக விழுந்தமாத்திரத்தில் பெண்க ளிதென்ன வாசசரிய மென்பார்கள் என்பதாம். (௫௪)

**எதிர்முகமாயிருந்திருவர்பைந்துணர்ப்**
**புதுமலர்தொடுத்தலுநடுவட்புக்கவன்**
**கதுமெனவேகலுமறைப்பக்கன்னியர்**
**மதிமயக்குற்முகமறைத்ததென்னென்பார்.**

(இ - ள்.) எதிர் முகமாய் இருந்து - அபிமுகமாகவிருந்து, இருவர் - இரண்டுபேர், பைதுணர் - பசிய பூங்கொத்துகளி லிருக்கின்ற, புது மலர் - அன்றலாந்த மலரை, தொடுத்தலும் - கட்டலும், நடுவண் புக்கவன் - அவருக்கிடையில் புகுந்த நளன, கதும் என ஏகலும் - விரைந்து போனவளவில், மறைபப - மறைக்க, கன்னியா - அம்மாலை தொடுத்த மாதாகள், மதி மயக்கு உற - புத்தி மயக்கத்தைப்பொருந்த, முகம் மறைத்தது - முகத்தை மறைத்துவிட்டது, என் என்பார - என்ன ஆச்சரியமென்று சொல்லுவார்கள், எ-று.

(க - து.) மாலைகட்டு மாதரிருவா நடுவே நளன்போனவளவில் அம்மாதாகள முகத்தை மறைத்துவிட்ட தென்ன வென்பார்கள் என்பதாம்.

மறைத்ததற்குக் காரண மில்லாதிருக்க மறைப்பைச் சொல்லுதலால் பிறிதாராயசசியணி. (௫௫)

**அண்ணறன்மார்பகத்தணிந்தபேரணி**
**மன்னியமணிவயின்வடிவுதோன்றலும்**
**கண்ணுறநோக்குவாள்கன்னிமாரொடும**
**விண்ணிடையெனதுருவிளங்கலென்னென்பாள்.**

(இ - ள்) அண்ணல் தன் - நளமகாராசனுடைய, மாாபகத்து - மார்பினிடத்து, அணிந்த பேர அணி - தரித்த பெரிய ஆபரணங்களிலுள்ள, மன்னிய மணிவயின் - தெளிந்த மணியினிடத்தில், வடிவு தோன்றலும் - உருவமானது தெரிதலும், கண் உற நோக்குவாள் - கண்ணினாற் பொருந்த பாரபபவளாகிய வொருததி, கன்னிமாரொடும் - மாதாகளுடன், விண்ணிடை - ஆகாயததினிடத்து, எனது உரு விளங்க - எனது வடிவம் பிரகாசித்தல், என் என்டாள் - என்ன ஆச்சரியமென்று சொல்லுவாள், எ-று.

(க - து.) நளனுபரணத்தில் ஒருத்தி தன் வடிவுதோன்றிய வளவில் ஏன்வடிவு வெளியிற் றோன்றியதென் னென்பாள் என்பதாம்.

வடிவுதோன்றற்கு உரிய கண்ணுடி முதலியவையின்றி நிழலின் றோற்றஞ் சொல்லப்படுதலால் சிறப்புநிலையணி. (௫௬)

வெற்பினைதெழில்கெடவிளங்குதோளினன்
பொற்பொளிர்பித்திகைப்புறத்திற்றோன்றலு
மற்புதமிதுவெனநோக்கியன்பினாற்
கற்புடைமகளிருநிலைகலங்கினார்.

(இ - ள்.) வெற்பினைது - மலையினது, எழில் கெட - அழகு கெடும்படி, விளங்கு தோளினன - பிரகாசிக்கின்ற தோளினையுடைய நளமகாராசனது, பொற்பு - அழகானது, ஒளிர் பித்திகை புறத்தில் - பிரகாசிக்கின்ற சுவர்த்தலத்தினிடத்து, தோன்றலும் - தோன்றுதலும், அற்புதம் இது என - ஆச்சரிய மிதுவென்று, நோக்கி - பார்த்து, அன்பினால் - ஆசையினால், கற்புடை மகளிரும் - கற்புடைய மாதர்களும், நிலை கலங்கினார் - மயங்கினார்கள், எ-று.

(க - து.) நளன்வடிவு சுவரிறறோன்ற கற்புள்ளமாதரும் நிலை கலங்கினார்கள் என்பதாம்.

உம்மை - உயர்வுசிறப்பு. கற்புடைமகளிர்நிலை கலங்கலுண்டோ வெனின் அழகிற்சிறந்த ஆண்மக்களைக் காணின் உண்டாம். அது "தந்தையா யினும்விழைவிற றன்னுடனே யொருவயிற்றிற் சாரந்தா ரேனு, மைந்தரா யினுமிகவும் வனப்புடைய ரெனிலவாமேன் மடநல்லார் தஞ், சிந்தைநடந் திடுமதனாற் சாம்பன்மலாக் கணைவேளிற செவ்வி வாய்ந்தோன், பைந்தொடியா ரினிதமரு முவளகத்திற் றனிவருதல் பான்மையன்றே" இதனாலறிக. (௫௭)

இழைவளர் முலையினா ரொருவனேர்பெறு
நிழலிவனோக்கினனென்னவுநீளிடை
மொழிவனகேட்டனனென்னவுமொய்ம்புறத்
தழுவினனென்னவுந்தமமிற்கூறுவார்.

(இ - ள.) இழை - ஆபரணத்தோடுகூடி, வளர் முலையினார் - வளர்கின்ற முலையையுடைய மாதர்கள், ஒருவன - ஒரு ஆண்மகனுடைய, ஏர் பெறு நிழல் - அழகைப்பெற்ற நிழலை, இவன் - இவ விடத்தில, நோக்கினன் எனவும - பார்த்தேனென்றும, நீள் இடை - இந்நீண்டவிடத்தில, மொழிவன - பேசுவனவற்றை, கேட்டனன் எனவும - கேட்டேனென்றும, மொய்ம்பு உற - தோள்களபொருந்த, தழுவினன் என்னவும - தழுவினேனென்றும, தம்மில் - தங்களுக்குள்ளே, கூறுவார் - பேசிக்கொள்ளுவார்கள, எ-று.

(க - து.) மாதர்கள் ஒருவனிழலைக் கண்டேனென்றும் ஒருவன் சொல்லைக் கேட்டேனென்றும் ஒருவனைத் தழுவினேனென்றும் சொல்லிக்கொள்வார்கள் என்பதாம். (௫௮)

[இதுமுதல் ஐந்துபாட்டால் வழியில்கண்ட தமயந்தி
யோடு நளனுக்குண்டாகிய செய்கை சொல்
லப்படுகின்றது.]

இன்னிசையளிபயில்பொழிலினேந்தன்முன்
பொன்னவிர்முலைத்தமயந்திபோதலு

மன்னமுன்கூறியவற்றைநாண்முதன்
முன்னுறுமுருவெனமுன்னினனரோ.

(இ-ள்.) இன் இசை - இனிய இசையைப்பாடும், அளி பயில் - வண்டுகள் சஞ்சரிக்கின்ற, பொழிலின - சோலையிடத்தில், ஏந்தல் - நளமகாராசன், முன் - தனனெதிரே, பொன் அவிர் முலை - பொன்னை யொத்த பிரகாசியாநின்ற முலையையுடைய, தமயந்தி - தமயந்தி யானவள், போதலும் - வருதலும், அன்னம் முன கூறிய - அன்னப் புள்ளானது முன சொல்லிய, அற்றை நாள் முதல் - அன்றையநாள் முதலாக, முன் உறும் உரு என - எதிரே தோன்றுகிற உருவெளித் தோற்றமென்று, முன்னினன் - நினைத்தான், எ-று. அரோ - அசை.

(க - து.) சோலையில் நளன்முன்னே தமயந்தி வருதலும் அவ ளுருவெளியென றெண்ணினன் என்பதாம்.

அன்னததின் சொல்லால் நாடோறும் காண்கின்ற தமயந்தியி னுருவெளித தோற்றததிற்கும், மெய்யாகக்கண்ட தமயந்திக்கும் அங் ஙனம் வேற்றுமைதோற்றாமை கூறப்படுதலால் மறைவணி. நாடோ றுங் கண்டது பொய்யாகவே யிக்காட்சியிலு மிவ்வாறு மதியுண்டாயிற் றென்க. (௫௯)

மடவரலுருவெளிமன்னன் றோண்மிசை
யிடையறாவிழைவுடனென்றுஞ்சூட்டல்போன்
மிடைமலர்ப்பூந்தொடைசூட்டமேவிய
சுடரிலைவேலினன் றோளில்வீழ்ந்ததே.

(இ - ள்.) மடவரல் - தமயநதியானவள், உருவெளி - உருவெ ளியாயததோன்றிய, மன்னன் தோண்மிசை - நளமகாராஜனுடைய தோளின்மேல், இடை அறா விழைவுடன - இடைவிடாத ஆசை யுடனே, என்றும் - என்றைக்கும், சூட்டல்போல் - சூட்டுதல்போல, மிடை மலா பூ தொடை சூட்ட - நெருங்கிய மலராற்றொடுத்த பூமா லையைத தரிக்க, மேவிய - அங்கிருக்கின்ற, சுடா இலை வேலினன் - காந்திபொருந்திய இலைபோன்ற வேற்படையையுடைய நளமகாராச னுடைய, தோளில் வீழநதது - புயங்களில் விழுந்தது, எ - று.

(க - து.) தமயந்தியானவள் உருவெளிததோற்றமென்று மாலை சூட அம்மாலை நளனுடைய தோளில் விழுந்தது என்பதாம். (௬0)

உருவெளியாகயான்கண்டவொண்ணுதன்
மருமலர்மாலிகைவனைந்ததென்னென
வரசனுமெண்ணினனவளுஞ்சூட்டிய
தெரியல்காண்கிலனெனத்தெருமந்தாளரோ.

(இ-ள்.) உருவெளி ஆக - உருவெளித்தோற்றமாக, யான் கண்ட ஒள் நுதல் - என்னாற்காணப்பட்ட ஒள்ளிய நெற்றியையுடைய தம யந்தியானவள், மரு மலா மாலிகை - வாசனைபொருந்திய பூமாலையை, வனைந்தது என் என - சூட்டிய தென்னகாரணமென்று, அரசனும்

எண்ணினன் - நளமகாராசனும் நினைத்தான், அவளும் - அத்தமயந்தியும், சூட்டிய தெரியல் - தரித்த மாலையை, காண்கிலன் என - கண்டிலேனென்று, தெருமந்தாள் - மனஞ்சுழன்றாள், எ-று. அரோ - அசை.

(க - து.) உருவெளியாகக் காணப்பட்ட தமயந்தி மாலைசூடிய தென்னவென்று நளன் எண்ணினன், தமயந்தியு மாலையைக் காணேனென்று மயங்கினள் என்பதாம்.

நளன் நாள்தோறும் கண்டவிடத்தில்லாம லிப்போது சூடியது புதுமையாதலால் இது என்னவென வியந்தான். தமயந்தியும் நாடோறுஞ்சூடிய மாலை தெரிய இதுமாத்திர மறைதலால் என்னமாயமென்று திடுக்கிட்டாளென்க. (சுக)

முருகவிழ்குழலினடனையுமுன்னுறு
முருவெளியெனவிறையுவந்துபுல்லின
னரிவையுமன்னவாறெண்ணியாங்கெதிர்
புரவலன்மார்புறப்புல்லினளரோ.

(இ - ள்.) முருகு அவிழ் - வாசனை வீசுகின்ற, குழலினள் தனையும் - கூந்தலையுடைய தமயந்தியையும், முன உறும் உருவெளி என - முன்னே தோன்றுகினற உருவெளித் தோற்றமென்று, இறை - நளமகாராசன், உவந்து புல்லினன் - மகிழ்ச்சியை யடைந்து தழுவினன்; அரிவையும் - தமயந்தியும், அன்ன ஆறு எண்ணி - அந்தப்பிரகாரம் நினைதது, ஆஙகு எதிா - அவ்விடததிலே எதிரே வந்த, புரவலன் - அரசனுடைய, மாாபு உற - மாாபுபொருநத, புல்லினள் - தழுவினள், எ-று.

(க - து.) நளன் உருவெளித் தோற்றமென்று தமயந்தியைப் புணாந்தான், தமயநதியு மப்படியேநினைதது நளனைப்புணாந்தாள் என்பதாம்.

தமயந்தியை யுண்மையாகக் கண்ட நளன் உருவெளியென மயங்கினனென்றும் அவ்வாறின்றி உருவெளியாகக்கண்ட தமயநதியானவள் நளனை உண்மையென்றுன்னி புல்லினளெனறுங்கொள்க. தெய்வவரத்தின லிவனுருவை யறியாளாகலின் ஒருவாகொருவா மயக்கஞ் சொல்லபபட்டமையால் மயக்கவணி. (சுஉ)

சொல்லருமின்பமீதூரததோன்றலும்
புல்லுவிட்டவ்வுருப்பொலிவுநோககினன்
மெல்லியலவ்வுருவிழியிற்காண்குறா
தல்லலுற்றணிவளையங்கைநீக்கினள்.

(இ - ள்.) சொல் அரும இன்பம் மீது ஊர - சொல்லுதற்கரிய இன்பமானது அதிகரிக்க, தோன்றலும் - நளனும், புல்லு விட்டு - தழுவுதலை நீக்கி, அ உரு பொலிவு - அந்த வடிவினுடைய காந்தியை, நோக்கினன் - பாாததான்; மெல்லியல் - தமயந்தியானவள், அ உரு - அந்த வடிவத்தை, விழியில் காண்குறாது - கண்ணினால் காணாதவளாகி, அல்லல் உற்று - பயத்தையடைந்து, அணி வளை - அழகிய வளையலை யணிந்த, அங்கை நீக்கினள் - அழகிய கையை விடுத்தாள், எ-று.

(க - து.) நளன் இன்பந்தோன்றப்புணர்ந்து தமயந்தி வடிவத்தைப் பார்த்தான். தமயந்தி அவ்வடிவத்தைக் காணாது கையை விட்டாள், என்பதாம்.

மாதர்கட்கு அச்சம் உரியகுணமாகலின உருவு கண்ணிற்றோன்றாது கையிலகப்படலா லிவ்வாறு வெருவி விடுத்தன ளென்க. (௬௩)

[இனி ஒவ்வொருபாட்டா லவ்விருவர் செய்கையும் வெவவேறு சொல்லல்.]

பொன்னடிபூஞ்சிலம்பொலிப்பமேகலை
யின்னரிக்கிண்கிணியிகலியார்ப்பெழ
மின்னடைகற்பதுபோன்றுமெல்லெனத்
தன்னமர்கோயிலுட்டையலெய்தினாள்.

(இ - ள்.) பொன் அடி பூ சிலம்பு - பொன்னினாற்செய்த பாதத்திலணிந்த அழகிய சிலம்புகள், ஒலிப்ப - ஒலித்தலைசெய்ய, மேகலை - மேகலையிலிருக்கின்ற, இன் அரி கிண்கிணி - இனிய பருக்கைக்கல்லையுடைய சதங்கைகள், இகலி - ஒன்றோடொன்று தாக்கப்பட்டு, ஆர்ப்பு எழ - ஒலியெழும்ப, மின் - மின்னல், நடை கற்பது போன்று - நடத்தலைக் கற்பதொத்து, மெல் என - மிருதுவாக, தன் - தனனுடைய, அமர - அமர்கின்ற, கோயிலுள் - கன்னிமாடத்தில், தையல் - தமயந்தியானவள், எய்தினாள் - அடைந்தாள், எ-று.

(க - து.) தமயந்தி கன்னிமாடத்திற் சேர்ந்தாள் என்பதாம். தற்குறிப்பணி. (௬௪)

கருந்தடங்கண்ணியைக்கையிற்புல்லியும்
பொருந்தியவுருவெளியென்றுபோக்கிநல
லருந்தனமபெற்றிழந்தாரிலையனும்
வருந்திவெந்துயரொடுமதிமயங்கினான்.

(இ - ள்.) கரு தடம் கண்ணியை - கரிய விசாலம்பொருந்திய கண்களையுடைய தமயந்தியை, கையில் புல்லியும் - கையினாலே தழுவியும், பொருந்திய உருவெளி எனறு - பொருந்தப்பெற்ற உருவெளித்தோற்றமென்று, போக்கி - விட்டு, நல் அரு தனம் - நல்ல அரிய திரவியத்தை, பெற்று இழந்தாரில் - எளிதிற்பெற்று இழந்தவர்களைப்போல, ஐயனும் - நளமகாராஜனும், வருந்தி - வருத்தமடைந்து, வெம் துயரொடு - வெவ்விய துன்பததுடன், மதி மயங்கினான் - புத்திமயங்கினான், எ-று.

(க - து.) நளன் கைப்பொருளிழந்தவர்கள் போலத் தமயந்தியைப் புணர்ந்து துன்புற்று மயங்கினான் என்பதாம்.

பின் நடக்கைகளால் நளன் மெய்த்தமயந்தி யென்றறிந்து வருந்தினா னென்க. அருந்தனம் பெற்றிழந்தாரில் என்றமையால் உவமையணி. (௬௫)

[நளன் கன்னிமாடத்தடைதல்.]

பாணிகர்வண்டினம்பாடுஞ்சோலையுஞ்
சேணுறநிவந்தசெய்குன்றுந்தேடியுங்
காணலனாகியகளிநல்யானையான்
மாணிழையுறைதருமாடமெய்தினான்.

(இ-ள்.) பாண் நிகர - இசைப்பாட்டுக்கு நிகராக, வண்டு இனம் பாடும் - வண்டுக்கூட்டங்கள் பாடுகின்ற, சோலையும் - சோலையிடத்திலும், சேண் உற நிவந்த - ஆகாயத்திற் பொருந்த உயர்ந்த, செய் குன்றும் - கட்டுமலையினிடத்திலும், தேடியும் - தேடுதல்செய்தும், காணலன் ஆகிய - காணாதவனாகிய, களி நல் யானையான் - மதத்த நல்ல யானையையொத்த நளமகாராஜாவானவன், மாண் இழை - தமயந்தி, உறை தரும் மாடம் - வசிக்கின்ற கன்னிமாடத்தை, எய்தினான் - அடைந்தான், எ-று.

(க-து.) நளன் தமயந்தி கன்னிமாடத்திற் சேர்ந்தான் என்பதாம்.

இவ்வளவுகால மிவ்விடந்தோறும் தேடியறியாத நளன் தமயந்தி சென்ற நெறிபற்றி யவளுறைவுமிடத்துச் சென்றானென்க. மாணிழை- அன்மொழித்தொகை. (௬௬)

[தமயந்திக்காட்சி.]

மின்னிடையரம்பையர்குழாத்துண்மேவிய
வன்னமென்னடையயிராணியாமென
நன்னுதன்மடந்தையர்நாப்பணின்னகைக்
கன்னிவீற்றிருத்தல்கண்களிப்பநோக்கினான்.

(இ-ள்.) மின் இடை அரம்பையர் குழாத்துள் - மின்னலையொத்த இடையையுடைய தெய்வமாதருடைய கூட்டத்துள், மேவிய - பொருந்திய, அன்னம் - அன்னநடைபோன்ற, மென் நடை - மெல்லிய நடையையுடைய, அயிராணி ஆம் என - இந்திராணியாமென்று சொல்லும்படி, நல் நுதல் மடந்தையர் - நல்ல புருவத்தையுடைய மாதர்களுடைய, நாப்பண் - நடுவே, இன் நகை - இனிய புன்சிரிப்பையுடைய, கன்னி - தமயந்தியானவள், வீற்றிருத்தல் - வீறுடனிருத்தலை, கண் களிப்ப நோக்கினான் - கண்களிக்கப் பார்த்தான், எ-று.

(க-து.) நளன் தமயந்தியைக் கண்டான் என்பதாம்.

அயிராணியாமென வென்றமையால் உவமையணி. (௬௭)

[தன்னுளத் தையுறல்.]

மண்டமர்கடந்தவேனளன்வந்தானெனத்
தொண்டைவாய்மடந்தையர்நாளுஞ்சொல்வன
பண்டருமொழிக்கிளியின்றுகூறலுங்
கண்டதோவிஃதெனக்காளையெண்ணினான்.

(இ - ள்.) மண்டு அமர் கடந்த - நெருங்கிய போரைவென்ற, வேல் நளன் வந்தான் என - வேற்படையையுடைய நளமகாராசன் வந்தானென்று, தொண்டை வாய் மடந்தையார் - கொவ்வைக்கனிபோன்ற வாயையுடைய மாதர்கள், நாளும் - நாடோறும், சொல்வன - சொல்வனவற்றை, பண் தரும் மொழி - இசையோடு பொருந்திய மொழிகளைப்பேசுகின்ற, கிளி - கிளிப்பிள்ளை, பயின்று கூறலும் - பழகிச் சொன்னவளவில், இஃது - இந்தக்கிளிப்பிள்ளை, கண்டதோ என - பார்த்ததோவென்று, காளை - நளமகாராஜன், எண்ணினன் - நினைத்தான், எ-று.

(க - து.) கிளி வழக்கமாக நளன் வந்தானென்று சொல்ல நளன் இது தன்னை யறிந்ததென்று சந்தேகித்தானென்பதாம்.

தமயந்தி வருந்துங்காலத்து அதுதீர்ந்து மனங்களிக்க நளன் வந்தானென்று தோழிகள் சொல்லுஞ் சொல்லைக்கேட்டு அவள் கையி லிருக்குங் கிளிப்பிள்ளை சொல்லுவதாகலி னிவ்வாறு கூறிற்று. தெய்வ வரத்தால் மறைந்துவந்த நம்மை யிது எவ்வாறு கண்டதென்று சிந் தித்தா னென்க. யார் எதை யுடைய பிறருடைய குற்றமுடையோர் தம்மை யாரென்று எண்ணுவரென்பது கருத்து. தன்மை நவிற்சியணி. (கூஅ)

[இனி இரண்டுபாட்டால் நளன் மகிழ்ச்சியடைதல்
சொல்லப்படுகின்றது.]

ஒருத்தியானளனென விருப்பவுள்ளுறும்
விருப்பினலொருத்தியான்வீமன்மாதென
மருக்கமழ்பூந்தொடை சூட்டமன்னவன்
பொருப்புறழ்தடம்புயம்புளகம்பூத்தவே.

(இ - ள்.) உள் உறும் விருப்பினல் - உள்ளேயிருக்கின்ற ஆசையினல், யான் நளன் என - நான் நளமகாராசனென்று, ஒருத்தி இருப்ப - ஒரு மங்கையிருக்க, ஒருத்தி - வேறொரு மங்கையானவள், யான் வீமன் மாது என - தமயந்தியென்று சொல்லி, மரு கமழ் பூ தொடை சூட்ட - வாசனை கமழ்கின்ற மலர்மாலையைத் தரிக்க, மன்னவன் - நளமகாராஜனுடைய, பொருப்பு உறழ் - மலையையொத்த, தடம் புயம் - பருத்த தோள்களானவை, புளகம் பூத்த - மயிர்க்கூச்செறிந்தன, எ-று.

(க - து.) ஒருத்தி நளனாகவும் மற்றொருத்தி தமயந்தியாகவும் மாலைசூட்டக் கண்ட நளன் மகிழ்ந்தான் என்பதாம்.

நளனுக்கே தமயந்தி மாலைசூடுதற்குச் சந்தேகமில்லையென்னுந் தெளிவாலும், அவனுக்கே சூட்டவேண்டுமென்கிற ஆவலாலும் அவ் வார்வ முற்றுப்பெறுந்துணையும் பொறுக்கமாட்டாத மங்கையர் தமக் குள்ளே அவ்வாறு செய்தேனு நோக்குவோமென [illegible] செய்துவருகையில் அன்றுஞ் செய்தனராக, அதுகண்ட அவனுக் கும் [illegible] தெரிந்து [illegible] தோள்கள் புளகம்பூத்தன வென்க. [illegible]

மலர்ந்தசெந்தாமரைமென்மடலின்மேற்றனக்
கிலங்கிழையுகிரினுலெழுதுபாசுர
நலம்பெறக்காண்டலுநண்ணலார்புக
ழுலம்பொருதோளினனுவகையெய்தினன்.

(இ - ள்.) மலர்ந்த செம் தாமரை மெல் மடலின்மேல் - விரிந்த சிவந்த தாமரையினுடைய மெல்லிய விதழினமேல், தனகு - தனக்கு, இலங்கு இழை - தமயந்தியானவள், உகிரினுல் - நகத்தினலே, எழுது பாசுரம் - எழுதப்பட்ட செய்யுளை, நலம் பெற காண்டலும் - நன்மை பெற பார்த்தவளவில், நண்ணலார் - பகைவரால், புகழ் - புகழப்பட்ட, உலம் பொரு தோளினன் - திரள்கல்லை ஒத்த தோள்களையுடைய நளமகாராசன, உவகை - சந்தோஷத்தை, எய்தினன் - அடைந்தான், எ-று.

(க - து.) தமயந்தி தாமரைமடலிலே நகத்தினலே நளன் றனக் கெழுதும் வசனங்களைப் பார்த்தவளவில் மகிழ்ச்சி யடைந்தான் என்ப தாம்.

தமயந்தி நாடோறுந் தனனுடைய வருத்தத்தை எழுதிக்கொள்ள வேண்டுமென்கிற அன்புடையவளா யிருந்தாரு சில இடையூறுகளால் ஒத்துக்கொள்ளாமையால் அவ்வன்பை யொருவாறு நிறைவேற்றற் பொருட்டுத் தாமரைமடலிலே தனக்கெழுதிக்கிடந்த செய்யுளைக் கண்டு நளன் மகிழ்ச்சி யடைந்தன னெனக. (எ0)

[நளனிழல்வடிவால மாதாமனம பேதியாமை.]

செழுமணிப்பித்திகைத்தலத்திற்றீதறு
மழவிடையனையவன்வடிவந்தோன்றலுங்
கழையமைதோளினர்காளைபேரெழி
லெழுதியவுருவிலொன்றென்னவெண்ணினர்.

(இ - ள்) செழு மணி பித்திகை தலத்தில் - செழுமையுள்ள மணிகள் பதித்த சுவர்த்தலத்தில், தீது அறு - குற்றமற்ற, மழ விடை அனையவன் - இளமை பொருந்திய இடபத்தை யொத்த நளமகாராச னுடைய, வடிவம் தோன்றலும் - உருவம் தெரிந்தவளவில், கழை அமை தோளினர் - மூங்கில்போல பொருந்திய தோளையுடைய மாதர் கள், காளை - நளமகாராசனுடைய, பேர் எழில் - பெரிய அழகை, எழுதிய - தம்மா லெழுதப்பட்ட, உருவில் ஒன்று என்ன - வடிவத்தில் ஒரு வடிவென்று, எண்ணினர் - நினைத்தார்கள், எ-று.

(க - து.) இரத்தினச் சுவரில் நளன் வடிவு தோன்றிய வளவில் பெண்கள் எழுதிய வுருவி லொன்றென் றெண்ணினர்கள் என்பதாம்.

மந்திரத்தால் நளன் மறைந்திருப்பினும் அவன்வடிவந் தோன்று மாகையால் அதைச் சுவர்த்தலத்திற்கண்ட மங்கையர் அந்தப்புரத்தில் ஒருவன் வந்தனனென்று நினைப்பு அணுத்துணையு மின்றித் தமயந்தி முதலிய தாங்கள் பார்க்கும்பொருட்டுச் சித்திரி[illegible]ம் நளவடிவஞ் சுவரிலே இவனையும் ஒன்றென மதித்திருந்தன [illegible]லால் நளன்

வடிவு கட்டழகுள்ளதன்றி அவ்வாறு சித்திரித்தலும் அருமையென்பது கருத்து. அவ்விடத்துச் சித்திரத்தோடு நளனுடைய நிழலுக்கு வேற்றுமை யின்மை கூறப்பட்டமையால் பொதுமையணி. (எக)

[அழகினாற் றமயந்தி தன்னைத் தெரித்தல்.]

நாமவேலவலனுயர்நளனுக்காங்கமர்
வாமமேகலையினர்நடுவணவைகுவா
டாமமார்குழற்றமயந்தியென்றவள்
காமருபேரெழிலகாட்டுகின்றதே.

(இ - ள்) நாமம் வேல் - அச்சத்தைத் தருகின்ற வேற்படையால்; வலன் உயர் நளனுக்கு - வெற்றிமிகுந்த நளமகாராசனுக்கு, ஆங்கு - அவ்விடத்தில், அமர் - அமர்ந்த, வாமம் மேகலையினர் - அழகிய மேகலாபரணத்தை யுடைய மகளிருடைய, நடுவண் - நடுவே, வைகுவாள் - இருப்பவள், தாமம் ஆர் குழல் - மாலைகள் நிறைந்த கூந்தலையுடைய, தமயந்தி என்று - தமயந்தி யென்னும் பெயரையுடையவ ளென்று, அவள் - அவளுடைய, காமர் - ஒளிபொருந்திய, பேர் எழில் - பெரிய அழகானது, காட்டுகின்றது - காண்பிக்கின்றது, எ-று.

(க-து.) அழகினால் தமயந்தியென றறியப்பட்டது என்பதாம். ()

[இது கவிக்கூற்று.]

ஏதமிலகுணத்தினனினையனாகநுண்
டாதவிழ்பூங்குழற்றையல்பாற்றம
தாதரம்பெருகியவமரரேவிய
தூதியர்செயதிறஞ்சொலலுவாமரோ.

(இ-ள்.) ஏதம் இல் குணத்தினன் - குற்றமற்ற குணத்தையுடைய நளமகாராசன், இனையன் ஆக - இத்தன்மையையுடையவனாக, நுண் - நுட்பமாகிய, தாது அவிழ் பூ - மகரந்தப்பொடிகள் உதிர்கின்ற மலரை யணிந்த, குழல் - கூந்தலை யுடைய, தையல்பால் - தமயந்தியிடத்தில், தமது - தம்முடைய, ஆதரம் பெருகிய - ஆசையானது மிகுந்த, அமரர் ஏவிய - தேவர்களால் ஏவப்பட்ட, தூதியர் - தூதிகள், செய் திறம் - செய்தவகையை, சொல்லுவாம் - சொல்லுவாம், எ-று. அரோ - அசைநிலை.

(க - து.) நளனிப்படி யிருக்கத் தேவர்கள் தமயந்தியிடத்து ஏவப்பட்ட தூதிகள் செய்கையைச் சொல்லுவாம் என்பதாம். (எஉ)

[இனிப் பதினொருபாட்டால் இந்திரன்முதலிய நால்வரா லேவப்பட்ட தூதிகள் தமயந்தியோடுபேசி மீளுதல் சொல்லப்படுகின்றன.]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தாமரல[illegible]லைக்கடவுளர்விடுப்பவந்த
[illegible]னலங்க[illegible]சொற்பனைமூலைப்பாவைகள்

ருஞெடுபழகிநெய்த்தோருமிழ்ந்துவெம்புலவுநாறு
மானவேல்வீமனீன்றவனிதையையினிதுகண்டார்.

(இ - ள்.) கான அமா - வாசனை பொருந்திய, அலங்கல் மாலை - அசையாநின்ற மாலையையுடைய, கடவுளா விடுபப வநத - தேவாகளால் அனுப்பப்பட்டு வந்த, பால் நலம கடந்த - பாலினுடைய நன்மையை வென்ற, தீ சொல் - தித்திப்புப்பொருந்திய சொல்லையும், பணை முலை - பருதத முலையையுமுடைய, பாவை நலலாா - பாவைபோலும் மிருகின்ற மாதா, ஊனொடு பழகி - மாமிசத்துடன பழகுதலசெய்து, நெய்த்தோா உமிழநது - உதிரத்தையுமிழநது, வெம புலவு நாறு - வெம்மைபொருந்திய புலாலுற்றம நாறுகின்ற, மான வேல் - ஒப்பற்ற வேற்படையை யுடைய, வீமன ஈன்ற வனிதையை - வீமராசன பெற்ற தமயநதியை, இனிது - இனிதாக, கண்டாா - கண்டாாகள், எ-று.

(க - து.) தேவாகள விடுககபபடட தூதிகள தமயநதியைக் கண்டாாகள் எனபதாம். (எச)

பொருவருவனப்பின்மிக்கபுலோமசைமுதல்வராய
வரிவிழிகுமுதச்செவ்வாயவானவர்மகளிர்தாமித [ன்று
தெரியிழைசெவ்விநோக்கிற்சேணிடைப்பொலிந்துதோ
மிரவிமுன்மதியமாவரெனவுளத்தெண்ணினரால.

(இ - ள்.) பொரு அரு - ஒப்புச்சொல்லுதற கரிய, வனப்பின் மிக்க - அழகினாலே மிகுந்த, புலோமசை முதல்வா ஆய - இந்திராணி முதலியராகிய, வரி விழி - இரேகைகளையுடைய கண்களையும், குமுதம் செய்வாய - அல்லிமலாபோன்ற சிவநத வாயினையுமுடைய, வானவா மகளிா - தெய்வமாதா, இ தெரி இழை - இநதத தமயந்தியினுடைய, செவ்வி நோக்கில் - அழகைப் பாாததால், சேணிடை - ஆகாயத்தினிடத்து, பொலிந்து தோன்றும - பிரகாசித்துத தோனறுகின்ற, இரவி முன் - சூரியன் முனனே, மதியம் ஆவா என - சந்திரனபோ லாவரென்று, உளத்து - மனததிலே, எண்ணினா - (தூதியா) சிந்திததாாகள், எ-று. தாம் - ஆல் - அசைகள்.

(க - து.) தமயநதி அழகுக்கு முனனே தேவ மாதரழகு சூரியன் முன்னே தோனறுஞ் சநதிரன் போலும் என்றெண்ணினாகள் என்பதாம்.

தெய்வமாதரிற் சிறந்த இந்திராணிமுதலான மங்கையரும் இவளழகை நோக்கில் தாம் அழகுடையோமென்னுஞ் செருக்கை யொழிவாாகளென்பது கருதது. (எரு)

எய்தியமகளிர்தம்மிலிமையவர்தலைவன்றூதி
யையரிநெடுங்கட்செவ்வாயணங்கிற்குமணங்குபோல்வாய்
செய்துணர்த்தருவினீழற்கோமகன்பணியத்தீயோத்
செய்திகேட்டிடுயுன்...

(இ - ள்.) எய்திய மகளிர் தம்மில் - அடைந்த தூதியர் நால்வருள், இமையவர் தலைவன் தூதி - இந்திரனுடைய தூதியானவள், ஐ அரி நெடு கண் - அழகிய இரேகைகளையுடைய நெடியகண்களையும், செவ்வாய் - சிவந்தவாயினையுமுடைய, அணங்கிற்கும் அணங்கு போல்வாய் - தெய்வமங்கைக்கும் தெய்வமாதையொத்த தமயந்தியே, கொங்கு துணர் - பூங்கொத்துக்களையுடைய, தருவின் நீழல் கோமகன் - ஐந்தருவினிழலிலிருக்கின்ற இந்திரனுடைய, பணியால் - ஏவலினாலே, போந்த செய்தி - வந்த செய்தியை, நீ கேட்டி என்று - நீ கேட்பாயாகவென்று, சிறு அடி வணங்கி - சிறியபாதங்களை வணங்குதல்செய்து, சொல்வ - சொல்வாள், எ-று.

(க - து.) இந்திரன் தூதியானவள் தமயந்தியைவணங்கிச் சொல்வாளாயினள் என்பதாம்.

தான் தெய்வமங்கையாயினும தன்னிறைவனுக்குத் தலைவியாக் குறிக்கத் தூதியாக வந்தமையால் தமயந்தியினிடத்து அவளுக்கு வணக்கஞ் சொல்லப்பட்டது. (௪௬)

இருவிசும்பொருகோலோச்சியேதிலர்கடந்துதேவர்
பரவிநின்றிறைஞ்சநாளும் பனிமலர்த்தருவினீழ
லரியணைப்புறத்துவைகுமண்ணலுக்கமிர்தமன்ன
வுருவிலாவொருவன்செய்யுமுறுபகைகாத்தல்வேண்டும்.

(இ - ள்.) இரு விசும்பு - பெரிய வானுலகை, ஒரு கோல் ஓச்சி - ஒரு செங்கோல் செலுத்தி, ஏதிலர் கடந்து - சத்துருக்களை வென்று, தேவர் பரவி நின்று - தேவர்கள் துதிசெய்து நின்று, இறைஞ்ச - வணங்க, நாளும் - நாடோறும், பனி மலர் தருவின் நீழல் - குளிர்ச்சிபொருந்திய மலரானிறைந்த ஐந்தருவினிழலில், அரியணை புறத்து வைகும் - சிங்காதனத்தினிடத்துத் தங்கிய, அண்ணலுக்கு - இந்திரனுக்கு, அமிர்தம் அன்னாய் - அமிர்தத்துக் கொப்பானவளே, உருவிலான ஒருவன் - வடிவமில்லாதவனாகிய மன்மதனானவன், செய்யும - செய்கின்ற, உறு பகை - மிகுந்த பகையை நீக்கி, காத்தல்வேண்டும் - (நீ) காக்கவேண்டும், எ-று.

(க - து.) இந்திரனுக் கமிர்தம் போன்ற தமயந்தியே! நீ மன்மத பாணத்தை நீக்கிக் காக்கவேண்டு மென்றாள், என்பதாம்.

இதுமுதல் மூன்று பாட்டால் தூதி தமயந்தியை வேண்டிக்கோடல், 'இருவிசும்பு' என்றதனால் பொன்னுலகென்பதும், 'ஒருகோலோச்சி' என்றதனால் பொதுவறப் புரப்பவனென்பதும், 'ஏதிலர்க் கடந்து' என்றதனால் வீரனென்பதும், 'தேவரிறைஞ்ச' என்றதனால் அவரினுஞ் சிறந்தோனென்பதும், 'தருவினீழல்' என்றதனால் மிகுந்த செல்வ முடையோனென்பதும், 'அரியணைப்புறம்' என்றதனால் அரசு செய்பவனென்பதும், கருத்தாகப் பெற்றாம். இந்திரனை மணம்புரிவா யென்பது உருவிலான் செய்யும் பகை யொழித்தல்வேண்டும் என்னும் வாக்கியத்தாற் பெறப்படுகின்றமையால் [illegible] (௪௭)

**எம்மிறை யிளவற் காக விருங்கடல் கடைந்து வாசச்,**
**செம்மலர்த் திருவை யீந்த தேவர்வா சவற்கு மின்னும்,**
**கைம்மலர் வருந்த விக்குக் கடல்கடைந் துழலா வண்ண**
**ம், பொம்மல்வெம் முலையா யன்னோற் கின்னருள் புரிதல்**
**வேண்டும்.**

(இ - ள்.) எம் இறை இளவற்கு ஆக - எங்களுடைய உபேந்திரனுக்காக, இரும் கடல் கடைந்து - பெரிய பாற்கடலைக் கடைந்து, வாசம் செம் மலர் திருவை - வாசனைபொருந்திய செந்தாமரை மலரிலிருக்கின்ற திருமகளை, ஈந்த தேவர் - தந்த தேவதைகள், வாசவற்கும் - இந்திரனுக்கும், இன்னும் - இன்னமும், கை மலர் வருந்த - கைகளாகிய மலர்கள் வருந்த, இக்கு கடல் கடைந்து - கருப்பிரதக்கடலைக் கடைந்து, உழலா வண்ணம் - அலையாதவிதம், பொம்மல் வெம் முலையாய் - பொலிவினையுடைய விரும்பத்தக்கவாகிய முலைகளையுடைய தமயந்தியே, அன்னோற்கு - அவ்விந்திரனுக்கு, இன் அருள் - இனியவருளை, புரிதல்வேண்டும் - (நீ) செய்தல்வேண்டும், எ-று.

(க - து.) இந்திரனுக் கருள்செய்யவேண்டு மென்றாள் என்பதாம்.

இங்கு இளவலென்பது இந்திரனுக்குச் சயந்தருவதற்காக அவன் தம்பியா யவதரித்து உபேந்திரனாகி யுடனிருக்கின்ற திருமாலை யெனக் கொள்க. தேவர்க்கு இம்முயற்சி யில்லாதிருக்கவும் அவர்க் குளதாகக் கூறலால் உயர்வு நவிற்சியணி. (எஅ)

**மாயிருஞாலந்தன்னின்மகம்பலவியற்றிப்பெற்ற**
**மீயுயர்பசும்பொனாட்டின்மேதகுசெல்வமெல்லா**
**மேயினநின்பாலன்றோவிமையவர்க்கிறைவன்பானின்**
**சேயரிக்கடைக்கணோக்கஞ்சிறிதருள்புரியின்மாதோ.**

(இ - ள்.) மா இரு ஞாலந்தன்னில் - மகத்தாகிய பெரிய பூமியிலே, மகம் பல இயற்றி - நூறுவேள்விசெய்து, பெற்ற - பெற்றுக்கொண்ட, மீ உயர் - மேலாக உயர்ந்த, பசு பொன் நாட்டில் - பசுமை பொருந்திய பொன்னுலகத்தில், மேதகு செல்வம் எல்லாம் - மேன்மை பொருந்திய பாக்கியமெல்லாம், நின்பால் - உன்னிடத்தில், ஏயின அன்றே - பொருந்தியனவல்லவா, இமையவர்க்கு இறைவன்பால் - இந்திரனிடத்தில், நின் சே அரி கடைக்கண் நோக்கம் - உன்னுடைய செவ்வரிபரந்த கடைக்கண்பார்வையானது, சிறிது அருள் புரியின் - கொஞ்சம் அருள்செய்தால், எ - று. மாது - ஓ - அசைகள்.

(க - து.) உன்கடைக்கண்பார்வை சிறிது இந்திரனிடத்தில் வைத்தால் அவன் செல்வ மெல்லாம் உனக்குடையவாம் என்றாள் தூதி என்பதாம்.

* செல்வமாவன—மூவுலகாட்சி கற்பகமுதலியஐந்தரு [illegible] காமதேனு சிந்தாமணி சங்கநிதி பதுமநிதி பொன்னுலகம் [illegible]

யந்தமாளிகை ஐராவதயானை உச்சைச்சிரவக்குதிரை சுதாம சபை நந்தனவனம் அமிர்தம் தேவா அரம்பையா இவைமுதலியனவாம். செல்வத்திற்கும் அருட்கும் மாற்றிக்கோடல் சொல்லப்பட்டமையால் மாற்றுநிலையணி. (எக)

மண்ணினிற் சிறந்து வாழு மன்பதைத் தொகுதி த
ன்னி, லெண்ணிடிற் சிறந்தா ரன்றோ வியக்கரவ் வியக்கர்
தம்மில், விண்ணவர் சிறந்தா ரன்றோ விண்ணவர் தமையு
மாளு, மண்ணனின் னேவல் கேட்பி னதனினுஞ் சிறந்த
துண்டோ.

(இ - ள்.) மண்ணினில் - பூவுலகத்தில், சிறந்து வாழும் - சிறப்பைப்பொருந்தி வாழ்கின்ற, மனபதை தொகுதி தன்னில் - மக்கட்கூட்டத்துக்குள், எண்ணிடில் - நினைக்குமிடத்தில், இயக்கா சிறந்தார் அன்றோ - இயக்கரானவாகள் சிறந்தவாகளல்லவா, அ இயக்கர் தம்மில் - அந்த வியக்கருக்குள்ளே, விண்ணவா சிறந்தாா அன்றோ - தேவாகள் சிறப்பைப்பொருநதினவாகளல்லவா, விணணவா தமையும் ஆளும் - அத்தேவாகளையு மாட்சிசெய்கினற, அண்ணல் - இந்திரனுனவன, நின் ஏவல் கேட்பின் - உன்னுடைய ஏவறறொழிலைக கேட்பானுயின், அதனினும் சிறநதது - அதைக்காட்டிலும் சிறபபையுடையது, உண்டோ - ஒருபொருளுண்டோ, [இல்லை] எ - று.

(க - து.) இந்திர னுனக்கேவல் செய்தால் இதிலுஞ் சிறந்ததில்லையென்றாள் என்பதாம்.

மேன்மேலும் சிறபபைச சொல்லுதலால் மேன்மேலுயாச்சியணி (அ0)

தாதொடுநறவுதூற்றுந்தருநிழலினிதுவைகு
மேதகுநிதியுமானும் வேட்டனவுவந்துநல்க
வேதமிலரம்பைமாதர்முறைமுறையேவல்கேட்ப
நீதொழுமமரர்யாருநிற்றொழப்பணித்தியென்றாள்.

(இ - ள்.) தாதொடு நறவு தூற்றும் - மகரந்தப்பொடியோடு தேனையும் தூற்றுகின்ற, தரு நிழல் - ஐந்தருநிழலில், இனிது வைகும் - இனிதாகத்தங்கிய, மேதகு நிதியும் - மேன்மைபொருந்திய சங்கநிதி பதுமநிதிகளும், ஆனும் - காமதேனுவும், வேட்டன உவந்து நல்க - விரும்பியவைகளை மகிழ்ந்து கொடுக்க, ஏதம இல்-குற்றமில்லாத, அரம்பை மாதா - தெய்வமடவாாகள், முறை முறை - வரிசைவரிசையாக, ஏவல் கேட்ப - ஏவற்றொழிலைக்கேட்க, நீ தொழும் அமராயாரும் - நீ வணங்குகின்ற தேவாகளியாவரும், நின தொழ - நின்னைவணங்க, பணித்தி என்றாள் - சொல்லென்றாள், எ - று.

(க - து.) நீ வணங்கப்படுந் தெய்வங்க ளுன்னை வணங்கச் செய்யென்றாள் என்பதாம். (அக)

[இனி இரண்டுபாட்டால் தமயந்தி இந்திரன்றூதிக்கு விடைகொடுத்தல் சொல்லப்படுகின்றது.]

இனையனவுரைத்தலோடும்யாவர்தமுளமுந்தேரும்
பனியிருவிசும்பிற்றேவர்பரவவீற்றிருக்கும்வேந்தென்
மனநிலையுணரான்போலுமதைதர்நெடுங்கணல்லா
யுனைவிரைந்திங்ஙன்றூதுவிடுத்ததென்னுரைத்தியென்று.

(இ - ள்.) இனையன உரைத்தலோடும் - இத்தன்மையவாகிய சொற்களைச் சொன்னமாத்திரத்தில், யாவர்தம் உளமும் - எவர்களுடைய மனமும், தேரும் - தெரியாநின்ற, பனி - குளிர்ச்சிபொருந்திய, இரு விசும்பில் தேவர் - பெரிய தெய்வலோகத்திலிருக்கின்ற தேவர்கள், பரவ வீற்றிருக்கும் - வணங்க அரசிருக்கின்ற, வேந்து - இந்திரனானவன், என் மனம் நிலை - எனமனத்தினிலையை, உணரான் போலும் - தெரியாதவன்போல, மதை - குளிர்ச்சிபொருந்திய, மதர் நெடு கண் நல்லாய் - மதர்த்த நெடிய கண்களையுடைய தூதியே, உனை - உன்னை, விரைந்து - சீக்கிரமாக, இங்ஙன் தூது விடுத்தது - இவ்விடத்தில் தூதாகவனுப்பியது, என - யாதுகாரணமாக, உரைத்தி என்று - சொல்லென்று, எ - று.

(க - து.) தமயந்தியானவள், தூதியே இந்திரனெனது மனதை யறியாதவன் போல உன்னை யென்னகாரணமாகத் தூதுவிட்டா னென்று சொல்லி என்பதாம்.

அறியான்போலு மென்றமையால் தற்குறிப்பணி. (அஉ)

என்னுளத தென்றுநீங்கா திருப்பவ னளனே யாகும், பொன்னகர்க் கிறைவன்றன்பாற் பொருந்துதி யென்னுந் தூதுக, கன்னவ னியையுங் கொல்லோ வெனமறைந் தயலே நிற்கு, மன்னவன் மகிழ்ச்சிகூர மடவர லினிது சொன்னாள்.

(இ - ள்.) என் உளத்து - என்னுடையமனத்தில், என்றும் நீங்காது இருப்பவன் - எந்நாளும் பிரியாமனிலைநிற்பவன், நளனே ஆகும் - நளமகாராசனே யாகும், பொன் நகர்க்கு இறைவன் தனபால் - இந்திரனிடத்து, பொருநதுதி - நீ பொருநதக்கடவாய், என்னும் தூதுக்கு - என்றுசொல்லுந் தூதுக்கு, அன்னவன - அந்த நளமகாராசன், இயையுங்கொல்லோ என - சம்மதிபபானோ வென்று, மறைந்து அயலே நிற்கும் - ஒளித்துப் பக்கததிலே நிற்கின்ற, மன்னவன் - அரசன், மகிழ்ச்சிகூர - மகிழ்ச்சிமிக, மடவரல் - தமயந்தி, இனிது சொன்னாள் - இனிதாகச் சொல்லினாள், எ-று.

(க - து.) என்னுள்ளத் திருப்பவ னளனாகும், இந்திரனுக்கு பொருந்தென்னுந் தூதுக்கு நளனிசைவானோ வென்றாள், என்பதாம்.

* அன்னவ னியைதலாவது தான் காணியாகக்கொண்ட மனத்தை விட்டு நீங்குதல். அவ்வரசனுவது என்னிடதது வெறுத்து நீங்கல்

வேண்டும், யானுவது அவனை வெறுத்து நீக்கல்வேண்டும், இருவரும் ஓததிருக்கும்போது அவ்விடத்தை விரும்பததகா தெனறதாயிற்று. ஆயின் ஓரிடத்தில் இருவா எப்படி யிருக்கலாமென்பது கருதது. சுபா வததிற் சொல்லுந் தமயந்தியி னுரையைகேட்டமையால் நளனுக்கு மிகவு மகிழ்ச்சியுண்டாயிற றென்க. (அங)

**கோற்றொடி நளன்மே லுற்ற காதலைக குறித்து நோக்கி, மாற்றுத லரிதென் றெண்ணி வாசவன் றூதி யேக, வாற்றல்வா சவற்கு நேரா வணங்கெவர்க் கியையு மென் னுந், தேற்றமோ டுரையார் மற்றைத் தேவர்தூ தியரும் போனர்.**

(இ - ள்.) கோல் தொடி - தமயநதியானவள், நளன்மேல் உற்ற காதலை - நளனிடததில் வைதத ஆசையை, குறித்து நோக்கி - குறித் துபபாாதது, மாறறுதல் அரிது என்று எண்ணி - அதனை நீக்குதல் அரிதாகு மென்று நினைதது, வாசவன் தூதி ஏக - இந்திரனுடைய தூதி தனனிடததுக்குச செல்ல, ஆறறல் வாசவற்கும் - வலிமைபெற்ற இநதிரனுககும், நேரா அணங்கு - உடனபடாத தமயந்தி, எவாக்கு - யாவாககு, இயையும எனனும - சமமதிபபாள [ஒருவருககுஞ் சம்மதி யாள்] எனகிற, தேற்றமோடு - தெளிவுடனே, உரையாா - பேசாத வாகளாய், மறறை தேவா தூதியரும் - மறறைத் தேவாகள் விடுத்த தூதிகளும, போனா-செனறாாகள, எ-று.

(க - து.) தமயநதி நளன மேல் வைதத ஆசையைக்கண்டு இந் திரன றூதிபோக மறற தூதியரும் போனாாகள எனபதாம்.

உமமை இறந்தது தழீஇயவெசசம் தமயநதி பூவுலகமடந்தை யாயினும நம்மினுமிகக கலைகளின பயிறசியுடையவ ளாகையால் அவளை நமது சொலலால மடககி இநதிரனுககுத துணைவியாககுவது அசாததிய மெனறு இநதிரனறூதி நீஙகினு ளெனக. அபபடிபபட்ட சமபததுக் களையும் போகததைையும வலிமையையும சிறபபையுமுடைய இந்திரனுக் குச சம்மதியாதவள நம்மிறைவாககுஞ் சமமதிபபடாளெனபது கர தலாமலகம்போற றெரிதலால மறறைததூதிக ளவளுடன் உரையாடி அவமான மடையாமையே நமக்கு மேனமையென் றொழிந்தன ரென்க.

**தூதியரேககண்ட தோன்றல்செங்கமலககண்கண்**
**மேதகுசெலவமிககவிதர்ப்பர்கோன்றவததிற்றோன்று**
**மாதர்மென்னோககினுடன்வடிவினிலழுந்திப்பின்னு**
**மாதரம்பெருகியினபவாரியினழ்ந்தவன்றே.**

(இ - ள்.) தூதியா ஏக கண்ட - தேவதூதிகள் தம்மிடத்துக்குப் போதலைப்பாாதத, தோனறல் - நளமகாராஜனுடைய, செம் கமலம் கண்கள் - செந்தாமரை மலாபோன்ற நேத்திரங்கள், மேதகு - மேம் பட்ட, செல்வம் மிக்க விதாபபா கோன - செல்வததினுலே மிகுந்த வீமராசனுடைய, தவத்தில் தோன்றும் - தவத்தினு லவதரித்த, மாதர் மெல் நோக்கினுள் தன் - அழகிய மெல்லிய பாாவையையுடைய தமயந்

தியினது, வடிவினில் - உருவத்தில், அழுந்தி - ஆழ்ந்து, பின்னும் - பின்னும், ஆதரம் பெருகி - ஆசைமிகுந்து, இன்பம் வாரியின் - இன்பக் கடலிலே, ஆழ்ந்த - அழுந்தின, எ-று. அன்று - ஏ - அசை.

(க - து.) நளன் கண்கள் தமயந்தி உருவத்தி லழுந்திப் பின்னு மின்பக்கடலில் மூழ்கின எனபதாம்.

கரவினி லொருமங்கையின் அழகைநோக்கும் ஆடவற்கு மற் றொருவா அங்கில்லா திருந்தானமாததிரஞ் சகிக்கு மாதலால் 'தூதிய் ரோகக்கண்ட தோன்றல்' என்றார். அஙகுள்ள தோழிகளாவெனில் அவாகளுக இவனிருப்பது தெரியா தெனக. அவ ளவயஙகளைத் தனித் தனி நோககின் அநநோக்குதற கிடையூறடையின மற்றவைக ளெப்படி யுளவோ வெனறு கருததலையு மாதலால் முழுவதுங் தனசததியா லொருஙகு நோக்குதலால 'வடிவினிலழுநதி' எனறும அதில ஆசை மிகுதலா லிணபசாகரததி லழுநதினனெனறுஞ் சொலலினா. (௫௫)

பாசிழைபரந்தவலகுற்பனிமொழிகுமுதச்செவ்வாய்
மாசறுமதியமன்னவாண்முகததணங்கைநோக்கி
யாசையங்கடலுளாழ்ந்துகரைபெறுவரசனேக்க
மேசுவதொன்றுமில்லாமுலைவரையிவர்ந்தவன்றே.

(இ-ள.) பசு இழை பரந்த - பசும்பொனனாற்செயத வாபரணங் கள் பரவப்பெறற, அல்குல் - அல்குலையும், பனி மொழி - குளிர்ச்சி பொருந்திய சொற்களையும், குமுதம செவவாய - அலலிமலாபோன்ற சிவநத வாயினையும், மாசு அறு மதியம அனன - குற்றமற்ற சந்திரனை யொதத, வாள முகதது - ஒளிபொருநதிய முகததையு முடைய, அணங்கை நோககி - தமயநதியைப பாாதது, ஆசை கடலுள - ஆசை யாகிய கடலினிடதது, ஆழநது - முழுகி, கரை பெறா - கரையை யடையாத, அரசன நோககம் - நளனுடைய பாாவை, ஏசுவது ஒனறும் இலலா - பழிபபதொன்று மிலலாத, முலை வரை - முலைகளாகிய மலை யினமேல், இவாநத - ஏறின, எ - று. அம - அசை.

(க - து.) நளன் கண்கள ஆசைக்கடலிலே மூழ்கித தமயந்தி முலைகளாகிய மலைகள்மேலே யேறின எனபதாம்.

அல்குற பாம்பையும் வாய்க குமுகததையும் முகமதியததையு முடைய மஙகையினது ஆசைககடலில வீழ்நது அவைக ளூறுபடுதத வருந்தி ஒரு துறையுங்காணாது தடுமாறும் அரசனேக்கஙகள் அங்கு முலைகளெனனு மலைகளைககண் டேறின வெனக. கசசறுததல், களபச் சேறணிதல், முததுவடமணிதல், இறுமாநது மேனேககல், கண்கறுத் தல், அடிகனததல், திதலைபூததல, பூரிததல், புளகிததல், இழைநுழை யாதுநெருங்கல், வெச்செனல், தணணெனல், இடையை வாட்டல் முதலிய நற்குணங்களிற் குறைவினறி யிருததலால் 'ஏசுவதொன்று மில்லா முலை' என்றார். மிகுந்த வாசையோடும் ஸ்தனங்களை நோக்கின னென்பது கருத்து. ஆசையங் கடலென்றதும் முலைவரையென்றதும் உருவகஙகள். தமயந்தியைக் கண்டகண்கள் மிகுந்த ஆசையுடையதாய் முலையைப்பாாத்தன என்னும் பொருள்பெறச் சொல்லியநோக்கம் கட

லுளாழ்ந்து மலையி லிவிர்ந்த தென்றலில் கடலில் மூழ்கினோ கனாயி லேறுவதாகிய உலகாசெய்கை தோன்றுதலால் முனனுருவகத்தை யங்கமாகக்கொண்ட சுருங்கசசொல்லணி. (அகூ)

**போர்க்களிறனையவீமன்புரிந்தமெய்த்தவத்திற்றோன்றுங்**
**கார்க்கருங்கூந்தலாண்மைக்கண்வலையதனுட்பட்டோ**
**வீர்க்கிடைபுகாதபொம்மலிளமுலைநெருக்கிற்புக்கோ**
**பார்த்தசெங்கமலக்கணகள்பறிப்பரியனவாய்நின்ற.**

(இ - ள்.) போர களிறு அனைய - போர்செய்கின்ற யானையை யொதத, வீமன் புரிநத மெய தவததில் தோன்றும் - வீமராசன் செய்த உண்மையான தவததினாலே அவதரிதத, கார கரு கூந்தலாள் - மேகம்போனற கரிய அளகபாரததையுடைய தமயந்தியினது, மை கண் வலை அதனுள் பட்டோ - மையையணிந்த கண்ணாகிய வலையி லகபபட்டோ, ஈரக்கு - ஈரககானது, இடை புகாத - மததியததிலே நுழையாத, பொம்மல் இள முலை நெருககில் - பொலிவுபெற்ற இள மைபொருந்திய ஸ்தனபாரஙகளினுடைய நெருக்கத்தில், புக்கோ - புகுந்தோ, பாரதத - நோக்கிய, செம் கமலம் கண்கள் - செந்தா மரை மலாபோனற நேத்திரஙகள், பறிபபு அரியன ஆய் - பறிப்பதற் கரியவாகி, நினற - நினறன, எ-று.

(க - து.) நளன கண்கள தமயந்தி கண்வலையிற் பட்டோ தன நெருக்கிற் பட்டோ பறிபபதற கரியவாக நின்றன என்பதாம.

குழூஉபபுறந்தருதல குஞ்சரததியல்பே யெனறலின அவ்வா றுலகினனைக காப்பவ னாகையால 'போரககளிறனையவீமன' எனறும் பொயததவததிற றோனறினா ளனறெனபதறகு 'மெயததவததிற்றோன் றினாள்' எனறுங கொளக. ஈரககிடைபுகாமல விம்முதலால மூததன் வோ வென்னும் ஐயநிகழாமைக்கு 'இளமுலை' எனறார். கண்கள் அழகு முழுவது நோககி முறறாமையால பறிபபரியனவாய நினறன வென்க இது ஐயவணி. (அஎ)

**விண்ணவர்மகளிர்யாரும்வெள்குறவனப்புவாய்ந்து**
**பெண்ணலங்கனியநின்றபேதைபேரழகுமுற்றுங்**
**கண்ணொடுபிணித்தாலென்னவியப்புறக்களித்துநோக்கும்**
**புண்ணுறுபுலவுவேலானுளத்தொடுபுகலலுற்றான்**

(இ-ள்.) விண்ணவா மகளிா யாரும் - தேவாகளுடைய மங்கைய ரெல்லாம், வெள்கு உற - நாணமடைய, வனப்பு வாய்ந்து - அழகைப் பெற்று, பெண் நலம் கனிய நினற - பெணகளுக்குரிய நற்குணங்கள் முதிர நிற்கப்பெற்ற, பேதை - தமயந்தியினது, போ அழகு முற் றும் - பெரிய அழகு முழுவதும், கண்ணொடு - கண்களுடனே, பிணித் தால் என்ன - கட்டினதையொபப, வியப்பு உற - ஆச்சரியமிக, களிதது நோக்கும் - களிபபையடைந்து பாாக்கின்ற, புண் உறு - மா மிசததையுற்ற, புலவு வேலான - நாற்றததையுடைய வேற்படையேந் திய நளமகாராஜன், உளதொடு - மனததுடனே, புகலல் உற்றான் - சொல்லத தொடஙகினன், எ - று. உளதொடுபுகலல் - சிந்திததல்.

(க - து.) தமயந்தி யழகைக்கண்டு நளன் தன்னுள்ளத்தோடு சொல்வான் என்பதாம்.

பெண்ணலமாவன நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு முதலிய குணங்களும் பிறவுமெனக் கொள்க. அவ்வழகின்கடலை யொருவாற் றுற் கடந்த நளன் தன்மனத்துக் கிசைந்தவா வேறொருவரும் அங்கில் லாமையால் தான கண்டவியப்பை மனத்துடன் சொல்லத் தொடங் கின னென்க. பிணித்தாலென்றமையால் தற்குறிப்பணி (அஅ)

[இதுமுதல் பத்துப்பாட்டால் நளனது சிந்திப்புச் சொல்லப்படுகின்றது.]

**வடிவமைநூலிற்சொல்லும்வனப்பெலாமமைத்துவேதன்**
**கடிமலர்ச்செங்கைவண்ணங்காட்டியவுருவுகொலலோ**
**வடுகணைவேனிலானின்னமுதுகோறோயத்துத்தீட்டுமெ**
**படிவமோவுயிரைவாட்டும்பாவைதன்வடிவந்தானே.**

(இ - ள்.) உயிரை வாட்டும் பாவை வடிவம்- (என்னுயிரை) வாட்டுகின்ற இப்பாவை போலவாளுடைய உருவமானது, வேதன் - பிரமனானவன், வடிவு அமை நூலில் சொல்லும் - சாமுத்திரிகநூலிலே சொல்லாநின்ற, வனப்பு எலாம் அமைத்து - அழகனைத்தும் அமையச் செய்து, கடி மலர் - புதுமைபெற்ற தாமரைமலர்போன்ற, செம் கை வண்ணம் - (தனது) சிவந்தகைகளின் குணத்தை, காட்டிய - காண் பித்த, உருவுகொலலோ - உருவமோ, அடு கணை - கொல்லாநின்ற பூங் கணைகளையுடைய, வேனிலான் - மன்மதனானவன், இன அமுது - இனிய அமிர்தத்தில், கோல் தோயத்து - தூரிகைக்கோலை நனைத்து, தீட்டும் - எழுதப்பட்ட, படிவமோ - உருவமோ, எ-று.

(க - து.) நளன் தமயந்திவடிவம் பிரமன் கைத்திறமோ, மன்மத னெழுதிய வுருவமோ என்றான் என்பதாம்.

வேதன் செங்கைவண்ணங் கொலலோ வென்றவன் பின் வேனி லான்றீட்டும் படிவமோ வெனக்கூறியது அவனபடைப்பி லிவ்வழகு கண்டிலேம், அழகினால உலகத்தைமயக்குங் காமனே படைக்கி லிவ வழகுண்டாகலாமெனுங் கருத்தா லெனக்கொள்க. வேதனகைவண் ணங் காட்டியவுருவோ வேனிலானறீட்டும்படிவமோ வெனக்குறித் தலால் தற்குறிப்பணி. (அக)

**குழை யெதிர் நடந்து பைம்பொற் குமிழ்மிசை மறிந் து நீண்ட, வுழைபொரு நெடுங்க ணுடை னுறுப்பினுக் குவ மை யாகச், செழுமலர் முதல வாய பொருள்களைத் தெரிந் து கூறி, னழகினுக் குவமை தீர்ந்த வவற்றினுக கிகழ்ச்சி யாமே.**

(இ - ள்.) குழை - குழையென்னுங் காதணிக்கு, எதிர் நடந்து - முன்பாகச்சென்று, பை பொன் - பசிய பொன்போன்ற, குமிழ்மிசை - குமிழம் பூவினது மேற்பக்கத்தில், மறிந்து நீண்ட - மறிபட்டு நீட்சியை யடைந்த, உழை பொரு - மானபோன்ற, நெடுங் கண்ணுள்தன் - நெடி

யகண்களையுடைய தமயந்தியினது, உறுப்பினுக்கு - அவையவத்துக்கு, உவமை ஆக - உவமானமாக, செழு மலர் முதல ஆய பொருள்களை - செழுமைபெற்ற தாமரைமலர் முதலாகிய வஸ்துக்களை, தெரிந்து கூறின் - தெரிந்துசொல்லின், அழகினுக்கு - அழகுக்கு, உவமை தீர்ந்த - உவமை நீங்கிய, அவற்றினுக்கு - அவ்வுறுப்புகளுக்கு, இகட்சியாம் - பழிப்பாகும், எ-று. குமிழெனபது அதுபோன்ற மூக்கெனக் கொள்க.

(க - து.) தமயந்தி அவயவங்களுக்கு உமானப பொருள்க ளிகழ்ச்சியவாம என்றான எனபதாம.

மலர்முதலவாய பொருளகளாவன—மேகம நாகம பிறை நறை குவளை குமிழ குமுதம அமிர்தம காந்தள பாந்தள அரும்ப கரும்பு சுரும்பு முதலியவாம். உவமையில்லாத அவயவங்கட்கு அவைகளைச் சொல்லுவது இகழ்வா மென்க. உயர்ந்தவைகட்கு இழிந்தவைகளை யுவமித்துக்கூறுதலின மிக்க அவமானமில்லை யெனபது கருத்து. உவமானமாகிய தாமரைமலர் முதலியவற்றை இவளுறுப்புக்கு உவமையாகக் கூறின இழிவென உவமேயத்தைச் சிறப்பித்தலால் எதிர்நிலையணி. (கo)

குடைந்துவண் டிமிரும் செய்ய கொழுமலர்த் திரு
வி னோடும், தடஞ்சினை பொதுளு மென்பூந் தருநிழ லுறை
யுந் தெய்வ, மடந்தையர் தம்மை யெல்லாம் வைகலும் ப
டைத்துச் செங்கை, படிந்தபி னிந்த மாதைப் படைத்தன
ன் கமலத் தோனே.

(இ - ள.) வண்டு - வண்டுகளானவை, குடைந்து - மூக்கினாலே கிண்டி, இமிரும் - ஒலிக்கின்ற, செய்ய கொழு மலர் - சிவந்த செழுமைபெற்ற தாமரைமலரிலிருக்கின்ற, திருவினோடும் - இலக்குமியுடனே, தடம் சினை பொதுளும - பருத்த கிளைகள் நெருங்கிய, மெல் பூ - மெல்லிய மலர்களையுடைய, தரு நிழல உறையும் - ஐந்தருநிழலில் வசிக்கின்ற, தெய்வ மடந்தையர் தம்மை எல்லாம் - தெய்வ மங்கையரனைவரையும், வைகலும் படைத்து - நாள்தோறும் சிருட்டித்து, செம் கை படிந்தபின - தனனுடைய சிவந்தகைகள பழகிய பினபு, இந்த மாதை - இந்த தமயந்தியை, கமலத்தோன் - பிரமனவன், படைத்தனன - சிருட்டித்தான், எ-று. ஏ - அசைநிலை.

(க - து.) பிரமன் இலக்குமியையும், தேவமாதர்களையும் படைத்துக் கைதோந்தபின் இவளைப் படைத்தான் என்று நளன் என்பதாம்.

அழகிற் சிறந்த இலக்குமி இந்திராணிமுதலிய தெய்வமங்கையராலும் விரும்பத்தக்க அழகுடையவளா யிருத்தலா லிவ்வாறு சொல்லினன். இப்படிப்பட்ட படைப்பின் முயற்சி பிரமனுக்கு இல்லாதிருந்தும் உள்ளதாகக் கூறலின் உயர்வுநவிற்சியணி. (கக)

விரிந்தசெங் கமலத் தண்பூம் பொகுட்டில்வீற் றிரு
க்கு மேலோன், முருந்திள முறுவற் செவ்வாய் முகிழ்மு
லைக் கரிய கூந்தற், றிருந்திழை யழகு வாய்ந்த திருமுகம்.

**திங்க ளாகப், புரிந்தனன் களங்க மன்றே புருவமா வியற் றி ஞனே.**

(இ - ள்.) விரிந்த செம் கமலம் - விரியபபெற்ற செந்தாமரையி ஞடைய, தண் பூ பொகுட்டில - குளிாச்சிபொருநதிய மலாக்கொட்டை யின்மேல், வீறறு இருககும - சிறபபோடிருககிறை, மோலோன - பிரமஞனவன, முருந்து - மயிலிறகின முதனமுள போன்ற, இள முறு வல் - இளமைபொருநதிய தநதஙகளையும, செவவாய - சிவந்தவாயினை யும், முகிழ முலை - அருமபை யொதத முலைகளையும், கரிய கூநதல் - கறுத்த அளகபாரததையுமுடைய, திருநது இழை - தமயநதியினது, அழகு வாயந்த - அழகு பொருநதிய, திருமுகம ஆக - திருமுகமாக, திஙகள் புரிநதனன - சநதிரனைச செயதான, களஙகம அனறே - அதன களங்கததை யல்லவா, புருவம ஆ - புருவமாக, இயறறிஞன - செய் தான், எ-று.

(க - து.) பிரம னிவள் முகததைச சநதிரனுகப படைததான் என்றன எனபதாம.

இவள்முகம் சநதிரனெனபதறகுச சநதேகமிலலை யெனபது கருததது. இது உயாவுநவிறசியணி. (௬௨)

**மணிமுடி யதனைக கொமமை முலையென வமைத்து மார னணிமலர்க கணைக ளைந்தி லான்றமூ வுலகு மூன்று, கணைகளால வென்று மற்றைக கணைகளுக கெதிரில லாமை யிணைவிழி யென்று பேரிட் டிவண்முகத திருத்தினனே.**

(இ - ள்.) மாரன - மனமதனுனவன, மணி முடியதனை - தன் னுடைய மணிகள்பதிதத கிரீடததை, கொம்மை முலை என - இளமை பொருந்திய ஸ்தனங்களெனறு சொல்ல, அமைதது - பொருததி, அணி மலா கணைகள ஐநதில் - அழகிய பூவமபுக ளைந்தனுள், ஆனற மூ உலகும் - நிறைந்த திரிலோகஙகளையும், மூனறு கணைகளால் - மூன்று பாணங்களால, வென்று - வெற்றிகொண்டு, மற்றை கணைக ளுக்கு - மற்றை யிரண்டுபாணஙகளுககு, எதிர இல்லா - எதிரில்லாத, மை இணை விழி என்று - அஞ்சனந்திட்டிய இரண்டு கண்களென்று, பேரிட்டு - பேர் வைதது, இவள முகதது - இந்தத தமயந்தியினுடைய முகததில், இருத்தினன - இருததிவைததான, எ-று.

(க - து) மன்மதன் தன் முடியை முலையாகவுங் கணைகளைக் கண் களாகவும் அமைத்தான என்றன எனபதாம்.

இவளுடையகண்கள் மாரன்கணைக ளாயினவாற்றல் ஆடவரை மயக்கின, அல்லவாயின் எவ்வாறு மயக்கு மென்பது கருதது. தமயந்தி யின் விழிக்கண் மாரன்கணையை ஆரோபித்தற்பொருட்டு விழியின் பேரிட்டென்று அத்தன்மையை யொழிததலால் ஒழிப்பணி. (௬௩)

**வெதிர்புரை பசிய மென்றேள் வேனெடுங் கண்ணி ஞடன், றிதலைவெம் முலைபோன் முத்தந் தெரிதர வணிந்தி**

டாமன், மதமழை கொழிக்கும் வேழ மருப்பிணை வெருவி
யன்றே, கதிர்மணி முத்த முள்ளே கரந்துவைத் திருக்கு
மாறே.

(இ-ள்.) வெதிர் புரை - மூங்கிலையொத்த, பசிய - பசுமைபொருந்திய, மென் தோள் - மெல்லிய தோளையும், வேல் - வேற்படைபோன்ற, நெடு கண்ணினாள்தன் - நெடிய கண்களையுமுடைய தமயந்தியினது, திதலை - தேமலையுடைய, வெம் முலை போல - விருப்பத்தைத் தருகின்ற ஸ்தனங்களைப்போல, முத்தம் - முத்துக்களை, தெரிதர - தெரியும்படி, அணிந்திடாமல் - தரித்துக்கொள்ளாமல், மதம் மழை கொழிக்கும் - மதமாகிய மழையைக் கொழிக்கின்ற, வேழம் மருப்பு இணை - யானையினுடைய கொம்பிரண்டும், வெருவி அன்றே - பயந்தல்லவா, கதிர் மணி முத்தம் - கிரணங்களையுடைய அழகிய முத்துக்களை, உள்ளே - தமக்குள்ளே, கரந்து - ஒளித்து, வைத்து இருக்குமாறு - வைத்திருக்குமவிதம், எ-று. கொழித்தல் - பெருக்குதல்.

(க - து.) தமயந்தி முலைகளைப்போல முத்துக்களை வெளிப்படுத்தாமல் அம்முலைகட்குப் பயந்தல்லவா யானைக் கொம்புகள் முத்துக்களை உள்வைத்திருக்கின்றன என்று நளன் எண்ணினான்.

முத்துக்கள் தம்மிடத்திற் பிறந்தனவாயிருந்தும் தனங்களால் வெல்லப்பட்டபடியால் அவ்வெற்றிதோன்ற அம்முத்துக்களையணிந்த அத்தனங்கள்போல் தந்தங்கள் வெளிப்பட்ட வணிதற்கு வெருவினமையால் கரந்துவைத்தன வெனக். அரசனால் அபகரிக்கப்பட்ட பொருளையுடையவன் தப்பின்ற திரவியத்தைத் தனக்குள் ளடக்கிவைப்பனென்பது கருத்து. தந்தங்கள் தமக்கு ளியற்கையின் முத்துக்களுடைமையில் வெருவி கரந்துவைத்தனெனக் குறித்தலால் தற்குறிப்பணி. இவ்வாறு கூறுதலால் வாணியமாகிய தமயந்தியின் தனச்சிறப்புத் தோற்றுகின்றமையால் புனைவிலிபுகழ்ச்சியணி. (௬௪)

மடலவிழ் கமலப் புத்தேள் வடிவினை யமைத்து வெய்ய, தடமுலை யமைப்ப மாதி னுறுப்பலாற் றரமின்றென்று, விடையினுக கமைத்த கூற்றை யெடுத்தெடுத் தமைத்தலாலோ, கொடியெனத் தேய்ந்து தேய்ந்து குறைந்தது மருங்கு றானே.

(இ - ள்.) மடல் அவிழ் கமலம் புத்தேள்-இதழ்களானவை விரிந்த தாமரைமலரிலிருக்கும் பிரமனானவன், வடிவினை அமைத்து - உருவத்தை முன்புசெய்து, வெய்ய - வெவ்விய, தடம் முலை - பருத்த ஸ்தனங்களை, அமைப்ப - பின்புசெய்ய, மாதின் - தமயந்தியினுடைய, உறுப்பு அலால் - அவயவமல்லாமல், தரம் இன்று என்று - தகுந்தபொருளில்லை யென்று, இடையினுக்கு - மருங்கிற்கு, அமைத்த கூற்றை - வைத்த பங்கை, எடுத்து எடுத்து - கொஞ்சம் கொஞ்சமாக வெடுத்துக் கொண்டு, அமைத்தலாலோ - செய்தபடியாலோ, கொடி என - கொடி யென்றுசொல்ல, தேய்ந்து தேய்ந்து - தேய்ப்பட்டுத்தேய்ப்பட்டு, மருங்குல் - இடையானது, குறைந்தது - குறைபட்டது, எ-று.

(க - து.) பிரமன் இடைக்கமைத்த பங்கை யெடுத்து முலைக்க மைத்த படியினு லல்லவோ இவளுக் கிடை சுருங்கிற்று என்ருனளன் என்பதாம்.

தமயந்தியின் தனங்கள் நாடோறும் பருதது இடைசிறுக்கையால் அவைகளைக்கண்ட வரசன் மறறை மாதரைபபோலாது முன்பு இவ ளைபபடைதத பிரமன வேறொரு கருவிக்கூறு தரமன்றென்று கருதி இவளுறுபபுககளுள இடையிலவைதத கூற்றைத் தனததிற கமைத் திருககலாகுமெனக கருதினனெனக. இயல்பிற்குறைந்த இடையினைத் தனததிற் கமைநததலாற குறைந்ததெனக குறிததலால் தறகுறிபபணி.

மௌவலந் தெரியல வேயந்து மணங்கமழ் கரிய கூந் தற், கொவ்வையங் கனிவாயப் பேதை குவிமுலைக களிநல் யானை, செவ்விதிற் பிணிதத நீலச் செழுமணி வலலி போ லு, மவ்வயி றணிந்த கோல வணிமயி ரொழுக்கந் தானே.

(இ - ள்.) மௌவல - முலலையினுடைய, அம - அழகிய, தெரியல் வேயநது - மாலையைததரிதது, மணம கமழ் - வாசனை கமழ்கின்ற, கரிய கூநதல - கறுதத அளகபாரததையும், கொவவை கனி வாய் பேதை - கொவவைககனிபோனற வாயையுமுடைய தமயநதியினது, குவி முலை - குவிநத ஸதனஙகளாகிய, களி நல யானை - களிபபை யுடைய நலலயானையை, செவவிதின பிணிதத - நேராகக கட்டிய, நீல செழுமணி வலலி போலும - செழுமையுள்ள நீலரதனககொடிபோலும், அ வயிறு - அநத வயிறனது, அணிநத - தரிதத, கோலம் - ஒபபனை யமைநத, அணி மயிர ஒழுககம் - அழகிய மயிரொழுஙகு, எ-று. தான் ஏ - அசைகள.

(க - து.) மயிரொழுஙகானது தமையநதி முலைகளாகிய யானை களைக கட்டிய வலலிபோ லிருநதது எனறு னளன் எனபதாம.

தமயநதியினுடைய தனஙகளெனனும் யானைகள கட்டாவிட்டால் எதிரப்பட்ட ஆடவரைக் கொல்லுமெனபது கருதது. மயிரொழுககத் தை நீலச்செழுமணி வல்லிபோலுமெனக குறிததலால் தற்குறிப்பணி.

ஐங்கணைக் கிழவன் வைகு மணியர சிருக்கைப் பாங் கர், தங்குற வமைத்த வாழைத் தண்டுகொ றறுகட் சீற் றத், துங்கவெம பரும யானைத தடக்கைகொ றணித தேற்றுஞ், செங்கயற் கருங்கட் செவ்வாய்த் திருந்திழை குறங்கு தாமே.

(இ - ள்.) செய் கயல் கரு கண் - சிவந்த கயல்போன்ற கரிய கண்களையும், செவ் வாய் - சிவந்த வாயினையும், திருந்து இழை - திருத்த மாகிய ஆபரணததையுமுடைய தமயந்தியினது, குறஙகு - தொடை கள், ஐ கணை கிழவன வைகும் - மன்மதன் தங்குகின்ற, அணி அரசு இருக்கை - அழகிய அத்தாணியிடத்தின், பாங்கா - பக்கத்தில், தங்கு உற - தங்கும்படி, அமைதத - செய்த, வாழை தண்டு கொல் - வாழைத் தண்டோ, தறுகண் - அஞ்சாத, சீற்றம் - கோபத்தையுடைய, துங்கம் -

உயர்ச்சிபொருந்திய, வெம் - வெவ்விய, பருமம் - ஒப்பனை யமைந்த, யானை - யானையினுடைய, தடம் கை கொல் - பருத்த துதிக்கையோ, துணிதல் - இன்னதென்று துணிதலை, தேறரும் - (யாம்) தேறோம், எ-று.

(க - து.) தமயந்தி தொடைகள் மன்மதன் அத்தாணி மண்டபத்து வாழை ஸ்தம்பங்களோ யானைத்துதிக்கைகளோ அறியோம் என்று நளன் என்பதாம்.

மாதரது அல்குல் மாரனுக்கு அரசிருக்கை மண்டபமாகையால் அதற்கு அலங்கரித்த வாழைத்தண்டோ வென்றார். தேற்றும் எனத் தனவினைப்பொருள் பிறவினையில் வந்தது. குறங்கை - வாழைத்தண்டு கொல் யானைத் தடக்கைகொ லென ஐயுறலால் ஐயவணி. (கஎ)

**பைந்தருநீழல்வைகும்பாவையர்பதுமபீடத்**
**திந்திரைககணங்குசெய்யுமேந்திழையெழிற்குத்தோற்று**
**வந்தடிபணியுந்தோறும்வாணுதல்கவினத்தீட்டுஞ்**
**சிந்துரத்திலகந்தோய்ந்தோசிறடிசிவந்தவாறே.**

(இ - ள்.) பை தரு நீழல் வைகும - பசிய ஐந்தருநீழலில் தங்கிய, பாவையா - அரம்பையாகள், பதுமபீடத்து இந்திரைக்கு - தாமரை மலரி லிருக்கின்ற திருமாதுக்கு, அணங்கு செய்யும் - வருத்தத்தைச் செய்கின்ற, ஏந்து இழை எழிற்கு - தமயந்தியினது அழகிற்கு, தோற்று வந்து - தோல்வி பெற்றுவந்து, அடி பணியும் தோறும - அடிகளில் வணங்கும் தோறும், வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியானது, கவின - அழகுபெற, தீட்டும சிந்துர திலகம் - எழுதப்பட்ட சிந்துரப் பொட்டு, தோய்ந்தோ - தோயப்பெற்றோ, சிறு அடி - சிறியபாதங்கள், சிவந்த ஆறு - சிவந்த விதம், எ-று,

(க - து.) தேவமாதர்கள் தமயந்தியழகுக்குத் தோற்று அடியை வணங்குதலால் அவர்கள் நெற்றித்திலகமப்பட்டுப் பாதஞ் சிவந்ததோ என்று நளன் என்பதாம.

அரம்பையா மேற்பிறப்பிலாவது நின்போ லழகுபெற விரும்பினம, நீ முற்பிறப்பிலே யாதுசெய்து இவ்வழகு பெற்றனை அதைச் சொல்லுவாயாகிலெ யாமும் அவ்வாறு செய்துமெனப் போற்றுதலால், 'வந்தடிபணியுந்தோறும்' என்றார். பாதத்தி னியற்கைச் சிவப்பினில் அடிபணியுந் தேவமாதர் சிந்துரத்திலதந்தோயவைக் குறித்தலால் தற் குறிப்பணி. (கஅ)

**இன்னவா றுளத்தினெண்ணி யெறும்வலி மடங்கல ன்னான், மின்னவிர் குலிசவேந்தன் விஞ்சையின் புணர்ப் பினீங்கி, பொன்னவிர் சுணங்குபூத்த பொமமல்வெம் மு லேயி னுணமுன், கன்னலஞ் சிலேவேளென்னக் கட்புலன் கதுவ நின்றான்.**

(இ - ள்.) இன்ன ஆறு - இந்தப்பிரகாரம், உளத்தில் எண்ணி - மனதிலே சிந்தித்து, எறும் வலி - மிகுந்த வலிமைபெற்ற, மடங்கல்

அன்னன் - சிங்கத்தையொத்த நளன், மின் அவிர் குலிச வேந்தன் - ஒளிவிளங்குகின்ற வச்சிரப்படையையுடைய இந்திரனது, விஞ்சையின் புணர்ப்பின் நீங்கி - வித்தையினுடைய சம்பந்தத்தினின்று நீங்கி, பொன் அவிர் - பொன்போலும் பிரகாசிக்கின்ற, சுணங்கு பூத்த - தேமல் உண்டாகிய, பொம்மல் - பொலிவினையுடைய, வெம் முலையி னாள் முன - விருப்பத்தைத் தருகின்ற தனங்களையுடைய தமயந்திக்கு முன்னாக, கனல் சிலை வேள் என்ன - கருப்புவில்லேந்திய மன்மதன் போல, கண் புலன் கதுவ - கண்ணறிவு பற்றும்படி, நின்றான் - நின் றனன், எ-று.

(க - து.) நளன் தமயந்திக்குமுன் அருவத்தைவிட்டு உருவமாய் நின்றான் என்பதாம்.

நளன் இவ்வாறு சிந்தித்துப் பின்பு தான் வந்தகாரியம் முடித்தற் காக உருவின்றி யுளாகின் வெருவுவளென ஒளித்தலைவிட்டு வெளிப் பட நின்றன னெனக. சிலைவேளென்ன வென்லால உவமை யணி. ()

விரைகமழ் நறியதண்டார் விதர்ப்பர்கோ னளித்த
பாவை, யரசிளங் குமரன்றன்னை யார்வமோ டினிது கண்
டா, ளுருவெளி கண்டுநாளு முவந்துள மயர்வாண் முன்
னந், தெருளிறக் காணி லெய்து முவகையார் தெரிக்கற்
பாலார்.

(இ - ள்.) விரை கமழ் - வாசனை கமழ்கின்ற, நறிய தண் தார் - நல்ல குளிர்ச்சிபொருந்திய மாலையணிந்த, விதர்ப்பர்கோன் அளித்த - வீமராசன் பெற்ற, பாவை - தமயந்தியானவள், அரசு இள குமரன் தன்னை - நளமகாராசனை, ஆர்வமோடு - ஆசையுடன், இனிது கண் டாள் - இனிதாகப் பார்த்தாள், உருவெளி கண்டு - உருவெளித் தோற் றத்தைக்கண்டு, நாளும் உவந்து - நாடோறும் உவப்படைந்து, உளம் அயர்வாள் - மனம் வருந்துகின்றவள், முன்னம் - முன்னாக, தெருள் உற காணில் - தெளிவுபொருந்தக் கண்டால், எய்தும் உவகை - அப்போ தடைகின்ற மகிழ்ச்சியை, யார் - எவர்கள், தெரிக்கற்பாலார் - தெரியப் படுத்த வல்லவர்கள், [ஒருவருமில்லை,] எ-று

(க - து.) தமயந்தி நளனை ஆசையோடு கண்டாள், அவள் மகிழ்ச் சியை யார் சொல்லவல்லார் என்பதாம்.

அந்தப்புரத்திலே வந்த புருடனைநோக்குந் தமயந்தி வெருட்சிக னின்றி மகிழ்ந்தனளெனபது நாடோறும் பொய்வடிவங்கண்டு மகிழ் பவளுக்கு மெய்வடிவங் காணப்பெறில் உண்டாமின்பம் சொல்லி முடியாதென்னும் வாக்கியப்பொருளால் நிறுத்தப்படலால் செய்யுட் குறியணி. (௬00)

அங்கண்மா ஞாலங் காக்கு மன்னன்மே லணங்க னு
டன், செங்கயற் கருங்கண் வாளி சிறிதுசென் றழுந்தா
முன்னம், பைங்கழை தாங்கி யாவம் பரித்திடம் பார்த்து

நின்ற, துங்கவேள் விடுத்த வாளி தூவன்மட் டாழ்ந்த வன்றே.

(இ - ள்.) அம் கண் - அழகிய இடமகன்ற, மா ஞாலம் காக்கும் - மகத்தாகிய பூமியை அளிக்கின்ற, அண்ணல்மேல் - நளமகாராசன் மேல், அணங்கனாள் தன் - தமயந்தியினுடைய, செம் கயல் - சிவந்த கயல் போன்ற, கரு கண் - கரிய கண்ணாகிய, வாளி - பாணங்கள், சிறிது சென்று - கொஞ்சம்போய், அழுந்தா முன்னம் - அழுந்துவதற்கு முன்னமே, பை கழை தாங்கி - பசிய கருப்புவில்லைச் சுமந்துகொண்டு, ஆவம் பரித்து - அம்பறாத்தூணியைத் தாங்கிக்கொண்டு, இடம் பார்த்து நின்ற - இடநோக்கி யிருந்த, துங்கம் வேள் - உயர்ச்சிபொருந்திய மன்மதனானவன், விடுத்த வாளி - பிரயோகம்பண்ண பாணம், தூவல் மட்டு - குதைவரையும், ஆழ்ந்த - அழுந்தின, எ-று.

(உ - து.) தமயந்தி கண்கணை யெய்யுமுன்னே நளன்மேல் மன்மதன்கணை யெய்தானெ என்பதாம்.

தம்மரசன் ஒருதொழில் செய்யத்தொடங்குதற்கு ஏவலர் அவன் றொடங்குமுன்னமே விரைந்து செய்துமுடித்தல்போல் தமயந்தியின் கண்களாகிய பாணங்கள் சிறிதுபோய நளன்மே லழுந்துமுன்னமே மன்மதபாணங் குதைவரையும் அழுந்தின. ஆயின் அக்காமன் இவள் கண் குறிப்பினிற்கும் ஏவலனாகின னெனக. இவள் நோக்கிய பின் செல்லுங் காமபாணத்திற்கு நோக்கின முற்காலஞ் சொல்லப்பட்டமையால் உயர்வு நவிற்சியணி. (௧0௧)

கழிபெருங் காதலாள்கட் கருவிளை மலர்கள் வெய்ய,
மழவிடை யனையான்செய்ய மணிபபுய வரையிற் பூத்த,
விழைவொடு மகிழ்ச்சிகூரும் வேனிலவே ளனையான் செ
ங்கண், முழுநெறிக கமலமன்னாண் முலைத்தடத் தலர்ந்த
மாதோ.

(இ - ள்.) கழி பெரு காதலாள் - மிகுந்த பேராசையுடைய தமயந்தியினது, கண கருவிளை மலாகள - கணணாகிய காக்கணம் பூக்கள், வெய்ய மழ விடை அனையான் - வெவ்விய இளவேற்றையொத்த நளமகாராசனது, செய்ய மணி புயம் வரையில் - சிவந்த அழகிய தோளாகிய மலையில், பூத்த - மலாந்தன, விழைவொடும் - அனபுடனே, மகிழ்ச்சிகூரும் - மகிழ்ச்சியடைகின்ற, வேனில் வேள் அனையான - நளமகாராசனுடைய, செம் கண் முழு நெறி கமலம் - சிவந்த கண்ணாகிய முழுநெறிப்பையுடைய தாமரைகள், அன்னாள் - அத்தமயந்தியினுடைய, முலை தடத்து - தனததடமாகிய குளததினிடத்து, அலாந்த - பூத்தன, எ - று. தடமென்பது மலையும், குளமும், மாது - ஓ - அசைகள்.

(க - து.) தமயந்தி கண்களாகிய நீலோற்பலமலாகள் நளன்றோட்களிற் பூத்தன, நளன் கண்களாகிய தாமரைமலாகள் தமயந்திமுலைகளிற் பூத்தன என்பதாம்.

தமயந்தியின் கண்கள் நளன் புயங்களிலும் அவன் கண்கள் அவள் தனங்களிலும் பூத்த வென்றமையால் மாதாக்கு ஆடவா புயங்கள்போலும் ஆடவாக்கு மாதா முலைகள்போலும் காட்சிபபிரமாணததின் முற்பட்டுவினைந் தின்பஞ்செய்யும் அவயவங்கள் வேறொன்றில்லை யென்க. இவாகள் எல்லையற்ற ஆசையுடையவ ரென்பதற்குப் பெருங்காதலென்றொழியாது கழியெனறும், மகிழ்ச்சி யென்றொழியாது விழைவோடென்றும் கூட்டிச் சொலலப்பட்டன. கட்கருவிளைமலாகள் புயவரை என்றதும், செங்கண்முழுநெறிக்கமலம் முலைத்தடம் என்றதும் உருவகவணிகள். முலைததடமெனறலில் முலைத்தடமாகிய தடம் எனபபடலால் உருவகம். (௧0௨)

படவர வலகுற் செவ்வாய்ப் பனிமொழிக் கொடியன் ஞளை, மடலவிழ் கமலப் போதின் மடந்தையென்பதற்கு வெற்றிக, கடகளி றென்ன நின்ற காமரு காளை தன்னை, யிடையறு தினிது நோககி யிமைப்புறு குறையுந் தீர்ந்தாள்.

(இ - ள்.) பட அரவு அல்குல் - அராபபடம்போனற வல்குலையும், செவ்வாய் - சிவநதவாயையும, பனி மொழி - குளிாந்த சொல்லையுமுடைய, கொடி அனஞளை - தமயநதியை, மடல் அவிழ் - இதழ்விரிந்த, கமலப்போதின - தாமரைமலரி லிருக்கினற, மடநதை எனபதற்கு - இலக்குமியெனறு சொல்வதற்கு, வெறறி கடம் களிறு எனன - சயத்தைபபெற்ற மதயானையைபபோல, நினற - அருகிலிருந்த, காமா காளைதனனை - அழகிய நளமகாராசனை, இடை அறுது - இடைவிடாமல், இனிது நோககி - இனிதாகப பாாததது, இமைபபு உறு - (இதுவரையும்) இமைபபினையடைநத, குறையும - குறையையும, தீாநதாள் - நீங்கினுள், எ - று.

(க - து.) தமயந்தி நளனைபபாாததுக கண்குறைதீாந்தாள் என்பதாம்.

தமயந்தி கண்ணிமைபபினுலன்றி மறறைக் குணங்களால் இலக்குமியை யொததவ ளெனக. (௧0௩)

உண்ணிறைவுடையகாமமுருவெடுத்தென்னநின்ற
வண்ணலுமணங்கனஞளுமழகெனுமினியதேற
லெண்ணருங்காதலகூரவினிதினின்மாறிமாறிக
கண்ணினுறபருகியின்பககளிப்பெனுங்கடலுளாழ்ந்தார்.

(இ - ள்.) உள் நிறைவு உடைய காமம் - உள்ளே நிறைவினையுடைய ஆசையானது, உரு எடுத்து அன்ன - ஒரு வடிவு கொண்டது போல, நின்ற அண்ணலும் - நின்ற நளனும், அணங்கு அன்னளும் - தமயந்தியும, அழகு எனும் இனிய தேறல் - அழகெனறு சொல்லும் இனிப்பையுடைய தேனை, எண் அரும் காதல் கூர - எண்ணுதற்கரிய ஆசைமிக, இனிதினின் மாறி மாறி - இனிமையினுலே ஒருவாக்கொருவரடிககடி மாறிக்கொண்டு, கண்ணினுல் பருகி - நேததிரேந்திரியங்க

ளினல் உண்டு, இன்பம் களிப்பு எனும் - இன்பத்தைத்தரும் களிப் பென்கிற, கடலுள் - கடலின்கண், ஆழ்ந்தார - அழுந்தினூர்கள், எ-று.

(க-து.) நளனுந் தமயந்தியும் ஒருவரை யொருவர்பார்த்து மகிழ்ச் சிக் கடலிலே மூழ்கினூர்கள் என்பதாம்.

மாறிமாறி யென்றது ஒத்தகாமமுள்ளவா நாணத்தால் ஒருவர் நோக்குங்காலத் தொருவா நோக்காமையா லென்க. அது "யானேக் குங் காலை நிலனேக்கு நோக்காக்காற், றூனேக்கி மெல்ல நகும்" இதனு லறிக. காமமுருவெடுத்தென்ன வெனலால் தற்குறிப்பணி. இன்பக் கடலென்றது உருவகவணி. (௧0௪)

இருதடம்புயமுமந்தாரகலமுமியைந்ததாலென்
றெரிவருமாவியென்றூடெரிவையுமண்ணலூறு
முருகவிழ்குழலும்வெய்யமுகிழ்முலைத்துணையுந்தாங்கு
முருவுடைத்தாங்கொலென்றனுயிரெனவியந்துநின்றூன்.

(இ - ள்.) தெரிவையும் - தமயந்தியும், என் - என்னுடைய, தெரி வு அரும ஆவி - தெரிதற்கரிய உயிரானது, இரு தடம் புயமும் - பருத் த தோள்களிரணடையுமு, அம் தாா அகலமும் - அழகிய மாலையணிந்த மாாபையும், இயைந்தது என்றூள - பொருநதிய தென்றூள் ; அண்ணல் தானும - நளனும, எனறன உயிா - எனனுடைய உயிரானது, முருகு அவிழ் குழலும - தேனெழுகபபெறற கூநதலையும், வெயய முகிழ் முலை துணையும - வெவவிய அரும்பையொதத இரணடு ஸதனங்களையும், தாஙகும் - சுமக்கபபெறற, உரு உடைத்தாம் என - உரு வுடையதா மென்று, வியந்து - அதிசயிதது, நினறூன் - நின்றூன், எ - று.

(க - து.) தமயந்தி நளன் றேட்களையு மாாபையும் தன்னுயிரொன் றூள, நளன் தமயநதி கூநதலையும் தனங்களையுந் தனனுயிரொன்றூன் என்பதாம்.

முன்பு நளனை புயங்களைக்கண்ட தமயந்திக்கு இப்பொழுது அப் புயங்களுடன மாாபுந தோனறியது அபபொழுது தமயநதி தனங்க ளைக்கண்ட நளனுககு இபபொழுது அததனங்களுடன் கூந்தலுந்தோன் றிய தென்க. நளனிடதது "இருதடம் புயமுமந்தா ரகலமு மியைந்த தால்" எனக் குறிததலானும, தமயநதியினிடதது "குழலும்முலைத் துணையுந் தாங்குமுயிா" எனக் குறித்தலானும், தற்குறிபபணிகள். ()

மாதுபால விழைவி னேகு மனததினை யல்ல செய்த, றூதினுக கியலபன் றென்னுத் தோன்றலபே ரறிவின் மீட் பக், காதலி னவன்பாற் செல்லுங் கருத்தினைக் கமலத் தண்பூம், போதுறை மடந்தை யன்னூட் பொருந்துநாண் டடுத்த தன்றே.

(இ - ள்.) அல்ல செய்தல் - தூதுக்குரிய வல்லவைகளைச்செய்தல், தூதினுக்கு - தூதுக்கு, இயல்பு அனறு என்னு - இயற்கை யன்றென்று, தோன்றல் - நளமகாராசாவானவன், மாதுபால் - தமயந்தியினிடத்து, விழைவின் ஏகும் - ஆசையினூலே செல்லுகின்ற, மனத்தினை - மனத்

தை, பெரு அறிவின் - பேரறிவினால், மீட்ப - மீட்க, கமலம் தண் பூ போது உறை - குளிர்ச்சிபொருந்திய தாமரைமலரி லிருக்கின்ற, மடந்தை அன்னாள் - இலக்குமியையொத்த தமயந்தியை, பொருந்தும் நாண் - பொருந்திய நாணமானது, காதலின் - ஆசையினால், அவன்பால் செல்லும் கருத்தினை - அந் நளமகாராசனிடத்திற் சென்ற மனத்தை, தடுத்தது - தடுத்துவிட்டது, எ - று.

(க - து.) நளன் இச்செய்கை தூதற்குத்தகாதென்று மனதை மீட்கத் தமயந்தி நாணந் தன்மனதைத் தடுத்தது என்பதாம்.

அல்லசெய்த லென்பதற்கு அல்லவை தேய வென்பதற்குப்போல் எதிர்மறைப்பொருளாகக் கொள்க. ஆடவர்க்குப் பேரறிவுபோலும் மாதர்க்கு நாணம்போலும் தருணத்தில் நன்மைவிளைப்ப தொன்றில்லை யென்பது கருத்து. (௧0௬)

[இதுமுதல் ஆறுபாட்டுக்களால் நளனைக்கண்ட தமயந்தியுந் தோழிமார்களுஞ் சிந்தித்தல் சொல்லப்படுகின்றது.]

நாணமீதூரநின்றநகைமதிமுகத்தினாளும்
பூணினுக்கழகுசெய்யும்புணர்முலைத்தோழிமாரு
நீணகர்க்கடிகொள்வாயினீங்கிவந்தருகுநின்றான்
சேணுறையமரன்கொலலோதிருந்தெழிலியக்கனேயோ.

(இ - ள்.) நாணம் மீது ஊர நின்ற - நாணமானது அதிகரிக்க விருந்த, நகை மதி முகத்தினாளும் - ஒளிபொருந்திய திங்கள்போன்ற முகத்தையுடைய தமயந்தியும், பூணினுக்கு அழகு செய்யும் - ஆபரணங்களுக்கு அழகைச்செய்கின்ற, புணர் முலை தோழிமாரும் - நெருங்கிய ஸ்தனங்களையுடைய தோழிகளும், நீள் நகர் - நீண்ட இந்நகரத்தினது, கடி கொள் - காவலைக்கொண்ட, வாயில் நீங்கி வந்து - வாயிலைக் கடந்துவந்து, அருகு நின்றான் - நம்மருகே நின்றவன், சேண் உறை அமரன் கொல்லோ - ஆகாயத்திலிருக்கின்ற தேவனோ, திருந்து - திருந்தப்பெற்ற, எழில் இயக்கனேயோ - அழகையுடைய இயக்கனோ, எ-று.

(க - து.) தமயந்தியுந் தோழிமார்களும், இவன் தேவனோ இயக்கனோ என்றார்கள் என்பதாம்.

இப்பாட்டில் மதிமுகத்தினாளும் தோழிமாரு மெனனும் எழுவாய்கள் 'யாவனோ' என்னும் பாட்டிலுள்ள 'உரைக்கலுற்றார்' என்னும் பயனிலை கொண்டு முடிந்தன. (௧0௭)

கடிகமழ் கமலச் செல்வி கணகவர் வனப்பு வாய்ந்த, வடிவுறு குவவுத் திண்டோள் வண்டுழாய் மாயன் கொல்லோ, மிடல்கெழு வெள்ளிவெற்பின் விஞ்சையர்க் கிறைவன் கொல்லோ, முடியுடை யமரர் போற்று மொய்கழற் குமரன் கொல்லோ.

(இ - ள்.) கடி கமழ் - வாசனை கமழ்கின்ற, கமலம் செல்வி - தாமரைமலரி லிருக்கின்ற திருமாதினுடைய, கண் கவர - கண்களை கவர்

கின்ற, வனப்பு வாய்ந்த - அழகு பெற்று, வடிவு உறு - வடிவின்மிக்க, குவவு திண் தோள் - திரட்சிபொருந்திய திண்ணிய புயங்களையுடைய, வண் துழாய் மாயன்கொல்லோ - அழகிய துளபமாலையணிந்த திருமாலோ, மிடல் கெழு - வலிமைபொருந்திய, வெள்ளி வெற்பின் - வெள்ளிமலைக்கணுற்ற, விஞ்சையாக்கு இறைவன்கொல்லோ - விஞ்சையாக்கரசனோ, முடி உடை - மகுடத்தையுடைய, அமரா போற்றும் - தேவாகளால் வணங்கப்பட்ட, மொய் கழல் - நெருங்கிய வீரக்கழலையணிந்த, குமரன்கொல்லோ - குமரக்கடவுளோ, எ - று.

(க - து.) விஷ்டுணுவோ, விஞ்சையாககரசனோ, சுப்பிரமணியனோ என்றாகள் என்பதாம்.

பகைவரைத்துரத்தல், மாதரால் விரும்பப்படல், சராசரங்களைப் பாதுகாத்தல், வீரமிகுதி முதலியகுணத்தால் மாயனேயென்றும், இசைநூல் வல்லமை, இங்கிதஞானமை, இறுமாப்புடைமை முதலிய குணத்தால் 'விஞ்சையாக் கிறைவனே' என்றும், அபயந்தருதல், அசுரரைமாட்டல், அருளுடைமை, அனங்கனும் விரும்புங் கட்டழகுடைமை, ஆற்றலுடைமை, கட்டிளமையுடைமை முதலிய குணத்தால் 'குமரனே' என்றும் சொல்லினா. சூரன்முதலிய அசுரரைக்கொன்று இந்திரன்முதலிய தேவரைக்காத்தலால் அமராபோற்றுங் குமரனெனப்பட்டது. (கOஅ)

விரும்பியவனைத்துநலகுமேதகுதவத்தின்மாய்ந்தோா
திருந்தெழில்யாக்கைபெற்றுதிகழ்வொன்றுரைகருநீராற்
கரும்புறழ்கிளவிபாகன்கட்டழற்பாய்ந்துதுஞ்சி
யருபெறலயாக்கைபெற்றகாமனோவறிகிலேமால்.

(இ - ள்.) விரும்பிய அனைத்தும் நல்கும் - இச்சித்தவைகளெல்லாம் தருகின்ற, மேதகு தவத்தின - மேம்பட்ட தவத்தினால், மாய்ந்தோா - இறந்தவாகள், திருந்து - திருத்தமாகிய, எழில் யாக்கை பெற்று - அழகுபொருந்திய தேகத்தைபெற்று, திகழ்வா என்று - விளங்குவாகளென்று, உரைகரும நீரால் - சொல்லுகின்ற தன்மையால், கரும்பு உறழ் கிளவி - கருமபிரசத்தையொத்த சொல்லையுடைய உமாதேவியை, பாகன் - தன திடபபாகத்திலவைத்த கடவுளது, கனை தழல் பாய்ந்து - நெற்றிக்கண்ணினுடைய நெருப்பிலே புகுந்து, துஞ்சி - இறந்து, அரு பெறல் யாக்கை பெற்ற - பெறுதற்கரிய (அழகுள்ள) தேகத்தைபபெற்ற, காமனோ - மனமதனோ, அறிகிலேம் - (யாம்) அறியேம், எ-று. ஆல் - அசை.

(க - து.) மன்மதனோ அறியோமென்றாகள் என்பதாம்.

முற்பிறப்பிலே ஒன்றைவிரும்பி யதன்பொருட்டு அக்கினிப்பிரவேசம் வரைபாய்தல் புண்ணியதீாத்தங்களில் விழுதல் முதலியவற்று லுடலை நீத்தவாகள் மறுபிறப்பிலே அதனைப பெறுவாகளென்பது "முற்பவ முச்சியி னின்று மிழிந்துயிா முற்றுமற்றோா, பிற்பவ மெண்ணிய வாறு பெறத்தரு பேரோங்கல்" இதனாற் காண்க. இங்ஙனம் நளனை உவமித்தற்கரிய வடிவம்வேண்டி ஈசுரன் விழிநெருப்பி லுடலை நீத்து

இவ்வடிவைப்பெற்ற மன்மதனேவெனக் கருதினாகள். 'நாண மீதூர' என்னும் பாட்டுமுதல் மூன்றுபாட்டாலும் நளனை அமரனே இயக்க னே மாயனே விஞ்சையாக் கிறைவனே குமரனே காமனேவென ஐயுறலால் ஐயவணி. (௩0௯)

மங்கையர்நிறையுநாணுங்கவர்ந்திடவனப்புவாய்ந்த
விங்கிவன்றன்னைஞாலமின்புறப்படைத்திலானேற்
றிங்களங்கண்ணிவேய்ந்தசெஞ்சடைக்கடவுளெங்ஙன்
பைங்கழைமதனைக்கொன்றபடுபழிதீருமாறே.

(இ - ள்.) மங்கையா - மாதருடைய, நிறையும் - கற்பையும், நாணும் - நாணையும், கவாந்திட - கொள்ளையிடததகக, வனபபு வாய் ந்த - அழகுபெற்ற, இங்கு - இவவிடதது, இவன்தனனை - இபபுரு டனை, ஞாலம் - உலகம், இன்பு உற - இன்பததைபடைய, படைத் திலானேல் - சிருட்டியாதிருபபானேல், திஙகள் கண்ணி வேய்ந்த - மூன்றாம் பிறையைத்தரிதத, செம் சடை கடவுள் - சிவந்த சடாபாரத தையுடைய பரமசிவன், பை கழை மதனை கொன்ற - பசிய கருப்பு வில் லேந்திய மன்மதனைககொனற, படு பழி தீரும ஆறு - கொலைப பழி தீரும்விதம், எங்ஙன் - எபபடி, எ-று. அம - அசை.

உலக மென்பது அதிலிருக்கும் உயிருக்காதலால் ஆகுபெயா.

(க - து.) சிவன் மன்மதனைக்கொன்ற பழிதீர இவனைபபடைத் தான் என்பதாம்.

ஈசுரரும் இவனது படைடபால் காமனையெரிதத பழியைத தீரந் தா ரெனலால் அக்காமனினுமிகக அழகுள்ளவனெனபது பெறபபட டது. நல்லோ ரொருவருககுந் தீங்குசெய்யாா, ஒரு காரணம்பற்றிச செய்யினும் அதனினுமிக்க நனமைசெய்து அததீஙகையொழிடப ரென் பது கருத்து. பழிதீரானென்பது இவனைறனை படைததிலானே லென யூகித்தலால் உய்த்துணாவணி. (௩௧0)

மாயிருஞாலத்தானேன்மண்ணினிற்பொலிந்ததில்லை
மீயுயர்விசும்புளானேல்விசும்பினிற்சிறந்ததுண்டோ
பாயொளிபரிதிவேலான்பாதலத்துள்ளானாயின்
மேயகீழுலகேயெல்லாவுலகினுமேலதாமால.

(இ - ள்.) பாய் ஒளி - தாவுகினற காந்தியையுடைய, பரிதி - சூரியனையொதத, வேலான - வேற்படையையுடைய இட்புருடன், மா இரு ஞாலததானேல் - மகததாகிய பெரிய பூவுலகி லிருப்பவனு இல், மண்ணினில் - அப்பூவுலகைவிட, பொலிந்தது இல்லை - பிரகாச முள்ளதாகிய வுலகம் இல்லை ; மீ உயா - மேலாக உயாந்த, விசும்பு உளானேல் - தெய்வலோகத்தானுகில், விசும்பினில் - அத்தெய்வலோ கத்தைக் காட்டிலும், சிறந்தது உண்டோ - சிறப்புடையதாகிய வுல கம் இல்லை ; பாதலத்து உள்ளான் ஆயில் - கீழுலகத் திருப்பவனுகில், மேய கீழுலகே - பொருந்திய பாதாளவுலகமே, எல்லா உலகினும் - உல்கங்க ளனைத்தினுக்கும், மேலதாம் - மேற்பட்டதாகும், எ-று.

(க - து.) இவனிருக்கு மூலகமெதுவோ அதுவே எவ்வுலகினுஞ் சிறப்புற்றது என்பதாம்.

இவனிருக்கு மூலகம் எதுவோ அதுவே எவ்வுலகினுஞ் சிறந்த தென்பது கருத்து. இதுவும் அவ்வணி. (௧௧௧)

யாவனோவிவனென்றெண்ணி யிருநிலத்திலங்குபைம்பொ
சேவடிபொருந்துநீராற்றேவரினொருவனல்லன் [ற்
றூவியஞ்சிறையயன்னஞ்சொல்லியவனப்புவாய்ந்த
காவலனுங்கொலென்னக்கருதியொன்றுரைக்கலுற்றார்.

(இ - ள்) யாவனோ இவன் என்று - இவனெவனோவென்று, எண்ணி - சிந்தித்து, இரு நிலத்து - பெரிய பூமியிடத்து, இலங்கு பைம்பொன் - பிரகாசிக்கின்ற பசிய பொற்கழலணிந்த, சே அடி - சிவந்தபாதங்கள், பொருந்தும் நீரால் - பொருந்துகின்ற தன்மையால், தேவரின் - தேவர்க்கூட்டத்துள், ஒருவன் அல்லன் - ஒருத்தனல்ல னாகும், தூவி அம் சிறைய - தூவியென்னும் பெயரையுடைய அழகிய சிறகினையுடைய, அன்னம் - அன்னபட்சியானது, சொல்லிய - (முன்பு) சொல்லிய, வனப்பு வாய்ந்த - அழகுபெற்ற, காவலன் ஆங்கொல் என்ன - அரசனாகுமென்று, கருதி - நினைத்து, ஒன்று உரைக்கலுற்றார் - ஒருவார்த்தை (தோழிகள்) சொல்லத்தொடங்கினார்கள், எ - று.

(க - து.) இவன் தேவனல்ல, நளனென்று சொல்லத் தொடங்கினார்கள் என்பதாம்.

பூமியிற் பாதம் பொருந்தலாலே தேவரி னொருவனல்ல னென்று நிச்சயித்த மாதர்க்குக் கீழ்லகத்தானோ வென்னும் ஐய நிகழவில்லை அன்னஞ்சொல்லிய அழகுள்ள நளமகாராசனெனக் குறித்தலாலென்க.

கலைநிலாத்தவழுமாடக்கடிநகர்கடந்துபோந்த
சிலைவலாய்நீயிங்கெய்தச்சிறப்புடைப்புவனந்தம்மிற்
பொலிவிழந்திருந்ததெந்தப்புவனநீபொருளதாக
நலனுறுபுனிதமாயதெப்பெயர்நவிற்றுகென்றார்.

(இ-ள்.) கலை நிலா - கலைகணிறைந்த சந்திரன், தவழும் மாடம் - தவழ்கின்ற உப்பரிகைகளுடைய, கடி நகர் - காவலைப்பெற்ற நகரத்தை, கடந்து போந்த - கடந்துவந்த, சிலை வலாய் - விற்றொழிலில் வல்லவனே, நீ இங்கு எய்த - நீ யிங்கேவர (அதனாலே), சிறப்பு உடை புவனந்தம்மில் - சிறப்பினையுடைய தேசங்களுக்குள்ளே, பொலிவு இழந்து இருந்தது - அழகிழந்து இருக்கப்பெற்றது, எந்த புவனம் - எந்தத்தேசம், நீ பொருளது ஆக - நின்னைப் பொருளதாகவுடைய, நலன் உறு புனிதம் ஆயது - நன்மைபொருந்திய பரிசுத்தமானது, எப்பெயர் - எந்தப்பேர், நவிற்றுக என்றார் - (தோழிகள்) சொல்லென்றார்கள், எ-று.

(க - து.) தோழிகள் நளனைப்பார்த்து உமது ஊரென்ன பேரென்ன என்றார்கள் என்பதாம்.

உன்பேர் யாது உன்தேசம் யாதென்னும் வினாக்கள் நீபோதலால் 'பொலிவிழந்திருந்த தெப்புவனம்' எனலாலும் 'நீ பொருளாக நல னுறு புனிதமாய தெபபெயா' எனலாலும் பெறப் படுதலால் பிறிதி னவிற்சியணிகள். இவ்விரண்டுஞ் சோதலாற் சேர்வையணி. (௧௧௩)

கானமர்கரியகூந்தற்கன்னியரிவ்வாறோதத்
தேனிமிர்தெரியலவேய்ந்துசிலைதழும்பிருந்ததோளான்
பானலங்கடந்ததீஞ்சொற்பைந்தொடிவதுவைவேட்டு
வானவர்விடுத்ததூதன்யானெனவழங்கலுற்றான்.

(இ-ள்.) கான அமர் - வாசனைபொருந்திய, கரிய கூந்தல் - கறுத்த குழலையுடைய, கன்னியர் - மாதர்கள், இவ்வாறு ஓத - இப்படிச்சொல்ல, தேன் இமிர் தெரியல் - வண்டுகள் ஒலிக்கின்ற மாலையை, வேய்ந்து - தரித்து, சிலை தழும்பு இருந்த - விற்றழும்பு தங்கிய, தோளான் - தோள்களையுடைய நளன், பால் நலம் கடந்த - பாலினது நலத்தைச்செயித்த, தீ சொல் - இனிய சொல்லையுடைய, பைந்தொடி - தமயந்தி, வதுவை வேட்டு - (நின) விவாகத்தை யிச்சித்து, வானவர் விடுத்த - தேவர்களால் விடுக்கப்பட்ட, தூதன் யான் என - தூதுவன் யானென்று, வழங்கலுற்றான் - சொல்லத்தொடங்கினான், எ-று.

(க-து.) நளன் தேவர்கள்விட்ட தூதன் யானென்றான் என்பதாம்.

ஊர் பேர் முதலியவற்றை யுரைக்கில் முன்னரே விழைந்த தமயந்தியால் நந்தூதிற்கு வழுவுண்டாமென றெண்ணி அவை யுரையாது தனது தொழிற்குரிய பெயரால் கூறினானென்க. (௧௧௪)

[இதுமுதல் ஆறுபாட்டுக்களால் நளன்பேசுதல்
சொல்லப்படுகின்றது.]

ஐந்தருநீழல்வேந்தனார்கலிக்கிறைவன்வெய்ய
செந்தழற்கடவுடென்பாற்றிசையுறைதருமனின்னோர்
பைந்தொடிநின்னைவேட்டுப்படைமதன்பகழிபாயச்
சிந்தனைபிறிதாய்மாழ்கித்தெருமரலெய்துகின்றார்.

(இ-ள்.) ஐ தரு நீழல் வேந்தன் - இந்திரன், ஆர்கலிக்கு இறைவன் - வருணன், வெய்ய செம் தழல் கடவுள் - கொடிய அக்கினிபகவான், தென்பால் திசை உறை தருமன் - தெற்குத்திக்கி லிருக்கின்ற யமன், இன்னோர் - ஆகிய இந்நால்வரும், பைந்தொடி - தமயந்தி, நின்னை வேட்டு - உன்மேல் விருப்புற்று, படை மதன் பகழி - சேனைகளையுடைய மன்மதன் பாணங்கள், பாய - (தங்கள்மேல்) தைக்க, (அதனால்) சிந்தனை பிறிது ஆய் - மனம் வேறுபட்டு, மாழ்கி - மயங்கி, தெருமரல் - சுழற்சியை, எய்துகின்றார் - அடைகின்றார்கள், எ-று. ()

(க-து.) இந்திரன் வருணன் அக்கினி யமன் ஆகிய இந்நால்வரும், தமயந்தியே, உன்னைவிரும்பி மன்மதபாணத்தால் வருந்துகின்றார்கள் என்று நளன் என்பதாம்.

இங்கிவர்தம்மையாசைக்கிறைவனென்றறைவதெல்லாந்
தங்கியதிசையின்பேராற்சாற்றியமாற்றமன்றே
கொங்கவிழ்குழையிற்றாவிகுமிழ்மிசைமறியும்வேற்க
ணங்கலுழ்மேனியாய்நின்னசையால்வந்ததாமால்

(இ - ள்.) இங்கு இவர் தம்மை - இவ்விடத்தில் இந்நால்வரையும், ஆசைக்கு இறைவர் என்று - ஆசைக்கரசனென்று, அறைவது எல்லாம் - சொல்லுவதனைத்தும், தங்கிய - இவர்களிருக்கின்ற, திசையின் பேரால் - திக்கினதுபெயரினாலே, சாற்றிய மாற்றம் அன்று - சொல்லப்பட்ட சொல்லன்றாகும், கொங்கு அவிழ் - வாசனை விரிகின்ற, குழையில் தாவி - காதணியில் பாய்ந்து, குமிழ்மிசை - குமிழம்பூவினது மேற்பக்கத்தில், மறியும் - மீளுகின்ற, வேல் கண் - வேல்போன்ற கண்களையுடைய, அம் கலுழ் - அழகானது ஒழுகுகின்ற, மேனியாய் - வடிவையுடைய தமயந்தியே, நின் ஆசையால் - உன்மேல்வைத்த ஆசையினால், வந்ததாம் - வந்ததாகும், எ-று.

(க - து.) தமயந்தியே இந்நால்வரும் உன்மேல்வைத்த ஆசையினாலே ஆசைக்கிறைவனென்று பேர்பெற்றார்கள் எனபதாம்.

ஆசையென்பது திசைக்கும், அவாவுக்கும்பெயர். அது "ஆசையே திசை பொன்னவாவாம்" எனபதனால் காண்க. திசைக்கிறைமையால் வந்த ஆசைக்கிறைவனென்னும் பெயர்க்கு அன்பினால் வந்ததெனப் பொருள் கூறுதலால் பிரிநிலைநவிற்சியணி. (௧௧௬)

[இதனால் இந்திரனது வருத்தஞ் சொல்லப்படுகின்றது.]

பற்றிய காமத்தீயாற் பைம்பொனாட் டமரர்க் கெல்லாங், கொற்றவன் வருந்தா வண்ணங் கொய்துகொய் தணையிற் சேர்த்தே, யுற்றவர் வறுமை தீர்க்கு முயர்சினைத் தருக்க ளைந்து, நற்றளி ரின்மையாகி நல்குர வடைந்த மாதோ.

(இ - ள்.) பை பொன் நாடு - பசிய பொன்னுலகத் திருக்கின்ற, அமரர்க்கெல்லாம் கொற்றவன் - தேவரனைவர்க்கும் அரசனாகிய இந்திரன், பற்றிய காமத்தீயால் - தன்னைப்பற்றிய காமாக்கினியால், வருந்தா வண்ணம் - வருத்தப்படாதவிதம், உற்றவர் வறுமை தீர்க்கும் - (தம்மை) யடைந்தவர்களுடைய இல்லாமையை நீக்கும், உயர் சினை தருக்கள் ஐந்தும் - உயர்ந்த கிளைகளையுடைய பஞ்சதருக்களும், கொய்து கொய்து - பறித்துப் பறித்து, அணையில் சேர்த்து - படுக்குமெத்தையிற் சேர்த்து, (அதனால்) நல் தளிர் இன்மை ஆகி - நல்ல தளிர்களை இல்லாமையாய், நல்குரவு - வறுமையை, அடைந்த - உற்றன, எ-று.

(க - து.) இந்திரன் உன்மேல் விருப்புற்றடைந்த காமந் தணிக்கும்பொருட் டைந்தருக்களுந் தழைகளிழந்தன என்பதாம்.

இந்திரன் உன்னிடத்துற்ற ஆசையினாலே அளவற்ற தாபத்தை யடைந்தானென்பது கருத்து. கற்பகத்தருவுக்கு இதனால் நல்குரவில்லாதிருந்தும் உளதாகக் கூறலின் உயர்வுநவிற்சியணி. (௧௧௭)

[இதனால் மற்றைமூவா வருத்தமுஞ் சொல்லப்படுகின்றது.]

கடிமலர்க்கூந்தனின்மேற்காதன்மீதூரநின்ற
வடுதொழிற்கூற்றுமஞ்சவடர்கின்றனனங்கன்வெய்ய
வடவையோடிகலுமுந்நீர்க்கிறையையும்வருத்தியாவுஞ்
சுடுதழற்கடவுண்மீதுஞ்சுட்டதுகாமத்தீயே.

(இ - ள்.) கடி மலர் கூந்தல் - வாசனைபொருந்திய மலரையணிந்த அளகபாரத்தையுடைய தமயந்தி, நின்மேல் - உன்னிடத்தில், காதல் மீதூர நின்ற - ஆசை அதிகரிக்கவிருந்த, அடு தொழில் கூற்றும் - கொல்லுந் தொழிலையுடைய யமனும், அஞ்ச - பயங்கொள்ள, அனங்கன் - மன்மதனானவன், அடர்கின்றனன் - நெருங்குகின்றான், வெய்ய வடவையோடு - கொடிய வடவைத்தீயுடனே, இகலும் முந்நீர்க்கு இறையையும் - பகைகொள்ளும் கடற்கரசனாகிய வருணனையும், வருத்தி - வருத்தப்படுத்தி, யாவும் சுடு தழல் கடவுள் மீதும் - எவற்றையும் சுடுகின்ற அக்கினிபகவானமேலும், காமம் தீ - காமாக்கினி, சுட்டது - சுட்டது, எ-று.

(க - து.) தூமத்தீயைப் பார்க்கிலும் காமத்தீ கொடிதென்பதாம்.

கொல்லுந் தொழிலையுடைய கூற்றையும் அஞ்சச்செய்து வடவைத்தீயையும் அடக்குங் கடலரசனையும் வருத்தி எல்லாவற்றையுஞ் சுடுகின்ற தீக்கடவுளையுஞ் சுடுதலாற் காமத்தீயை ஒருவராலும் வெல்லக்கூடா தென்றதாயிற்று. "ஊருளெழுந்த வுருகெழு செந்தீக்கு, நீருட்குளித்து முயலாகு - நீருட், குளிப்பினுங் காமஞ்சுடுமே குன்றேறி, யொளிப்பினுங் காமஞ்சுடும்" இதனால் தூமத்தீயினுங் காமத்தீ கொடிதென்ப துணர்க. (௧௧௮)

முருக்கிதழணங்கனாய்நின்முகிழ்முலைவேட்டஞான்றே
செருக்கிளரனங்கன்வாளிச்செழுமலர்வருத்தவாடி
யிருத்தலாற்பழிச்சுகின்றோரேடவிழ்நறியபோதா
லருச்சனைபுரியுந்தோறுமஞ்சுவரமரர்மாதோ.

(இ - ள்.) முருக்கு இதழ் - முருக்கலரையொத்த அதரத்தையுடைய, அணங்கு அன்னாய் - தமயந்தி, நின் முகிழ் முலை - உன்னுடைய அரும்பையொத்த ஸ்தனங்களை, வேட்ட ஞான்றே - விரும்பிய பொழுதே, செரு கிளர் - போர்த்தொழிலில் கிளர்ச்சியையுடைய, அனங்கன் - மன்மதனுடைய, வாளி செழு மலர் - பாணங்களாகிய செழுமையுள்ள மலர்கள், வருத்த - வருத்தஞ்செய்ய, வாடி இருத்தலால் - (அவைகளால்) வாட்டமுற்று இருக்கையினால், பழிச்சுகின்றோர் - பரவுகின்றவர்கள், ஏடு அவிழ் நறிய போதால் - இதழ்கள்விரிந்த நல்ல மணமுள்ளமலரால், அருச்சனை புரியுந்தோறும் - பூசைசெய்யுந்தோறும், அமரர் - (அருகிலிருக்கும்) தேவர்கள், அஞ்சுவர் - பயங்கொள்ளுவார்கள், எ-று.

(க - து.) இந்திரன் மன்மதபாணத்தால் வருந்தியிருத்தலால் அவனைக் காணவருபவர் மலரா லருச்சிக்குந்தோறும் அப்பாணமென்று தேவர் பயப்படுவர் என்பதாம்.

இந்திரன் தமயந்தியை விரும்பியநாள் முதலாக இதுவரையும் மன்மதபாணங்கள் வருத்தஞ்செய்ய வாடியிருத்தலால் காணவருபவர் முறைமைப்படி நறியமாலைகளைக்கொண்டு அவனை அருச்சிக்குந்தோறும் தேவர்கள் இவையும் அம்புகளென்றஞ்சுதலாலே அஞ்சுவாராயினா ரென்றார். (௧௧௯)

இன்னணந் தேவர் மாழாந் திருநில வரைப்பிற் போந்தன், பொன்னவிர் திதலை யார்ந்த புணர்முலைப் போகம் வேட்ப, முன்னமெத் தவஞ்செய் தாயகொ லியைவதே முறைமை யென்றான், கன்னலவில லொளித்து நின்ற காமனே யனைய நீரான்

(இ - ள்.) இன்னணம் - இவ்விதம், தேவர் மாழாந்து - தேவர்கள் மயங்கி, இரு நில வரைப்பில் போந்து - பெரிய பூவுலகில்வந்து, உன பொன் அவிர் - உன்னுடைய பொன்போலும் விளங்குகின்ற, திதலை ஆர்ந்த - தேமலாநிறையப்பெற்ற, புணர் முலை போகம் - ஒன்றோடொன்று நெருங்கிய ஸ்தனங்களினுடைய போகத்தை, வேட்ப - விரும்ப, முன்னம் - முற்பிறப்பில், எத்தவம் செய்தாயகொல் - என்ன தவஞ் செய்தனையோ, இயைவதே - சம்மதிப்பதுவே, முறைமை என்றான் - கிரமமென்றான், கன்னல வில ஒளித்து நின்ற - கருப்பு வில்லை மறைத்துவைத்து நின்ற, காமனே அனைய நீரான் - மன்மதனையேயொத்த தன்மையையுடைய நளமகாராஜன், எ-று.

(க - து.) இந்திரன முதலியோருன்னை யிச்சிக்க நீ முன் னென்ன தவஞ் செய்தாயோ, அவர்களுக்குச் சம்மதிப்பதே ஒழுங்கென்றான் என்பதாம்.

தேவரிற்சிறந்த இந்திரன் முதலியோரைத் தலைவராகப் பெறுவது முற்பிறப்பிலே அருந்தவஞ் செய்தவர்க்கன்றி மற்றையோர்க்கு எளிதன்றென்பது கருத்து. (௧௨0)

என்றிவன் மொழித லோடு மினையனே நளனென் றெண்ணி, மன்றலங் குழலா ணாணி வருத்தமோ டெருத்தங் கோட்டி, நின்றன ண்மருங்கு சூழ்ந்த தோழியர் நிடதங் காக்கும, வென்றிகொள சுடர்வேல வேந்தற் கெதிர்மொழி விளம்ப லுற்றார்.

(இ - ள்.) என்று இவன மொழிதலோடும் - இப்படியென்று இந்த நளன் சொல்லியவளவில், இனையனே - இவனே, நளன் என்று எண்ணி - நளனென்று நினைத்து, மன்றல் அம் குழலாள் நாணி - தமயந்தி நாணமடைந்து, வருத்தமோடு - வருத்தத்துடனே, எருத்தம் கோட்டி - தலையை வளைத்துக்கொண்டு, நின்றனள் - நின்றாள், மருங்கு சூழ்ந்த தோழியர் - பக்கத்தில் சுற்றியிருக்கின்ற தோழிகள், நிடதம் காக்கும் - நிடததேசத்தைப் புரக்கின்ற, வென்றி கொள் - வெற்றியைக்கொண்ட, சுடர் வேல் - கிரணங்களையுடைய வேற்படையையேந்திய, வேந்தற்கு - நளமகாராஜனுக்கு, எதிர் மொழி - எதிருத்தரத்தை, விளம்பலுற்றார் - சொல்லத்தொடங்கினார்கள், எ-று.

(க - து.) தமயந்தி இவனே நளனென்று நாணி நின்றாள். நளனுக்குத் தோழியா சொல்லத்தொடங்கினாகள் என்பதாம்.

நளன் இவனேயென்று நிச்சயித்த தமயந்திக்கு இனி நமக்குத் தலைவனாக வருபவனென்னுந் துணிவினாலே நாணமும், நாம் இவனை விரும்பியிருக்க இவன தேவாபொருட்டுத் தூது வந்தானென்பதால் வருத்தமும் உண்டாயினவாற்றால் வாளா விருந்தனள். உயிர்த்தோழிகள் அவள் கருத்துமுழுவதும் அறிந்தவராதலால் அவ்விறைக்கு இறை கொடுக்கத் தொடங்கின ரெனக. (கஉக)

[இதுமுத லிரண்டுபாடல்களால் நளனுக்குத் தூதியா விடைகொடுக்கின்றனர்.]

ஆற்றல்சானளனேயன்றியாருயிர்பிறிதின்றென்னும்
வேற்றடங்கண்ணினுடன்மெய்பதைத்தாவிசோரச்
சாற்றியமாற்றந்தனனுற்றழலுமிழ்தறுகட்பேழ்வாய்க
கூற்றுவன்றூதனென்றுகூறியதியற்கையாமே.

(இ - ள்.) ஆற்றல் சால நளனே அன்றி - வலிமைமிக்க நளமகாராஜனை யல்லாமல், ஆா உயிா பிறிது இனறு என்னும் - நிறைந்த ஆவியானது வேறொனறில்லை யென்கின்ற, வேல தடங் கண்ணினுடன் - தமயந்தியினுடைய, மெய் பதைதது - தேக நடுங்கி, ஆவி சோர - உயிரானது சோாவையடைய, சாற்றிய மாற்றந்தன்னால் - நீ சொல்லிய சொல்லினால், தழல் உமிழ் - நெருபபையுமிழ்கினற, தறு கண் - கொடிய கண்களையும், பேழ வாய - பெருவாயையுமுடைய, கூற்றுவன் தூதன என்று - யமதூதனெனறு, கூறியது - (முன) சொல்லியது, இயற்கையாம் - (உனக்குத) தகுதியாகும, எ-று.

(க - து.) நளனே தன்னுயிரென்று நினைத்திருக்கும் தமயந்தி உயிாசோர நீ சொல்லியசொல்லால யமதூதனென்பது சரியே என்றார்கள் என்பதாம்.

நளனையே உயிரொன்று நிசசயிததிருககும் தமயந்தியது அபிப்பிராயததிற்கு விரோதமாகிய செயதியைச்சொல்லி அவளுயிா பிரிதற்கு நீ யேதுவாகையால் முன்பு யமதூதனெனறு சொல்லியது உனக்குததகு மென்றாாகள். ‘தழலுமிழ்தறுகட் பேழ்வாய்’ என்னும் அடைமொழிகள் கூற்றுவனது கொடுமையை விளககினறன. கூற்றுவன் றூதாகிவந்த நளனைக் கூற்றுவன் றூதனென விதிததலால் விதியணி.()

வையகமொருகோலோச்சிவான்புகழ்நிடதங்காக்கு
மையனைமணப்பதன்றியரிமதர்நெடுங்கட்செவ்வாயத
தையல்வேறொருவர்நாமஞ்சாற்றினுமாற்றாளாகி
வெய்யசெந்தழலின்மூழ்கிவிளிவதற்கையமின்றே.

(இ - ள்.) வையகம் ஒரு கோல் ஓச்சி - பூவுலகத்தை தனிச்செங்கோல் செலுத்தி, வான் புகழ் - மிகுந்த புகழையுடைய, நிடதம் காக்கும் - நிடததேசத்தைப்புரக்கும், ஐயனை - நளமகாராஜனை, மணப்பது அன்றி - விவாகஞ்செய்து கொள்வதல்லாமல், அரி மதா நெடுங் கண் -

சேவ்வரிபரந்த களிப்பையுடைய நெடிய கண்களையும், செவ்வாய் - சிவந்த வாயினையுமுடைய, தையல் - தமயந்தியானவள், வேறு ஒருவர் நாமம் - வேறொருவர் பெயரை, சாற்றிடினும் - சொல்லினாலும், ஆற்றாள் ஆகி - பொறுக்கமாட்டாதவளாய், வெய்ய செம் தழலில் மூழ்கி - கொடிய நெருப்பினில் முழுகி, விளிவதற்கு - இறப்பதற்கு, ஐயம் இன்று - ஐயமில்லை, எ-று.

(க - து.) தமயந்தி நளனை விவாகஞ்செய்வதன்றி வேறொருவர் பெயரைச்சொன்னாலு மக்கினியில் விழுந்திறப்பாள் என்பதாம்.

நளனை மணப்பதற்கு முன்புசெய்த தவம்போதாமையால் இப்படியாயிற்று. இப்பொழுதாவது விதிப்படி தீவளர்த்தி அதில்விழுந்து நினைத்ததை மறுபிறப்பில் முடிப்பாளென்னுங் கருத்துதோன்ற 'வெய்யசெந் தழலின் மூழ்கி விளிவதற் கையமின்று' என்றார். (௧௨௩)

[இதுமுதல் நாலுபாட்டால் நளன் தமயந்தியை வரப்புறுத்திக் கூறல.]

என்றவர் மொழிய வேந்த னியம்புவா னெரியின் வீழ்ந்து, பொன்றில்வெங் கனலி தன்னைப் புணர்ந்ததாம் புகன்ற செந்தீ, யன்றிவார் புனலின் வீழ்ந்துள் ளாருயிர் விடுத்தா ளேனுந், துன்றுசீர் வருணன் றன்னைத் தோய்ந்த தாய் விளையு மன்றே.

(இ - ள.) என்று - இப்படியென்று, அவர் மொழிய - அந்தத் தோழிகள் சொல்ல, வேந்தன் இயம்புவான் - நளமகாராஜன் சொல்லுவான், எரியின் வீழ்ந்து பொன்றில் - நெருப்பில் வீழ்ந்திறந்தால், வெம் கனலிதன்னை - அக்கினிபகவானை, புணர்ந்தது ஆம் - கூடியதாகும்; புகன்ற - (இப்பொழுது) சொல்லிய, செம் தீ அன்றி - அக்கினியல்லாமல், வார் புனலில் வீழ்ந்து - நெடிய நீரிலே விழுந்து, உள் ஆர் - உள்ளே நிறைந்த, உயிர் விடுத்தாளேனும் - உயிரை விட்டாளாலும், துன்று - நெருங்கிய, சீர் - சிறப்பையுடைய, வருணன்தன்னை - கடலரசனை, தோய்ந்ததாய் விளையும் - கலந்ததாகி விளையும், எ-று.

(க - து.) அக்கினியில் வீழ்ந்திறந்தால் அக்கினியைச் சேர்ந்ததாயிருக்கும், நீரில் வீழ்ந்திறந்தால் வருணனைச் சேர்ந்ததாயிருக்கும் என்பதாம்.

நெருப்பில் வீழினும் நீரில் வீழினும் தீக்கடவுளையும் கடற்கரசனையும் புணர்ந்ததாக முடிதலாலும், இவள் நினைப்பு இப்பிறப்பில் முற்றாமையாலும் மறுமைப்பய னிம்மையிற் பயவாமையாலும் அவர்களேவந்து பிரார்த்திக்கும்போது இசைந்தால் மிக்க நன்மையுண்டாமென்பது கருத்து. (௧௨௪)

அன்றியுங்கனலிசான்றாயல்லதுவதுவையாற்றற்
கொன்றுமோவருணனெவ்வாறுதகமோட்ளிக்குந்தூய
மன்றலெவ்வாறுமுற்றும்வானவரருளில்லாமற்
றன்றுணீர்ப்புவியில்யார்க்குஞ்சூழ்வினைமுடிக்கலாமே.

(இ - ள்.) அன்றியும் - அப்படியல்லாமலும், கனலி சான்று ஆய் அல்லது - அக்கினிசாக்ஷியா யல்லாமல், வதுவை ஆற்றற்கு - விவாகஞ் செய்தற்கு, ஒன்றுமோ - பொருந்துமோ, வருணன் - கடலரசன், ஒவ்வாது - சம்மதியாமல், உதகமோடு அளிக்கும் - நீரோடு கொடுப்பதாகிய, தூய மன்றல் - சுத்தமாகிய விவாகம், எவ்வாறு முற்றும் - எவ்வழிமுடியும், (ஆதலால்) வானவர் - தேவர்களுடைய, அருள் இல்லாமல் - கிருபையில்லாமல், துன்று நீர புவியில் - கடல் சூழ்ந்த பூமியிலே, யார்க்கும் - எப்படிப்பட்டவர்களுக்கும், சூழ் வினை - நினைக்கப்பட்ட கருமங்களை, முடிக்கலாமே - முடிக்கக்கூடுமோ, எ - று.

(க - து.) எப்படிப்பட்டவர்க்கும் தீயு நீரு மில்லாமல் விவாகமுடியாது, இதற் கிவாக ளருள்வேண்டு மென்று னென்பதாம்.

பூமியிலே எப்படிப்பட்டவர்களுக்கும் தீயும் நீருமன்றி விவாக முற்றாதாதலால் அதற்கு அதிதேவதைகளாகிய இவர்கள் அருள் வேண்டுமென்பது கருத்து. (கஉ௫)

வேயினைப்பழித்தமென்றோள் வேற்றடங்கண்ணினுட
னேயபேரழகுமாந்தரிருகணானோக்கவற்றோ
தீயுமிழ்வயிரவொள்வாளேந்தியதேவர்கோமா
னாயிரங்கண்களாலுநோக்குதற்கமைந்ததன்றே.

(இ - ள்.) வேயினை பழித்த - மூங்கிலை நிந்தித்த, மென் தோள் - மெல்லிய தோளையுடைய, வேல் தடம் கண்ணினுடன் - தமயந்தியிடத்து, ஏய பேர் அழகு - பொருந்திய மிகுந்த அழகானது, மாந்தர் - மனிதருடைய, இரு கண்ணால் - இரண்டு விழிகளால், நோக்கவற்றோ - பார்க்கவல்லதோ, தீ உமிழ் - நெருப்பை யுமிழ்கின்ற, வயிரம் ஒள் வாள் ஏந்திய - வச்சிராயுதத்தை தாங்கிய, தேவர் கோமான் - இந்திரனானவன், ஆயிரம் கண்களாலும் - ஆயிரம் விழிகளாலும், நோக்குதற்கு - பார்க்கும்பொருட்டு, அமைந்தது - பொருந்தியதாகும், எ-று. அன்று, ஏ - அசை.

(க - து.) இந்திரன ஆயிரங்கண்களாற் பார்த்தற்கமைந்த தமயந்தியினழகை மனிதர்க ளிருகண்களாற் பார்த்தால் பயன்படாது என்பதாம்.

உயர்பிறப்பையுடைய தேவர்க்கரசனாகிய இந்திரன் ஆயிரங்கண்களாலும் பார்த்தற்கமைந்த தமயந்தியினழகை இழிபிறப்புடைய மனிதர் இரண்டு கண்களாற் பார்க்கும்படி விரும்புவதில் அவ்வழகு பயன்படா தென்பதாம். (கஉ௬)

வெந்திறற்களிநல்யானைவிதர்ப்பர்கோனளித்தமாதைத்
தந்துயிரளித்தியென்னத்தனியிருவிசும்புகாக்கு
மிந்திரன்கேட்டபோதிலெண்ணியவனைத்துநலகு
மைந்தருவழங்கினும்மாலன்றெனமறுக்கலாமோ.

(இ - ள்.) தனி இரு விசும்பு - ஒப்பற்ற பெரிய விண்ணுலகத்தை, காக்கும் - காக்கின்ற, இந்திரன் - இந்திரனானவன், வெம் திறல் -

வெவ்விய வலிமைபெற்ற, களி நல் யானை - களிப்பையுடைய நல்ல யானையையுடைய, விதர்ப்பகோன் - வீமனென்பவன், அளித்த மாதை - பெற்ற தமயந்தியை, தந்து - கொடுத்து, உயிர் அளித்தி என்ன - என்னுயிரைக் காப்பாற்றென்று, கேட்ட போதில் - கேட்டாலப்பொழுது, எண்ணிய அனைத்தும் நல்கும் - நினைத்தவைகளையெல்லாம் தருகின்ற, ஐந்தரு வழங்கின் - பஞ்சதருக்கள் கொடுத்தால், நும்மால் - உங்களால், அன்று என - அன்றென்று, மறுக்கலாமோ - மறுக்கக்கூடுமோ, எ-று.

(க - து.) தமயந்தியைக் கொடுத் தென்னுயிரைக் காப்பாயென் றிந்திரன் கேட்ப, ஐந்தருக்களும் அப்படியே யவளைக் கொடுக்குமாயி னுங்களாற் றடுக்கலாகுமோ வென்பதாம்.

இந்திரன் தருமநினைப்பை யுடையவனாதலால் தனனுயிர் போக வந்தவிடத்தும் அவ்வாறு செய்யாது சம்மதிப்படுத்த நினைத்தன னெனக. 'தனியிருவிசும்புகாக்கும்' என்றதலால் அவனுடைய ஆணை சொல்லப்பட்டது. பிறர் எண்ணியவனைத்துங் குறிப்பறிந்து கொடுக் கும் பஞ்சதருக்கள் தமக்கரசனாகிய இந்திரன் வாய்திறந்து கேட்கில் அது எப்படி யில்லையென்று சொல்லும். "எல்லா மொறுக்கு மதுகை யுரனுடையாளன் பொறுக்கும் பொறையே பொறை" என்றிருத்த லால் இந்திரன் பொறுமையுள்ளவனென்பது பெறப்பட்டது. ஐந்தரு சிருட்டித்துக் கொடுக்கின்னெனப் பொருள்கொள்ளில் உலகத்தில் உவமை யற்ற இவள்போற் பலருண்டாயின் இவளுக்குச் சிறப்பில்லை யென் பது கருத்து. (கஉஎ)

என்றிவன் புகன்றமாற்ற மிருசெவி வெதுப்பக்கேட்டு
நின்றுளம்பதைப்பவாடி நெட்டுயிர்ப்போடுஞ்சோரு
மன்றலங்குழலினுடன் மதர்நெடுங்கயற்கணூலி
குன்றெனப்பணைத்துவீங்குங் குவிமுலைவார்ந்தவன்றே.

(இ - ள்.) என்று - இப்படியென்று, இவன் - இந்நளனென்பவன், புகன்ற மாற்றம் - சொன்ன சொற்கள், இரு செவி வெதுப்ப - இரண்டு காதுகளையும் சுடுதலைச்செய்ய, கேட்டு - அவைகளைக் கேள்விப்பட்டு, வாடி - வாட்டமுற்று, நெடு உயிர்ப்போடும் - பெருமூச்சுடனே, சோரும் - சோர்வையடைகின்ற, மன்றல் அம் குழலினாள் தன் - தமயந்தியி னுடைய, மதர் நெடு கயல் கண் - களிப்டையுடைய நெடிய கயல் போன்ற கண்களி னின்றும், ஆலி - நீர்த்துளிகள், குன்று என - மலைக ளென்று சொல்ல, பணைத்து - பருத்து, வீங்கும் குவி முலை - வீங்கிய குவிந்த ஸ்தனங்களின்மேல், வார்ந்த - ஒழுகின, எ - று.

(க - து.) நளன் சொன்ன சொல்லைத் தமயந்திகேட்டு அவளிரு கண்ணீர்த்துளிக ளிருமுலைமேல் விழுந்தன என்பதாம்.

ஆடவர் ஒருபொருளைக்குறித்து வினவும்பொழுது அதற்கு விடை கூறத் தடைபடின் அழுவது மாதர்க்குச் சுபாவமாதலால் தமயந்திக் கு 'கயற்கணூலி குவிமுலை வார்ந்த' என்றார். மிக்க கல்விப்பயிற்சி யுள்ள விவட்குத் தடைபடுவ தேனென்னில் தான் பேசுவதற்குக் கூடா மையாலும், இவன் பேசுவதில் தோழிகட்கும் வருத்த மிகுதலானு

மென்க. எப்படிப்பட்டவர்க்கும் மனவருத்த மேலிடில் ஒன்றுந் தோன்றா தென்பதாம். (௩௨அ)

மாதுகண்பனிப்பநோக்கித்தோழியர்மாழாந்துள்ளம்
பேதுறவெய்திநின்றபெய்வளைத்துயரமெல்லாந்
தூதுநாம்விடுத்தவன்னஞ்சொல்லிபதென்னிற்சற்று
மாதரமின்றியிவ்வாறுரைககுமோவரசனென்றார்.

(இ - ள்.) மாது - தமயந்தியினுடைய, கண் பனிப்ப - கண்கள் நீரைச்சொரிய, நோக்கி - பார்த்து, தோழியர் - தோழிகள், மாழாந்து - மயங்கி, உள்ளம் - மனமானது, பேதுற்று எய்தி நின்ற பெய்வளை - கவலையடைந்து நிற்கின்ற தமயந்தியினுடைய, துயரம் எல்லாம் - துன்பமனைத்தையும், தூது - தூதாக, நாம் விடுத்த - நம்மால் விடுக்கப்பட்ட, அன்னம் சொல்லியது என்னில் - அன்னப்பறவையானது சொல்லியிருந்ததானால், சற்றும் - கொஞ்சமும், ஆதரம் இன்றி - ஆசையில்லாமல், இவ்வாறு - இப்படி, அரசன் - நளனென்பவன், உரைக்குமோ என்றார் - சொல்லுவானோவென்றார்கள், எ - று.

(க-து.) தோழிகள் தூதுசென்றவன்னம் தமயந்தி துயரத்தைச் சொல்லி யிருக்குமானால் நளனிப்படிச் சொல்வானோ வென்றார்கள் என்பதாம்.

இவன் நளனோ அல்லனோ, நளனேயாயினும் நாம முன்னாத தூதாகவிடுத்த அன்னம நமது குறைகளைச் சொல்லவில்லையோ, சொன்னதாயின தமயந்தியிடத்து முன்னரே விழைந்துள்ள அரசன அவளை எதிரிலேகண்டும் நம்முரைகேட்டும சிறிதேனும அன்பின்றி இவ்வாறு கூறினனாதலின் யாவனோவென விடைகொடுத்தற்கு ஐயுற்றுத் தோழிகள வருத்தமுற்றிருந்தன ரெனக. (௩௨௯)

இன்னணமணங்கனனுமாயமுமிரங்கநோக்கி
மன்னனுமறிவுதீர்ந்துமனஞ்சிறிதயருமவேலைப்
பொன்னிறப்பவளச்செவ்வாயபொற்புறுபசியமென்கூட்
டன்னமுமவிசும்பினீங்கியவ்வுழியடைந்ததன்றே.

(இ - ள்.) இன்னணம் - இப்படி, அணங்கு அன்னனும் - தமயந்தியும், ஆயமும் - தோழிகளும், இரங்கல நோக்கி - வருந்துவதைப் பார்த்து, மன்னனும் - நளனும், அறிவு தீர்ந்து - மதிமயங்கி, மனம் - மனமானது, சிறிது அயரும் வேலை - கொஞ்சம் தளர்வடையும்போது, பொன் நிறம் - பொனபோன்ற நிறத்தையும, பவளச் செவ்வாய் - பவளம்போன்ற சிவந்த வாயையும், பொற்பு உறு - அழகான் மிகுந்த, பசிய - பசுமைபொருந்திய, மெல் கூடு - மெல்லிய வுச்சிக்கொண்டையையு முடைய, அன்னமும் - அன்னப்பறவையும், விசும்பில் நீங்கி - ஆகாயத்தினின்று நீங்கி, அவ்வுழி - அந்தவிடத்தில், அடைந்தது - வந்தது, எ - று. அன், ஏ - அசை.

(க - து.) இப்படித் தமயந்தியுந் தோழிகளும் நளனும் அறிவு கலங்கி வருந்தும்வேளையில் அன்னம் வந்தது என்பதாம்.

தூதுவந்த நளனை இன்னானென்று தெளியக்கூடாமையால் தமயந்தியும் தோழிகளும் வருந்தினார்கள், நளனும் அறவழியிற் செல்பவனாதலால் தனனுடைய வேட்கையை அவர்கள் முன்பு வெளிபடுத்தக் கூடாமையால் வருந்தினனென்க. (கூ0)

எய்தியதூவியன்னமினநகைபபவளச்செவ்வாய
மையவாங்கரியகூந்தலவாண்முகமினிதுநோக்கி
நெயதவழ்புலவுவைவேனிடதர்கோனிவனேயுள்ளத
தையுறேல்கமலபபோதிலணங்கிறகுமணஙகுபோலவாய.

(இ - ள்.) எய்திய - அங்கு வந்த, தூவி அனனம் - இறகையுடைய அன்னபபறவை, இன நகை - இனிய நகையையும், பவளம் செவவாய்-பவள்ம்போன்ற செவ்வாயையும், மை அவாம கரிய கூநதல் - மேகங்கள் விரும்புகினற கறுதத குழலையுமுடைய தமயநதியினது, வாள் முகம் - ஒளிபொருநதிய திருமுகததை, இனிது நோககி - இனிதாகப பாாத்து, கமலம போதில் அணஙகிறகும - தாமரைமலரிலிருககுந திருமாதுக்கும், அணங்கு போல்வாய - திருமாதுபோன்ற தமயநதியே, நெய் தவழ் - நிணநதவழ்கினற, புலவு வை வேல் - புலாலநாற்றம் பொருந்திய கூரிய வேலையுடைய, நிடதாகோன் இவனே - இவனே நளமகாராசன, உள்ளதது - மனததில், ஐ உறேல - சநதேகபபட வேண்டாம், எ - று.

(க - து.) அனனமானது தமயாந்தியைப பாாத்து இவனே நளமஹாராஜன என்றது எனபதாம.

தெய்வததனமையுள்ள அனனமாதலால் தான் எடுதத கருமததிறகு இடையூறு வாராது நளன் தூதுவநதது தெரிந்து இவனே நளனெனறு தமயநதிககுச சொலலிய தெனக. (கூக)

மழைமதர் நெடுஙகட செவ்வாய் வளர்முலை மடந்தாய் நின்மேல, விழைவிகந் துரைத்தா னலலன் விண்ணவாக் கியைந்த மாற்றம, பழுதுறு மென்னு மாற்றாற் பகர்ந்தனன் பரிதி வேலா, னழுதகங் குழைந்தி டேலென் றன்பினா லறைந்த தன்றே.

(இ - ள்.) மழை மதா நெடு கண் - குளிர்ச்சிபொருந்திய களிபபையுடைய நெடிய கண்களையும், செவவாய - சிவந்தவாயையும், வளா முலை மடந்தாய - வளாகினற ஸ்தனங்களையுமுடைய தமயந்தியே, பரிதி வேலான் - நளமகாராசன், நினமேல் - உனனிடததில், விழைவு இகந்து - ஆசை நீஙகி, உரைததான அல்லன் - சொன்னவனல்லனாகும், விண்ணவாக்கு - தேவாகளுக்கு, இயைநத மாற்றம் - தூதின்பொருட்டுச் சம்மதிதத சொல், பழுது உறும் என்னும் ஆற்றால் - பழுதாகுமென்கின்றபடியால், பகாநதனன் - (இவ்வாறு) பேசினான், (அதனால்) அழுது - நீ அழுது, அகம் குழைந்திடேல் என்று - மனம் குழைய வேண்டாமெனறு, அன்பினால் - விருப்பத்தினால், அறைந்தது (அன்னம்) - சொல்லியது, எ - று. அன்று, ஏ - அசை.

(க - து.) தமயந்தியே! நளனுன்மேல் ஆசைவையாது சொன்னவனல்லன், தூதுக்குப் பழுதில்லாமற் சொன்னான் அதுபோதுமென்று சொல்லிற்று என்பதாம்.

நளமகாராசனுன்னவன் தேவரொருட்டிச சம்மதித்த கருமத்துக்கோர் பழுதடையின் இம்மைக்குப் பழியன்றி மறுமைக்குப் பாவமு முண்டாம், ஆதலி னிவ்வாறு பேசினான், அதனால் நீ வருந்தப்படவேண்டாமென நன்னனுஞ்சொல்லிய தென்க. (௩௩௨)

வடுவகி ரனைய வுண்கண் மடந்தையோ டிவ்வா றோதிக், கடகளி றென்ன நின்ற காளைதன் முகத்தை நோக்கா, வுடையபே ரறிவாற் காம முள்ளமைத் தின்ன கூறிற, கொடிநெடுந் தானை வேந்தே கோற்றொடி யாற்றுங் கொல்லோ

(இ-ள்.) வடு வகிர் அனைய - மாவடுவினுடைய பிளட்பையொத்த, உண் கண் - மையுண்ட கண்களையுடைய, மடந்தையோடு - தமயந்தியுடனே, இவ்வாறு ஓதி - இவ்விதமாகச் சொல்லி, கட களிறு என்ன நின்ற - மதயானை யென்னும்படி நின்ற, காளைதன் முகத்தை நோக்கா - அரசனது முகத்தைப்பார்த்து, கொடி நெடு தானை வேந்தே - நளமகாராஜனே, உடைய பேர் அறிவால் - பேரறிவுடைமையால், காமம் - ஆசையை, உள் அமைத்து - உள்ளேயடக்கி, இன்ன கூறில் - இப்படிப்பட்ட வார்த்தைகளைப் பேசினால், கோற்றொடி - தமயந்தி, ஆற்றுங் கொல்லோ - பொறுப்பாளோ, எ-று.

(க - து.) அன்னம் நளனைப்பார்த்துத் தமயந்திக இவ்வாறு சொன்னாற் பொறுப்பாளோ என்றது என்பதாம்.

நின்போல்வார்க்கன்றிக் காமத்தைப் பேரறிவா லுள்ளடக்கிப் பேசுதல் மற்றையோர்க் கரிதென்றதாயிற்று. நின்னை விரும்புவ ளாதலால் நீயேபேசில் தமயந்தி யாற்றுவ தரிதென்ற தென்க. (௩௩௩)

மாங்குயிற் குதலைப் பேதைமன முநீ யியைந்த வண்ணந் தீங்கற வுரைத்த வாறுந் தேவர் மற்றுணரா ரல்ல ரீங்கினி யுரைப்ப தென்னை யிவ்வயி னிகழ்ந்த வெல்லா மாங்கவர் தம்பா லேகி யறைதி யென்றறைந்த தன்னம்.

(இ-ள்.) மா குயில் - மாமரத்திலிருக்குங் குயிற்சொல்லையொத்த, குதலை - மழலைச்சொல்லையுடைய, பேதை மனமும் - தமயந்தியினது மனமும், நீ இயைந்த வண்ணம் - நீ சம்மதித்து வந்தபடி, தீங்கு அற - தீங்கு நீங்க, உரைத்த ஆறும் - சொல்லிய விதமும், தேவர் உணரார் அல்லர் - தேவர்கள் அறியாதவர்களல்ல, ஈங்கு - இவ்விடத்தில், இனி உரைப்பது என்னை - இனி பேசவேண்டுவ தென்ன, இவ்வயின் - இவ்விடத்திலே, நிகழ்ந்தது எல்லாம் - நடந்தவை யனைத்தும், ஆங்கு அவர் தம்பால் ஏகி - அத்தேவரிடத்துக்குப்போய், அறைதி என்று - நீ சொல்லுவாயாகவென்று, அன்னம் - அன்னப்பறவை, அறைந்தது - சொல்லியது, எ-று.

(க - து.) இங்கு நடந்தவையெல்லாந் தேவர்களறிவார்கள் நடந்தபடி நீபோய் சொல்லென்றது என்பதாம்.

தமயந்தியினது கருத்தும் நீ தூதுக்குச் சம்மதித்துவந்தபடி பேசியதும சாவகாசியத்துவமுள்ள தேவர்களுக்கு நீ போய் சொல்லு முன்னமே தெரியுமெனக. (௩௩௪)

அவ்வுரைகேட்டலோடுமடையலர்ச்செகுக்கும்வேலான்
மவ்வலங்குழலினுடன்மனவலியினிதினோர்ந்து
செவ்விதின்மனமுங்கண்ணுந்தெரிவைமேற்கிடப்பமாறுக்
கவ்வைகொள்வாயினீங்கிவிஞ்சையிறகரந்துபோனான்.

(இ-ள்.) அ உரை கேட்டலோடும் - அந்தவார்த்தையைக் கேட்டவளவில், அடையலா செகுக்கும் - சத்துருக்களைக் கொல்லுகின்ற, வேலான் - வேற்படையையுடைய நளன, மவ்வல அம் குழலினுள்தன் - தமயந்தியினது, மன வலி - நெருசினது வலிமையை, இனிதின ஓாந்து - இனிதி னறிந்து, செவ்விதின - செம்மையை யுடைய, மனமும் - தன் மனத்தையும், கணணும - கணகளையும, தெரிவைமேல கிடபப - அத் தமயநதியினமே லிருககவைத்து, மாறு - நீஙகாது, கவவை கொள - ஒலித்தலைககொணட, வாயின நீஙகி - வாயிலைக்கடந்து, விஞ்சையின் - மந்திரத்தினால், கரநது போனான - ஒளிந்துச் சென்றான், எ-று.

(க - து.) நளன் கணகளு மனமுந தமயநதியிடததிருக்க வுருவ மறைதது அருபமாகப போனான எனபதாம்.

இந்திரனமேல தமயநதிககுக காத லியலாமையை யறிந்தவனாத லால் தனமனமுங கணணும அவளமேற கிடபப விஞ்சையிற கரந்து நீங்கின னெனறா. (௩௩௫)

காரிகையுளமுநாணுங்கவர்ந்தனன்கரந்துபோய
மூரிவெஞ்சிலைகைவீரன்கடவுளர்முன்னரேகி
நேரிழைதன்பாற்றூதுபோயபினிகழ்ந்தவெலலாஞ் [ந்தார்
சோர்வுறுதுரைத்தான்றேவர்தோன்றலபான்மகிழ்ச்சிகூர்

(இ - ள்.) காரிகை உளமும் - தமயந்தியினுடைய மனத்தையும், நாணம் - நாணையும், கவாநதனன் - கொள்ளைகொண்டனனாகி, கரந்து போய - மறைநதுசென்ற, மூரி வெம் சிலை கை வீரன் - வலிமை பெற்ற நளமகாராசன், கடவுளா முன்னா ஏகி - தேவாக ளெதிரே சென்று, நேரிழை தன்பால் - தமயந்தியினிடத்து, தூது போயபின் - தூதுபோனபின்பு, நிகழ்ந்த எல்லாம் - நடந்தவைக ளனைத்தையும் - சோாவு உறாது - குறைவுபடாமல், உரைத்தான் - சொல்லினான், தேவா - தேவாகள், தோன்றல்பால் - அந்த நளமகாராசனிடத்தில், மகிழ்ச்சி கூாந்தாா - உவகை யடைந்தாாகள், எ-று.

(க - து.) நளன் தேவாகள் முன்சென்று தமயந்தி சொன்னவை யெல்லாம் சொன்னான், தேவாகள் நளனிடத்தில் மகிழ்ச்சிகூாந்தாாகள் என்பதாம்.

தான் விரும்பிய மாதிடத்திற் சும்முறை தவறாது தூதுசென்று உள்ளபடி பேசிவந்தானென்று நளனிடத்தில் இந்திரன்முதலிய நால்வரும் மகிழ்கூர்ந்தனரெனக். (௩௩௬)

[illegible] முற்றிற்று.



## சுயம்வரப்படலம்.

சுயம்வரமாவது அரசமங்கையானவள் தனக்கு மூத்தோர்கள் தன்னை விழைந்துவந்த அநேக அரசர்களை ஏககாலத்தில் வருவிக்க அவரிற் றனக்கிசைந்த ஒருவனுக்குத் தானே மாலையிட்டுத் தலைவனாகக் கொள்ளுதலாம்.

[இப்படலத்தால் தமயந்தியானவள் நளமகாராஜனைத் தலைவனாகத் தானே வரித்தாளென்று சொல்லத்தொடங்கி இப்பாட்டால் தமயந்தியின் சுயம்வரத்திற்குத் திரிலோகத்திலுமுள்ளவர் வரவு சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

**இன்னவை நிகழும் வேலை யெழுகடல் வளைப்பின் மேவு, மன்னவர் குழாமும் விண்ணோர் தொகுதியு மணிச் செஞ் சூட்டுப், பன்னக நாட்டு வேந்தர் வெள்ளமும் பரித் தேர் வீமன், கன்னியம் புரிசை சூழ்ந்த கடிநகர்க் கெழுந் தவன்றே.**

(இ - ள்.) இன்னவை - இப்படிப்பட்டவைகள், நிகழும் வேலை - நடக்கின்றபொழுது, எழு கடல் வளைப்பில் மேவும் - எழுகடல் சூழ்ந்த தீவுகளிலிருக்கின்ற, மன்னவர் குழாமும் - அரசர்கூட்டமும், விண்ணோர் தொகுதியும் - தேவர்கூட்டமும், மணி - ரத்நங்களாகிய, செம் சூட்டு - சிவந்த சூட்டையுடைய, பன்னக நாட்டு வேந்தர் வெள்ளமும் - நாகலோகத்துள்ள அரசர்கள் கூட்டமும், பரி தேர் - குதிரைகட்டிய தேரையுடைய, வீமன் - வீமராசனது, கன்னி - அழிவில்லாமையையுடைய, அம் புரிசை சூழ்ந்த - அழகிய மதிலாற்சூழப் பட்ட, கடி நகர்க்கு - காவலையுடைய குண்டினபுரத்துக்கு, எழுந்த - எழுந்தன, எ-று. அன்று, ஏ - அசை.

(க-து.) அரசர் கூட்டங்களும் தேவர் கூட்டங்களும் நாகலோகத்தரசர் கூட்டங்களும் குண்டினபுரத்திற் கெழுந்தன என்பதாம்.

வீமன் 'பூமியிலுள்ள அரசர்க்குமாத்திரம் சுயம்வரவோலை செலுத்தியிருக்க மற்றையுலகத்தாரு மெழுந்தனரென இப்பொழுது சொல்லியதற்குக் காரணமென்னெனில் முன்பு நாரதமுனி இந்திரனுக்குத் தமயந்தியின் செய்தி சொல்லும்போது 'விஞ்சையர் கின்னரரவுணருரகர் புவிமுழுதாளும் வேந்தர்யாரு மஞ்சலிசெய் திருமருங்கும் புடைசூழ முனிவர்குழாமாசிகூற' என்னும் பாட்டில் அங்கிருந்தாரெனச் சொல்லிய மேலுலகத்தாருங் கீழுலகத்தாருந் தீவிலுள்ளவரும்

அவாவின் மிக்கவராய் அதைத் தமக்கும் வந்த செய்தியாகக்கொண்டு நல்லூழிருக்குமாயின் அம்மாது சூட்டுமாலை நமக்குக் கிடைப்பினுங் கிடைக்குமென வெழுந்தனரெனக் கொள்ளல்வேண்டுமெனக. (௪)

[இதனால் மேற்சொல்லிய அரசர்களுடைய நால்வகைச்
சேனைகளின் வரவு சொல்லப்படுகின்றது.]

பண்ணமை கலினப் பாய்மா பசியபொற் கொடிஞ்சித்
திண்டேர், கண்ணழற் சீற்றத் துப்பிற கடாம்பொழி களி
நல் யானை, மண்ணமை முழவுத திண்டோள் வாகைவே
லுழவ ரீட்ட, மெண்ணிட விடமொன் றின்றி யெங்கணும்
பரந்த வன்றே.

(இ - ள்.) பண் அமை - கல்லணையமைந்த, கலினம் - கடிவாளத்தையுடைய, பாய் மா - தாவுகின்ற குதிரைகளும், பசிய பொன் - பசிய பொன்னாற்செய்த, கொடிஞ்சி - மேன்மாடத்தையுடைய, திண் தேர் - வலிமைபெற்ற தேர்களும், கண் - கண்களில், அழல் - தீயையும், சீற்றத்து உப்பின - மிகுந்த கோபத்தையுமுடைய, கடாம் பொழி - மதம் பொழிகின்ற, களி நல் யானை - களிப்பையுடைய நல்ல யானைகளும், மண் அமை - ஒப்பனையமைந்த, முழவு - மத்தளம்போன்ற, திண் தோள் - வலிமைபெற்ற புயங்களையும், வாகை வேல் - வெற்றி பெற்ற வேலையுமுடைய, உழவர் ஈட்டம் - காலாளர்கள் கூட்டமும், எண் இட - எள்ளையிருத்தற்கு, இடம் ஒன்று இன்றி - வெற்றிடமொன்று மில்லாமல், எங்கணும் - எவ்விடங்களிலும், பரந்த - பரவின, எ-று.

(க - து.) குதிரைகளும் தேர்களும் யானைகளும் காலாளர்களும் எங்கும் பரவின என்பதாம்.

ஒவ்வொருதேசத் தரசர்கள் சேனைகளே அநேகமாயிருப்பின் அநேகதேசத்தரசர் நால்வகைச்சேனைகளும் ஏககாலத்தில் ஓரிடத்துக்கு வருமாயின் இவ்வளவென்று குறிக்கக் கூடாதென்பார் 'எண்ணிட விடமொன்றின்றி யெங்கணும் பரந்த' என்றாரெனக. எண் - எள். அது "எண்ணுந்திலமு மெள்ளென விசைப்பர்" என்பதாலறிக.

[இதனாற் குதிரைக் குளம்புகளினெழுந்த புழுதியின்
தோற்றஞ் சொல்லப்படுகின்றது.]

கொய்யுளைக் கலின மாவின் குரத்துக ளெழுந்து
விம்மி, வையக முழுதுஞ் சூழ்போய் மறிகடற் கிடங்கு
தூர்த்து, மொய்ம்பெரு தசலத் தோடு முரணியெண் டிசை
யுங் காக்குந், தொய்யின்மா முகத்த யானைக் கவுட்குழி
தூர்த்த வன்றே.

(இ - ள்.) கொய் உளை - கொய்யப்பட்ட புறமயிரையுடைய, கலினம் மாவின் - கடிவாளம்பூண்ட குதிரைகளுடைய, குரம் துகள் எழுந்து - குளம்புபட்டுண்டாகும் புழுதிகள் எழும்பி, விம்மி - பரவி, வையகம் முழுதும் - பூவுலகமுழுவதும், சூழ் போய் - வளைத்துக்

கொண்டு, மறி கடல் - மடங்குகின்ற அலைகளையுடைய கடலாகிய, இடங்கு தூர்த்து - அகழைத் தூர்த்துவிட்டு, மொய் பொருது - போர் பொருமல், அச்சத்தோடு முரணி - குலகிரியுடன் மாறுகொண்டு, எண் திசையும் காக்கும் - திசைகளெட்டையும் புரக்கின்ற, தொய்யில் - சிந்தூர மெழுதப்பெற்ற, மா முகத்த யானை - மகத்தாகிய முகத்தையுடைய யானைகளின், கவுள் குழி - கன்னத்துத்தொளைகளை, தூர்த்த - தூர்த்தன, எ - று.

(க - து.) குதிரைகளின் குளம்பாலுண்டாகும் புழுதிகள் கடலையுந் தூர்த்து அட்டகஜங்களின் கவுட்குழிகளையுந் தூர்த்தன என்பதாம்.

பூவுலகமுழுவதுஞ் சூழ்ந்து கடல்களைத் தூர்த்துத் திக்கயங்களினுடைய கன்னத் தொளைகளையுந் தூர்த்தபுழுதி அப்புறம்போதற் கிடமில்லாமையால் நடைபட்டதன்றி அதற்களவில்லை யென்க. புழுதியிப்படிப்பட்டதாயின் அக்குதிரைகளின் ஆரவாரஞ்சொல்ல வேண்டுவதில்லை யாயிற்று. இது உயர்வுநவிற்சி யணி (௩)

[இதுமுதல் தேவர்கட்கும் அரசர்களுக்கு மிருக்கும் கலப்பு சொல்லப்படுகின்றது.]

மண்ணக வரைப்பின் வேந்தர் வரைப்புயத் தெழுது சாந்தம, விண்ணகத் தமரர் மார்பங் கமழ்ந்தன விண்ணோர் வேய்ந்த, தண்ணறு வொழுகு மன்றற் றருமலர்ப் பசும் பொற் றாது, கண்ணகன் ஞாலங் காக்கும் வேந்தர்மெய் கமழ்ந்த மாதோ.

(இ-ள்.) மண்ணக வரைப்பின் - பூவுலகத்திடத்திருக்கின்ற, வேந்தர் - அரசர்களுடைய, வரை புயத்து - மலைகளையொத்த தோள்களில், எழுது - தாரியக்கோலத்தீட்டிய, சாந்தம் - சந்தனமானது, விண்ணகத்து - ஆகாசத்திடத்திருக்கின்ற, அமரர் மார்பம் - தேவர்களுடைய மார்பிலே, கமழ்ந்தன - மணந்தன, விண்ணோர் வேய்ந்த - தேவர்கள் தரித்த, தண் நறவு ஒழுகு - குளிர்ச்சிபொருந்திய தேனொழுகுகின்ற, மன்றல் - வாசனையையுடைய, தரு மலர் - பஞ்சதருவினுடைய மலர்களின், பசு பொன் தாது - பசும்பொன்போன்ற மகரந்தப்பொடிகள், கண் அகல் - இடமகன்ற, ஞாலம் காக்கும் - பூமியைப் புரக்கின்ற, வேந்தர் மெய் - அரசர்களுடைய தேகத்தில், கமழ்ந்தன - மணந்தன, எ-று.

(க - து.) அரசர்கள் தோள்களிலணிந்த சந்தனங்கள் தேவர்கள் மார்பிற் பரிமளித்தன, தேவர்களணிந்த கற்பகமலர்த்தாதுக ளரசர்களுடலிற் பரிமளித்தன என்பதாம்.

ஒருவர்க்கொருவர் நெருங்கியிருத்தலால் மனிதர் புயங்களிற் பூசிய சாந்தம் தேவர்கள் மார்பினும், தேவர்களணிந்த மாலைமலரின் மகரந்தம் அரசர் தேகங்களினுங் கமழ்ந்தன வென்க. ஆயின் தேவர்களை மனிதர்கள் அப்படி நெருங்கலாமோ வென்னில் அரசரால் விரும்பப்படுந் தமயந்தியையே அவர்களும் விரும்பிவருதலாலும் அதிக நெருக்கமுள்ள விடத்தில் எவர்களும் அதிகமரியாதையை விரும்பாமையாலும் ஆகுமென்க. (௪)

[இதனால் மதநீர் முதலியவற்றின் பெருக்கஞ்
சொல்லப்படுகின்றது.]

காந்தெரிகதுவுஞ் செய்கட் கரிமதக் கலுழியாறுங்
கூந்தன்மா வுமிழ்விலாழிப் பெருக்கும்வேற் குமரனன்ன
வேந்தர்திண் புயத்தில்வார்ந்த விரைகமழ் நானச்சேறும்
பாந்தண்மேற் கிடந்தஞால மெங்கணும் பரந்தவன்றே.

(இ - ள்) காந்து எரி - முதிர்கின்ற தியானத்து, கதுவும் - பற்று கின்ற, செம் கண் கரி - சிவந்த கண்களையுடைய யானைகளுடைய, மதம் - மதநீராகிய, கலுழி ஆறும் - காட்டாறும், கூந்தல் மா - புறமயிரினையுடைய குதிரைகள், உமிழ் - சொரிகின்ற, விலாழி பெருக்கும் - வாயதுரை நீர்ப்பெருக்கும், வேல் குமரன் அன்ன - வேற்படையை யுடைய குமாரக்கடவுளையொத்த, வேந்தர் - அரசர்களுடைய, திண் புயத்தில் - வலிமையுள்ள தோள்களில், வார்ந்த - ஒழுகிய, விரை கமழ் - வாசனை வீசுகின்ற, நானம் சேறும் - கஸ்தூரிச்சேறும், பாந்தள் மேல் - ஆதிசேடன்மேல், கிடந்த - இருந்த, ஞாலம் எங்கணும் - பூமியெங்கும், பரந்த - பரவின, எ-று.

(க - து.) யானைகளின் மதமும், குதிரைகள் வாயநீரும், அரசர்கள் புயத்தொழுகிய கஸ்தூரிச்சேறும் பூமியெங்கும் பரவின என்பதாம்.

மதநதியும் விலாழிப்பெருக்கும் கஸ்தூரிச்சேறும் பூமி முழுவதும் பரந்தவென்னவே அவைகளையுடைய யானைகளும் குதிரைகளும் அரசர்களும் அளவில்லையென்பது கருத்தாகக் கொள்க. (௫)

[இதனால் தேவராதியோர் ஊர்திகளின் மிகுதி சொல்லப்படுகின்றது.]

வெள்ளியங் கிரியின் மேய விஞ்சைய ரியக்கர் விண்
ணோ, ரொள்ளொளி யெறிக்கும் பைம்பொன் விமானமு
முலகில் வேந்தர், நள்ளிருள் சீக்குஞ் செய்ய நகைமணிக்
கொடிஞ்சித் தேரும். தெள்ளிதி னுணர்ந்தோர்க்குந்
தெரிவில மயங்கு மன்றே

(இ - ள்.) வெள்ளி அம் கிரியின் மேய - அழகிய கயிலாசமலையிற் பொருந்திய, விஞ்சையர் - வித்தியாதரரும், இயக்கர் - இயக்கர்களும், விண்ணோர் - தேவர்களும் ஆகிய இவர்களுடைய, ஒள் ஒளி எறிக்கும் - மிகுந்தவொளியை வீசுகின்ற, பைம் பொன் - பசும்பொன்னாற் செய்த, விமானமும் - விமானங்களும், உலகில் - பூவுலகிலிருக்கும், வேந்தர் - அரசர்களுடைய, நள் இருள் சீக்கும் - மிகுந்த இருளினை யோட்டுகின்ற, செய்ய நகை மணி - சிவந்த ஒளியையுடைய ரத்நங்கள் பதித்த, கொடிஞ்சி - மேல்மொட்டையுடைய, தேரும் - தேர்களும், தெள்ளிதின் உணர்ந்தோர்க்கும் - தெளிவாக அறிந்தவர்களுக்கும், தெரிவில் - தெரிந்துகொள்ளக் கூடாதனவாகி, மயங்கும் - ஒன்றோடொன்று மயங்கும், எ-று. அம் - அசை.

(க-து.) தேவர்கள் விமானங்களும், அரசர்கள் தேர்களும், பகுத்தறியப்படாவாம் என்பதாம்.

ஒவ்வொருவிதத்தில் அநேகம் விமானங்களும் அநேகர் தேர்களுமாதலால் நுண்ணறிவுடையராயினுந் தேவர்களுக்கும் அரசர்களுக்கும் நம்மது இதுவோ அதுவோ வென்னத் தலைமயங்கிக் கிடக்கு மென்க.()

[இதனு லரச ரனைவருங் கலந்துபேசல்
சொல்லப்படுகின்றது.]

**சிற்பநூல் கழியக் கற்றோர் சித்திரித் தென்ன வாய**
**ந்த, பொற்புறு நெடிய வேற்கட் பூங்கொடி வதுவை வே**
**ட்டுப், பற்பல தேய வேந்தர் தொகுதலிற் பாடை தேர்**
**வா, னற்புட னெவருந் தேவ பாடையி னறைவர் மாதோ.**

(இ - ள்.) சிற்பம் நூல் - சிற்பசாஸ்திரத்தை, கழிய கற்றோர் - மிகவும் படித்தவர்கள், சித்திரித்தது என்ன - சித்திரித்தது போல, வாய்ந்த - பொருந்திய, பொற்பு உறு - அழகானமிக்க, நெடிய - நீட்சியையுடைய, வேல் கண் - வேல்போன்ற கண்களையுடைய, பூங்கொடி - தமயந்தியினது, வதுவை வேட்டு - விவாகத்தை விரும்பி, பற்பல தேயம் வேந்தர் - அநேகமாகிய தேசங்களிலிருக்கும் அரசர்கள், தொகுதலில் - கூட்டங்கொண்டிருத்தலால், பாடை தேர்வான - (எல்லோர்க்குஞ்) சொற்பொருள் தெரியும்பொருட்டு, அற்புடன் - அன்புடனே, எவரும் - எவர்களும், தேவ பாடையின் - கீர்வாணபாஷையால், அறைவர் - பேசிக்கொள்வார்கள், எ-று. மாதோ - அசை.

(க - து.) யாவருந் தேவபாஷையிற் பேசுவார்கள் என்பதாம்.

அதிகசவுந்தரியமுள்ள தமயந்தியினது விவாகத்தை விரும்பி அநேகதேசத்து அரசர்கள் கூடியபடியால் தேசங்கடோறும் பாஷைகள் வேறுதலின் அவைகளாற் பேசினால் ஒருவர்கொருவர் உரைக்கும் வார்த்தைக்குப் பொருளறியக்கூடாதென்று கீர்வாண பாஷையால் பேசினரென்க. ஆதலாலே அதுவே பாஷைகளுக்கு மூலமும் எந்தத் தேசங்களுக்கும் பொதுவுமென்பது பெற்றும் அன்பு அற்பு எனத் திரிந்தது. (எ)

[இதனுல் அமங்குலமாகிய ஒலியின்மையுஞ்
சொல்லப்படுகின்றது.]

**கழைசுளிகளிநல்யானைபிளிறொலிகமஞ்சூல்வான**
**மழையொலியவியப்பமுமவார்முரசோதைதேவர்**
**முழவொலிதடந்தேர்ச்சிலலிமுழக்கொலிபுடவிபோர்த்த**
**வெழுகடலொலியுமெஞ்சவெங்கணுமொலித்தவன்றே.**

(இ - ள்.) கழை சுளி - கரும்புகளை முறிக்கின்ற, களி - களிப்பையுடைய, நல் யானை - நல்ல யானைகளினது, பிளிறு ஒலி - ஆரவாரமாகிய சத்தமும், கமம் சூல் - நிறைந்த கருப்பத்தையுடைய, வானம் - ஆகாயத்திற் சஞ்சரிக்கும், மழை ஒலி - மேகத்தினுடைய சத்தமானது,

அவிய - கெடும்படி, பம்பும் - நெருங்கிய, வாா - வாரையுடைய, முரசு ஓதை - பேரிகைகளின் சத்தமும், தேவா முழவு ஒலி - தேவதுந்துமி களின் சத்தமும், தடம் தோ - பருத்ததோளினுடைய, சில்லி - உருளை கள், முழக்கு ஒலி - முழக்குகின்ற சத்தமும, புடவி போாத்த - பூமி யைச்சூழ்ந்த, எழு கடல் ஒலியும் - ஏழுகடலின்ஓசையும், எஞ்ச - குறை யும்படி, எங்கணும் - எவ்விடத்தும், ஒலித்த - சத்தித்தன, எ-று.

(க - து.) யானைகள் சத்தமும், பேரிகைகள் சத்தமும், தேவ துந்துபிகள சத்தமும், தேவாகள சத்தமும், கடலொலிமங்க வெங் குஞ் சத்தித்தன எனபதாம.

யானைமுதலியவற்றின் பேரொலியைச்சொல்லவே "ஒருமொழி யொழிதன்னினங் கொளற்குரித்தே" என்பதனால் அளவற்ற மற்றைச் சிற்றொலிகளுங் கொளக. இவ்வொலி எவ்விடத்து மிருத்தலால் கரை யருகின்மாத்திரம் ஒலிக்கும 'எழுகடலொலிக வொஞ்ச' வென்றாா. (அ)

[இதனால் அங்குண்டான இருளும் ஒளியுஞ்
சொல்லப்படுகின்றது.]

அகலிருவிசும்புபோாத்தவணிமதிககவிகையீட்டம
பகலொளிகரப்பவெங்குமபாயிருளபரப்புமன்னா
நகைமணிமகுடகோடிநள்ளிருடபிழமபைநககி
யிகலிவானிரவியோடவிளவெயிலெறிககுமாதோ

(இ - ள.) அகல் இரு விசும்பு போாதத - அகன்ற பெரிய ஆகா யததை மூடிய, அணி மதி கவிகை - அழகிய சந்திரவட்டககுடை களினுடைய, ஈட்டம் - கூட்டஙகள, பகல் ஒளி கரபப - சூரியபபிர காசம மறைய, எஙகும் - எவவிடததும, பாய இருள - பரவிய விருளை, பரபபும் - பரவச்செயயும, மனனா - அரசாகளுடைய, நகை மணி- ஒளியையுடைய ரததினஙகளபதிதத, மகுட கோடி - அநேகமகுடஙகள், நள இருள பிழமபை நககி - மிகுந்த விருடபிழம்பை உண்டு, இகலி- பகைதது, வான இரவி ஓட - ஆகாயத்திலிருககும சூரியனவவோ டும்படி, இள வெயில் - இளஙகதிரை, எறிககும - வீசும், எ-று. மாது, ஓ - அசை.

(க - து.) குடைகளகூட்ட மிருளைககொடுக்கும், மகுடகூட்டம் ஒளியைக்கொடுக்கும் எனபதாம்.

அகல், இரு என்னும் அடைமொழிகளால் விசும்பின் அகறசியும் பெருமையுந் தோனறின. அபபடிபபட்ட விசும்பையுங் குடைகள் மறைக்க அதனாலுளதாம இருளையோட்டற்கு அரசா மகுடஙகளிற் பதிதத மணிகளில் ஒவவொன்றே போதுமானதாயிருக்க அபபடிப் பட்ட மணிகள் பலவற்றையுடைய அநேக மகுடகோடிகளுக்கு இவ் விருள் போதாதென்பது தோன்ற, விழுங்கியெனாது நக்கியென்றாா.

[இதனால் கொடிகளுங் குடைகளுஞ் சொல்லப்பட்டது.]

**வெங்கதிர் நெற்றி தோய்ந்து விளங்குபொற் கொடி யீ னீட்ட, மங்குல்வா னிழியுந் தெய்வ மடந்தையர் வடிவு**

காட்டக், கொங்கலர் தெரியல் வேந்தர் கொற்றவெண் கவிகை யீட்டந், திங்களி னழகு காட்டத் திருநகர் பொ லிந்த தன்றே

(இ - ள்.) வெம் கதிர் - சூரியனுடைய, நெற்றி தோய்ந்து - நெற் றியிற்படிந்து, விளங்கு - பிரகாசிக்கின்ற, பொன் கொடியின் ஈட்டம் - பொன்னாற்செய்த கொடிகளினுடைய கூட்டங்கள், மங்குல் - மேகங் களையுடைய, வான் இழியும் - ஆகாயத்தினின்று இழிகின்ற, தெய்வமடந் தையர் - தெய்வமாதருடைய, வடிவு காட்ட - வடிவினைத் தெரிவிக்க, கொங்கு - வாசமிகுந்த, அலர் தெரியல் - மலர்மாலையணிந்த, வேந்தர் - அரசர்களது, கொற்றம் வெள் கவிகை - வெற்றியையுடைய வெள்ளிய குடைகளினுடைய, ஈட்டம் - கூட்டங்கள், திங்களின் - சந்திரனது, அழகு காட்ட - அழகைத்தெரிக்க, திருநகர் - குண்டினபுரமானது, பொலிந்தது - பொலிவையடைந்தது, எ - று. அன்று - ஏ - அசைகள்.

(க - து.) கொடிகள் கூட்டம் தேவமாதர்களைபோலும், குடை கள் கூட்டஞ் சந்திரனைபோலும் வடிவுகாட்டக் குண்டினபுரஞ் சிறப் புற்றது என்பதாம்.

கொடிகள் அநேக அரமபையர் வடிவங்களையும் குடைகள் அநேக சந்திரர் வடிவங்களையும் காட்டுதலால் விவாகத்திற்குச் சிறப்பு மங்கை யரால்லன்றி வேறில்லை யாதலாலும், ஒரு சந்திரனே வுலகம் மகிழ்ச்சி யடையும்போது அநேக சந்திரர் ஏககாலத்தில் ஒரு நகரிற்றோன்றினு லெவ்வளவு சிறப்புண்டாகுமோ மாதலாலும் 'திருநகர் பொலிந்தது' என் ருர். (௪0)

[இதனால் அரசர்க்குந் தேவர்க்கும் வேற்றுமைதோன்றுமை சொல்லப்படுகின்றது.]

குருமணி யிமைக்கும் பைம்பொற் குடைநிழல் வெ யிலை யோட்ட, மருமலி நறிய மென்பூ மாலைவா டாமை யானுந், திருநகர்ச் செவ்வி நோக்கி யிமைப்பிலர் திரித லானு, மரசரோ டமரர் தம்மை யறிவரி தாய தன்றே.

(இ - ள்.) குரு மணி இமைக்கும் - நிறம்பொருந்திய ரத்நங்கள் பிரகாசிக்கின்ற, பைம்பொன் குடை நிழல் - பசிய பொன்னாற்செய்த குடைகளினுடைய நிழல்கள், வெயிலை ஓட்ட - வெயிலைத் துரத்த, (அதனால்) மரு மலி - வாசம்பொருந்திய, நறிய - வாசனையுள்ள, மென் பூ மாலை - மெல்லிய பூமாலைகள், வாடாமையானும் - வாடாமையா லும், திரு நகர் - குண்டினபுரத்தினுடைய, செவ்வி நோக்கி - அழ கைப்பார்த்து, இமைப்பிலர் - கண்க ளிமையாதவர்களாய், திரிதலா னும் - திரிகின்றபடியாலும், அரசரோடு - அரசர்களுடனே, அமரர் தம்மை - தேவர்களை, அறிவு அரிதாயது - பகுத்தறித லரிதாயது, எ - று. அன்று, ஏ - அசை.

(க - து.) குடைகளினிழலால் மாலைகள் வாடாமையாலும் நகரத் தை இமையாது பார்த்தலாலும் அரசர்களென்றுந் தேவர்களென்று மறியப்படாது என்பதாம்.

மாலைவாடுதல் கண்ணிமைத்தல் ஆகிய இரண்டுசெய்கையால் தேவர்க்கு வேற்றுமைப்பட்டிருந்த அரசர் இப்பொழுது அவ்விரண்டு மில்லாமையால் வேற்றுமை தோன்றிலரென்க. அரசர்க்கு மமரர்க்கும் வேற்றுமை தோன்றாமையால் மறைவணி. (௧௧)

[இதனால் மற்றைத்தேயங்களின் பொறை யொழிவு சொல்லப்படுகின்றது.]

**மாங்குயி லனைய தீஞ்சொல் வடுவகிர் பொருவும் வே ற்கட், பூங்கொடி வதுவை வேட்டுப் புவியினில் வேந்த ரெல்லாந், தேங்கமழ் தெரியல் வீமன் றிருநக ரிறுத்த றன்னா, லாங்கவர் தேயம் யாவு மரும்பொறை யுயிர்த்த வன்றே.**

(இ - ள்.) மா குயில் அனைய - மாங்குயிற் சொல்லையொத்த, தீ சொல் - தித்திக்கின்ற சொல்லையும், வடு வகிர் பொருவும் - மாவடுவின் பிளப்பையொத்த, வேல் கண் - வேல்போன்ற கண்களையுமுடைய, பூங்கொடி - தமயந்தியினது, வதுவை வேட்டு - விவாகத்தை விரும்பி, புவியினில் வேந்தர் எல்லாம் - பூவுலகத்திருக்கும் அரசர்களெல்லாரும், தேன் கமழ் தெரியல் வீமன் - வாசனை கமழுகின்ற மலர்மாலையை யணிந்த வீமராசனது, திரு நகர் - குண்டினபுரத்தில், இறுத்தல் தன்னால்- வந்து தங்கியபடியால், அவர் தேயம் யாவும் - அவர்கள் தேசமெல்லாம், அரு பொறை - பொறுத்தற்கரிய சுமையை, உயிர்த்த - நீங்கின, எ - று

(க - து.) குண்டினபுரமொன்றே சுமைபெற்றது, மற்றத் தேசங்கள் சுமையற்றன என்பதாம்.

வீமன் அநேகர் வருத்தங்களுக்கு இடங்கொடுத்து அவர்களை மகிழ் வுறச் செய்வதுபோல் அவன் தேசமும் அநேகதேசத்திலு முள்ளவர்க்கு இடங்கொடுத்து அவர்கள் இளைப்பாறி மகிழவுறச்செய்த தென்பது கருத்து. (௧௨)

[இதுமுதல் நாலுபாட்டுக்களால் தமயந்தி சுயம்வரத்திற்கு வாயுமுதலிய நால்வரும் வாராமைக்குக் காரணஞ் சொல்லத் தொடங்கி இப்பாட்டால் வாயு வாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

**இழைபரந்திமைக்குமலகுலின்கனித்துவர்வாயேழை மழைமதர்நோக்கிற்கஞ்சிமறியுமானேறுமாதின் விழைதருநகரிற்றூண்டவெருவிமீண்டேகுமாற்றாற் கழிபெருங்காதல்கூர்ந்துங்காற்றிறைவரவுதீர்த்தான்.**

(இ - ள்.) இழை பரந்து - ஆபரணங்கள் பரவி, இமைக்கும் அல்குல் - பிரகாசிக்கின்ற அல்குலையும், இன் கனி - இனிய (கொவ் வைக்) கனிபோன்ற, துவர் வாய் ஏழை - செவ்வாயையுமுடைய தமயந்தியது, மழை மதர் நோக்கிற்கு அஞ்சி - குளிர்ச்சிபொருந்திய களிப்பை யுடைய பார்வைக்குப் பயந்து, மறியும் - மடங்குகின்ற, மான் ஏறும் -

ஆண்மானும், மாதின் - அம்மங்கையினது, விழைதரு - விரும்புகின்ற, நகரில் தூண்ட - குண்டினபுரத்திற்குச் செலுத்த, வெருவி - பயந்து, மீண்டு ஏகும் ஆற்றால்-திரும்பிப் போகின்ற படியால்,கழி பெரு காதல் கூர்ந்தும் - மிகுந்த பேராசையை யடைந்தும், காற்று இறை - வாயு வானவன், வரவு - வருதலை, தீர்ந்தான் - நீங்கினான், எ-று.

(க - து.) தமயந்தி கண்ணைக்கண்டு தானேறு மான்வாகனந் திரும்பிவிடுகிறபடியால் வாயுதேவன வாராதிருந்தான என்பதாம்.

நாம் விவாகத்திற்குச் செல்லவெழுந்ததற்கு அமங்கலமாக நம தூர்தியே தடைசெய்தலால் நமக்கு அத்தமயந்தி மாலையிடுவதும் அவ்வாறுமென்று வாயுவானவ னினறனனெனக. (௩௩)

[இப்பாட்டால ஈசன வாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகினறது.]

ஐயரிபரந்துமைதோய்ந்தம்பலேத்திகலும்வேற்கட்
டையலோர்பாதியாயதன்மையாற்றனதுபைம்பொற்
செய்யதாள்பெயர்ப்பவன்னாள்சிறடியெழாமையாலே
மையணிகண்டத்தோனுமன்றலுக்கெழுந்திலானே.

(இ-ள்.) ஐ அரி பரந்து - அழகிய செவ்வரிபரந்து, மை தோய்ந்து - அஞ்சன மணிந்து, அம்பு அலைத்து - அம்புகளை யலைவுசெய்து, இகலும் - பொருவுகின்ற, வேல் கண் தையல் - வேல்போன்ற கண்களையுடைய உமையானவள், ஓர் பாதி ஆய தன்மையால் - வாமபாகத்தி லிருக்கின்றபடியால், தனது - தனனுடைய, பைம் பொன் - பசிய பொன் போன்ற, செய்ய தாள் - சிவந்தபாதங்களை, பெயர்ப்ப - தூக்க, அன்னாள் சிறு அடி-அவ் வுமாதேவியினது சிறிய பாதங்கள், எழாமையாலே- எழுதலில்லாமையால், மை அணி கண்டத்தோனும் - ஈசுரனும், மன்றலுக்கு - (தமயந்தியின) விவாகத்திறகு, எழுந்திலான் - புறப்பட்டிலன், எ-று. ஏ-அசை.

(க - து.) தன்னிலொரு பங்காகிய உமையவள்பாதம் எழாமையாலே சிவன வாராதிருந்தான என்பதாம்.

சிவன் மனமதனை யெரிப்பினும் காமமுள்ளவ னெனபதுதோன்ற 'தையலோர்பாதியாய தனமையால்' என்றும், உமாதேவியைத் தமயந்தி விவாகத்திறகுச் செல்லல்வேணடும் நீயும் வாவென வாய்திறந்துரைக்கின முனியுமெனறு குறிப்பித்தமை தோனற 'தனதுதாள் பெயர்ப்ப' எனறும், மாற்றவள வருதற கொருவரு முடன்படாரென் பதுதோனற 'அன்னாள் சிறடியெழாமையால்' எனறும், விடத்தையுண்டு தேவரைப் பரந்த வல்லமையுறறோனாயினுந் தன் மனைவிக்குச் சமாதானஞ் சொல்லிப்போதற் கரிதாய நின்றனனென்பது தோனற 'மையணிகண்டத்தோனு மன்றலுக்கெழுந்திலான்' என்றும் சொல்லினார். உத்தமநாயகனானவன் தனக்கொரு பொருளில் அதிக விழைவிருந்தாயினும் தலைவிக்கு அதிலே வெறுப்புள்ளதாகத் தோன்றுமாயின் விடுப்பனென்பது கருத்து. (௩௪)

[இப்பாட்டால் குபேரன் வாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

உருவுகண்டுவப்பதன்றியோடரித்தடங்கணல்லார்
திருவினுங்குலத்தினுனுஞ்செய்கிலரார்வமென்று
மருவுதன்வடிவின்குற்றமனக்கொளாவயங்குபைம்பொற்
குழைகழலிலங்குநோன்றாட்குபேரனும்வந்திலானே.

(இ - ள்.) உருவு கண்டு உவப்பது அன்றி - அழகுள்ள வடிவைப் பார்த்து மகிழ்வதல்லாமல், ஓடு - ஓடுகின்ற, அரி - செவ்வரிபரந்த, தடம் கண் - விசாலம்பொருந்திய கண்களையுடைய, நல்லார் - மங்கையர்கள், திருவினும் - செல்வத்தினாலும், குலத்தினுனும் - உயர்ந்த குலத்தினாலும், ஆர்வம் செய்கிலர் என்று - ஆசை செய்யமாட்டார்க ளென்று, தன் வடிவின் - தனதுடைய தேகத்தில், மருவு - பொருந் திய, குற்றம் - குற்றத்தை, மனம் கொளா - மனத்திலே கொண்டு, வயங்கு - பிரகாசிக்கின்ற, பைம்பொன் - பசும்பொன்னாற்செய்த, குழை கழல் - சத்தத்தையுடைய வீரகழல்கள், இலங்கு - விளங்கு கின்ற, நோன் தாள் - பெருமைபொருந்திய பாதங்களையுடைய, குபே ரனும் - குபேரனும், வந்திலான - வந்திலன, எ-று. ஏ - அசை.

(க - து.) குபேரன் குருடனுகையால் அக்குற்றத்தால் வாரா திருந்தான் என்பதாம்.

தான் செல்வத்திலுங் குலத்திலு மிக்கவனுயிருப்பினும் மங்கையா அழகுள்ளவனை விரும்புவதன்றி மற்றையனை விரும்பாராகையால் தன் வடிவின் குற்றமாகிய கண்தெரியாமை மறைக்கக்கூடாத குற்றமாகை யால் அதுகண்டு நம்மை விழையாளென்று குபேரன் தமயந்தி சுயம் வரத்திற்கு வந்திலனென்க. (கரு)

[இப்பாட்டால் நிருதி வாராமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

விரைகமழ் தருவி னீழல விண்ணவ ரிடத்து மார்வம், புரிகில ளனன்மே லன்பு பூண்டனள் புலம்பு கொண்ட, முருகவிழ் நறுமென் கூந்தன் முகிழ்முலைத் துவர் வாய்ப் பேதை, நிருதரை விழையா ளென்ன நிருதியும் போந்தி லானே.

(இ - ள்.) விரை கமழ் - வாசங் கமழ்கின்ற, தருவின் நீழல் - ஐந்தருவினிழலி லிருக்கின்ற, விண்ணவரிடத்தும் - தேவர்களிடத்தி லும், ஆர்வம் புரிகிலள் - ஆசை செய்கிலள்; நளன்மேல் - நளனிடத்தில், அன்பு பூண்டனள் - அன்புவைத்தவளாகி, புலம்பு கொண்ட - இரங்கு தலைக்கொண்ட, முருகு அவிழ் - தேனொழுகுகின்ற, நறு மெல் கூந்தல் - நறிய மெல்லிய குழலையும், முகிழ் முலை - அரும்பையொத்த முலையை யும், துவர் வாய் - செவ்வாயையுமுடைய, பேதை - தமயந்தியானவள், நிருதரை - இராக்கதரை, விழையாள் என்ன - இச்சிக்கமாட்டாளென்று, நிருதியும் - நிருதியென்பவனும், போந்திலான் - வந்திலன், எ-று. ஏ - அசை.

(க - து.) தேவர்களை விரும்பாதவள் இராக்கதர்களை விரும்பா ளென்று நிருதியும் வாராதிருந்தான் என்பதாம்.

முன் சொல்லப்பட்ட மூவருக்கு முண்டாகியதடை இவனுக் கில்லாதிருந்தும் இவன் வாராதத் அகத்துக்குணம் பலவிருப்பினும் மாதா முதற்கண் வடிவழகையே விரும்புவராதலின அவ்வழகுள்ள இந்திரன் முதலியோரை யிகழ்ந்து நளனை விழைந்துள்ள தமயந்தி அரக்கனை னுங் குலம்பற்றி மாலைசூட்டாள் ஆயினை அது பெறுதுவரின் அதினும் மிக்க அவமான மில்லையென்று தன டேரறிவாற குறித்து நிருதி வாரதிலனென்க. விவேகிகள் சிறந்ததாயினும் அவமானப்படுங் காரியத்தைக்குறித்துச் சொல்லானென்பது கருத்து. (கசு)

[இதனால் இந்திரன்முதலிய நாலவரும் வருதல் சொல்லப்படுகின்றது.]

**பொன்னகர் புரக்கும் வேந்தும் பொங்கழற் கிறையு மூந்நீர், மன்னனுந் தறுகட் பேழ்வாய் மறலியு மடமா னோக்கி, நன்னுத னளனுக கன்றி நறுந்தொடை சூட்டா ளென்ன, வன்னவ னுருவு தாங்கி யணிநகர் மேயினாரே.**

(இ - ள்.) பொன் நகர் புரக்கும் வேந்தும் - இந்திரனும், பொங்கு அழற்கு இறையும் - அக்கினிபகவானும், மூந்நீர் மன்னனும் - வருணனும், தறு கண் பேழ் வாய் மறலியும் - யமனும், மடம் மான் நோக்கின்- இளமான பார்வையையொத்த பார்வையையுடைய, நல் நுதல் - தமயந்தியானவள், நளனுக்கு அன்றி - நளனுக்க கல்லாமல், நறு தொடை - நறியமலர்மாலையை, சூட்டாள் என்ன - தரிக்கமாட்டாளென்று, அன்னவன் உருவு தாங்கி - அந்த நளனுடைய (வடிவையொத்த) வடிவத்தைக்கொண்டு, அணி நகர் - அழகிய நகரத்தில், மேயினார் - பொருந்தினார், எ-று. ஏ - அசை.

(க - து.) இந்திரன், அக்கினி, வருணன், யமன், இவர்கள் நளனுருக்கொண்டு குண்டினபுரத்துக்கு வந்தார்கள் என்பதாம.

தறுகண் - அஞ்சாமை, பேழ்வாய் - பெரியவாய்.

நியாயமாகத் தம்முடைய பெருமைகளைத் தூதர்கள் மூலத்தில் விரும்பாத தமயந்தியை வஞ்சித்தாவது பெறல்வேண்டுமெனனுங் கருத்தால் மனிதவடிவங்கொள்ளல் தமக்கிழிவேனும் இந்திரன்முதலிய நால்வரும் நளன வடிவுகொண்டு வந்தனரென்க. காமமுள்ளவர்கள் அதன் விஷயத்தில் எதையுஞ் செய்வார்களென்பது கருத்து. (கஎ)

[இதனால் நளன்வருதல் சொல்லப்படுகின்றது.]

**கூற்றெனக் கொல்லும் வேழங் கொடியணி கொடிஞ்சித் திண்டேர், பாற்றிரைக் கவரி நெற்றிப் பண்ணமை கலினப் பாய்மா, மாற்றருஞ் சீற்றத் துப்பின் வரிசிலை யுழவரீட்ட, நாற்றிசைப் பரப்பும் போர்ப்ப நாமவே னளனும் வந்தான்.**

(இ - ள்.) கூற்று என - யமனென்று சொல்லும்படியாக, கொல்லும் வேழம் - கொலை செய்கின்ற யானைகளும், கொடி அணி கொடிஞ்சி - கொடிகளணிந்த மேனமொட்டையுடைய, திண் தோ - வலிமைபெற்ற தோகளும், பால் திரை - பாலினுடைய அலைகள்போன்ற, கவரி - சாமரைகள்கட்டிய, நெற்றி - நெற்றியையுடைய, பண் அமை - கல்லணையமைந்த, கலினம் - கடிவாளம்பூண்ட, பாய் மா - தாவுகின்ற குதிரைகளும், மாற்று அரும் - நீக்குதற்கரிய, சீற்றத் துப்பின் - கோபமிகுந்த, வரி சிலை - நெடியவில்லையுடைய, உழவா ஈட்டம் - காலாள்கள் கூட்டமும், (ஆகிய இந்நால்வகைச் சேனைகளும்) நால் திசை பரப்பும் போரப்ப - நாலுதிசைகளின பரபபெல்லாம மூடிககொண்டுவர, நாமம் வேல் - அச்சத்தைத தருகினற வேறபடையையுடைய, நளனும் - நளமகாராஜனும், வந்தான - வநதனன, எ-று.

(க - து.) யானைகளும், தோகளும், குதிரைகளும், காலாள்களும், சூழ்ந்துவர நளமகாராசனும வநதான எனபதாம்.

இநதிரன முதலிய தேவாகளே தமயநதியை விரும்பிய தன்னைத் தூதாகவிடுததும வேறுதூதிகளை யனுபபியும தடைசெய்ததுமன்றிப பினனுந தனதுருவங்கொணடு வருசிபபதற்கு வருவதை யறிந்தும் நளனனவன "ஊழையு முபபககங காணப ருலைவின்றித, தாழா துஞற்று பவா" எனபதால தாழாது செலலுந திறததினனாதலின நளனுமென உயாவு சிறபபும்மை கொடுககபபடடது. (கஅ)

[இதனால் சுயம்வரததிறகு வநதவரை வீமன எதிரகொள்ளல் சொலலபபடுகினறது.]

உலகொரு மூன்றி னுள்ள வொளிமுடி மன்ன ரெல்
லா, மிலகுபொற் குடுமி வான்றோ யெயிற்புறத் திறுத்தா
ராக, வலகிலவெஞ் சேனை சூழ வரும்பெறற் சுற்றத் தோ
டும், விலகிவில லுமிழும பைம்பூண் விதர்ப்பர்கோ னெ
திர்கொண் டானே.

(இ - ள்.) உலகு ஒரு மூனறின உள்ள - திரிலோகங்களிலுமுள்ள, ஒளி முடி மனனா எல்லாம - காநதியையுடைய மகுடத்தை யணிந்த அரசாகளெல்லாரும், இலகு பொன குடுமி - பிரகாசிக்கின்ற பொன்னாலாகிய சிகரங்களையுடைய, வான தோய எயில் புறதது - ஆகாசமளாவிய மதிற்புறத்திலே, இறுததாா ஆக - தங்கினராக, (அதுகேட்டு) அலகில் - அளவற்ற, வெம சேனை சூழ - வெவவிய சேனைகள் சூழ்ந்துவர, அரு பெறல் சுற்றத்தோடும் - கிளைஞருடன், விலகி வில் உமிழும் - வீசி ஒளியை உமிழ்கினற, பைம்பூண் - பசிய ஆபரணத்தையுடைய, விதாப்பாகோன - வீமராஜன், எதிரகொண்டான் - எதிரகொண்டனன், எ-று. ஏ - அசை.

(க - து.) திரிபுவனத்தரசாகளும் வந்திருக்கச் சுற்றத்தாரோடு வீமராஜன் எதிரகொண்டுபோனன் என்பதாம்.

பலவித உபசாரங்களினும் எதிரகொள்ளுதல் முற்பட்ட தாதலின் அங்குவந்த அரசாகளுக்கு வீமராசன் அதனைச் செய்தனனென்க. ()

[இதனால் வீமன் அவர்களுக்குச் சிறப்புச்செய்தல்
சொல்லப்படுகின்றது.]

**விரைசெறியலங்கன்மாலைவிண்ணவர்விஞ்சைமன்ன**
**ருருகெழுமுரகவேந்தரோங்குநீருடுத்தஞாலத்**
**தரசிளங்குமரரோடுமளவளாய்முகமன்கூறி**
**வரிசையின்வழாமைநோக்கிவான்சிறப்பியற்றினானே.**

(இ - ள்.) விரை செறி அலங்கல் மாலை - வாசமிகுந்த மலர்மாலையையணிந்த, விண்ணவர் - தேவர்கள், விஞ்சை மன்னர் - வித்தியாதர வேந்தர், உரு கெழும உரகவேந்தர் - வடிவுள்ள நாகவேந்தர், ஓங்கு - உயர்ந்த, நீர் உடுத்த ஞாலத்து - கடலாற்சூழப்பட்ட பூமியிலுள்ள, அரசு இளங் குமரரோடும - இராஜகுமாரரோடும், அளவளாய் - கலந்து, முகமன் கூறி - உபசாரவார்த்தைகளைச்சொல்லி, வரிசையின் வழாமை - கிரமத்தினில் தப்பாமல், நோக்கி - ஆலோசித்து, வான் சிறப்பு - மேலாகிய சிறப்பை, இயற்றினான் - செய்தான், எ-று. ஏ - அசை.

(க - து.) தேவர்கள் வித்தியாதரர் நாகலோகத்தரசர் பூவுலகத்தரசர் இவர்களுக்கு வீமராஜன் முறைப்படி சிறப்புச்செய்தான் என்பதாம.

தன்னின் மிக்கோர்க்குச் செய்யும் எழுவகை மரியாதைகளுள் பிரியினுடங்குசேற லொழிந்தது, இருப்பெழுகை, விரைந்துபோதல், எதிர்கொள்கை யென்னு மூன்றும முற்பாட்டிலும், தவிசினிடையிருத்தல், பூசைசெய்தல, இன்சொலர்தியர் லுவப்புசசெயல் என்னு மூன்றும் இப்பாட்டிலும் அடங்குதல காணக. (௨0)

[இதனால் அரசர்கள பகற்பொழுது போக்கல்
சொல்லப்படுகின்றது.]

**தோட்டலர்மாலைநாற்றித்துறக்கமோடுறழச்செய்த [பத**
**வீட்டகந்தோறுமபைம்பொன் விளங்கிழைசெவ்விவாய்ப்**
**தீட்டியவுருவுநோக்கித்தேறல்கொப்புளித்துமாந்தும்**
**பாட்டளித்தாமவேந்தர்பகற்பொழுதாற்றினாரோ.**

(இ - ள்.) தோடு அலர் மாலை நாற்றி - இதழ்களையுடைய மலரால் தொடுத்த மாலைகளைத் தொங்கக்கட்டி, துறக்கமோடு உறழ் - தெய்வலோகத்துடனே ஒக்கும்படி, செய்த - செய்யப்பெற்ற, வீட்டகந்தோறும் - வீடுகளினிடந்தோறும, பைம்பொன் - பசிய பொன்னினால், விளங்கு இழை - தமயந்தியினது, செவ்வி வாய்ப்ப - அழகுபொருந்த, தீட்டிய, எழுதிய, உருவு நோக்கி - பதுமைகளின் வடிவங்களைப்பார்த்து, தேறல் கொப்புளித்து - தேனைக் கொப்புளித்து, மாந்தும் - உண்ணுகின்ற, பாட்டு - இசைகளைப் பாடுகின்ற, அளி - வண்டுகள் மொய்த்த, தாமம் வேந்தர் - மாலையை யணிந்த வரசர்கள், பகல் பொழுது - பகற்காலத்தில், ஆற்றினார் - காமநோயைப் பொறுத்திருந்தார்கள், எ-று. ஏ - அசை.

(க - து.) சுவர்க்கத்திற் கொப்பாகிய வீடுகளி னிடங்கள்தோறும் எழுதப்பட்ட தமயந்தி திருவுருவத்தை அரசர்கள் பார்த்துப் பகற் பொழுதுபோக்கிற் காமத்தைப் பொறுத்திருந்தார்கள் என்பதாம்.

இவ்வரசர்கள் காமந் தலைக்கொண்டவர்க ளாதலால் அழகினால் தாம் விழைந்த தமயந்திக் கொப்பாகிய பதுமைகளைப் பார்த்துப் பகற் பொழுதில் தமது காமநோயைச் சகித்துக்கொண் டிருந்தனரென்க. ஒப்புமை நோக்கல், சித்திரந்தீட்டல், கனவிற் காண்டல், அவர் மெய் யுற்றதைத் தீண்டல் இந்நான்கும் காமநோய்க்குப் பரிகாரமாம். "கூடும் பிரிவினிலுங் கூடாப் பிரிவினிலு, மோடு மன்■ நோகாட்சி யோவியத்தி—னுடல் - கனவவாமெய்ப் பூண்டவற்றைத் தீண்டலென் பர காமத், தினையுமவாக் குறற மருந்தே" இதனாலறிக. கூடும்பிரிவு- ஒரு நிமித்தம் பற்றிப் பிரிதல், கூடாப்பிரிவு - இறத்தல், இது வட நூலிறகண்டு மொழிபெயர்க்கப்பட்டது. 'விளங்கிழை செவ்விவாய்ப் பத்தீட்டிய வுரு' எனபதற்குப் பிரகாசிக்கின்ற ஆபரணங்கள் அழகு பொருந்த எழுதப்பட்ட சித்திரமென்பாருமுளர். விளங்கிழை செவ்வி வாயப்புவென உவமானமாகிய தீட்டிய வுருவங்களை உவமேயமாகக் கூறலால் எதிர்நிலையணி. (உக)

[இதனால சூரியாஸ்தமயஞ் சொல்லப்படுகின்றது.]

சேயுயர்விசும்பிறறேவர்தெணடிரைப்பரவைசூழ்ந்த
மாயிருஞாலங்காக்குமன்னவருரகருற்ற
காயழறகாமவெந்தீக்கனறறுமென்றஞ்சினான்போற் [ன்.
பாயிருளுலகம்போர்ப்பப் பகலசெயவானகடலுளாழ்ந்தா

(இ - ள்.) சேய் உயர் விசும்பில் - மிகவுமுயர்ந்த தெய்வலோகத் திலிருக்கும், தேவர் - தேவர்களும், தெள் திரை பரவை சூழ்ந்த - தெள் ளிய அலைகளையுடைய கடலாற் சூழப்பெற்ற, மா இரு ஞாலம் காக் கும் மன்னவர் - மகத்தாகிய பெரிய பூமியைப் புரக்கின்ற அரசர்க ளும், உரகர் - நாகவேந்தர்களும, உற்ற - (ஆகிய இவர்கள்) அடைந்த, காய் அழல் காம வெம் தீ - சுடுகின்ற வெப்பம பொருந்திய காமாக்கினி, கனற்றும் என்று - தன்னைச் சுடுமென்று, அஞ்சினான் போல் - பயந்த வன்போல், பாய இருள் - பரவிய இருளானது, உலகம் போர்ப்ப - உலகத்தை மூடிக்கொள்ள, பகல் செயவான் - சூரியனானவன், கட லுள் - மேற்றிசைக் கடலுள், ஆழ்ந்தான் - அழுந்தினான், எ-று.

(க - து.) தேவர்களும் அரசர்களும் நாகவேந்தர்களும் அடைந்த காமாக்கினி தன்னைச்சுடுமென்று சூரியன் அஸ்தமனமாயினான் என்ப தாம்.

வெப்பத்தையுடைய சூரியனையும் அஞ்சச் செய்தலால் காமத்தீ அவனிலும் மிக்கதென்பது கருத்து. அஞ்சினான்போ லெனக் குறித்த லால் தற்குறிப்பணி. (உஉ)

[இதனால் இருள்பரவாமைக்குக் காரணஞ் சொல்லப்படுகின்றது.]

**விரிகதிர்மௌலிவிண்ணோர்மெய்யொளிபரத்தலானு**
**மரசிளங்குமரர்மார்பிலணிவெயிலுமிழ்தலானு**
**முரகர்தஞ்சுடிகையுச்சியொளிர்மணியிமைத்தலானும்**
**பரிதிமேற்கடலுளாழ்ந்தும்பாயிருள்பரந்ததின்றே.**

(இ - ள்.) விரி கதிர் மௌலி - விரியப்பெற்ற கிரணங்களையுடைய மகுடங்களைத்தரித்த, விண்ணோர் - தேவர்களுடைய, மெய் ஒளி - தேககாந்திகள், பரத்தலானும் - பரவுதலாலும், அரசு இளம் குமரர் மார்பில் அணி - இராஜகுமாரர்கள் மார்பிலிருக்கும் ஆபரணங்கள், வெயில் உமிழ்தலானும் - ஒளியைக் கொப்புளித்தலாலும், உரகர் சுடிகை உச்சி - நாகவரசர்களுடைய முடியின்மேல், ஒளிர் மணி - விளங்குகின்ற ரத்நங்கள், இமைத்தலானும் - பிரகாசித்தலாலும், பரிதி - சூரியனானவன், மேல் கடலுள் ஆழ்ந்தும் - மேற்கடலு ளமுழ்ந்தியும், பாய் இருள் - பாய்கின்ற இருளானது, பரந்தது இன்று - பரந்ததில்லை, எ - று. ஏ - அசை.

(க - து.) தேவர்கள் சரீரகாந்தியாலும் அரசர்கள் மார்பினுபர ணங்களாலும் நாகவேந்தர்கள் சிரோரத்தினங்களாலும் சூரியன் மறைந்தும் இருள்தோற்றவில்லை என்பதாம்.

மெய்யொளி பரத்தல், அணி வெயிலுமிழ்தல், ஒளிர்மணியிமைத் தல், ஆகிய பிரகாசங்கள் சூரியனை பிரகாசித்தல்போ லிருந்தனவென்பது கருத்து. மெய்யணி மணிகளை இருள் பரவாமைக்குக் காரணமா கச் சொல்லப்பட்டமையால் கூட்டவணி. (உஅ)

[இதனால் இரவுபகல் தோன்றாமை சொல்லப்படுகின்றது.]

**மையவாங்கரியகூந்தல்வாள்கிடந்தனையவுண்கட்**
**பையரவல்குற்செவ்வாய்ப்பனிமொழிவதுவைவேட்டு**
**வெய்யசெங்கதிரினோடும்வெண்மதியுறைதறன்னா**
**லெய்துமிக்காலந்தன்னையிரவென்கோபகலென்கேனோ.**

(இ - ள்.) மை அவாம் - அஞ்சனமானது விரும்புகின்ற, கரிய கூந்தல் - கருமையுள்ள கூந்தலையும், வாள் கிடந்து அனைய - வாளா யுதம் இடந்ததையொத்த, உண் கண் - மையுண்டகண்களையும், பை அரவு அல்குல் - அராப்படம்போன்ற வல்குலையும், செவ்வாய் - சிவந்த வாயையும், பனி மொழி - குளிர்ச்சிபொருந்திய சொல்லையுமுடைய தமயந்தியினது, வதுவை வேட்டு - விவாகத்தைவிரும்பி, வெய்ய செம் கதிரினோடும் - வெவ்விய சூரியனோடும், வெள் மதி - சந்திரன், உறைதல் தன்னால் - (அந்நகரத்தில்) தங்குகின்றபடியால், எய்தும் இ காலம் தன்னை - பொருந்திய இக்காலத்தை, இரவு என்கோ - இரவென்று சொல்லுவேனோ, பகல் என்கேனோ - பகலென்று சொல்லுவேனோ, [இன்னதென்று சொல்லக்கூடவில்லை என்றபடி,] எ - று.

(க - து.) தமயந்தி கலியாணத்தை விரும்பிவந்த சூரியனுஞ் சந்திரனும் அந்தப்புரத்தில் வாசம்பண்ணலால் இரவென்று சொல்வேனோ பகலென்று சொல்வேனோ என்பதாம். (௨௪)

[இப்பாட்டால் மாலைப்பொழுதின் வரவு
சொல்லப்படுகின்றது.]

தைைமலாத் தெரியல வேந்தா் தளா்ந்துமெய் பதைத்து வாடப், புதையிருட் போர்வை மெய்யிற் பொலிவுறப் போர்த்து வெய்ய, கதழெரிச் செக்கர்ப் பேழ்வாய் திறந்து வெண் கதிர்குலாய, மதிவகி ரெயிறு தோன்ற வந்தது மாலைக் கூற்றம்.

(இ-ள்.) ததை மலர் தெரியல் - நெருங்கிய மலர்மாலையை யணிந்த, வேந்தர் - அரசர்கள், தளர்ந்து - தளர்ச்சியடைந்து, மெய் பதைத்து - தேகம் பதைத்து, வாட - வாடும்படி, புதை இருள் போர்வை - (உலகத்தை) மூடுகின்ற இருளாகிய போர்வையை, மெய்யில் - (தன) உடம்பில், பொலிவு உற - விளக்கமிக, போர்த்து - போர்த்துக்கொண்டு, வெய்ய கதழ் எரி - கொடியவேகத்தையுடைய நெருப்பையொத்த, செக்கர் - செவ்வானமாகிய, பேழ் வாய் திறந்து - பெரியவாயைத்திறந்து, வெள் கதிர் குலாய - வெளிய கிரணங்கள் விளங்கப்பெற்ற, மதி - சந்திரனாகிய, வகிர் எயிறு தோன்ற - பிளப்பையுடைய கோரப்பல்லானது தோன்றும்படி, மாலை கூற்றம் - மாலைப்பொழுதாகிய யமனானவன், வந்தது - வந்தான், எ-று.

(க - து.) அரசர்கள் வாடும்படி மாலைக்காலமாகிய இயமனானவன் இருட்போர்வை போர்த்துச் செவ்வானமாகிய வாயைத்திறந்து சந்திரனாகிய வக்கிரதந்தந் தோன்றும்படி வந்தான் எனபதாம்.

மாலைப்பொழுதானது விரகிகளைக் கொல்லப்பட்டதாதலின் அதற்கேற்ப அதைக் கூற்றுவனாகவும், இருளை மறைக்கும் போர்வையாகவும், செவ்வானத்தைப் பேழ்வாயாகவும், பிறையைப் பல்லாகவும் உருவகஞ் செய்தார். ஆதலால் அக்கூற்றுவன் தான் கொல்வதே யன்றித் தன் போர்வையால் மறைத்தும் வாயால் விழுங்கியும் பல்லாற்கறித்தும் கொல்வானென்பதாயிற்று. உறுப்புடை யுருவகவணி. (௨௫)

[இதுமுதல் ஏழுபாட்டால் வளர்பிறையின் றோற்றஞ்
சொல்லப்படுகின்றது]

விரிகதிர்பரப்பிவானமீதெழுகுழவித்திங்க [ம
ளெரிமணிப்பூண்செய்திண்டோ ளெழுபுவிவேந்தர்மேலு
வரிசிலைகுழையவாங்கிமண்டமர்தொடங்குமாரன்
குரைகடன்முரசமெற்றுங்குணிலெனச்சிறந்ததன்றே.

(இ - ள்.) விரி கதிர் பரப்பி - விரிந்தகிரணங்களைப் பரவச்செய்து, வானம் மீது எழு - ஆகாயத்தில் எழுந்த, குழவி திங்கள் - இளம்பிறைச் சந்திரன், எரி - விளங்குகின்ற, மணி - ரதநங்கள் பதித்த, பூண் செய்-

ஆபரணங்களை யணிந்த, திண் தோள் - வலிமையுள்ள தோளையுடைய, எழு புவி வேந்தர்மேலும் - எழுதீவிலுள்ள அரசர்கள் மேலும், வரி சிலை - நெடிய வில்லை, குழைய வாங்கி - வளைய வளைத்து, மன்று அமர் தொடங்கு மாரன் - நெருங்கிய போரை ஆரம்பிக்கு மன்மதனது, குரை கடல் முரசம் - ஒலிக்கின்ற கடலாகிய பேரிகையை, எற்றும் - அடிக்கின்ற, குணில் என - குறுந்தடிபோல், சிறந்தது - சிறந்திருந்தது, எ-று.

(க - து.) வானில் உதயமான இளம்பிறையானது மன்மதனது கடலாகிய முரசுக்குக் குறுந்தடிபோ லிருந்தது என்பதாம்.

அழகிற் சிறந்த தமயந்தியை விழைந்து வந்த அரசர்களனைவரும் அவ்விரவில் அளவற்ற காமவருத்தத்தை அடைவதற்கு மன்மதன் காரணமாதலால் இதுகாறும்போலன்றி அதிக முயற்சியோடு படையெடுத்து வருவதற்குக் குறியாக அக்காலத்தில் ஒலிக்குங்கடலை முரசமாக்கி அங்கனுண்டாகிய பிறையை அதை எற்றுங் குணிலாகக் கூறினரென்க. (உசு)

ஏர்குடியிருந்தநங்கையிளமுலைப்போகம்வேட்ட
நீர்மலிகடலந்தானைநெடுநிலவேந்தர்தம்மேல
வார்சிலைத்தடக்கைமாரன்மண்டமர்புரியத்தூண்டுங
கூரிருளவேழக்கோட்டினெழுந்ததுகுழவித்திங்கள்

(இ - ள்.) குழவி திங்கள் - இளம்பிறையானது, ஏர் குடி இருந்த - அழகுகளானவை ஒருங்குபட்டுத் தங்கி யிருக்கப்பெற்ற, நங்கை - தமயந்தியினது, இள முலை போகம் வேட்ட - இளமையாகிய ஸ்தனங்களினது அணைதலை விரும்பிய, நீர் மலி கடல் - நீர்மிகுந்த கடலாகிய, அம் தானை - அழகிய ஆடையையுடைய, நெடு நிலம் வேந்தர் மேல் - நெடிய பூமியிலுள்ள அரசர்கள்மீது, வார் சிலை தடம் கை மாரன் - நீண்ட வில்லையேந்திய விசாலமாகிய கையையுடைய மன்மதன், மண்டு அமர் புரிய - நெருங்கிய யுத்தத்தைச் செய்ய, தூண்டும் - நடத்தப்பட்ட, கூர் இருள் வேழம் - மிகுந்த விருளாகிய யானையினது, கோட்டின் - கொம்புபோல், எழுந்தது - உதித்தது, எ-று. தம - அசை.

(க - து.) இளம்பிறை யானது தமயந்தியை விரும்பிய அரசர்கள் மேல் மன்மதன் போர்செய்ய நடத்தப்பட்ட இருளாகிய யானையின் கோட்டைப்போலு மிருந்தது என்பதாம்

கீழ்த்திசைத் தோன்றிவரும் இருளை அக்காலத்தில் வரு மன்மதனது யானையாகக்கூறி மேற்றிசைத் தோன்றிய பிறையையும் அதற்குக் கொம்பாகச் சொல்லப்பட்டது. இதனால் இவ்விரண்டும் காமனைப்போலும் விரகிகளுக்குக் காமத்தை விளைத்து வருத்துமென்பது கருத்து. இருள்வேழமென்பது உருவகம். கோட்டினெழுந்த தென்பது தற்குறிப்பணி. இது முன்னுருவகத்தை அங்கமாக்கொண்டது.

கள்ளுயிர்த் தினவண் டார்க்குங் கமலம்வாய் முகிழ்ப்பச் செய்ய, வள்ளலங் கயத்து ளாம்ப லலர்த்திய குழவித் திங்க, டெள்ளுசெங் கதிரோன் மாலைத் தெரிவைவெம்

**முலையிற் கோட்டும், வள்ளுகிர்க் குறியிற் றோன்றிப் பொலிவுற வயங்கிற் றன்றே**

(இ - ள்.) கள் உயிர்த்து - தேனைத் தந்து, இனம் வண்டு ஆர்க்கும் - கூட்டமாகிய வண்டுகள் ஒலிக்கின்ற, கமலம் - தாமரை மலர்கள், வாய் முகிழ்ப்ப - குவிய, செய்ய - சிவந்த, அள்ளல் - குழைசேற்றையுடைய, அம் கயத்துள் - அழகிய தடாகத்துள், ஆம்பல் - அல்லிகளை, அலர்த்திய - மலரச்செய்த, குழவி திங்கள் - இளம்பிறையானது, தெள்ளு - தெளிந்த, செம் கதிரோன் - சிவந்த கதிரையுடைய சூரியனானவன், மாலை தெரிவை - மாலைப்பொழுதாகிய மங்கையினுடைய, வெம் முலையில் - விருப்பத்தைச்செய்யுங் கொங்கைகளில், கோட்டும் - ஊன்றிய, வள் உகிர் குறியின் - கூரிய நகக்குறியைப்போல், தோன்றி - உண்டாய், பொலிவு உற - அழகு பொருந்த, வயங்கிற்று - விளங்கிற்று, எ - று. அன்று - ஏ - அசைகள்.

(க - து.) தாமரை மலர்களைக் குவிய அல்லிமலர்களை மலரச்செய்த இளம்பிறையானது சூரியனானவன் மாலைக்காலமாகிய மங்கையின் கொங்கைகளில் அழுத்திய நகக்குறிபோ லிருந்தது என்பதாம்.

சூரியனோடு கூடிப் பிரிந்து நின்ற மாலைப்பொழுதில் காணப்படுகின்ற பிறையினை அவன்செய்த நகக்குறியாகக் கூறினார். புணருமிடத்து நகக்குறி யுண்டாதல். "பற்குறி நகக்குறிகள் பாணிகொடுதட்ட, னற்கமிழ்து துய்த்தமலர்களி னன்மேற்ழ வணைத்த, லற்குகர ணங்களறி யாருமெளி தாகக், கற்கும்வகை நின்றன கதிர்த்தமணி யோவம்" இதனாலறிக. மாலைப்பொழுதி லுண்டாகிய பிறையினைச் சூரியனோடு கூடிப் பிரிந்த மாலைப்பெண் முலைக்குறியாகக் குறித்தலால் தற்குறிப்பணி. ()

**சேட்டிளம்பரிதிமார்பினளனுக்குத்தெரியனாளைச்**
**சூட்டுவடெரிவையென்னத்துலங்குகீட்டிசைமாதன்பிற்**
**காட்டியநிருத்தக்கைபோற்கதிர்நிலவுமிழுந்தண்ணென்**
**கோட்டிளங்குழவித்திங்கள்குடபுலத்தெழுந்ததன்றே.**

(இ - ள்.) சேடு இளம் - மிகுந்த விளமையையுடைய, பரிதி - சூரியன்போன்ற, மார்பின் - மார்பினிடத்தில், நளனுக்கு - நளமகாராஜனுக்கு, நாளை - நாளைப்பொழுதில், தெரிவை - தமயந்தியானவள், தெரியல் சூட்டுவள் என்ன - மாலையைத் தரிப்பாளென்று, துலங்கு - விளங்குகின்ற, கீழ் திசை மாது - கிழக்குத் திக்காகிய மங்கையானவள், அன்பின் - அன்பினாலே, காட்டிய - காட்டப்பட்ட, நிருத்தம் கையில் - அபினயக்கைபோல், கதிர் - கதிர்களாகிய, நிலவு உமிழும் - ஒளியைக் கொப்புளிக்கின்ற, தண் என் - குளிர்ச்சிபொருந்திய, கோடு - வளைந்த, இளம் குழவி திங்கள் - மிகுந்த விளமைபொருந்திய பிறையானது, குடம் புலத்து - மேற்குத் திசையில், எழுந்தது - உதயமாயிற்று, எ - று.

(க - து.) நளனுக்கு நாளையத்தினம் தமயந்தி மாலைசூட்டுவாளென்று கீழ்த்திசை மாதானவள் காட்டப்பட்ட அபினயத்தைப்போல் இளம்பிறை மேற்குத்திசையில் உதித்தது என்பதாம்.

நாடகக்கணிகையா தமது கருத்தினுள்ளதை அபிநயத்தால் அபி முகத்தில் காட்டுத லியல்பாதலின அவவாறு கீழ்த்திசைமாது தம யந்தி நளனுக்குமாலைசூட்டலைக் காட்டிய நிருத்தக்கைபோல் இளம் பிறை யெழுந்ததென்றா. பிறையில் நிருததக்கையைக் குறித்தமை யால் தற்குறிபபணி. (உக)

**கூன்பயில்குழவித்திங்கள்கொள்ளைவண்டிருந்துபாடக்**
**கான்பயின்மலரம்பேந்துங்கன்னலஞ்சிலைக்கைவேட**
**ஊன்பயில்குருதிவேற்கணொண்ணுதன்மடவாருள்ள**
**.மீன்கவர்தூண்டிலென்னவிசும்பிடைவிளங்கிற்றன்றே.**

(இ - ள.) கூன் பயில குழவி திங்கள் - வளைவுபொருந்திய இளம் பிறையானது, கொள்ளை - மிகுதியாக, வண்டு இருந்து - வண்டுக ளிருநது, பாட - பாடலைசசெயய, கான பயில் - வாசமபொருந்திய, மலா அம்பு ஏநதும் - மலாககணைகளையேநதிய, கன்னல் அம் சிலை கை வேடன - மனமதனது, ஊன பயில - தசைபொருந்திய, குருதி - உதிரததையுடைய, வேல கண் - வேலபோனற கணகளையும், ஒள் நுதல் - ஒளிபொருநதிய நெறறியையுமுடைய, மடவாா - மாதரது, உள் ளம் - மனமாகிய, மீன கவா - மீனைக கிரிகிபபதற்குப போடபபட்ட, தூண்டில் என்ன - தூணடிலைபபோல, விசும்பிடை - ஆகாயததினிட தது, விளஙகிற்று - பிரகாசிததது, எ - று. அனறு - ஏ - அசைகள.

(க - து.) இளம்பிறை உதயமானது மனமதன மாதாகள மன மாகிய மீனைக கிரிக்ககப போடபபட்ட தூண்டிலைப்போ லிருந்தது என்பதாம்.

மாமிசததை விரும்பிய பறநிய மீனகளைத தூண்டில் இறக்கும் படி செய்வதுபோல, இபபிறையும காமவிடாய தீரத தனனைப பாாக கின்ற பிரிநதவரை வருததுவதாதலின இவவாறு கூறினா. பிறை யைத தூண்டின முளளாகக் குறிததமையால் தறகுறிபபணி. (௩௦)

**நீலிறத்தங்கண்வானநீள்கடற்பரப்பிற்றூய**
**வாலிலாககதிர்கள்வீசிவயின்வயின்விளங்குகின்ற [ன்றும்**
**மீனெனுங்கதிர்கொண்முதத வெண்மணியுயிர்த்துத்தோ**
**கூன்முதுகிபபியெனனவெழுந்ததுகுழவித்திங்கள்.**

(இ - ள்.) குழவி திங்கள் - இளமபிறையானது, நீல் நிறத்து - நீலநிறததையுடைய, அம் கண வானம் - அழகிய இடததையுடைய ஆகாயமாகிய, நீள் கடல் பரபபில் - நீண்ட கடலினது பரபபிலே, தூய வால் நிலா கதிாகள் - பரிசுததமாகிய வெள்ளிய பிரகாசத்தை யுடைய கிரணங்களை, வீசி - எறிநது, வயின் வயின் விளங்குகின்ற மீன் என்னும் - இடங்கள்தோறும் பிரகாசிககின்ற மீனென்கின்ற, கதிா கொள் - கிரணங்களைக்கொண்ட, முத்தம் வெள்மணி உயிாத்து - வெள் ளிய முத்தங்களை ஈன்று, தோன்றும் - விளங்கும், கூன் முதுகு இப்பி என்ன - வளைந்த முதுகையுடைய இப்பியைப்போல், எழுந்தது - எழுந் தது, எ - று.

(க - து.) நட்சத்திரங்களோடு உதயமான இளம்பிறையானது முத்துக்களை யீன்ற இப்பிகளைப்போ லிருந்தது என்பதாம்.

'மீனெனுமுத்தம்' என்றது உருவகம். 'கூன்முது இப்பியென்ன' எனக் குறித்தலால் தற்குறிப்பணி. (௩௧)

ஓங்குயிர்விசும்பூத்தவுடுப்புகர்முகத்ததாய
வாங்குவிற்றடக்கைமாரன்மலர்தலையுலகிற்றூண்டுந்
தூங்கிருட்களிநல்யானைதுரந்திடுந்தோட்டிபோலத்
தீங்கதிர்க்குழவித்திங்கள்சேணிடைத்திகழ்ந்ததன்றே.

(இ - ள்.) தீ கதிா குழவி திங்கள் - இனிய கிரணங்களையுடைய இளம்பிறையானது, வாங்கு வில் - வளைக்கபபட்ட கருப்புவில்லேந்திய, தடம் கை - விசாலம்பொருநதிய கையையுடைய, மாரன் - மன்மதனானவன், மலா தலை உலகில் - பரநத இடத்தையுடைய வுலகததில், தூண்டும் - செலுததுகின்ற, ஓஙகு உயா விசும்பு பூதத - மிகவு முயாநத ஆகாயத்தில உணடாகிய, உடு - தாரகைகளாகிய, புகா முகத்தது ஆய - புள்ளிபெற்ற முகத்தையுடையதாகிய, தூங்கு இருள் - தங்கிய இருளாகிய, களி நல் யானை - களிபபையுடைய நலல யானையை, துரந்திடும் தோட்டி போல - ஓட்டும் அஙகுசம்போல், சேணிடை - ஆகாயத்தினிடத்து, திகழ்ந்தது - பிரகாசிததது, எ-று.

(க - து.) இளம்பிறைத் தோற்றமானது மன்மதன் செலுத்தும் இருளாகிய யானையை யோட்டும் அஙகுசமபோ லிருந்தது என்பதாம்.

இதுவும் அவவணி. (௩௨)

பிள்ளைமாமதியங்கான்றநிலவழற்பிழம்புபற்ற
வுள்ளநெக்குருகிமாழாந்துலமபொருவயிரத்திண்டோ
ளள்ளிலைவடிவேலேந்துமரசிளங்குமரர்பூண்ட
தள்ளருங்காதலெம்மாற்சாற்றலாந்தகைமைத்தன்றே.

(இ - ள்.) பிள்ளை மா மதியம் - இளம்பிறையானது, கான்ற - வீசிய, நிலவு - சந்திரிகையாகிய, அழல் பிழம்பு - அக்கினித் திரட்சியானது, பற்ற - பிடிக்க, (அதனால்) உள்ளம் - மனமானது, நெக்கு உருகி - மிகவு முருகி, மாழாந்து - மயங்கி, உலம் பொரு - திரள் கல்லையொத்த, வயிரம் திண் தோள் - வச்சிரம்போன்ற திண்ணிய தோளையுடைய, அள் இலை வடி வேல் - தசையை யள்ளிக்கொள்ளுகின்ற இலையையுடைய வடித்த வேலை, ஏந்தும் - ஏந்துகின்ற, அரசு இள குமரா - இராஜகுமாராகள், பூண்ட - அடைந்த, தள் அரு காதல் - தள்ளுதற்கரிய ஆசை, எம்மால் - எம்மால், சாற்றலாம் - சொல்லலாமாகிய, தகைமைத்து அன்று - தகைமையை யுடையதன்று, எ-று.

(க - து.) இளம்பிறைக் கனலினால் அரசாகள் மனமுருகியடைந்த காதலை எம்மாற் சொல்லக்கூடுமோ, என்றா என்பதாம்.

காமமானது எப்படிப்பட்டவாகளாலும் விலக்குதற்கரிதாகையால் 'தள்ளருங் காதல்' என்றா. இதுவும் வரும்பாட்டும் கவிக்கூற்றெனக் கொள்க. (௩௩)

ஏற்றுரிமுரசந்துஞ்சாவிதர்ப்பர்கோனினிதினீன்ற
கோற்றொடிவதுவைவேட்டுக்கூரிருட்கங்குற்போதிற்
றூற்றிளம்பூகவேலித்தண்பணைநிடதங்காக்கு
மாற்றல்சானளனுக்குற்றவருந்துயருரைக்கலுற்றும்.

(இ - ள்.) ஏறு உரி - இடபத்தின் றோலாற்செய்த, முரசம் துஞ்சா - பேரிகையானது உறங்காத வாயிலையுடைய, விதர்ப்பர்கோன் - வீமன், இனிதின் ஈன்ற - இனிமையிலுற் பெற்ற, கோற்றொடி - தமயந்தியினது, வதுவை வேட்டு - விவாகத்தை விரும்பி, கூர் இருள் - மிகுந்த இருளையுடைய, கங்குல் போதில் - இராப்பொழுதில், தாறு - குலைகளையுடைய, இளம் பூகம் வேலி - இளமைபொருந்திய கமுக வேலி சூழ்ந்த, தண் பணை - குளிர்ச்சிபொருந்திய வயல்களையுடைய, நிடதம் காக்கும் - நிடததேசத்தைப் புரக்கின்ற, ஆற்றல் சால் - பொறுமை மிக்க, நளனுக்கு - நளமகாராஜனுக்கு, உற்ற - பொருந்திய, அரு துயர் - பொறுத்தற்கரிய துயரை, உரைக்கலுற்றும் - சொல்லத் தொடங்கினோம், எ - று.

(க-து.) தமயந்தியின் விவாகத்தை விரும்பிய நளனுக்குப் பொருந்திய துன்பத்தைச் சொல்லத் தொடங்கினோம் என்பதாம்.

பொறுமைமிக்க நளனாலும் பொறுத்தற்கரிய துயரென்றது அதன் அருமையைக் குறிப்பித்துநின்றது. (௩௪)

[இதனால் நளன் பிறையை வெறுத்தல் சொல்லப் படுகின்றது.]

கலிவிருத்தம்.

பனிமைக்கடலிற்படுமாரமிர்தோ
டினிதிற்றிருவோடுமெழுந்தனையென்
மனனுற்றவள்வாணுதல்போலுதியாற்
கனலத்தகுமோகலைவெண்மதியே.

(இ-ள்.) கலை வெள் மதியே - கலையையுடைய வெள்ளிய சந்திரனே, பனி - குளிர்ச்சிபொருந்திய, மை கடலில் படும் - கரிய கடலிற் றோன்றிய, ஆர் அமிர்தோடு-நிறைந்த அமிர்தத்துடனும், இனிதின் திருவோடும் - இனிமையுடைய இலக்குமியுடனும், எழுந்தனை - தோன்றினாய்; என் மனன் உற்றவள் - என்மனத்தி லிருப்பவளாகிய தமயந்தியினது, வாள் - ஒளிபொருந்திய, நுதல் போலுதி-நெற்றிபோ லிருக்கின்றாய்; கனல தகுமோ - (நீ என்னைச்) சுடத்தகுமா, எ-று. ஆல்,ஏ-அசை.

(க - து.) நளன் கலைகளையுடைய சந்திரனே அமிர்தத்தினோடும் இலக்குமியோடும் பிறந்தாய், தமயந்தி நெற்றிபோ லிருக்கின்றாய், ஆதலா லென்னைச் சுடத்தகுமா என்றான் என்பதாம்.

நீ தோன்றிய இடத்தின் குணத்தையும் உடன் பிறந்தோர் தன்மையையும் உணராவிடினும் தமயந்தியினது நிகரில்லாத நெற்றிக்கு நிகரானாய்; இப்பொழுது அதற்குரிய மகிழ்ச்சி செய்வதை விட்டு வெப்பஞ்செய்யின் அப்பெருமை உனக்குத் தகாதென்பது கருத்து. ()

[இதனால் தென்றலை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

கொந்தார்குவளைக்குளிர்மென்மலரிற
பைந்தாதுதுதைந்துபடிந்துநறுஞ்
சந்தாடவியூடுதவழ்ந்துவரு
மந்தானிலமேயுயிர்வெளவுதியோ.

(இ - ள்.) கொந்து ஆர் குவளை - திரளாக நிறையப்பெற்ற உற பலத்தினது, குளிர் மெல் மலரில் - குளிர்ச்சிபொருந்திய மெல்லிய மலர்களி லிருக்கும், பைந்தாது - பசிய மகரந்தங்களில், துதைந்து - நெருங்கி, படிந்து - முழுகி, நறும் சந்தம் அடவியூடு - நல்ல வாசனை யுள்ள சந்தனக்காட்டினிடத்தில், தவழ்ந்து வரும் - தவழ்ந்துவரு கின்ற, மந்தானிலமே - இளந்தென்றலே, உயிர் - என்னுயிரை, வெள வுதியோ - (நீ) அபகரிக்கின்றனையோ, எ - று.

(க - து.) நளன் தென்றற்காற்றே என்னுயிரைக் கிரகிக்கின்றாயோ என்றான் எனபதாம்.

தென்றலுக்குக் குளிர்ச்சியும் மணமும மென்மையும் சிறந்தன வாயினும் பிரிந்தவரை வருத்துதலால் இவவாறு கூறினன. இக்கருத் தைக் கொண்டமையால் கருத்துடையடைகொளியணி. (௩௬)

[இதனாற் குயிலைவெறுத்தல சொல்லபபடுகின்றது.]

அயில்வாளிதுரந்தடலவேளபொரலாற்
செயலேதுமிலாதுதிகைத்தயர்வே
னுயிர்போலபவளின்சொலுணர்த்திவரிக்
குயிலேயெனதாருயிர்கொலலுதியோ.

(இ - ள்.) அடல் வேள - கொலைசெய்கின்ற மன்மதனானவன், அயில் வாளி துரந்து - கூர்மைபொருந்திய அம்புகளைச்செலுத்தி, பொர லால் - பொருதலால், செயல் ஏதும இலாது - ஒருசெய்கையு மில்லா மல், திகைத்து அயர்வேன் - மயங்கி வருந்துவேனாகிய எனது, உயிர் போல்பவள் - உயிரையொபபவளாகிய தமயந்தியினது, இன் சொல் உணர்த்தி - இனியமொழியை யறிவித்து, வரி குயிலே - இசையை யுடைய குயிலே, எனது - என்னுடைய, ஆர் உயிர் - நிறைந்த உயிரை, கொல்லுதியோ - கொல்லுகின்றனையோ, எ - று.

(க - து.) குயிலே! என்னுயிரைக் கொல்லுகின்றாயோ என்றான் நளன் என்பதாம்.

ஒருவரோடு பொருது இளைத்தவரை வேறொருவன் வெல்லவருவது தகாதென்பது கருத்து. இவ்விரண்டுபாட்டாலும் சுயம்வரம் வேனிற்காலத்தில் நடந்தது என்பது பெற்றாம. (௩௭)

[இது உருவெளித்தோற்றத் தமயந்தியைக் குறித்துச்சொல்லியது.]

விண்ணோர்விடுதூதுவிளம்புதலாற்
பெண்ணாரமிர்தேபிழைசெய்தனனே

வெண்ணுதுறுமிந்திரசாலமெனக்
கண்ணூடுபுகுந்துகரந்தனையே.

(இ - ள்.) விண்ணோர் - தேவர்களால், விடு தூது - விடுக்கப்பட்ட தூதினை, விளம்புதலால் - சொல்லுதலால், பெண் ஆர் அமிர்தே - தமயந்தியே, பிழை செய்தனனோ - குற்றஞ்செய்தேனோ, எண்ணுது உறும் - நினைக்கப்படாத (அனைத்தும்) பொருந்துகின்ற, இந்திரசாலம் என - இந்திரசாலவித்தைபோல், கண்ணூடு புகுந்து - (என) கண்ணிடத்தில் நுழைந்து, கரந்தனை - ஒளித்தாய், எ - று.

(க - து.) நளன் தமயந்தியை உருவெளித் தோற்றமாகக் கண்டு தன் கண்ணில் இந்திரசாலமாக ஒளித்துக்கொண்டாய் என்றான் என்பதாம்.

தூதாக வந்துவிடத்து யான் சொல்லியது குற்றமாகக் கொள்ளின் அது என தன்று, தேவர்கள் செய்தது, ஆதலின் நீ என் கண்ணெதிர் வந்து நில்லாது மறைவதற்கு யானொரு குற்றமுஞ் செய்திலனெனபதாம். (௩௮)

[இது தன்னெஞ்சைக்குறித்துச் சொல்லியது.]

துஞ்சாதயர்வோடுயிர்சோர்தரவெம்
நஞ்சார்விழிவேலெறிநன்னுதலாம
பஞ்சேரடியாயிழைபாலுறையு
நெஞ்சேயெனைநீயுநினைந்திலையே.

(இ - ள்.) துஞ்சாது - உறங்காமல், அயர்வோடு - துன்பத்தோடு, உயிர் சோர்தர - ஆவியானது தளர்ச்சியடைய, வெம் நஞ்சு ஆர் - வெப்பம் பொருந்திய விடநிறைந்த, விழி வேல் எறி - கண்ணாகிய வேலை எறிகின்ற, நன்னுதல் ஆம் - நல்ல புருவத்தை யுடையவளாகிய, பஞ்சு ஏர் அடி - செம்பஞ்சுக் குழம்பணிந்த அழகிய பாதங்களையுடைய, ஆயிழைபால் - தமயந்தியிடத்து, உறையும் - தங்குகின்ற, நெஞ்சே - என் மனமே, எனை - என்னை, நீயும் - நீயும், நினைந்திலை - நினைந்தாயில்லை, எ - று. ஏ - அசை.

(க - து.) தமயந்தியிடத்துத் தங்குகின்ற என்மனமே நீயும் என்னை நினைக்கவில்லை என்றான் எனபதாம்.

இடுக்கண் வரும்போது தனக்கு உயிரோடு விருப்பவரும் உதவாரென்பது கருத்து. (௩௯)

[இது கவிக்கூற்றால் நிகழ்ந்தவை கூறல்.]

என்றார்வமொடின்னபுலம்பிமணிக்
குன்றார்புயன்மெய்த்துயர்கூர்தரலும்
பொன்றாழ்பிதிர்சிந்தியபொம்மன்முலைப்
பின்றாழ்குழலுற்றதுபேசிடுவாம்.

(இ - ள்.) என்று - இப்படியென்று, ஆவமொடு - ஆசையோடு, இன்ன புலம்பி - இத்தன்மையவாக இரங்கி, மணி - அழகிய, குன்று ஆர் புயன் - மலையையொத்த புயத்தையுடைய நளமகாராஜன், மெய் துயர் கூர்தரலும் - உண்மையாகிய அதிக துன்பங்கொண்ட வளவில், பொன் தாழ் - பொன்னானது தாழும்படி, பிதிர சிந்திய - தேமல் சிதறிய, பொம்மல் முலை - பொலிவுபெற்ற முலைகளையும், பின் - பிற்பக்கத்தில், தாழ் குழல் - தாழ்கின்ற கூந்தலையுமுடைய தமயந்தி, உற்றது - அடைந்த துயரத்தை, பேசுவோம் - சொல்லுவாம், எ-று.

(க - து) இவ்வாறு நளன் புலம்பித் துன்பப்படு மளவில் தமயந்தி துன்பத்தைச் சொல்லுவாம் என்றார் புராணிகர் என்பதாம். (௬0)

[இது தமயந்தி தன்கொங்கைகளை நோக்கிச் சொல்வது.]

கணைவேணிகர்காமருகாளைபுயத்
தணையாமலென்மார்பகலங்கவரா
விணைமால்வரையென்னவளர்ந்தனிராற்
பணைமாமுலைகாள்பயனென்னைகொலாம்.

(இ - ள்.) கணை வேள் நிகர் - மலர்க்கணைகளையுடைய மன்மதனையொத்த, காமர் காளை புயத்து - அழகிய நளமகாராஜனுடைய தோள்களில், அணையாமல் - அழுந்தாமல், என் மார்பு அகலம் - என்னுடைய மார்பினிடமெல்லாம், கவரா - கவர்ந்துகொண்டு, இணை - இரண்டாகிய, மால் வரை என்ன - பெரிய பர்வதங்களென்று சொல்லும்படி, வளர்ந்தனிர் - வளர்வுற்றீர்கள், பணை மா முலைகாள் - பருத்த மகத்தாகிய ஸ்தனங்களே, பயன் - (உமக்கு நமக்கும்) பயன், என்னை கொல் - யாது, எ-று. ஆம் - அசை.

(க - து.) என் தனங்களே நளன்புயங்களை யணையாவிட்டால் உங்களுக்குப் பயனென்ன என்றாள்.

'பணைமா முலைகாள்' என விளித்துப் பொதுப்படப் பயனென்னை கொல் எனலால் மலைபோல் வளர்ந்து பெரிய மார்பகலங் கவர்ந்த நும்மைச் சுமந்த எனக்கு நன்மைசெய்ய நினைத்து நளன் மார்பகத்துப் புல்லாவிடினும் நீர் பிறந்ததற்காவது பயன் கருதி யணைந்தீரில்லை; ஆதலால் தனக்கும் பிறர்க்கும் பயன்படாத நும்போலும் வீணரில்லையென்பதாம். (௬௧)

[இது மனதைக்குறித்துச் சொல்லியது.]

முனம்வானவர்தூதுமொழிந்திடுநாட்
புனைதாரவன்மார்பிடைபுல்லியுநீ
நினையாதுவிடுத்தனைநின்றுருகு
மனனேயினியென்கொல்வருந்துவதே.

(இ - ள்.) முனம்- முன்னே, வானவர் - தேவர்களுடைய, தூது மொழிந்திடு நாள் - தூதைச் சொல்லியநாளில், புனை தாரவன் - மாலையணிந்த நளமகாராஜனுடைய, மார்பிடை புல்லியும் - மார்பினிடத்திலே

தழுவியும், நீ நினையாது - நீ எவ்வளவுஞ் சிந்தியாமல், விடுத்தனை அவனைவிட்டு, நின்று - திகைத்துநின்று, உருகும் - கரைகின்ற, மனனே-நெஞ்சமே, இனி யென்கொல் - இப்போது என்னகாரணமாக, வருந்து வது - வருத்தமடைவது, எ - று. ஏ - அசை.

(க - து.) தமயந்தி தன்மனத்தைக் குறித்து ஏன் வருத்தமடைகிறு யென்றாள் என்பதாம்.

சமயம் வந்தகாலத்திற் பெறவேண்டுவதைப் பெறாமல் விடுத்துப் பின் வருந்துவதிற் பயனில்லையாயினும் பிறர் நகைக்கப்படுவர் யென் டது கருத்து. (சஉ)

[இது கண்களைக்குறித்துச் சொல்லியது.]

நண்ணார்தொழுவேனளன்மார்பகலந்
தண்ணாரணையிற்றழுவுங்கனவி
லெண்ணாதுவிழித்துவிடுத்திடுமென்
கண்ணேயிஃதென்கொலகலுழ்வதுவே.

(இ - ள்.) நண்ணார் தொழு - பகைவர் துதிக்கின்ற, வேல் நளன் - வேலையேந்திய நளமகாராஜனுடைய, மார்பு அகலம்-மார்பினை, தண் ஆர் அணையில் - குளிர்ச்சிபொருந்திய மெத்தையில், தழுவும் - தழுவுகின்ற, கனவில் - சொப்பனத்தில், எண்ணாது - ஆலோசியாமல், விழித்து - விழித்துக்கொண்டு, விடுத்திடும் - விட்டுவிடுகின்ற, என் கண்ணே - என் கண்களே, இஃது என்கொல் - இது என்னகாரணமாக, கலுழ் வது - கலங்குவது, எ - று.

(க - து.) என் கண்களே நான் சொப்பனத்தில் நளனைக்கூடும் போது நீங்கள் விழித்தழுதது என்ன என்றாள் என்பதாம்.

பிறராலன்றி நின்னால் செய்யப்பட்ட குற்றத்துக்கு நீயே வருந்து வது பேதைமை யென்பது கருத்து. (சங)

[இதனால் சந்திரனை வெறுத்தல் சொல்லப்படுகின்றது.]

துதைநாண்மலர்வாளிதுரந்துதுரந்
தெதிர்வேளுயிர்கொல்லுதலெண்ணிலைநீள்
கதிர்வாணிலவாரழல்கான்றெழுவெண்
மதியேயெனைநீயும்வருத்துதியோ.

(இ - ள்.) துதை நாள் மலர் - நெருங்கிய புதியமலராகிய, வாளி - பாணங்களை, துரந்து துரந்து - விடுத்து விடுத்து, எதிர் - எதிர்க்கின்ற, வேள் - மன்மதனெனவன், உயிர் கொல்லுதல் - உயிரைக்கொல்லுதலை, எண்ணிலை - நினைத்தாயில்லை, நீள் கதிர் - நீண்ட கிரணங்களினுடைய, வாள் நிலவு - அதிகப்பிரகாசமாகிய, ஆர் அழல் - மிகுந்ததீயை, கான்று - வீசிக்கொண்டு, எழு வெள் மதியே - தோன்றுகின்ற வெள்ளிய சந்திரனே, எனை - என்னை, நீயும் - நீயும், வருத்துதியோ - வருத்துகின்றனையோ? எ - று.

(க - து.) சந்திரனே! மன்மதன் பாணத்தா லென்னைக் கொல்லு தலை நினைக்கவில்லை, நீயும் வருத்துகின்றாய் என்றா ளென்பதாம்.

என்னுயிரை வருத்துவதற்கு மன்மத னொருவனே போதும்; அப்படியிருக்க நீயும் அத்தொழிலின் முயல்வது அரைக்கப்பட்டதை அரைப்பதுபோற் பயனில்லை யென்பது கருத்து. (சச)

[இது நளனைக்குறித்துச் சொல்லியது.]

வேளாண்மைசெலுத்தல்விலக்கிலையாய்
வாளாவுறைகின்றதுமன்னறமோ
தோளாண்மையின்மன்னர்தொழுஞ்சுடர்வேற்
காளாயெனதாருயிர்காவலனே.

(இ - ள்.) தோள் ஆண்மையின் - புயவலிமையினால், மன்னர் தொழும் - அரசர்களால் வணங்கப்பட்ட, சுடர் வேல் காளாய் - ஒளி பொருந்திய வேலைத்தரித்த காளையை யொத்தவனே, எனது - என் னுடைய, ஆர் உயிர் காவலனே - நிறைந்த உயிருக்கு அரசனாகிய நள மகாராஜனே, வேள் - மன்மதனானவன், ஆண்மை செலுத்தல் - (உன்னை விழைந்த என்னிடத்துப்) பராக்கிரமஞ் செலுத்துவதை, விலக்கிலையாய் - ஒழிக்காதவனாய், வாளா உறைகின்றது - சும்மாவிருக்கின்றது, மன் அறமோ - அரசரது தருமமோ, எ - று.

(க - து.) நளமஹாராஜனே! மன்மதன் பாணஞ்செலுத்துதலை நீ விலக்காதிருக்கிறது இராஜதருமமோ என்றாள் என்பதாம்.

தன் தேயத்திலுள்ளவர் தீங்குசெய்யின் அதை விலக்கிக் காப்பது அரசர் தருமமாகும், அங்ஙனமாதலின் நின்னையே யடைக்கலமாயுள்ள என்னிடத்து மன்மதனானவன் தனது ஆண்மையைச் செலுத்தினால் அதை நீ விலக்கி அருள்செய்யாயாயின் நின்னற மிழுக்குற்றதுமன்றி நினக்கும் பழிப்புண்டாகும் என்றதாம். (சரு)

[இது இரங்குதல், நெய்தற்றிணைக் குரிப்பொருளாதலால் அங்குள்ள பொருள்களைக் குறித்துச் சொல்லுதல்.]

இடரோதவிராதிரவோவிடியா
தடலவேலவர்தாமருளோபுரியார்
குடவால்வளையேகுருகேதிரையே
கடலேகழியேயிதுவோகடனே.

(இ - ள்.) குட வால் வளையே - குடம்போன்ற வெள்ளிய சங்கே, குருகே - நாரையே, திரையே - அலையே, கடலே - சமுத்திரமே, கழியே - கழிநிலமே, இடரோ - துன்பமோ, தவிராது - நீங்காது; இரவோ - இராத்திரியோ, விடியாது - விடியமாட்டாது; அடல் - கொலைசெய்கின்ற, வேலவர்தாம் - வேற்படையையுடைய நளமகா ராஜா, அருளோ புரியார் - கருணைசெய்யார், (ஆதலால்) இதுவோ - இப்படி வருந்துவதோ, கடன் - என் கடன், எ - று. ஏ - அசை.

(க - து.) தமயந்தி கழிக்கரைப் புலம்பல் என்பதாம்.

ஓ—இரக்கப்பொருளினும், ஏ—எண்ணினும் வந்தன. இவ்வுலகில் அநேக அரசர் அநேக மங்கையர் வருத்தத்தை நீக்கி அளித்தனரெனக் கேட்டதுண்டு, இவர் கொலைசெய்கின்ற வேலையுடையவ ராகையால் அங்ஙனஞ் செய்திலாபோலும். ஆதலின் எனதிடர் நீங்கிற்றில்லை; அதனோடு போக்குதலின் இரவும் நெடுங்காலம்போல விடிநததில்லை, நீவிர் இங்ஙனமுற்றுப் பிரிந்து வருந்துபவர்க்கு ஒப்புரவுசெயயுங் கடப்பாடு பெற்றுடையீ ராகலின் இவ்வரசர்க்குஞ் சொல்லுவீராக வென்றபடி. நீரால் எதிர்ப்புற்ற ஏரியைக் காக்கும் பொருட்டுப் போக்கு விடுவதுபோல் மிக்க துன்பமுற்றவர்கள் பிறரோடு அதனை உரையாவிடின் ஆற்றாராதலின் இவளுந் தன்றுன்பத்தை யிங்ஙனஞ் சொல்லினா ளெனக. (சசு)

கழலாவளையுங்கனலாமதியு
முழலாமனனும்பெறுநாளுளதோ
மழவேறனையான்மருவாவிரகத்
தழலாலுருகுந்தமியேனினியே.

(இ - ள்.) மழ ஏறு அனையான் - இளவேற்றையொத்த நளமகாராஜன, மருவா - பொருந்தப்பெறாத, விரகம் தழலால் - விரகாக்கினியால், உருகும் தமியேன் - கரைகின்ற தனியேனாகிய நான், இனி - இனி, கழலா வளையும் - கழலாத வளையல்களையும், கனலா மதியும் - சுடாத சந்திரனையும், உழலா மனனும் - கவலைப்படாத மனத்தினையும், பெறும் நாள் - பெறறுககொள்ளு நாள், உளதோ - உண்டாகுமோ, எ-று.

(க - து.) நான் கழலாத வளையல்களையும் சுடாத சந்திரனையுங் கவலைபபடாத நெஞ்சையும பெறுநாளுண்டோ என்றாள் என்பதாம்.

ஒரு ஆடவாமாட்டு விருபபுவைத்த மடவார்க்கு அந்நினைப்பு முற்றுவிடின் அன்னம் நீர் முதலியவறறின் விருபபில்லாமையால் தேகம் வாடும், அவ்வாட்டததாற் கைவளை முதலியவுங் கழலும்; மதியுங் குளிர்ச்சிசெய்து புணர்ச்சி நினைபபை யுணடாக்கி அது கிடைக்கப் பெறாமையாற் சுடும், இங்ஙனமாதலின மனம் விரும்பியதை யடையப் பெறாமையாற் பல நெறிகளினுஞ் சென்று சுழன்றுழலும்; இவ்வாறுதலின் நளனைபபெறாத தமயநதியும் 'கழலாவளையுங் கனலாமதியு முழலா மனனும் பெறுநாளுளதோ' என்றாள். நளனைப்பெற்ற நாளில் அவ்வாறு மெனபது கருத்து. ஓ—இரக்கபபொருளில் வநதது. ஏ-அசை.()

அள்ளிக்கொளலாமிருளூடடர்வேள்
கள்ளத்தெனதாருயிரோகவர்வான்
விள்ளற்கரிதாம்விரகந்தமியே
னுள்ளத்துறைவாயுணர்கிற்றிலையோ.

(இ - ள்.) விள்ளற்கு அரிதாம் விரகம் - சொல்லுதற் கரிதாகிய விரகத்தையுடைய, தமியேன் - தனியேனாகிய என்னுடைய, உள்ளத்து உறைவாய் - மனத்திலிருக்கின்ற நளனே, அள்ளிக்கொளலாம் - (நீ கையால்) அள்ளிக்கொள்ளும்படி யிருந்த, இருளூடு - இருளினிடத்

தில், அடா வேள் - அடாகின்ற மன்மதனானவன், கள்ளத்து - கரவி னால், எனது ஆர உயிர - என்னுடைய நிறைந்த ஆவியை, கவாவான் - அபகரிப்பான், உணாகிறறு இலேயோ - (அக்களவினை) யறிகின்று யில்லேயோ, எ - று.

(க - து.) என்னுள்ளத்திருக்கின்ற நளனே! மனமதன் என னுயிரை அபகரிபபான், நீயறியாயோ எனறாள எனபதாம்.

இருளிற் கரவுசெய்பவாபோல காமனும் என்னுயிரைக் கொள்ளை யிட நினைததிருககினறனன, காமநோயால் இனறிரவில் எனதாவி தரிக்கப்பெறாது, அது உனது பொருளாதலால அதறகொரு தீங்கு வாராமற் காக்ககடவை, காவாவிடில அதனால் பின்னா வருநதுன்பம் உனதாம், என நேரிறசொலவதற்குப பெறாத தமயநதி தன்னுளத திருக்கு நளனைவிளிதது மடமையா லிவ்வாறு கூறினாளென்க. (௪௮)

[இதனால் சூரியோதயஞ் சொல்லபபடுகினறது.]

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருததம்

என்றுவெந் துயருற் றிருகணீர் வார விளமுலேத் து
ணேபசப் பூர, மினறிகழ் மருஙகுற் செயயவாய்ப் பேதை
மெலிவொடு வருந்துமெல் வையினின், மன்றலங் கமல
முகைமுறுக் கவிழ்த்து வரிச்சிறைத் தும்பிபாட் டயரத,
துன்றிருள் பருகும் விரிகதிர் பரப்பிச் சுடரவன் குணபு
லத் தெழுந்தான்.

(இ-ள்.) என்று - இபபடியென்று, வெம் துயா உற்று - வெவ்விய துன்பததையடைநது, இரு கண் நீா வார - இரண்டு கண்களினின்றும் நீரொழுக, இள முலே துணே - இளமைபொருந்திய இரணடு ஸ்தனங களும், பசபபு ஊர - வேறுபட்ட நிறததையடைய, மின திகழ் மருங குல் - மின்னல்போல் பிரகாசிக்கின்ற இடையினையும், செயய வாய - சிவந்தவாயினையுமுடைய, பேதை - தமயந்தியானவள, மெலிவொடு - இளேப்போடு, வருந்தும் எல்வையினில - வருந்தப்படுகின்ற காலத்தில், மன்றல் - வாசனைபொருநதிய, அம் - அழகிய, கமல முகை - தாமரை யரும்பினுடைய, முறுககு அவிழ்தது-முறுக்கவிழ்ச்செய்து, வரி சிறை தும்பி - இரேகைகள் பொருந்திய சிறகையுடைய வண்டுகள், பாட்டு அயர - பாட்டைபபாட, துனறு - நெருஙகிய, இருள் பருகும் - இருளே யுண்ணும், விரி கதிா பரபபி - விரிகின்ற கிரணஙகளேப் பரவசசெயது, சுடரவன் - சூரியனானவன், குண புலசது - கிழக்குத திசையில், எழுந தான் - உதிததான, எ - று.

(க - து.) தமயந்தி வருத்தபபடுங்காலத்தில் சூரியனுதயமாகினான் என்பதாம்.

இப்படி வருத்தமுற்ற தமயநதி பின்பு 'அவ்வருத்தங்களே யெல் லாம் நீங்கி மகிழ்வுறுதற்கு நிகழ்வதாகிய சுயம்வரச் சிறப்பைச் சொல் லுதற்கு உரிய நாளெய்திய தென்பாா, 'பேதை வருந்துமெல்வையினிற் சுடரவன் குணபுலததெழுந்தான்' என்றாா. (௪௯)

[இதனால் விவாகமுரசறைதல் சொல்லப்படுகின்றது.]

**தணிவருந் துயரிற் கண்படை பெறுது தளர்வொடு வருந்திவெய் துயிர்க்கு, மணியெழு வனைய பொற்றடந் திணிதோண் மன்னவர் மனமகிழ் சிறப்பப், பணியர வல் குற் கதிர்முலைத் துவர்வாய்ப் பைந்தொடி வதுவையின் றென்று, அணிநக ரணிகென் றரசர்கோ னபணியா லதிர் குரற் கடிமுர சறைந்தார்.**

(இ - ள்.) தணிவு அரு துயரின் - ஆறுதற்கரிய துன்பத்தினால், கண் படை பெறுது - நித்திரை செய்யாமல், தளர்வொடு வருந்தி - தளர்ச்சியுடன் வருத்தப்பட்டு, வெய்து உயிர்க்கும் - பெருமூச்சு விடு கின்ற, மணி எழு அனைய - மணித்தூண்போன்ற, பொன் - அழகிய, தடம் - பருத்த, திணி தோள் - வலிமைபொருந்திய தோளையுடைய, மன்னவர் - அரசர்கள், மனம் மகிழ் சிறப்ப - மன மகிழ்ச்சி மிக, பணி அரவு அல்குல் - அராப்படம்போன்ற வல்குலையும், கதிர் முலை - காந்திபொருந்திய ஸ்தனங்களையும், துவர் வாய் - செவ் வாயையும், பைந்தொடி - பசிய வளையலையுமுடைய தமயந்தியினது, வதுவை - விவாகம், இன்று என்று - இன்றென்று சொல்லி, அணி நகர் அணிக என்று - அழகிய நகரை யலங்கரிக்கவென்று, அரசர்கோன் பணியால் - வீமராச னேவலினால், அதிர் குரல் கடி முரசு - அதிர்கின்ற வோசை யை யுடைய பெருமைபெற்ற பேரிகையை, அறைந்தார் - (வள்ளுவர்) அடித்தார்கள், எ-று.

(க - து.) அரசர்கள் மனங்களிக்க வீமராஜன் கட்டளையினாலே தமயந்திக்கு விவாக மின்றைக்கென்று நகரை யலங்கரிக்கும்படி பேரிகை யறைந்தார்கள் என்பதாம்.

இராமுழுவதும் நித்திரையின்றி வருந்திய அரசர் மனமகிழ்ச்சி யடைய வீமராசனேவலின்படி வள்ளுவர் முரசறைந்தார். முரசறை தல் பார்க்கவ புராணத்தில் "தெள்ளிய வேவலாளர் செப்பலு மகிழ்ந் துபோற்றி, வள்ளுவ னுண்டுபூசி வாலிய வணிந்துவீர, வெள்ளிய வேற்றுப்போர்வை விசிமுர செடுத்துவல்லே, கள்ளிவர் மாலைநாற்றிக் களிற்றினிட் டேறிச்சொல்வான்." இதற்பாட்டு முதல் "இனியன நுகர்ந்துபூசி யெழில்கொள வணிந்து மென்றீங், கனியென மொழிந்து ளின்பங் கனிதர வளவளாவிப, புனிதவின்னவர்கும் பூசைப் போற் றுக போற்றுகென்று, நனிபல பொருளுஞ் சொல்லி நனிமுர செருக்கி னனே" என்னும் இந்தப்பாட்டீறாக வந்த ஐந்துபாட்டாலும் அறிக. ()

[இதுமுதல் மூன்றுபாட்டால் நகரலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

**இமிழ்கடி முரசங் கறங்குபே ரோதை யெழினகர் மாந்தர்தஞ் செவியி, னமிழ்துகுத் தென்னத் தவழ்தலு மகிழ்வுற் றணிவிழ வருதகோ மறுகிற், கமழ்கறுங் தாற்**

றுப் பாளைவாய்க் கமுகுங் கன்னலுங் கதலியு நடுவா, ருமி
ழ்கதி ரெறிக்கு மணிநெடுங் கொடிக ளுயர்விசும் பகடுற
நிரைப்பார்.

(இ - ள்.) இமிழ் - இனிமையையுடைய, கடி முரசம் - புதுமை பெற்ற பேரிகையானது, கறங்கு பேர் ஓதை - ஒலிக்கும் பேரொலி யானது, எழில் நகர் - அழகிய நகரத்திலிருக்கும், மாந்தர் செவியின் - மனிதர் செவியில், அமிழ்து உகுத்தது என்ன - அமிர்தத்தை வார்த்ததுபோல், தவழ்தலும் - தவழ்ந்த வளவில், மகிழ்வு உற்று - மகிழ்ச்சி யடைந்து, அணி - அழகிய, விழவு அறாத - திருவிழா நீங்காத, கோமறுகில் - இராஜவீதியில், கமழ் - பரிமளிக்கின்ற, நறு - நறிய, தாறு - குலைகளையுடைய, பாளைவாய் கமுகும் - பாளைகள் வாய்ந்த கமுக மரமும், கன்னலும் - கருப்பங்கழியும், கதலியும் - வாழைமரமும், நடுவார் - நடுவார்கள், உமிழ் - கொப்புளிக்கின்ற, கதிர் எறிக்கும் - கிரணத்தை வீசுகின்ற, மணி நெடு கொடிகள் - இரத்நங்கள் பதித்த நெடிய கொடிகளை, விசும்பு அகடு உற - ஆகாச முழுவது நிறைய, நிரைப்பார் - வரிசையாகக் கட்டுவார்கள், எ-று.

(க - து.) மணிதர்கள் மங்கலமுரச சத்தங் கேட்டவளவில் இராஜவீதிகளில் பாக்குமரங்களுங் கரும்பும் வாழையும் நடுவார்கள், ஆகாயமளாவக் கொடிகளுங் கட்டுவார்கள் என்பதாம்.

அரசன்மகட்குச் சுயம்வரமென் றடித்த முரசோதையை அவரவருந் தம்முடைய மகட்கு விவாகமென்று அடித்த ஓதையைக் கேட்டதுபோல் மகிழ்ச்சியடைந்தன ரென்பது தோன்றச் 'செவியி லமிழ்துகுத்தென்னத் தவழ்தலும்' என்றார். எப்பொழுதும் அலங்கரித்திருக்கின்ற வீதியென்பதுதோன்ற 'அணிவிழவறாத கோமறுகில்' என்றார். இப்பாட்டில் மாந்தரென்னும் எழுவாய் இதுமுதல் பன்னிரண்டு பாட்டுவரையும் நடுவார் நிரைப்பார் முதலிய வெவ்வேறு பயனிலைகளைக்கொண்டு முடிந்தது. (ருக)

சேணுயர் பரிதி தழும்புற நிவந்த செழுமணித் தோரண நடுவார், வாணில வொழுகு மணிவடம் புனைந்து வயங்குபொற் றசும்புக ணிரைப்பார், பாணிகர் வரிவண் டெளர்ந்துதே னுகரும் பனிமலர்த் தாமநாற் றிடுவார், தூணுறை கழித்து விரிகதி ரெறிக்குஞ் சுடர்மணிச் செறிதுக டுடைப்பார்.

(இ - ள்.) சேண் உயர் பரிதி - மிகவு முயர்ந்த சூரியனுனவன், தழும்பு உற - தழும்புபொருந்த, நிவந்த - உயர்ந்த, செழு மணி தோரணம் நடுவார் - செழுமையுள்ள மணிகள்பதித்த தோரணங்களை நடுவார்கள்; வாள் நிலவு ஒழுகும் - ஒளிபொருந்திய சந்திரிகை வீசுகின்ற, மணி வடம் புனைந்து - முத்துமாலைகள் தரித்து, வயங்கு - பிரகாசிக்கின்ற, பொன் தசும்புகள் நிரைப்பார் - பொற்குடங்களை வைப்பார்கள்; பாண் நிகர் - பண்ணையொத்த பாட்டுகளை யுடைய,

வரி வண்டு - வரிகளையுடைய வண்டுகள், உளாந்து - தடவி, தேன் நுகரும் - தேனுண்ணும், பனி மலா தாமம் - குளிர்ச்சிபொருந்திய மல ராற்றொடுத்த மாலைகளை, நாற்றிடுவா - தொங்கக் கட்டுவாகள்; தூண் உறை கழித்து - தூண்களின் உறையை நீக்கி, விரி கதிா எறிக்கும் - விரியுங் கிரணங்களை வீசுகின்ற, சுடா மணி - பிரகாசிக்கின்ற ரத்நங்க ளில், செறி துகள் - படிந்த புழுதியை, துடைப்பாா - துடைப்பார்கள், எ - று.

(க - து.) சூரியன் தழும்படையத் தோரணமாலைகள் கட்டுவார் கள், தூண்களி னுறைகளைக கழற்றித தூசைத் துடைப்பாாகள் என்ப தாம்.

பலகா லெறும்பூரக் கற்குழியுமென றிருபபதால் அநேகந் தோர ணங்கள் அந்கனைக் கடக்குமவனையும் படுதலாற் பரிதி தழும்புற வென்றாா. (௫௨)

மைந்தரோ டூடி யந்நலார் பரிந்த மணிவடக் குப்
பைக ளகற்றிச், சந்தமென் குழம்பா னன்னில மெழுகித்
தண்முளைப் பாலிகை யமைப்பா, ரிந்திர தனுவிற் றிகழ்
தரச் சாந்து மெரிமணிச் சுண்ணமு மிறைப்பார், நந்தலில்
விளக்க மணிசெய்பொற் றகளி நறுநெய்பெய் தொளியுற
வெடுப்பார்.

இ - ள்.) மைந்தரோடு ஊடி - புருடருடன் பிணங்கி, அந்நலார் பரிந்த - அநத மகளிாகள் நீக்கிய, மணி வடம் குப்பைகள் - முத்து மாலைகளின் குவியல்களை, அகற்றி-நீக்கி, சநதம் மெல் குழம்பால் - சந் தனத்தினுடைய மெல்லிய குழம்பினால், நல் நிலம் மெழுகி - நல்ல பூமி யை மெழுகி, தண் முளை பாலிகை - குளிாசசிபொருநதிய முளைகளை யுடைய பாலிகைகளை, அமைப்பாா - வைபபாாகள், இந்திரதனுவில் திகழ்தர - இந்திரவில்லைப்போல் பிரகாசிக்க, சாந்தம் - சந்தனத்தை யும், எரி மணி சுண்ணமும் - (அதன்மேல்) காந்தியையுடைய ரத்நப் பொடிகளையும், இறைப்பாா - இறைபபாாகள், நந்தல் இல் விளக்கம் - கெடுதலில்லாத தீபங்களை, மணி செய பொன தகளி - ரத்நங்க ளிழைத்த பொன்னகல்களில், நறு நெய் பெய்து - நல்லநெய்விட்டு, ஒளி உற - ஒளிபொருந்த, எடுபபாா - ஏற்றுவாாகள். எ - று.

(க - து.) புருஷாகளோடு பிணங்கிப் பெண்களெறிந்த மணிக் குப்பைகளை நீக்கிச் சந்தனக்குழம்பாலே நிலத்தைமெழுகி முளைப் பாலிகையை வைப்பாாகள், நவமணி விளக்கேற்றுவார்கள் என்பதாம்.

ஊடுதல் காமத்திற் கின்பமாதலின், 'மைந்தரோடூடி' என்றார். இந்திர தனுவிலென்ப பலநிறமுள்ளதை உவமானமாகக் கூறலால் இங் ஙன மணியென்றதற்கு வெவ்வேறு நிறமுள்ள நவமணியையும் பொரு ளாகக் கொள்க. அவை வச்சிரம், வைடூரியம், கோமேதகம், புட்ப ராகம், மரகதம், மாணிக்கம், நீலம், பவளம், முத்து என்பனவாம். ()

[இதுமுத லிரண்டுபோட்டால் மாதா தங்களை அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

ஐயரி சிதறு மழைமதர் நெடுங்க ணஞ்சன மெழுதுவார் சாந்தத், தொய்யில்வெம் முலையி னிலவுகொப் புளிக்குந் தூமணிப் பிறைவட மணிவார், மையிருங் கூந்தல் வகிர்ந்துதேன் முரலு மட்டுவார் பூந்தொடை புனைவார், நையுநுண் மருங்கிற் கதிரொளி பரப்பு நகைமணி மேகலை புனைவார்.

(இ - ள்.) ஐ அரி சிதறும் - அழகிய செவ்வரி பரந்த, மழை மதர் நெடு கண் - குளிர்ச்சிபொருந்திய களிப்பையுடைய நெடியகண்களில், அஞ்சனம் எழுதுவார் - மையெழுதுவார்கள், சாந்தம் தொய்யில் - சந்தனக்கோலம் எழுதப்பெற்ற, வெம் முலையின் - விருப்பத்தைச்செய்யும் தனங்களில், நிலவு கொப்புளிக்கும் - சந்திரிகையை உமிழ்கின்ற, தூ மணி - பரிசுத்தமாகிய ரதநங்களிழைத்த, பிறை வடம் - சந்திரஹாரத்தை, அணிவார் - அணிவார்கள், மை இரு கூந்தல் வகிர்ந்து - கரிய பெரிய அளகபாரத்தைக் கோதி, தேன் முரலும் - வண்டுகளொலிக்கின்ற, மட்டு வார் - தேனொழுகுகின்ற, பூந்தொடை - பூமாலைகளை, புனைவார் - சூடுவார்கள், நையும் நுண் மருங்கில் - நைகின்ற நுண்ணிய இடையில், கதிர் ஒளி பரப்பும் - கிரணங்களினது ஒளியைவிரிக்கின்ற, நகை மணி மேகலை - காந்தியையுடைய மணிகளிழைத்த மேகலாபரணத்தை, அணிவார் - அணிவார்கள், எ - று.

(க - து.) அங்கு மாதர்கள் கண்களுக்கு மையிடுவார்கள், கனதனங்களில் சந்திரஹாரந் தரிப்பார்கள், கூந்தலில் மாலையணிவார்கள், இடையில் மேகலாபரணந் தரிப்பார்கள் எனபதாம். (௫௪)

சில்லரிச் சிலம்பு பஞ்சிமேற் பணிக்குஞ் சீறடி கவின்செயப் புனைவா, ரொல்வளை திருத்தி யாடமை பணைத்தோ ளெழில்பெறத் தொயிலவரைந் திடுவா, ரலலியங் கமல மென்மலர் கவற்று மடியினி லலத்தக மணிவார், வில்லுமிழொருகாழ் முத்தணி யணிவார் விரைகமழ் தெரியலகை புனைவார்.

(இ - ள்.) சில் அரி சிலம்பு - ஆரவாரிக்கின்ற பருக்கைக்கல்லையுடைய சிலம்புகளை, பஞ்சிமேல் - பஞ்சின்மேல் மிதிப்பினும், பணிக்கும் சீறடி - வாடுகின்ற சிறியபாதங்களில், கவின் செய - அழகுபொருந்த, புனைவார் - தரிப்பார்கள், ஒல் வளை - பிரகாசத்தையுடைய வளையல்களை, திருத்தி - அணிந்து, ஆடமை பணை தோள் - வெற்றியமைந்த பருத்ததோள்களில், எழில் பெற - அழகுபெறும்படி, தொயில் வரைந்திடுவார் - சந்தனக்கோலத்தை எழுதுவார்கள், அல்லி அம் கமலம் மென் மலர் - அகவிதழையுடைய அழகிய தாமரையினது மெல்லியமலரை, கவற்றும் அடியினில் - கவலைப்படுத்தும் பாதங்களில், அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பை, அணிவார் பூசுவார்கள்; வில் உமிழ் - ஒளியை

வீசுகின்ற, ஒரு காழ் முத்தணி - ஒப்பற்ற தேறிய முத்துமாலைகளை, அணிவார் - அணிவார்கள்; விரை கமழ் - வாசனை கமழ்கின்ற, தெரியல் - மலாமாலைகளை, கைபுனைவார் - அலங்கரிப்பார்கள், எ - று.

(க - து.) பாதங்களிற் சிலம்பணிவார்கள், வளையல்க ளணிந்து தோளகளிற் சந்தனக்குழம்பாற் சித்திர மெழுதுவார்கள், பாதங்களிற் செம்பஞ்சின் குழம்பு பூசுவார்கள், முத்தாரமணிவார்கள், மலாமாலைகளை யலங்கரிப்பார்கள் என்பதாம். (௫௫)

[இதுமுதல் ஆறுபாட்டுகளால் அந்நகரிலுள்ளவா செய்யும் பலவிதச் செயகைகளுஞ் சொல்லபபடுகின்றன.]

கதிர்மதி தவழு மாடநீண் முகப்பிற் காழகிற் றீம்புகை யிடுவார், முதுமறை வாணர்க் கின்னமு தடுவார் மொய்கதிர் வெயிலகரந் தொழிய, மதிநில வொழுகு நித்திலப் பநதர் மாணுற வயின்வயி னிரைப்பார், சதிமுறை தவறுத் தண்ணுமை கறங்கக கூத்தியர் தனித்தனி நடப்பார்.

(இ - ள்.) கதிா மதி தவழும் - கிரணஙகளையுடைய சந்திரன் றவழ்கின்ற, மாடம் - உபரிகையினுடைய, நீள் முகடபில் - நீண்ட முகபபினில், காழ் அகில தீ புகை - வயிரம்பொருந்திய அகிலின இனிய புகையை, இடுவார் - இடுவாரகள, முது மறை வாணாக்கு - பிராமணர் களுக்கு, இன் அமுது அடுவார் - இனிய அமுது சமைபபாாகள்; மொய் கதிா வெயில் - மொயக்கபபெறற சூரியனது வெப்பமானது, கரந்து ஒழிய - ஒளித்துநீங்க, மதி நிலவு ஒழுகும் - சந்திரப்பிரகாசம் வீசுகின்ற, நித்திலம் பநதா - முத்துப்பந்தல்கள், மாண் உற - பெருமை பொருநத, வயின வயின் - இடங்கடோறும், நிரைப்பாா - செயவாாகள், சதி முறை தவறு - தாளவொத்தின முறைப்படி தப்பாமல், தண்ணுமை கறஙக - மததளம் ஒலிக்க, கூததியா - நாடகக்கணிகையா, தனிததனி - வேறுவேறாக, நடிபபாா - நாட்டியஞ் செய்வாாகள், எ - று.

(க - து.) மாடங்களிற் அகிற்புகை யூட்டுவாாகள், பிராமணர்களுக் கமுது சமைபபாாகள, முததுபபநத லிடுவாாகள, நாடகக்கணிகையா நடனமாடுவாாகள எனபதாம.

'மறைவாணாக் கின்னமுதடுவார்' எனப பொதுப்படக்கூறினும் உரிமையால் அந்நகரததிலுளள அநதணரெனக் கொள்க. 'தண்ணுமை கறங்க' என்றாரேனும் அவவவ நாட்டியஙகட் குரிய உறுப்புகள் பலவுங் கொளக. 'தனிததனி நடிபபாா' எனறதனால் டலவிடஙகளிலும பலவிதக் கூத்தும் ஆடுகின்றாரெனபத பெறறும. அக்கூததாவது, சாந்தி, விநோதம், என இருவகைததது. சாந்தியாவது—சொககம், மெய், அவிநயம், நாடகம், என - ச. அவற்றுள் சொக்கமாவது—சுததநிருத்தம், அது நூற்றெட்டுக் கரணமுடைத்து. மெயக்கூததாவது—தேசி, வடுகு, சிங்களம், இவை அகச்சுவையுாகிய முக்குணம்பற்றி எழுந்தவின் அக

மராக்க மெனப்படும். அவினயமாவது—கதைதழுவாது பாட்டுக்களின் பொருள் தோன்றக் கைகாட்டி வல்லடுஞ்செய்யுங் கூத்து. நாடகமாவது—கதை தழுவிவருங் கூத்து. இனி விநோதமாவது—குரவை (கைகோத்தாடுவது), கலிநடம் (கழாய்க்கூத்து), குடக்கூத்து (மாயனுடல்), கரணம் (படிந்தவாடல்), நோக்கு (பாரமும் நுண்மையும் ஆய முழுதலாயின), தோற்பாவை (தோலாற் பாவைசெய் தாட்டுவது). இன்னும் வசைக்கூத்தோடு ஏழெனடாருமுளர். இவ்வேழும் இழிகுலத்தோ ராடற்குரியன. இவற்றின் விகற்பமனைத்தும் இங்ஙனம் விரிக்கிற் பெருகுமாதலிற் சுருக்கிக்கூறினாம். (௫௬)

**எழிறிகழ் கன்னிக் கமுகமென் மிடற்றி னிசையெ**
**ழீஇ யினிதுபாட் டயர்வார், செழுமலர்க் காந்தண் முகிழ்**
**விரல் சேப்பத் திவவியா ழின்னரம் புளர்வார், முழு**
**நெறிக் குமுத முகைநெரித் தெனவாய் முகிழ்த்தருங் குர**
**வைகள் புரிவார், கொழுமலர் வளைக்கை கொட்டிவே**
**னெடுங்கட் கோதையர் குரவையாட் டயர்வார்.**

(இ - ள்.) எழில் திகழ் - அழகானது பிரகாசிக்கின்ற, கன்னி - இளமைபொருந்திய, கமுகம் மெல் மிடற்றில் - கமுகையொத்த மெல்லிய கண்டத்தில், இசை எழீஇ - இசையை யெழுப்பி, இனிது - இனிமையாக, பாட்டு அயர்வார் - பாட்டைப் பாடுவார்கள், செழு மலர் காந்தள் முகிழ் விரல் சேப்ப - வளம் பொருந்திய மலரையுடைய காந்தளரும் பையொத்த விரல்கள் சிவக்க, திவவு யாழ் இன் நரம்பு - வலிக்கட்டை யுடைய வீணையினுடைய இனிய நரம்பை, உளர்வார் - தடவுவார்கள், முழு நெறி - முழு நெறிப்பையுடைய, குமுத முகை - செவ்வல்லி யரும்பை, நெரித்தது என - நெரித்ததுபோல, வாய் முகிழ்த்து - வாயைக் குவித்துக்கொண்டு, அரு குரவைகள் புரிவார் - அரிய குரவைப்பாடலைப் பாடுவார்கள், கொழு மலர் வளை கை கொட்டி - செழுமையுள்ள தாமரை மலர்போன்ற வளையலை யணிந்த கைகளைக் கொட்டி, வேல் நெடு கண் கோதையர் - வேல்போன்ற நெடிய கண்களையுடைய மாதர்கள், குரவை ஆட்டு அயர்வார் - குரவைக் கூத்தாடுவார்கள், எ - று.

(க - து.) பெண்கள் பாடுவார்கள், வீணை வாசிப்பார்கள், குரவைப் பாடல் பாடுவார்கள், கைகளைக் கொட்டிக் குரவைக்கூத் தாடுவார்கள் என்பதாம்.

குரவையாவது காமமும் வென்றியும் பொருளாகக்கொண்ட பாடலைப் பாடிக்கொண்டு எழுவரேனும் ஒன்பதின்மரேனும் மாதர் கைபிணைத் தாடுவதாம். (௫௭)

**வெண்மதிக் கதிர்நூற் றனையவான் கவரி நெற்றிவெங்**
**கவினவாம் புரவி, பண்ணுறுத் திடுவார் குருதி தோய்**
**தோட்டுப் படுமதக் கலுழிவெஞ் சினத்த, வண்ணன்மால்**
**யானை கவினுறப் பருமித் தணிவிழா மறுகிடைக் கொணா**

**வார், மண்ணமை கொடிஞ்சிக் கூந்தன்மான் றடந்தேர்
வானவ ரூர்தியிற் றருவார்.**

(இ - ள்) வெள் மதி கதிர் - வெள்ளிய சந்திரனுடைய கிரணங்களை, தூற்றது அனைய - தூற்றதை யொத்த, வான் கவரி - மேலாகிய சாமரையணிந்த, நெற்றி - நெற்றியை யுடைய, வெம் கலினம் வாம் புரவி - வெய்ய கடிவாளம்பூண்ட தாவுகின்ற குதிரைகளுக்கு, பண் உறுத்திடுவார் - கல்லணை சேர்ப்பார்கள்; குருதி தோய் கோட்டு - உதிரந் தோய்ந்த கொம்பை யுடைய, படு மதம் கலுழி - உண்டாகின்ற மதப்பெருக்கையும், வெம் சினத்த - வெவ்விய கோபத்தையும், அனைவல் - பெருமையினையும், மால் - மயக்கத்தினையுமுடைய, யானை - யானையை, கவின் உற - அழகு பொருந்த, பருமித்து - அலங்கரித்து, அணி விழா - அழகிய திருவிழாவை யுடைய, மறுகிடை - வீதியிலே, கொணர்வார் - கொண்டுவருவார்கள், மண் அமை - ஒப்பனையமைந்த, கொடிஞ்சி - மேன்மொட்டையும், கூந்தல் மான் - புறமயிரினையுடைய குதிரைகளையு முடைய, தடம் தேர் - விசாலம்பொருந்திய தேர்களை, வானவர் ஊர்தியில் - தேவர் விமானங்களைப் போல், தருவார் - கொண்டு வருவார்கள், எ - று.

(க - து.) குதிரைகளுக்குக் கல்லணை யிடுவார்கள், யானைகளை யலங்கரித்து வீதியிற் கொண்டுவருவார்கள், தேர்களை யலங்கரித்துக் கொண்டுவருவார்கள் என்பதாம். (௫௮)

**இருங்கடற் றோன்று மழகதி ரேய்க்கு மெரிமணிச்
சிவிகையின் வருவார், சுரும்புவீழ்ந் தரற்ற மும்மதம் பொ
ழியுஞ் சூழிமால யானையிற் புகுவார், திருந்துமொள் சுழி
ய கூந்தன்மான் றேரிற் சேட்டிளம் பரிதியிற் செல்வார்,
பொருந்தமண் டோயா தகல்விசும் பகவும் பொங்குளைப்
புரவியிற் போவார்.**

(இ - ள்) இரு கடல் தோன்றும் - பெரியகடலிலுதிக்கின்ற, மழ கதிர் ஏய்க்கும் - இளஞ்சூரியனை யொக்கும், எரி மணி சிவிகையின் - பிரகாசிக்கின்ற ரத்நங்கள்பதித்த தண்டிகையில், வருவார் - வருவார்கள்; சுரும்பு - வண்டுகள், வீழ்ந்து அரற்ற - விரும்பி ஒலிக்க, மும் மதம் பொழியும் - மும்மதங்களையும் பொழிகின்ற, சூழி மால் யானையில் - முகபடாத்தையுடைய பெரிய யானையின்மேல், புகுவார் - வருவார்கள்; திருந்தும் - திருந்தப்பெற்ற, ஒள் - விளங்குகின்ற, சுழிய - சுழிகளையுடைய, கூந்தல் மான் - புறமயிரினையுடைய குதிரைகட்டிய, தேரில் - இரதத்தில், சேடு இளம் பரிதியில் - மிகுந்த இளமையையுடைய சூரியனைப்போல், செல்வார் - செல்வார்கள்; பொருந்த மண் தோயாது - பொருந்தும்படி பூமியிலே தோயாமல், அகல் விசும்பு அகவும் - அகன்ற ஆகாயத்தில் ஆடுகின்ற, பொங்கு உளை - மிகுந்த புறமயிரினையுடைய, புரவியில் - குதிரையின்மேல், போவார் - போவார், எ-று.

(க - து.) சிலர் அரதநசசிவிகைகளில வருவார்கள், சிலர் யானைக ளில் வருவார்கள், சிலர் தேர்களிற் போவார்கள், சிலர் குதிரைகள்மேற் போவார்கள் என்பதாம்.

இருந்து மொன்சுழிகளாவன கழுத்தினடியிலேனும் கணைக்காலி லேனும், மேலுதடு, முன்னங்கால், கன்னம், முழங்கால் ஆகிய இவ்வி களிலேனும் இரட்டைச்சுழிகளிருக்கின் ஆகாதனவாம். இவைகளின் றிக் கழுத்தில் வலஞ்சுழிததிருபபது தேவமணியாம். முசம், தலை, மூக்கு, மார்பு இந்நானகிடத்திலும் இரண்டிரண்டு சுழிகளும் நடுநெற் றி, பிற்பக்கம் இவைகளில ஒவவொரு சுழியும் இருககின் நல்லனவாம். சிரீவற்சமென்னுங குதிரைக்கு மார்பி லேநதுசுழி யிருக்கும். நெற்றியில் இருசுழியேனும் முசசுழியேனு மிருககினும நானகுசுழி வலம்புரியா யிருக்கினும் இரணடுசுழி முன்னங்காலடியி லிருக்கினும் நல்லனவாம். இவற்றின் விகற்பமெல்லாம் அயசீலாவதி யென்னும் வடநூலிற் காண்க. (௫௯)

நளிர்மதி தவழு மலையவெற் புயிர்த்த நறுங்குற டுரி ஞ்சுபூந் தேய்வை, தளர்கொடி மருங்கு லலமரப் பணைத் த தரளமென் முலைமுகட் டணிவா, ரளியின மோச்சி வள்ளவாய்த் தேற லமிர்தென நுகர்ந்துளங் களிப்பார், துளிமதுப பிலிற்றிக காவதங் கமழுந் தூமலர்ச் சிகழிகை புனைவார்.

(இ - ள்.) நளிர் மதி தவழும் - குளிர்ச்சிபொருந்திய சந்திரன் தவழ்கின்ற, மலைய வெற்பு உயிர்தத - பொதியமலை பெறற, நறு குறடு- நறிய சந்தனக்கட்டைகளால, உரிஞ்சு - தேயததத, பூந்தேயவை - அழ கிய குழம்பினை, தளர் கொடி மருஙகுல் - தளரபபெற்ற வல்லிபோன் ற இடையானது, அலமர - சுழற்சியடைய, பணைத்த தரளம் - பருத்த முத்துவடமணிந்த, மெல முலை முகடு - மெல்லிய முலைகளின்மேல், அணிவார் - பூசுவார்கள், அளி இனம் ஓச்சி - வண்டுக்கூட்டங்களை யோட்டி, வள்ளம் வாய தேறல் - கிண்ணததிலிருக்குந தேனை, அமிர் து என நுகர்ந்து - அமிர்தம்போலுண்டு, உளம களிபபார் - மனமகிழ் வார்கள், துளி மது பிலிற்றி - துளிகளையுடைய தேனையொழுக்கி, கா வதம் - காததூரமளவும், கமழும் - மணககும், தூ மலர் சிகழிகை - பரிசுத்தமாகிய மலரால் றொடுக்கப்பெற்ற மாலைகளை, புனைவார் - தரிப் பார்கள், எ - று.

(க - து.) சிலபெண்கள் சந்தனங்களைக் கனதனங்களிற் பூசுவார் கள், சிலபெண்கள் தேனுண்டு களிபபார்கள், சிலபெண்கள் மாலைகளைத் தரிப்பார்கள் என்பதாம். (௬0)

கிழலொடு கறுவிப் பாகெறிந் தூன்பெய் கிணைத்தொ டி பழகுகூன் பிறைக்கோட், டழிகவுட் கடாத்த தறுகண் மரல் யானையகற்றுமி னெயிற்புறத் தென்பார், மழைமதர் நோக்கி மன்றல் செய்காலை வல்லவர் கன்னலிற் றெரிவார்,

**விழைவொடு மகிழ்வுற் றளவளாய்ப் புகுந்தோர் வியப்புற விருந்தெதிர் கொள்வார்.**

(இ - ள்.) கிழவொடு கறுவி - (தங்கள்) கிழவொடு கோபித்து, பாகு எறிந்து - பாகனை வீசி, ஊன பெய - தசையைப் பெய்கின்ற, கிணத்தொடு பழகு - கிணத்தோடு பழகாநின்ற, கூன் பிறை கோடு - வளைவுபொருந்திய பிறைபோலும் கொம்பினையும், அழி - அழிகின்ற, கவுள் - கதுப்பினின் றொழுகுகின்ற, கடாத்த - மதத்தினையுமுடைய, நறுகன் மால் யானை - அஞ்சாத பெரியயானையை, எயில் புறத்து - மதிற்புறத்தில், அகற்றுமினை எம்பார் - நீக்குங்களென்பார்கள், மழை மதர் நோக்கி - தமயந்தியினது, மணமலி செய காலை - விவாகஞ் செய்யும்பொழுதை, வல்லவர் - (கணிதநூலில்) வல்லமையுடையவர்கள், கன்னலில் - நாழிகை வட்டிலால், தெரிவார் - தெரிந்துகொள்வார்கள்; விழைவொடு - விருப்பொடு, மகிழ்வுற்று - மகிழ்ச்சியை யடைந்து, அளவளாய - கலந்து, புகுந்தோர் - அடைந்தவர்கள், வியப்பு உற - அதிசயிக்க, விருந்து - விருந்தாக, எதிர்கொள்வார் - எதிர்கொள்வார்கள், எ - று.

(க - து.) யானைகளைக் கோட்டையின்புறத் தோட்டுவென்பார்கள், கணிதநூலில் வல்லவர்கள் தமயந்தி முகூர்த்தகாலத்தளவை நாழிகை வட்டிலா லறிவார்கள், வந்தோரை விருந்துக் கழைப்பார்கள் என்பதாம்.

நாழிகை வட்டிலாவது ஆழமுள்ள ஒரு பாத்திரத்திலே நீரை நிறைத்து அதிற் பிரமாணப்படிசெய்து அடியிற் றுளையிட்டிருக்கும் வெண்கல வட்டிலைவிடுகையில் அத்துளைவழியே நீர் உள்ளே நிரம்பி அமிழ்வது ஒருநாழிகை யெனக்கொண்டு காலத்தை யளவிடுதற்குரிய கருவியெனக் கொள்க. மகிழ்ச்சி - விருப்பினது காரியமாம். கிணம் - கொழுப்பு. (சுஅ)

[இதனால் அன்னந்தருதல் சொல்லப்படுகின்றது.]

**விரைகமழ் முல்லை முகைநிக ரடிசில் வெள்ளியங் கிரியெனக் குவிப்பார், கருனையுங் கன்னற் கட்டியுந் தேமாங் கனிகளும் வயின்வயி னிரைப்பார், திரைபொரு கடலி னறுநெயும் பாலுந் தெருத்தொறும் பெருக்கெடுத் தோட, வெரிபசும் பொன்னங் கலம்பல பரப்பி யிரவலர்க் கின்னமு தளிப்பார்.**

(இ - ள்.) விரை கமழ் முல்லை முகை நிகர் அடிசில் - வாசம் மணக்கின்ற முல்லையரும்பையொத்த சோற்றை, வெள்ளி அம் கிரி என - அழகிய வெள்ளிமலைபோல், குவிப்பார் - குவிப்பார்கள்; கருனையும் - பொரிக்கறியும், கன்னல் கட்டியும் - சருக்கரைக் கட்டியும், தேமா கனிகளும் - தித்திப்பு மாம் பழங்களும், வயின் வயின் - இடங்கள்தோறும், நிரைப்பார் - ஒழுங்குபட வைப்பார்கள், திரை பொரு கடலின் - அலைகள் மோதுகின்ற கடல்போல், நறு நெயும் - நறிய நெய்யும்,

பாலும் - பாலும், தெருதொறும் - தெருக்கடோறும், பெருக்கு எடுத்து ஓட - அதிகரித்தோட, எரி பசு பொன் கலம் - பிரகாசிக்கின்ற பசிய பொற்கலங்களை, பல பரப்பி - அநேகமாக வைத்து, இரவலர்க்கு - யாசகர்க்கு, இன் அமுது - இனிய சுவையுள்ள அமுதை, அளிப்பார் - கொடுப்பார்கள், எ-று. அம் - அசை.

(க - து) சாதங்களை வெள்ளிமலைபோற் குவிப்பார்கள், பொரிக் கறிகளையும் வெல்லககட்டிகளையு மாங்கனிகளையும் இடமெங்கு நிறைப்பார்கள், தெருக்களில் நெய்யுமட்டாலும் பெருகமெடுத்தோடப் பொற் கலங்களில் யாசகருக்கமுதளிப்பார்கள் என்ப டாம.

அமுதுக்கினிமையாவது தகுதியாகக் கலந்து கூட்டிய அறு சுவைகளாம். அவை தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, கசப்பு, துவர்ப்பு, உறைப்பு என ஆறு. இவை செய்யறகையால் பலவகைப்படும். அவை "நெய்விரவன்னஞ் சுத்தவெள்ளை சொன்றி நிகழ்த்தி யோதனம் பாற் சோ, றைவளர் மிளகின் வலசிம்மெனை கடுகி னமலைதன் ணிலவுங்கப் பொம்மல், செய்யவள் மாளருபடோனக்கு கடடிச் செழுமத மாதி மூரல்களும்" இதனுற காண்க. (௬௨)

[இதனால் தேவர் மனிதர் நாகர் செய்கை சொல்லப்படுகின்றது.]

வெள்ளியங் கிரியில விஞ்சையர் தொகுவார் விண்ணவ ரெண்ணிலர் புகுவா, ரள்ளிலை நெடுவே லரசர்வந் திறுப்பா ரந்தண ரளப்பிலர் திரிவா, ரொள்ளொளி விரிக் கும் பருமணிச் செஞ்சூட டுரகர்வெள் ளிடையறச் செறி வார், பள்ளநீர் கடலசூ ழெழுபெருந் தீவி லுறையுநர் பரிவினிற் றொகுவார்

(இ - ள்.) வெள்ளி அம் கிரியில் - அழகிய வெள்ளிமலையாகிய கைலாசத்தி லிருக்கின்ற, விஞ்சையர் - வித்தியாதரர்கள், தொகுவார் - கூடுவார்கள், விண்ணவர் - தேவர்களில், எண்ணிலர் - அளவில்லாதவர், புகுவார் - நுழைவார்கள், அள் இலை நெடு வேல் - (மாமிசத்தை) அள்ளிக் கொள்கின்ற இலையையுடைய நெடிய வேலையேந்திய, அரசர் - அரசர்கள், வந்து இறுப்பார் - வந்து தங்குவார்கள், அந்தணர் - பிராமணர்களில், அளப்பிலர் - அளவற்றவர்கள், திரிவார் - உலாவுவார்கள்; ஒள் ஒளி விரிக்கும் - மிகுந்த வொளியை விரிக்கின்ற, பரு மணி - பெரிய மணியினையுடைய, செம் சூடு - சிவந்த சூட்டினையுடைய, உரகர் - நாகர்கள், வெள்ளிடை அற - (எங்கும்) வெளியிட மில்லாமல், செறிவார் - நெருங்குவார்கள், பள்ளம் - ஆழம்பொருந்திய, நீர் - நீரையுடைய, கடல் சூழ் - கடலாற் சூழப்பெற்ற, எழு பெரு தீவில் - சத்த தீவில், உறையுநர் - வசிப்பவர்கள், பரிவினில் - அன்பினால், தொகுவார் - கூடுவார்கள், எ-று.

(க-து.) வித்தியாதரர்கள் கூடுவார்கள், அளவிலாத தேவர்களும் இராஜாக்களும் வந்து தங்குவார்கள், அளவிலாட பிராமணர்கள் திரிவார்கள், நாக வேந்தர்கள் நெருங்குவார்கள், சப்ததீவாருங் கூடுவார்கள் என்பதாம்.

[இதனால் மாதரிசைப்பாட்டின் சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

பொன்னவிர் திதலைப் பொம்மலவெம் முலையார் புனைமணி மாடக முறுகசி, யின்னரம் புளரும் பாடல் கேட் டுருகி யேழிசை மகரயாழ் பண்ணிக, கின்னர மிது னம் பாடலுக குடைந்து கீழ்ப்படு மிளிவர நோக்கி, மின் னகு சுடர்வேல விஞ்சையா மகளிா வியப்பொடு தலைப ணித் திடுவார்.

(இ - ள) பொன் அவிா திதலை - பொன்போல பிரகாசிக்கின்ற தேமல்பரந்த, பொமமல - பொலிவினையுடைய, வெம முலையாா - விருப்பததைசசெயகின்ற ஸ்தனஙகளையுடைய மாதாகள், புனை மணி ஆடகம் முறுகசி - ரதநஙகளபதிதத முறுககாணிகளைத திருகி, இன் நரம்பு உளரும் - இனிய நரமபைத தடவுகின்ற, பாடல் கேட்டு - பாடலைக்கேட்டு, உருகி - மனநகரைநது, ஏழ் இசை மகரயாழ - ஏழி சைகளையுடைய மகரயாழை, பண்ணி - செயது, கின்னரமிதுனம் - கின்னரமிதுனஙகள, பாடலுககு உடைநது - அபபாடடுககுததோற்று, கீழபபடும - தாழவுபடுகின்ற, இளிவரல நோககி - இழிவைப பாாதது, மின நகு - ஒளியை வீசுகின்ற, சுடா வேல - காநதிபொருநதிய வேலை யேந்திய, விஞ்சையா மகளிா - விஞசையா மாதாகள், வியபபொடு - ஆச்சரியத்தோடு, தலை - தலையை, பணிததிடுவாா-சாய்படாாகள, எ-று.

(க - து ) கனதனஙகளையுடைய பெண்கள வீணைவாசிககும் பாட லைக்கேட்டுருகி வித்தியாதரமாதாகள தலைவணஙகுவாாகள் எனபதாம்.

கினனரமிதுனம முலையாா பாடல்கேட்டுருகி யாழ்பண்ணி உடை ந்து கீழ்பபடு மிளிவரனோக்கி யெனக் கூட்டுக. ஏழிசையாவன — குரல், துததம, கைககிளை, உழை, இளி, விளரி, தாரம எனபனவாம். இவை பிறக்குமிடம்—கண்டம், நா, அணணம், தலை நெறறி, மாாபு, மூக்கு என எ, இவையே ஏழ்சுரமெனவும, வீணையி லேழ் நரம் பெனவுஞ் சொல்லுவா. இவற்றி னிசையுவமை—மயில், இடபம், ஆடு, கொக்கு, குயில், குதிரை, யானை என எ, அதிதேவதைகள — விசுவா மித்திரன், சமதககினி, சந்திரன, சூரியன், கௌதமன், காசிபன், ஈசன் என எ, யாழாவது — பேரியாழ், மகரயாழ, செங்கோட்டி யாழ், சகோடயாழ் என ச, இவற்றுள் பேரியாழிற்கு நரம்பு-உக, மகரயாழிற்கு - ககூ, சகோடயாழிற்கு - கசு, செங்கோட்டியாழிற்கு எ. அவற்று ளிது தண்டு, பததா, நரம்பு, முறுககாணி, கொழுவாணி முதலிய வுறுப்பமைந்த மகரயாழெனக் கொளக. பண்ணல், பரிவட் டணை, ஆராயதல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும் போக்கு என்னுங் கலைத்தொழில்க ளெட்டனுள் பண்ணலாவது பாட நினைக்கப்பட்ட பண்ணுக்கு இணை, கிளை, பகை, நட்பானநரம்புகள் பெறுந்தன்மை மாத்திரையறிந்து கட்டுதல், அவ்வாறு செய்தலின் 'மகரயாழ் பண்ணி' என்றாா. "பருந்து மதனிழலும் பாட்டுமெழாலுங், திருந்துதாாச் சீவகற்கே சோ்ந்தனவென்றெண்ணி, விருந்தாக யாழ் பண்ணி வீணைதான்றோற்பா, னிருந்தாளிளமயில்போ லேந்திலைவேற்

கண்ணுள்" எனப பிறரும் யாழ்பண்ணி யென்றா. இன்னர மிதுன மென்பது ஒரு தேவசாதி, அது "முன்னரசிங்கமதாகி யவுனன்மூக்கி யத்தை முடிப்பான மூவுலகின், மன்னரஞ்சுமது சூதனன்வாயிற் குழ லிஞேசை செவியைபபற்றிவாங்க, ரன்னரம்புடைய தும்புருவோடு நாரதனுந்தந்தம் வீணைமறந்து, இன்னர மிதுனங்களுந் தந்தங் கின்ன ரந் தொடுகிலோ மென்றனரோ" இதனுலறிக. இசைகருததோற்று நாணமடைதலால் 'தலைபணிததிடுவோா' எனறா. விஞ்சையரும் பாட லில் வல்லவரேனும மாண்டு நகரமாதருக்கு அம்மாதனாக் கூறினா. ஆடவரிசையினும் மாதரிசை விசேடமெனக கூறுதலு மொனறு. அன்றி விஞ்சையரு மகளிருமெனக் கொள்ளினும் அமையும். (கூச)

[இதனுற் கொடிகளின் சிறபபுச் சொல்லபபடுகின்றது.]

முகிறவழ் குடுமி மாடநீள் கொடிகண் மொய்மமணிக் கதிர்பரப் புதலா, னகர்வயிற் றுவர்வா யரிமதர் மழைக்க ணன்னுதல் வதுவைவேட் டடைந்த, வகலிரு விசும்பிற் பாயிருள் பருகு மருக்கர்பன் னிருவருந் தமது, பகலி டைப் பறந்து திரியுமின் மினியிற் படரொளி மழுங்கினர் திரிவார்.

(இ-ள்.) முகில் தவழ் குடுமி - மேகஙகள் தவழ்கின்ற சிகரத்தை யுடைய, மாடம் - உபரிகைகளின, நீள கொடிகள - நீண்டகொடிகள், மொய மணி - நெருங்கிய ரத்நங்களினது, கதிா பரப்புதலால் - கதிா களை விரிததலால், நகாவயின - அநநகரததில், துவாவாய - செவ்வாயை யும், அரி - செவ்வரிபரந்த, மதா - களிபபையுடைய, மழை கண்- குளிாச்சிபொருந்திய கண்களையுடைய, நல் நுதல் - தமயாந்தியினது, வதுவை - விவாகததை, வேட்டு அடைந்த - விரும்பிவநத, அகல் இரு விசும்பில் - அகன்ற பெரிய ஆகாயததில், பாய இருள பருகும் - பரவிய இருளையுண்ணும், அருக்கா பன்னிருவரும் - சூரியாகள் பன்னிரண்டு பேரும், தமது - தம்முடைய, பகலிடை - பகற்பொழுதில், பறந்து திரியும் - பறந்து திரிகின்ற, மின்மினியில - மின்மினிப பூச்சிகள்போல், படா ஒளி - படாகின்ற காந்தியை, மழுங்கினா - ஒழிநதவராகி, திரி வாா - திரிவாாகள், எ-று.

(க - து.) மாடங்களிற்கட்டிய கொடிகளி னிரத்நங்கள் அதிகபிர காசங்களை விரித்தலால் தமயந்தி விவாகத்திற்குவந்த பன்னிருசூரியா களு மின்மினிபோ லொளிமழுங்கித் திரிவாாகள எனபதாம்

அருக்கா பன்னிருவராவா—தாத்துரு, சக்கிரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன, பகவான், திவேச்சுரன், பூடன், சவித்திரு; துவட்டன் எனக்கொள்க. இவாகள் ஒவ்வொரு வரே அதிகப் பிரகாசமுள்ளவா, அப்படியிருக்க ஏககாலத்திற் பன்னிரு வரும் பகலிற்பறக்கு மின்மினிபோல மழுங்கினரெனில் அங்கரிற் கட் டிய கொடிகளின் மணிப்பிரகாசஞ் சொல்லவேண்டுவதில்லை யாயிற்று. அருக்கர் மின்மினியிற் றிரிவா ரெனலால் உவமையணி. (கூரு)

விண்ணகத் தமர ரளப்பில ரென்கோ விஞ்சையரளப் பில ரென்கோ, மண்ணகத் தரச ரளப்பில ரென்கோ வனி தைய ரளப்பில ரென்கோ, பண்ணமை களிறு கூந்தன் மான் றடந்தேர் பதாதிமற் றளப்பில வென்கோ, வெண் ணியுற் றுரைக்கி னித்துணை யென்ன வெம்மனோர்க் கியம் புமா றரிதே.

(இ-ள்.) விண்ணகத்து அமரர் - விண்ணுலகத்திருந்து வந்த தேவர்கள், அளப்பிலர் என்கோ - அளவிலரென்று சொல்லுவேனோ, விஞ்சையர் - வித்தியாதரர்கள், அளப்பிலர் என்கோ - அளவிலரென்று சொல்லுவேனோ, மண்ணகத்து அரசர் - மண்ணுலகத் திருந்துவந்த அரசர்கள், அளப்பிலர் என்கோ - அளவிலரென்று சொல்லுவேனோ, வனிதையர் - மங்கையர்கள், அளப்பிலர் என்கோ - அளவிலரென்று சொல்லுவேனோ, பண் அமை - ஒப்பனையமைந்த, களிறு - யானைகள், கூந்தல் மான் - புறமயிரினையுடைய குதிரைகள், தடம் தேர் - விசாலம் பொருந்திய தேர்கள், பதாதி - சேனைகள், (ஆகிய இவைகள்) அளப்பில என்கோ - அளவில்லையென்று சொல்வேனோ, எண்ணி உரைக்கின் - சிந்தித்துச் சொன்னால், இத்துணை என்ன - இவ்வளவென்று, எம்மனோர்க்கு - எம்போலியோர்க்கு, இயம்பும் ஆறு - சொல்லும் விதம், அரிது - அரிதாகும், எ-று. மற்று - அசைகள்.

(க - து.) தேவர்கள் அளவில்லை, வித்தியாதரர்கள் அளவில்லை, அரசர்கள் அளவில்லை, மாதர்கள் அளவில்லை, நால்வகைச் சேனைகளும் அளவில்லை, இவ்வளவென்று சொல்லல் எனக்கரிதென்றார் என்பதாம்.

ஏழைமை யுடையவரும் விவாகத்திற்குச் செல்லும்போது அநேகருடன் செல்வது வழக்கமாதலின், கிடைத்தற்கரிய பொருளாகிய தமயந்தியை விரும்பிவந்த செல்வங்களி லொருகுறைவுமின்றிய தேவர்கள் விஞ்சையர் நாகர் அரசர்முதலிய தலைவர்களையே இத்துணையெனக் குறிக்கக்கூடாதெனின் அவர்களில் ஒவ்வொருவருக்கே அநேக பரிவாரமிருக்குமாதலின் அப்படி அநேகருக இருத்தலால் அவற்றையு மளவு படுத்தல் மற்றைப் புலவர்க்கு மரிதென்பார், 'எம்மனோர்க் கியம்புமா றரிது' என்றார். (௯௯)

[இதனால் வீமன் சுயம்வரமண்டபத்துக்கு வருதல் சொல்லப்படுகின்றது.]

எரிகதிர்ப் பசும்பொன் முகடுவேய்ந் தோங்கி யேழிரு காவத மகன்ற, நிரைமணி குயிற்றி மணவினைக் கமைத்த நித்தில விதானமண் டபத்திற், புரிமுறுக் கவிழ வண்டு பாண் முரன்று பூந்துகள் குடைந்துதே னுகரும், விரை கமழ் நறுந்தார் துயல்வரு தடந்தோள் விதர்ப்பர்கோ னினிதுவந் தடைந்தான்.

(இ-ள்.) எரி கதிர் பசு பொன் முகடு வேய்ந்து - ஒளிவிடுகின்ற கிரணங்களையுடைய பசிய பொன்னால் சிகரங்கூட்டி, ஓங்கி - உயர்ந்து,

ஏழ் இருகாவதம் அகன்ற - பதினாலுகாதவழி பரந்த, விளை மணி குயிற்றி - ஒழுங்காக இரத்நங்கள் பதித்து, மணம் வினைக்கு அமைத்த - விவாகக்கிரியைக்குச் செய்த, நிதநிலம் விதானம் மண்டபத்தில் - முத் தினுற்செய்த மேற்கட்டியையுடைய மண்டபத்தின்கண், புரிமுறுக்கு அவிழ - கட்டினது முறுக்குவிரிய, வண்டு பாண் முரன்று -வண்டுகள் இராகங்களை யிசைத்து, பூ துகள் குடைந்து - மகரந்தங்களைக் குடைந் து, தேன் நுகரும் - தேனையுண்ணும், விரை கமழ் நறுதார - வாசனை கமழ்கின்ற நறிய மலாமாலையானது, துயல்வரு - அசைகின்ற, தடம் தோள்- பருத்த தோளையுடைய, விதாப்பாகோன - வீமராஜன், இனிது உவந்து - இனிதான மகிழ்ச்சிகொண்டு, அடைநதான் - வந்தனன், எ - று.

(க - து.) செம்பொற்சிகரம் பொருத்தி இரத்நங்கள் பதித்து முத்து மேறகட்டி கட்டிப பதினான்குகாதவழி விஸ்தாரம் போடுவித்த பந்தலாகிய கல்யாணமணடபததுள் வீமசேன மஹாராஜன் வந்துசேர்ந் தான் என்பதாம்.

இனிதுவத்தல் - மிகமகிழுதல். இச் சுயம்வரததிற்குத் தலைவன் வீமராசனுதலால் இதைககுறிதது வநத தேவா, விஞ்சையா, நாகர், அரசா முதலியவாகளுககு மரியாதை செய்யும் பொருட்டு மனமகிழ்ச்சி யுடன் விதிபபடி செயது அலஙகரிததிருககும் விவாகமண்டபத்திற்குத் தான் முன்னே வந்தன னெனக. (௬எ)

[இதனுல் திரிலோகததரசரும் வருதல் சொல்லப் படுகின்றது.]

குழவிவெண் டிங்கண் மணிவடங் கிடந்த குங்குமக் குலவரைத் தடந்தோண், மழகளி றனைய விதர்ப்பர்கோன் பணியால் வானகத தமரர்தங் குழுவு, மொழுகொளி மணிச்சூட் டுரகருஞ் சேடி யுறைதரு விஞ்சையர் கணமு, மெழுகடல் வரைப்பின் மன்னரும் தேன்வேட் டிரைத் தெழு சுரும்பின்வந் தடைந்தார்.

(இ - ள.) குழவி வெள் திஙகள் - இளமையதாகிய வெள்ளிய திங்கள்போனற, மணி வடம் கிடந்த - சநதிரஹாரம் இருந்த, குங்கு மம் - குங்குமமணிந்த, குல வரை - குலாசலமபோனற, தடம் தோள் - பருத்த தோளையுடைய, மழ களிறு அனைய - இளங்களிற்றை யொத்த, விதாபபாகோன் பணியால் - வீமராஜ னேவலினுல், வானகததது அம ரா குழுவும் - விண்ணுலகததவாகள் கூட்டமும, ஒழுகு ஒளி மணி சூடு - ஒளி வீசுகின்ற உச்சிமணியையுடைய, உரகரும - நாகவேந்த ரும், சேடி உறைதரு - விஞ்சையருலகத்தி லிருக்கும், விஞ்சையா கண மும் - வித்தியாதரா கூட்டமும், எழு கடல் வரைப்பின் மன்னரும் - சத்ததீவிலுள்ள அரசரும், தேன் வேட்டு இரைத்து எழு சுரும்பின் - தேனை விரும்பிச் சத்தித்து எழுகின்ற வண்டுகள்போல், வந்து அடைந்தார் - வந்து சேர்ந்தாாகள்; எ - று.

(க - து.) வீமராஜன் கட்டளையினால் தேவாகூட்டமும், நாகாகூட்டமும், வித்தியாதராகூட்டமும் அரசாகூட்டமும் வந்து சேர்ந்தன என்பதாம்.

தேனைவிட வண்டிற்கு இனிமைசெய் துயிராகாபபது வேறொரு பொருளில்லாமையால் 'தேன் வேட்டினைத் தெழுசுரும்பின்' என்றார். உவமிக்கப்படும் பொருட்கும் இவ்வுரை கொள்க. விதாப்பாகோன் பணியால் அடைந்தாரெனக் கூட்டுக. சேடி - விஞ்சையருலகம். அது "சேணியுஞ் சேடியும் விஞ்சையா சோவிடம்." இதனாலறிக. அமரர் குழுவும், உரகரும், விஞ்சையா கணமும், மன்னரும், என்னு மெழுவாய்கள் அடைந்தார என்னும் வினைமுற்றுப் பயனிலை கொண்டன. சுரும்பின் வந்தடைந்தாரெனலால் உவமையணி. (சுஅ)

[இதனால் இந்திரன் முதலிய நால்வரும் வருதல் சொல்லபபடுகின்றது.]

கொய்துணர்த் தருவி னறுநிழ லமர்ந்த குரைகழல் விண்ணவர்க் கரசுஞ், செய்யகட் கயவா யெருமையே றுகைக்குந் தென்றிசைக கடவுளுங் கனலும், வெய்யவான் சிகைய செந்தழற் கிறையும் விரிதிரைக் கனைகடல் வேந்து, நெய்துடைத் தொளிரு மள்ளிலை நெடுவே னிடதர்கோ னுருவொடு மடைந்தார்.

(இ - ள்.) கொய் துணா - பறிக்கின்ற பூங்கொததுகளை யுடைய, தருவின - ஐந்தருவினுடைய, நறு நிழல அமாநத - நறியநிழலின் கண்ணே தங்கிய, குரை கழல் - ஒலிக்கினற வீரககழலை யணிந்த, விண்ணவாக்கு அரசும - இநதிரனும், செயய கண் - சிவந்தகண்களையும், கய வாய் - பெரியவாயையு முடைய, எருமை ஏறு உகைக்கும் - எருமைக்கடாவைச் செலுததுகினற, தென திசை கடவுளும் - யமனும், கனலும் செம் தழற்கு இறையும் - சுடுகினற அக்கினிபகவானும், விரி திரை - விரிக்கின்ற அலைகளையும், கனை - ஒலியையுமுடைய, கடல் வேந்தும் - சமுத்திரராஜனுகிய வருணனும், நெய் துடைதது - உதிரத்தைத் துடைத்து, ஒளிரும - விளஙகுகினற, அள இலை நெடு வேல் - (மாமிசத்தை) யள்ளுகினற இலையையுடைய நெடிய வேலையுடைய, நிடதாகோன் உருவொடும் - (தாஙகொணட) நளனது வேடத்துடன், அடைந்தாா - வந்தாாகள், எ - று.

(க - து.) இந்திரனும், இயமனும், அக்கினிதேவனும், வருணனும் நளனுருக்கொண்டு வந்தாாகள என்பதாம்.

உருவங்கொண் டடைந்தாரெனப பாடங்கொள்ளின் முன்னே அன்னவ னுருவுதாங்கி யணிநகா மேயினாரென திருப்பதால் கூறியது கூறலென்னுங் குற்றமாதலின் உருவொடும் மடைந்தாரெனப் பாடங்கொண்டு முன்கொண்ட வுருவோடும் இப்பொழு தடைந்தாரெனப் பொருள் கொள்ளப்பட்டது. நெய் - நிணமெனினு மமையும். (சுகூ)

[இதுமுதல் ஐந்துபாட்டால் நளன் சுயம்வர மண்டபத்
துக்குப் புறப்படுஞ் சிறப்புச் சொல்லப்
படுகின்றது.]

மோட்டிளங் கயவாய் நெறிமருப் பெருமை முலைவழி
யொழுகிய தீம்பால், சேட்டிளங் குருகின் பார்ப்பினம் அருந்
துஞ் செழுவய னிடதர்கோன் மருமான், பாட்டிளஞ்
சுரும்பர் பேட்டொடு முரன்று பருமுகை விரிக்குநாண்
முல்லைச், சூட்டணிந் தம்பொற் சுடர்முடி கவித்துத் தொ
டுகழ னரலவீக் கினனால்.

(இ - ள்.) மோடு - உயர்வும், இள கய வாய் - இளமை பொருந்
திய பெரிய வாயையும், நெறி மருப்பு - நெறித்த கொம்புகளை
யுமுடைய, எருமை - எருமைகளினுடைய, முலை வழி - முலைவழியாக,
ஒழுகிய தீ பால் - வந்த தித்திப்புப்பாலை, சேடு இள - மிகுந்த
இளமைபொருந்திய, குருகின் பார்ப்பு இனம் - நாரைகளினுடைய
குஞ்சுக்கூட்டங்கள், அருந்தும் - உண்ணுகின்ற, செழு வயல் - செழுமை
பொருந்திய வயல்கள் சூழ்ந்த, நிடதர்கோன் மருமான் - நிடததேசத்
தை யாளுகின்ற நளமகாராசன், பாட்டு - பாட்டுக்களை, இள் சுரும்பர் -
இளவண்டுகள், பேட்டொடும் - பெட்டைகளுடன், முரன்று - பாடி,
பரு முகை விரிக்கும் - பெரிய அரும்புகளை மலர்த்துகின்ற, நாள்
முல்லை சூட்டு அணிந்து - புதிய முல்லை மாலையையணிந்து, அம் பொன்
சுடர் முடி கவித்து - அழகிய பொன்னாற்செய்த இரணங்களையுடைய
மகுடத்தைக் கவித்துக்கொண்டு, தொடு கழல் - தொடுக்கின்ற வீரக்
கழலை, நரல - ஒலிக்க, வீக்கினன் - கட்டினான், எ-று. ஆல் - அசை.

(க-து.) நளமஹாராஜன் மணிமுடிசூட்டி வீரகண்டாமணி யணிந்
தரித்தான் என்பதாம்.

புல்லுகளை வயிறாரமேய்ந்து நீருண்டு உடையவரால் காக்கப்படுத
லால் "முலைவழி தீம்பாலொழுகிய வெருமை" என்றார். பால்பருகிய
வயலென்க் கொள்க. மருமான் - வழித்தோன்றல், அது "மருமான்
பிறங்கடையும் பல்வழித்தோன்றல்" இதனாலறிக. நிடததேசத்திலுள்ள
வழியிற்றோன்றிய நளனெனக் கொள்க. (௪௭)

கூற்றினை யன்னகை குருதிகொப் புளிக்குங் கூற்று
டை வாண்மருங் கசைத்துப, பாற்றினஞ் சூழல விளைப்பு
லசல் தமரும் பாயொளி பரிதிவே லேந்தி, நாற்றிசைக்
கமல முகைமுறுக் கவிழ நாறில்பரித் தேரினு மேறி
னோன், கூற்றின னென்ன நிழலுமிழ் கொடிஞ்சிக் கட்டு
மணித் தேர்மிசைப் பொலிந்தான்.

(இ - ள்.) கூற்றின் அன்ன - யமனுடைய [illegible]
[illegible] கொப்புளிக்கும் - உதிரத்தை யுமிழ்கின்ற [illegible]
[illegible]
[illegible]

மூம் - உதிர நாற்றம் நாறுகின்ற, பாய் ஒளி பரிதி - பரவப்பெற்ற காந்தியையுடைய சூரியன்போன்ற, வேல் ஏந்தி - வேற்படையைத் தாங்கி, நூறு இதழ கமல முகை - நூறிதழ்களையுடைய தாமரை யரும்புகள், முறுக்கு அவிழ - கட்டவிழ, நொறில் - வேகத்தை யுடைய, பரி - குதிரைகட்டிய, தேர - தேரையுடைய, இள கதிரோன் - பாலசூரியன், தோற்றினன் என்ன - உதயமானானென்று சொல்ல, நிழல் உமிழ் - நிழலைக் கொப்புளிக்கின்ற, கொடிஞ்சி - மேன் மொட் டையுடைய, சுடர் மணி - கிரணங்களையுடைய இரதநங்கள் பதித்த, தேர்மிசை - தேரின்மேல், (நளமகாராசன்) பொலிந்தான் - தோன்றி னான், எ - று.

(க - து.) நளமஹாராஜன் குற்றுடைவாள் பக்கத்திற்சொருகி வேலாயுதந் தாங்கிச சூரியனைப்போலத் தேரிலேறினன் என்பதாம்.

யமன் நாவினால் அநேகரைக் கொல்லும்படி சொல்லுதலால் அக் கொலைத்தொழிலா லுண்டாகிய உதிரத்துக்கு அவனது நாவானது கார ணமாதல்பற்றி அதுபோல் 'குருதி கொப்புளிக்கும் உடைவாள்' என் றார். நாவைப்போற் சிவந்து அடிபரந்து முனை கூரியதெனினும் அமை யும். அன்றிக் குருதி கொப்புளித்தலை உடைவாளுக்கு விசேடண மாக்கி நாவென்னக் குற்றுடைவாளெனக் கூட்டின அத்துணைச் சிறப பின்றும். உணவளிப்பவரை உண்பவ ரெபபோதுஞ் சூழ்வராதலால், அதுபோல் தமக்கு விருந்து செய்யும் வேற்படையைப் பருந்துகள் நீங்காமையால், 'பாற்றினஞ்சுழல நிணப்புலால் கமழும்வேல்' என்றார். சூரியனைக்கண்டு தாமரை மலர்தல்போல், நளனைககண்டு மாதர்முகம் மலர்ச்சி பெறுதல் கொள்க. நளன் றேரிற் பொலிதலால் 'தேரிளங்கதி ரோன் றோற்றின னென்ன' எனச் சூரியனை அவனுக்கு உவமையாக் கினார். இது உவமையணி. (எக)

இன்னகைத் துவர்வா யிளமுலை மகளி ரெரிமணிப் படியக மேந்தப், பொன்னவிர் திதலைப் பொம்மல்வெம் முலையார் பொழிகதிர்ச் சாமரை யிரட்ட, மின்னென நுட ங்கு மருங்குலார் மருங்கின் வெள்ளிடை யுதவினர் செல லத், தென்வரைச் சாந்து நாளமென் சேறுந் திசைதிசை காவதங் கமழ.

(இ - ள்.) இன் நகை - இனிய நகையையும், துவர் வாய் - செவ வாயையும், இள முலை - இளமைபொருந்திய ஸ்தனங்களையுமுடைய, மகளிர் - மாதர்கள், எரி மணி - ஒளிவிளங்குகின்ற மணிகளிழைத்த, படியகம் ஏந்த - (தம்பலப்)படிக்கமேந்திவர, பொன் அவிர் திதலை - பொன்போலும் விளங்குகின்ற தேமலையுடைய, பொம்மல் வெம் முலை யார் - பொலிவுபெற்ற விருப்பத்தைத்தருகின்ற முலைகளை யுடைய மாதர்கள், பொழி கதிர் சாமரை இரட்ட - கிரணங்களை வீசுகின்ற சாமரை வீசிவர, மின் என நுடங்கும் - மின்னல்போல் அசைகின்ற, மருங்குலார் - இடையையுடைய மாதர், மருங்கின் - அருகிலிருந்து, வெள் அடை உதவினர் செல்ல - தாம்பூலத்தைக் கொடுத்துக்கொண்டு

வர, தென் வளை சாந்தும் - பொதியமலையிற் பிறந்த சந்தனக் கட்டையாற் சேர்க்கப்பட்ட சந்தனமும், நானம் மெல் சேறும் - கஸ்தூரியினது மெல்லிய குழம்பும், திசைதிசை - எட்டுத்திக்குகளிலும், காவதம - காததூரமளவும், கமழ - பரிமளிக்க, எ-று.

(க-து.) அந்தளமஹாராஜன் கனதனங்களையுடைய சிலபெண்கள் நவமணிகளிழைத்த தம்பலப்படிக்கங்களேந்தவும், சிலபெண்கள் சாமரைகள் வீசவும், சிலபெண்கள் பஞ்சவாசங்கள் பொருந்திய பாக்கு வெற்றிலைகள் மடித்துக்கொடுக்கவும், சந்தனங் கஸ்தூரி திக்கெங்கும் பரிமளிக்கவும் என்பதாம்.

நகை - பல், புன்சிரிப்பெனினுமொக்கும். துவர் - பவளமுமாம். மகளிர், முலையார், மருங்குலார் எனப் பன்மையாகக் கூறினமையால் நளன் சக்கிரவர்த்தியாதலாலும் செல்வமிகுதியாலும் ஒரு தொழிலைப் பலர்செய்தன ரெனக. "ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால் வெள்ளிலையெனவே துவர்க்காய், சுண்ணம், வாசந்தருபண்ட முதலியவுங் கொள்க. அவை "தகரந் தக்கோலங் கோட்டஞ் சாதிக்கா, யிலவங்க மேலங் கச்சோல மாஞ்சிப், பகரும் வாசந் தரு பண்டப்பெயரே" இதனாலறிக. இப்பாட்டு முதல் மூன்றுபாட்டும் குளகமாய் நளனென்னுந் தோன்றாஎழுவாய் மூன்றும் பாட்டிற் புகுந்தானென்னும் வினைமுற்றுப்பயனிலை கொண்டுமுடிந்தது. (௭௨)

குளிர்மதி பொருவ நிலவுகொப் புளிக்குங் கொற்ற
வெண் கவிகைமே னிழற்ற, வளியினம் புடைக்குந் தழை
செவிப் பருஉத்தா ளரசுவா விருபுடை நெருங்க, முளரி
மென் மலர்த்தா டொழப்புகு மரசர் முடியொடு முடிபொ
ரு துகுத்த, வொளிகிளர் பசும்பொற் றுகள்பரந் தவனி
யும்பர்தம் பதியினிற் சிறப்ப.

(இ - ள்.) குளிர் மதி பொருவ - குளிர்ச்சிபொருந்திய சந்திரனை யொப்ப, நிலவு கொப்புளிக்கும் - பிரகாசத்தை யுமிழ்கின்ற, கொற்ற வெள் கவிகை - வெண்கொற்றக்குடை, மேல் நிழற்ற - மேலே நிழலைச் செய்ய, அளி இனம் புடைக்கும் - வண்டினங்களை ஓட்டுகின்ற, தழை செவி - தழைத்த காதுகளையும், பரு தாள் - பருத்த கால்களையுமுடைய, அரசு உவா - உத்தமயானைகள், இரு புடை நெருங்க - இரண்டுபக்கத்திலும் நெருங்கிவர, முளரி மெல் மலர் தாள் - தாமரையின் மெல்லிய மலர்போன்ற பாதங்களை, தொழ புகும் - வணங்குதற்கு வருகின்ற, அரசர் - அரசர்களுடைய, முடியொடு முடி பொருது - மகுடங்களோடு மகுடங்கள் தாக்கி, உகுத்த - உதிர்த்த, ஒளி கிளர் பசு பொன் - ஒளி விளங்குகின்ற பசியபொன்னாலாகிய, துகள் பரந்து - தூளிகள்பரவி, அவனி - பூமியானது, உம்பர்தம் பதியினில் - பொன்னகர்போல், சிறப்ப - சிறப்பையடைய, எ-று.

(க - து.) வெண்குடை பிடிக்கவும் யானைகள் இருமருங்கும் வருகவும் அரசர்கள் வணங்கவும் என்பதாம்.

அரசுவாவென்றது எழுமுப்பு நிலந்தோய்ந்து வெள்ளிய நகத்த தாய்க் காலாலுங் கையாலும் வாலாலும் கோட்டாலும் பகையைக் கொல்லவல்லதாய் ஏழு முழமுயர்ந்து ஒன்பது முழநீண்டு பதின் மூன்றுமுழஞ் சுற்றளவுடையதாய்த் தீயுமிழ் சிறுகணுஞ் செம்புகரு முடைத்தாய் முன்புயர்ந்து பின் பணிந்திருப்பதாம். அது "காலொ ருநான்குந் துதிக்கையுங் கோசமும், வாலுமுறுப்போ டேழுமாநிலந் தோய்ந்து, பாலுஞ் சங்கும்போலக் காலுகிர், காலினுநான்றவொரு தனிக்கையினும், வாலினு மருப்பினுங் கோறல் வல்லதாய்ப், பதின் மூன்றுமுழச்சுற் றுடையதாகி, யெழுமுழமுயர்ந் தொன்பதுமுழ நீண்டு, தீயுமிழ் சிறுகணுஞ் செம்புகரு முடைத்தாய், முன்புயர்ந்து பின்பணிந்ததாயி னவ்யானை, அரசுவாவென்ன வறையவும்படுமே" இதனாலறிக. (௭௩)

**உரவுநீர்த் தரங்கக் கடலுடைந் தென்ன வொலி கெழு பல்லியந் துவைப்ப, மருவலர்க கடந்த வொளிறு வாள் விசய மாகத ரினிதினேத் தெடுப்பத், திருகுவெஞ் சினத்த வரிசிலை யுழவர் சேட்டிளம் புலியெனச் சூழ, வெரிபசும் பொன்செய் மாடநீண் மறுகி னிந்திர குமர னிற் புகுந்தான்.**

(இ-ள்.) உரவு நீா - ஒலியையுடைய நீர்நிறைந்த, தரங்கம் - அலை வீசுகின்ற, கடல் உடைந்தது என்ன - சமுத்திரமுடைந்ததுபோல், ஒலி கெழு பல் இயம் துவைப்ப - சப்தமிகுந்த நானாவித வாத்தியங்களை முழக்க, மருவலா கடந்த - சத்துருக்களை வென்ற, ஒளிறுவாள் - பிர காசிக்கின்ற வாட்படையினது, விசயம் - (வீரமுதலிய) வெற்றியை, மாகதா - வந்தியாகள், இனிதின் - இனிமையினால், ஏத்து எடுப்ப - துதி செய்ய, திருகு வெம் சினதத - மாறுபடுகின்ற வெவ்விய கோபத்தை யுடைய, வரி சிலை உழவா - நெடிய வில்லேந்திய காலாள்கள், சேட்டு இளம் புலி என சூழ - மிகுந்த இளமைபொருந்திய புலிப்போத்துப் போல் சூழ்ந்துவர, எரி பசு பொன் செய் - ஒளிவிடுகின்ற பசியபொன் னாற்செய்த, மாடம் - உபரிகைகளையுடைய, நீள மறுகில் - நெடியவீதி யில், இந்திர குமரனில் - இந்திரகுமரன்போல், (நளமகாராசன்) புகுந் தான் - போயினான், எ-று.

(க-ரு.) பலவாத்தியங்கள் முழங்கவும் புகழ்வோா துதிசெய்ய வும் சுத்தவீராகள் சூழவும், இராஜவீதியில் இந்திரனைப்போல வந்தான் என்பதாம்.

கடலுடைதலின் மிக்க வொலியின்றாதலால் அதைப் பல்லியத்துக் குவமையாக்கினார். பகைவரைக் கடத்தலின் மிக்க வென்றி யின்றென்பு தற்கு மருவலாக்கடந்த வாள்விசய மெனப்பட்டது. வீரத்தொடு பாயு தல்பற்றிச் சிலையுழவாக்குப் புலி யுவமையாயின. இந்திரகுமரன் - இந் திரனுடைய குமரனும். அரசாட்சி, செல்வம், போகம் முதலியவற்றிற் குறைவில்லாமையால் இந்திரகுமரனை யுவமிக்கப்பட்டது. இது உவ மையணி. (௭௪)

[இதுமுதற் பதினொருபாட்டால் சுயம்வரமண்டபத்திற்
குச் செல்கின்ற நளனைக்கண்ட மங்கையர்கள் தாங்
கொண்ட விரகத்தால் வேறுவேறாகக் கூறு
தல் சொல்லப்படுகின்றது.]

**அலங்குளைப் புரவித் தேர்மிசைப் பொலிந்த வர
சிளங் குமரனை நோக்கி, நலங்குடி யிருந்த நாகிள வேய்த்
தோ ணங்கையர் பலரும்வந் தீண்டி, விலங்கிவில் லுமிழு
மொருபெருஞ் சேடி விஞ்சையர் குமரனே வென்பார்,
பொலங்குழை மடவா ருளம்புகுந் துருக்கும் பூங்கணைக
குமரனே வென்பார்.**

(இ - ள்.) அலங்கு உளை புரவி - அசைகின்ற புறமயிரினையுடைய குதிரைகட்டிய, தேர்மிசை பொலிந்த - தேரின்மேல் விளங்கிய, அரசு இள குமரனை நோக்கி - நளமகாராஜனைப் பார்த்து, நலம் குடி இருந்த - நன்மைதங்கிய, நாகு இள வேய் தோள் - மிகுந்த இளமையுள்ள மூங்கிலையொத்த தோள்களையுடைய, நங்கையர் பலரும் - மாதர்களனைவரும், வந்து ஈண்டி - வந்துசேர்ந்து, விலங்கி - தனித்தனியாக, வில் உமிழும் - ஒளியைவீசுகின்ற, ஒரு - ஒப்பற்ற, பெரு - பெரிய, சேடி - விஞ்சையருலகத்திருக்கின்ற, விஞ்சையர் குமரனே என்பார் - விஞ்சையர்க்கரசனே வென்பார்கள், பொலங்கு உழை - பொற்குழைகளையணிந்த செவிகளையுடைய, மடவார் - மங்கையர்களுடைய, உளம் புகுந்து - உள்ளத்தினுழைந்து, உருக்கும் - (அதைக்) கரைக்கின்ற, பூ கணை குமரனே என்பார் - மலரம்புகளையுடைய மன்மதனே வென்பார்கள், எ-று.

(க - து.) மாதர்கள் பலரும் தேர்மேல்வரும் நளனைப்பார்த்து வித்தியாதரனே என்பார்கள், மன்மதனே என்பார்கள் என்பதாம்.

பெண்களுக்கு வேண்டும் நற்குண மனைத்தும் எப்பொழுதும் நீங்காதிருத்தலால் 'நலங்குடி யிருந்த' என்றார். நங்கையர் பலரும் இவன் செல்லுதல் ஆரவாரத்தாற் றெரிந்தன ரெனக்கொள்க. விஞ்சையர் குமரன் - விஞ்சையர்க்கரசன், மடவாருளத்தை யுருக்குதலால் 'பூங்கணைக்குமரனே' என்றார். விலங்கியென்பதற்கு - இருளை விலக்கி யென விகாரமாக்கினுமமையும். இது ஐயவணி. (௪௫)

**வண்டுழா யலங்க றுயல்வரு தடந்தோண் மணிநிற
வண்ணனே வென்பார், தெண்டிரைக் கடல்வாய்ச் சூர்
முத றடிந்த சினவுவேற குமரனே வென்பார், விண்டலத்
தியங்கு மந்திரமறந்து வீழ்ந்திய வியக்கனே வென்பார்,
கெண்டையந் தடங்கண் பெற்றபே றின்றே கிடைத்தனம்
யாமெனக் கிளப்பார்.**

(இ - ள்.) வண் துழாய் அலங்கல் துயல்வரு - வளம்பெற்ற துளபமாலை அசைகின்ற, தடம் தோள் - பருத்த தோள்களையுடைய, மணி நிற வண்ணனே என்பார் - நீலரத்ந நிறத்தையொத்த நிறத்தை

யுடைய காரணனோ வென்பாாகள்; தெள் திரை கடல்வாய் - தெளி ந்த அலேமோதுகின்ற கடலிடத்தே, சூா முதல் தடிந்த - சூரபன்ம னுகிய முதல்வனைக்கொன்ற, சினவு வேல் குமரனே என்பாா - கோ பஞ் செய்கின்ற வேற்படையையுடைய குமாரக்கடவுளோ வென்பாா கள்; விண் தலத்து இயங்கும் - ஆகாயத்திற் சஞ்சரித்தற்குரிய, மந் திரம் மறந்து - மந்திரத்தை மறந்துவிட்டு, வீழ்ந்து - வீழ்ந்து, இயல் - பூமியில் சஞ்சரிக்கிற, இயக்கனே என்பாா - இயக்கனே வென்பாா கள்; கெண்டை அம் தடம் கண் - சேலையொத்த அழகிய விசாலம் பொருந்திய கண்களை, பெற்ற பேறு - பெற்றுக்கொண்ட பேற்றை, இன்றே - இப்பொழுதே, யாம் - நாம், கிடைத்தனம் என - பெற்றன மென்று, கிளப்பாா - சொல்வார்கள், எ.று.

(க - து.) விஷ்ணுவோ எனபாாகள், சுப்பிரமணியனே என்பாா கள், இயக்கனே எனபாாகள், கண்கள் பெற்றதற்குக காட்சிபபேற றைப் பெற்றேம் எனபாாகள் என்பதாம்.

இங்ஙனஞ் சொல்லிய தேவாக ளழகையொதத அழகும் அவா செய்கையையொதத செய்கையும் நளனுக் கிருததலால் மாதாகள் இவ்வாறு கூறினா. கண்களுக்குப் பேறுவது அழகுள்ள ஒரு பொரு ளைக் காண்டலாம். இதுவு மவ்வணி. (எசு)

ஈர்க்கிடை புகாம லடிபரந் தோங்கு மேரிள வன முலேத் துவர்வாய்த், தாக்கணங் கனையார் நாணமு மட னுஞ் சங்கமுங் கலேயுமுண் ணிறையும், போகினர் புலம் பிக் கண்கவர் வனப்பிற் புரவலன் றடம்புயம் புல்லு, மேக் கற வதனு லுள்ளமவிட் டகலு மின்னுயிர் தாங்கினர் மெ லிவார்.

(இ - ள்.) ஈாக்கு இடை புகாமல் - இடையி லீர்க்கு நுழைதற்கிட மில்லாமல், அடி பரந்து ஓங்கும் - அடிபரந்தோங்கிய, ஏா இள வன முலே - அழகும் இளமையும் சந்தனக்கோலமும் பொருந்திய ஸ்தனங் களையும், துவா வாய் - செவ்வாயையுமுடைய, தாக்கு அணங்கு அனை யாா - இலக்குமியையொதத மடவாாகள், நாணமும் - நாணத்தையும், மடனும் - மடமையையும், சங்கமும் - வளையையும், கலேயும் - ஆடை யையும், உள் நிறையும் போக்கினா - உள்ளேயிருக்கின்ற கற்பையும் ஒழித்தவராகி, புலம்பி - இரங்கி, கண் கவா வனப்பின் - கண்களின் பார்வையை தன்னிடத்தே யிழுத்துக்கொள்கின்ற அழகையுடைய, புர வலன் - நளமகாராஜனுடைய, தடம் புயம் - பருத்ததோள்களை, புல் லும் - தழுவவேண்டுமென்னும், ஏக்கறவு அதனுல் - ஏக்கத்தினுல், உள் ளம் விட்டு அகலும் - உள்ளத்தைவிட்டு நீங்கும், இன் உயிா - இனிய வுயிரை, தாங்கினா - சுமந்தவராகி, மெலிவாா - வாடுவார்கள், எ - று.

(க-து.) இலக்குமிக்கொப்பான பெண்கள் நாணம் மடம் வளேகள் ஆடை கற்பு இவையிழந்தவாகளாய் நளனைக்கூடும் ஆசையா லுயிரை வைத்திருந்தார்கள்

நாணமுதலிய வைர்தையும் போக்கினமாதா நளனைத் தழுவல் வேண்டுமென்ற ஆசையினால் அகத்தைவிட்டு நீங்கு முயிணைத்தாங்கி வருந்தி யிருந்தன ரென்க. (௭௭)

[இது நாகமங்கையர் சொல்லியது.]

பாட்டளி துதைந்து பருமுகை யவிழ்க்கும் பைந் துணர்த் தெரியல்சூழ் கூந்தற், சூட்டுடை யுச்சி நாகமங் கையர்தந் துணைமுலை பசப்பவந் தெய்தி, வாட்டிறற் குரி சில் செயிரற விளங்கும் வனப்பெலாம் வந்திய ருரைப்பக், கேட்டகண் கண்டு களிப்புற நோக்கிக் கிடைத்ததெத் தவ மெனக் கிளப்பார்.

(இ - ள்.) பாடு அளி துதைந்து - இசையைப்பாடுகின்ற வண்டு கள் நெருங்கி, பரு முகை அவிழ்க்கும் - பெரிய அரும்புகளை விரிக்கின்ற, பைந்துணா - பசிய பூங்கொத்துகளாற்செய்த, தெரியல் சூழ் கூந்தல் - மாலைசுற்றிய அளகபாரததையும, சூடு உடை உசசி - உசசிக் கொண் டையையுமுடைய, நாக மஙகையா - நாகலோகததது மாதா, தம் துணை முலை - தம்முடைய இரண்டு ஸதனஙகளும், பசப்ப - வேறுபட்ட நிறத்தையடைய, வந்து எய்தி - வநதுசோநது, வாள் திறல் குரிசில் - நளமகாராசனது, செயிா அற விளஙகும் - குற்றமில்லாமல் பிரகாசிக் கின்ற, வனபபு எலாம - அழகனைததையும, வநதியா உரைபப - புகழ வோாகள் சொல்ல, கேட்ட - கேள்வியுறற, கண் - கண்களானவை, கண்டு - பாாத்து, களிப்பு உற - களிபபை யடைய, நோக்கக்கிடைத்தது - பார்க்கக்கிடைததது, எத்தவம என - எபபொழுதுசெய்த தவமென் று, கிளப்பாா - சொல்லுவாாகள், எ-று.

(க - து.) நளனுடைய அழகைப் புகழ்வோராற் கேள்விப்பட்ட கண்களாகிய செவிகளே இனறுநீஙகள் நளனைக காணபபெற்றது எக் காலஞ் செய்ததவமோ எனறாாகள் நாகமங்கையாகள் என்பதாம்.

நளனுடைய அழகை வந்தியராற் கேள்விப்பட்ட கண்களே இப் பொழுது காணக்கிடைததது எப்பொழுதுசெய்த தவமென நாகமங் கையர் கண்ணையே செவியாகக்கொண்டமையால் இருவகை யின்பமும் ஒருகாலத்து ஒன்றனால் பெற்றமையால் வியந்து இவ்வாறு கூறினா ரென்க. நாகமங்கையருக்குக் கண்ணே செவியென்பது "பணியேகட் செவி பாம்பெனபபடுமே" "பரிச முருக்காண்டல் பகர்கேள்வி யோர் பான், மருவுமணிப்பூணினான் வந்தான்" இவற்றாலறிக. (௭௮)

[இது அரமங்கையா சொல்லியது.]

அமைத்தட மென்றோ ளரம்பையர் திதலை யணிந்த பொற் றடமுலைப் பாரஞ், சுமக்கலா தொல்கி நுழைமருங் கொசியத் துகிற்கொடி மறுகின்வந் தெய்திச், சமர்த்தலை யுடன்றோ ராருயிர் பருகுந் தாமவேற் குரிசிலை நோக்கி, யிமைப்பிலா காட்டம் பெற்றபே றின்றே யெய்தின மெனா மகிழ்ந் திசைப்பார்.

(இ - ள்.) அமை தடம் மெல் தோள் அரம்பையா - மூங்கிலையொத்த பருத்த மெல்லிய தோள்களையுடைய அரமங்கையர்கள், திதலை அணிந்த - தேமலையணிந்த, பொன் தடம் முலை பாரம் சுமக்கலாது - அழகிய பருத்த முலைகளினுடைய சுமையைப் பொறுக்கமாட்டாமல், ஒல்கி - துவண்டு, நுழை மருங்கு ஒசிய - நுட்பமாகிய இடையானது வருந்த, துகில் கொடி மறுகின் - வஸ்திரக்கொடிகளையுடைய வீதியிலே, வந்து எய்தி - வந்துசேர்ந்து, சமரத்தலை உடன்றோர் - யுத்தகளத்தில் பொருதவர்களுடைய, ஆர உயிர் பருகும் - நிறைந்த ஆவியை உண்கின்ற, தாமம் வேல் - வெற்றிமாலைதரித்த வேற்படையையுடைய, குரிசிலை நோக்கி - நளமகாராஜனைப் பார்த்து, இமைப்பு இலா நாட்டம் - இமையாவிழிகளை, பெற்ற பேறு - அடைந்த பேற்றை, இன்றே - இப்பொழுதே, எய்தினம் என - அடைந்தனமென்று, மகிழ்ந்து - மகிழ்ச்சியடைந்து, இசைப்பார் - சொல்லுவார்கள், எ-று.

(க - து.) அரம்பையர்கள் நளனைப்பார்த்து இமையாக்கண்கள் பெற்றதற்குப்பேறு இன்றே பெற்றோம் என்பார்கள் என்பதாம்.

முலைப்பாரஞ் சுமக்கக்கூடாதிருந்தும் நுண்ணிய இடைவருந்த அரம்பையர் எய்தியது தாம் எப்பொழுதுங் கேள்விப்பட்டும் அறியாத அழகு இவனிடத் திருத்தலா லெனக. இந்திரன் முதலிய தேவரிடத்து மில்லாது இவனிடத்துள்ள அழகைக்கண்டு இமையா விழிகள் பெற்றபேற்றை யடைந்தனமென்றா ரெனக. (எக)

கலைவலா னெஞ்சிற் காதன் மீதூர்ந்து கடிமணங் குறித்திவண் புகுதப், புலவுநா றழல்வேல விதர்ப்பர்கோன் மடந்தை புரிந்ததெத் தவமெனப் புகல்வா, ரிலைகுலாம் பைம்பூ ணரசிளங் குமர ரெண்ணிலர் விரும்பிமே விடினுஞ், சிலைவலாற் கன்றிச் செழுமலர்த் தெரியல் சேயிழை புனையுமோ வென்பார்.

(இ - ள்.) கலைவலான் - நளமகாராஜனானவன், நெஞ்சில் - மனதில், காதல் மீதூர்ந்து - ஆசை அதிகரித்து, கடிமணம் குறித்து - விவாகத்தைக்குறித்து, இவண் புகுத - இந்நகரில் வருதற்கு, புலவு நாறு - புலானாற்றநாறுகின்ற, அழல் வேல் - தீயையொத்த வேற்படையையுடைய, விதர்ப்பர்கோன் மடந்தை - வீமராசன்பெற்ற தமயந்தியானவள், புரிந்தது - செய்தது, எத்தவம் என புகல்வார் - என்ன தவமென்று சொல்லுவார்கள்; இலை குலாம் - இலை விளங்குகின்ற, பைம் பூண் - பசிய ஆபரணங்களையுடைய, அரசு இளங்குமரர் - இராஜகுமாரர்கள், எண்ணிலர் - அளவற்றபோர், விரும்பி மேவிடினும் - இச்சித்து வந்தாலும், சிலை வலாற்கு அன்றி - இவ்வரசனுக்கல்லாமல், செழு மலர் தெரியல் - செழுமைபொருந்திய மலர்மாலையை, சேயிழை - தமயந்தியானவள், புனையுமோ என்பார் - தரிப்பாளோ வென்பார்கள், எ-று.

(க - து.) நளன் வருதற்குத் தமயந்தி என்னதவஞ் செய்தாளோ என்பார்கள், தமயந்தி நளனுக்கன்றி மற்றை யரசர்களுக்கு மாலையிடுவாளோ என்பார்கள் என்பதாம்.

'விதர்ப்பர்கோன் மடந்தை புரிந்த தெத்தவம்' எனலால், இப்படிப்பட்ட அழகுள்ள புருடனை மாலையிடத் தாமும் அத்தவஞ்செய்யலாமென்பது கருத்து. இந்நளன் குணம் மற்ற அரசர்களுக் கில்லாமையால் தமயந்தி மாலைசூட்டமாட்டா ளெனறூா. (௮௦)

திரைக்கட லுடுத்த மாநில நிழற்றுந் திங்களங் கவிகைமன் னவரு, மருக்கமழ் தருவி னீழல்வீற் றிருக்கும் வானவர் தொகுதியும வருகென், றரத்தமுண் டொளிரு மள்ளிலை நெடுவே லரசர்கோ னழைத்தது குழைக்குங், கருப்புவில் லொழித்த காமனே யனையான் கவினலங் காட்டுதற் கென்பார்.

(இ - ள்.) திரை கடல் உடுத்த - அலைமோதுகின்ற கடலை ஆடையாகத்தரித்த, மா நிலம் நிழற்றும - பெரிய பூமிககு நிழலைச் செயகின்ற, திங்கள் அம் கவிகை மன்னவரும - சநதிரவட்டக் குடையையுடைய அரசர்களும், மரு கமழ் - வாசங்கமழ்கின்ற, தருவின் நீழல் - கற்தருவினீழலில், வீற்றிருககும் - அரசிருககினற, வானவர் தொகுதியும் - தேவர் கூட்டமும், வருக என்று - வரக்கடவீரென்று, அரதம் உண்டு ஒளிரும் - உதிரததைட்புசிதது விளங்குகின்ற, அள் இலை - மாமிசத்தை அள்ளிக் கொள்கின்ற இலையையுடைய, நெடு வேல் - நெடிய வேற்படையையுடைய, அரசர்கோன் - வீமராசன், அழைத்தது - அழைப்பித்தது, குழைக்கும் - வளைக்கப்பெறற, கருப்பு வில் ஒழித்த - கருப்புவில்லை நீக்கிய, காமனே அனையான் - மன்மதனையொதத நளனுடைய, கவின் நலம் - அழகினலததை, காட்டுதற்கு என் பார - காண்பித்தற்கென்று சொல்வார்கள், எ-று.

(க-து.) வீமன் அரசரையுந் தேவரையும் அழைப்பித்தது நளனழகைக்காட்ட வென்பார்கள் என்பதாம.

சுயம்வரமென்று குறித்து வீமன் தேவர் முதலியவரைத் தன் னகரில் அழைப்பித்தது, நளமகாராசனது மிகுந்த அழகைக்காட்டற்காம். அதிலே அவனுக்கு அவசிய மென்னெனில் அப்படிப்பட்டவன் தன் மருகனுதல்பற்றிப் போலும். (௮௧)

மண்ணுள வன்றிம் மன்னவன் றிணிதோண் மணிவரைப் பனைப்பென மகிழ்வார், கண்ணுள வன்று காவல னலங் காண்பதற் கெனமனங் களிழ்வார், பண்ணுள வன்றே யமிர்தினிற் றேனிற் பாகினிற் பழுத்தவன் றீஞ்சொல், பெண்ணுள வன்றே யாணவா வுறுமிப் பேரொழி லென்று பேசுறுவார்.

(இ - ள்.) மண் அளவு அன்று - பூமியைமாத்திரம் ஆளும் அளவு டையதன்றாகும், இம் மன்னவன் - இவ்வரசனுடைய, திணி தோள் - வலிமைபொருந்திய தோளாகிய, மணி - அழகிய, வரை பணைப்பு என - மலையினுடைய பருமனென்று, மகிழ்வார் - மகிழ்ச்சியடைவார்கள், கண் அளவு அன்று - கண்களா லெட்டும் அளவன்றாகும், காவலன் - அரசனுடைய, அகலம் - மார்பு, காண்பதற்கு என - பார்ப்பதற்கென்று, மனம் கலுழ்வார் - மனமானது கலங்குவார்கள்; பண் அளவு அன்று - பண்களினுடைய அளவன்றாகும், அமிர்தினில் - அமிர்தம்போலும், தேனில் - தேன்போலும், பாகினில் - பாகுபோலும், பழுத்த - (சுவை) முதிர்ந்த, அம் தீ சொல் - சாதுர்யமாகிய மதுரம் பொருந்திய சொல் லென்பார்கள்; பெண் அளவு அன்று - பெண்கள் மாத்திர மயங்கும் அளவின தன்றாகும், ஆண் அவா உறும் - ஆண்மக்களும் விரும்பும், இ பேர் எழில் என்று - இப்பெரிய அழகென்று, பேதுறுவார் - அறிவு மயங்குவார்கள், எ-று.

(க - து.) நளனது தோளையு மார்பையுங்கண்டு மயங்குவார்கள் என்பதாம்.

திரிலோகத்தையும் ஆளத்தக்க புயவலிமை இவனுக் கிருத்தலால், தோளுக்குத் 'திணி' என்னும் அடை கொடுக்கப்பட்டது. இவன் மார்பு பார்த்தற்கெட்டாமற் கண்ணளவினும் பரந்திருந்ததெனக. பண்ணென்பது பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என நான்கு வகைப்படும். இவன் மொழி அவற்றினு மிக்கிருத்தலால் 'அமிர்தினிற்றேனிற் பாகி னிற் பழுத்தவந் தீஞ்சொல்' என்றார். ஆணவாவுதல் யாமும் பெண் பிறப்பெடுத்திருந்தோமானால் இப்படிப்பட்ட அழகுள்ள புருடனைச் சேரலாமென்று விரும்புதலாம். (அ௨)

கருணையங் கடல்வாய் மடைதிறந் தொழுகுங் கண்க ளுங் கதிர்மதி முகமு, முருகுகொப் புளிக்குஞ் செழுமலர்த் தொடைதாழ் முழவுறழ் திணிதடந் தோளும், பருகுவபோல நோக்குவா னோற்ற படைநெடுங் கண்கள்போன் முலைகா, ளருவரை யகல மின்புறத் திளைப்ப வருந்தவம் புரிந்திலீ ரென்பார்.

(இ-ள்.) கருணை அம கடல்வாய் - அருளாகிய அழகிய கடலிலுள்ள, மடை திறந்து ஒழுகும் - மடை திறந்து வருகின்ற, கண்களும் - நேத் திரங்களையும, கதிர் மதி முகமும் - கிரணங்களையுடைய சந்திரன் போன்ற முகத்தையும், முருகு கொப்புளிக்கும் - தேனையுமிழ்கின்ற, செழு மலர் தொடை தாழ் - செழுமையுள்ள மலர்மாலை தாழ்கின்ற, முழவு உறழ் - மத்தளத்தையொத்த, திணி தடம் தோளும் - வலிமை பொருந்திய பருத்த புயங்களையும், பருகுவ போல - உண்பனபோலு, நோக்குவான் - பார்க்கும்படி, நோற்ற - தவஞ்செய்த, படை நெடுங் கண்கள்போல - வாட்படையையொத்த நெடிய கண்களைப்போல், முலைகாள் - ஸ்தனங்களே, அருவரை - அரியமலையையொத்த, அகலம் - (இந்நளன்) மார்படை, இன்பு உற - இன்ப மிக, திளைப்ப - அழுந்தத் தழுவ

தற்கு, அரு தவம் புரிந்திலீரா - செய்தற்கரியதவத்தைச் செய்தீரில்லை, என்பார - என்பார்கள், எ-று.

(க - து.) நளனுடைய கண்களையு முகத்தையும் தோள்களையும் பார்க்கத் தவம்பண்ணிய கண்களைப்போல கனதனங்களே அவன் மார்பைத் தழுவத் தவம்பண்ணிலீர என்பார்கள் என்பதாம்.

முலைகாள்! அரசனுடைய பல அவையவங்களை நோக்கிக் களிக்குந் தவஞ்செய்யப் பெற்ற கண்களைப்போல் அவன மார்பை மாத்திர மேனும் பொருந்தும்படியான அருந்தவம் நீங்கள் செய்திலீ ரென்றூர். இதனால் தவஞ்செய்தவா வேண்டியவை யடைவரென்பது கருத்து. அது "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ, மீண்டு முயலப் படும்" இதனாற் காண்க. (அ௩)

பணிமுடிக் கிடந்த பார்பொது நீக்கிப் பரித்திடு மரசிளங் குமரன், மணியெழு வனைய மல்லலந் திணிதோள் வனப்பெலாங் கண்டுகண் டுவப்ப, விணர்விரி பசுந்தார் துயல்வரத் தொடுத்த வெரிமணிக் கொடிஞ்சியந் தேர் கொண், டணிகெழு மறுகின் மெலவெனச் செல்கென் றலங்குளைப் புரவியைத் தொழுவார்.

(இ - ள்.) பணி முடி கிடந்த பார - ஆதிசேடன் றலைமேலிருந்த பூமியை, பொது நீக்கி - பலவரசர்க்கும் பொதுமையாயிருப்பதை நீக்கி, பரித்திடும் - (முழுவதும் தானொருவனே) சுமக்கின்ற, அரசு இள குமரன் - நளனுடைய, மணி எழு அனைய - மணித்தூணையொத்த, மல்லல் அம் திணி தோள - வளப்பொருந்திய அழகிய வலிமைபெற்ற தோள்களினுடைய, வனப்பு எலாம் - அழகனைத்தையும், கண்டு கண்டு - நோக்கி நோக்கி, உவப்ப - மகிழ்ச்சியடைய, இணர விரி பசு தார துயல் வர - பூங்கொத்துகள் விரிந்த பசிய மலர்மாலை அசைய, தொடுத்த - கட்டப்பெற்ற, எரி மணி - ஒளியையுடைய மணிகள்பதித்த, கொடிஞ்சி அம் தேர்கொண்டு - மேன்மொட்டையுடைய அழகிய தேரைக்கொண்டு, அணி கெழு மறுகில் - அழகுபொருந்திய வீதியில், மெல் என செல்க என்று - மெள்ளப்போகென்று, அலங்கு உளை புரவியை - அசைகின்ற புறமயிர்களையுடைய குதிரையை, தொழுவார - வணங்குவார்கள், எ-று.

(க - து.) நளனழகைக்கண்டு மகிழ்ந்த தேரிற்கட்டிய குதிரைகளை மெல்லச் செல்லென்று தொழுவார்கள் என்பதாம்.

இடையாது கிடைத்த நளமகாராசனுடைய அழகைப் பார்த்த மங்கையர் இன்னுஞ் சிறிதுபொழுது பார்த்தற்கு இடையூறாகத் தேரை விரைவிற்கொண்டுபோதலாலே, தமமாற் றொழப்படுதற்குரியதல்லதாகிய விலங்கின் பிறப்புடைய குதிரையையும் வணங்கினாக ளென்பதாம். இதனால் ஒருவருக்குத் தன்னன்பு தெரிவித்தற்கு வணக்கம்போல மற்றொன்றில்லை யென்பது கருத்து. (அ௪)

வேலெனமிளிர்ந்து குமிழ்மிசை மறிந்து வேளினைக் கரசிய ஸ்வித்துச், சேலெனப் பிறழ்ந்து குழையெதிர்

**நடந்து செவ்வரி பரந்துமை தோய்ந்து, காலனிற் சினவிக் கொலைத்தொழில் புரியுங் கருந்தடங் கண்ணினார் தமது, மாலுற விடுத்த மனத்தினுங் கடிதோ வாவுமான் றேரெனத் தொடர்வார்.**

(இ - ள்.) வேல் என மிளிர்ந்து - வேற்படைபோல் விளங்கி, குமிழ்மிசை மறிந்து - குமிழம்பூவினையொத்த மூக்கின் மேற்பக்கத்தில் தடைபட்டு, வேனிலார்க்கு - மன்மதனுக்கு, அரசியல் அளித்து - அரசாட்சியைக் கொடுத்து, சேல் என பிறழ்ந்து - கெண்டைபோல் ஒளிசெய்து, குழை எதிர் நடந்து - குழையெனப்படுகின்ற காதணிக்கு முன்பாகச்சென்று, சே அரி பரந்து - சிவந்த ரேகைகள் பரவப்பெற்று, மை தோய்ந்து - அஞ்சனத்திலே அமிழ்த்தி, காலனில் சினவி - யமன்போலக் கோபித்து, கொலை தொழில் புரியும் - கொல்லுந் தொழிலைச் செய்கின்ற, கரு தடம் கண்ணினார் - கரிய விசாலம்பொருந்திய கண்களையுடைய மாதர்கள், தமது மால் உற - தம்முடைய மயக்கம் பொருந்த, விடுத்த - அனுப்பப்பட்ட, மனத்தினும் - மனத்தைக்காட்டிலும், கடிதோ - கடுமையுடையதோ, வாவும் மான் - தாவுகின்ற குதிரைகட்டிய, தேர் என - தேரென்று, தொடர்வார் - அத்தேரின் பின் செல்லுவார்கள், எ-று.

(க - து.) பெண்கள் விடுத்த மனவேகத்தைப்பார்க்கிலுந் தேர் அதிகவேக முடையதென்று தொடருவார்கள் என்பதாம்.

வேனிலாற் கரசிய லளித்தலாவது இவள் கடைக்கண்டார்வைக ளானவை திரிலோகத் தரசரையும் விரகங்கொண்டு வருந்தச்செய்து மன்மதனுடைய தொழிலை விரத்தியாக்குதலாம். மனோவேகத்தினுங் குதிரை வேகஞ் சிறிதாதலால் மாதர்கள் தமது 'மனத்தினுங் கடிதோ வாவுமான்றேர்' என்றார். (அரு)

**கண்டுகண் டுருகி யினையராய் மனனுங் கருந்தடங் கண்களுங் களிக்கும், வண்டிமிர் கூந்தல் வனிதையர் வருந்த மணிநெடு வீதிவா யகன்று, கொண்டல்கண் படுக்கும் வரையினின் றிழியுங் கோளரி யேறென நிவந்த, விண்டொடு கொடிஞ்சித் தேரினின் றிழிந்து மேவருமவ் வேத்தவை புகுந்தான்.**

(இ - ள்.) இனையராய் - இத்தன்மை யுடையவராய், கண்டு கண்டு - பார்த்துப்பார்த்து, மனனும் - மனமும், கரு தடம் கண்களும் - கரிய பெரிய கண்களும், களிக்கும் - களிக்கின்ற, வண்டு இமிர் கூந்தல் - வண்டுகள் ஒலிக்கின்ற அளகத்தையுமுடைய, வனிதையர் - மங்கையர்கள், உருகி வருந்த - கரைந்து துன்பமுற, மணி நெடு வீதி வாய் - அழகிய நெடிய தெருவின்கணின்றும், அகன்று - நீங்கி, கொண்டல் கண்படுக்கும் - மேகங்கள் நித்திரை செய்கின்ற, வரையினின்று இழியும் - மலையினின்று இறங்குகின்ற, கோள் அரி ஏறு என - வலிமைபொருந்திய சிங்கவேற்றைப்போல, நிவந்த, விண் தொடு [illegible]

உயர்ந்த ஆகாயத்தை யளாவிய, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, தேரினின்று இழிந்து - இரதத்தினின்று மிறங்கி, மேவரும் - (ஒப்ப னை) பொருந்திய, வேந்து அவை - இராஜசபையில், (நளனுனவன்) புகுந்தான் - புகுந்தனன், எ-று.

(க - து.) மாதாகள் வருந்த நளன் தேரைவிட்டிறங்கி இராஜ சபையிற் புகுநதான் என்பதாம்.

வேந்தவை வேத்தவை யெனச் சந்தவின்பநோக்கி விகாரமா யிற்று. 'வரையினின்றிழியுங் கோளரியேறென' என்றமையால் உவ மையணி. (அசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

[இதனுல் சபையிலிருந்த அரசாகளுடைய தன்மை கூறப்படுகின்றது.]

**தெரியல்சூழ்குவவுத்திண்டோட்சிலைவலானினிதினெய்த**
**வரசவையிருந்தசெவ்வியரசிளங்குமரரெல்லாங்**
**குரைகடன்முகட்டிற்றேன்றுங்குளிர்மதிகாண்டலோடும்**
**விரிகதிர்மழுங்குவானினமீனினமென்னலானுர்.**

(இ-ள்.) தெரியல் சூழ் - மாலைகள் சூழ்ந்த, குவவு - திரட்சிபொ ருந்திய, திண் தோள - வலிமைபெற்ற புயதகையுடைய, சிலைவலான் - விற்போரில் வல்லவனுகிய நளமகாராஜன, இனிதின் எய்த - இனிமை யால் அடைய, அரசு அவை இருநத - (அடபொழுது) இராஜசபையி லிருந்த, செவவி - அழகிய, அரசு இள குமரா எல்லாம் - இராஜ குமாராக ளனைவரும், குரை கடல முகட்டில் தோனறும் - ஒலியை யுடைய கடலுச்சியிலுதிககினற, குளிா மதி காண்டலோடும் - குளிாச் சிபொருந்திய சநதிரனைக கணடவளவில, விரி கதிா மழுங்கும் வா னில் - விரிநத கிரணஙகளி னொளிகெடபபெற்ற ஆகாயததிலிருக் கின்ற, மீன் இனம் எனனல் ஆனுா - உடுக்கணமென்று சொல்லும்படி யாயினுாகள், எ-று.

(க - து.) நளன்முன் னிருந்த அரசாகளெல்லாம் சந்திரன்முன் னிருந்த நட்சத்திரங்கள்போ லானுாகள என்பதாம்.

கதிர்மழுங்கினும் உடுக்கணததிற்குச் சந்திரனிடத்து வெறுப் பின்றி விருப்புமிகுதல்போல், அழகிற்குறைந்த அரசாகளுக்கு நளனி டத்து விருபபுமிகுதல் கொளக. உடுககணததிறகுச சநதிரனிடத்து மகிழ்ச்சியுண்டாதல் அவன் உடுபதியாதலாலும் சிலவற்றிற்குத் துணை வனுதலாலு மென்க. வடிவினுல் மாததிரமின்றி விற்போா முதலிய வற்றினு மிக்கவனென்பது தோன்ற 'குவவுத்திண்டோட் சிலைவலான்' என்றுா. (அஎ)

[இதுவுமது.]

**குருமணியிமைக்கும்பைம்பொற்கோபுயர்குடுமிக்குன்றம்**
**பொருவுமண்டபத்தினூடுபூண்சுடர்தவழப்புக்க**

**செருமலிதானைவேந்தன்றிருமுகந்திங்களாக**
**வரசர்வாண்முகங்களெல்லாமம்புயம்போன்றவன்றே.**

(இ - ள்.) குரு மணி இமைக்கும் - நிறம்பொருந்திய ரத்நங்கள் பிரகாசிக்கின்ற, பை பொன் - பசிய பொன்னாற்செய்த, கோடு உயா குடுமி - உச்சியுயர்ந்த சிகரங்களையுடைய, குன்றம் பொருவும் - மலையை யொத்த, மண்டபத்தினூடு - விவாகமண்டபத்தில், பூண் சுடர் தவழ - ஆபரணங்களின் ஒளி விளங்க, புக்க - புகுந்த, செரு மலி தானை வேந்தன் திருமுகம் - நளமகாராஜனுடைய திருமுகமானது, திங்களாக - சந்திரனாக, அரசா - அரசாகளுடைய, வாள் முகங்களெல்லாம் - ஒளி பொருந்திய முகங்களனைத்தும், அம்புயம போன்ற - தாமரைமலரை யொத்தன, எ-று. அன்று, ஏ-அசைகள்.

(க - து.) நளன் முகம் சந்திரனாகவும், அரசாகள் முகம் தாமரைமலர்கள் போலவு மிருந்தன என்பதாம்.

திங்களைக்கண்ட வளவிலே தாமரைமலாகள் குவிதல்போல், நளனைக் கண்டவளவில் அரசாமுகங்கள் வாடின வென்க. இதனால் அரசாகளழகினும இவனழகு மேற்பட் டிருந்ததென்பது கருத்து. திங்களென்னும் உருவகம் அம்புயம் போன்றவென்னும் உவமையொடு கலத்தலாற் கலவையணி. (அஅ)

[இதனால் தேவாகள் பொறாமை சொல்லப் படுகின்றது.]

**கடிமலர்ப்பகழியேந்துங்காமனுநாணும்பொற்பி**
**னடல்கெழுபரிதிவைவேலையனையினிதினோக்கித்**
**தொடுகழலமரர்யாருந்துயரொடுமழுக்காறெய்தி**
**வடிவினிற்சிறந்தானேனுமானிடனலனேயென்றார்.**

(இ-ள்.) கடி மலா பகழி ஏந்தும் - வாசனைபொருந்திய பூங்கணை களை யேந்திய, காமனும் - மனமதனும, நாணும் - நாணததக்க, பொற்பின் - அழகையுடைய, அடல் கெழு - வெற்றிமிகுந்த, பரிதி - சூரியன் போன்ற, வை வேல் - கூரியவேலையுடைய, ஐயனை - நளமகாராஜனை, இனிதின் நோக்கி - இனிமையினால் பாாதது, தொடு கழல் அமரர் யாரும் - கட்டபபட்ட வீரக்கழலையுடைய தேவாகளனைவரும், துயரொடும் - துன்பத்துடன், அழுக்காறு எய்தி - பொறாமை கொண்டு, வடிவினில் சிறநதானேனும் - (இந்நளன்) உருவத்திற் சிறந்திருந்தா னேனும், மானிடன் அலனே என்றா - மனிதப்பிறப்பை யுடையவ னல்லனோ வென்றாகள், எ-று.

(க - து.) தேவாகள் நளன் அழகில் மிகுந்திருந்தாலும் தேவ னல்லன் மனிதன்றானே என்றாகள் என்பதாம்.

அழகிற்சிறந்த நளனைத் தேவாகள் மற்றொன்றிலுங் குறைவுபடுத் தக் கூடாமல் 'வடிவினிற் சிறந்தானேனு மானிடனலனே' என்று பிறப்பிற் குறைவு சொல்லுதலால், அப்பொறாமைவாசத்தை அவனுக் குக் கல்வி, செல்வம், வீரம், தீரம், போகம், அரசு, வெற்றி, நற்குணம்,

நற்செய்கை முதலியவற் றொன்றிலும் ஒரு குறைவுமில்லை யென்பதனைப் பலப்படுத்தி நின்றது. அவர்களுக்கு நாம் மானிடரும் புண்ணியப்பேற்றாற் பெறுவதாகிய தெய்வபபிறப்பினால் உயர்ந்திருக்கின்றோ மென்பது கருத்து. (௮௯)

[இதனால் நளனைக்கண்ட தேவர்முதலானவர் நாணஞ்
சொல்லப்படுகின்றது.]

**ஓவியரெழுதவொண்ணாவுலம்பொருவயிரத்திண்டோள்**
**வாவுமான்றடந்தேரண்ணல்வனப்பினைநேரராகித்**
**தேவரில்வையங்காக்குமரசரிற்செவ்விவாய்ந்த**
**காவலர்திருந்தநோக்கார்கடைக்கணானோக்கினரால்.**

(இ - ள்.) ஓவியர் எழுத ஒண்ணா - சித்திரக்காரராலும் எழுதக்கூடாத, உலம் பொரு - திரள்கல்லையொத்த, வயிரம் திண் தோள் - வச்சிரம்போன்ற வலிமைபெற்ற தோளையும், வாவும் - தாவுகின்ற, மான் - குதிரைகட்டிய, தடம் தேர் - பருத்த தேரையுடைய, அண்ணல் - நளமகாராஜனது, வனப்பினை - அழகை, நேரர் ஆகி - ஒவ்வாதவர்களாய், தேவரில் - தேவருக்குள்ளேயும், வையம் காக்கும் அரசரில் - பூமியைப்புரக்கின்ற அரசருக்குள்ளேயும், செவ்வி வாய்ந்த காவலர் - அழகுபொருந்திய அரசர்கள், திருந்த நோக்கார் - நேராகப் பாரசராகி, கடைக்கணால் - கடைக்கண்ணினால், நோக்கினர் - பார்த்தார்கள், எ-று.

(க - து.) தேவர்களும் அரசர்களும் நளன் அழகுக் கொவ்வாதவர்களாகி அவனழகை நேராகப்பாராது கடைக்கண்ணாற் பார்த்தார்கள் என்பதாம்.

அழகிற்சிறந்தவனை அது குறைந்தவன் நேராகப்பார்த்தால் நம்மழகிடத்தில் இவன் மிக்க விருப்புள்ளவனாய் நோக்குகின்றனனென்று எண்ணங்கொள்வா னென்னு நாணத்தால் கடைக்கண்ணாற் பார்த்தல் உலகத்திற் சுபாவ மென்க. (௯௦)

[இதனால் நளனிருத்தல் சொல்லப்படுகின்றது.]

**விரிகதிரெறிக்கும்பைம்பூண்விதர்ப்பகோனினிதினிட்ட**
**வரியினஞ்சுமந்தபைம்பொனணிமணித்தவிசின்மீது**
**குருதிகொப்புளிக்கும்வைவேற்குமரனிலிருந்தான்வெய்ய**
**செருமலிகடலந்தானைத்தீயுமிழ்வேலினானே.**

(இ - ள்.) விரி கதிர் எறிக்கும் - விரியப்பெற்ற கிரணங்களை வீசுகின்ற, பை பூண் - பசும்பொன்னாற்செய்த ஆபரணங்களையணிந்த, விதர்ப்பர் கோன் - வீமராஜனால், இனிதின் இட்ட - இனிமையினாலிடப்பட்ட, அரி இனம் சுமந்த - சிங்கக்கூட்டங்கள் தாங்கிய, பை பொன் - பசிய பொன்னாற்செய்த, அணி மணி தவிசின்மீது - அழகிய ரத்நாசனத்தின்மேல், வெய்ய - வெவ்விய, செரு மலி கடல் தானை - போர்மலிந்த சேனாசமுத்திரத்தையும், தீ உமிழ் - தீயை யுமிழ்கின்ற, வேலினான் - வேற்படையையு முடைய நளமகாராஜன், குருதி கொப்புளிக்கும் - உதிரத்தை யுமிழ்கின்ற, வை வேல் குமரனில் - கூரிய வேலை

யுடைய குமாரக்கடவுள்போல், இருந்தான் - இருந்தனன், எ-று. அம், ஏ-அசை.

(க - து.) நளன் நவமணிகளிழைத்த சிங்காசனத்தில் சிவசுப்பிர மணியக் கடவுள்போல் வீற்றிருந்தா னெனபதாம்.

விதாப்பாகோனிட்ட மணித்தவிசி லிருந்தனனெனக் கூட்டுக. விவாகமண்டபத்திறகு வந்ததும் வீமன் மரியாதை செய்ததும் தேவ ராதியாக்குப பொதுபபடச் சொல்லி நளமகாராஜனுக்கு மாத்திரம் வேறுபிரிததுச் சொல்லியதும அவனுக்கு அவவளவு சிறப்பிருத்தலா லும் தமயநதி விரும்பி மாலையிடலாறு மெனக. (கூக)

[இதனால் மன்மதன வியத்தல் சொல்லப்படுகின்றது.]

கொங்கவிழுருவப்பைந்தார்குமரனையினிதுநோக்கி
யிங்கிவன்வனப்புகவொவ்வாதிழிவரலெய்திடாம
லைங்கணைக்கிழவன்வெய்யவழறகனலருவமாக்குந்
திங்களங்கண்ணிமுக்கட்டேவினைவியககுமன்றே.

(இ - ள்.) கொஙகு அவிழ் உருவம் - வாசனை விரிகின்ற உருவத் தையுடைய, பை தாா குமரனை - பசிய மாலையையணிநத நளனை, இனிது நோககி - இனிமையாற பாாதது, இஙகு - இவவிடததில், இவன் வனபபுககு - இவவரசனுடைய அழகிறகு, ஒவவாது - நிகராது, இழிவரல எயதிடாமல - இழிவை அடையாமல், ஐங்கணை கிழவன் - ஐவகைப் புட்பபாணங்களையுடைய மனமதனனவன், வெயய அழல் கனல் - வெவ்விய தீவிழியால், அருவம் ஆக்கும் - (தனனை) உருவ மிலலாதவனாககிய, திஙகள அம் கணணி - அழகிய மூன்றாம்பிறை யைத் தரிதத, முககன் தேவினை - மூனறு கண்களையுடைய பரம சிவனை, வியககும் - அதிசயிபபான, எ-று. அனறு, ஏ - அசைகள்.

(க - து.) மன்மதன நளன அழகுக்குமுன் அவமானப்படாமல் சிவன் தனனை அருபமாககினதறகாக மகிழசசியடைநதான் என்பதாம்.

ஐங்கணைக்கிழவன் முக்கட்டேவினை வியத்தலாவது நாம் எல்லா ராலும் அழகில் உவமிக்கபபட்டிருநதோம். இதுபொழுது நம்மை அழ கால்வெனற நளனால் இவவரசா முனனே அவமானபபடாமல் ஈசன அருவமாக்கியது நமக்கு நனமையாயிறறெனறு நினைந்து மகிழ்தலாம். அருவமாக்கிய குற்றததைக் குணமாககிக்கொள்ளுதலால் இலேசவணி.

[இதனால் விவாகமண்டபததிற்கு உவமை சொல்லப் படுகின்றது.]

ஏழ்நிலவரைப்பில்வானிற்பாதலத்தினிதுவைகும்
பாழியந்தடந்தோள்வேந்தர்பலரும்வந்தமர்ந்தவாற்றாற்
கேழ்கிளர்மணிசெய்மாடங்கிளர்வெயிலெறிக்குஞ்செய்ய
வாழியந்தடக்கைமாயனகடுபோன்றிருந்ததம்மா.

(இ-ள்.) ஏழ் நில வரைப்பில் - சத்த தீவுகளிலும், வானில் - தே வருலகத்திலும், பாதலத்து - நாக ருலகத்திலும், இனிது வைகும் -

இனிமையொடு தங்கிய, பாழி - அகலமாகிய, அம் - அழகிய, தட தோள் - பருத்த தோளையுடைய, வேந்தர் பலரும் - அரசரனைவரும், வந்து அமர்ந்தவாற்றால் - வந்து தங்கியபடியால், கேழ் கிளர் - ஒளி மிகுந்த, மணி செய் மாடம் - ரத்நங்கள் பதித்த விவாகமண்டபமானது, கிளர் வெயில் எறிக்கும் - பிரகாசிக்கின்ற வெயிலை வீசப்பெற்ற, செய்ய ஆழி - சிவந்த சக்கரமேந்திய, அம் தடம் கை மாயன் - அழகிய விசாலம்பொருந்திய கையையுடைய திருமாலினது, அகடு போன்று இருந்தது - வயிற்றையொத்து இருந்தது, எ-று.

(க - து.) விவாக மண்டபமானது பிரளயகாலத்தில் சராசரங்களடங்கிய திருமால் வயிற்றைப்போலிருந்தது எனபதாம்.

சத்ததீவுகளாவன—நாவலந்தீவு, காகதீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, சான்மலிதீவு, கோமேதகதீவு, புடகரணிதீவு, என்பனவாம். பிரளயகாலத்தில் சராசரங்களெல்லாம் நாரணக்கடவுளது வயிற்றில் அடங்கி யிருத்தல்போல் இந்த விவாகமண்டபத்திலுந் திரிலோகத்தரசரும் அவர்கள பரிவாரங்களும் அடங்கியிருந்ததலால் அவ் வயிறு உவமையாயிற்று. இது உவமையணி. (கஙு)

[இதனால் நளனழகு சொல்லப்படுகின்றது.]

மாங்குயிற்குதலைச்செவ்வாய்வனமுலைப்போகம்வேண்டித்
தேங்கமழ்தருவினீழற்றேவருநிடதங்காக்கு [னீ
மோங்கெழுவனையதோளா னுருவுகொண்டடைந்தாரென்
லாங்கவன்வனப்புநம்மாலறையலாந்தகைமைத்தன்றே.

(இ-ள்) மா குயில் குதலை - மாமரத்திலிருக்குங் குயிற்சொல்லையொத்த மழலைச்சொல்லையும், செவ்வாய் - சிவந்த வாயையுமுடைய தமயந்தியினது, வன முலை போகம் வேண்டி - அழகிய ஸ்தனங்களினுடைய போகத்தைவிரும்பி, தேன் கமழ் தருவின் நீழல் - வாசனை வீசுகின்ற ஐந்தருவி னிழலிலிருக்கும், தேவரும் - இந்திரன் முதலிய தேவர்களும், நிடதம் காக்கும் - நிடததேசத்தை யளிக்கின்ற, ஓங்கு எழு அனைய தோளான் - உயர்ந்த எழுத்தூணையொத்த தோளையுடைய நளமகாராஜனது, உருவு கொண்டு - வடிவைக்கொண்டு, அடைந்தார் என்னில் - வந்தாரேயானால், அவன் வனப்பு - அவ்வரசனுடைய அழகு, நம்மால் - நம்மால், அறையலாம் - சொல்லலாம், தகைமைத்து அன்று - தகைமையுடைய தன்று, எ-று. ஆங்கு, ஏ - அசை.

(க - து.) தேவர்களே நளனழகைக் கொண்டமையால் நளனழகைச்சொல்ல எம்மா லாகுமோவென்றார் புராணிகர் என்பதாம்.

யாவரும் விரும்பித் தவஞ்செய் தடைதற்குரிய பொன்னுலகத்தையாளும் இந்திரன் முதலிய நால்வரும் தம்முருவோடு மிருந்தால், தமயந்தி மாலை தரிக்கமாட்டாளென்று அழகிற்சிறந்த நளமகாராஜனுடைய உருவைக் கொள்வாரென்னில், அவனழகை ஒருவராலுஞ் சொல்லக்கூடா தென்க. (கச)

[இதனால் விவாகத்திற்குவந்த அரசாகூட்டத்துக்கு
உவமை சொல்லப்படுகின்றது.]

வடுநெடுங்கண்ணிகொம்மைவருமுலைதிளைப்பவேண்டித்
தொடுகழலரசர்வெள்ளந்தொக்கொருங்கிருந்ததோற்ற
முடல்சினத்திகிரிமாயனுந்தியங்கமலம்பூத்த
கடவுடன்படைப்பின்வீக்கங்காட்டுதல்போன்றதன்றே.

(இ-ள்.) வடு நெடு கண்ணி - மா வடுவையொத்த நெடிய கண்ணை யுடைய தமயந்தியினது, கொம்மை - இளமையையுடைய, வரு முலை - வளரப்பெற்ற ஸ்தனங்களில், திளைப்ப வேண்டி - அணையவிரும்பி, தொடு கழல் அரசர் வெள்ளம் - கட்டப்பட்ட வீரக்கழலையுடைய அரசாகூட்டங்கள், தொக்கு - கூடி, ஒருங்கு இருந்த தோற்றம் - ஒருசேர விருந்த தோற்றமானது, உடல் - பொருகின்ற, சினம் - கோபத்தை யுடைய, திகிரி மாயன் - சக்கரபபடையையேந்திய நாரணனுடைய, உந்தி அம் கமலம் பூத்த - அழகிய நாபிக்கமலமானது தந்த, கடவுள் - பிரமதேவன், தன் படைபபின் வீக்கம் - தனது சிருட்டியினுடைய விரிவை, காட்டுதல் - காண்பித்தலை, போன்றது - ஒத்திருந்தது, எ-று.

(க - து.) திரிலோகத்திலுமுள்ள பிரமசிருட்டியிலடங்கிய அனை வரும் வந்திருந்தாகள், அதனால் பிரமசிருட்டிபோ லிருந்தது என்ப தாம்.

இங்ஙனஞ் சொல்லுதலால், திரிலோகத்திலுமுள்ள பிரமசிருட் டியிலடங்கிய அனைவரும் வந்திருக்கின்றன ரென்பது கருத்து. இங் ஙனங்கூடிய ராஜசவையில் பிரமன் படைப்பின் வீக்கங்காட்டுதல் போன்றதெனக் குறித்தலால் தற்குறிப்பணி. (கூ௫)

[இதனால் அரசா ஒருங்குசேரக் கூடுதல் சொல்லப் படுகின்றது.]

தனியுருத்தாங்கியீசன்றழல்விழிப்பட்டோமென்று
பணிமலர்ப்பகழிமாரன்பலவுருவெடுத்தல்போலக்
கனிபடுகிளவியாடன்கதிரிளமுலையிற்றோய்வான்
குனிசிலைத்தடக்கைவேந்தரொருவழிக்குழுமினாரே.

(இ - ள்.) பனி மலர் பகழி மாரன் - குளிர்ச்சிபொருந்திய பூங் கணைகளையுடைய மன்மதனானவன், தனி உரு தாங்கி - ஒரு வடிவங் கொண்டு, ஈசன் தழல் விழி - பரமசிவனுடைய நெருப்புக்கண்ணினால், பட்டோம் என்று - இறந்தோமென்று, பல உரு எடுத்தல் போல - பலவுருவங் கொண்டதுபோல, கனி படு கிளவியாடன் - பழங்களின் தேன்போன்ற மதுரமான சொல்லையுடைய தமயந்தியினது, கதிர் இள முலையில் - காந்திபொருந்திய இளமைபொருந்திய ஸ்தனத்தில், தோய்வான் - கலக்கும்படி, குனி சிலை - வளைந்த வில்லையேந்திய, தடம் கை வேந்தர் - விசாலம்பொருந்திய கையை யுடைய அரசரானவர்கள், ஒரு வழி - ஓரிடத்தில், குழுமினார் - கூடினார்கள், எ-று. ஏ-அசை.

(க - து.) அரசர்கள் மன்மதனை நிகர்த்திருந்தார்கள் என்பதாம்.

இங்ஙனஞ் சொல்லுதலால் விவாகத்திற்கு வந்த அரச ரனைவரும் அழகினால் மன்மதனை யொத்திருந்தன ரென்பது கருத்து. இது வு முற்கூறியவணி. (௧௬)

[இதனால் பிரம விஷ்ணுக்களின் வரவு சொல்லப்படுகின்றது.]

**வேனிலானுயர்த்தவெற்றிக்கயலையும்வெருட்டிநீண்ட**
**மானினமருளுநோக்கின்மடவரலவதுவைகாண்பான்**
**பானிறவன்னமூர்ந்தபழமறைகிழவனோடு**
**நீனிறச்செங்கண்மாயனெடுவிசும்படைந்தான்மன்னோ.**

(இ - ள்.) வேனிலான் - மன்மதனுனவன, உயாத்த - பிடிதத, வெறறி கயலையும் - வெற்றிபொருநதிய கொடியாகிய மீனையும், வெருட்டி - அச்சமுறுததி, நீண்ட - நீண்ட, மான இனம் - மான் கூட்டங்கள், மருளும் - மயஙகுகின்ற, நோககின் - பாாவையையுடைய, மடவரல் - தமயநதியினது, வதுவை காண்பான் - விவாகததைக் காணும்பொருட்டு, பால் நிறம் - வெளளிய வண்ணத்தையுடைய, அன்னம் ஊர்ந்த - அன்னபபறவையைச் செலுததிய, பழ மறைக்கிழவனோடும் - பிரமதேவனோடும, நீல் நிறம் - கரிய வண்ணத்தையும், செம் கண் - சிவந்தகண்ணையுமுடைய, மாயன் - நாரணனுனவன், நெடு விசும்பு - நெடிய ஆகாயததினகண், அடைந்தான் - வந்தான, எ-று.

(க - து.) பிரமனும் விஷ்ணுவுந தமயநதி கலியாணததிற்கு வந்தாாகள் என்பதாம்.

தமயந்தியினுடைய கடைக்கண்பாாவையைக் குறித்துத் திரிலோகத் தரசரும் வந்திருக்கிறபடியால் அவள் பாாவைக்கு அவ்வளவு சிறபபுச் சொல்லினா. (௧௭)

[இதனால் வீமனசெய்கை சொல்லபபடுகின்றது.]

**அவ்வழிநிணம்வாய்பபிலகியழலுமிழ்ந்தரத்தந்தோயு**
**நெய்வழிபரிதிவைவேல்விதர்பபர்கோனீலவுண்கட்**
**செவ்வழியனையதீஞ்சொற்றெரிவையர்தம்மைநோக்கி**
**மைவழிகரியகூந்தன்மங்கையைக்கொணர்மினென்றான்.**

(இ - ள்.) அவ்வழி - அப்பொழுது, நிணம் வாய் பில்கி - நிணத்தை வாயாற் கொப்புளித்து, அழல் உமிழ்ந்து - நெருப்பைக் கக்கி, அரத்தம் தோயும் - உதிரம்படிகின்ற, நெய் வழி - நெய்யொழுகுகின்ற, பரிதி - சூரியனையொத்த, வை வேல் - கூரிய வேலையுடைய, விதர்ப்பர்கோன - வீமராஜனுனவன், நீலம் உண் கண் - கருங்குவளை மலாபோன்றமையுண்ட கண்களையுடைய, செவ்வழி அனைய தீ சொல் - செவ்வழிப்பண்ணை யொத்த மதுரம்பொருந்திய சொல்லையுடைய, தெரிவையர் தம்மை நோக்கி - மாதரைப்பாாதது, மை வழி கரிய கூந்தல் மங்கையை - மயிர்ச்சாந் தொழுகிய கரிய குழலையுடைய தமயந்தியை, கொணர்மின் என்றான் - அழைத்துக்கொண்டு வாருங்க ளென்றான், எ-று.

(க - து.) வீமராஜன் தமயந்தியைக் கொண்டுவரும்படிப் பெண்களுக்குக் கட்டளையிட்டான் என்பதாம்.

நிணம் - கொழுப்பு, நெய் - எண்ணெய்.

இப்பொழுது நறபொழுதா யிருக்கின்றபடியால் கன்னியை யழைத்துக்கொண்டு வரச்சொன்னாகளென்று மங்கள வார்த்தை சொல்லச்செல்கின்றவராகையால், அத்தனமைதோனறத் 'தீருசொற றெரிவையா' எனறமாததிரத தோழியாது 'செவ்வழியனைய' என்றா()

[இனிப் பதின்மூன்றுபாட்டால் தமயந்தியினது செய்கை சொல்லததொடங்கி இதனுல் மாதா சென்றமை சொல்லபபடுகின்றது.]

உரையதுகேட்டலோடுமோரிடத்தடங்கணலலா
ரெரிபரந்திமைக்கும்பைம்பூணின்னரிச்சிலம்போடேங்கப்
புரிகுழன்மாலைசோரப்பூசலவண்டார்த்துப்பொங்க
விரைவினரேகிப்பைம்பொன்விளங்கிழைகோயிலபுக்கார்.

(இ - ள்) உரையது கேடடலொடும - அச்சொல்லைக் கேட்ட வளவில், ஓடரி - செவ்வரிபரநத, தடம கண் நல்லார - விசாலம்பொருந்திய கண்ணையுடைய மாதாகள, எரி பரநது இமைக்கும் - ஒளி பரவி விளங்குகின்ற, பைம்பூண் - பசிய ஆபரணங்கள், இன் அரி சிலம்பொடு - இனிய கிண்கிணியுடைய பாதசாலததோடு, ஏங்க - ஒலிக்க, புரி குழல் - கடடுபபட்ட கூநதலிலிருககின்ற, மாலை சோர - மலாமாலை சோாவையடைய, பூசல் வணடு - மிகுநத வொலியையுடைய வண்டுகள, ஆாதது பொஙக - ஒலிதது எழும்ப, விரைவினா - விரைவுகொண்டவராகி, ஏகி - போய, பைம்பொன - பசிய பொன்றாற் செய்த, விளஙகு இழை - ஒளிசெய்கினற ஆபரணத்தையுடைய தமயந்தியினது, கோயில - கன்னிமாடததில், புககாா - புகுந்தாாகள், எ-று.

(க - து.) மாதாகள் தமயந்தி மாளிகையிற் சென்றாகள் என்பதாம்.

நல்லாா உரைகேட்டவளவில் பூணுஞ்சிலம்பு ஏங்க மாலை சோர வண்டாாத்துப் பொஙக விரைந்தேகிக் கோயில்புககா ரெனக்கூட்டுக. விரைந்து செல்வோா தனமை கூறபபட்டமையால் தன்மை நவிற்சியணி. (கூக)

[இது வீமன்மனைவிக்குச் சொல்லியது.]

வாங்குவிற் றடக்கை வேந்தன் வதுவைமண் டபத்தின் வல்லே, கோங்கிள முலையி னாளைக் கொணர்கவென் றுரைததா னென்னத், தீங்கதிர்க குழவி திங்கள் சிறைகிடந் தனைய நெற்றிப், பூங்கொடி தன்னை. யீன்ற பொற்றொடிக் குரைத்தா ரன்றே.

(இ - ள்.) வாங்கு - வளைக்கப்பட்ட, வில் தடக்கை - வில்லையுடைய விசாலம்பொருந்திய கையையுடைய, வேந்தன - வீமராஜனென்பவன், வதுவை மண்டபத்தில் - விவாகமண்டபத்தில், வல்லே - விரைவிலே, கோங்கிள முலையினளை கொணாக என்று - தமயந்தியை அழைத்துக்கொண்டு வாருங்களென்று, உரைத்தானென்ன - சொன்னனென்று, தீம் கதிர - மதுரம்பொருந்திய கிரணங்களையுடைய, குழவி திங்கள் - இளம்பிறையானது, சிறை கிடந்தனைய - சிறையிருந்ததையொத்த, நெற்றி - நெற்றியையுடைய, பூம் கொடி தன்னை ஈன்ற - தமயந்தியைபெற்ற, பொற்றெடிக்கு - நற்றாயாகிய சாருகாசினிக்கு, உரைத்தார - சொல்லினார், எ-று.

(க - து.) மாதாகள வீமன்மனைவியாகிய சாருகாசினியிடத்து வீமன் சொன்னதைச் சொன்னாரகள எனபதாம்.

தோற்றவனை வென்றவன் சிறையிடுத லியற்கையாதலால் நெற்றியால் வெல்லப்பட்ட பிறையைத் 'தீங்கதிரக் குழவித்திங்கள் சிறை கிடந் தனையநெற்றி' என்றார. அங்ஙனஞ்சென்ற மாதா அரசன் தமயந்தியை அழைத்துவரச் சொன்னனென்று அவள் நற்றாயாகிய சாருகாசினிக்குச் சொல்லின ரெனக. வீமன மனைவிக்குப்பெயா சாருகாசினியெனபது "வீரவேன மன்னவன விழையுங் கற்பினள, மூரற்றேன் றுவகை முறுவல் செய்தலால், சாருகா சினியெனச் சாற்று நாமத்தா, ளோருமா நலமெலாந் திரண்ட வுள்ளத்தால்" இதனலறிக.　　(௧00)

[இதனால் தமயந்திக்கு நீராட்டல் சொல்லப்படுகின்றது.]

**களிமகிழ்வெய்தியாங்கட்கனைத்துவண்டிமிரும்பைந்தார்த்**
**துளிமதுககோதைதன்னைத்துவரினும்விரையினனு**
**மொளிமணிகழீஇயதொப்பவுவப்பொடுந்திமிர்ந்துபொங்**
**கெளிதிரைசுருட்டுங்கங்கைத்தீம்புனலாட்டினாரே.**　[கும்

(இ-ள்.) களி மகிழ் வெய்தி - மிகுந்த மகிழ்ச்சியையடைந்து, ஆங்கண் - அவவிடத்தில், கனைத்து - ஆரவாரித்து, வண்டு இமிரும் - வண்டுகளொலிக்கின்ற, பைந்தார - பசிய மலாமாலையையணிந்த, துளி மது கோதைதன்னை - தேன றுளிக்கின்ற கூந்தலையுடைய தமயந்தியை, துவரினும் - பத்துத்துவராலும், விரையினனும் - இருவகைவாசனைத் திரவியத்தாலும், ஒளி மணி கழீஇய தொப்ப - ஒளியையுடைய மணியை யொப்பமிட்டதை யொப்ப, உவப்பொடும் திமிர்ந்து - மகிழ்ச்சியுடன் பூசி, பொங்கும் - பொங்குகின்ற, தெளி திரை சுருட்டும் - தெளிந்த அலைகளை மடக்குகின்ற, கங்கை - கங்காநதியிலிருந்து கொண்டுவந்த, தீ புனல் - இனிய நீரைக்கொண்டு, ஆட்டினர - (மாதாகள்) முழுகச்செய்தாாகள், எ-று. ஏ - அசை.

(க - து.) தமயந்திக்கு நீராட்டினாகள் என்பதாம்.

"கங்கையின் களிற்றினுச்சிக் கதிரமணிக் குடத்திற் றந்த, மங்கல வாசநன்னீர் மணிநிறங் கழீஇய தொப்ப, நங்கையை நயப்ப வெல்லா விரையொடு துவருஞ் சோததி, யங்கா வல்குலாளை யாட்டின ரரம்பை யன்னார்" எனப் பிறரும் இவவாறு கூறுதல் காண்க. இருவகை

வாசனைத் திரவியங்கள் ஓமாலிகையெனவும் பஞ்சவாச மெனவுஞ் சொல்வா. அவற்றுள் முப்பத்திரண்டுவகை சேர்ந்த ஓமாலிகையும் பஞ்சவாசமும் பத்துத்துவரும் முறையே இவ் விரண்டுபாட்டாலுங் காண்க. "புழுகுசட்டங் கோட்டமா ரியக்கோட்ட நாகப்பூ முத்தக்கா சு சயிலேகம் விலாமிச்சம், பழுதிலிரு வேரிமலை யிருவேரி மாஞ்சில் பச் சிலைகச்சோல மதிமதுரந் தக்கோலம், வழைமலாநன் னாரிதிம்பூ வெண்ணெய்கண்டில் வகுளப்பூத் தாவரிசி யேலஞ் சாதிக்காய், தழை சரள மிலவங்க நாகணமஞ் சட்டி சண்பகமொட் டரத்தைநறும் பிசின்தகரங் குக்குல். கூறியவோ மாலிகையென் ஞன்கொடுகத் தாரி குங் குமங்காப் பூரமகில் சந்தனமை விளையும், வீறியபான் மரநான்கு திரிபலைமா நாவன் மிக்ககருங் காலியெனுந் துவாபத்து நல்லோா, தே றுவெள்ளி லோத்திரப்பூம் பொருக்கனைதத சாந்துஞ் சோத்து நறு செய்பூசித திமிாநதருவி போல, வூறியமா மதக்களிற்றுப் பிடரின்வரு கங்கையுவந் தாட்டித் திருமேனி யொற்றுடை புரிந்தார" மரநான்கா வன - ஆல் அரசு அததி இததி எனபனவாம் மணப்பெண்களுக்கு இவ்விரண்டுவகைத் திரவியஙகளையும் வெவ்வேறு சோத் தரைத்துப் பூசி முழுக்காட்டல் விவாகநூலிற் சொல்லு நியதியாம். [மணிகழீஇய தொடபபமவனலா லுவமையணி] (௧0௧)

[இதனால் அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

புரிகுழல்புலரவாசப்பூம்புகையூட்டிவிண்டு
முருகுயிர்த்தினவண்டார்க்குமுல்லையஞ்சூட்டுவேய்ந்து
வருமுலைமுகட்டிற்றெய்வமலையச்செஞ்சாந்துபூசி
யெரிமணிக்கலாபம்வீக்கியிழைபலதிருத்தினரே.

(இ - ள்.) புரி குழல் புலர - கட்டப்பட்ட கூந்தலானது ஈரம் வாட, வாச பூ புகை ஊட்டி - வாசனையுள்ள புகையை ஊட்டுவித்து, விண்டு - விரிந்து, முருகு உயிாதது - தேனைத தந்து, இன வண்டு ஆர்க்கும் - வண்டுக்கூட்டங்கள் ஒலிக்கப்பெற்ற, முல்லை யம் சூட்டு வேய்ந்து - முல்லை மாலையைச் சூடி, வரு முலை முகட்டில் - வளரு கின்ற ஸ்தனங்களினுச்சியில், தெய்வம் - தெயவத்தன்மையுள்ள, மலையம் - பொதிய மலையிற்றோன்றிய, செம் சாநது பூசி - செந்நிறமுள்ள சந்தனக் குழம்பை தடவி, எரி மணி - ஒளியையுடைய மணிகளணிந்த, கலாபம் வீக்கி - கலாபததைத தரித்து, இழை பல - இன்னும் அனேக ஆபரணங்களை, திருத்தினா - அணிநதாாகள், எ - று. ஏகாரம் - ஈற் றசை.

(க - து.) தமயந்தி கூந்தலுக்கு அகிற்புகையூட்டி மாலைசூட்டி கொங்கைகளிற் சந்தனம்பூசி மேகலாபரணங்கட்டிப் பலவாபரணங் களைத் தரித்தாாகள் என்பதாம்.

கலாபம் - பதினறுகோவையுள்ளமணி. இழைதிருத்தலாவது - உரியவிடங்களில் தக்கவாறணிதல். ஆபரணங்களும் அநேகம், அணிந் தவரும் அநேகரென்பது தோன்ற 'இழைபலதிருத்தினர்' என்றார். ()

[இதுவுமது.]

**வேற்றுருக்கொண்டுமாதின் விளங்குவாண்முகத்திற்சேர்ந்**
**கூற்றினைத்தடங்கணென்னவஞ்சனங்குலவத்தீட்டிக் [த**
**கீற்றிளந்திங்களன்றுகிளரொளிநுதலேயென்று**
**தேற்றுவார்போலச்செய்யதிலகமுமெழுதினாரே.**

(இ - ள்.) வேறு உருக்கொண்டு - வேற்று வடிவங்கொண்டு, மாதின் - தமயந்தியினது, விளங்கு - பிரகாசிக்கின்ற, வாள் - ஒளிபொருந்திய, முகத்தில் சேர்ந்த - முகத்திலடைந்த, கூற்றினை - யமனை, தடம் கண் என்ன - விசாலம்பொருந்திய கண்களென்று, அஞ்சனம் குலவ தீட்டி - மையை விளங்கவெழுதி, கீற்று - கீற்றாகிய, இள திங்கள் - இளம்பிறை, கிளர் ஒளி - மிகுந்த ஒளியையுடைய, நுதலே என்று - நெற்றியேயென்று, அன்று - அன்று, தேற்றுவார்போல - தெளிவிப்பாரைப்போல, செய்ய - சிவந்த, திலகமும் - திலகப்பொட்டும், எழுதினார் - எழுதினார்கள், எ-று.

(க - து.) தமயந்தி கண்ணிற்கு மையும் நெற்றிக்குத் திலகமும் இட்டார்கள் என்பதாம்.

[ஈ இரண்டில் முன்னையது தேற்றம், பின்னையது ஏற்றசை.

கூற்றுவன் விழி வடிவங்கொண்டு இவள் முகத்திருப்பது எற்றுக்கெனின், தன் வடிவோடு மிருந்துகொண்டு உலகத்தார் நாடோறும் நிந்திக்கத் தாமொருவனே கொலைப்பழியைச் சுமத்தல்பற்றிப்போலும். இங்ஙனஞ் சொல்லுதலால் யமனைப்போலும் விழிகள் ஆடவரைக் கொல்கின்றனவென்பது கருத்து. இளந்திங்களன்று நுதலேயென்று தேற்றுவார்போ லென்றதனால், நுதலே இளந்திங்களென் றிருந்தாற் படுமிழுக் கென்னெனின்? அதனை விரகிகள் நிந்தித்தலுண்டு, அந்நிந்தை இதற் கேறுமென்று கருதி அடையாளமாகத் திலகமு மெழுதினாரெனக் கொள்க. 'கூற்றினைத் தடங்கணென்னும் திங்களன்று நுதலேயென்னும்' ஒழிபபணிகள் தேற்றுவார்போலவென்ற தற்குறிப்போடு கலந்துவருதலால் கலவையணி.] (௧0௩)

[இதுவுமது.]

**வணங்கிடை யிறுவ தோரா வனமுலை கவர்ந்து கொண்ட, சுணங்கணி யாக முற்றுஞ் சுந்தரச் சுண்ண மாட்டிக், கணங்குழை முகத்துச் செவ்வாய்க் கன்னன்மென் றனைய தீஞ்சொ, லணங்கினுக் கணிசெய் வார்போ லணியினுக் கழகு செய்தார்.**

(இ - ள்.) வணங்கு இடை - வளைகின்ற இடையானது, இறுவது ஓரா - ஒடிவதை எண்ணாது, வனம் முலை - அழகிய முலைகளானவை, கவர்ந்துகொண்ட - கிரிகித்துக்கொண்ட, சுணங்கு - தேமலையுடைய, அணி - அழகிய, ஆகம் முற்றும் - மார்பு முழுவதும், சுந்தரம் சுண்ணம் ஆட்டி - அழகிய பொற்றூளைத் தூவி, கணம் குழை முகத்து-

கூட்டமாகிய மணிகள்பதித்த குழையையணிந்த முகத்தையும், செவ்வாய் - சிவந்த வாயையும், கனனல் மென்றனைய - கரும்பை மென்றதையொத்த, தீம் சொல் - மதுர வார்த்தையையுமுடைய, அணங்கினுக்கு - தமயந்திக்கு, அணி செய்வார் போல் - அழகு செய்பவர் போல், அணியினுக்கு - ஆபரணங்களுக்கு, அழகு செய்தார் - அழகைச் செய்தார்கள், எ-று.

(க - து.) தமயந்தி அவயவங்களுக்கு ஆபரண மணிந்தார்கள், அணியாவிடினும் அவ ளியற்கையழகே போதும் என்பதாம்.

ஆபரணங்கள் தமயந்தியின் அவயவங்களிலே தரிக்கப்பெற்றுச் சிறப்புப்பெறுதலால், 'அணியினுக்கழகுசெய்தார்' என்றார். இதனால் ஆபரணந் தரியாவிடினும் அவளுக்கு இயற்கை யழகே போதுமென்பது கருத்து.

(௧0௪)

[இதனால் உபசரித்தல் சொல்லப்படுகின்றது.]

**அயினிநீர்விளக்கமேந்தியையவிசிதறிமுத்தந்**
**துயல்வருமுலையினார்தந்தொல்குலத்தெய்வம்போற்றி**
**முயலறுமுழுவெண்டிங்கண்முகத்ததுவெண்முத்தமூரன்**
**மயிலியற்றிருவனாளைவலஞ்செய்துகாப்புமிட்டார்.**

(இ - ள்.) அயினி நீர் விளக்கம் ஏந்தி - ஆலாத்தியை எதிரேயேந்தி, ஐ அவி சிதறி - ஐயவியை வீசி, முத்தம் துயல்வரும் முலையினார் - முத்துவட மசைகின்ற ஸதனங்களையுடைய மாதர்கள், தம் - தம்முடைய, தொல் குலம் தெய்வம் போற்றி - தொன்று தொட்டு வணங்குகின்ற தெய்வத்தைத் துதித்து, முயல் அறு - முயற்கறைநீங்கிய, முழு வெண்திங்கள் - வெள்ளிய பூரணசந்திரனையொத்த, முகத்து - முகத்திடத்தில், வெண் முத்த மூரல் - வெள்ளிய முத்தையொத்த பற்களையும், மயில் இயல் - மயில்போன்ற சாயலையுமுடைய, திரு அன்னாளை - இலக்குமி யொத்த தமயந்தியை, வலஞ்செய்து - வலமாகச் சுற்றி, காப்பும் இட்டார் - திருநீறுந் தரித்தார்கள், எ-று.

(க - து.) மாதர்கள் தமயந்திக்கு ஆலஞ்சுற்றித் திருநீற்றுக்காப்பணிந்தார்கள் என்பதாம்.

அயினிநீர் விளக்கமென்பது - மஞ்சணீர்க்கலத்திலே செஞ்சோற்றுத் திரளையை வைத்து அதன்மேலேற்றும் விளக்காம். ஐயவி சிதறியென்பது - வெண்கடுகிறைத்தல்; அது அலகை நீங்கும் பொருட்டுச் செய்வது. கடுகிற்குக் கடிப்பகையென்னும் பெயர்வந்தது இதனாலெனக்கொள்க. கடி - அலகை. இனி இரட்டுற மொழிதலென்னு முத்தியால் வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமையென்னும் ஐவகை வண்ணமுள்ள சோற்றை வெவ்வேறு ஐந்துருண்டை செய்து பலியிடுவதெனினும் அமையும். காப்பு மிட்டாரென்னும் எச்சவும்மை இன்னும் செய்யவேண்டியவைகளைச் செய்தாரென்பதைக் காட்டி நின்றது.

(௧0௫)

[இதுமுதல் நாலுபாட்டால் தமயந்தி சுயம்வரமண்டபத்திற்குப் புறப்படல் சொல்லப்படுகின்றது.]

**பங்கொடுகழங்குமபொன்னம்பாவையுங்கிளியும்யாழுஞ்**
**சிந்தூரத்திலகநெற்றித்தெரிவையா்ருடன்கொண்டேக**
**விந்திரகுமரனன்னானெழின்மணியகலமபூட்டக**
**கொந்தவிழலங்கன்மாலைகொண்டனாமருங்குசெல்ல.**

(இ - ள்) பந்தொடு - பந்தையும், கழங்கும் - அம்மனையையும், பொன்னம் பாவையும் - பொன்னப் பதுமைகளையும், கிளியும் - கிளிப் பிள்ளைகளையும், யாழும் - வீணையையும், சிந்தூரத் திலக நெற்றி தெரிவையா - சிந்தூரப் பொட்டணிந்த நெற்றியையுடைய மங்கையர்கள், உடன்கொண்டு ஏக - உடன்கொண்டு செல்ல, இந்திர குமரன் அன்னான் - இந்திர குமாரனையொத்த நளமகாராஜனுடைய, எழில் மணி அகலம் பூட்ட - அழகிய ரத்நாபரணம் பூண்ட மார்பினிடத்தில் தரிக்க, கொந்து அவிழ் - கொத்து விரிகின்ற, அலங்கல் மாலை - மலர்மாலையை, கொண்டனா - (ஏந்திக்) கொண்டவர்கள், மருங்கு செல்ல - அருகே வர, எ-று.

(க - து) பெண்கள் பந்தும் அம்மனையும் பொற் பதுமைகளையும் கிளிகளையும் வீணைகளையும் மலர்மாலைகளையும் கொண்டு பக்கலில் வர என்பதாம்.

தமயந்தி அரசமாதாதலால் தனது செல்வமிகுதிக்கேற்ப இதுவ னையும் பொழுதுபோக்கற்குச் சகாயமாயிருந்த பந்து முதலியவற்றை யும் ஏவன்மாதா உடன்கொண்டு சென்றனளென்க. தாமொரு கரு மத்தின் பொருட்டுச் செல்லுபவா இவை போல்வனவற்றை உடன் கொண்டு சென்றதனைப்போலவெனின் உண்டு அது "கைக்கடாகக் குரங் குகோழி சிவலக்வுதாரிபற்றிப், பக்கமுன் போதுவாாகள் பயின்மொழி பயிற்றிச் செல்ல, மிக்கபூம் பிடகைக்காளவாா விரையடைப் பையோா சூழ, மைக்கருங் கண்ணினாகண் மறுகினை மறுகிலவந்தாா்" இதனு லறிக. இவள் நளனுக்கே மாலை சூட்டவேண்டுமென்றிருக்குந் துணி வாலும் இச்செய்யுள் பின்புசெய்யப்பட்டமையாலும் மாலையை 'இந் திரகுமரனன்னா னெழின்மணி யகலம்பூட்ட' என்றாா் (௧0௯)

**விரியிருள்சீக்குங்கற்றைவெண்ணிறக்கவரிவீச**
**வெரிமணியடைப்பைதாங்கியின்னகைமகளிாபோத**
**வரிசிலைதூணியொள்வாளகேடகம்வளைகைபற்றிப்**
**புரிநரம்பிரங்குதீஞ்சொற்பொன்னனாமுன்னாேக.**

(இ - ள்.) விரி இருள் சீக்கும் - விரிந்த இருளை ஓட்டுகின்ற, கற்றை - மயிர்த்தொகுதியாகிய, வெள் நிற கவரி வீச - வெண்ணிறத் தையுடைய சாமரைகளை (மாதர்கள் இருபாலும்) வீசிவர, எரி மணி அடைப்பை தாங்கி - ஒளிவிடுகின்ற மணிகள்பதித்த அடைப்பையைச் சுமந்து, இன் நகை மகளிா போத - இனிய நகையையுடைய மாதர் கள் செல்ல, வரி சிலை - நெடிய வில்லையும், தூணி - அம்புக்கூட்டையும்,

ஒள் வாள் - ஒளியையுடைய வாளையும், கேடகம் - கேடகத்தையும், வளை கை பற்றி - வளையலையணிந்த கையில் ஏந்திக்கொண்டு, புரி நரம்பு இரங்கு - (யாழிற்கட்டிய) நரம்புகள் வருந்தும்படியாகிய, தீம் சொல் பொன்னனார் - மதுரவார்த்தையையுடைய மங்கையர்கள், முன்னர் ஏக - முன்னே செல்ல, எ-று.

(க - து.) சிலபெண்கள் சாமரை வீசவும், சிலபெண்கள் அடைப்பை யேந்திவரவும், வில்லையும் அம்புக்கூட்டையும் கேடகத்தையும் கையிற்றாங்கிச் சிலபெண்கள் முன்செல்லவும் என்பதாம்.

மற்றைத்தொழிற் கேற்பக் கவரிவீசுதற்கும் மாதரென்னுஞ்சொல் வருவிக்கப்பட்டது. அடைப்பை - தாம்பூலம்வைக்கும் ஒரு பாத்திரவிசேடமாம். விற்படைமுதலியவற்றை மாதரேந்தி வந்தனரென்றதால் அலங்காரப் பொருட்டன்றி ஒருவரெதிர்ப்பில் வெற்றிகொள்வாரோ வெனில், தாடகை காளிமுதலியவரும் அசுரரைக்கொன்று வெற்றி பெற்றனரென்றும், கைகேசிமுதலிய அரசமாதரும் விசயங்கொண்டனரென்றும் சரித்திரமிருத்தலால் இவருங் கொள்வரென்க. (௧0எ)

தொல்குலமரபிற்றோன்றிச்சூழ்புலநெறியிற்காத்துக
கல்வியின்றுறைகைபோயவிருத்தர்கஞ்சுகத்தின்மெய்யர்
வில்லுமிழ்மணியிற்செய்தவேத்திரக்கரத்தர்வேந்திர்
நில்லுமினினமினென்றுநீக்கினர்தொடர்ந்துசெல்ல.

(இ-ள்) தொல் குலம் மரபில் தோன்றி - தொன்றுதொட்டு வருகின்ற நல்ல குலத்திற்பிறந்து, சூழ் புலம் நெறியில் காத்து - ஒன்றைப் பற்றுகின்ற புலன்களையும் புறம்போகவொட்டாமல் அடக்கி, கல்வியின் துறை கைபோய - கல்வியின் வழியில் வல்லவராகிய, விருத்தர் - விருத்தரும், கஞ்சுகத்தின் மெய்யர் - கவசம்பூண்ட தேகத்தையுடையவரும், வில் உமிழ் - ஒளியைக் கொப்புளிக்கின்ற, மணியில் செய்த வேத்திர கரத்தர் - மணியினாற்செய்த பிரம்பைக் கையிலுடையவரும் (ஆகிய சேவகர்கள்), வேந்திர் - அரசர்களே, நில்லுமின் நினமின் என்று - நில்லுங்கள் நில்லுங்களென்று, நீக்கினர் - அவரை விலக்கினராகி, தொடர்ந்து செல்ல - தொடர்ந்துடன்செல்ல, எ-று.

(க - து) கல்வியின்வல்ல நற்குல விருத்தசேவகர்கள் அரசர்களை நில்லுங்களென்று பிரம்பால்விலக்கி உடன்செல்லவும் என்பதாம்.

தமயந்தி பெண்பாலாகையால் அதற்கேற்ப அவளருகே நின்று உபசரிக்க மாதரையும் பின்பு அம்மாதரைச்சூழ்ந்துவர நற்குணநற்செய்கையுள்ள விருத்தராகிய சேவகரையுஞ் சொல்லப்பட்டது. (௧0அ)

பாயிருண் மேயும் பைம்பொன் னிலத்திடைப் பரா
ரைச் சாந்தத், தேய்வையின் மெழுகி நுண்டூ சுடுத்துமே
ற் றேங்கொள் வாசத், தாய்மல ரணிச்சப்போது பரப்பிய
வணிகொள் வீதி, வேயுறழ் பசிய தோளி மெல்லடி பெ
யர்த்திட் டாளே.

(இ - ள்.) பாய் இருள் மேயும் - பரவிய இருளை மேய்கின்ற, பைம் பொன் நிலத்திடை - பசிய பொன்படுத்த பூமியிலே, பரரை - பரிய அடியையுடைய, சாந்தம் தேய்வையின் மெழுகி - சந்தனமரத் திற்கொண்ட கட்டையாற்சோத்த குழம்பினால் மெழுகி, நுண் தூசு உடுத்து - மெல்லிய வஸ்திரத்தைப் பரப்பி, மேல - மேலே, தேங் கொள் வாசத்து - தேனைக்கொண்ட வாசனையோடுகூடிய, ஆய் - ஆய ந்தெடுக்கப்பட்ட, மலர் - விரிந்த, அனிச்சப்போது பரப்பிய - அனிச் சமலரைப் பரப்பியிருக்கின்ற, அணி செள் வீதி - அழகைக்கொண்ட வீதியிலே, வேய உடைத்த பசிய தோள் - மூங்கிலையொத்த பசிய தோள் களையுடைய தமயந்தியானவள், மெல அடி - மெல்லிய பாதத்தை, பெயர்த்திட்டாள் - தூக்கிவைத்து நடந்தாள், எ-று

(க - து) சந்தனத்தால் மெழுகி மெல்லிய சீலைவிரித்து மலர் பரப்பிய வீதியில் தமயந்தி நடந்தாள் என்பதாம்.

பொன் நானகில் மாற்றுயர்ந்த சாம்பூநதப் பொன்னென்பதற்குப் 'பாயிருள்மேயும் பைம்பொன்' என்றார், மெல்லிய பாதமாகையால் அதற்கேற்பப் பொன்னிலத்தில் சந்தனக்குழம்பால் மெழுகி நுண்டு சுடுத்து அனிச்சப்போது பரப்பியவீதி யென்றார் பங்தொடு என்னும் பாட்டுமுதல இந்தப் பாட்டுவரையும் குளகமாய் பசியதோளியென னும் எழுவாய் பெயர்த்திட்டா ளென்னும் பயனிலையைக்கொண்டு முடிந்தது. (க0க)

[இது சிலம்பொலியின் சிறப்புச் சொல்லப்படுகிறது.]

கலத்தொடுபழகுஞ்செம்பொற்கதிர் முலைக்களிநல்யானை
யுலப்பருமத்தக்காணி லுயிர்குடித்தன்றி நில்லா
நிலத்தலைகாக்கும்வேந்திர் நீங்குக நீங்குகென்று
வலத்தகமூட்டுஞ்செம்பொனடிச்சிலம்பரற்றச்சென்றாள்.

(இ - ள்.) கலத்தொடு பழகும் - ஆபரணத்தோடு பழகுகின்ற செம் பொன கதிர - சிவந்த பொற்பிரகாசம்பொருந்திய கிரணங்களை யுடைய, முலை - ஸதனங்களாகிய, களி நல யானை - களிப்பையுடைய நல்ல யானைகளானவை, உலப்பரும - செடுத்தற்கரிய, மத்தத - மதத் தையுடையன, காணில - நும்மைக் கண்டால், உயிர குடித்தன்றி - உயிரைக் குடித்தாலல்லாமல், நில்லா - நிற்றலைப்பெறமாட்டா, (ஆத லால்) நிலத்தலை - பூமியினிடத்து, காக்கும் - புரக்கின்ற, வேந்திர - அரசர்காள், நீங்குக நீங்குக என்று - நீங்கக்கடவீர் நீங்கக்கடவீரென று, அலத்தகம் ஊட்டும - செம்பஞ்சுக் குழம்பூட்டிய, செம பொன்- சிவந்த பொன்னாற்செய்த, அடி - பாதத்திலிருக்கின்ற, சிலம்பு அரற்ற- சிலம்புகள் சத்திக்க, சென்றாள - போனாள், எ-று

(க - து.) அரசர்களே! தமயந்தி முலைகளாகிய யானைகள் உம் மைக்கண்டால் கொல்லும், நீங்கிப்போங்களென்று சொல்லுவதுபோ லச் சிலம்பு சத்திக்கச் சென்றாள் என்பதாம

தம்மை மேற்கொண்டபாதங்கள் மற்ற அவயவங்களைச் சுமந்து காத்தல்போல் பூமியைச்சுமந்துகாக்கும் அரசராகையால் அவ்வியைபு

பற்றி அவரிறவாதபடி ஒரு நீங்குவருமுன்னாத தெரிவிப்பவாபோல் 'நிலத்தலைக்காக்கும்வேந்திர முலைக்களிருலயானை யுலப்பருமதத்தகாணி லுயிாகுடித்தன்றி நில்லா நீங்குக நீங்குகெனறு அடிச்சிலம்ப பரறற' என்றூ நீங்குக நீங்குக வெனறது வநததுவநதது கூறறெனறது போல் விளைவுபயறிவந்த அடுக்கு. முலைகளுககு யானையை உவமை சொல்லுதல் கடாஅக களிறறின்மேற கடபடாமாதா, படாஅ முலை மேற றுகில்' இதனாலறிக. சிலம்பொலித்தலில் நீககுதறகுரியோர் சொல்லைக்குறித்தலால தறகுறிப்பணி. (ககo)

வரிவளைக்குலமுமவளவாரமங்கலமுரசுங்கன்னற் [ப்ப
பொருசிலைமதனனவின்னாணபுடைபபொடும் பொங்கியார்
விரிதிரைப்பரவையீன்றவிளங்கிழையனையநங்கை [தாள்.
திருமணியிமைக்குஞ்செமபொனமணடபஞ் சென்றுசேர்ந்

(இ - ள.) வரி வளை குலமும - இரேகைகளையுடைய சங்குக் கூட்டமும், வள வார மஙகல முரசும - இறுககிய வாரையுடைய விவாக பேரிகையும், கன்னல் பொரு சிலை - பொருகினற கருபபம்வில் லேந்திய, மதனன - மனமதனுடைய, வில நாண புடைபபொடும் - வில்லினது குணததொனியோடும, பொங்கி - மிகுந்து, ஆர்ப்ப - சத் திக்க, விரி திரை பரவை ஈனற - விரிநத அலைகளையுடைய பாறகடல் பெறற, விளங்கு இழை அனைய நஙகை - திருமாதையொதத தமயந்தி, திரு மணி இமைககும - உயாநத ரதநஙகளபதிததுப் பிரகாசிககினற, செம பொன மணடபம செனறு - சிவந்த பொனனாறசெயத மணட பததிற போய, சோநதாள - சோாநதனள, எ-று

(க - து.) தமயநதி சுயம்வரமணடபததிற செனறாள என்ப தாம்.

தமயநதிமேல விருபபுற்று விவாகஞ் செயதுகொளள வநதிருக் கின்ற அனேக அரசரும இபபொழுது அவளைககணட சமயமாகை யால காலமபாாததிருநத மனமதன ஏககாலததில இடைவிடாமல் அவாமேல் பூஙகணையெயதல்பாறறிச சஙகபேரிகையொலி வினாணொ புடைபபொடும பொஙகியாாபப வெனறூா (ககக)

[இதனால தமயநதியைககணட அரசாசெயகை சொலலபபடுகினறது ]

இழைசுடரெறித்தலானுமிருவிசும்புறையுமவானோர்
பொழிமலாமிடைதலானும்பூசலவண்டிவர்தலானு
முழைபொருதடங்கட்பேதையுருவினைத்தெரியக்காணார்
விழைவொடுநோககும்வேந்தாவிழிநெருககுற்றமாதோ.

(இ - ள்.) இழை சுடா எறிததலாலும் - ஆபரணங்கள் ஒளியை வீசுதலாலும், இரு விசும்பு உறையும் வானோர - பெரிய சுவாக்கததில் வசிககபபெற்ற தேவாகள், பொழி - பொழிகின்ற, மலா மிடைதலா லும் - பூக்கள் நெருங்குதலாலும், பூசல் வண்டு இவாதலாலும் - சண் டைசெயகினற வண்டுகள் மொயப்பதனாலும், உழை பொரு தடம்

கண் பேதை உருவினை - மானையொத்த விசாலம்பொருந்திய கண்களை யுடைய தமயந்தியினது வடிவை, தெரிய காணா - தெரியும்படி பாரா ராகி, விழைவொடு நோக்கும் - விருப்பபோடு பார்க்கின்ற, வேந்தர் விழி - அரசருடைய விழிகளானவை, நெருக்குற்ற - நெருக்க மடைந் தன, எ-று. மாது, ஓ - அசைகள்.

(க - து) ஆபரணங்களி னொளிகளாலும் மலர்களாலும் வண்டு களாலும் தமயந்தி வடிவைக்காணாதவர்களாய் அரசர்கள் கண்கள் நெருக்குற்றன என்பதாம்.

இமைசுடரொறித்தல் முதலிய காரணங்கள் மூன்றும் பொதுப் படக்கூறினும் இமைசுடரொறித்தலால் பார்த்தற்குக் கண்கூசி விழி நெருக்குற்றவென்றும், மலர் மிடைதலானும் வண்டிவர்தலானும் உரு வினைத்தெரியக் காணாவென்றும், கொள்க. உருவினைத்தெரியக் காணா ராயினும் வெறுப்பின்றி விழைவினால் அநேகர் நோக்குதலால் அவர் விழிகள் நெருக்கமுற்றனவென்னினும் அமையும். உழைபொரு தடங்க ணென்றதனால், மான்பார்வையை மாதர் கண்பார்வைக்கு உவமை சொல்லுதலன்றி மானையே அவர் கணணிற்கு உவமைசொல்லுதலு முண்டு அது 'கற்றை வார்குழ லாச்சியர் கயல்விழி முகத்தின, பெற் றி யொப்புறப் பெருங்குரும் துச்சிமேற் றுவி, யொற்றை மானுடைக் கலைமதி யதனிழ லுறங்கு, மற்றை மானையும் பற்றுவான கதிர்க்கை யால் வருடும்' இதனாலறிக (ககஉ)

[இதனால் தமயந்தி ஆபரணங்களில் நீலரத்நத்தின விளக்கஞ் சொல்லப்படுகின்றது]

**அறற்கருங்கூந்தற்பேதையணிகளிற்கரியசோதி**
**யெறிக்குநன்மணியின்றோற்றமெறிதிரைக்கடலின்மொய்த்த**
**விறற்கதிர்வடிவேல்வேந்தர்விழைவொடுநோக்குங்கண்கள்**
**பறிப்பரியனவாய்மெய்யிற்பதிந்தனபோலுமாதோ.** [த

(இ-ள்.) அறல் கரும் கூந்தல் பேதை - கருமணலையொத்த கரிய தலைமயிரையுடைய தமயந்தியினது, அணிகளில் - ஆபரணங்களுக்குள் ளே, கரிய சோதி எறிக்கும் - நீல வொளியை வீசுகின்ற, நன் மணி யின் தோற்றம் - நல்ல நீலரத்நத்தின காட்சியானவை, எறி திரை கட லின் மொய்த்த - அலையெறிகின்ற கடல்போல நெருங்கப்பெற்ற, விறல் - பெருமைபொருந்திய, கதிர் - கிரணங்களையுடைய, வடி வேல் வேந்தர் - வடித்த வேலையுடைய அரசர்கள், விழைவொடு நோக்கும் கண்கள் - விருப்பத்தோடு பார்க்கும் கண்களானவை, பறிப்பரியன வாய் - வாங்குதற் கரியவாகி, மெய்யில் - தேகத்திலே, பதிந்தனபோ லும் - அழுந்தினபோலு மிருந்தன, எ-று. மாது, ஓ - அசைகள்

(க - து.) தமயந்தியணிந்த நீல ரத்நங்களின் காட்சிகளானவை அரசர்கள் கண்களைப்போலு மிருந்தன என்பதாம்.

அணிகளிலே நவமணிகளும் அழுத்தியிருக்க நீலமணித்தோற்றத் தைச் சொல்லியது தமயந்தியைப்பார்க்கும் அரசர்கண்களை யுவமை யாக்குதற் கென்க. தமயந்தியினணிகளிற் பதித்த நீலமணிகளில் அர சர்பார்வையைக் குறித்தலால் தற்குறிப்பணி. (ககரு)

[இதுவும் அரசர் கூறுதல் சொல்லப்படுகின்றது.]

**வஞ்சமொன் றின்றிவேறலரிதெனவதுவைநாட்டி**
**விஞ்சையின் புணர்ப்பாற்கூற்றைவிளங்கிழைவடிவமாக்கி**
**யெஞ்சலிலுலகமன்னர்யாரையுமொருங்குகொல்வான்**
**செஞ்சுடர்வயவாள்வேந்தன்றீவினையிழைத்ததென்பார்.**

(இ - ள்) வஞ்சம் ஒன்று இன்றி - வஞ்சனையொன்றில்லாமல், வேறல் அரிது என - (நம்மால்) வெல்லப்படுதலரிதென்றெண்ணி, வதுவை நாட்டி - சுயம்வரமென்று நாட்டி, விஞ்சையின் புணர்ப்பால் - மந்திர வித்தையினுடைய சம்பந்தத்தால், கூற்றை - யமனை, விளங்கிழை வடிவம் ஆக்கி - காந்தியுள்ள இரத்தினாபரணங்களைத்தரித்த தமயந்தியினுருவமாகச்செய்து, எஞ்சல் இல் உலக மன்னர் யாரையும் - குறைவில்லாத திரிலோகத்திலுமுள்ள அரசரெல்லாரையும், ஒருங்கு கொல்வான் - ஒருசேரக் கொல்லும்படி, செஞ்சுடர் - செய்ய கிரணத்தையுடைய, வய வாள் - வெற்றிபொருந்திய வாட்படையையுடைய, வேந்தன் - வீமனென்பவன், இழைத்தது - செய்தது, தீவினை என்பார் - தீவினையாகுமென்பார்கள், எ-று.

(க - து.) வீமன் இயமனைப் பெண்ணாக்கி அரசர்களைக் கொல்ல நினைத்தது தீவினை யென்பார்கள் என்பதாம்.

வீமன் வஞ்சகஞ்செய்தது சொல்லநினைத்தது யாதன்பொருட்டெனில் தனக்கு வலிமை மிக்கிருப்பினும் படையெடுத்து நம்மைத் தனித் தனி வெல்வதற்கு நெடுங்காலஞ்செல்லுமென்றும், அங்ஙனஞ்செல்லி னுந் தன்னினமிக்கவரு மிருப்பாரென்னுங் கருத்தால் வெற்றியாகுமோ ஆகாதோவென்றுங் கருதியெனக். இதுமுதல் நாலு பாட்டுக்கள் தமயந்தியைக்கண்ட அரசர்கள் சொல்லியன வெனக். (௧௧௪)

**தொண்டைவாய்முத்தமூரற்றுடியிடையறன்மென்கூந்த**
**லொண்டொடிவனப்புவாய்ந்தவுருவுநங்கண்களாரக்**
**கண்டுழிவியந்துநெஞ்சங்களிப்புறவொற்றர்கூறப்**
**பண்டுநாங்கேட்டவாற்றிற்பதின்மடங்காயிற்றென்பார்.**

(இ - ள்.) தொண்டை வாய் - கொவ்வைக்கனிபோன்ற வாயை யும், முத்தம் மூரல் - முத்தையொத்த பல்லையும், துடி இடை - உடுக் கையையொத்த இடையையும், அறல் மென் கூந்தல் - கருமணலை யொத்த மெல்லிய கூந்தலையுமுடைய, ஒள் தொடி - பிரகாசம்பொ ருந்திய வளையலையணிந்த தமயந்தியினது, வனப்பு வாய்ந்த - அழகு பொருந்திய, உருவு - வடிவை, நம - நம்முடைய, கண்கள் ஆர - கண் கள் திருப்திபெற, கண்டுழி - கண்டவிடத்தில், வியந்து - அதிசயித்து, நெஞ்சம் களிப்பு உற - மனமானது களிப்படையவடைய, ஒற்றர் கூற - ஒற்றர் சொல்ல, பண்டு - முன்னே, நாம் கேட்டவாற்றில் - நாம் கேட் டவகையில், பதின்மடங்கு - பத்துமடங்கு, ஆயிற்று என்பார் - மே லாயினதென்பார்கள், எ-று.

(க - து) அரசர்கள் தமயந்தியழகை வியந்தார்கள் என்பதாம்.

தமயந்திக்குத் தம்மோடு ஒற்றாகூறிய அழகினும் இப்பொழுது பதின்மடங்கு அதிகரித்திருக்கக்காண்டலால் அரசர்க்கு மோகமும் அவ்வளவாயிற்றென்பது கருத்து. (கசரு)

**வள்ளுறைகழித்தவொள்வாண்மாறிவைத்தனையவுண்க**
**ணளளிகொண்டுயிரையின்னேயருந்திடாதொழியினன்**
**றெள்ளமிர் தனையதீஞ்சொற்சேயிழையுத்தரீகத் [ற்று**
**துள்ளுறைகொடியகூற்றமுயிர்குடித்திடுவதென்பார்.**

(இ - ள்.) வள் உறை கழித்த ஒள் வாள் - கூர்மை பொருந்திய உறையினின்று நீக்கிய ஒளிபொருந்திய வாளை, மாறி வைத்தது அனைய - மாறிவைத்தால் அதையொத்த, உண் கண் - மையுண்ட கண்களானவை, உயிரை - ஆவியை, அளளிகொண்டு - கையி லள்ளிக் கொண்டு, இன்னே - இப்பொழுதே, அருந்திடாது - உண்ணாமல், ஒழியினன்று - நீங்கிலன்று, தெள் அமிர்து அனைய - தெளிவுபொருந்திய அமிர்தத்தையொத்த, தீம் சொல் - மதுரம்பொருந்திய சொல்லையுடைய, சேயிழை - தமயந்தியினது, உத்தரீகத்து உள் உறை - மேற்போர்வைக்குள்ளே யிருக்கும், கொடிய கூற்றம் - முலைகளாகிய கொடிய யமன், உயிர் - ஆவியை, குடித்திடுவது என்பார் - பருகுவதென்பார்கள், எ-று.

(க - து.) அரசர்கள் தமயந்தி முலைகளாகிய யமன் உயிரைக் கொல்லு மென்றார்கள் என்பதாம்.

அள்ளிகொண்டு உயிரை யருந்துதல்பற்றிக் கண்களுக்கு வாளை யுவமையாக்கினார். கொல்பவன் மறைந்துவருவ னென்பது தோன்ற ஸ்தனங்களை 'உத்தரீகத் துள்ளுறை கொடிய கூற்றம்' என்றார். தமயந்தி கண்களுக்கே உயிர் தப்பாதென்பது கருத்து. (கசசு)

**முருந்துறழினியமூரன்முகிழ்முலைப்பசியவேய்த்தோட்**
**கருந்தடங்கண்ணிசெவ்வாயககமழதிரையமிழ்தமாந்த**
**வருந்தவம்புரிந்தோர்மண்ணிலரசரோவமரரோயோ**
**தெரிந்திலமெனனமாழ்கிததெருமரலெய்திநிற்பார்.**

(இ - ள்.) முருந்து உறழ் இனிய மூரல் - மயிலிறகினடியை ஒத்த இனிமையையுடைய பற்களையும், முகிழ் முலை - அரும்பையொத்த ஸ்தனங்களையும், பசிய வேய் தோள் - பசிய மூங்கிலையொத்த தோள்களையும், கரும் தடம் கண்ணி - கரிய பெரிய கண்களையுமுடைய தமயந்தியினது, செவ்வாய் - சிவந்தவாயாகிய, கமழ் - வாசனைவீசுகின்ற, திரை அமிழ்தம் மாந்த - பாற்கடலிற்றோன்றிய அமிர்தத்தைப் புசிப்பதற்கு, அரு தவம் புரிந்தோர் - அரியதவத்தைச் செய்தவர், மண்ணில் - பூமியிலிருக்கின்ற, அரசரோ - அரசருக்கு ளொருவரோ, அமரரோயோ - தேவர்க்குளொருவரோ, தெரிந்திலம் என்ன - யாம் அறிந்திலமென்று, மாழ்கி - மயங்கி, தெருமரல் எய்தி - சுழற்சியடைந்து, நிற்பார் - நிற்பார்கள், எ-று.

(க - து.) தமயந்தியை அநுபவிக்கத் தவஞ்செய்தவர்கள் தேவர்களோ அரசர்களோ என்பார்கள் என்பதாம்.

ஒருவராயினும் அருந்தவம் புரிந்தோராகையால் அவ்வுயர்வுபற்றி அவரைப் பன்மைவிகுதியாற் கூறினர். தவம்புரிந்தவர் இன்னுரென்று தெரிந்தால் மற்றையவர் மாலை தரிக்கும்போது இங்ஙனமிருந்து அவமானப்படாமல் தம்மிடங்களிற் சேரலாமென்பது கருத்து. அது முன்னே தெரியாமையால் 'மாழ்கித் தெருமரலெய்தினர்' என்றார்.()

[இதுவுமது.]

அளியசிற்றடிகணோவவனிச்சமேலொதுங்கச்செய்த [ர்
விளைமதுத்துளிக்குந்தண்டார் வேந்தனே கொடியனென்பா
வளர்முலைப்பாரங்கண்டுமவண்டிமிர்தெரியல்சூட்டித்
தளரிடைக்கிடுக்கண்செய்ததாயரோ கொடியரென்பார்.

(இ - ள்.) அளிய சிறு அடிகள் நோவ - அளித்தலையுடையவாகிய சிறிய பாதங்கள் நோவையடைய, அனிச்சம் மேல் ஒதுங்க செய்த - அனிச்சமலரின்மேல் நடக்கச்செய்த, விளை - விளைகின்ற, மது துளிக்கும் - தேன் றுளிக்கின்ற, தண் தார் வேந்தனே - குளிர்ச்சிபொருந்திய மாலையையுடைய வீமராஜனே, கொடியன் என்பார் - கொடியவனென்பார்கள், வளர் முலை பாரம் கண்டும் - வளரப்பெற்ற ஸ்தனங்களினுடைய சுமையைக்கண்டும், வண்டு இமிர் தெரியல் சூட்டி - வண்டுகள் ஒலிக்கப்பெற்ற மாலையைச்சூட்டி, தளர் இடைக்கு - தளரப்பெற்ற மருங்குலுக்கு, இடுக்கண் செய்த - வருத்தத்தைச் செய்த, தாயரோ கொடியர் என்பார் - தாய்மார்களே கொடியரென்பார்கள், எ - று.

(க - து.) தமயந்தியை நடக்கச்செய்த வீமனே கொடியனென்பார்கள், முலைப்பாரத்தின்மேல் மாலைசூட்டிய தாய்மார்களே கொடியரென்பார்கள் என்பதாம்.

அனிச்சமலர் மென்மையுடைய திருப்பினும் மாதரடிக்கு வருத்தஞ்செய்யுமென்பது பற்றி 'அனிச்சமேலொதுங்கச் செய்த வேந்தனே கொடியன்' என்றார். அது "அனிச்சமு மன்னத்தின் றூவியுமாதரடிக்கு நெருஞ்சிப் பழம்" இதனாலுணர்க. தந்தைக்குப் பெண்கள் வருத்தந் தெரியாவிடினும் தாயருக்குந் தெரியாதென்பார், முலைப்பாரங்கண்டும் 'தெரியல்சூட்டித் தளரிடைக் கிடுக்கண்செய்த தாயரோ கொடியர்' என்றார். தாயரென்பன் பன்மையாகக் கூறுதலால் பாராட்டுந் தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் என்னும் ஐவரையுங் கொள்க. (௧௧௮)

ஏமுறுமன்னர்யாருமினையன கூறப்பைம்பொன்
வாமமேகலைகளார்ப்பமணிச்சிலம்பொலிப்பச்செய்ய
காமர்வாண்முகையசெவ்விக்காந்தளஞ்செங்கைகூப்பித்
தாமவேற்றடங்கணல்லாடாதையைத்தொழுதுநின்றாள்.

(இ - ள்.) ஏமம் உறும் மன்னர் யாரும் - இன்பமடைகின்ற அரசரனைவரும், இனையன கூற - இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்ல,

பைம் பொன் - பசிய பொனனுற்செயத, வாமம் - அழகு பொருந்திய, மேகலைகள ஆரபப - மேகலாபரணஙகள சததிகக, மணி சிலம்பு ஒலிபப - நவமணிக ளிழைககபபெறற பாதசாலங்கள் ஒலிகக, செயய - சிவநத, காமா - அழகுபொருநதிய, வாள - ஒளி யையுடைய, மூகைய - அருமபை யுடையனவாகிய, செவவி - செவவி யையுடைய, காநதளம செம கை கூபபி - காநதளமலரை யொத்த சிவந்த கைகளைக குவித்து, தாமம் - வெறறிமாலையைததரிதத, வேல் - வேலையொதத, தடம கண நலலாள - விசாலமபொருநதிய கண்களை யுடைய தமயநதியானவள், தாதையை - தநதையை, தொழுது நின்றாள - வணஙகி நினறனள, எ-று

(க - து) தமயநதி தனபிதாவாகிய வீமனை வணஙகி நின்றாள் எனபதாம்.

ஏமமெனபது ஏம எனக கடைகுறைநது நினறது. மன்னனெ னப் பொதுபபடக கூறலால திரிலோகத தரசனையுங கொள்க. வீம னுடைய ஆணைபபடி நடகக வேணடியவைக ளாகையால் அக்குறிப் புததோனற அவனைத தமயநதி வணஙகினு ளெனக. (௧௧௧)

[இதனால் வீமராஜன செயகை சொலலபபடுகினறது.]

சேவடிதொழுதுநினறதெரிவையைமகிழ்நதுநோக்கி
மூவுலகாளுமவேந்தரொருவழிதிரண்டுமொய்த்தார்
யாவரோயிவரையெணணியிளையதொன்றுரைபபாரொன்னப்
பூவைபோன்மேனியானைநினைநதனனபுலவுவேலான்.

(இ - ள) சேவடி தொழுது நினற - தனனுடைய சிவந்தபாதங் களை வணஙகிநினற, தெரிவையை - தமயநதியை, மகிழ்ந்து நோக்கி - களிபபுடன் பாரதது, மூவுலகு ஆளு ம வேநதா - திரிலோகததிலுமுள்ள அரசாகளும, ஒருவழி திரணடு - ஓரிடததிமேல கூடி, மொயததார - நெருஙகினாகள, யாவா - எவா, இவரை - இவ வரசரை, எணணி - நினைதது, இளையா எனறு உரைபபா எனன - இததனமையொன்று சொல்லுவாரொனறு, பூவை போல மேனியானை - காயாமபூவையொத்த வணணததையுடைய நாரணனை, புலவு வேலான - புலால நாறறம் வீசு கின்ற வேலையுடைய வீமராஜன, நினைநதனன - நினைததான், எ-று.

(க - து.) வீமராஜன விஷ்ணுவை நினைததான என்பதாம்.

யாவரோ—ஓ - வினா. திரிலோகததரசரும நெருஙகி யிருக்கின்ற படியால் இவா இனனுரெனறு தெரிநது சொலலுதறகுத தேவரா லன்றி மனிதரா லாகாதெனபதைக கருதி வீமன திருமாலை நினைந்தன னென்க. வீமன் தெரிவையைநோக்கி நினைநதன னெனககூடடுக. ()

[இதனால் திருமாலினது செய்கை சொலலபபடுகினறது.]

மன்னவனினைவையோர்ந்துவணடுழாயலங்கன்மார்பன்
றன்னடிதொழுதுநின்றசதுர்முகத்தேவைநோககிக்
கன்னலிற்கனிந்ததீஞ்சொற்கலைமகளன்றியாரோ
பின்னரொன்றிவரையெண்ணியேந்திழைக்கிசைக்குநீரார்.

(இ-ள்) மன்னவன் நினைவை ஓர்ந்து - வீமராஜனுடைய நினைப்பையறிந்து, வனை துழாய அலங்கல மாாபன - வளமபொருந்திய துளபமாலையை யணிநத மாாபினையுடைய நாரணனுனவன, தன அடி தொழுது நின்ற - தனது பாதஙகளை வணஙகிநினற, சதுமுகததேவை நோககி - நானகு முகஙகளையுடைய பிரமதேவனைப் பாாதது, கன்னலில் கனிநத - கருமபைககாட்டிலும் சுவை முதிாநத, தீம் சொல - மதுரவாாததையையுடைய, கலைமகள அனறி - நாமக ளலலாமல், இனனா என்று - இததேயததினமொனறு, இவனா எனணி - இவ்வரசனா நினைதது, ஏநதிழைககு இசை ககும நீராா - தமயநதிககுச சொல்லுகின்ற தனமையை யுடையவா, யாா - யாவா, எ-று

(க - து) விஷ்ணு வீமராஜன நினைவையறிநது பிரமனைபபாாதது சரஸவதியே தமயநதிககு இவனுரியவனனெனறு சொலலவலலவள் என்றுா எனபதாம.

யாரோ—ஏ - வினு. மறறையாாககு இவா இவனுடைனறு தெரியினுஞ் சொலலுதலரிதாதலால 'கலைமகளனறியாரோ யினனமொன நிவனாயெனணி யேநதிழைக கிசைககு நீராா' எனறாா. சொல்லிறகுக் கன்னலிற கனிநதவெனனும அடைகொடுததது அதுபறறியாம. ()

[இதனுல பிரமன நாமகளை ஏவியது சொலலபபடுகினறது.]

என்றலுமலரின்மேலோனிளநிலாவெறிக்குமேனி
மன்றலங்கரியகூந்தலவாணிவாணமுகத்தைநோக்கிச்
சென்றுநீயரசர்வெள்ளத்திரளினைவிதர்ப்பனீன்ற
பொன்றிகழ்முலையினுளுக்குரையெனப்புவியிற்போந்தாள்

(இ-ள) எனறலும் - இபபடியெனறு சொனனவளவில், மலரின் மேலோன் - பிரமதேவனுனவன, இள நிலா எறிககும மேனி - இளமைபொருந்திய நிலவி னெளியை வீசுகினற திருமேனியையுடைய, மன்றல் - வாசனைபொருநதிய, அம் - அழகிய, கரிய கூந்தல் - கறுத்த கூநதலையுடைய, வாணி வாள முகததை நோக்கி - நாமகளுடைய ஒளி பொருநதிய முகததைபபாாததது, நீ சென்று - நீ போய், அரசா வெள்ளததிரளினை - இராஜகூட்டத திரட்சியை, விதாபபன் ஈனற - வீமனபெறற, பொன திகழ முலையினுளுக்கு - பொன போன்ற தேமலவிளஙகிய தமயநதிக்கு, உரை என - சொல்லெனறு சொலல, புவியில் போநதாள - பூமியிலே வநதாள, எ-று

(க - து.) பிரமன் சரஸ்வதியை நோக்கித தமயநதிக்கு அரசாகள்பெயரை அறிவியெனறு சொலல அவள வநதாள எனபதாம

மனிதப பிறப்புறற வீமனேனும தமயநதியேனும் அருந்தவம் புரிந்து தம்மை வேணடாதிருபப, நாரண னேவலாற் பிரமன நாமகளை விடுபப, அவள் விரைநது சேறலால், தநதை வாாததையை மைந்தன கடவாமையும், கணவன் மொழியைத் துணைவி யிகவாமையும் பெறப்பட்டன உரையென அவள புவியிற போந்தாளெனக் கொள்க. (௧௨௨)

**போந்தவள்வண்டுமூசாப்பொன்னரிமாலையோடும்**
**வார்ந்ததேமாலைதாழ்ந்தவதுவைமண்டபத்தின்மேவி**
**யேந்தெழிலெருத்தங்கோட்டிநாணொடுமிறைஞ்சிநின்ற**
**கூந்தலம்பிடிக்குவேந்தர்குலமுறைகிளக்கலுற்றாள்.**

(இ - ள்) போந்தவள் - அப்படி வந்த நாமகள், **வண்டு மூசா** - வண்டுகளால் மொய்க்கப்படாத, **பொன் அரி மாலையோடும்** - பொன்னரி மாலையுடனே, **வார்ந்த** - நீண்ட, தேம மாலை தாழ்ந்த - வாசனைபொருந்திய மலர்மாலைகள் தாழப்பெற்ற, **வதுவை மண்டபத்தில் மேவி** - விவாக மண்டபத்தில் பொருந்தி, **ஏந்து** - தாங்கிய, **எழில் எருத்தம் கோட்டி** - அழகுபொருந்திய தலையை வணங்கிக்கொண்டு, **நாணொடும் இறைஞ்சி நின்ற** - நாணத்தோடும் தொழுது நின்ற, **கூந்தலம் பிடிக்கு** - தமயந்திக்கு, **வேந்தர் குல முறை** - அரசர் மரபினை, **கிளக்கலுற்றாள்** - சொல்லத் தொடங்கினாள், எ-று.

(க - து) சரஸ்வதியானவள் தமயந்திக்கு அரசர்கள் குலமுறை சொல்லத்தொடங்கினாள் என்பதாம்.

எருத்தங் கோட்டலும் நாணுறலும் மாதர்க்குச் சுபாவ மாயினும் நாமகள் திரிமூர்த்திகளில் ஒரு மூர்த்தியினுடைய தேவியாதலால், அவளிடத்திலே இறைஞ்சியென்று தமயந்திக்கு வணக்கமுஞ் சொல்லப்பட்டது. கூந்தலம்பிடி யென்பது அதுபோன்ற நடையை யுடையவளென்ற தமயந்திக் காதலால் உவமையாகுபெயர் கூந்தலம்— அம் - சாரியை இனி சஉ - பாட்டால் அரசர்களை வெவ்வேறு சொல்லத்தொடங்கி ஆறுபாட்டால் தேவர்களைச் சொல்லுதல் காண்க. ()

**சேயரிசிந்திநீண்டசெழுங்கடைமழைக்கட்செவ்வாய்**
**மாயிருஞாலம்விற்குமவருமுலைத்தெரிவைகேட்டி**
**யாயிரங்கதிர்கள்வீசியங்கணமாஞாலம்போர்த்த**
**பாயிருள்பருகுஞ்செங்கேழ்பரிதியிவ்விருந்ததேவே.**

(இ - ள்.) சே அரி சிந்தி - செவ்வரிகள் சிதறப்பெற்று, **நீண்ட** செழுங் கடை - நெடுகிய செழுமைபெற்ற கடையையுடைய, **மழை கண்** - குளிர்ச்சிபொருந்திய கண்ணையும், செவ்வாய் - சிவந்த **வாயை** யும், மா இரு ஞாலம் விற்கும் - மகத்தாகிய பெரிய பூமியை **விலை** செய்யும், வரு முலை தெரிவை - வளர்கின்ற ஸ்தனங்களையுமுடைய தமயந்தியே, கேட்டி - நீ கேட்பாயாக, ஆயிரம் கதிர்கள் வீசி - **ஆயி** ரங்கிரணங்களை வீசி, அம் கண் மா ஞாலம் போர்த்த - அழகிய **இடத்** தையுடைய மகத்தாகிய பூமியை மூடிய, பாய இருள் பருகும் - பரவிய விருளைக்குடிக்கின்ற, செம் கேழ் பரிதி - செந்நிறத்தையுடைய சூரியன், இ இருந்த தேவு - இருந்ததலையுற்ற இத்தேவன், எ-று. ஏகா ரம் - ஈற்றசை.

(க - து.) தமயந்தியே இவன் சூரியதேவன் என்றாள் என்பதாம்.

பூமியைவிற்றல் தமயந்தி முலைக்கு விலையாகுமென்பார் '**ஞாலம் விற்கும்** வருமுலை' என்றார். பூமியைவிடப் பெரிதும் **வலிதும்**

பொறுமை யுள்ளதும் வளமுள்ளதும் வேறொன்றில்லை யென்பதற்கு மாயிருவென்னும அடைகள் கொடுக்கப்பட்டன. அது "தெரிவரும் பெருமையுந் திணைமையும பொறையும, பருவ முயற்சி யளவிற் பயத் தலு, மருவிய நன்னில மாணபா குமமே" இதனாலறிக. பூமியை மூடிய இருளை யோட்டிக கணகளுக்குத தெரியததக்க நில நீர முத லிய வெல்லாப பொருளகளையும நாடோறுங காட்டுகின்ற நனறி தோனறச சூரியனை 'ஆயிரங கதிர்கள வீசி யஙகண்மா ஞாலம்போர்தத பாயிருள பருகுஞ் செஙகேழுப பரிதி' எனறார். (கஉச)

பண்ணமையினியதீஞ்சொறபடாமுலைபபாவைகேணமோ
கண்வழூக்குறுதணசோதிககலைநிலவெறிபபவலலான்
மண்ணியமணியிறசெயதவானறவிசிருநததேவனை
விண்ணவர்க்கமிர்தமீநதவெணகதிர்ககடவுளாமால.

(இ - ள்.) பண் அமை இனிய தீம சொல - இசை பொருந் திய இனியவாகிய மதுரமானதைையை யுடைய, படா முலை பாவை - சாயாத ஸதனஙகளையுடைய தமயந்தியே, கேள் - கேட்பாயாக, கண் வழுககு உறு - கணகள கூசுகினற, தண - குளிர்ச்சிபொருநதிய, சோதி கலை - பிரகாசததைை யுடைய சோடச கலைகளும், நிலவு எறிபப - ஒளிவீசிக்கொணடு, வலலான - வல்லவனால், மணணிய - ஒபபனை யமைந்த, மணியில செயத வான தவிசு - ரதநஙகளாற செயயப் பட்ட பெரிய ஆசனததில, இருநத தேவனை - இருந்ததலையுறற தேவ னுைவன், விணணவாககு - தேவாகளுககு, அமிர்தம ஈநத - அமிர் தத்தைக கொடுதத, வெள கதிர கடவுள ஆம - சநதிரனாகும், எ-று.

(க - து.) இவன சநதிரனெனறு ளென்பதாம்.

வல்லான செயத தவிசில் கலைநிலவெறிபப விருநத தேவனை னக் கூட்டுக. சநதிரனுடைய கலைகளை அபரபக்ஷததுப பிரதமை முதலாகத தொடஙகிப பதினைநது திதியிலும அககினி முதலாயினோ ருண்பா, பூர்வபக்ஷததிலும அபபடியே கலைகள வளரும், தே வர்களுண்ணுமபடி தனனுடைய கலைகளைச சநதிரன தருதலால் 'விண்ணவாக கமுதமீநத வெண்கதிரக கடவுள' எனறார். (கஉரு)

ஊர்சுணங்கணிந்துவிம்மியொழுகொளியாரஞ்சூடி
யேர்கனிந்தொழுகும்பொம்மலிளமுலையணங்குகேட்டி
தார்புனைமெளலிவேய்ந்துதணப்பிலாதிருந்ததேவர்
மாரனில்வனப்புவாய்ந்தமருத்துவததலைவர்தாமே.

(இ-ள்.) ஊா சுணங்கு அணிந்து - பரவுகின்ற தேமலை யணிந்து, விம்மி - பருத்து, ஒழுகு ஒளி ஆரம் சூடி - ஒளியை வீசுகின்ற முத் துவடத்தைத தரிததுககொண்டு, ஏா கனிநது ஒழுகும் - அழகானது முதிர்ந்து ஒழுகுகின்ற, பொம்மல் இள முலை அணஙகு - பொலிவு பெ ற்ற இளமைபொருந்திய ஸ்தனஙகளையுடைய தமயநதியே, கேட்டி - கேட்பாயாக, தார புனை - மலாமாலையைத் தரித்த, மௌலி வேய்ந் து - கிரீடத்தை யணிந்து, தணப்பு இலாது இருந்த தேவா - இணைபிரி

யாது (இங்) கிருத்தலையுற்ற தேவர்கள், மாரனில் வனப்பு வாய்ந்த - மன்மதனைககாட்டிலும் அழகுபெற்ற, மருத்துவத்தலைவர் - அசுவினி தேவர்கள், எ-று. தாம், ஏ - அசை

(க - து ) இவர்கள் அசுவினிதேவர்கள் என்றாள் என்பதாம்.

எப்பொழுதும் இருவரும் இணைபிரியாதிருத்தலால் 'தணப்பிலா திருந்த' என்றும், அழகின் மிக்கோராதலால் 'மாரனில் வனப்பு வாய்ந்த' என்றும், தேவர்களுக்கு வியாதி தீர்ப்பவர்களிற் றலைமை யுடையவராகையால 'மருத்துவத்தலைவர்' என்றுஞ் சொல்லினாள். தேவர்களுக்கும வியாதி யுண்டோவெனில் உண்டு அது "வலாரி தோள் வாதநோயன மன்மதி கயநோயாளன, சுலாவுறு வெப்பு நோயிற் றொடக்குண்டான றக்கனென்பர், ஞலாவுறு காலிலாத முடவனே யுரங்கொண் மாதன, சலோதர நோயக்கோட பட்டான் றண்டு னற் கனையனமாதோ" இதனாலறிக. (கஉசு)

**வண்ணமேகலையாய்மற்றுனவருமுலைப்போகம்வேண்டி**
**யெண்ணிலராகியிப்பாலினிதுவீற்றிருந்தோரெல்லாம்**
**விண்ணவரப்பாற்பைம்பொனவியனறவிசிருந்ததேவர்**
**பண்ணமைதிவவினலயாழ்பயின்றகாந்தருவவேந்தர்.**

(இ-ள் ) வண்ணம் மேகலையாய - அழகுபொருந்திய மேகலாபரணத்தை யணிந்த தமயந்தியே!, உன - உன்னுடைய, வரு முலை போகம வேண்டி - வளரப்பெற்ற ஸதனங்களினுடைய போகத்தை விரும்பி, எண்ணிலா ஆகி - அளவற்றவராகி, இப்பால் - இப்புறத்தில், இனிது வீற்றிருந்தோர எல்லாம - இனிமையோடு வீற்ற ஷிருத்தலை யுற்றவர்களெல்லாரும, விண்ணவர - தேவர்கள், அப்பால - அவர்கள்புறத்தில், பைமபொன - பசிய பொன்னாற்செய்த, வியன் தவிசு இருந்த தேவர - மேலாகிய ஆசனத்தி லிருக்கப்பெற்ற தேவர்கள், பண அமை - இசையமைந்த, திவவின நல யாழ பயின்ற - வலிக்கட்டினையுடைய நல்லயாழை வாசிக்கின்ற, காந்தருவ வேந்தர - கந்தருவ அரசர்கள், எ-று மற்று - அசைநிலை

(க - து ) இவர்கள் காந்தருவ அரசர்கள் என்றாள் என்பதாம.

தேவர்களை இன்னாரின்னாரென்று வெவ்வேறு கூறத்தொடங்கிற் கால நீட்டிக்குமெனபதுபற்றி 'எண்ணில ராகியிப்பா லினிது வீற றிருந்தோரெல்லாம விண்ணவர்' எனப பொதுப்படக் கூறப்பட்டது. (கஉஎ)

**குழைமுகங் கிழிக்கும் வேற்கட் கொம்மைவெம் முலையாய கேட்டி, மழவிடை யென்ன வாய்கண் மணித்தவி சிருந்த தேவ, ரிழுமென வருவிச் சார லினமணி வரன் றித தூங்கும, விழைவுறு வெள்ளி வெற்பின் விஞ்சையர்க ளிறைவர் தாமே.**

(இ-ள்.) குழை முகம் கிழிக்கும் - காதணியினுடைய முகத்தைக் கிழிக்கின்ற, வேல் கண் - வேல்போன்ற கண்களையும், கொம்மை

வெம் முலையாய் - இளமையையுடைய விருப்பைச்செய்கின்ற ஸ்தனங்களையுடைய தமயந்தியே!, கேட்டி - கேட்பாயாக, மழ விடை என்ன - இளவேற்றைப்போல், ஆங்கண் - அவ்விடத்தில், மணி தவிசு இருந்த தேவர் - ரத்நாசனத்திலே இருந்தலையுற்ற தேவர்கள், இழும் என - இழுமென்னு மோசையோடு, அருவி - அருவியானது, சாரல் - மலைப்பக்கத்தினின்றும், இன மணி வாரன்றி - கூட்டமாகிய மணிகளை வாரிக்கொண்டு, தூங்கும் - ஒழுகுகின்ற, விழைவு உறு - விருப்பமடைகின்ற, வெள்ளி வெற்பில் - கைலாச மலையிலிருக்கின்ற, விஞ்சையர்க்கு இறைவர் - வித்தியாதரருக்கு அரசர்கள், எ-று.

(க-து) இவர்கள் வித்தியாதரருக்கு அரசர்கள் என்றாள் என்பதாம்.

இழுமென அருவிதூங்குமென்பது இழுமென்றல் விரைவி னொலிக்குறிப்பாம். "இழுமென விழிதருமருவி, பழமுதிர்சோலை மலைகிழவோனே" என்ப பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. ஐந்து முகத்தோடுங்கூடிய சதாசிவமூர்த்தி யிருத்தலால் அங்கிருப்பின் நமக்குக் கழிவில்லையென்று யாவருந் தவஞ்செய்ய தடைதற்கு விரும்புவதாதலின், கைலாசமலையை 'விழைவுறு வெள்ளிவெற்பு' என்றார். (௧௨௮)

முயற்கறையொழிந்தசெவ்விமுழுமதியதனினாளு
மயக்கியுள்ளுயிரையுண்ணுமவாள்கிடந்தனையகண்ணாய்
பயக்கருஞ்சிறப்பிற்றேவர்பரவவீண்டிருந்தகாளை
யியக்கர்தம்பெருமானீன்றவெழிலபுனைகுமரரேறே.

(இ-ள்) முயல் கறை ஒழிந்த - முயலினது கறுப்பு நீங்கிய, செவ்வி - அழகுபொருந்திய, முழு மதி அதனில் - பூரண சந்திரனையொத்த முகத்தில், நாளும் மயக்கி - நாடோறும் மயங்கச்செய்து, உள் உயிரை உண்ணும் - உள்ளேயிருக்கின்ற ஆவியை உண்கின்ற, வாள் கிடந்தது அனைய கண்ணாய் - வாளிருந்ததையொத்த கண்களையுடைய தமயந்தியே!, பயக்க அரு சிறப்பில் - தோன்றுதற்கரிய சிறப்பினால், தேவர் பரவ - தேவர்கள் வணங்குமபடி, ஈண்டு இருந்த காளை - இவ்விடத்தி லிருந்தலைப்பெற்ற அரசன், இயக்கர்தம் பெருமான் ஈன்ற - குபேரனாற் பெறப்பட்ட, எழில் புனை - அழகு பொருந்திய, குமரர் ஏறு - நளகூபரன், எ-று. ஏ - அசை.

(க-து) இவன் நளகூபரன் என்றாள் என்பதாம்.

திரவியமுடையவனை யாவருஞ் சூழ்ந்திருத்த லியல்பாதலின் நளகூபரன் குபேரன்மகனாதல்பற்றித் 'தேவர்பரவ வீண்டிருந்த காளை' எனப்பட்டது. குபேரன் இயக்கர்வேந்தனென்பது "இயங்கர்வேந்தன் அளகையாளி" இதனாலறிக. இனி ஒருபாட்டால் நாகவேந்தனைச் சொல்லுதல் காண்க. (௧௨௯)

காதளவோடிமீண்டுகடைசிவந்தாவியுண்ணு
மாதர்மென்னோக்கினாயிம்மணித்தவிசிருந்தவேந்தல்
பூதரவிலவினாணுய்ப்புனிதனுக்கணியுமாகிப்
பாதலத்தின்பந்துய்க்கும்பஃறலைப்பாந்தள்வேந்தே.

(இ-ள்.) காது அளவு ஓடி மீனெடு - காதுவரையுமோடித் திருமபி, கடை சிவந்து - கடைக்கண சிவந்து, ஆவி உண்ணும் - உயிரையுண கின்ற, மாதா மெல நோககிறைய - அழகிய மெலலிய பாாவையை யுடைய தமயநதியே!, இ மணி தவிசு இருநத ஏநதல - இந்த ரதநா சனததி லிருததலைபபெற்ற அரசனுனவன, புனிதனுக்கு - பரமசிவ னுககு, பூதர வில்லின் நாண் ஆய் - மேருவிலலில நாரியாகியும், அணி யும ஆகி - ஆபரணமாகியும், பாதலததது - நாகருலகததிருநது, இனை பம் துய்க்கும - சுகததை யனுபவிககின்ற, பஃறலை - பல தலையை யுடைய, பாநதள் வேநது - சாபபராஜன, எ - று. ஏ-ஈறறசை.

(க - து ) இவன் ஆதிசேடன எனறுள என்பதாம்.

பரமசிவன் திரிபுரததை அழிககத தொடஙகியபோது மேருவை வில்லாககிககொணடு அதறகேறபச சாபபராசனை நாணுக்கிய படி யால 'பூதரவில்லி னுணுய' எனறும, சாபபஙகளனைததுஞ் சிவபூசை செயது எஙகளை ஆபரணமாககிக கொளளலவேணடுமென வரஙகே டக, அவவாறு அச்சிவஙா கொடுததலால் 'புனிதனுககணியுமாகி' எனறுஞ் சொலலினு இவை சிவபுராணததிலுங காணக இனி ஐநதுபாடடால் ஐநது தீவிலு மிருநதுவநத அரசரைச் சொல்லுதல காணக. (௧௩0)

இழைபரந்திமைககுமலகுலினநகைப்பவளச்செவ்வாய்
மழைமதர்நெடுங்கணலலாயமலாக்கணைவேனிலவேளுந்
தொழுதகுவனப்புவாய்ந்துதோன்றுமித்தோன்றலவெய்ய
பொழிமதககளிநலயானைப்புட்கரத்தீவிலவேந்தே.

(இ - ள்.) இழை பரந்து - ஆபரணங்களால் பரவப்பெற்று, இமைக்கும் அல்குல் - பிரகாசிக்கின்ற அல்குலையும், இன நகை - இனிய நகையையுடைய, பவள செவவாய - பவளமபோன்ற செவ வாயையும், மழை மதா நெடு கண நல்லாய் - குளிர்ச்சிபொருந்திய களிப்பையுடைய நெடிய கண்களையுமுடைய தமயந்தியே!, மலா கணை வேனில் வேளும் - பூங்கணைகளையுடைய மன்மதனும், தொழு தகு வனபபு வாய்நது - வணஙகததகக அழகுபெறறு, தோனறும இ தோன்றல் - தோன்றுகின்ற இவவரசன, வெயய - வெவ்விய, பொழி மதம் - மும்மதமும் பொழிகின்ற, களி நல் யானை - களிபபு மிகுநத நல்ல யானைகளையுடைய, புட்கர தீவில் வேநது - புடகர மென்னுந் தீவிலிருககின்ற அரசன், எ-று. ஏ - அசை.

(க - து ) இவன புட்கரன் என்றுள என்பதாம்.

தேவாகளையும் நாக வேந்தனையுஞ் சொல்லி உடனே நாவலந் தீவரசரைக் கூறாது மற்றைத் தீவரசரைச் சொல்லிய தென்பொருட் டெனில், அவாகள் சோகம நரை திரை மூப்பின்றிப் பதினுயிரம் வய துளளவராயத் தேவரோடு ஒருபுடை யொததிருத்தலி னெனக. அவாகளுக்கு அக்குணங்கள் "சாகமுத லிருமூனறிற் றஙகினாக டமக்கெல்லாஞ், சோகமிலை யெந்நாளுந் துயத்திருப்பா சுகமவாத, மாகமதி னரைதிரையு மில்லையயு தாயுள்வளா, மோகமிலை கலியுகத

தங் கிம்புருடாமுறைபெறுவா". இப்பாட்டு முதலாவரும் பாட்டுத் தோறும் அரசா செல்வச் சிறப்பைச் சொல்லுதலால் வீறுகோளணி காண்க. (௧௩௧)

ஆற்றல்சான்மன்னராவியருந்துவான்கரந்துவெய்ய
கூற்றிருந்தனையவுண்கட்கோலவளையினிதுகேட்டி
வேற்படைத்தானைசூழவியலறவிசிருந்தகாளை
பாற்கடலுடுத்தசாகதீவுறைபரிதிவேலான்.

(இ-ள்.) ஆற்றல் சால் - வலிமைமிக்க, மன்னா ஆவி - அரசாக ளுயிரை, அருந்துவான் - உண்ணும்படி, கரந்து - மறைந்து, வெய்ய கூற்று இருந்தது அனைய - வெவ்விய யமனிருந்ததை யொத்த, உண் கண - மையுண்ட கண்களையுடைய, கோல் வளை - தமயந்தியே!, இனிது கேட்டி - இனிமையோடு கேட்பாயாக, வேல் படை - வேலா யுதமேந்திய, தானை சூழ - சேனைகள் தன்னைச் சுற்றும்படி, வியன தவிசு இருந்த காளை - அழகிய ஆசனத்தி லிருக்கப்பெற்ற அரசனுன வன், பால் கடல் உடுத்த - பாற்கடலையுடுத்த, சாகத்தவு உறை - சாக மெனனுந் தீவிலிருக்கின்ற, பரிதி வேலான - சூரியனபோன்ற வேற் படையையுடைய அரசன், எ-று.

(க - து.) இவன் சாகத்தீவரசன என்றுள என்பதாம்.

கடல்களேழினும் உயர்சசி பெற்ற கடலாதலாலும், அக்கடலிற் சிந்தாமணியாற் செய்த மண்டபத்தில் உமாதேவி யோகசித்திரை கொண்டிருத்தலாலும், நாராணக்கடவுள் ஆலிலைமேல் அறிதுயில் கொ ண்டிருத்தலாலும், தேவாகளால் அமிர்தங் கடைந்தெடுக்கப் படுதலா லும், இலக்குமி முதலிய அழகின மிக்க மங்கையரும் கவுத்துவமணி டஞ்சதருக்கள் ஐராவத முதலியவும் பிறத்தலாலும், அச்சிறப்பு விளங்க மற்றைத் தீவுகளுக்கு அவ்வக் கடல்களைக் கூறாது இத்தீவிற்கு மாத்திரம் 'பாற்கடலுடுத்த சாகத்தீவு' என்று சிறப்பிக்கப் பட்டது. அதனால் அத்தீவைப் புரக்கும் அரசன பெருமையுங் கூறியதாயிற்று. பாற்கடலிலே உமாதேவி யோகசித்திரை கொள்ளுதல் "ஆரமிர்தின கடல் வேலிசெழுந்தரு வாயமணிபம்பிய தீவுட, டாரகடம்பட கானிலருங்கொடை டாய்மணிமண்டப வீடேட, கோரசிவன்பர மேச னுமஞ்சமொர் கூடபரியங்கமே ளுமேலே, சீரடரும்பர ஞானமுறுங் களி தேவரருந்தவா பூமாதே' இதனாலறிக. (௧௩௨)

தளரிடைமெலியவீங்கிச்சந்தனத்தேய்வைகொட்டி
வளரிளமுலையாயிங்ஙன்வைகியமணிசெய்பூணு
ளிளவெயிற்பரிதிமான்றேரிடறுபொற்குடுமியோங்கிக்
கிளரொளிவிரிக்குமாடக்கிரவுஞ்சத்தீவின்வேந்தன்.

(இ-ள்.) தளர் இடை மெலிய - தளர்கின்ற இடையானது வாட, வீங்கி - பருத்து, சந்தன தேய்வை கொட்டி - சந்தனக்குழம்பினை அப்பி, வளர் இள முலையாய - வளரப்பெற்ற இளமைபொருந்திய ஸ்த னங்களையுடைய தமயந்தியே!, இங்ஙன் வைகிய - இவ்விடத்தில் தங்

கிய, மணி செய் பூணன் - ரத்நாபரணங்களையுடைய அரசன், இள வெயில் பரிதி மா தேர - இளவெயிலையுடைய சூரியனுடைய குதிரைகட்டிய தேரானது, இடறு பொன் குடுமி - இடறுகின்ற பொன்னாற்செய்த சிகரமானது, ஓங்கி - உயர்ந்து, கிளர் ஒளி விரிக்கும் - மிகுந்த காந்தியைப் பரப்புகின்ற, மாடம் - உபரிகைகளையுடைய, கிரவுஞ்சத் தீவின் - கிரவுஞ்சமென்னுந் தீவையாளுகின்ற, வேந்தன் - அரசன், எ-று.

(க-து.) இவன் கிரவுஞ்சத்திவரசன் என்றாள் என்பதாம்

இங்ஙனமென்பது இங்ஙனெனக் கடைகுறைந்தது. சூரியனிரதத்திற்கட்டிய குதிரைகள் ஒளியைநோக்கிக் கண்கூசி ஒதுங்கி நடக்கும் பெருமையால 'பரிதிமானறே றிடறுபொற் குடுமியோங்கிக் கிளரொளிவிரிக்குமாடம' எனப்பட்டது (௧௩௩)

புரிவடஞ்சுமந்துவீங்குமபுணர்முலையீங்குவைகுந்
திருகுவெஞ்சீற்றத்துப்பிற்றிண்களியானையன்னான்
விரைமதுவுயிர்க்குங்கைதைவேலிவாய்மணியும்பொன்னும்
வருதிரைசுருட்டுங்கானல்வான்குசைத்தீவில்வேந்தன்.

(இ-ள்.) புரி வடம் சுமந்து - முத்துவடங்களைப் பொறுத்து, வீங்கும் புணர் முலை - பருத்த நெருங்கிய ஸ்தனங்களையுடைய தமயந்தியே!, ஈங்கு வைகும் - இங்கேயிருக்கின்ற, திருகு - மாறுபடுகின்ற, வெம் சீற்றத்துப்பின் - வெவ்விய மிகுந்த கோபத்தையும், திண் - வலிமையையுமுடைய, களி யானை அன்னான் - களிப்பு மிக்க யானையையொத்த அரசனானவன், விரை மது உயிர்க்கும் - வாசனைபொருந்திய தேனைத் தருகின்ற, கைதை வேலிவாய் - தாழைவேலியிடத்தில், மணியும் - நவமணிகளையும், பொன்னும் - பொன்னையும், வரு திரை சுருட்டும் - வருகின்ற அலைகள் மடக்கி வீசுகின்ற, கானல் - கடற்கரைச் சோலைகளையுடைய, வான் - மேலாகிய, குசைத்தீவில் - குசையென்னுந் தீவிலிருக்கின்ற, வேந்தன் - அரசன், எ-று.

(க - து.) இவன் குசைத்தீவரசன் என்றாள் என்பதாம்.

எப்போதாயினுந் தன்னைப் பகைத்தவர்மேற் கோபம் வைத்தால் அநேகநாள் கழிக்கினும் மறவாது அவரைக் கொல்லுதலும் வலிமை பெறலும் களிப்புமிகுதலும் யானைக்குள்ள குணமாதல் இவ்வரசனுக்கும் அக்குணங்களுண்டென்பது தோன்ற 'திருகுவெஞ் சீற்றத் துப்பிற் றிண்களி யானையன்னான்' என்றார். (௧௩௪)

தெண்டிரைப்பரவையீன்றதெள்ளமிர்தூறல்போலும்
பண்டருமினியதீஞ்சொற்படாமுலைப்பாவைகேண்மோ
விண்டலப்பரிதிபோலவிளங்குமிக்குரிசிலவாசத்
தண்டலையுடுத்தகானற்சான்மலித்தீவில்வேந்தன்.

(இ-ள்.) தெள் திரை பரவை ஈன்ற - தெளிந்த அலைகளையுடைய கடலானதீன்ற, தெள் அமிர்து ஊறல்போலும் - தெளிந்த அமிர்தத்

தின பெருககுபோலும், இனிய பண தரும் - இன்பந்தரத்தக்க இசையைததருகின்ற, தீ சொல் - மதுரம்பொருந்திய சொல்லேயும், படா முலே பாவை - சாயாத ஸதனங்களேயுமுடைய தமயந்தியே! கேள- கேட்பாயாக, விண் தலம் பரிதி போல விளங்கும் - ஆகாயத்திலிருக கின்ற சூரியன்போலப பிரகாசிககின்ற, இ குரிசில - இவவரசனுனவன், வாச தண்டலே உடுதத - வாசமிக்க மலாகளேயுடைய சோலேகளே யுடுதத, கானல் - நெயதநிலத்தையுடைய, சானமலித்தீவில - சானமலிததீவி லிருக்கின்ற, வேந்தன - அரசன, எ-று.

(க - து) இவன் சானமலித்தீவரசன் என்ருள் என்பதாம.

பாற்கடலிற் பிறந்த அமிர்ததநின் மாதுரியம் இவள் சொலலிற் லறியலா மெனபதற்கு 'பரவையீன்ற தெள்ளமிர் தூறல போலு மினிய தீஞ்சொல' எனப பட்டது. சூரியன இருட்பகையை யோட்டுதல்போல் இவன தனபகையை யோட்டியவனெனபது தோன்ற, 'விண்டலப் பரிதிபோல விளங்குமிக் குரிசில்' என்றூர். அன்றிப பரிதிபோல் விளங்கிய ஒளியை யுடைவனெனினும் அமையும்.(கஙரு)

**தேவர்கள்முதலாமற்றைத்தீவினில்வனப்புவாய்ந்த**
**காவலரினேயொன்றுவுரைத்துமைக்கரியகூந்தற்**
**பூவையந்தீஞ்சொலவாட்கட்பொம்மல்வெம்முலேயினுட்கு**
**நாவலந்தீவின்வேந்தாயாரையுநவிலலுற்ருள்.**

(இ - ள்) தேவாகள முதல் ஆ - தேவாகளாதியாக, மற்றை தீவினில் - மற்றைத தீவுகளில், வனப்பு வாய்ந்த காவலா - அழகுபெற்ற அரசாகள், இனேயா என்று உரைதது - இததன்மையரென்று சொல்லி, மை கரிய கூந்தல் - மைபோலும் கறுத்த குழலேயும், பூவை யம் தீ சொல் - அழகிய பூவைபபுள்ளி னிசையையொதத தித்தித்தவார்த்தையையும், வாள் கண் - வாள்போன்ற கண்களேயும், பொம்மல் வெம் முலேயினுட்கு - பொலிவுபெற்ற விருப்பத்தைச் செய்கின்ற ஸ்தனங்களேயுமுடைய தமயந்திககு, நாவலந் தீவின் வேந்தா யாரையும் - நாவலந தீவிலிருக்கின்ற அரசாகள் எல்லாரையும், நவிலலுற்ருள் - சொல்லத தொடங்கினுள். எ-று.

(க - து.) நாவலந்தீ வரசாகளேச் சொல்லத்தொடங்கினுள் என பதாம.

தீவுகளேழனுள் இப்பொழுது சொல்லிய தீவுகளேந்தும் இனி சொல்லபபோகிற தீவொன்றுமாக ஆறுதீவுகளேச் சொல்லி ஒன்ற லேக கூறுதொழிந்தது எந்தப பிரதிகளிலு மில்லாமையால் அததீவையாளும் அரசன் வாதிலன்போலும். இனி நாவலந் தீவிலிருக்கின்ற பலதேயத தரசனையுஞ் சொல்லப்படுதல் காண்க நாவலந் தீவென்று இத்தீவிற்குப பெயரானது "நறவனேய கனியுதிரு நன்ருவ லெங்நாளு, முறுதியுற வுயிர்க்கெல்லாந் தென்றிசையி லோங்கு தலாற், பெறுமவகண டும்பெரிய நாவலந்தீ வெனும்பெயரை, மறுவறுமக கனித்தீரா மலேயதனே வலம்வருமே". இதனுற் காண்க. ()

**கொள்ளைவண்டிமிருங்கூந்தற்கோதையிவ்விருந்த வேந்தல
வள்ளவாய்க்கமலவாவிவாளையம்பகடுதாவிக்
கள்ளுலாம்பசியதாற்றுக்கமுகிளம்பாளைகீறு
மள்ளலம்பழனஞ்சூழ்ந்தவவந்திநாடாளுமவேந்தே.**

(இ - ள்.) கொள்ளை வண்டு இமிரும் கூந்தல் கோதை - கூட்டமாகிய வண்டுகள் சத்திக்கின்ற அளகத்தையுடைய தமயந்தியே!, இவ இருந்த ஏந்தல் - இங்கிருந்த இவ்வரசன், வள்ள வாய - கிண்ணம் போன்ற வாயையுடைய, கமல வாவி - தாமரைத் தடாகத்தினின்றும், வாளை அம் பகடு தாவி - அழகிய ஆணவாளைகள் பாய்ந்து, கள் உலாம் - தேனொழுகுகின்ற, பசிய தாறு - பசுமைபொருந்திய குலைகளையுடைய, கமுகு இளம் பாளை கீறும் - கமுகமரத்தினிளம் பாளைகளைக் கிழிக்கும்படியிருக்கின்ற, அள்ளல் அம் பழனம் சூழ்ந்த - சேற்றையுடைய அழகிய கழனிகள் சூழ்ந்த, அவந்தி நாடு ஆளும் - அவந்தி தேசத்தை ஆளுகின்ற, வேந்து - அரசன், எ-று. அம் - அசை.

(க - து.) இவன் அவந்திநாட்டரசன் என்றாள் என்பதாம்.

கொள்ளையிடும் வண்டென்பது பொருள்சொன்னது அதற்கேற்பத் தேனை யென்னுஞ் செயப்படுபொருள் வருவித்துக் கொள்ளினும் அமையும். அள்ளலம் பழனமென்னுந் தொடர்மொழியி லிருக்கும் அம்மென்பது விரித்தல் விகாரமாய் நின்றது. அது "வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல், விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி" என்னுஞ் சூத்திரத்தால் அந்நூலார் விரித்தல் விகாரத்திற்குக் காட்டிய "தண்ணந் துறைவா தகவில்லோ" என்னும் உதாரணத்தாலறிக. இன்னும் இந்நூலிற் பலவிடந்தோறும் அழகென்ப பொருள்கொண்டிருக்கும். இது போல்வனவற்றையும் இவ்வாறு விகாரமென்று கொள்ளினும் இழுக்காவென்க. (கஙஎ)

**நன்னலங்கனிந்தகோதாயீங்குறைநாமவேலான்
பொன்னவிரோடைநெற்றிபொழிமதக்களிறுமாய்க்குஞ்
செந்நெலங்குலையிற்றூங்குந்தீந்தொடைநறவுகாலுங்
கன்னலங்கழனிசூழ்ந்தகவுடநாட்டரசரேறே.**

(இ - ள்) நல் நலம் கனிந்த கோதாய - மிகுந்த நலமானது முதிர்ந்த தமயந்தியே!, ஈங்கு உறை நாமம் வேலான் - இங்கேயிருக்கின்ற அச்சத்தைத் தருகின்ற வேலாயுதத்தையுடைய அரசன், பொன் - பொன்னாற்செய்த, அவிர் ஓடை - பிரகாசிக்கின்ற முகபடாத்தையணிந்த, நெற்றி - நெற்றியையும், பொழி மதம் களிறு - பொழிகின்ற மதத்தையுமுடைய யானையை, மாய்க்கும் - மறைக்கின்ற, செந்நெல் - செஞ்சாலிகளுள்ளனவும், அம் குலையில் தூங்கும் - அழகிய குலைகள்போல அசைந்துகொண் டிருக்கின்ற, தீ தொடை - தித்திப்புடைய தேன் கூண்டானது, நறவு காலும் - தேனைத் துளிக்கின்ற, கன்னல் - கரும் புள்ளனவுமாகிய, அம் கழனி சூழ்ந்த - அழகிய கழனிகளால் சூழப்பட்ட, கவுடநாடு - கவுடதேசத்தை யாளுகின்ற, அரசர் - மன்னர்க்கு, ஏறு - ஆண்சிங்கம் போல்வான். எ-று. ஏ - அசை.

(க - து.) இவன் கவுடநாட்டரசன் என்றாள் என்பதாம்.

களிறுமாய்க்குஞ் செந்நெலென்றும், தேன்கூட்டையுடைய கன்னலென்றுஞ் சொல்லுதல் கவிகளின வழக்கம். அது "மீனகணி னள வும்வெற திடங்க ளினமையாற, றேன்கணக் கருமபியல் காடுஞ் செந்நெலின, வானபுகழ் களிறுமாய கழனியாககமு, மூன்கணாக் குனைப பரி தொல்லென சுமமைததே" இதனாலறிக. (௧௫௮)

கஞ்சநாண்மலரைவென்றுகடைகுழைபெறிந்துமீண்ட
நஞ்செனகொடியவாட்கணங்கையிவ்விருந்தமீளி
வெஞ்சமங்காத்தலன்றியணியெனவிளங்கச்செய்து
விஞ்சிசூழ்மதுரைமூதூரெதுகுலமன்னரேறே.

(இ-ள்.) கஞ்சம் நாண மலரை வென்று - தாமரையினுடைய புதியமலரை வெற்றிகொண்டு, கடை குழை எறிந்து மீண்ட - காதணியினுடைய கடையை வீசித் திரும்பிய, நஞ்சு என - விடம்போல, கொடிய வாள கண நங்கை - கொடியவாகிய வாளபோன்ற கண்ணையுடைய தமயந்தியே!, இ இருந்த மீளி - இருந்தவிடத்திலுள்ள பெற்ற இவவரசன், வெம சமம - வெப்பம பொருந்திய யுத்தத்திலே, காத்தலன்றி - காப்பதற கல்லாமல், அணி என - அலங்காரமாக, விளங்க செய்து - பிரகாசிககும்படிச் செய்து, இஞ்சி சூழ - மதில் சூழ்ந்த, மதுரை மூதூர - மதுராபுரியை யாளுகின்ற, எதுகுல மன்னர - எதுகுல வரசாககு, ஏறு - ஆணசிங்கத்தை யொததவன, எ-று. ஏ - அசை.

(க - து.) இவன மதுராபுரி யரசன் என்றாள் என்பதாம்.

பெரியோர்களாற் சிறந்தெடுத்துச் சொல்லப்பட்ட அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்னும ஏழு நகரங்களில் ஒரு நகரமாதலாலும், யதுவம்சத்தவர் முதலிய அநேக அரசர் புரக்கும்படி இராசதானியா யிருந்ததனாலும, மதுரைக்கு மூதூர் என அடைகொடுக்கப்பட்டது. (௧௫௯)

அமிழ்தினைமுனிந்துசாரலருவிதாழ்மலையமீன்ற
தமிழினுமினியதீஞ்சொற்றையலீண்டிருந்தகோமா
னிமிழ்திரைகொழித்தமுத்தமேழைநின்முறுவலகாட்டுங்
கமழலந்துறைசூழ்தெணணீர்க்கங்கைநாடாளும்வேந்தன்.

(இ-ள்) அமிழ்தினை முனிந்து - அமிர்தத்தைக் கோபித்து, சாரல் - பக்கங்களிலே, அருவி தாழ - அருவியானது தாழகின்ற, மலையம ஈன்ற - பொதியமலையிலிருக்கும் அகத்திய முனிவனால் தரப்பட்ட, தமிழினும இனிய - தமிழைககாட்டிலும இனிமையுள்ள, தீ சொல் தையல - மதுரம் பொருந்திய சொல்லையுடைய தமயந்தியே!, ஈண்டு இருந்த கோமான - இவவிடத்திருந்த அரசனானவன், இமிழ் - பிரகாசிக்கின்ற, திரை கொழித்த - அலைகளானவை ஒதுக்கிய, முத்தம் - முத்துக்கள், ஏழை - தமயந்தியே, நின் முறுவல் காட்டும் - உன்னுடைய பல்வரிசையைக் காண்பிக்கும், கமழ் - பரிமளிக்கின்ற, அலம் - அமைவினையுடைய, துறை சூழ் - துறைகள் சூழ்ந்த, தெள நீர - தெளி

வுபொருந்திய நீரையுடைய, கங்கைநாடு ஆளும் வேந்தன் - கங்கைநாடாளும அரசன், எ-று.

(க - து) இவன் கங்கைநாட்டரசன் என்றாள் என்பதாம.

மலையமெனபது அதிலிருக்கும் அகத்தியமுனிக்காதலால் ஆகு பெயா. பரமசிவன் வடமொழிக்கிலக்கணம பாணினிக்குச சொலலியதுபோல், தமிழ்மொழிக்கிலக்கணம அகத்திய முனிக்குச சொல்லி உலகத்திலே பரவச்செயதபடியால 'மலையமீனறதமிழ்' எனபபட்டது, அது "விடையுகைத்தவன பாணினிக கிலக்கண மேனுள, வடமொழி சுகுரைந தாஙகியன மலயமா முனிக்குத், திடமுறுத்தியம் மொழிக்கெதிராககிய தெனசொன மடமகடகரங கெனபது வழுதிநாடனறே." இதனாலறிக. (கசுO)

வனைமலர்க்குழஙகல் மாலைவணரிருஙகூந்தற்செவ்வா
யினவளைமடநதையிப்பாலெரிமணித்தவிசிற்றோனறு
நனைவிரியலங்கலமாரபனாள்விழவறாதவீதிக
கனைகுரனமுரசந்துஞ்சாககாமபிலிககாவல வேந்தன்.

(இ-ள.) வனை மலா - மலராற்றெடுத்த, குழங்கல் மாலை - அழகிய மாலையை யணிந்த, வணா இரு கூநதல் - வளைந்த பெரிய குழலையும, செவவாய - சிவநதவாயையும, இனவளை மடநதை - கூட்டமாகிய வளையலையுமுடைய தமயநதியே!, இபபால் - இப்புறத்து, எரி மணி தவிசில் தோன்றும - ஒளிவிடுகின்ற ரததாசனத்தில தோனறுகின்ற, நனை விரி அலஙகல மாரபன - அரும்புகள விரிநத மாலையை யணிநத மாரபையுடையவன, நாள - நாடோறும, விழவு அறாத - திருவிழா நீங்காத, வீதி - வீதியிலே, கனை குரல் முரசம - சததிககினற குரலையுடைய பேரிகையானது, துஞ்சா - ஓயவிலலாத, காம்பிலி காவல வேந்தன் - காம்பிலி தேசததைப் யாளுகினற அரசன், எ-று

(க - து.) இவன் காம்பிலி தேசாதிபதி என்றாள என்பதாம்.

எந்நாளும் தெயவஙகளுககுச் சிறப்புமிக்க திருவிழா வெடுபபது தோன்ற 'நாள விழவறாத வீதி' எனறும், எநத வாததியஙகளிலும முரசஞ் சிறந்தமையால் 'கனைகுரன முரசந துஞ்சா' எனறும சொல்லினா. முரசம் வாததியபபொதுவு மாகும். (கசுக)

நுழைநொசிமருங்குறேம்பநுண்ணெழின்மாமைவாய்ந்த
விழைவளர்முலையினாயமற்றிங்கினிதிருந்ததோன்றன்
மழலைவண்டிமிழலதூங்குமழைமதப்புழைக்கைநாலவாய்க்
கழைசுளிகளிநல்யானைககலிங்கநாடாளுமன்னன்.

(இ - ள்.) நுழை நொசி மருஙகுல் தேமப - மிகுந்த நுட்பததையுடைய இடையானது வாட, நுண் - நுட்பம பொருந்திய, எழில் - அழகானது, மாமை வாய்நத - பிரகாசம் பொருநதிய, இழை - ஆபரணததை யணிந்த, வளா முலையினாய - வளரபபெற்ற முலையினையுடைய தமயந்தியே!, இஙகு - இவவிடததில், இனிது இருநத - இனிதாக இருக்கப்பெற்ற, தோன்றல் - அரசனானவன, மழலை

வண்டு - இனிமைபொருந்திய வோசையையுடைய வண்டுகள், உழல - உழலும்படி, தூங்கும் - தங்கிய, மழை மதம் - மழைபோன்ற மதத்தை யும், புழை கை - துவாரமயொருந்திய துதிக்கையையும், நால் வாய - தொங்குகின்ற வாயையுமுடைய, கழை சுளி - கரும்பை முறிக் கின்ற, களி நல் யானை - களிப்புப்பொருந்திய நல்லயானைகளையுடைய, கலிங்கநாடு ஆளும் மன்னன் - கலிங்க நாட்டையாளுகின்ற அர சன். எ-று.

(க - து.) இவன் கலிங்கதேசாதிபதி என்றுள் என்பதாம்.

யானை மதநீரையுண்ண வண்டுழலுதலால், 'வண்டுழலத்தூங்கு மழைமதம்' என்றூ அம்மதநீரை வண்டுண்ணுதல் - "நல்லமதநூ ஞெனகவுளினபா னன்றனனச, செலலுசுருமபே வெங்கரியின்றுழ செவியூடே, மெல்லநடந்தே போமெனமெல்ல விளமபெனறு, சொல லிமறங்கூா வேலனகண்ணுா தூயாகின்றூ" எனபதனுலறிக. (சசஉ)

உளமகனிந்துருகப்பைந்தார்க்காமனுமுவக்குஞ்சாய
லுளயவொளிமுத்தமூரறறேகையிங்கிருந்தோன்றல்
விளங்கிழைநினதுகண்போல்வேரியங்குவளைபூதத
வளங்கெழுமருதவேலிவாரணவாசிமன்னன்.

(இ-ள்.) உளம் கனிந்து உருக - மனமானது இளகியுருகும்படி, பைந்தார் காமனும் - பசியமாலையை யணிந்த மன்மதனும், உவக்கும் - விரும்புகின்ற, சாயல் - சாயலையும், துளங்கு - அசைகின்ற, ஒளி முத் தம் மூரல் - ஒளியையுடைய முத்தையொத்த பறகளையுமுடைய, தோகை - தமயந்தியே!, ஈங்கு இருந்த தோன்றல் - இங்கே இருந்த வேபெற்ற அரசனுனவன், விளங்கு இழை - விளங்குகின்ற வாபர ணத்தையுடையாய, நினது கண்போல - உனனுடைய கண்ணைப போல், வேரி அம் குவளை பூத்த - தேனையுடைய அழகிய குவளைமலா கள பூத்திருக்கின்ற, வளம் கெழு மருதவேலி - வளப்பம்பொருந் திய மருத நிலத்தையுடைய, வாரணவாசிமன்னன் - காசிதேசத்தர சன், எ-று.

(க - து.) இவன் காசிதேசாதிபதி என்றுள் என்பதாம்.

வாரணாசியென்பது வாரணவாசியென மருவிறறு. சாயலால் தோகைபோன்றவ ளெனக்கொளக மாதா கணகளுக்கு உவமிக்கப படும் குவளைமலாகளை இததமயந்தி கணகளுக்கு உவமையமாகக் கூறு தலால் எதிாநிலையணி. (கசங)

குவட்டிளமுலையினுய்நின்குழைமுகத்திங்கணோக்கி
யுவட்டெடுத்துவகைவெள்ளமோங்கவீங்கிருந்தோன்றல்
கவட்டடிக்கயவாய்மேதிகன்றுள்ளிப்பொழிந்ததீம்பா
றெவிட்டவுண்டன்னந்துஞ்சுஞ்செழும்புனற்சிந்துவேந்தே

(இ-ள்.) குவடு இள முலையினுய் - மலைபோன்ற இளமைபொருந் திய ஸ்தனங்களையுடைய தமயந்தியே!, நின் - உன்னுடைய, குழை - குண்டலத்தையணிந்த, முகம் திங்கள் நோக்கி - முகமாகிய சந்திர

ளைப்பார்த்து, உவட்டு எடுத்து - பெருக்கெடுத்து, உவகை வெள்ளம் - மகிழ்ச்சி யென்னும் கடலானது, ஓங்க - மிகுந்தொலிக்க, ஈங்கு இருந்த - இங்கிருந்தலையுற்ற, தோன்றல் - அரசனானவன், கவட்டு அடி - பிளப்பாகிய குளம்பையும், கய வாய் - பெரியவாயையுமுடைய, மேதி - எருமை, கன்று உள்ளி - தன் கன்றை நினைத்து, பொழிந்த - சொரிந்த, தீம்பால - தித்திப்புப்பாலை, தெவிட்ட உண்டு - நிறையவுண்டு, அன்னம துஞ்சும் - அன்னப்பறவை துயிலுகின்ற, செழு புனல - செழுமையுள்ள நீரையுடைய, சிந்து வேந்து - சிந்துதேசத்தை யாளுகின்ற அரசன், எ-று ஏகாரம் - ஈற்றசை.

(க - து.) இவன் சிந்துதேசாதிபதி என்றாள் என்பதாம்.

சந்திரனைப் பார்த்ததால கடல அதிகரித்த தொலித்த லியல்பாதலால், 'குழைமுகத் திங்களைக்கி யுவட்டெடுத்த துவகைவெள்ள மோங்கவீங்கிருந்ததோன்றல்' எனப்பட்டது "மதியெழக்கடன முழங்குதலபோல்" என்றாபிறரும. நீரிலே எருமை தன்கன்றை நினைத்துப் பொழிந்த பாலை அன்னம உண்ணுதல், "பாலுநீரும பாற்படப பிரித்தலன்னத் தியல்பென வறிந்தனா கொளலே" இதனாற் காண்க ()

பகட்டிளமுலையாயீங்குப்படுதிரைப்பரவைவேலை
முகட்டெழும்பரிதியேயப்பவீங்குறைமுழவுத்தோளான்
பொகுட்டுமென்கமலவாவிப்பூம்புனலுழக்கிக்கொண்ட
லகட்டினில்வாளைதாவுமகன்பணைக்குருத்ரேறே.

(இ - ள்) பகடு இள முலையாய - யானை மத்தகம்போன்ற இளமை பொருந்திய முலையையுடைய தமயந்தியே!, ஈங்கு - இவ்விடத்தில், படு திரை - அலைகளையுடைய, பரவை - பரந்த, வேலை முகடு எழு - கடலுச்சியினின்றெழுகின்ற, பரிதி யேயப்ப - சூரியனை யொப்ப, ஈங்கு உறை - இங்கிருக்கின்ற, முழவு தோளான - மத்தளம்போன்ற தோளையுடையவன், பொகுட்டு - கொட்டையையுடைய, மெல் கமலம் வாவி - மெல்லிய தாமரைமலரையுடைய தடாகத்திலுள்ள, பூ புனல் உழக்கி - அழகுபொருந்திய நீரைக்கலக்கி, கொண்டல் அகட்டினில் - மேகங்களுடைய வயிற்றினிடத்தில், வாளை தாவும் - வாளைமீன்கள் தாவுகின்ற, அகல பணை - அகன்ற வயலையுடைய, குருத்ர ஏறு - குருத்தேசத்தாருக்குச் சிங்கவேற்றை யொத்த அரசன, எ-று.

(க - து) இவன் குருத்தேசாதிபதி என்றாள் என்பதாம்

முன்பாட்டிலும இப்பாட்டிலும் குவடு, கவடு, பகடு, முகடு, அகடு என்னும் அடி யெதுகையாய வந்த உயிர்த்தொடர் மொழிக் குற்றிய லுகரங்கள டகரவொற்றிரட்டித்தல், "ஈரொற்றுத் தொடர்மொழியு முயிர்த்தொடர் மொழியும், வேற்றுமையாயி னொற்றிடையின மிகத், தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி" இச் சூத்திரத்தாலறிக. கொண்டலகட்டினில் வாளைதாவுமென்றல் "வெள்ளத்தடங்க ணெடு வாளை வேலிக்கமுகின் மிடற்றொடியத், துள்ளிமுகிலைக் கிழித்துமழைத் துளியோடிறங்கும்" மென்பதாற் காண்க. (கசரு)

வேலெனப்பிறழ்ந்துகூற்றைவெல்குவன்வருகவென்று
வோலைவிட்டுலவுங்கண்ணுயீங்குறைபுலம்கொடோளான்
சூலுளைந்தலறிப்பைங்தேன்றுளிக்குமென்கமலப்போதின்
வாலவளைமுத்தமீனும்வளவயன்மச்சர்கோவே.

(இ - ள்.) வேல் என பிறழ்ந்து - வேற்படைபோ லொளியைச் செய்து, கூற்றை வெல்குவன - யமனை வெற்றி கொள்ளுவேன, வருக என்று - நீ வரக்கடவாயென்று, ஓலை விட்டு - (அந்த யமனுக்கு) ஓலை யெழுதிவிட்டு, உலவும் கண்ணுய - உலாவுகின்ற கண்களையுடைய தமயந்தியே!, ஈங்கு உறை - இங்கேயிருக்கின்ற, உலம் கொள தோளான - திரளகல்லின வலிமைக்கொண்ட புயத்தையுடையவன், சூல் உளைந்து - கருப்பவாதைப்பட்டு, அலறி - ஒலித்து, பைங்தேன் துளிக்கும - பசிய தேனைத் தெறிக்கின்ற, மெல் கமலம் போதின் - மெல்லிய தாமரைமலரில், வால் வளை - வெண்மைபொருந்திய சங்கங்கள, முத்தம ஈனும் - முத்துக்களைப பெறுகின்ற, வளம வயல - வளம்பொருந்திய கழனிகள்சூழ்ந்த, மச்சர் ஏறு - மச்சதேயத்தாருக்கு அரசன், எ-று. ஏ - அசை

(க - து) இவன் மச்சதேசாதிபதி என்றாள் என்பதாம்.

நீதிப்படி போர்செய்து வெல்லக்கருது மரசர்கள் உன்னைப் போரில் வெல்லுமபடி எதிர்த்து வந்தேன, நீயும வருகவென்று ஓலையேனும் தூதேனும் விடுத்துத் தெரியப்படுத்தல் முறையாதலின், 'கூற்றை வெல்குவன் வருகவென்று வோலைவிட்டுலவுங் கண்ணுய' என்றார். இதனால் கண்களானவை காமுகர்க்குச் செய்யுங் கொடுமை கூறியதாயிற்று. (கசச)

குடங்கையினெடியவாட்கட் கொம்பனுயீங்குப்பைம்பொ
மடங்கலாசனத்தின்மேயமணியெழுவனையதோளான் [னை
முடங்குவெள்ளேட்டுக்கைதைமுருகுயிர்த்திரங்குந் தெ
தடங்கடற்புலவுபோக்குந்தண்டுறைமகதநாடன்.[ண்ணீர்த்

(இ-ள்.) குடங்கையின - உள்ளங்கைபோல், நெடிய வாள் கண - நீண்ட வாளபோலுங் கண்களையுடைய, கொமபு அன்னய் - தமயந்தியே!, ஈங்கு - இங்கே, பைம பொன மடங்கல் ஆசனத்தின மேய - பசும பொன்னாற்செய்த சிங்காதனத்திற பொருந்திய, மணி எழு அனைய தோளான் - அழகிய எழுத்தூணையொத்த புயங்களையுடையவன், முடங்கு - வளைவினையுடைய, வெள தோடு - வெண்மைபொருந்திய விதழையுடைய, கைதை - தாழைகளானவை, முருகு உயிர்த்து - வாசனையை வீசி, இரங்கும - சத்திக்கின்ற, தெள நீர - தெளிந்த நீரையுடைய, தடம் - விசாலம்பொருந்திய, கடல் புலவு போக்கும் - கடலினது புலானாற்றத்தை நீக்குகின்ற, தண் துறை - குளிர்ச்சிபொருந்திய துறையையுடைய, மகத நாடன - மகததேசத்து அரசன். எ-று.

(க - து.) இவன மகதநாட்டரசன் என்றாள் என்பதாம்.

வீரத்தன்மையும் புயவலிமையுந் தோன்ற ஆசனமென் றொழியாது 'மடங்கலாசனம்' என்றும், தோளானென் றொழியாது 'மணியெழுவனையதோளான' என்றும் சொல்லினா. முருகுயிாததுக் கடற்புலவு போசகு மெனறமையால, செயதற கருபபொருளாகிய தாழை அஙகே அதிகரிததிருககிற தெனபது கருத்து. (கசஎ)

கழையெனத்திரண்டமென்றோட்காமருகுவளையுண்கட்
பொழிகதிர்முத்தமூரற்பூங்கொடியீங்குவைகு
மழிகவுடகடாததசீறறத்தண்ணலங்களிறுபோலவான்
மழையகடுரிஞ்சுமாடமலிகுருநாடர்கோவே.

(இ - ள்) கழை என திரணட மெல தோள் - மூங்கில்போலத் திரணடிருக்கிற மெல்லிய தோள்களையும, காமா குவளை உண் கண - அழகுபொருநதிய நீலோறபலத தழகையுணட கண்களையும், பொழி கதிா முததம் மூரல - கிரணஙகளைப பொழிகினற முததஙகளையொத்த பறகளையுமுடைய, பூ கொடி - தமயநதியே!, ஈஙகு வைகும - இங்கே தஙகிய, அழி கவுள கடாதத - மதமொழுகுகினற கனனத்தையும, சீறறதது - கோபததையுமுடைய, அணணல களிறுபோல வான - பெரிய யானையை யொதத அரசனுனவன, மழை அகடு உரிஞ்சு - மேகததினை வயிறறைத தேயககினற, மாடம் மலி - உபபரிகைகள நெருஙகிய, குருநாடா கோ - குருநாடாக கதிபதி, எ-று.

(க - து ) இவன குருநாட்டரசன என்றாள எனபதாம்.

கழையெனபது கரும்பெனினும் ஒக்கும் குருவெனனும் அரசனாற் புரககபபடுதலால குருநாடாயிறறு. குருக்ஷேததிரமென்றுங கூறுவா. குருக்ஷேததிரம புணணிய பூமியாம. அது பாரதததிற காணக அனறியும, "நாததமாசிவ காசிதிகழுகுருக, கேததிரம்பிர யாகைகினாரலா, பூததபுடகர மாதிபுனிதாக, ளாாததகஙகை யலைக டலாதியும." இதனாலு மறிக. (கசஅ)

வடுநெடுங்கண்ணியீங்குவைகியமடங்கலன்னான்
குடநிகர்செருத்தற்செஙகட்குவிமுலையெருமைதெண்ணீர்
தடவயலுழககவாளைதாவிமுப்புடைக்காயதெங்கின்
படுபழமுதிர்கருஞ்சூழற்பல்லவதேயவேந்தே.

(இ-ள்) வடு நெடு கண்ணி - மாவடுபோன்ற நெடிய கண்களையுடைய தமயந்தியே!, ஈங்கு வைகிய - இஙகே தஙகபபெறற, மடங்கல அன்னான் - சிங்கவேறறை யொததவன, குடம் நிகா செருததல - குடததையொதத மடியையும், செம கண - சிவநத கண்களையும், குவி முலை - குவிநத முலையையு முடைய, எருமை - எருமையானது, தெள நீா - தெளிநத நீரையுடைய, தடம வயல உழகக - விசாலம் பொருநதிய கழனிகளைக் கலக்க, வாளை - (அதனாலெழும்பிய) வாளைகள், தாவி - பாய்ந்து, மூன்று புடை காய் - மூனறு பக்கமுளள காயையுடைய, தெஙகின் - தென்னமரததில், படு - உண்டாகிய, பழம் -

பழங்களை, உதிர்க்கும் - உதிர்க்கின்ற, சூழல் - இடத்தையுடைய, பல்லவ தேய வேந்து - பல்லவதேசத்தை யாளுகின்ற அரசன், எ - று. ஏகாரம் - ஈற்றசை.

(க - து.) இவன் பல்லவதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

எருமை தென்னீரத தடவயலுழக்க அதனலெழுந்த வாளை தாவித் தெங்கின் பழமுதிர்க்கும் பல்லவதேசமெனக் கூட்டுக. இதனால் அந்நாடு நீர்வள மிகுச்செழித்திருக்கின்ற தென்பது கருத்து ()

பிள்ளைமானோக்கியீங்குவைகியபிறங்கற்றோளா
னள்ளிலைக்கமலபபோதிலரசிளவன்னங்காண
வள்ளுறைபிலிற்றுந்தண்கார்வரவெதிர்மயிலகளாடக்
கிள்ளைபாட்டயருஞ்சோலைகேகயநாட்டுவேந்தன்.

(இ - ள்.) பிள்ளை மான் நோக்கி - இளமையான மானினுடைய பார்வையையொத்த பார்வையையுடைய தமயந்தியே!, ஈங்கு வைகிய - இங்கே தங்குகின்ற, பிறங்கல் தோளான் - மலையையொத்த தோளையுடையவன், அள் இலை கமலப்போதில் - நெருங்கிய இலையையுடைய தாமரைமலரிலிருக்கின்ற, அரசு இள அன்னம் காண - இளமை பொருந்திய அரச அன்னம் பார்க்கும்படி, வள் உறை பிலிற்றும் - வளம்பொருந்திய துளியைத் துளிக்கின்ற, தண் கார் வரவு எதிர் - குளிர்ச்சி பொருந்திய மேகங்களினுடைய வரவினையெதிர்ந்த, மயில்கள் ஆட - மயில் கூத்தாட, கிள்ளை - கிளிப்பிள்ளைகள், பாட்டு அயரும் - பாட்டைப்பாடும், சோலை - சோலைகள் சூழ்ந்த, கேகயநாட்டு வேந்தன் - கேகயநாட்டரசன், எ-று

(க - து) இவன் கேகயநாட்டரசன் என்றாள் என்பதாம்.

அரசவன்னமாவது மூக்குங் கால்களுஞ் சிவந்து உடம்பு வெளுத்திருப்பது. கார்கண்டு மயிலாடுதல் "என்னை யூர்ந்தருள் சுடாவடியில்லயவேற் பெருமான், தன்னை நன்மருகனெனப்படைத்தவனற்றோதி, யன்ன தாமெனுங் கேண்மையா லளிமுகிற் குலத்தைக், கன்னி மாமயில் காண்டொறுங் களிசிறந்தகவும்" இதனால் காண்க. கிள்ளை பாட்டயருமென்றலால், "கிள்ளைபாடுவ கேட்பன பூவைகள்" என்றார் பிறரும். (கருo)

கொலலுலைவேற்கணல்லாயீங்குறைகுவவுத்தோளான்
முல்லையம்புறவிற்சேதாமுலைவழியொழுகுதீம்பா
லலலியங்கமலவள்ளத்தரசிளவனனமாந்து
மலலலம்பழனஞ்சூழ்ந்தமத்திரதேயவேந்தன்.

(இ - ள்.) கொல் உலை - கொல்லனுலையிற் காய்ந்த, வேல் கண் - வேலைபோன்ற கண்களையுடைய, நல்லாய் - தமயந்தியே!, ஈங்கு உறை - இங்கே யிருக்கின்ற, குவவு தோளான் - திரண்ட தோள்களை யுடையவன், முல்லை புறவில் - முல்லைகளையுடைய அந்நிலத்தில், சேதா -

செவ்விய பசுக்களினுடைய, முலை வழி - முலையின் வழியே, ஒழுகு தீ பால் - ஒழுகிய தித்திப்புப்பாலை, அல்லி கமலம் வள்ளத்து - அக விதழையுடைய தாமரை மலராகிய கிண்ணத்தில, அரசு இள அன்னம் - இளமைபொருந்திய அரசவன்னங்கள், மாந்தும் - உண்ணுகின்ற, மல்லல் - வளம்பொருந்திய, பழனம் சூழ்ந்த - வயல்கள்சூழப்பட்ட, மத்திரதேய வேந்தன் - மத்திரதேசத்தை யாளுகின்ற அரசன், எ-று. அம் - அசை.

(க - து.) இவன் மத்திரதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

முல்லையம் புறவிலிருக்குஞ் சேதாவின் பாலைக் கமலவன்னந் தன்னமாந்தும் பழனஞ்சூழ்ந்த தேயமென்றமையால், முல்லை நிலத்திற்கும் மருத நிலத்திற்கும் திணைமயக்கங் கூறியவாறாயிற்று. (௪௫௪)

தாளதாமரையின் மேயதாக்கணங்கனையாயீங்குக்
கோளரியென்னவைகுங்குருதிகொப்புளிக்கும்வேலான்
பாளைவாய்க்கமுகிற்றாவிப்பலவின்முட்புறக்காய்சிந்த
வாளையம்பகடுதாவுமவங்கநாடாளுமவேந்தே.

(இ - ள்.) தாள் தாமரையின் மேய - நாளத்தையுடைய தாமரைமலரிலே இருக்கின்ற, தாக்கணங்கு அனையாய் - இலக்குமியை யொத்த தமயந்தியே!, ஈங்கு - இங்கே, கோளரி என்ன - சிங்கவேற்றைப்போல், வைகும் - தங்கிய, குருதி கொப்புளிக்கும் - உதிரத்தைக் கொழிக்கின்ற, வேலான் - வேற்படையை யுடையவன், பாளை வாய - பாளைகள் வாய்ந்த, கமுகில் தாவி - கமுகமரத்தின்மேற்றாவி, பலவின் - பலாமரத்திற் காய்த்த, முள் புறம் காய் - முள்ளைப்புறத்திலே யுடைய காய்கள், சிந்த - சிதற, வாளை பகடு தாவும் - ஆண்வாளைகள் தாவுகின்ற, வங்கநாடு ஆளும் வேந்து - வங்கதேசத்தை யாளுகின்ற அரசன், எ-று. ஏகாரம் - ஈற்றசை, அம் - அசை.

(க - து.) இவன் வங்கதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

அரியென்பதற்குத் திருமாலென்ப பொருள்கொள்ளினு மமையும். அரசமங்கையாக்கு இலக்குமியைச் சொல்லுதலும், அரசனுக்குத் திருமாலைச் சொல்லுதலும், அழகிற்குமாத்திரமன்றிப் பொருள், போசம், காப்பு, பெருமை முதலியவற்றிற்குங் கொள்க. கமுகினும் பலாப்பெரி தாதலால், 'கமுகிற்றாவிப் பலவின் முட்புறக்காய்சிந்த வாளையம்பகடு தாவும்' என்றார். கோள், சிங்கத்திற்குக் கொலையும், திருமாலுக்கு வலிமையுங் கொள்க. (௪௫௫)

காம்புறழ் பசிய மென்றோட் கதிர்முலைத் துவர்வாய
த தீஞ்சொற், பாம்படு மலகு லீங்கு வைகிய பரிதி வேலா
ன், றேம்பொதி கமல மேய வாலவளை திங்க ளென்னு,
வாம்பல்வாய் மலரும் வாவி யங்கநா டாளும் வேந்தே.

(இ - ள்.) காம்பு உறழ் - மூங்கிலையொத்த, பசிய மெல் தோள் - பசியவாகிய மெல்லிய தோள்களையும், கதிர் முலை - பிரகாசய

டொருந்திய முலையையும், துவா வாய்-சிவந்த வாயையும், தீம் சொல்-மதுரம்பொருந்திய சொல்லையும், பாம்பு அடும் அல்குல் - பாம்பினை வெல்கின்ற அல்குலையுமுடைய தமயந்தியே!, ஈங்கு வைகிய - இங்கே தங்கிய, பரிதி வேலான் - சூரியன் போன்ற வேலையுடையவன், தேன் பொதி - தேனானது நிறைந்த, கமலம் மேய - தாமரைமலரி லிருக்கின்ற, வால் வளை - வெண் சங்குகளை, திங்கள் என்று - சந்திரனென்று, ஆம்பல் வாய மலரும் - அல்லிமுகைகள் விரியும், வாவி - தடாகத்தை யுடைய, அங்கநாடு ஆளும - அங்கதேசத்தை யாளுகின்ற, வேந்து - அரசன், எ-று- ஏகாரம - ஈற்றசை.

(க - து.) இவன் அங்கதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

வளை திங்கள்போல் ஒளிவீசுதலால் 'ஆம்பல்வாய் மலரும்' என்றார். "ஏவிழி யாரமுர விளங்கிலாக் கண்டுகருங், காவி முகையவிழுங் காஞ்சியே" என்றார் பிறரும். உமாதேவி இமயமலைக்கு மகளாய வந்திருந்த போது பரமசிவன சனகன முதலிய நால்வர்க்கும் தக்ஷிணாமூர்த்தியாயிருந்து அனுக்கிரகம பண்ணிக்கொண்டிருந்தார அப்போது அக்குரியை மணக்கும்படி செய்யவேண்டித் தமமேல் மலரமபுகளைத் தொடுத்த மன்மதனை அக்கடவுள் நெற்றிக்கண்ணாலெரித்த திறந்தெரிந்தபோது அவனுடம்பு விழுந்த இடமாதலால், அதற்கு அங்கதேசமெனனும் பெயராயிற்று. 'வாலவளை திங்களெனறு வாமபல்வாய் மலரும்' என, ஆம்பன்மலருக்குச் சங்கினிடத்தில் சந்திரனெனனும் மயக்கஞ் சொல்லப்பட்டமையால மயக்கவணி. (கஙஈ)

சிதரரிநெடுங்கணல்லாயீங்குறைதிணிபொற்றோளான்
கதிர்படுகழனியூடுகனைத்தினவண்டுந்தேனும்
புதிதுணக்கமலப்போதுபுரிமுறுக்கவிழ்ந்துமாறு
மதுமடைதிறந்துபாயும்வளங்கொள்பாஞ்சாலவேந்தே.

(இ - ள்.) சிதர அரி நெடு கண் நல்லாய் - பரவுகின்ற செவ்வரி பரந்த நெடிய கண்களையுடைய தமயந்தியே!, ஈங்கு உறை - இங்கே யிருக்கின்ற, திணி பொன தோளான் - வலிமைபொருந்திய அழகிய தோளையுடையவன், கதிர் படு கழனியூடு - கதிர்களா னிறையப்பெற்ற வயல்களிலே, கனைத்து - ஆரவாரித்து, இனம வண்டும் - கூட்டமாகிய வண்டுகளும், தேனும - தேனவண்டுகளும், புதிது உண - புதிதாகவுண்ண, கமலப்போது - தாமரைமலர்கள், புரி - கட்டுப்பட்ட, முறுக்கு அவிழ்ந்து - முறுக்குடைந்து, மாறு - நீங்காத, மது - தேனானது, மடை திறந்து பாயும் - மடையைத்திறந்து பாய்கின்ற, வளம் கொள் - வளத்தைக்கொண்ட, பாஞ்சால வேந்து - பாஞ்சால தேசத்தரசன், எ - று ஏகாரம் - ஈற்றசை.

(க - து.) இவன் பாஞ்சாலதேயத்தரசன் என்றாள் என்பதாம்.

கழனியினிடத்திலே யிருக்குந் தாமரைமலர்கள் வண்டினங்களுக்கு நாடோறும் புதிதாக வுண்ணும்படி தேனைத்தரு மென்னலால், அவ்வாறு அந்நாட்டிலுள்ளவ ரனைவரும் விருந்தினர்க்கு உபசரிக்கின்றனரொன்பது கருத்து. (கஙச)

**இழைபுரைமருங்குலின்னேயிறுமிறுமென்னவீங்கி**
**யழகுவீற்றிருந்தபொம்மலணிமுலையாங்குவைகுங்**
**கொழுதிவண்டிமிருந்தாரான்கோணிலைதிரிந்தஞான்று**
**மழைவளஞ்சுரக்குஞ்செல்வமலிந்தகாந்தாரவேந்தே.**

(இ - ள்) இழை புரை மருங்குல் - நூலிழையையொத்த இடையானது, இன்னே - இப்பொழுதே, இறும் இறும் என்ன - ஒடியு மொடியுமென்ன, வீங்கி - பருத்து, அழகு வீற்றிருந்த - அழகானது அரசிருந்த, பொம்மல் - பொலிவுபெற்ற, அணி முலை - ஆபரணங்களை யணிந்த ஸ்தனங்களையுடைய தமயந்தியே!, ஆங்கு வைகும் - அங்கே தங்கிய, கொழுதி - மூக்கினுலுழுது, வண்டு - வண்டுகள், இமிரும் தாரான் - ஒலிக்கின்ற மாலையை யுடையவன், கோள் - நவக்கிரகங் கள், நிலை திரிந்த ஞான்றும் - நிலைமாறியகாலத்தும், மழை வளம் சுரக் கும் - மழைவளங்களுண்டாகின்ற, செல்வம் மலிந்த - செல்வமிகுந்த, காந்தார வேந்து - காந்தாரதேயத்தரசன், எ - று. ஏ - சை.

(க - து) இவன் காந்தாரதேயத்தரசன் என்றாள் என்பதாம்

கோணிலை திரிதலாவது—கோள்கள் நடக்கவேண்டிய முறை தப்பி மாறிநடத்தல், அப்படிநடந்தால் அந்தத்தேசத்தில் மழை பெய்யமாட்டா தெனக். கோணிலைதிரிதல், "காய்சினவெய்யோனை சேயோனை முன்செலக்கதிர்கால்வெளிந்து, தேசிகனபின்புசென்று நடக்குமிச்செயலாளமுந்நீர்த, தூசினவுலகிறப்னனீ ராண்டுவான சுருங்குமென்று, பேசினநூல்கண்மாரி பெய்விப்போற சென்றுகேண மின." இதனாலறிக. (கருரு)

**அள்ளிலைவடிவேற்கணணாயிங்குறையலங்கற்றோளான்**
**முள்ளரைமுளரிமேய்ந்துமுழுநெறிகுவளைமென்று**
**வளளைவாய்குதட்டிமேதிவழைநறுநீழற்றுஞ்சும்**
**வெள்ளநீர்பபழனஞ்சூழ்ந்தமிதிலைநாடாளும்வேந்தே.**

(இ - ள்.) அள இலை வடி வேல் கண்ணாய் - மாமிசத்தை யள ளிக் கொள்ளுகின்ற இலையையுடைய கூரியவேல்போன்ற கண்களை யுடைய தமயந்தியே!, ஈங்கு உறை - இங்கேயிருக்கின்ற, அலங்கல் தோளான் - மாலையணிந்த தோள்களை யுடையவன், முள் அரை - மு ள்ளுகள நிறைந்த தாளையுடைய, முளரி மேய்ந்து - தாமரைப்பூவை மேய்ந்து, முழு நெறி - முழுநெறிப்பையுடைய, குவளை மென்று - குவ ளைமலரைமென்று, வளளை வாய குதட்டி - வள்ளையிலையை மென்று, மேதி - எருமைகளானவை, வழை நறு நீழல துஞ்சும் - புன்னைமரத் தினுடைய நறிய நிழலிலே உறங்குகின்ற, வெள்ள நீர - அதிக நீரை யுடைய, பழனம் சூழ்ந்த - கழனிகளாற சூழப்பட்ட, மிதிலை நாடு ஆளும் - மிதிலாதேசத்தை யாளுகின்ற, வேந்து - அரசன், எ - று. ஏகாரம் - ஈற்றசை.

(க - து.) இவன் மிதிலைநாட்டு மன்னன் என்றாள் என்பதாம்.

மேய்ந்து - மென்று - வாய்குதட்டி யென்னும் வினையெச்சங்களுக்கு கள் துஞ்சுமென்னும் பெயரெச்ச வினையையும், அது பழனமென்னும் பெயரையுங்கொண்டு முடிந்தன. (கருசு)

வெதிர்புரைபசியமென்றோள்வேல்கிடந்தனையகண்ணா
யதிர்கழலரசாபோற்றவீங்குறையரியேறன்னான்
கதிர்வெயிற்கற்றைகான்றுகாசுகண்படுக்குமாட
மதியகடுரிஞ்சவோங்குமாளவதேயவேந்தே.

(இ - ள்.) வெதிர் புரை - மூங்கிலையொத்த, பசிய - பசியவாகிய, மெல் தோள் - மெல்லிய புயங்களையுடைய, வேல் கிடந்து அனைய கண்ணாய் - வேற்படை யிருந்ததை யொத்த கண்களையுடைய தமயந்தியே!, அதிர் கழல் அரசர் போற்ற - அதிர்ச்சியையுடைய வீரக்கழலை யணிந்த அரசர்கள் வணங்க, ஈங்கு உறை - இங்கே யிருக்கின்ற, அரி ஏறு அன்னான் - சிங்கவேற்றை யொத்தவன், கதிர் வெயில் கற்றை கான்று - கதிராகிய வெயிற்றொகுதியை வீசி, காசு கண்படுக்கும் மாடம் - ரத்நங்கள் பதித்திருக்கின்ற உப்பரிகைகள், மதி - சந்திரனுடைய, அகடு உரிஞ்ச - வயிற்றைத்தேய்க்க, ஓங்கும் - உயர்ந்திருக்கின்ற, மாளவதேய வேந்து - மாளவதேசத்தரசன், எ - று. ஏ அசை

(க - து) இவன் மாளவதேயத்துமன்னன் என்றாள் என்பதாம்.

அநேகமன்னர் இவன்கீழ் அரசு செய்துகொண்டிருந்தமை தோன்ற, 'அதிர்கழலரசர் போற்ற' என்றும், அவர்களினும்மிகுந்த வல்லமையுடையவனென்பது தோன்ற, 'அரியேறன்னான்' என்றுஞ் சொன்னார். (கருஎ)

வடுவகிர்நெடுங்கணல்லாய்மடங்கலாசனத்தின்வைகுந்
தொடுகடலுயிர்த்தமுத்தந்துயல்வருதடந்தோள்வீரன
கடிமுறுக்கவிழ்ந்தசெவ்விககமலமென்பொகுட்டிலேறிக
குடவளைமுத்தமீனுங்கோசலத்தரசரேறே.

(இ - ள்.) வடு வகிர் நெடு கண் நல்லாய் - மாவடுவின் பிளப்பை யொத்த நெடிய கண்களையுடைய தமயந்தியே!, மடங்கல் ஆசனத்தின் வைகும் - சிங்காதனத்திலே தங்கிய, தொடு கடல் உயிர்த்த - சகரராற் றோண்டப்பட்ட கடலானது பெற்ற, முத்தம் - முத்து வடங்களானவை, துயல்வரு - அசைகின்ற, தடம் தோள் - பருத்த புயத்தையுடைய, வீரன் - அரசனானவன், கடி - வாசனை பொருந்திய, முறுக்கு அவிழ்ந்த - முறுக்குடைந்த, செவ்வி - அழகுபொருந்திய, கமலம் மெல் பொகுட்டில் ஏறி - தாமரை மலரினுடைய மெல்லிய கொட்டைகளின்மேல் ஏறிக்கொண்டு, குடம் வளை - குடம்போன்ற சங்கானது, முத்தம் ஈனும் - முத்துக்களைப் பெறுகின்ற, கோசலத்து - கோசலதேசத்தை யாளுகின்ற, அரசர் ஏறு - அரசரிற் சிங்கவேற்றை யொத்த வரசன், எ-று. ஏகாரம் - ஈற்றசை.

(க - து.) இவன் கோசலைநாட்டரசன் என்றாள் என்பதாம்.

அணிகள் அநேகமிருக்க இவ்வரசன் முத்துவடமணிந்ததைக் குறிக்கில், தனக்கு இயற்கையிற் செல்வமிகுந்திருப்பினும், உடுத்திரள் படிகம் போன்றும், உருட்சியும் கனமும் உள்ளனவும், பார்வைக்கின்பந் தருவனவும், குற்றமில்லனவுமாகிய முத்துக்களையணிந்தால் வறுமையுள்ளனவும்போயச் செல்வமுண்டாகுமெனனும் விதி பற்றிப்போலும். தன்னுட்டில வச்சிரம் உற்பத்தியாயினும் அதில் இவ்வளவு விருப்பின்மை காண்க. (கருஅ)

மாழைமென்னோக்கியீங்குவைகியமானவேலான்
றாழைமுப்புடைக்காயவீழ்ந்துதாற்றிளங்கமுகுசெற்று
வீழ்சுளைவருக்கைபோழ்ந்துவெம்புலியடியபைங்காயக்
கோழரையரம்பைசாய்க்குங்குடகநாடாளும்வேந்தே.

(இ-ள்.) மாழை - மாம்பிஞ்சுபோன்ற, மென் நோக்கி - மெல்லிய பார்வையையுடைய தமயந்தியே!, ஈங்கு வைகிய - இங்கே தங்கிய, மான வேலான் - பெரிய வேற்படையை யுடையவன், தாழை - தெங்கினுடைய, முப்புடைக்காய - மூன்று பக்கங்களையுடைய காயானது, வீழ்ந்து - விழுந்து, தாறு - குலைகளையுடைய, இள கமுகு செற்று - இளமைபொருந்திய கமுகமரத்தை ஒடித்து, வீழ் சுளை வருக்கை போழ்ந்து - விரும்பப்பட்ட சுளையையுடைய பலாவைப்பிளந்து, வெம் புலி அடிய - வெப்பம்பொருந்திய புலியின் அடியையொத்த, பைங்காய - பசியகாயையுடைய, கோழ் அரை - கொழுமையுள்ள அடியையுடைய, அரம்பை சாய்க்கும் - வாழையை சாயச்செய்யும், குடகநாடு ஆளும் - குடகதேசத்தை ஆளுகின்ற, வேந்து - அரசன், எ-று.

(க - து.) இவன் குடகநாட்டரசன் என்றாள் என்பதாம்.

மரங்களைக் கூறினும் அவ்வவற்றின் கனிகளையெனக் சொள்ளுதல் சிறப்பெனக. தென்னம்பழம் வீழ்தலால் இவ்வாறாகுமோவெனின் ஆகும். அது "காய மாணடைதெங்கின் பழம்வீழக் கமுகினெற்றிப், பூமாண்டதீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து, தேமாங்கனி சிதறி வாழைப்பழங்கள் சிந்து, மேமாங்கதமென்றிசையாற் றிசை போயதுண்டே." இதனாலறிக. (கருகூ)

ஏந்திளமுலையாயிப்பாலினிதுறைகுமரனன்னான்
றேந்துணரூழ்த்தபோதுந்தெரிவையரிழைத்தசிற்றிற்
காந்தெரிமணியும்பொன்னுமகாழகிற்றுணியும்வாரிப்
பூந்திரைசுருட்டுந்தெண்ணீர்ப்பொன்னிநாடாளும்வேந்தே.

(இ - ள்) ஏந்து - தாங்குகின்ற, இள முலையாய் - இளமைபொருந்திய முலைகளையுடைய தமயந்தியே!, இப்பால் - இப்புறத்தில், இனிது உறை - இனிமையுடனிருக்கின்ற, குமரன் அன்னான் - குமாரக்கடவுளை யொத்தவன், தேம் துணர் ஊழ்த்த போதும் - வாசனை பொருந்திய மகரந்தங்களை உதிர்த்த மலரையும், தெரிவையர் இழைத்த

சிற்றில் - சிறு பெண்கள் செய்த சிறு வீட்டினது, காந்து எரி மணியும் - ஒளிமிகுந்த மணிகளையும், பொன்னும் - பொன்னையும், காழ்-வயிரம்பொருந்திய, அகில் துணியும் - அகிற்றுண்டுகளையும், வாரி - வாரிக்கொண்டு, பூ திரை சுருட்டும் - அழகுபொருந்திய அலைகளை மடக்குகின்ற, தெள் நீர் - தெளிவுபொருந்திய நீரையுடைய, பொன்னி நாடு ஆளும் வேந்து - காவிரிசூழ்ந்த சோணாட்டை ஆளும் அரசன், எ-று. ஏ - அசை.

(க - து.) இவன் சோழநாட்டரசன் என்றாள் என்பதாம்.

வானவறப்பினும் காலந்தப்பாதுவரும் காவேரிசூழ்ந்த அந் நாட்டுக்கு ஒருகுறைவில்லையென்பது தோன்ற 'போதும் மணியும் பொன்னும் அகிற்றுணியும்வாரிப் பூந்திரைசுருட்டுந் தெண்ணீர்ப்பொன் னிநாடு' என்றார். அதனால் அந்நாட்டையாளும் அரசன் பெருமை விளங்குகின்றது. (கசு0)

மோட்டிள முலையாய் பைம்பொன் மொய்ம்மணித் தவிசி னுப்பட், சேற்றிளம் பரிதி போல வீங்குறை திணி பொற் றோளான், பாட்டளி பேட் டினேடும் பருமுகை யவிழ்த்துத் தேறற், கூட்டுணுங் கமல வாவி கொற்கை யம் பதிக்கு வேந்தே.

(இ - ள்) மோடு இள முலையாய் - உயர்ச்சிபெற்ற இளமைபொருந்திய ஸ்தனங்களையுடைய தமயந்தியே!, பைம்பொன் - பசியபொன்னாற்செய்த, மொய் மணி தவிசின் நாப்பண் - மணிகள் நெருங்கிய ஆசனத்தின் மத்தியப்பிரதேசத்திலே, சேடு இள பரிதிபோல - மிகுந்த இளமை பொருந்திய சூரியனைப்போல், ஈங்கு உறை - இங்கேயிருக்கின்ற, திணி பொன் தோளான் - வலிமைபெற்ற அழகுபொருந்திய தோளையுடையவன், பாட்டு அளி - பாட்டையுடைய வண்டுகள், பேட்டினோடும் - பெட்டைகளுடன், பரு முகை அவிழ்த்து - பருத்த அரும்புகளை விரித்து, தேறல் கூட்டு உணும் - தேனைக் கொள்ளைகொள்ளும், கமலம் வாவி - தாமரைத்தடாகத்தையுடைய, கொற்கை அம் பதிக்கு வேந்து - கொற்கையென்னும் அழகிய நகரத்துக்கு அரசனாகிய பாண்டியன், எ-று. ஏகாரம் - அசைநிலை.

(க - து.) இவன் கொற்கைநாட்டரசன் என்றாள் என்பதாம்.

'பாட்டளிபேட்டினோடுந் தேறல் கூட்டுணும்' எனலால், உலகத்தில் தனியே யுண்பதினும் தமக்கினிய துணைவியுட னிருந்துண்ணல் யாவர்க்கு மின்பமென்பதாயிற்று. (கசுக)

என்னமற்றினையவாறேயெரிமணிமாடஞ்சேர்ந்த
மன்னவர்குலமும்பேரும்வரன்முறைவழாதுகூறி
மின்னகுபரிதிவைவேனளனுருக்கொண்டுமேய
வன்னவர்தமையுமற்றைநளனையுமறையலுற்றாள்.

(இ-ள்.) என்ன - இப்படியென்று, இனைய ஆறு - இத்தன்மைப படி, எரி மணி மாடம் சேர்ந்த - ஒளிவீசுகின்ற மணிகள் பதித்த உப ரிகைகள் சேர்ந்த, மன்னவர் குலமும - அரசர்களுடைய மரபும், பே ரும் - நாமமும், வரன்முறை வழாது - குலமுறைமையில் வழுவாமல, கூறி - சொல்லி, மின் நகு - ஒளியையுடைய, பரிதி - சூரியனை யொத்த, வை வேல் - கூரிய வேலையுடைய, நளன் உரு கொண்டு மேய - நள னுருவங் கொண்டிருக்கின்ற, அந்நால்வரைதமையும - இந்திரன்முதலிய அந்நால்வரையும், நளனையும - நளமகா ராஜனையும், அறையலுற்றாள் - சொல்லத் தொடங்கினாள், எ-று. மற்று - அசை.

(க - து.) தேவர்களையும் நளனையும் சொல்லத்தொடங்கினாள் என்பதாம்.

வடநூலிற் சொல்லியபடி வெவ்வேறு சொல்லில், இந்நூல் விரியு மென்பதுபற்றி இத்தன்மையையுடைய நாட்டரசனென்று சொல்லிய படி. குலமும பேரும் சொன்னாளென்பதற்கு இனையவாறு 'மன்ன வர் குலமும்பேரும் வரன்முறை வழாதுகூறி' என மாடெறிந்தொ ழுக லென்னும் யுத்தியாற சுருக்கிக் கூறினார். இனி நாலுபாட்டால் இந் திரன் முதலிய நால்வர்க்கும நளனுக்கும் சிம்லைடையாகத் தனித்தனி சொல்லுதல் காண்க (௧௬௨)

கலைவளர்திங்களென்னக்கடிகமழ்கமலம்வாட்டும்
திலகவாண்முகத்தாயீங்குவைகியசினவேற்காளை
வலனுடவயிரவாளான்கற்பகமலிந்ததோளான்
பலவகைவரைமுன்செற்றபகட்டெழின்மார்பினனே.

(இ - ள்.) கலை வளர் திங்கள் என்ன - கலைகள் வளரப்பெற்ற சந் திரன்போல், கடி கமழ் கமலம் வாட்டும் - வாசனைகமழ்கின்ற தாமரை மலரை வாடச்செய்கின்ற, திலகம வாள் முகத்தாய் - திலகமிட்ட ஒளி பொருந்திய முகத்தையுடைய தமயந்தியே!, ஈங்கு வைகிய - இங்கே தங்கிய, சினம் வேல் காளை - கோபம் பொருந்திய வேற்படையை யுடைய அரசன், வலன் உடை வயிரம் வாளான் - வலனைக்கொன்ற வச்சிரப்படையை யுடையவன், [ வெற்றிபொருந்திய கூரியவாளை யுடையவன்], கற்பகம் மலிந்த தோளான் - கற்பக மலர்மாலை நெருங் கப்பெற்ற தோளையுடையவன், [கற்பகமலிந்த தோளான் - மலையைப் பிளக்கும் வலிமைமிகுந்த தோளையுடையவன்], பல பகை வரை முன் செற்ற - பலவாகிய பகைகொண்ட மலைகளை முன் சிறகறுத்துச் சயங் கொண்ட, [பல பகைவரை முன் செற்ற - பலசத்துருக்களை முன் செ யித்த], பகடு எழில் மார்பினன் - பெருமை பொருந்திய அழகிய மார் பையுடைய இந்திரன், [நளன்], எ-று.

(க - து.) இவன் இந்திரன் என்றாள் என்பதாம்.

தமயந்தி மாலைசூட்டாது வந்த மேற்சொன்ன அரசர் முகமலர் கள் வாடுதல்பற்றி 'திங்களென்னக் கமலம்வாட்டுந் திலகவாள் முகத் தாய்' என்றார். இறந்தால் தன்னுடம்பு நவமணியாகும்படி வரம்பெற

திருந்த வலாசுரனைக் கொன்றபடியால் 'வலனுடை வயிரவாளான்' என்றும் பறந்து உலகத்தை யழித்துக்கொண்டிருந்த மலைகளின் சிறகை யறுத்தபடியால் 'பல பகை வரை முன் செற்ற' என்றும், இந்திரனுக்கு அடைகள் கொடுக்கப்பட்டன. இப்பாட்டிற் பின்னிரண்டடியும் இந்திரனுக்கும் நளனுக்கும் சிலேடை யாதல் காண்க. (௧௬௩)

நகைமதிமுகத்தாயிங்குவைகியநாமவேலான
புகலரும்வெகுளியுள்ளத்தொருவினன்பொங்கியார்த்த
பகையிருட்பிழம்புசீக்கும்பலசுடருமிழுமவாளான்
றகைமைசாலபுலவரோத்துந்தாலமேழுடையகோவே.

(இ-ள்.) நகை மதி முகத்தாய்-ஒளியையுடைய சந்திரன்போன்ற முகத்தையுடைய தமயந்தியே', ஈங்கு வைகிய - இங்கே தங்கிய, நாமம் வேலான் - அச்சத்தைத்தரும் வேற்படையை யுடையவன், புகல் அரும் வெகுளி உள்ளத்து - சொல்லுதற்கரிய கோபமுள்ள மனத்தையுடைய, ஒருவினன் - ஆட்டுக்கடா வாகனத்தை யுடையவன், [புகலரும் - புகுதற்கரிய, வெகுளி - சினத்தை, உள்ளத்து - மனத்தினகண், ஒருவினன் - நீக்கினன்], பொங்கி - பொலிந்து, ஆர்த்த - ஒலித்த, பகை - பகையாகிய, இருள் பிழம்பு - இருட்பிழம்பை, சீக்கும் - ஓட்டுகின்ற, பல சுடர் உமிழும் - பலவாகிய ஒளியையுமிழ்கின்ற, வாளான் - சுவாலையையுடையவன், [பொங்கி ஆர்த்த - மிகுந்து காய்ச்சித்த, பகை இருள் - இருளையொத்த பகைவரது, பிழம்பு - கூட்டத்தை, சீக்கும் - கெடுக்கின்ற, பல சுடர் உமிழும் - பலவாகிய ஒளிவிடுகின்ற, வாளான் - வாட்படையை யுடையவன்,] தகைமை சால் - அழகு மிகுந்த, புலவர் ஏத்தும் - தேவரால் துதிக்கப்பட்ட, தாலம் ஏழு உடைய கோ - ஏழுநாவுடைய தீக்கடவுள், [தகைமை சால் - பெருமைமிகுந்த, புலவர் ஏத்தும் - வித்துவான்களால் துதிக்கப்பட்ட, தாலம் ஏழுடைய கோ - சத்ததீவையுடைய நளன்,] எ-று. ஏ - அசை.

(க - து.) இவன் அக்கினிதேவன் என்றாள் என்பதாம்.

ஒரு - ஆடு வெறிவிலக்கில் "ஒருத்திக்கொருவன் பகையோ" என்றார் பிறரும். தேவர் புசிக்கின்ற அவிப்பாகங்கள் அக்கினிமுகமாகப் பெறவேண்டுதலாலும், இதனால் தேவர்கள் வாழ்க்கைக்கு அக்கினி காரணமாதலாலும், வேதத்தில் தேவர்களுக்கு அக்கினியை முகமாகச் சொல்லுதலாலும், தமக்குப் புசிப்புத் தருபவனை உண்பவர் புகழ்வது இயல்பாதல் பற்றி அக்கினியைப் 'புலவரோத்துந் தாலமேழுடைய கோ' என்றார். புலவரென்பது பலபொருளொருசொல்லாயதது தேவரையும் கற்றவரையும் உணர்த்துதலால் ஏத்துதல், அக்கினிக்குத் தேவருடன் நளனுக்குக் கற்றவருமெனக் கொள்க. இப்பாட்டிற் பின் மூன்றடியும் அக்கினிக்கும் நளனுக்கும் சிலேடையாதல் காண்க. (௧௬௪)

அஞ்சனமெழுதலாற்றுதம்மவோவென்றுரையும்
வஞ்சிநுண்ணிடையாயீங்குவைகியநாமவேலா
னெஞ்சலிறருமன்றெண்ணீரிருங்கடலுலகமெல்லாஞ்
செஞ்சவேயோசைபோயதீதறுசெங்கோல்வேந்தே.

(இ - ள்.) அஞ்சனம் - மையை, எழுதல் - எழுதுதலை, ஆற்றுது - சகியாது, ஓ என்று - ஓ என்று, நையும் - நைவையடைகின்ற, வஞ்சி நுண் இடையாய் - வஞ்சிக்கொடிபோல் நுட்பமாகிய இடையை யுடைய தமயந்தியே!, ஈங்கு வைகிய - இங்கே தங்கிய, நாமம் வேலான் - அச்சத்தைத் தருகின்ற வேற்படையை யுடையவன், எஞ்சல் இல் - குறைவில்லாத, தருமன் - தருமனென்னும் பெயரை யுடையவன், [தருமத்தையுடையவன்], தெள் நீர் - தெளிவுபொருந்திய நீரை யுடைய, இரு கடல் உலகமெல்லாம் - பெரிய கடல்சூழ்ந்த உலகமுழுவதும், செஞ்சவே - செவ்வையாக, பூசை போய் - புகழ்பரவப் பெற்று, நீந்து அறு - குற்றமற்ற, செங்கோல் வேந்து - செய்விய காலன்தன்மையுடைய யமன், [செங்கோல் செலுத்தும் நளன்] எ-று.

(க - து.) இவன் இமயன் என்றுள் என்பதாம்.

கண்ணுக்கு மையெழுதினால் அந்த மையளவு கனமும் பொறுக்க மாட்டாது நையுமிடையென்க்கொள்க அம்மவோ-இரக்கக் குறிப்பு. "அணிச்சப்பூங்கோதை சூட்டி னம்மனையோவென்றஞ்சிப், பணிக்குநுண்ணுசுப்பிற் பாவை" என்றார் பிறரும். உயிர்கள் செய்த தீவினைக்குத் தக்கவொறுத்தலால் யமனையும், அறமுப்பத்திரண்டுஞ் செய்தலால் நளனையும் தருமனென்றார் இப்பாட்டிற் பின்னிரண்டடியும் யமனுக்கும் நளனுக்கும் சிலேடையாதல் காண்க. (கசுரு)

பாற்றிரையமிர்தமூறும்பட்டொளிப்பவளச்செவ்வாய்க்
கோற்றொடிமடந்தையீங்குவைகியகுவவுத்தோளான்
மாற்றருஞ்சிறப்பின்மிக்கவளங்கெழுபுவனவேந்த
னாற்றிசைப்பரப்புஞ்சூழ்போநலங்கெழுநேமிவேந்தே.

(இ - ள்) பால் திரை - பாற்கடலிற் பிறந்த, அமிர்தம் ஊறும் - அமிர்த மூறுகின்ற, பட்ட ஒளி - படரப்பெற்ற ஒளியையுடைய, பவளம் செவ்வாய் - பவளம்போன்ற செவ்வாயையும், கோல் தொடி - அழகிய வளையலையுமுடைய, மடந்தை - தமயந்தியே!, ஈங்கு வைகிய - இங்கே தங்கிய, குவவு தோளான் - திரட்சிபொருந்திய தோளையுடையவன், மாற்று அரும் - ஒருவராலும் நீக்குதற்கரிய, சிறப்பின் மிக்க - சிறப்பினால் மிகுந்த, வளம் கெழு - வளம்பொருந்திய, புவன வேந்தன் - நீருக்கரசன், [பூமிக்கரசன்], நாற்றிசை பரப்பும் - நான்கு திசைகளின் பரப்பினும், சூழ் போம் - சூழ்ந்துபோகின்ற, நலம் கெழு - நன்மை பொருந்திய, நேமி வேந்து - கடலரசனுன வருணன், [சக்கிரவர்த்தியாகிய நளமகாராஜன்,] எ - று.

(க - து ) இவன் வருணன் என்றுள் என்பதாம்

புவனமென்பது - நீருக்கும் பூமிக்கும், நேமியென்பது - கடலுக்கும் சக்கரத்துக்கும் பலபொருளொரு சொல்லாதல் காண்க. இப்பாட்டிற் பின்னிரண்டடியும் வருணனுக்கும் நளனுக்குஞ் சிலேடையாதல் காண்க. (கசுசு)

போதரி நெடுங்க ணல்லாய் பொருசிலை வேனி லா
னிற், கோதையர் மனமுங் கண்ணுங் கூட்டுணுங் குவவுத்
தோளான், றுதவிழ் கமலப் போது மலர்ந்தபூந் தடங்க
டோறு, மாதர்மென் முகங்கள் காட்டும் வளங்கெழு நிடத
வேந்தே.

(இ - ள்.) போதரி நெடுங் கண் நல்லாய் - அரிபரந்த நெடிய கண்களையுடைய தமயந்தியே!, பொரு சிலை - பொருகின்ற வில்லை யுடைய, வேனிலானில் - மன்மதனைப்போல, கோதையர் மனமும் - மங்கையர்களுடைய நெஞ்சையும், கண்ணும் - விழிகளையும், கூட்டுணும் - கொள்ளைகொள்கின்ற, குவவு தோளான் - திரட்சிபொருந்திய தோளையுடையவன், தாது அவிழ் - மகரந்தப்பொடி யுதிர்கின்ற, கமலம் போது மலர்ந்த - தாமரைமலர்கள் விரிந்த, பூ தடங்கள்தோறும் - பொலிவு பொருந்திய தடாகங்கள் தோறும், மாதர் - மடவார்களுடைய, மெல் முகங்கள் காட்டும் - மெல்லிய முகங்களைக் காண்பிக்கின்ற, வளம் கெழு நிடதவேந்து - வளம்பொருந்திய, - நிடததேசத்தையாளும் நளமகாராஜன், எ-று. ஏ - அசை.

(க - து) அரிபரந்த நெடிய கண்களையுடைய தமயந்தியே, மன்மதனைப்போலப் பெண்கள் கண்களையு மனங்களையும் கொள்ளைகொள்ளும் அழகு பொருந்திய தோள்களையுடைய நளமஹாராஜன் இவனென்பதாம்.

கோதையர் மனமுங் கண்ணுங் கொள்ளைகொள் டுண்ணுந் தோளானெனினும் அமையும். இப்பாட்டில் தோளான—எழுவாய், நிடதவேந்து - பயனிலை. இப்படலத்தில் சேயரி சிந்தியென்னும் நூற்றிருபத்து நாலாம்பாட்டு முதல் இப்பாட்டு வரையும் முதற்கண் இத்தன்மையனென்று பொதுப்படச் சுட்டியதை எழுவாயாகவும், இந்நாடனென்பதைப் பயனிலையாகவுங் கொள்க. (கசுஎ)

என்றிய லணங்கு கூற வினையரி லன்னங் கூறு, மன்
றலந் தெரியற் றிண்டோண் மன்னவன் யார்கொ லென
ணுப, பொன்றிகழ் திதலை பூத்த புணர்முலைப் பாவை
போல்வா, ளொன்றிய வையத் தோடு முள்ளநெக குருகி
நின்றாள்.

(இ - ள்.) என்று - இப்படியென்று, இயலணங்கு கூற - நாமகளானவள் சொல்லியவளவில், இனையரில் - இத்தன்மையை யுடைய அரசர்களில், அன்னம் கூறும் - அன்னப்பறவை முன்பு சொல்லிய, மன்றல் - வாசனைபொருந்திய, தெரியல் - மாலையை யணிந்த, திண் தோள் - திண்மை பொருந்திய தோள்களையுடைய, மன்னவன் - நளமகாராஜன், யார் கொல் என்று - எவனென்று, பொன் திகழ் - பொன்போல் விளங்குகின்ற, திதலை பூத்த - தேமல் பரவிய, புணர் முலை - நெருங்கிய முலைகளையுடைய, பாவை போல்வாள் - பாவைபோல்பவ

ளாகிய தமயந்தியானவள், ஒன்றிய ஐயத்தோடும் - பொருந்திய சந்தேகத்துடனே, உள்ளம் - மனமானது, நெக்கு உருகி நின்றாள் - மிகவுங் கரைந்து நின்றாள், எ-று.

(க - து.) தமயந்தி மனமுருகி நின்றாள் என்பதாம்.

இந்திரன் முதலிய நால்வரும் நளவேடங்கொண் டிருந்ததனாலும், அவர் அவ்வர் திருத்தலைக் கேள்விப்படாமையாலும், நாமகள் அந்நால்வரையுஞ் சொன்ன செய்யுளுக்கு அத்தேவரையன்றி நளனென்றும் பொருள் படுதலாலும், நளனைச் சொல்லிய செய்யுளுக்கு வேறு பொருள்படாது நிடதவேந்தென்று வெளிப்பட்டிருப்பினும் இதற்கும் உள்ளதோ வென்னும் ஐயத்தாலும், நம்மை விரும்பியிருந்த தேவர் நிலைமாறி மாயஞ்செய்யினுஞ் செய்வரென்று மெண்ணமுள்ள தமயந்திக்கு ஒருவர்போலிருக்கும் இவ்வைவருள் நளன் எவனென்று சந்தேகத்துக் கிடமுண்டாய வருத்தந் தோன்றிய தெனக. இது பொதுமையணி ()

எள்ளுற வேனை யோரை யிரட்டுற மொழித லானும்,
வள்ளன்மார் பணிந்த தாரில் வண்டுவீழ்ந் தரற்ற லானும்,
முள்ளுறப் பிணித்த வன்பி னூழ்வினைத் தொடர்பி னானும்,
நள்ளிருள் பருகும் பைம்பூ ணளனையே நளனென் றோர்ந்
தாள்

(இ-ள்.) எள் உற - சந்தேகம் பொருந்த, ஏனையோரை - மற்றையோரை, இரட்டுற மொழிதலானும் - இரண்டு பொருள்படச் சொல்லுதலாலும், வள்ளல் மார்பு அணிந்த தாரில் - நளன் மார்பிலணிந்த மாலையில், வண்டு வீழ்ந்து அரற்றலானும் - வண்டுகள்வீழ்ந்து ஒலித்தலாலும், உள் உற பிணித்த - உள்ளே பொருந்தக்கட்டிய, அன்பின் - அன்பினாலுண்டாகிய, ஊழ்வினை தொடர்பினானும் - ஊழ்வினையினுடைய சம்பந்தத்தினாலும், நள் இருள் பருகும் - மிகுந்த இருளை உண்கின்ற, பைம்பூண் - பசிய பொன்னாற்செய்த ஆபரணங்களையுடைய, நளனையே - நளனென்னு மரசனையே, நளன் என்று - நளமகாராஜனென்று, ஓர்ந்தாள் - அறிந்தாள், எ-று.

(க - து) நளனையே நளனென அறிந்தாள் என்பதாம்.

தேவர்களணிவது கற்பகத்தருவின் பொற்பூமாலை யாதலால் அதில் வண்டு வீழாமைபற்றி 'வள்ளன்மார் பணிந்ததாரில் வண்டுவீழ்ந்தரற்றலானும்' என்றும், "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்" என்பதுபற்றி 'ஊழ்வினைத்தொடர்பினானும்' என்றும் சொல்லினர். பொதுமையுற்றிருந்த நளனை ஏதுவினால் சிறப்பித் தறிதலால் சிறப்பணி. (௧௬௧)

மாதர்மென்னோக்கினாணிமதிமுகஞ்சிறிதுகோட்டிக்
காதன்மீதூரவுள்ளங்களிமகிழ்தூங்கநின்ற
கோதையர்மணிசெய்செம்பொற்கோடிகத்தினிதினேந்துந்
தாதுலாமலங்கன்மாலைதளிரியல்கரத்திற்கொண்டாள்.

(இ - ள்.) மாதா - அழகுபொருந்திய, மெல் நோக்கி - மெல்லிய பார்வையை யுடைய தமயந்தியானவள், நாணி - நாணமுற்று, மதி முகம் சிறிது கோட்டி - மதிபோன்ற முகத்தைக் கொஞ்சம் வணக்கிக் கொண்டு, காதல் மீது ஊர - ஆசையானது அதிகரிக்க, உள்ளம் - மனமானது, களி மகிழ் தூங்க - களிப்புமிகுந்த மகிழ்ச்சி தங்க, நின்ற - அருகேநின்ற, கோதையார் - தோழிகள், மணி செய் - நவமணிகள் பதித்த, செம் பொன் கோடிகத்து - செம்பொன்னாற்செய்த தட்டில், இனிதின் ஏந்தும - இனிமையிற் றாங்குகின்ற, தாம உலாம - மகரந்த முலாவுகின்ற, அலங்கல் மாலை - மலாமாலையை, தளிர் இயல் - தளிரி னது சாயலையுடைய, கரத்தில் கொண்டாள் - கையிலெடுத்துக்கொண் டாள், எ-று

(க - து) தமயந்தி மாலையைக் கையிலெடுத்தாள் என்பதாம

கணவனென்னுந் துணிபுடையவ ளாதலால், நாணி முகஞ்சிறிது கோட்டி யென்றார். அப்பொழுது தமயந்தி யுவகை என்ற சொல்லி முடியாதெனபார், 'களிமகிழ் தூங்கநின்ற கோதையார்' எனப் புநதட் டேந்திய தோழிக ளுவகைமாத்திரங் கூறினார் (கஎ0)

[இதனுல் தமயந்தி நளனுக்கு மாலைசூட்டல் சொல்லப்படுகின்றது]

இன்னரிச் சிலம்பு செம்பொற் கிண்கிணி யார்ப்ப வேகி, மன்னவர் மனமுங் கண்ணும் வண்டெனத் தொ டர்ந்து வீழக், கொன்னுனை வயிர வொள்வா ணிடதா கோன் குவவுத் தோண்மேற், பொன்னரி மாலை சூட்டிப் பூங்கழல் வணங்கி நின்றாள்.

(இ - ள) இன் - இனியவோசையைத் தருகின்ற, அரி - பருக் கையை யுடைய, சிலம்பு - சிலம்புகளும், செம் பொன் கிண்கிணி - சிவந்த பொன்னாற்செய்த சதங்கைகளும், ஆர்ப்ப - ஒலிக்குமபடி, ஏகி - போய், மன்னவர் மனமும் - அரசர்களுடைய நெஞ்சும், கண்ணும் - கண்களும், வண்டு என - வண்டுகள் போல, தொடர்ந்து வீழ - தொடர்புகொண்டு வீழ, கொல் - கொல்லுகின்ற, நுனை - முனையை யுடைய, வயிரம் ஒள்வாள் - கூர்மை பொருந்திய ஒளிவீசுகின்ற வாட் படையை யேந்திய, நிடதர்கோன் - நளமகாராஜனுடைய, குவவு தோண்மேல் - திரட்சிபொருந்திய புயங்களின்மேல், பொன் அரி மாலை சூட்டி - பொன்னரிமாலையை யணிந்து, பூ கழல் வணங்கி நின்றாள் - அழகுபொருந்திய அவன் பாதங்களைப் பணிந்து நின்றனள், எ-று

(க - து ) தமயந்தி நளனது தோளில் மாலையணிந்து அவனது திருவடியை வணங்கிநின்றாள் என்பதாம

இப்பொழுது பார்த்தாலன்றி இது தப்பில் தமயந்தி நமக்குப் பார்க்கவும் கிடையாளென்னும் நினைப்பு அவள் தமக்கு மாலை சூட்டில ளென்னும் பொறாமையினு மேற்பட்டிருந்ததலால், 'மன்னவர் மனமுங் கண்ணும் வண்டெனத் தொடர்ந்து வீழ' என்றும், மாதர்க்குக் கண

வனைத் தொழுதலின் மிக்கதின்மையால 'பூங்கழல் வணங்கினின்றாள்' என்றும் சொல்லினா. பொன்னரிமாலையென்பது பொன்னையரிந்து செய்யுமொருமாலை யிருப்பினும முன்பாட்டில தாதுலாமலங்கன்மாலை யெனலால், இங்கு அழகுபொருந்திய வண்டுகள் சூழ்ந்த மாலையென்ப பொருள் கொள்க (சஎச)

[இதனால் அப்பொழுது நளனுக்கிருந்த மகிழ்ச்சி சொல்லப்படுகின்றது]

வடிமலர்நெடுங்கட்செவ்வாயமடவரலினிதுசூட்டுந்
தொடையலபொற்கிரியிலவீழுஞ்சுடாமணியருவியேய்ப்ப
விடுகதிரவலயத்திணைதோண்மன்னவன்விழைவுகூர்ந்து
பிடிதழீஇயுவகைபூத்தபெயமதக்களிறுபோன்றான்.

(இ-ள்) வடி மலர் - தேனையுடைய குவளை மலர்போன்ற, நெடு கண் - நெடிய கண்களையும, செவவாய - சிவந்த வாயையுமுடைய, மடவரல் - தமயந்தியானவள், இனிது சூட்டும தொடையல - இனிமை யோடுசூட்டிய மாலையானது, பொன் கிரியில வீழும - மேருமலையில ஒழுகுகின்ற, சுடா மணி - ஒளியையுடைய ரத்நங்களோடும வருகின்ற, அருவி ஏயப்ப - அருவியையொப்ப, விடு கதிர - கிரணங்களை வீசுகின்ற, வலயம - கேயூரமணிந்த, திணை தோள மன்னவன - வலிமைபொருந்திய தோளையுடைய நளமகாராஜன், விழைவு கூர்ந்து - ஆசைமிகுந்து, பிடி தழீஇ - பெட்டையானையைத் தழுவி, உவகை பூத்த - மகிழ்ச்சியுண்டாகிய, பெய மதம களிறு போன்றான் - மதம பொழிகின்ற யானையை ஒத்தான், எ - று [பிடி - பெட்டையானை, களிறு - ஆண்யானை.]

(க - து.) நளன் மகிழ்ச்சி யடைந்தான் என்பதாம

நளன் பிடியைத்தழுவி யுவகைபூத்த களிறுபோன்றானெனவே, அவ்வாறு தமயந்தி களிற்றைத் தழுவி யுவகைபூத்த பிடிபோன்றாளெனக் கொள்க. இது உவமையணி (சஎஉ)

பூணுலாககிடந்தவல்குறபொறபெலாங்களிகொள்வண்டின்
பாணுலாககிடந்ததாரானபருகுவானபோலநோக்க
நாணமீதூரபைமபொன்னலததுபூங்கொடியினொல்கி
வாணகையுயிர்த்தசெவ்விமதிமுகங்கோட்டினின்றாள்.

(இ - ள்.) பூண் உலா கிடந்த - ஆபரணங்களசைந்து கிடந்த, அல்குல - அல்குலையுடைய தமயந்தியினது, பொறபு எல்லாம - அழகனைத்தையும, களி கொள - களிப்படைக்கொண்ட, வண்டின பாண உலா கிடந்த - வண்டுகளுடைய இசை யுலாவிக்கிடந்த, தாரான - மாலையையணிந்த நளனானவன, பருகுவான போல - கண்ணாலுண்பவனபோல, நோக்க - பாரக்க, (அதனால) நாணம் மீதூர - நாண மதிகரிக்க, பைமபொன - பசிய பொன்னாலாகிய, நலதத - நன்மையையுடைய, பூங் கொடியின் ஒல்கி - பூங்கொடிபோல் துவண்டு, வாள் - ஒளிபொருந்திய, நகை உயிர்தத - புன்னகையைத்தந்த, செவ்வி -

அழகுபொருந்திய, மதி முகம் - சந்திரனைபோன்ற முகத்தை, கோட்டினாள் - வணங்கிக்கொண்டு நின்றனள், எ-று.

(க - து) நளனை தமயந்தியைப் பாரக்கத் தமயந்தி தலைவணங்கினாள் என்பதாம்.

தமயந்தி மாலைசூட்டியபடியால் நமக்கு எப்படியும் துணைவியாயினள், இனி நாம் அந்தரங்கத்தில் அவளழகைப் பார்ப்பமென்ன நில்லாமல் 'பொற்பெலாம் பருகுவான்போல நோக்க' என்றமையால், அவளழகிடத்திருந்த அவாவானது அப்பொழுது அவன் விவேகத்தினு மேற்பட்டிருந்ததுபோலும். அவளுக்கும் அப்படி யிருப்பினும் பெண்பாலாகையால் வெளிப்படுத்தாளென்பது தோன்ற 'நாணமீதூரப் பூங்கொடியினொல்கி நகையுயிர்த்த செவ்வி மதிமுகங் கோட்டினாள்' என்றும் சொல்லிறு. (கஎ௩)

**அலைகடலுயிர்த்தபொன்னம்பாவையையலங்குசோதி**
**நிலவுமிழ்பளிக்குமாடவேதிகைகொணர்ந்துநீங்காச்**
**சிலதியருயிரனையனதோழியர்செவிலித்தாயர்**
**விலைவரம்பறியலாகாமெல்லுறுகிலெழினிவீழ்த்தார்.**

(இ-ள்) அலை கடல் உயிர்த்த - பாற்சமுத்திரமானது பெற்ற, பொன்னம் பாவையை - இலக்குமியையொத்த தமயந்தியை, அலங்கு - அசைகின்ற, சோதி நிலவு உமிழ் - மிகுந்த வொளியைக் கொப்புளிக்கின்ற, பளிக்கு மாடம் வேதிகை - பளிங்கரிந்து செய்த உபரிகையிலிருக்கு மேடையில், கொணர்ந்து - அழைத்துக்கொண்டுவந்து வைத்து, நீங்கா - நீங்காத, சிலதியர் - ஏவல்செய் தோழிகளும், உயிரனைய தோழியர் - உயிரையொத்த தோழிகளும், செவிலி தாயர் - வளர்த்த தாயமாரும், விலை வரம்பு அறியல் ஆகா - விலையளவறியக் கூடாத, மெல் துகில் எழினி - மெல்லிய சேலையாற் செய்த திரையை, வீழ்த்தார் - விடுத்தார்கள், எ-று.

(க - து) தாயமார்களுந் தாதிமார்களுந் தமயந்தியை உபரிகையின்மே லழைத்துக்கொண்டுபோய் வைத்துத் திரைபோட்டார்கள் என்பதாம்.

சிலதியராதியர் எழுவாய் அரசனாத் தனித்தனி கண்டுவந்ததிறப் பொழுதுநீட்டித்தலால் இளைப்புறுமென்று தமயந்தியைப் பளிங்கு வேதிகையிற் சேர்த்துப் பிற ரவளையும் பிறளை யவளும் நோக்காமைப் பொருட்டுச் சிலதியர் முதலியர் திரைவீழ்த்தன ரெனக். (கஎச)

**தாவருஞ் சீற்றத் துப்பிற் றறுகண்மால யானை யன்ன, மேவலர்க கடந்த வொள்வாள் வேந்தர்கோன் முழவுத் தோண்மேன், மாவகிர் நெடுங்கண் சூட்டு மாலையே மாலை யாகக், காவலர் முகங்க ளெல்லாங் கமலமொத் திருந்த மாதோ.**

(இ-ள்) தாவு அரும் - தாவுதற்கரிய, சீற்றத்துப்பின் மிகுந்த கோபத்தையும், தறு கண் - அஞ்சாமையையு முடைய, மால் யானை அன்ன - பெருமை பொருந்திய யானையை யொத்த, மேவலார் கடந்த - சத்துருக்களை வென்ற, ஒள் வாள் - ஒளிபொருந்திய வாட்படையையுடைய, வேந்தர் கோன் - நளமகாராஜனுடைய, முழவு தோள் மேல் - மத்தளத்தை யொத்த புயங்களின்மீது, மா வகிர் - மாவடுவின் பிளப்பை யொத்த, நெடு கண் - நெடிய கண்களையுடைய தமயந்தியானவள், சூட்டும் - தரித்த, மாலையே - பூமாலையே, மாலையாக - மாலைப்பொழுதாக, காவலர் - அரசருடைய, முகங்கள் எல்லாம் - முகங்க ளனைத்தும், கமலம் - தாமரைமலரை, ஒத்திருந்த - ஒத்திருந்தன, எ-று. மாது - ஓ - அசைகள்.

(க-து) நளன் தோளிலணிந்த மாலையே மாலைக்காலமாக அரசர்கள் முகங்கள் தாமரைகளாக விருந்தன என்பதாம்.

நெடுங்கணென்பது - பண்புத்தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தமயந்தி நளனுக்கு மாலை தரித்தவளவில் மற்றையரசர் முகங்கள் குவிதல்பற்றி அவள் சூட்டியமாலையை மாலைப்பொழுதாகவும் அவர் முகங்களை அம்மாலைப்பொழுதிற் குவியுந் தாமரை மலராகவும் சொல்லினர். முகங்கள் கமலமொத்திருந்தவென்னும் உவமை மாலையே மாலையாகவென்னும் உருவக மடியாக வருதலால் கலவையணி. (௧௭௫)

சுயம்வரப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் - ௭௧௮

# போர்புரிபடலம்.

இப்படலத்தால் சுயம்வரத்திற்குவந்த அரசர் தமயந்தி நளனை விரும்பி மாலைசூட்டுதலால் தாம் அவனைக் கைப்பற்றும் பொருட்டு அவனை வெல்லவெண்ணிச் செய்யும் யுத்தம் சொல்லப்படுகின்றது.

[இதனால் அரசர்கள் மகிழ்ச்சியும் இந்திரன் பெருமையுஞ் சொல்லப்படுகின்றன]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

**அழகினைச்சுமந்தபேறுபெற்றனளணங்கின்றென்று**
**வொழுகொளியாரமார்பருவாககடன்மெலியவார்ப்ப**
**பொழிகதிர்வயிரவொளவாட்புரவலன்புழுங்கிநெஞ்சம்**
**விழியழலகத்துவநோக்கிவேந்தரைவிளித்துச்சொல்வான்.**

(இ-ள்) அழகினை - சௌந்தரியத்தை, சுமந்த பேறு - தாங்கிய பேற்றினை, அணங்கு - தமயந்தியானவள், இன்று பெற்றனள் என்று-

இனறுதான் பெற்றுளென்று, ஒழுகு ஒளி - ஒளி விளங்குகின்ற, ஆரம்- மணிவடமணிந்த, மார்பர் - மார்பையுடைய அரசர்களனைவரும், உவர் கடல் - பாவகாலத்துக் கடலானது, மெலிய - ஒலியிற் குறையும்படி, ஆர்ப்ப - ஒலிக்க, (அதுகண்டு), பொழி கதிர் - கிரணங்களை வீசுகின்ற, வயிரம் ஒளவாள் புரவலன் - ஒளிபொருந்திய வச்சிரவாளையுடைய இந்திரனனவன், நெஞ்சம் புழுங்கி - மனம் வெந்து, விழி - கண்களில், அழல் கதுவ - நெருப்புப்பற்ற, நோக்கி - பார்த்து, வேந்தரை விளித்து சொல்வான - அரசரை அழைத்து இவ்வாறு சொல்வான, எ-று.

(க-து.) இந்திரன் பொறாமைகொண் டரசரைப்பார்த்துச் சொல்வான் என்பதாம்.

நளனுக்கு மாலைசூட்டுதலால் தமயந்தியழகிற்கு அவனன்றி நாம் தகுதியுடையோ மல்லமென்று மற்றையரசர் நினைத்தமை தோன்ற 'அழகினைச்சுமந்தடேறு பெற்றனன் என்கின்றார்' என்றும், அதிலவ்வர சர்க்கு மகிழ்ச்சியின்றிப் பொறாமையின்மைதோன்ற 'ஆரமார்ப ருவர்க்கடன் மெலியவார்ப்ப' என்றும், இந்திரன் தூதுகள் விடுத்தும் தளவேட்டுங் கொண்டும் தமயந்தி யொருவர்க்கும் ஆகவிசையாமையால் வந்த அவமானம்பற்றிப் பொறாமையும் வெகுளியுங் கொண்டமை தோன்ற 'புழுங்கி நெஞ்சம் விழியழல்கதுவ' என்றும், அதனால் அவ் வரசர்க்கும் பொறாமை யுண்டாகின்றமைதோன்ற 'வேந்தரை விளித் துச் சொல்வான்' என்றும் சொல்லினர். 'வெளிப்பிலே வேற்கண்ணாச் சிவகன் விரைந்துவென்று, வெருவரிய னென்று பார்த்து ருவர்க்கடல் மெலியவார்ப்பக், களவராற புலியை வேறு கானிய காயமன் மனம், னுள்ளகம் புழுங்கிமாதோ வுரைத்தனன் மன்னர்கட்கெல்லாம்.". என பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. டகாப்பியத்தில் நிறைமதி கண் டால் கடல் மிகவொலித்த லறிக. (க)

[இதுமுதல் நாலுபாட்டால் இந்திரன் கலகமூட்டுதல் சொல்லப்படுகின்றது]

விரிகதிர்ப்பரிதிமுன்னர்வெண்மதிமழுங்குமல்லாற்
பரிதியுமதியந்தோன்றிற்படரொளிமழுங்கலுண்டோ
வரசர்காணீவிர்வெய்யோனருங்குலத்துதித்துந்திங்கண்
மரபின்மன்னவற்குநுங்கணமானெழின்மழுங்கினீரால்.

(இ - ள்) விரி கதிர் பரிதி முன்னர் - விரிந்த கிரணங்களையுடைய சூரியன் முன்னே, வெண் மதி - வெண்மைபொருந்திய சந்திரன், மழுங்கும் அல்லால் - மழுங்கிப்போகு மல்லாமல், பரிதியும் - சூரியனும், மதியம் தோன்றில் - சந்திரனுதித்தால், படர் ஒளி மழுங்கல் உண்டோ - விரிகின்ற ஒளிகெடுத லுண்டோ, (இல்லை, இவ்வாறிருக்க), அரசர்கள் - அரசர்களே, நீவிர் - நீங்கள், வெய்யோன் - சூரியனுடைய, அரு குலத்து உதித்தும் - கிடைத்தற்கரிய மரபினிற் பிறந்தும், திங்கள் மரபின் மன்னவற்கு - சந்திரவம்சத்திற்பிறந்த அரசனுக்கு, நுங்கள் - உங்களுடைய, மான் எழில் - பெருமை பொருந்திய அழகு, மழுங்கி னீர் - மழுங்கிப் போனீர்கள், எ-று. ஆல் - அசை.

(க - து.) அரசர்களே நீங்கள் சூரியகுலத்திற்பிறந்தும் சந்திர குலத்து நளனழகுக்குத் தோற்றீர்களென்றான் என்பதாம்.

சந்திரவம்சத்திற் பிறந்தவன் நளன். உலகத்தில் யாவருக்குங் குலத்தை யிழிவுபடுத்தலி லுண்டாகும் வேறுமை மற்றொன்றி லுண்டாகா தென்பதுபற்றி அரசரை நோக்கி இவ்வாறு சொல்லின னென்க. (உ)

உரிமையிற்புணர்ந்தமாதரூடவுமறுத்திம்மாதின்
வரிமுலைபபோகம்வேண்டிமணவினை துணிந்துவந்தீர்
குருதிவேல்சுமந்துவாளாவீங்கியகுவவுத்தோளீர்
திருநகர்க்கினிநீர்போய்நுந்தெரிவையர்க்கென்சொல்வீரே.

(இ - ள்.) உரிமையில் புணர்ந்த மாதர் - கிழமையினால் கூடிய மங்கையர்கள், ஊடவும் - பிணங்கிக்கொள்ளவும், மறுத்து - அதை நீக்கி, இம்மாதின் - இந்த மங்கையினுடைய, வரி முலைப் போகம் வேண்டி - சந்தனக் கோலமுதையுடைய ஸ்தனத்தினுடைய போகத்தை விரும்பி, மணவினை துணிந்து வந்தீர் - விவாகத்தொழிலை நிச்சயித்துக்கொண்டு வந்தீர்கள், குருதி வேல் சுமந்து - உதிரந்தோய்ந்த வேற்படையைச் சுமந்து, வாளா வீங்கிய - வீணாகப் பருத்த, குவவுத் தோளீர் - திரட்சிபொருந்திய தோள்களையுடைய அரசரே, திருநகர்க்கு - உங்களுடைய அழகிய நகரத்திற்கு, இனி - இப்பொழுது, நீர் போய் - நீர் சென்று, நும் தெரிவையர்க்கு - உம்முடைய மனைவிகளுக்கு, என் சொல்வீர் - யாது சொல்வீர்கள், எ-று. ஏ - அசை.

(க-து.) அரசர்களே உங்கள் மனைவிகளுக்கு என்ன சொல்வீர்கள் என்றான் என்பதாம்.

வேறொருமாதரைத் தமது கணவனிச்சித்தது தெரியினும் பொறா தமங்கையர் தமயந்தியின் விவாகத்தைக் குறித்துவந்த அரசரோடு மிகவும் பிணங்கியிருப்ப ரென்பதுதோன்ற 'மாதரூடவும்' என்றும், நீர் விரும்பிவந்த தமயந்தியைக் கொண்டுபோன நளனை வெல்லும் வல்லமை உமக்கில்லையென்பது தோன்ற 'குருதிவேல்சுமந்து வாளா வீங்கிய குவவுத்தோளீர்' என்றும், இங்ஙனமான நீர் உம்முடைய மனைவியர் பிணக்கையுந் தணிக்கமாட்டீ ரென்பதுதோன்ற 'நுந்தெரிவையர்க் கென்சொல்வீர்' என்றும் சொல்லினான். (ங)

சூழிருஞ்சடைகடாங்கிச்சுடர்முடிதுறந்துகான்போய்
வீழ்சருகருந்திநீவிர்மெய்த்தவம்புரிதல்வேண்டும்
தாழிருங்கூந்தலாளைநிடதர்கோன்றழீஇயபோதே
யாழிசூழுலகமெல்லாமவனடிப்படுக்குமன்றே.

(இ - ள்.) சுடர் முடி துறந்து - இரணங்களையுடைய கிரீடங்களை விடுத்து, சூழ் - சுற்றுகின்ற, இரு சடைகள் தாங்கி - பெரிய சடைகளைச் சுமந்து, கான் போய் - வனத்திற்சென்று, வீழ் - (அங்கே) உதிர்கின்ற, சருகு அருந்தி - இலைகளைப்புசித்து, நீவிர் - (அரசர்களே) நீர்,

மெய் தவம் புரிதல்வேண்டும் - உண்மையாகிய தவத்தைச் செய்தல் வேண்டும், (அஃதேனெனில்), தாழ் - தாழ்ந்த, இரு கூந்தலாளை - பெரிய அளகபாரத்தையுடைய தமயந்தியை, நிடதகோன் - நளன், தழீஇய போது - தழுவியபோதே, ஆழி சூழ் உலகம் எல்லாம் - கடலாற்சூழப்பட்ட பூவுலகமனைத்தும், அவன் - அவ்வரசனுடைய, அடி படக்கும் - அடிபணிந்து இடக்கும், எ-று. அன்று, ஏ - அசை.

(க - து) அரசர்களே தமயந்தியை நளன் தழுவியபோதே நீங்கள் மணிமுடிநீக்கிச் சடைமுடிதாங்கிக் காட்டிற்போய் தவஞ்செய்ய வேண்டுமென்றான் என்பதாம்.

உம்முடைய குலத்திற்கும் உமக்கும் இடையே பொழுதுவந்த குற்றம் போரில்வென்று நீக்கல்வேண்டும், அங்ஙனமின்மையால் இச்செய்கையாலன்றி நீராமென்பான் 'மெய்த்தவம்புரிதல் வேண்டும்' என்றும், தமயந்தி இலக்கணமுழுவதும் அமைந்த வுருவுடையவளாதலால் அவளைமணந்தவன் பூமண்டலமுழுதும் ஆளவனென்பது தோன்ற 'ஆழிசூழுலகமெல்லா மவனடிபடக்கும்' என்றும் சொல்லினன் "வடதிசைக் குபேரமன்னன் வானவர்குல மாசுமைச்சயரா, விந்கதிரப பரிதி முன்னோ மின்மினி விளக்கமொத்தோர், யம்முன் மெய்யுற்றாலும் வாளம ரருசின்போம், முடிதுறந் தனிப்பம்போயி முனிவரும் புகுமினென்றான்". "திருமக ளிவளைச்சேர்ந்தான் நெடுமுடி யாடைவேலி, யிருநில மகடூஉக் செயம்பா லெமிகு மிறையுமாகும், செருநிலத் தியல்வ தன்றா திருவிழுக் குரிய்செயலா, கரியவ ரச்சம்வெருஞ் செர்ற கட்டடங் காரனென்றே" என்பவாறு மீண்டு கூறுதல் காண்க.()

கண்டவர் மனமுங் கண்ணுங் கவர்ந்திடு வனப்பு
வாய்ந்த, வொண்டொடி மாலை வேய்ந்தோற் குரியளென்
றெண்ண வேண்டா, திண்டிறல் நிடதக் கோமான் செரு
வினி லிரியல் போக, மண்டமர் கடந்த வொள்வேல் மன்
னவற் குரிய ளென்றான்.

(இ-ள்) கண்டவர் மனமும் - (தன்னைப்) பார்த்தவர்களுடைய மனத்தையும், கண்ணும் - கண்களையும், கவர்ந்திடு - வாரிக்கொள்ளும்படி, வனப்பு வாய்ந்த - அழகுபெற்ற, ஒள் தொடி - பிரகாசம் பொருந்திய வளையலணிந்த தமயந்தியானவள், மாலை வேய்ந்தோற்கு - மாலைசூட்டினவனுக்கு, உரியள் என்று - உரிமையுடையவளென்று, எண்ண வேண்டா - நினைக்கவேண்டாம், திண் திறல் - மிகுந்த வலிமையையுடைய, நிடதக்கோமான் - நிடததேசத்தரசன், செருவினில் - போரில், இரியல் போக - ஓடிப்போக, மண்டு அமர் - நெருங்கிய யுத்தத்திலே, கடந்த - செயித்த, ஒள் வேல் - ஒளிபொருந்திய வேலையுடைய, மன்னவற்கு - அரசனுக்கு, உரியள் என்றான் - உரிமையுடையவளாவாளென்றான், எ-று.

(க-து.) தமயந்தி மாலைதரித்தவனுக்குச் சொந்தமென்று எண்ண வேண்டாம், நளனை வெல்லுகின்றவர்களுக்கு அவள் சொந்தமென்றான் என்பதாம்.

நளனைப்போர்செய்து வெல்லினும் அரசர் பலராதலால் இவள் எவனுக்கு உரியவளாதலென்னுஞ் சந்தேகமுண்டாகாமைப் பொருட்டு, இந்திரனெனுமவன் 'நீடுதார்கோமான் செருவினில்லிரியப்போக மடமான் கடந்த வொளிவேன் மன்னவற் குரியள்' என்றானெனக் மேற்படலத்தில் நூற்றறுபத்தைந்தாம் பாட்டிற் காட்டிய அனிச்சப் பூங் கோதையெனனு மேற்கோளாற் பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. ()

[இதனால் அக்கலக்கவார்த்தைக் கேட்ட பாண்டியன் வெகுளல் சொல்லப்படுகின்றது]

என்றலுங்கடவுட்டிங்களிருங்குலமிழித்துக்கூற
னன்றுநன்றென்னநக்குநாமவேல்வழுதிசீறி
யுன்றலைதுணிப்பனென்றுவொளிறுவாளுறையினீக்கிக்
குன்றெறிவயிரவொள்வாட்குரிசின்மேற்கனன்றுசென்றான்

(இ-ள்.) என்றலும் - இப்படியென்று இந்திரன் சொன்னவளவில், கடவுள் - தெய்வத்தன்மையுள்ள, திங்கள் இருங்குலம் - பெருமையோடு கூடிய சந்திரவம்சத்தை, இழித்து கூறல் - இழிவுபடுத்திச் சொல்லல், நன்று நன்று என்னா - நல்லது நல்லதென்று, நக்கு - நகைத்து, நாமம் வேல் வழுதி சீறி - அச்சத்தைத் தருகின்ற வேற்படையை யுடைய பாண்டியராஜன் அதட்டி, உன் தலை துணிப்பன் என்று - இப்படிச் சொல்லிய உனது சிரத்தினை அறுத்துவிடுவேனென்று, ஒளிறு வாள் - பிரகாசிக்கின்ற, வாளை, உறையின் நீக்கி - உறையினின்று நீக்கி, குன்று எறி - மலைகளின் சிறகையறுத்த, வயிர ஒள் வாள் - ஒளியையுடைய வச்சிராயுதத்தை ஏந்திய, குரிசில்மேல் - இந்திரன்மேல், கனன்று - கோபித்து, சென்றான் - போனான், எ-று.

(க-து) பாண்டியன் வாளுருவி இந்திரன்மேற் போர்க்குச்சென்றான் என்பதாம்.

குன்றென்பது அதன் சிறகுக்காதல் ஆகுபெயர். உமையவள், பரமசிவன், குமரவேள் என்னும் மூவரும் முறையே வந்து அரசு செய்திருந்த குலமாதலாலும், சந்திரனைச் சிவன் முடிமேற் கொண்டிருத்தலாலும், அந்த வம்சத்தை 'கடவுட்டிங்களிருங்குலம்' என்றார். அதனால் அக்குலத்திற்றோன்றிய பாண்டியனுக்கு அதை இழிவுபடுத்திய இந்திரன்மேல் வெகுளியுண்டாயிற்றெனக. (ா)

[இதுவுமது.]

வெகுளலையணங்கிற்காகநளனுருக்கொண்டுமேய
வகல்விசும்பளிக்கும்வேந்தனிவனெனவமரர்கூறத்
துகளெழமௌலிபணிந்துதொழுதவன்றன்னோடென்கொ
லிகலெனப்புகையுமொள்வாளுறைசெறித்தேகினானே.

(இ-ள்) வெகுளலை - கோபியாதே, அணங்கிற்கு ஆக - தமயந்திக் காக, நளன் உருக் கொண்டு மேய - நளன் வடிவங்கொண்டுவந்த, அகல் விசும்பு அளிக்கும் வேந்தன் - அகன்ற தெய்வலோகத்தைக் காக்குமிந்

திரன், இவன் என - இவனென்று, அமரர் கூற - தேவர்கள் சொல்ல (அதுகேட்டு), துகள் எழ - தூளியெழும்ப, மௌலி - கிரீடம், பண்டு - முன்னே, தோற்றவன்றனோடு - தோற்றுப்போனவனோடு, என்கொல் இகல் என - என்னபோரென்று, புகையும் - புகைகின்ற, ஒள்வாள் - ஒளிபொருந்திய வாட்படையை, உறை செறித்து - உறையிலிட்டு, ஏகினன் - போனான், எ-று. ப - அசை.

(க-து.) தேவர்கள் இந்திரனென்று சொல்லப் பாண்டியன் முற்காலத்திற் றோற்றவனோடும் போர்க்குச் செல்லலாகாதென்று திரும்பினான் என்பதாம்.

மதுரையில் உக்கிரபாண்டியன் அரசு செய்திருந்தநாளில் தன்னாட்டிலிருக்கும் பொதியமலையிலுள்ளவைகளை மேய்ந்திருந்த மேகங்களைப் பிடித்துத் தளைசெய்தான், அதைக்கேட்டும் அப்பாண்டியனோடெதிர்த்து யுத்தஞ்செய்த இந்திரன் மகுடப்பங்கப்பட முத்து தொடர்ந்தோடிய படியால் தோல்வியடைந்தவரோடெதிர்த்தல் தருமமன்றென்று அதுபற்றி இவனை அவ்விந்திரனென்று கேட்டவரசன், 'துகளெழ மௌலிபண்டு தோற்றவன்றனோடெனக்கா, விகலென்ன புகைப்பு மொள்வாளுறைசெறித்தேகினான்' என்றார். (எ)

[இதுமுதல் மூன்றுபாட்டால் அரசர் செய்கை கூறப்படுகின்றது]

கூற்றெனக்கனலியென்னக்குலவரைதிரிக்குமூழிக்
காற்றெனவுருமேறென்னக்கதிர்முடியரசரெல்லாம்
மாற்றருஞ்சீற்றத்தோடுமடங்கலந்தவிசினின்றும்
பாற்றினஞ்சூழுமவைவாட்படையொடுநிலத்திற்பாய்ந்தார்

(இ-ள்) கூற்று என - யமனைப்போலவும், கனலி என்ன - அக்கினிபோலவும், குலவரை - (சுத்த) குலகிரிகளையும், திரிக்கும் - சுழற்றுகின்ற, ஊழி காற்று என - முடிவுகாலக் காற்றுப் போலவும், உரும் ஏறு என்ன - இடியேற்றைப்போலவும், கதிர் முடி அரசர் எல்லாம் - கிரணங்களையுடைய கிரீடமணிந்த அரசர்களெல்லாம், மாற்று அரும் - நீக்குதற்கரிய, சீற்றத்தோடு - கோபத்துடன், மடங்கல் அம் தவிசினின்றும் - அழகிய சிங்காதனத்திலிருந்து, பாறு இனம் சூழும் - பருந்துக் கூட்டங்கள் வட்டமிடுகின்ற, வை வாள் படையொடு - கூர்மைபொருந்திய வாளாயுதத்துடன், நிலத்தில் பாய்ந்தார் - பூமியிலே குதித்தார்கள், எ-று.

(க-து) அரசர்களெல்லாரும் கோபத்துடன் சிங்காதனம்விட்டு வாட்கையோடு நிலத்திற் குதித்தார்கள் என்பதாம்.

உயிர்போக்கலால் யமனையும், நீறுசெய்தலால் அக்கினியையும், வேகத்தோடு தள்ளுதலால் காற்றையும், கர்ச்சித்து நடுக்கஞ் செய்தலால் இடியேற்றையும், பெரும்பான்மைபற்றி அரசர்க்கு உவமையாக்கினார். (அ)

கொய்யுளைக்கலினப்பாய்மாகொடிஞ்சியந்தேரிற்பூட்டி
மையன்மாமதத்தயானைபருமித்துமறலியேனுஞ்
செய்யகண்புதைக்குஞ்சீற்றத்திறல்கெழுவயவர்சூழ
மொய்கழலரசரெல்லாமுருகுலாந்தும்பைவேய்ந்தார்.

(இ - ள்.) கொய் உளை - கொய்து கட்டிய பிடரிமயிரினையுடைய, கலினம் - கடிவாளம் பூண்ட, பாய் மா - தாவுகின்ற குதிரைகளை, கொடிஞ்சி அம் தேரில் பூட்டி - மேன்மொட்டையுடைய அழகிய இரதங்களில் பூட்டுதல் செய்து, மையல் - மயக்கம் பொருந்திய, மா மதத்த யானை - பெரிய மும்மதத்தையுமுடைய யானைகளை, பருமித்து - அலங்கரித்து, மறலியேனும் - கூற்றுவனாயினும், செய்ய கண் புதைக்கும் - சிவந்தகண்களை மூடிக்கொள்ளத்தக்க, சீற்றம் - கோபத்தையுடைய, திறல் கெழு - வலிமைபொருந்திய, வயவர் சூழ - காலாட்கள் தம்மைச் சூழ்ந்து வரும்படி, மொய் கழல் - நெருங்கிய வீரக்கழலையணிந்த, அரசர் எல்லாம் - அரசர்களெல்லாம், முருகு உலாம் - தேனொழுகுகின்ற, தும்பை வேய்ந்தார் - தும்பைமாலையைத் தரித்தார்கள், எ-று.

(க - து.) அரசர்கள் யாவரும் தும்பைமாலை தரித்தார்கள் என்பதாம்.

தும்பை வேய்ந்தார் — "செங்களத்தார்ப்பவர்க்கு இடைபைந்தும்பைத்தலைமலைந்தனறு, காரருகின்றதிருங்கொள்ளைவழுப்பபோயானை, சோர்குருதிப்பாரிலானைட்டபோர்க்குத்தந், தட்டுடைத்தும்பைமலைந் தானறுகளருமா, வெட்டுடைத்தாய் வெம்போர்த்து" இதனுரைநிக (க)

கொடுங்குணில் பொருத வெற்றிப் போர்ப்பறை குளிற வெம்போர்க் கடுந்திறல் வயவர் வில்நாண் புடைப் பொலி கடலின் ஆர்ப்பக், கடுங்கனல் குளிர வெய்தாச் சுடர் விழி பொறிகள் சிந்த, மடங்கலே றனைய வேந்தர் வாளம ரழுவத் துற்றார்.

(இ-ள்.) கொடு குணில் பொருது - வளைந்த குறுந்தடியால் அடிக்கப்பெற்ற, வெற்றி-சயத்தைத் தருகின்ற, போர் பறை குளிற - யுத்தமுரசு ஒலிக்க, வெம் போர் - வெவ்விய போர்செய்கின்ற, கடு திறல் வயவர் - மிகுந்த சௌரியத்தையுடைய படைவீரர்கள், வில் நாண் புடைப்பு ஒலி - வில்லின்நாணைத் தெறித்தலைச் செய்யும் குணத்தொனிகள், கடலின் ஆர்ப்ப - கடல்போல் ஒலிக்க, கடும் கனல் குளிர - கடுமையான நெருப்பும் குளிரும்படி, வெய்தா - வெப்பமாக, சுடர் விழி - சிவந்த கண்கள், பொறிகள் சிந்த - நெருப்புப் பொறிகளைச் சிதற, மடங்கல் ஏறு அனைய வேந்தர் - சிங்கவேற்றை யொத்த அரசர்கள், வாள் அமர் - வாட்போர் செய்கின்ற, அழுவம் - யுத்தகளத்தில், உற்றார் - அடைந்தார்கள், எ-று.

(க - து.) அரசர்கள் போர்க்களத்தில் வந்தார்கள் என்பதாம்.

அநேக ரிறக்கும்படிச் செய்யும் போரைக்குறித்துப் பறையை யடிக்கின்ற தாதலால், குணிலென்றது 'கொடுங்குணில்' என்றார். விழிகள் சிந்தும் பொறிகளுக்குச் சுடுங்கனலை ஒப்புச்சொன்னால் நெருப்புக்கு நீரை ஒப்புச்சொல்லுதல்போ லிருத்தலால் 'சுடுங்கனல் குளிர வெய்தாச் சுடாவிழி பொறிகள் சிந்த' என்றார். குளிர, தூப்ப, சிந்தவென்னும் பெயரெச்சம் வேந்தனென்னும் பெயரைக்கொண்டு முடிந்தது. (௪0)

[இதனால் நளனது செருக்குச் சொல்லப்படுகின்றது.]

மன்னவர் தருக்கும் வெம்போர் வயிரவாள் சுமந்த
திண்டோட், பொன்னகர்க் கிறைவன் சூழ்ந்த புணர்ப்பு
நாங் காண்டு மென்று, ஒன்னல ரகலமூழ்கி யூனசுவைத்
துதிர மாந்து, மின்னுறு பரிதி யொள்வேல் வேந்தர்கோன்
சிறிது நக்கான்.

(இ-ள்.) மன்னவர் தருக்கும் - அரசர்களுடைய கர்வமும், வெம் போர் - வெவ்விய போர்செய்கின்ற, வயிர வாள் சுமந்த - வச்சிராயுதத்தைச் சுமந்த, திண் தோள் - வலிமை பொருந்திய தோள்களையுடைய, பொன் நகர்க்கு இறைவன் - இந்திரனுடைய, சூழ்ந்த - எண்ணிய, புணர்ப்பும் - சூழ்ச்சியும், நாம் காண்டும் என்று - நாம் காண்போமென்று, ஒன்னலர் - பகைவர்களுடைய, அகலம் மூழ்கி - மார்பினிடத்திலே குளித்து, ஊன் சுவைத்து - மாமிசத்தைத் தின்று, உதிரம் மாந்தும் - புனலினைக் குடிக்கின்ற, மின் உறு - ஒளிவிடுகின்ற, பரிதி - சூரியனைப்போன்ற, ஒள் வேல் - ஒளிபொருந்திய வேற்படையையுடைய, வேந்தர் கோன் - நளமகாராஜன், சிறிது - கொஞ்சம், நக்கான் - சிரித்தான், எ-று.

(க-து) அரசர்கள் செருக்கையும், இந்திரன் செருக்கையுமறிவோமென்று நளன் சிரித்தானென்பதாம்.

இங்கே நளன் சிரித்தது வீரச்சிரிப்பாம். அது பரமசிவன் சிரித்துத் திரிபுரத்தை யெரித்தது போலிக. "ஒன்னலரைச் செற்றனவோக் குறு சிறுநகைசெய்தவன்" என்றார் பிறரும். (கக)

[இதனால் தமயந்தி வருந்துதல் சொல்லப்படுகின்றது.]

சிலைகுழைத் தரசர் நின்ற சீற்றமு நிணமும்வாய்ப் பில்
கிக், கொலைபழுத் தொழுகும் வேலான் குவவுத்தோட்
பணைப்பு நோக்கி, மலைமுகப் பூணி னுண்மற் றெண்கோ
லாய் விளையு மென்னு, முலைமுகட் டலங்கல் வேற்கண்
முத்துக வெருவி நின்றாள்.

(இ-ள்.) சிலை குழைத்து - வில்லைவளைத்து, அரசர் நின்ற சீற்றமும் - அரசர் நிற்கப்பெற்ற கோபமும், நிணம் - கொழுப்பை, வாய் பில்கி - வாயிற் சிதறி, கொலை பழுத்து - கொல்லுதல் மிகுந்து, ஒழு

ரும் - ஒழுகுகின்ற, வேலான் - வேற்படையையுடைய நளனது, குவவு தோள் - திரட்சி பொருந்திய தோள்களினுடைய, பணைப்பும் - பூரிப்பும், நோக்கி - பார்த்து, இலை முகம் பூணாள் - தமயந்தியானவள், என்கொல் ஆய் விளையும் என்று - யாதாய முடியுமோவென்று, முலை முகடு - ஸ்தனங்களினுடைய வுச்சியில், வேல் கண் - வேல்போன்ற கண்களினின்றும், முத்து உக - முத்துப்போல் நீர்துளிக்க, வெருவி நின்றாள் - பயந்து நின்றனள், எ-று. மற்று - அசைநிலை.

(க - து.) தமயந்தி நளனது புயங்களைப்பார்த்து இப்போ தெப்படி முடியுமோவென றஞ்சி யழுதாள் எனபதாம்.

அரசர் கோபத்தையும் நளனுடைய பூரிப்பையும் பார்த்த தமயந்தியானவள் அரசர்களுக்கு இதத்தைப்போ பகையாதற்கு நான் காரணமானேன் இனி யாதாகுமோ வென்று வெருவிநின்றன ளென்க. (கஉ)

[இதனால் நளன் தமயந்தியைத் தேற்றுதல் சொல்லப் படுகின்றது.]

செழுங்கடை மழைக்க ணலலாய் திண்சிலை குழைத்து
வெம்போர்க், கெழுந்தவிவ் வரசர் மார்பத் திழிபெருங்
குருதி மாந்தப், புழுங்குவெம பகழி மாரி பொழிந்தமர்
முருக்கி யாடி, யுழுந்துருள் பொழுதின் மீள்வ லுள்ளநீ
கவலேல் லென்றான்.

(இ - ள.) செழு கடை - செழுமையுள்ள கடையையுடைய, மழை கண் நல்லாய - குளிர்ச்சிபொருந்திய கண்களையுடைய தமயந்தியே!, திண் சிலை குழைத்து - வலிமையையுடைய வில்லை வளைத்து, வெம் போர்க்கு எழுந்த - வெவ்விய யுத்தத்திற்குப் புறப்பட்ட, இவ் அரசர் மார்பத்து - இந்த ராஜாக்களுடைய மார்பினிடத்திலே, இழி - இழிகின்ற, பெருங் குருதி மாந்த - அதிக வுதிரத்தை உண்ணும்படி, புழுங்கு - வெம்புகின்ற, வெம் பகழி மாரி பொழிந்து - வெவ்விய பாண மழையைச்சொரிந்து, அமர் - யுத்தத்திலே, முருக்கி - கொன்று, ஆடி - விளையாடி, உழுந்து உருள் பொழுதின் - ஒரு உழுந்துருளுகிற காலத்திலே, மீள்வல் - திரும்புவேன், நீ உள்ளம் கவலல் - நீ மனதினிடத்துக் கவலைப்படவேண்டாம், எ-று.

(க - து) நளன் தமயந்திக்கு அஞ்சாதேயென்று சொன்னான் என்பதாம்.

தமயந்தி ஆற்றாமையையுங் கவலைப்படுதலையு நோக்கி விரைவு தோன்ற 'உழுந்துருள் பொழுதின் மீள்வல்' என்றான். உழுந்துருள் பொழுதிலென உலக வழக்கச்சொல்லைத் தழுவிச் சொல்லுதலால் உலகவழக்க நவிற்சியணி. (கங)

[இதனால் நளனுக்கு உதவியின்றிய பராக்கிரமஞ் சொல்லப்படுகின்றது.]

விளைசமர்க்கெழுந்துநின்றவீமனையினிதினோக்கிக்
களிமதக்களிறுந்தேருங்களப்படுத்திகலினேற்ற

வுளைவயப்புரவித்தானையொன்னலர்ச்செகுப்பனீபோய்
நளிகடற்றானைசூழநங்கையைக்காத்தியென்றான்.

(இ - ள்.) வினை - உண்டாகின்ற, சமாக்கு - போரசெய்தற்கு, எழுந்து நின்ற - புறப்பட்டு நின்ற, வீமனை - வீமராஜனை, இனிதின நோக்கி - இனிமையினுல் பாாத்து, களி மதம் களிறும் - களிப்பையு டைய மதயானையையும், தேரும - தேரையும், களப்படுத்து - யுத்த களத்தி லழித்து, இகலின் ஏற்ற - பகையினுல் எதிாத்த, உளை - புறம யிரினையுடைய, வயம் புரவி - வலிமைபெற்ற குதிரைகளையும், தானை - சேனையையுடைய, ஒன்னலா செகுப்பல் - சத்துருக்களைக் கொல் லுவேன், நீ போய் - நீ சென்று, நளி கடல் தானை சூழ - குளிாசசி பொருந்திய கடல்போனற சேனை சூழ்ந்திருக்க, நங்கையை - தமயந் தியை, காத்தி யென்றான் - காப்பாயென்றான், எ-று.

(க - து) நளன் வீமனைக்குறித்துத் தமயந்தியைக் காத்திரும் சத்துருவைச் செயித்து வருவேன் என்றான், என்பதாம்.

தமயந்தி நமக்கு மாலையிட்ட பின்பு அவளை விரும்பி நம்மோ டெதிாக்கும் அரசா நாம் போாசெய்யும்போது அவளைக் கரந்து வெளவ வரினும் வருவரென்பது பற்றியும், தன் பொருட்டு வந்தபோனா மற றொருவாபால் விடில் தனகிழிவென்பது பற்றியும், அவட்குத் தந்தை யாகிய வீமனை அவளைக காக்கும்படி வைத்தன னென்க. (கச)

[இதனுல் நளன் போாமுயற்சி செய்தல் சொல்லப் படுகின்றது.]

உடல்சின வுருமே றன்ன வயவரை யொருங்கு நோக கிக், கொடியணி கொடிஞ்சித் திண்டேர் கொய்யுளைக கலினப் பாய்மா, கடலமடை திறந்த தென்னக கரடமூற் றிருந்து பாயும், படுமதக் களிநல யானை பண்ணுறுத் திடுமி னென்றான்.

(இ - ள்.) உடல் - பொருகின்ற, சினம் - கோபத்தையுடைய, உரும் ஏறு என்ன - இடியேற்றை யொதத, வயவரை - சேவகரை, ஒருங்கு நோக்கி - ஒரேதரம் பாாதது, கொடி அணி - கொடிகளை யணிந்த, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, திண் தோ - வலிமை பொருந்திய தேரையும், கொய் உளை - கொயதுகட்டிய புறமயிரினை யுடைய, கலினம் பாய்மா - கடிவாளம்பூண்ட குதிரைகளையும், கடல் - கடலானது, மடை திறந்தது என்ன - மடை திறந்ததென்று சொல்லும் படி, கரடம் - சுவடேட, ஊற்றிருந்து பாயும - ஊற்றிருந்து பாய்கி ன்ற, படு மதம் - மதம்படுகின்ற, களி நல் யானை - களிப்பையுடைய நல்லயானைகளையும், பண் உறுத்திடுமின் என்றான் - அலங்கரியுங்க ளென்றான், எ-று.

(க - து.) நளன் வீரரை நோக்கித் தோ குதிரை யானை இவை களை யலங்கரிக்கச் சொன்னுன் என்பதாம்.

தனித்தனி உத்தரவுபன்னிற் கால நீட்டிக்கு மென்பதுபற்றி விரைந்து கூறிலமைதோன்ற வயவரை யொருங்குநோக்கித் தோ, பாய்மா, யானை, பண்ணுறுத்திடுமி னென்றான். (கரு)

[இதனால் நளன் போர்க்கோலங் கொள்ளுதல் சொல்லப்படுகின்றது.]

**நீங்கருங்கவசமார்த்துநேரலர்மௌலிதேய்க்கும்**
**பூங்கழனரலவீக்கிப்போரெனிற்பொருப்புமஞ்ச**
**வீங்கியகுவவுத்தோளில்வெங்கணைப்புட்டிறுங்கி**
**வாங்குவிற்றடக்கையேந்திமறலிகண்புதைப்பநின்றான்.**

(இ - ள்.) நீங்கு அரும் - பிரிதற்கரிய, கவசம் ஆர்த்து - கவசங் கட்டி, நேரலர் மௌலி தேய்க்கும் - சத்துருக்களுடைய முடியைத் தேய்க்கின்ற, பூங்கழல் - வீரக்கழலை, நரல வீக்கி - ஒலிக்கும்படி கட்டி, போர் எனில் - யுத்தமென்றால், பொருப்பும் அஞ்ச - மலையுமஞ்சும்படி, வீங்கிய - பருத்த, குவவு தோளில் - திரட்சிபொருந்திய புயத்தின்கண், வெம் கணை புட்டில் தாங்கி - வெவ்விய பாணங்களை யுடைய அம்புக்கூட்டைத் தாங்கி, வாங்கு வில் - வளைக்கப்பட்ட வில்லை, தடம் கை ஏந்தி - விசாலம்பொருந்திய கையிலேந்தி, மறலி - யமனும், கண் புதைப்ப - கண்களை மூடிக்கொள்ளும்படி, நின்றான் - நின்றனன், எ-று.

(க - து.) நளன் கவசங்கட்டி வீரக்கழலணிந்து அம்புக் கூட டைத்தாங்கி வில்லேந்தி நின்றான், என்பதாம்.

நளன் கவசமார்த்துக் கழல்வீக்கிப் புட்டில் தாங்கி வில்லேந்தி நின்றனனெனக் கூட்டுக. சத்துருக்கள் பணிந்து கிடத்தலால் 'நேரலர் மௌலி தேய்க்கும் பூங்கழல்' என்றார். மறலிகண்புதைப்ப என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்குநின்றது. (கசா)

[இதனால் நளன் தேரேறுதல் சொல்லப்படுகின்றது.]

**பொருசமர்தொடங்கிநின்றபுரவலர்மடவார்செய்ய**
**வரிநெடுங்கண்ணுந்தோளும்வலந்துடித்தின்னல்காட்டக்**
**குருமணிகுயிற்றுஞ்செம்பொற்கோடுயர்கொடிஞ்சித்தேரி**
**னருவரையிவருஞ்சீற்றமடங்கலேறென்னவார்ந்தான்.**

(இ - ள்.) பொரு சமர் - பொருகின்ற யுத்தத்தை, தொடங்கி நின்ற - ஆரம்பித்து நின்ற, புரவலர் - அரசர்களுடைய, மடவார் - மாதரது, செய்ய - சிவந்த, வரி நெடு கண்ணும் - அரிபரந்த நெடிய கண்களும், தோளும் - தோள்களும், வலம் துடித்து - வலப்பக்கந் துடித்து, இன்னல் காட்ட - துன்பக்குறிகாட்ட, குரு மணி குயிற்றும் - நிறம் பொருந்திய மணியால் பதிக்கப்பட்ட, செம் பொன் - சிவந்த பொன்னாற்செய்த, கோடு உயர் - சிகரத்தினாலுயர்ந்த, கொடிஞ்சி தேரின் - மேன்மொட்டையுடைய தேரின்மேல், அரு வரை - அரிய மலையின்மேல், இவரும் - ஏறுகின்ற, சீற்றம் - கோபத்தையுடைய, மடங்கல் ஏறு என்ன - ஆண்சிங்கம்போல், ஆர்ந்தான் - ஏறினன், எ-று.

(க - து.) நளன் தேரோறினான் என்பதாம்.

மாதர்க்குத் துன்பம் வருமானால் வலத்தோள்களும் வலக்கண்களும் துடிக்குமென்பது துடிநூலிற் காண்க. (கஎ)

[இதனால் நளன் சங்கத்தொனி செய்தல் சொல்லப்படுகின்றது.]

**ஊன்பயில்வடிவேலேந்தியுடன்றுவெம்போரிலேற்ற**
**தேன்பயிறெரியல்வேந்தர்நடுக்குறத்திசையினின்ற**
**கூன்பிறைக்கோட்டுநால்வாய்க்குஞ்சரம்வெருவியோட**
**வான்பொதிரெறியத்தெய்வவலம்புரிமுழக்கியிட்டான்.**

(இ - ள்.) ஊன் பயில் வடி வேல் ஏந்தி - மாமிசம் தங்கிய கூரிய வேற்படையைத் தாங்கி, உடன்று - கோபித்து, வெம் போரில் - வெவ்விய யுத்தத்தில், ஏற்ற - எதிர்த்த, தேன் பயில் - தேனை தங்குகின்ற, தெரியல் - மாலையையுடைய, வேந்தர் - அரசர்கள், நடுக்கு உற - நடுக்கமடைய, திசையில் நின்ற - எட்டுத்திசையிலும் நின்ற, கூன் பிறை கோடு - வளைவுபொருந்திய பிறையைப்போன்ற கொம்பினையும், நால் வாய் - தொங்குகின்ற வாயினையுமுடைய, குஞ்சரம் வெருவி ஓட - யானைகள் பயந்தோடிட, வான - ஆகாயம், பொதிர் எறிய - நடுக்கமடைய, தெய்வ வலம்புரி - தெய்வசங்கம், முழக்கி இட்டான் - தொனிசெய்தான், எ-று.

(க - து.) நளன் சங்கத்தொனி செய்தான் என்பதாம்.

சங்கத்தொனியினால் தான் எது எது எப்படி ஆகவேண்டுமென்று நினைக்கின்றானோ அது அது அப்படியாகத் தொனித்தலால் 'தெய்வவலம்புரி' என்றார். (கஅ)

[இதனால் இந்திரனடுக்கஞ் சொல்லப்படுகின்றது.]

**கொன்னவில்பரிதிவைவாட்கூற்றுயிருண்ணுங்கூற்றின்**
**மின்னகுவரிவிலேந்தும்விடலையைநோக்கியேற்ற**
**மன்னவரளவின்றின்னோன்மணிவரைத்திணிதோள்வீக்க**
**மென்னினைந்தென்செய்தோமென்றிந்திரனடுங்கலுற்றான்.**

(இ - ள்.) கொல் நவில் - கொலைத்தொழிலைச் சொல்லப்பட்ட, பரிதி - சூரியன்போல் ஒளி வீசுகின்ற, வை வாள் - கூர்மைபொருந்திய வாட்படையையும், கூற்று உயிர் - யமனுடைய உயிரை, உண்ணும் - உண்ணப்பட்ட, கூற்றின் - ஒரு யமனைப்போல், மின் நகு - ஒளியை வீசுகின்ற, வரி வில் ஏந்தும் - நெடிய வில்லையுமேந்திய, விடலையை நோக்கி - நளமகாராஜனைப் பார்த்து, ஏற்ற - எதிர்த்த, மன்னவர் - அரசர்கள், அளவின்று - அளவுடையதன்று, இன்னோன் - இவ்வரசனுடைய, மணி வரை - அழகுபொருந்திய மலைபோன்ற, திணி தோள் - வலிமைபெற்ற புயங்களினுடைய, வீக்கம் - பூரிப்பு, (ஆதலினால்) என் நினைந்து - யாதை நினைந்து, என் செய்தோம் என்று - யாதுசெய்தோமென்று, இந்திரன் - இந்திரனானவன், நடுங்கலுற்றான் - நடுங்கினான், எ-று.

(க - து.) களனை இந்திரன்கண்டு நடுங்கினன் என்பதாம்.

நாம் பொறுமையால் மூட்டிவிட்ட சண்டையிற் கொலைப்பழி வந்து, அதிலும் நமக்கு அவமானமே வருதற்கு ஐயமில்லையென்று இந்திரன் நடுங்கலுற்று னென்க. (௧௧)

[இனி யிரண்டுபாட்டாம் சேனைகளின் ஆரவாரஞ் சொல்லப்படுகின்றது.]

கார்த்திரள் முழக்க மென்னக் கனைகுரன் முரச மார்த்த, தூர்த்தன கடல்க ளேழுந் துரகதக் குரத்தின் றூளி, போர்த்தன விசும்பு பைம்பொற் கொடியொடு குடையு மோங்கி, யார்த்தன வுவகை பொங்கித் துணங்கையிட் டலகை யீட்டம்.

(இ - ள்.) கார் திரள் முழக்கம் என்ன - மேகங்களினுடைய சத்தம்போல், கனை குரல் - முழங்குகின்ற குரலையுடைய, முரசம் ஆர்த்த - பேரிகைகள் ஒலித்தன; கடல்கள் ஏழும் - ஏழு சமுத்திரங் களையும், துரகதம் - குதிரைகளினுடைய, குரத்தின் தூளி - குளம்பி னின்று மெழுகின்ற புழுதிகள், தூர்த்தன-தூர்த்துவிட்டன, விசும்பு ஆகாயத்தை, பைம்பொன் கொடியொடு-பசிய பொற்கொடிகளோடு, குடையும் - குடைகளும், ஓங்கி-உயர்ந்து, போர்த்தன - மூடிக்கொண் டன; அலகை ஈட்டம் - பேய்க்கூட்டங்கள், உவகை பொங்கி - மகிழ்ச்சிமிகுந்து, துணங்கையிட்டு - கூத்தாடி, ஆர்த்தன - சத்தித் தன, எ - று. துணங்கை - இருகை முடக்கிப் பழுப்புடையொத்தி யடாடல்.

(க - து.) முரசங்கள் சத்தித்தன, குதிரைப்புழுதிகள் கடலைத் தூர்த்தன, குடைகள் கொடிகள் ஆகாயத்தை மூடின, பேய்கள் சத்தித்தன எனபதாம்.

காரத்திரள் முழக்கமென்ன முரசமார்த்த எனலால் அநேக முரசங்களென்றும், குரத்தின்றூளி கடல்களேழுந் தூர்த்தனவென லால் அநேகங் குதிரைகளென்றும் விசும்பைப் போர்த்தனவெனலால் அநேகங் குடைகள் கொடிகளென்றும், துணங்கையிட்டார்த்தன வெ னலால் மாமிச முண்ணவந்த பேய்களநேகமென்றும் பெறப்பட்டது.

கூற்றெனவுரறியார்த்துக்கொல்சினவரியேறென்ன
வேற்றவர்வெருவநெய்த்தோரிடையறுதொழுகுங்கோட்டு
சீற்றமும்மதத்தினூழித்தீயையுமவிக்கும்வேகக் [ச்
காற்றுறழ்களிறுதூண்டிக்கட்கனல்கதுவச்செல்வார்.

(இ - ள்.) கூற்று என - யமனைப்போல், உரறி - ஆரவாரித்து, கொல் - கொல்கின்ற, சினம் - கோபத்தையுடைய, அரி ஏறு என்ன ஆர்த்து - சிங்கவேற்றைப்போல் காச்சித்து, ஏற்றவர் - எதிர்த்தவர் கள், வெருவ - அஞ்ச, நெய்த்தோர் - உதிரமானது, இடையறுது ஒழு கும் - நீங்காதொழுகப்பெற்ற, கோடு - கொம்பையும், சீற்றம் -

கோபத்தையுமுடைய, மும்மதத்தின் - மும்மதங்களால், ஊழித்தீயையும் - வடவாமுகாக்கினியையும், அவிக்கும் - அவிக்கப்பட்ட, வேகக்காற்று உறழ் - சண்டமாருதத்தையொத்த, களிறு தூண்டி - யானையைச்செலுத்தி, கண் - விழிகளில், கனல் கதுவ - நெருப்புப்பற்ற, செல்வார் - செல்வார்கள், எ-று.

(க - து.) வீரர்கள் கோபத்துடனே போவார்கள் என்பதாம்.

வீரரைத் தன் கோட்டாற் குத்திக் கொல்லுதலால் யானைக் கொம்பு நெய்த்தோரிடையறு தொழுகுங் கோடெனப்பட்டது. "வேலாண்முகத்தகளிறு" என்றார் பிறரும். (உக)

[இதுமுதற் பத்துப்பாட்டால் இருதிறச் சேனைகளும் பொருதல் சொல்லப்படுகின்றது.]

ஒளளழல்கண்ணிற்காலவுயிர்படலியுண்ணுமகூற்றின்வ
வள்ளுறைவடிவாளேந்திவாய்மடித்தெயிறுதின்று
கள்ளவிழ்தும்பைசூடிக்கழுதுகைகொட்டியார்ப்ப
வள்ளிலைவயிரப்பைம்பூணரசரோடரசரேற்றார்.

(இ - ள்.) ஒள் அழல் - பிரகாசம்பொருந்திய நெருப்பு, கண்ணில் கால - கண்களினின்றும் கொடப்புளிக்க, உயிர் உடலி - உயிராகிய உணவை, உண்ணும் - உண்ணுகின்ற, கூற்றின் - யமன்போல், வள் உறை - நெருங்கிய வுறையையுடைய, வடி வாள் ஏந்தி - கூரியவாளையேந்திக்கொண்டு, வாய் மடித்து - உதட்டை மடித்துக்கொண்டு, எயிறு தின்று - பல்லைக்கடித்த, கள் அவிழ் தும்பை சூடி - தேனொழுகுகின்ற தும்பைமாலையைத்தரித்து, (இதுகண்டு) கழுது - பேய்கள், கை கொட்டி ஆர்ப்ப - கைகளைக்கொட்டிக் கூச்சலிக்கும்படி, அள் இலை - அள்ளிக்கொள்ளும் இலைபோன்ற, வயிரம் பைம்பூண் - பசிய பொன்னிற்பதித்த வச்சிராபரணத்தையுடைய, அரசரோடு - அரசருடன், அரசர் - அரசர்கள், ஏற்றார் - எதிர்த்தார்கள், எ-று.

(க - து.) அரசர்களோடு அரசர்களெதிர்த்தார்கள் என்பதாம்.

அநேகரைச் சேதித்து உயிரை யுண்ணுதலால் வாட்படைக்கு யமன் உவமை சொல்லப்பட்டது வாய் மடித்தலும் பற்கடித்தலும் சினக்குறிப்பை வெளிப்படுத்தி நின்றன. அதிரப் பொருதற்குவந்த குறிப்புத்தோன்ற 'கள்ளவிழ் தும்பைசூடி' என்றார். நெடுங்காலம் போரில்லாமையால் உணவுகள் கிடையாதிருந்த வருத்தம் இப்பொழுது கெடுமென்னும் உவகை மிகுதியால் 'கழுதுகை கொட்டியார்ப்ப' என்றார். போரில்லாமை இந்திரப்படலத்தில் ஆங்கவண்மேலென்னும் பதினாறும் பாட்டா லறிக. தன்மை நவிற்சியணி. (உஉ)

மண்ணிடைத்திரிலபோலமாதிரங்கடப்பதாவி
விண்ணிடைப்பறப்பவேழமருப்பிடைமிதித்துமீள்வ
கண்ணிமைபொருந்திற்காணக்கடுப்பினகவினப்பாய்மா
வெண்ணிலவயலர்தூண்டியெதிரொதிர்மலைந்துநிற்பார்.

(இ - ள்.) மண்ணிடை - பூமியின்கண்ணே, திரிவ போல - திரிவனபோல, மாதிரம் கடப்ப - திசைகளைத் தாண்டுவன; தாவி - பாய்ந்து, விண்ணிடை - ஆகாயத்திலே, பறப்ப - பறப்பன, வேழ மருப்பிடை - யானைக்கொம்பின்கண், மிதித்து மீள்வ - மிதித்துத் திரும்புவன; கண் இமை பொருந்தில் - கண்கள் இமை கொட்டுமானல், காணு கடுப்பின - காணக்கூடாத வேகத்தையுடையன; கலினம் பாயமா - (இத்தன்மையுள்ள) கடிவாளம்பூண்ட தாவுகின்ற குதிரைகள், எண்ணில - அளவற்றவைகளை, வயவர் தூண்டி - காலாள்கள் செலுத்தி, எதிர் எதிர் - நேர்நேராக, மலைந்து - போர்செய்து, நிற்பார் - நிற்பார்கள், எ-று.

(க - து.) வீரர்கள் குதிரையேறிப் போர்செய்தார்கள் என்பதாம்.

கடப்ப, பறப்ப, மீள்வ வென்னும் கடுப்பினவாகிய பாய்மாவெனக்கூட்டுக. வேழமருப்பு இங்கே வெள்ளையானைக் கொம்பெனக் கொள்க. இதுவும் அவ்வணி. (உரு)

சூழ்சுடர்வயிரவாளாலிந்திரன்றுமிக்குமுன்னம்
பாழியங்குடுமிக்குன்றஞ்சிறகொடுபறப்பவென்னக்
கேழ்கிளாபரிதியேய்க்குங்கிளர்மணிக்கொடிஞ்சிமான்றே
ராழியோடாழிதாக்கவருஞ்சமர்தொடங்கிநிற்பார்.

(இ - ள்.) சூழ் சுடர் வயிர வாளால் - ஒளி சூழ்கின்ற வச்சிராயுதத்தால், இந்திரன் துமிக்கு முன்னம் - இந்திரன் துணிப்பதற்கு முன்னே, பாழி - அகன்ற, குடுமி - சிகரங்களையுடைய, குன்றம் - மலைகளானவை, சிறகொடு - இறகுடனே, பறப்ப என்ன - பறப்பனபோல், கேழ் கிளர் பரிதி ஏய்க்கும் - செந்நிறமிகுந்த சூரியனையொத்த, கிளர் மணி - ஒளிவிளங்கு மணிகளழுத்திய, கொடிஞ்சி - மேன்மொட்டையுடைய, மான் தேர் - குதிரைகட்டிய தேர்கள், ஆழியோடு ஆழி தாக்க - உருளைகளோ டுருளைகள் முட்ட, அரு சமர் - அரியயுத்தத்தை, தொடங்கி - ஆரம்பித்து, நிற்பார் - நிற்பார்கள், எ-று.

(க - து.) வீரர்கள் தேரேறிப் போர்செய்து நிற்பார்கள் என்பதாம்.

ஒவ்வொரு தேர், ஒவ்வொரு மலைபோல் திரிதலால் அவைகட்குச் சிறகுடையமலை யுவமை சொல்லப்பட்டன. அநேகந் தேராதலால் நெருக்கம்பற்றி 'ஆழியோடாழிதாக்க' என்றார். அரசரோடரச ரெதிர்த்தலால் ஆழியோடாழி தாக்கின வென்க. (உசு)

மொட்டிளமுலைகள்பாய்ந்தமருமத்தின்மூரியானைக்
கோட்டிணையுழக்கவெம்போர்க்கோளரியென்னச்சீறித்
தோட்டிணைகொட்டியார்த்துச்சுடர்நெடுங்குருதிவாளாற்
பூட்டியவோடைநெற்றிமத்தகம்போழ்ந்திட்டாரே.

(இ - ள்.) மோடு இள முலை பாய்ந்த - உயர்ச்சிபொருந்திய இளமைபொருந்திய ஸ்தனங்கள் பாயப்பெற்ற, மருமத்தின் - மார்பின்கண், மூரி - வலிமையையுடைய, யானை கோடு இணை - யானையினிரண்டு கொம்புகளும், உழக்க - குத்திக்கலக்க, வெம் போர் - வெவ்விய போர்செய்கின்ற, கோளரி என்ன சீறி - சிங்கவேற்றைப்போல் கோபித்து, தோள் துணை கொட்டி - இரண்டு தோள்களையும் தட்டி, ஆர்த்து - கர்ச்சித்து, சுடர் - ஒளியையுடைய, நெடு - நெடிய, குருதி வாளால் - உதிரந்தோய்ந்த வாட்படையால், ஓடை பூட்டிய - முகபடாத்தையணிந்த, நெற்றி - நெற்றியையுடைய, மத்தகம் - தலையை, போழ்ந்திட்டார் - பிளந்தார்கள், எ-று.

(க - து.) அரசர்கள் யானைகளோடு போர்செய்தார்கள் என்பதாம்.

தமது மார்பிற் குத்திய யானைக்குச் சிங்கம் வைரியாதலால், அரசனைக் 'கோளரியென்னச் சீறி' என்றார். அரசர் சீறி ஆர்த்து வாளால் மத்தகம் போழ்ந்திட்டாரென்க. (௨௫)

கொலைத்தடங் கண்ணி னல்லார் குறங்கின்மேற் குற
ங்கு சேர்த்தி, முலைத்தட நெருங்கப் புல்லிக் கண்டுயின்
முழவுத் தோளா, ரலைத்துமிழ் குருதி பொங்க வற்றுவீழ்
புழைக்கை யேற்றி, மலைக்கடாக் களிறு புல்லி மண்ணி
டைத் துஞ்சுகின்றார்.

(இ - ள்.) கொலை - கொலைசெய்கின்ற, தடம் கண்ணின் - விசாலம் பொருந்திய கண்களையுடைய, நல்லார் குறங்கின்மேல் - மாதர்களுடைய தொடைகளின்மேல், குறங்கு சேர்த்தி - தொடைகளைச் சேர்த்துக்கொண்டு, முலை தடம் - ஸ்தனதடங்களை, நெருங்க புல்லி - அழுந்தத் தழுவிக்கொண்டு, கண் துயில் - நித்திரைசெய்கின்ற, முழவு தோளார் - மத்தளம்போன்ற தோள்களையுடைய அரசர்கள், அலைத்து உமிழ் - அலைத்து உமிழுகின்ற, குருதி பொங்க - உதிரம் ஒழுக, அற்று வீழ் - அறுபட்டுவீழ்ந்த, புழை கை ஏற்றி - துதிக்கையின்மேல் தொடையை ஏற்றிக்கொண்டு, மலை - மலையைப்போன்ற, கடா களிறு புல்லி - மதயானையைத் தழுவிக்கொண்டு, மண் இடை - பூமியின்மேல், துஞ்சுகின்றார் - நித்திரைசெய்கின்றார்கள், எ-று.

(க - து.) அரசர்கள் போர்க்களத்தில் வீழ்ந்தார்கள் என்பதாம்.

மாதர் தொடைக்குத் துதிக்கையும், முலைக்கு யானையும், உவமையாதல்பற்றி அரசர் இறக்கும் முன்பு மாதரோடு துயிலுதல்போல திருந்தன ரென்க. (௨௬)

கூற்றொடுங் கொம்மை கொட்டிக் குனிக்கும்வா ளுழ
வர் வேகக், காற்றினிற் பெண்ணை யீன்ற கருங்கனி யுகுவ
தேபோல், வேற்றிறல் வயவர் சென்னி வீழ்த்துவெங் கரி
க ளூறிச், சீற்றவெம் மடங்க லேற்றிற் செருக்களத்
துழக்கி யிட்டார்.

(இ - ள்.) கூற்றொடும் - யமனுடனே, கொம்மை கொட்டி - கை தட்டிக்கொண்டு, குனிக்கும் - கூத்தாடுகின்ற, வாள் உழவர் - வாட்படையையுடைய வீரர்கள், வேகம் காற்றினில் - சண்டமாருதத்தில், பெண்ணை ஈன்ற - பனைமரந்தந்த, கரு கனி உகுவதேபோல் - கரிய பழம் உதிர்வதுபோல், வேல் திறல் - வேற்படையிற் றிறலையுடைய, வயவர் - படைவீரர்களுடைய, சென்னி வீழ்த்து - தலைகளைத் தள்ளி, வெம் கரிகள் ஊறி - வெவ்விய யானைகளைக்கொன்று, ஏற்றம் - மேம்பாட்டையுடைய, வெம் மடங்கலேற்றில் - வெவ்விய சிங்கவேற்றைப்போல், செரு களத்து - யுத்தகளத்தில், உழக்கியிட்டார் - கலக்கினார்கள்,

(க - து.) வீரர்கள் வீரர்களையும் யானைகளையும் கொன்றார்கள் என்பதாம்.

கொல்லுதலில் அவனோடொத்தலால் அவனுரிமை தோன்றக் 'கூற்றொடுங் கொம்மை கொட்டி' என்றார். கொம்மை கொட்டலாவது அகங்கைவிரித்துக் கொட்டுதலாம். மயிருள்ள தலையாதலால் வயவர் சென்னிக்குப் பனையின் கருங்கனி உவமை சொல்லப்பட்டது. மடங்கலேற்றி லுழக்கியிட்டாரெனலால் உவமையணி. (உஎ)

வயவரோரிருவர்தம்மில்வாளமர்விளைத்தலோடு
முயிர்துறந்தவற்குமாலைபுனைதுமென்றும்பர்போந்த
கயமலர்க்கண்ணிகாணக்காளையர்மாய்ந்துமண்ணிற்
புயலுறழ்கூந்தற்காகவானினும்போர்செய்கின்றார்.

(இ - ள்.) வயவர் - படைவீரர்கள், ஓர் இருவர் - இரண்டுபேர், தம்மில் - தமக்குள்ளே, வாள் அமர் விளைத்தலோடும் - வாட்போர்செய்தவளவில், உயிர் துறந்தவற்கு - இறந்தவர்களில் எவனுக்கு, மாலை புனைதும் என்று - மாலை தரிப்போமென்று, உம்பர் போந்த - சுவர்க்கத்தினின்றும் வந்த, கயம் மலர் கண்ணி காண - தடாகத்திற் பூத்த மலரையொத்த கண்ணையுடைய அரம்பையானவள் காணும்படி, காளையர் - வீரர்கள், மாய்ந்து - (ஒருசேர) இறந்து, மண்ணில் - பூமியின்மேல், புயல் உறழ் - மேகத்தையொத்த, கூந்தற்கு ஆக - கூந்தலையுடைய பெண்ணின்பொருட்டாக, வானினும் - ஆகாயத்தின்கண்ணும், போர் செய்கின்றார் - யுத்தத்தைச் செய்கிறார்கள், எ-று,

(க - து.) வீரர்களிருவர் போர்செய்கிறார் என்பதாம்.

வானினுமென்பதில் உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மையாம். மண்ணில் புயலுறழ் கூந்தல் - தமயந்தி, வானில் புயலுறழ் கூந்தல் - அரம்பை யெனக் கொள்க. இம்மையில் ஒருபெண்ணைப் பலர் விரும்பிப் போர்செய்வதுபோல் மறுமையிலும் ஓரரம்பையை விரும்பியவர் பலராதலால் பொருதனரென்க. எங்கணும் ஒருத்தியைப் பலர் விரும்பிற் போரேமுடியும் என்பது கருத்து. யாங்கும் போர்செய்கின்றாரெனலால் தொல்லுருப்பேறலணி. (உஅ)

குருதிகொப்புளிக்கும்வேலான்குங்குமவளாறமூழ்கு
மருமத்தில்வாளிமூழ்கமயங்கினனென்றெனிதலோடும்

விரைமொய்த்தகூந்தறுழவிண்ணினின்றூர்வத்தோடு
முருவத்தார்புனையவந்தவொண்டொடிமயங்கினின்றாள்.

(இ-ள்.) குருதி கொப்புளிக்கும் வேலான் - உதிரத்தை யுமிழ்கின்ற வேற்படையையுடைய அரசனானவன், குங்கும அளறு மூழ்கும் - குங்குமச்சேற்றில் முழுகப்பெற்று, மருமத்தில் - மார்பினிடத்தில், வாளி மூழ்க - பாணங்கள் புதைய, மயங்கினன் - மயக்கங்கொண்டவனாகி, தெளிதலோடும் - தெளிந்தவளவில், விரை மொய்த்த கூந்தல் தாழ - வாசனையையுடைய குழலானது அவிழ, விண்ணினின்று - ஆகாயத்தினின்றும், ஆர்வத்தோடும் - ஆசையுடன், உருவம் தார் புனைய வந்த - அழகியமாலையை தரிக்கவந்த, ஒள் தொடி - அரமங்கையானவள், மயங்கினின்றாள் - மயங்கினின்றனள், எ-று.

(க-து) நளன் பாணங்கள்பட்டு மயங்கினவனாகத் தெளிந்து நிற்க மாலைதரிக்கவந்த அரம்பையானவள் மயங்கினின்றாள் என்பதாம். கூந்த லவிழவென்றமையால் சிறிட்பின்றி விரைந்து வந்தன ளென்க. இவன் உயிர் மனிததேகத்தைவிட்டு நீங்குமுன் மாலைசூட்டத் தெய்வமங்கைவந்து காத்திருந்தாளாகல் வீரவானிடம் பெறுதற்குப் போரின்மிக்க திலலையெனபது கருதது. (௨௯)

கான்படுமுருவப்பைந்தார்விதர்ப்பர்கோன்கன்னிவேற்க
ணூன்படாதுளையக்குத்தியுள்ளுயிர்பருகலாற்றேம்
வான்படாமின்னினேச்சும்வாளினான்மாய்துமென்னுத்
தேன்படுதெரியலவேந்தாசெருமலைந்தாவிநீத்தார்.

(இ-ள்.) கான் படும் - வாசனையுண்டாகிய, உருவம் - அழகிய, பைந்தார் - பசியமாலையையுடைய, விதர்ப்பர் கோன் - வீமனுடைய, கன்னி - தமயந்தியினது, வேல் கண் - வேல்போன்ற கண்களானவை, ஊன் படாது - மாமிசம் படாமல், உளைய - வருந்தும்படி, குத்தி - குத்தி, உள் உயிர் - உள்ளாவியை, பருகல் - உண்பதை, ஆற்றேம் - பொறுக்க மாட்டேம்; வான் படா - மேகத்திற் றோன்றாத, மின்னின் - மின்னலைப்போல்; ஒச்சும் - எறிகின்ற, வாளின் - வாட்படையால், மாய்தும் என்னா - மாய்வேமென்று, தேன் படு தெரியல் வேந்தா - தேனைப்பொழிகின்ற மலர்மாலையையணிந்த அரசர்கள், செரு மலைந்து - போர்புரிந்து, ஆவி - உயிரை, நீத்தார் - நீக்கினார்கள், எ-று.

(க-து.) அரசர்கள் தமயந்தி கட்படைக்கஞ்சி வாட்படையா லிறந்தார்கள் என்பதாம்.

மாதர்விழி வாளினுங் கொடியதென்பது, "வெய்யகூற்றுருத் தெறு வேல்விலக்கிலு, மெய்துழும் வினைதொட வொண்ணிமாற்றினும், தையலார் முழுமதி முகத்திற்றங்கிய, மையகட் காலவேன் மாற்ற லாகுமே." இதனாலறிக. (௩௰)

முழவுறழ்திணிதோள்வீரர்முழுமெயுமிரும்புண்மேய
விழிபெருங்குருதியாடியிளங்கதிர்ப்பரிதியேய்ப்ப

வழிகவுட்கடாத்தநால்வாயரசுவாவெருத்திற்றோன்றிப்
பொழிகணைமாரிசிந்தியகலிருவிசும்புபோர்த்தார்.

(இ - ள்.) முழவு உறழ் - மத்தளத்தை யொத்த, திணிதோள் வீரா - வலிமை பொருந்திய புயத்தையுடைய படைவீரர், முழு மெய்யும் - தேமுகமுழுதும், இரு புண் தோய - பெரியபுண்ணிற் பொருந்திய, இழி பெரு குருதி ஆடி - ஒழுகுகின்ற பெரிய உதிரத்தில் மூழ்கி, இள கதிர் பரிதி ஏய்ப்ப - இளமைபொருந்திய கிரணத்தையுடைய சூரியனை யொப்ப, கவுள் - கவுளினிடத்திலே, அழி - வீழுகின்ற, கடாத்த-மதத்தை யுடைய, நால் வாய்-தொங்குகின்ற வாயையுடைய, அரசு உவா - அரசயானையின், எருத்தில் தோன்றி - பிடரியின்மேல் ஏறி, பொழி - பொழிகின்ற, கணை மாரி சிந்தி - பாணவருஷங்களைச்சிதறி, அகல் - அகன்ற, இரு விசும்பு போர்த்தார் - பெரிய ஆகாசத்தை மறைத்தார்கள், எ-று.

(க - து.) படைவீரர் யானைமேலேறிக் கணைமழையா லாகாயத்தை மூடினார்கள் என்பதாம்.

அரசுவாவிற இலக்கணம் சுயம்வர படலத்திற் 'குளிர்மதி' என்னும் எழுபத்து மூன்றாம்பாட்டுரையிற் காண்க. (௫௧)

[இனி மூன்றுபாட்டால் அரசர் நளனை யெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

அருமருந்தனையாள்சூட்டுமலங்கலந்தோளினானைப்
பொருதிரைப்புணரிசூழ்ந்தபுவியினிலரசரெல்லா
நிரையுளையரிமானேற்றைநிழல்சுளிதறுகட்சீற்ற
வரைபுரைகளிநல்யானைவளைந்தெனவளைந்துகொண்டார்.

(இ - ள்) அரு மருந்து அனையாள் சூட்டும் - அரிய தேவாமிர்தத்தையொத்த தமயந்தியானவள் தரித்த, அலங்கல் அம் தோளினானை - மாலை விளங்கும் அழகிய புயத்தையுடைய நளனை, பொருதிரை புணரி சூழ்ந்த - மோதுகின்ற அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட, புவியினில் அரசர் எல்லாம் - பூவுலகத்து அரசரனைவரும், நிரை - வரிசைபெற்ற, உளை - புறமயிரையுடைய, அரி மான் ஏற்றை - சிங்கவேற்றை, நிழல் சுளி - நிழலைக் கோபிக்கின்ற, தறுகண் - அஞ்சாமையையும், சீற்றம் - கோபத்தையு முடைய, வரை புரை - மலையை யொத்த, களி நல் யானை - களிப்பையுடைய நல்லயானைகள், வளைந்தது என - வளைந்ததுபோல், வளைந்துகொண்டார் - சூழ்ந்துகொண்டார்கள், எ-று.

(க-து.) அரசர்கள் நளனைச் சூழ்ந்து கொண்டார்கள் என்பதாம்.

இத்தனையரச ரெதிர்த்தும் நளனுக்கு இணையாகமாட்டா ரென்பது தோன்ற 'அரிமானேற்றைக் களிநல்யானை வளைந்தென வளைந்து கொண்டார்' என்றார். உவமையணி. (௫௨)

நொறில்பரித்தடந்தேருந்திநோன்சிலைகுழையவாங்கிப்
பொறியழற்பகழிதூவிப்பொங்குளைப்புரவிமான்றேர்
தெறுகதக்களிநல்யானைசினவுவாள்வயவரீட்டங்
குறைபடநூழிலாட்டிக்கூற்றெனவரசரார்த்தார்.

(இ - ள்.) நொறில் - விரைவினையுடைய, பரி - குதிரைகட்டிய, தடம் தேர் ஊந்தி - விசாலம்பொருந்திய தேரைச் செலுத்தி, நோன் சிலை - பெரியவில்லை, குழைய வாங்கி - வளையவளைத்து, பொறி அழல் - அக்கினிப்பொறியையுடைய, பகழி தூவி - பாணங்களை வீசி, பொங்கு உளை புரவி - மிகுந்த புறமயிரினையுடைய குதிரைகளும், மான் தேர் - குதிரைகட்டிய தேர்களும், தெறு கதம் களி நல் யானை - மிகுந்த கோபத்தையும் களிப்பையுமுடைய யானைகளும், சினவு வாள் வயவர் ஈட்டம் - கோபிக்கின்ற வாட்படையையுடைய வீரர் கூட்டமும், குறைபட - குறையும்படி, நூழில் ஆட்டி - அமிதமான கொலைசெய்து, கூற்று என - யமனைப்போல, அரசர் - வேந்தர்கள், ஆர்த்தார் - ஆர்ப்பரித்தார்கள், எ-று.

(க - து.) அரசர்கள் சத்தித்தார்கள் என்பதாம்.

தேருந்தி, சிலைவாங்கி, பகழிதூவி, நூழிலாட்டி ஆர்த்தார் அரசர் எனக்கொள்க. நூழிலாட்டாவது - (கைவாளும்) ஒட்டித் தன் மாற்றாரைத்துக்கிடந்த ஆயுதத்தைப் பிடுங்கிப் பறித்தல். "களங்கழுமியபடை யிரிய, வளங்கழித்த வேலடர்ந்தோர்ச்சிறை." "மாயயகத்து வேந்தர்முரணினியென்னும் கொல், கையகத்துக் கொலைடான கழலவிடலை வெய்ய, விக்கூர் சிந்தி வினையகம் போழ்ந்த, படைசெறிகம் பறித்து கைவேல் கூறிம் நந்தோயகி வருவலை, மெய்வேல் பறியா நகும்." இவற்றுறழ்ச

(௩௩)

தெண்டிரைப பரவை யேழுஞ் சேறுபட் டொழியத் தெண்ணீர், மொண்டுகொண் டெழுந்தோர் குன்றினை முகிற்குழாஞ் சொரிவ தேயப்பப், புன்றலை வடிவேன் மன்னர் பொறியழற் பகழி மாரி, மனைடமர் கடந்த திண்டோண் மன்னன்மேற் பொழிந்திட் டாரே.

(இ - ள்) தெள் திரை பரவை ஏழும் - தெளிவுபொருந்திய அலைகளையுடைய கடல்களேழும், சேறுபட்டு ஒழிய - சேறுபட்டு நீங்க, தெள் நீர் மொண்டுகொண்டு - தெளிவாகியநீரை மொண்டுகொண்டு, ஓர் குன்றில் - ஒருமலையில், முகில் குழாம் - மேகக்கூட்டங்கள், சொரிவது ஏய்ப்ப - பொழிவதை யொப்ப, புன் தலை - ஊனைத்தலையி லுடைய, வடி வேல் மன்னர் - கூரிய வேற்படையையுடைய வரசர்கள், பொறி அழல் - நெருப்புப்பொறி பறக்கின்ற, பகழி மாரி - பாண மழையை, மண்டு அமர் கடந்த - நெருங்கிய யுத்தத்திற் செயித்த, திண் தோள் - வலிமைபொருந்திய புயத்தையுடைய, மன்னன்மேல் - நள மகாராஜன்மேல், பொழிந்திட்டார் - சொரிந்தார், எ-று.

(க-து.) அரசர்கள் நளன்மேற் பாண மெய்தார்கள் என்பதாம்.

'பரவையேழுஞ் சேறுபட்டொழியத் தெண்ணீ ரொண்டு கொண்டு' என்னலால் அரசர்கள் வைப்பாக வைத்திருந்த பாணங் களையும் நளனமேற் பொழிந்தன ரென்பதாயிற்று. (௩௪)

[இனி இரண்டுபாட்டால் அவ்வரசனை நளனெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கொள்ளைகொண் டோரியுண்ணக் குழாங்கொடு கவந்தமாட
வொள்ளழற் றறுகட் கூற்றமுயிருண்டு தெவிட்டிநிற்ப
வெள்ளவெங் குருதிபோர்ப்ப வியன்பணை நிடதங்காக்கும்
வள்ளறன் புருவத்தோடு மவ்வரிசிலை குனிந்ததன்றே.

(இ-ள்) கொள்ளை கொண்டு - கொள்ளையாக வாரிக்கொண்டு, ஓரி உண்ண - நரிகளுண்ண, குழாம் கொடு - கூட்டங்கொண்டு, கவந்தம் ஆட - உடற்குறைகள் கூத்தாட, ஒள் அழல் - ஒளியையுடைய நெருப் புப்பொறி பறக்கின்ற, தறுகண் கூற்றம் - அஞ்சாமையையுடைய யமனானவன், உயிர் உண்டு - உயிரையுண்டு, தெவிட்டி நிற்ப - உமிழ்ந்து நிற்க, வெள்ளம் வெம் குருதி போர்ப்ப - வெப்பம்பொருந்திய உதிர வெள்ளமானது மூடிக்கொள்ள, வியன் பணை நிடதம் காக்கும் - பெரிய வயலையுடைய நிடதநாட்டைப் புரக்கின்ற, வள்ளல் தன் புருவத்தோடு - நளனுடைய புருவத்துடன், வரி சிலை குனிந்தது - அவனது நெடிய வில்லானது வளைந்தது, எ-று. அன்று, ஏ-இவ்விரண் டும் அசைநிலைகள்.

(க - து) நளன் வில்லை வளைத்தான் என்பதாம்.

ஓரியுண்ண, கவந்தமாட, கூற்றமுயிருண்டு தெவிட்டிநிற்ப, குருதிபோர்ப்ப வள்ளல் சிலை குனிந்ததெனக் கூட்டுக. புருவத்தோடும் சிலை வளைந்த தெனலால் உடனிகழ்ச்சியணி. (௩௫)

கூன்பிறைக் கோட்டு வல்விற் குழைத்ததுங் குழைத் துத் தெவ்வ, ரூன்சுவைத் துண்ணும் வாளி விடுத்தது மொன்ன லார்தங், கான்படு தெரியன் மார்பம் போழ்ந்த துந் தெரியக் காணார், வான்படு பிணக்குன் றோங்கி வயின் வயின் விளங்கக் கண்டார்.

(இ - ள்.) கூன் பிறை - வளைவுகொண்ட பிறையையொத்த, கோடு வல் வில் - கொம்பினாலாகிய வலிய வில்லை, குழைத்ததும் - வளைத்ததையும், குழைத்து - வளைத்து, தெவ்வர் - பகைவருடைய, ஊன் சுவைத்து உண்ணும் - மாமிசத்தைமென்று உண்ணுகின்ற, வாளி விடுத்ததும் - பாணங்கள் விட்டதையும், ஒன்னலார்தம் - சத் துருக்களுடைய, கான் படு தெரியல் மார்பம் - மணமுண்டாகிய மலர்மாலையையணிந்த மார்பை, போழ்ந்ததும் - பிளந்ததையும், தெரி ய காணார் - ஒருவருந் தெரியக் கண்டிலர், (யாது கண்டனரெனில்) வான் படு - ஆகாயமளாவிய, பிணம் குன்று ஓங்கி - பிணமலைக ளுயர்ந்து, வயின் வயின் - இடங்கடோறும், விளங்க - விளங்குதலை, கண்டார் - பார்த்தார்கள், எ-று.

(க - து.) நளன் செய்கையைக் காணூர்கள் பிணக்குவியலைக் கண்டார்கள் என்பதாம்.

புகையினுல் நெருப்புண்டென் றறிந்ததுபோல் பிணக்குன்றி ஞல் நளன் பொருதனனென் றறிந்தன ரென்க. பிணக்குன்றுங்கி வயின்வயின் விளங்கக்கண்டா ரென்னுங் காரியத்தினுல் காரணமாகிய நளனது வில்லாண்மை தோன்றுதலால் புனைவிலிப புகழ்ச்சியணி.

[இனி நளனேடு தனிதனி அரச ரெதிர்த்துட்பொருதல் சொல்லத்தொடங்கிக் கலிங்கநாட்டரச னெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

பொருசமத்துடன்றவீரர்பொன்றிடநின்றவேந்தர்
வெருவலுற்றிரியுமாறும்வேந்தர்கோன்வலியுநோக்கி
யெரிமணிப்பொன்செயோடையிளங்களிப்பகடுசூழக்
கனைபொருகடலந்தானைக்கலிங்கர்கோனமரிலேற்றான்.

(இ - ள்.) பொரு சமத்து - பொருகின்றபோரில், உடன்ற வீரர் - கோபித்தெதிர்த்த வீரர்கள், பொன்றிட - இறந்துவிட, நின்ற வேந்தர் - நின்ற மற்றை யரசர்கள், வெருவல் உற்று இரியும் ஆறும் - பயந்து ஓடுந்தன்மையும், வேந்தர் கோன் - நளமகாராஜனுடைய, வலியும் நோக்கி - வலிமையினையும் பார்த்து, எரி மணி - ஒளியையுடைய மணி கள்பதித்த, பொன் செய் ஓடை - பொன்னுற்செய்த முகபடாத்தை யுடைய, இள களி பகடு சூழ - இளமைபொருந்திய களிப்பையுடைய யானைகள் சூழ்ந்துவர, கனை பொரு - கனையோடு மோதுகின்ற, கடல் தானை - சேனைசமுத்திரத்தையுடைய, கலிங்கர் கோன் - கலிங்கதேசத் தரசன், அமரில் - யுத்தத்தில், ஏற்றான் - எதிர்த்தான், எ-று. அம்-அசை.

(க-து.) கலிங்கதேயத்தரசன் நளனுடனெதிர்த்தான் என்பதாம்.

எதிர்த்தவர்க ளிறந்தலையும் மற்ற வேந்த ரோடுதலையும் நளன் வலிமையையுங் கண்ட கலிங்கதேசத்தரசன் அவனே டேற்றன னென்க. சேனையிற் குறைவில னென்பது தோன்ற 'கடலந்தானைக் கலிங்கர்கோன்' என்றார். (௩எ)

கந்தடுதறுகட்சீற்றக்கடாம்பொழிகளிநல்யானை
மந்தரகிரியாற்றானைவாரிதியுழக்கிவானத்
திந்திரகுமரனென்னவிகல்புரிநிடதர்கோமா
னுந்துமான்றேரின்மேலுமொருகணைதெரிந்துவிட்டான்.

(இ - ள்.) கந்து அடு - கட்டுத்தறியை முறிக்கின்ற, தறுகண்-அஞ் சாமையையுடைய, சீற்றம் - கோபத்தையுடைய, கடாம் பொழி - மதம்பொழிகின்ற, களி நல் யானை - களிப்பையுடைய நல்ல யானையா கிய, மந்தர கிரியால் - மந்தரமலையினுல், தானை வாரிதி - சேனை சமுத் திரத்தை, உழக்கி - கலக்கி, வானத்து - விண்ணுலகத்து, இந்திரகுமரன் என்ன - இந்திரகுமரனைப்போல், இகல் புரி - போர்செய்கின்ற, நிடதர் கோமான் - நளமகாராஜன், உந்து-செலுத்துகின்ற, மான் றேரின்

மேலும் - குதிரைகட்டிய தேரின்மேலும், ஒரு கணை - ஒருபாணத்தை, தெரிந்து - பார்த்து, விட்டான்-விடுத்தனன், எ-று.

(க - து.) நளனது தேர்மேல் கலிங்கராஜன் கணை தொடுத்தான் என்பதாம்.

இவன் விடும் பாணங்களுக்கும் வலிமைக்கும் தனது கோ லொன்றே நிகரென்பவன்போ லொருபாணம் விடுத்தன னென்க. உம்மை சிறப்பு. யானையை மந்தரகிரியாகவும் தானையை வாரிதியாக வும் உருவகப்படுத்திச் சொல்லுதலால் உருவகவணி. (௩௮)

**பைம்மலைத்தகன்றவல்குற்பாவையர்க்கனங்கனன்ன**
**தெம்மலைச்சினவேற்காளைசிலைவளைத்தொருகோலுந்தக்**
**கைம்மலைக்கோட்டில்வீழ்ந்தகலிங்கர்கோனமரர்மாதர்**
**வெம்முலைக்கோட்டிலவீழ்ந்துவிண்ணிடைவிளங்கினனே.**

(இ - ள்.) பை மலைத்து அகன்ற - பாம்பின்படத்துடன் பொருது விரிந்த, அல்குல் - அல்குலையுடைய, பாவையர்கு - மாதர்க்கு, அனங் கன் அன்ன - மன்மதனையொத்த, தெவ் - சத்துருக்களை, மலை - பொரு கின்ற, சின வேல் காளை - கோபம்பொருந்திய வேலையுடைய நளனென வன், சிலை வளைத்து - வில்லை வளைத்து, ஒரு கோல் உந்த - ஒருபாணஞ் செலுத்த, கை மலை கோட்டில் - யானைக் கொம்பின்மேல், வீழ்ந்த - விழுந்த, கலிங்கர்கோன் - கலிங்கதேசத்தரசனானவன், அமரர் மாதர் - அரம்பையருடைய, வெம் முலை கோட்டில் வீழ்ந்து - விருப்பைச்செய் கின்ற முலையாகிய யானைக்கொம்பின்மேல் விழுந்து, விண்ணிடை - தெய்வலோகத்தில், விளங்கினன் - பிரகாசித்தான், எ-று. ஏ-அசை.

(க - து.) நளன் கணையால் கலிங்கராஜ னிறந்தான் என்பதாம்.

கலிங்கதேசத்தரசன் அநேகபாணங்கள் பிரயோகித்தும் அதனால் நளனிறவாமல் இவன்விட்ட ஒருபாணத்தால் அவன் இறத்தலால் அப் பலவும் இவ்வொன்றை நிகராமை விளக்குகின்றது. நளனுடைய பா ணத்தா லறுபட்டு யானையின் கொம்பில் வீழ்ந்தவளவிலேதானே அரம் பையருடைய ஸ்தனத்தைப் புல்லி அதனால் சிறப்புற்று நின்றன னென்க. கைம்மலைக்கோட்டில் வீழ்ந்தது மனிதவுடல் வெம்முலைக் கோட்டில் வீழ்ந்தது அவனது தெய்வவுட லெனக்கொள்க. வினைவு பற்றி அக்கோட்டில் வீழ்ந்து உடனே இக்கோட்டில் வீழ்ந்தன னென் ருர். (௩௯)

[இனி மூன்று பாட்டுகளாலே மகதேசத் தரசன் எதிர்த்திறத்தல் சொல்லப்படுகின்றது.]

**களத்திடைக் கலிங்கர்கோமான் கவிழ்தலுங்கடைக்கண்சே**
**வுளத்திடைவெகுளிபொங்கவூழிவெங்காலினேடிப் [ப்ப**
**வளைத்தனன்சேனையோடும்வார்சிலைவணக்கிவெம்போர்**
**விளைத்தனன்கூற்றுமஞ்சவெந்திறன்மகதர்கோவே.**

(இ - ள்.) களத்திடை - யுத்தகளத்திலே, கலிங்கர் கோமான் - கலிங்கதேசத் தரசன், கவிழ்தலும் - இறந்தவளவில், கடை கண் சேப்ப - கடைக்கண்கள் சிவக்க, உளத்திடை - மனத்தில், வெகுளி பொங்க - கோபமிக, ஊழி வெம் காலின் - யுகமுடிவி லுண்டாகிய வெவ்விய காற்றுப்போல், ஓடி வளைத்தனன் - ஓடி வளைத்தனனாகி, சேனையோடும் - சேனையுடனே, வார் - சிலை வணக்கி - நெடிய வில்லை வளைத்து, கூற்றும் அஞ்ச - யமனு மஞ்சும்படி, வெம் திறல் - வெவ்விய திறலையுடைய, மகதர் கோ - மகததேசத்தரசன், வெம் போர் - வெவ்வியபோரை, விளைத்தனன் - செய்தனன், எ-று.

(க-து.) மகததேயத்தரசன் நளனுட னெதிர்த்தான் என்பதாம்.

மகதர்கோவானவன் கடைக்கண்சேப்ப வெகுள்பொங்க ஓடி வளைத்தனனாகி விளைத்தன னெனக் கூட்டுக. (௪௦)

முரிதிரைப்பரவைவேலைமுகட்டெழுந்தகல்வான்மேய
விரிகதிர்மதியந்தீண்டும்வெள்ளெயிற்றரவமென்னக் [து
குருதிகொப்புளிக்கும்வேலான்கொற்றவெண்குடையின்மீ
வரிசிலைகுழைத்துவெய்யவடிக்கணையொன்றுவிட்டான்.

(இ - ள்.) முரி திரை பரவை - வளைந்த அலையையுடைய பரப்பையுடைய, வேலை முகடு எழுந்து - கடலினுச்சியி லுதித்து, அகல் வான் மேய - அகன்ற ஆகாயத்தின்கணுள்ள, விரி கதிர் மதியம் - விரிகின்ற கிரணங்களையுடைய சந்திரனை, தீண்டும் - தொடுகின்ற, வெள் எயிறு அரவம் என்ன - வெள்ளிய பல்லையுடைய சர்ப்பம் போல், குருதி கொப்புளிக்கும் - உதிரத்தை யுமிழுகின்ற, வேலான் - வேற்படையையுடைய நளனுடைய, கொற்றம் - சயத்தைத் தருகின்ற, வெள் குடையின்மீது - தவளச்சத்திரத்தின்மேல், வரி சிலை குழைத்து - கட்டமைந்த வில்லை வளைத்து, வெய்ய வடி கணை ஒன்று - கொடிய கூரிய கணையொன்றை, விட்டான் - விடுத்தனன், எ - று.

(க - து.) நளனை மகததேயத் தரசனமேல் கணைதொடுத்தான் என்பதாம்.

மதியந்தீண்டும் வெள்ளெயிற் றரவமென்னல் "கண்டதுமன்னு மொருநா ளவாமனனுங், திங்களைப் பாம்புகொள்ள டற்று" இதனானறிக. வெண்குடைக்கு மதியையும் பாணத்திற்குச் சர்ப்பத்தையும் ஒப்புச் சொல்லுதலால் உவமையணி. (௪௧)

சுரும்பிமிர்தும்பைவேய்ந்தசுடர்முடிமகதர்கோமான்
விரும்பலர்செகுக்குமவேலான்விற்பழுத்துமிழும்வெய்ய*
சரம்படவற்றுவீழ்ந்ததன்னுடற்குறைநின்றாட
வரம்பையரோடுநோக்கியணிமணிமுறுவல்பூத்தான்.

(இ - ள்.) சுரும்பு இமிர் - வண்டுகள் ஒலிக்கின்ற, தும்பை வேய்ந்த - தும்பைமாலை தரித்துவந்த, சுடர் முடி மகதர் கோமான் -

கிரணங்கள் வீசுகின்ற கிரீடத்தையுடைய மகததேசத் தரசனானவன், விரும்பலர் - சத்துருக்களை, செகுக்கும் - கொல்லுகின்ற, வேலான் - வேற்படையையுடைய நளனது, வில் பழுத்து - வில்லானது பழுத்து, உமிழும் - உமிழுகின்ற, வெய்ய சரம் பட - வெவ்விய பாணங்கள்பட, (அவைகளால்) அற்று வீழ்ந்த - துணிக்கப்பட்டு வீழ்ந்த, தன் உடல் குறை - தன்னுடைய கவந்தமானது, நின்று ஆட - நின்று கூத்தாட, அரம்பையரோடு - தெய்வமாதரோடு, நோக்கி - பார்த்து, அணி மணி - அழகிய முத்தையொத்த நகைதோன்ற, முறுவல் பூத்தான் - நகைத் தனன், எ-று.

(க - து.) நளன் கணைபட்டு மகததேயத்தரச னிறந்தான் என்ப தாம்.

மகததேசத்தரசன் தெய்வவுருப் பெற்றமையால் அதிற்குறைந்த மனிதவுருவை யிகழ்ந்து நகைத்தன னெனக. தன்னுடற்குறை நின் றாட நோக்கி யெனறலால், தறிபட்ட வுடலாடி நிலத்தின் விழுமுன் னமே தெய்வவுருப பெற்றன னென்னும் விரைவு தோன்றியது. நாணமுற்றவா உடன் சிரித்திடுவ ரென்பது இயல்பாதலால் தனக்கு மாலைசூட்டிய அரம்பையரோடு நோக்கி 'யணிமணி முறுவல் பூத்தான' என்றா. (சஉ)

[இதனால் சோழ னெதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

அமைப்பருந்தறுகட்சீற்றத்தாளரியேறுபோல்வான்
சமர்த்தலையிகலினேற்றதரியலர்சென்னிவீழத்
துமித்திடுங்குருதியொள்வாள்சுடரொழவிதிர்ப்பநோக்கி
யிமைத்தலும்வளவர்கோனைவெருவனீயேகுகென்றான்.

(இ-ள்.) அமைப்பு அரும் - அமைத்தற்கரிய, தறுகண் - அஞ்சா மையையும், சீற்றத்து - கோபத்தையும், ஆள் - ஆளுகின்ற, அரி ஏறு போல்வான் - சிங்கவேற்றை யொத்த நளனானவன, சமா தலை - யுத்த களத்தில், இகலின் ஏற்ற - பகையினாலெதிர்த்த, தரியலா சென்னி வீழ - சத்துருக்களுடைய தலைகளா வீழும்படி, துமித்திடும் - தறித்திடு கின்ற, குருதி - உதிரத்தையுடைய, ஒள வாள - ஒள்ளிய வாட்படை யை, சுடா எழ - ஒளிதுளும்ப, விதிர்ப்ப - அசைக்க, நோக்கி - அது கண்டு, இமைத்தலும் - இமைக்கொட்டு மளவில், வளவா கோனை - சோழனை, வெருவல் - அஞ்சாதே, நீ - நீ, ஏகுக என்றான் - போ வென்றான், எ-று.

(க - து.) நளன் வாளசைவைக்கண்டு சோழன்பயந்து இமை கொட்டலா லதைக்கண்ட நளன் சோழனை அஞ்சாதே போவென்றான் என்பதாம்.

நளன் வாளசைத்ததைக்கண்டு கண்ணிமைக் கொட்டலால் நம் மோடு பொருதற்கு அஞ்சினன்; இவனோடு பொருவது தரும மன் றென்று சோழனைப்பார்த்து, அஞ்சாதே நீ போ வென்றான். அது தோல்வியென்பது "விழித்தகண் வேல்கொண் டெறியி னழித்திமைப்பி, னொட்டன்றோ வன்க ணவர்க்கு." இதனாலறிக. (சங)

[இதனால் சேரமான் எதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கொய்யுளைப்புரவிதூண்டிக்கொடுமரங்குழையவாங்கி
வெய்யவெம்பகழிமாரிவிண்ணகம்புதைப்பத்தூவி
யையன்மெய்க்கவசமீதுமைங்கணைசிதறியார்த்தான்
மையறுசிறப்பின்மிக்கவஞ்சியம்பதிக்குவேந்தே.

(இ - ள்.) மை அறு - குற்றமற்ற, சிறப்பின் மிக்க - சிறப்பினு லுயர்ந்த, வஞ்சி அம் பதிக்கு - வஞ்சியென்னு மழகிய நகரத்திற்கு, வேந்து - அரசனாகிய சேரமான், கொய் உளை - கொய்துகட்டிய புறமயிரினை யுடைய, புரவி தூண்டி - குதிரையைச் செலுத்தி, கொடு மரம் - வில்லை, குழைய வாங்கி - வளைய வளைத்து, வெய்ய வெம் பகழி மாரி - கொடிய வெவ்விய பாண மழையை, விண்ணகம் புதைப்ப தூவி - ஆகாயமுழுவதும் மூடும்படி இறைத்து, ஐயன் - நளனுடைய, மெய் கவசமீதும் - சீராவின்மேலும், ஐங்கணை சிதறி - ஐந்துபாணம் விட்டு, ஆர்த்தான் - கர்ச்சித்தான், எ-று. ஏ - அசை.

(க-து.) சேரமான் நளன் மெய்க்கவசத்தின்மேலைங்கணை விடுத்தான் என்பதாம்.

நளன்மேல் ஐங்கணைதூவின னெனலால் பகழிமாரி விண்ணகம் புதைப்பத் சிதறி யென்பதைச் சேனைகண்மே லெனக் கொள்க. (சச)

சில்லியந்தடந்தேருந்தித்திண்சிலைகுழையவாங்கிக்
கொல்லியவெழுந்தகூற்றிற்கொடியவெம்பகழிதூவி
மல்லடுதோளுமார்பும்வழிபெருங்குருதியோடும்
வில்லவன்வெருவியோடவெஞ்சமமுடற்றினானே.

(இ - ள்.) சில்லி - உருளையையுடைய, தடம் - விசாலம்பொருந்திய, தேர் உந்தி - தேரைச்செலுத்தி, திண் - வலிமைபொருந்திய, சிலை - வில்லை, குழைய வாங்கி - வளைய வளைத்து, கொல்லிய எழுந்த கூற்றில் - கொல்லவெழுந்த யமன்போல், கொடிய வெம் பகழி தூவி - கொடியவாகிய வெவ்விய பாணங்களை விட்டு, மல் அடு தோளும் - மற்போர்செய்கின்ற புயங்களிலும், மார்பும் - மார்பிலும், வழி - வழிகின்ற, பெரு குருதியோடும் - அதிக உதிரத்தோடும், வில்லவன் - சேரமான், வெருவி ஓட - அஞ்சியோடும்படி, வெம் சமம் - வெவ்வியபோரை, உடற்றினான் - செய்தான், எ-று. அம், ஏ - அசை.

(க-து.) சேரமான் பயந்தோட நளன் போர்செய்தான் என்பதாம்.

வில்லவனாயினும் நளன் வில்லுக்குத் தோற்றோடினமை தோன்றச் சேரமானுக்குப் பலபேரிருக்க 'வில்லவன்' என்றார். வில்லவன் - விற்கொடியை யுடையவன். (சரு)

[இதனால் புட்கரத்தீவரச னெதிர்த்தல் சொல்லப் படுகின்றது.]

திறங்கிளர்வயிரப்பைம்பூணிடர்கொன்றெடுத்தகோலிற்
கறங்கெனத்திரியும்வெய்யகலினமான்றடந்தேர்வீழ

மறங்கிளர்பரிதிவேலுமானமுந்துறந்துநாணாற்
புறங்கொடுத்திரியல்போனான்புட்கரத்தீவின்வேந்தன்.

(இ - ள்.) புட்கர தீவின் வேந்தன் - புட்கரதீவையாளு மரச னவன், திறம் கிளர் வயிரம் பைம்பூண் - ஒளிவிளங்குகின்ற வச் சிராபரணத்தையுடைய, நிடதர் கோன் - நளமகாராஜன், தொடுத்த கோலில் - பிரயோகஞ்செய்த பாணத்தால், கறங்கு என திரியும் - காற்றாடிபோற் றிரிகின்ற, வெய்ய கலினம் மான்-வெவ்விய கடிவாளம் பூண்ட குதிரைகட்டிய, தடம் - விசாலம்பொருந்திய, தேர் வீழ - இர தம் வீழ, மறம் கிளர் - மறமிகுந்த, பரிதி வேலும் - சூரியனையொத்த வேற்படையையும், மானமும் - அபிமானத்தையும், துறந்து - விட்டு, நாணால் - நாணத்தால், புறம் கொடுத்து - முதுகுகாட்டி, இரியல் போனான் - ஓடிப்போனான், எ-று.

(க - து.) புட்கரன் நளனுடனெதிர்த் தோடினான் என்பதாம்.

மானமும் ஒரு ஆபரணம்போ லணிபவனாதலின் புட்கரத்தீவின் வேந்தை வேலு மானமுந் துறந்துபோனா னென்றார். "மானவருங்கல னீக்கி" என்றார் பிறரும். (சசு)

[இதனால் சாகத்தீவரசன் எதிர்த்தல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்

பாகடுவெந்திறற்பருமயானைமேல்
வேகவெங்கலினமாவெள்ளஞ்சூழ்வரச்
சாகத்தீவுக்கிறைசமரினார்ப்பொடு
தோகையர்கண்ணெனப்பகழிதூவினான்.

(இ - ள்) பாகு அடு - பாகனைக் கொல்லுகின்ற, வெம் திறல் - வெவ்விய திறலையுடைய, பருமம் யானைமேல் - ஒப்பனைசெய்த யானை யின்மேல், வேகம் - வேகத்தையுடைய, வெம் கலினம் மா வெள்ளம்- வெவ்விய கடிவாளம்பூண்ட குதிரைக்கூட்டங்கள், சூழ் வர - (தன் னைச்) சூழ்ந்துவரும்படி, சாகத்தீவுக்கு இறை - சாகத்தீவுக் கரசனான வன், சமரின் ஆர்ப்பொடும் - யுத்தத்திலாரவாரத்துடன், தோகையர் கண் என - மாதர் விழிகள்போல், பகழி - பாணங்களை, தூவினான் - சிந்தினான், எ-று.

(க - து.) சாகத்தீவரசன் பாணந் தொடுத்தான் என்பதாம்.

மாதர் கண்கள் பாணங்களினுங் கொடியன வாதலால் 'தோகையர் கண்ணெனப் பகழிதூவினான்' என்றார். பாகு என்னும் பண்புப்பெயர் பண்பிக்காயிற்று. இது உவமேயமாகிய கண்களை உவமானமாகிய பாணங்களுக்கு ஒப்புமை சொல்லலால் எதிர்மறையணி. (சஎ)

துணங்கையிட்டலகைகடுள்ளியார்த்தெழ
வணங்கெயிற்றரவெனவழலும்வாளிகள்

வணங்குவிற்கால்வளைத்தெய்துமாற்றினு
னிணங்கமழ்குருதிவேனிடதர்வேந்தனே.

-(இ - ள்.) துணங்கையிட்டு - கையைக்கொட்டி, அலகைகள் - பேய்கள், துள்ளி ஆர்த்து - குதித்து ஒலித்து, எழ - எழும்ப, அணங்கு - வருத்தத்தைச்செய்கின்ற, எயிறு - பல்லையுடைய, அரவு என - சாபபம்போல், அழலும் - சுடுகின்ற, வாளிகள் - பாணங்களை, வணங்கு வில் - வளைகின்ற வில்லை, கால் வளைத்து - காலிலூன்றி வளைத்து, எய்து - பிரயோகஞ்செய்து, மாற்றினுன் - நீக்கினுன், நிணம் கமழ் - கொழுப்பு நாறுகின்ற, குருதி வேல் - உதிரநதோய்ந்த வேற்படையையுடைய, நிடதர் வேநதன - நளமகாராஜன், எ-று ஏகாரம் - ஈற்றசை.

(க - து) சாகத்திவரசன் பாணங்களை நளன் விலக்கினுன் என்பதாம்.

இப்போரில நமக்கு நல்லவுணவு கிடைக்குமெனறு அதிக மகிழ்ச்சியால் பேய்கள் காச்சிததலால 'துணஙகையிடடலகைக டுள்ளியார்த்தெழ' எனறா அரவைப பாணததுககும எயிற்றை அதன முனைக்கும் உவமையாகக கொளக. (௪௮)

பாற்றினந்தொடர்வதுபகைவருன்சுவைத்
தூற்றிருந்திடையறுதிரங்காலவது
கூற்றொடுந்தோழமைகொள்வதாயதோர்
மாற்றருங்கொடியவேன்மன்னன்வாங்கினுன்.

(இ - ள் ) பாறு இனம் தொடாவது - பருந்துக்கூட்டங்கள் தொடாவதும், பகைவா ஊன சுவைதது - சததுருககளுடைய மாமிசததை மெனறு, ஊறறு இருநது - ஊறறிருகவிருந்து, இடை அறுது - ஒழியாமல, உதிரம் காலவது - உதிரங ககுருவதும், கூற்றொடும் - யமனுடன், தோழமை கொளவதாயது - சிநேகங கொள்வதாகியது மாகிய, ஓா - ஒரு, மாறறு அரும் - தடுபபதறகரிய, கொடிய வேல் - கொடிய வேறபடையை, மனனன வாஙகினுன - நளனுன வன் கைக்கொணடான, எ-று

(க-து ) நளன் வேலாயுததைதக் கைக்கொண்டான் என்பதாம்.

ஒருவாமேல் விட்டால் அதனைகொடுமை சொல்லவேண்டுவதில்லையென்பது தோனற சுபாவததில இம் முககுணஙகளையு முடைய வேலெனறா. (௪௯)

அயிலெடுத்தெறிதலுமடர்க்குமொன்னலார்
வயிறெரிதவழ்ந்ததுவயிரவாட்படை
செயிரறவேந்தியசாகத்தீவிறை
யுயிர்துறந்தகனுலகம்புக்கதே.

(இ - ள்.) அயில் எடுத்து எறிதலும் - வேற்படையை யெடுத்து வீசியவளவில், அடாக்கும் - பொருகின்ற, ஒன்னலார் வயிறு -

பகைவருடைய வயிறானது, எரி - நெருப்பினால், தவழ்ந்தது - தவழ்ந்திடப்பட்டது, வயிரம் வாள் படை - வச்சிரவாளை, செயிர் அற-குற்றமற, ஏந்திய - தாங்கப்பெற்ற, சாகத்தீவு இறை உயிர் - சாகத்தீவுக்கரசனுடைய உயிரானது, துறந்து - உடலைவிட்டுநீங்கி, அந்தகன் உலகம் புக்கது - யமலோகத்தில் புகுந்தது, எ-று.

(க - து.) சாகத்தீவரசனுயிர் யமலோகஞ்சென்றது என்பதாம்.

வயிறெரி தவழ்தலால் அடாக்குமோனைல்லொனறது, சாகத்தீவரசனோடு வந்து எதிர்த்தவனை யெனக்கொள்க. நிராயுதனாகி யிறந்திலனென்பது தோன்ற 'வயிரவாட்படை செயிரற வேந்திய சாகத்தீவிறை' என்றார். (ருo)

[இதுமுதலேழுபாடடாம் காமபிலிதேசத்தரசனெதிர்ததல சொல்லபபடுகின்றது.]

தூம்புடைக்கரமலையெருத்திற்றோன்றுபு
காம்பிலிக்கரசன்விலவாங்கிககாய்கணை
தேம்பொதிசெழுமலர்த்தெரியன்மார்பினன்
வாம்பரித்தேர்மிசைமழையிற்றூவினன்.

(இ - ள்.) தூம்பு உடை கரம் மலை - துவாரத்தையுடைய கையையுடைய மலைபோன்ற யானையினது, எருத்தில் தோன்றுபு - பிடரியின்மேல் தோன்றி, காம்பிலிக்கு அரசன் - காம்பிலிநாட்டுக் கரசனானவன், வில் வாங்கி - வில்லைவளைத்து, காய் கணை - கொல்லாநின்ற பாணங்களை, தேன் பொதி - வாசனை நெருங்கிய, செழு மலர்-செழுமையுள்ள மலரால்தொடுத்த, தெரியல் மார்பினன் - மாலையையணிந்தவனது, வாம் பரி - தாவுகின்ற குதிரைகட்டிய, தேர்மிசை - தேரின்மேல், மழையில் தூவினன் - மேகம்போல் பிரயோகித்தான், எ-று.

(க-து.) காம்பிலிதேயத்தரசன் நளனது தேர்மேற் கணைதொடுத்தான் எனபதாம்.

துதிக்கை யொன்று தவிர மற்றையுடல் மலைபோலிருத்தலால் யானையைக 'கரமலை' என்றார். காமபிலிதேசத்தரசன் நளன தேரின்மேற் பாணந் தூவினனெனக் கூட்டுக. (ருக)

சிலையுயிர்த்துயிர்ப்பலிகவருந்திண்கணை
கொலைவடிவேலினன்றுரப்பக்குஞ்சர
மலையெனககவிழ்தலுமடங்கலேறெனப்
புலவுவாளொடுமவன்புவியிற்பாய்ந்தனன்.

(இ - ள்.) சிலை உயிர்த்து - வில்லால் விடப்பட்டு, உயிர் பலி கவரும் - உயிராகிய வுணவை யுண்ணுகின்ற, திண் கணை - வலிமைபெற்ற பாணங்களை, கொலை வடி வேலினன் - கொல்லுகின்ற வடித்த வேலேந்திய நளனானவன், துரப்ப - செலுத்த, குஞ்சரம் - (ஏறிவந்த தன்) யானையானது, மலை என கவிழ்தலும் - மலைபோற் கவிழ்ந்து வீழ்ந்த

வளவில், மடங்கல் ஏறு என - சிங்கவேற்றைப்போல், புலவு வாளொடும் - புலானுற்றத்தையுடைய வாட்படையுடன், அவன் - அவ்வரசனுனவன், புவியில் - பூமியிலே, பாய்ந்தனன் - குதித்தனன், எ-று.

(க - து.) நளன் பாணம்விடுக்க யானைவிழவும், காம்பிலிதேயத்தரசன் நிலத்திற் குதித்தான் என்பதாம.

தன்னைவிட்டுத் தன்தேரின்மெற் பாணம் விடுத்தலால் நளனும் அவ்வரச னேறிவந்த யானைமேற் பாணம்விடுத்து அதைக் கொன்றனனென்க. மலையென வெனலா னுவமையணி. (ருஉ)

வார்மயிர்க்கேடகம்பற்றிவாள்விதிர்த்
தூர்சினக்களிற்றணியுழக்கியொய்யெனப்
போர்முகத்துரறிவெம்புலியின்போத்தெனச்
சாரிகைதிரிந்தனன்றறுகணாளனே.

(இ - ள்.) வார மயிர் கேடகம் பற்றி - நெடிய மயிரையுடைய தோற் கேடகத்தைப் பிடித்து, வாள் விதிர்த்து - வாளையசைத்து, ஊர - நடக்கின்ற, சினம் களிறு அணி உழக்கி - கோபத்தையுடைய யானைவகுப்பைக் கலக்கி, ஒய் என - விரைவில், போர்முகத்து - யுத்தமுகத்தில், உரறி - காச்சித்து, வெம் புலியின் போத்து என - வெய்ய புலியேற்றைப்போல், சாரிகை திரிந்தனன் - வட்டமாக திரிந்தான், தறுகணாளன் - அஞசத்தக்கவைகட்கு அஞ்சாத காம்பிலிதேசத்தரசனுனவன், எ-று.

(க - து.) காம்பிலிதேயத்தரசன் கேடகம்பற்றி வாளையசைத்து வட்டமிட்டு உலாவினன் என்பதாம்.

பாணங்கள் தைப்பினும் அழிவிலாதிருத்தற்கு மயிருள்ள தோலினுற் செய்வதுபற்றி 'மயிர்க்கேடகம்' என்றார். ஒருகுற்றஞ் செய்தவர்க்குப் பலகுற்றஞ் செய்பவாபோல் தானேறிவந்த ஒருயானையைக்கொன்ற நளனது களிற்றணியுழக்கிச் 'சாரிகை திரிந்தனன்' என்றார். புலியின் போத்தென வெனலால் உவமையணி. (ருங)

பாரினின்றவனமர்புரியப்பாய்பரித்
தேரினின்றடுகணைச்செருவிளைத்திட
றூருடைவயவர்போர்த்தருமமன்றெனக்
கூர்நுதிவாளுரீஇக்குப்புற்றனரோ.

(இ - ள்.) பாரினின்று - பூமியிலிருந்து, அவன் அமா புரிய - அவவரசன் போரபுரிய, பாய் பரிதேரினின்று - தாவுகின்ற குதிரைகட்டிய தேரிலிருந்து, அடு கணை - கொல்லாநின்ற பாணங்களைக் கொண்டு, செரு விளைத்திடல் - யுத்தஞ்செய்தல், தார் உடை வயவா - வெறறிமாலையையணிந்த படைவீரருடைய, போா தருமம் அன்று என - யுத்தத்தினுடைய தரும மன்றென்று, கூா நுதி - கூரிய நுனியையுடைய, வாள் உரீஇ - வாளை யுருவிக்கொண்டு, குப்புற்றான் - குதித்தான், எ-று. அரோ - அசை.

(க - து.) நளன் வாளையெடுத்துத் தேனைவிட் டிறங்கினன் என்பதாம்.

நளன் அறநிலைப்போா செய்பவனுதலால் தன்னேடெதிா்த்த காம்பிலிதேசத் தரசனுனவன் பூமியிலிருத்தற்பற்றித் தானும் பூமியிற் குதித்தன னென்றுா. (ருச)

மன்பெருங்கேடகந்திரித்துவானிடை
மின்பிறழ்ந்தென்னவாள்விதிர்த்துநோக்கின
ரென்புநெகருள்ளுடைந்திரியவேற்றனர்
வென்பிறரறிகிலாததிறலகொள்வீரரே.

(இ - ள்.) மன் பெரு கேடகம் திரித்து - நிலைபெற்ற பெரிய பரிசையைச சுழற்றி, வானிடை - ஆகாயத்தின்கண், மின் பிறழ்ந்தது என்ன - மின்னை லசைந்தாற்போல், வாள விதிர்த்து - வாட்படையையசைத்து, நோக்கினா - டார்த்தவாகளுடைய, என்பு - எலும்புகள், நெக்கு - நெக்குவிட்டு, உள உடைந்து இரிய - உளளே உடைந்து போகும்படி, வெந் - (தம்) முதுகை, பிறா அறிகிலா-பிறரால் அறியப்படாத, திறல் கொள வீரா - வலிமையைக்கொண்ட அரசாகள், ஏற்றனா - எதிர்த்தனா, எ-று.

(க - து.) அரசாக ளெதிர்த்தாாகள என்பதாம்.

வெந் என்பதில் நகரவொற்றுப பகரத்தோடு மயங்காமையின் வழக்கபபடி எதுகைநோக்கி னகரவொற றெழுதப்பட்டதாம். வென்பிற ரறிகிலாவெனபதனுல் ஓரிடத்திலும இவவிருவரும் தோற்றவரல்லரென்பது கருதது. இது உவமையணி. (ருரு)

தெறுஞ்சினந்தலைக்கொளீஇச்செங்கண்டீயுகப்
பிறங்குபொற்கேடகம்பிறழவெற்றியு
மறங்கிளர்வயிரவாள்வாளிற்றாக்கியுங்
கறங்கெனத்திரிந்தனர்காளைவீரரே.

(இ - ள்.) தெறும் சினம் - அழிக்கின்ற கோபமானது, தலைகொளீஇ - அதிகரித்து, செம் கண் தீ உக - சிவந்த கண்களினின்றும் நெருப்புதிர, பிறங்கு பொன் கேடகம் - உயர்ந்த அழகிய கேடகத்தை, பிறழ - நீங்கும்படி, எற்றியும் - எறிந்தும், மறம் கிளா - கொலைத்தொழில்மிகுந்த, வயிரம் வாள் - வச்சிரவாளை, வாளில் தாக்கியும்-வாளினுலெறிந்தும், கறங்கு என - காற்றாடிபோல், காளை வீரா - அரசாகள், திரிந்தனா - திரிந்தாாகள், எ-று. ஏ-அசை.

(க - து.) அரசாகள் வாளினுற் போாசெய்தாாகள் என்பதாம்.

இவ்விரண்டு பாட்டால் ஒருவருக்கொருவ ருயாவு தாழ்வு சொல்லாமையால் வாட்போரில் இவ்விருவரு மொத்தன ரென்பதாம். (ருசு)

கோட்புலிப்போத்தெனவிடர்கோமகன்
ஞாட்பினுட்காம்பிலிக்கிறைவனுமற

வாட்படையெறிந்துயிர்வவ்விஞனவன்
சேட்புலத்தரம்பையர்தெரியல்சூடிஞன்.

(இ - ள்.) கோள் புலி போத்து என - கொலைசெய்கின்ற ஆண் புலிபோல், விடதா கோமகன் - நளஞனவன், நாட்டினுள் - யுத்தத்தின்கண், காம்பிலிக்கு இறைவன் - காம்பிலிநாட்டாரக் கரசனுடைய, நாமம் அற - பெயரற்றுபபோம்படி, வாள் படை எறிந்து - வாளாயுதத்தை வீசி, உயிா வவ்விஞன் - ஆவியைக்கொண்டான்; அவன்- அவ்வரசன், சேண் புலத்து - விண்ணுலகத்தின்கண், அரம்பையா - தெய்வ மங்கையரால், தெரியல் சூடிஞன - மாலை சூடப்பட்டான், எ-று நாமம் - நாம் எனக் கடைகுறைந்தது

(க - து) நளன காம்பிலிதேயத்து வேந்தனைக் கொன்றுன் என்பதாம்.

தோல்வியின்றி வாட்போரில எதிர்த்திறந்தவ ஞதலால் காம்பிலி தேசத தரசனுக்கு அரம்பையா மாலை சூட்டிஞா என்றுா. (ருஎ)

அறைகழல்வேந்தர்மேலலங்கலவேலிஞ
னெறுழ்வலிகளிற்றிடைததாவுமெண்ணிலா
நொறிலபரிதோமிசைப்பாயுநோன்கெழு
சிறையொடுதிரிவதோர்சீயமென்னவே.

(இ - ள) அலங்கல் வேலிஞன் - வெற்றிமாலைதரித்த வேற்படையையுடைய நளஞனவன, நோன் கெழு - பெருமைபொருந்திய, சிறையொடும திரிவது - சிறகினுடன திரிவதாகிய, ஓா சீயம் என்ன - ஒரு சிங்கம்போல, அறை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த, வேந்தாமேல் - அரசாகள்மேலும, எறுழ வலி களிற்றிடை - மிகுந்த வலிமையையுடைய யானையினமேலும், தாவும்-பாயவான், எண்ணிலா- அளவில்லாத, நொறில - ஒலியையுடைய, பரி - குதிரைமேலும், தோ மிசை - தேரினமேலும், பாயும - பாய்வான, எ-று.

(க-து ) நளன் அரசாகளமேலும், யானைகளமேலும், குதிரைகள் மேலும், தோகளின்மேலும் பாய்வான என்பதாம்.

நளன் செய்தபோரைத் தனித்தனிச் சொல்லின் முடியாதென்பாா தொகுத்துச்சுட்ட லென்னு முததியால் வேந்தாமேல் களிற்றிடைபரி தோமிசை இவ்வாறெதிாதது வென்றன னென்றுா. (ருஅ)

இன்னணங்கொடுஞ்சமர்முருக்கியேற்றிகல்
மன்னவர்புறக்கொடைகண்டுமாலைதாழ்
கொன்னவில்குருதிவேற்குவவுத்தோளிஞன்
சென்னிவான்றடவுபொற்றேரினேறிஞன்.

(இ - ள்.) இன்னணம் - இந்தப்பிரகாரம், கொடு சமா - உக்கிரமான யுத்தத்தில், முருக்கி-கொன்று, ஏற்று - எதிாத்து, இகல் மன்னவா - பகைக்கின்ற அரசாகள், புறம் கொடை கண்டு - முதுகுகொடுத்

தோடச்செய்து, கொல் நவில் - கொல்லுதலைச் சொல்லுகின்ற, குருதி வேல் - உதிரந்தோய்ந்த வேற்படையையுடைய, மாலை தாழ் - மாலைகள் தொங்கப்பெற்ற, குவவு தோளினனை - திரட்சிபொருந்திய தோள்களையுடைய நளனனவன, சேனனி - தலையினல், வான் தடவு - ஆகாயத்தைத் தடவுகின்ற, பொன் தேரின் ஏறினன் - அழகிய தேரின்மேல் ஏறினன், எ-று.

(க - து.) நளன் வெற்றிகொண்டு தேரமேலேறினன் என்பதாம்.

கொல்லுதலைத் தெரிந்தவா வாயினற்சொல்லாது செய்கையாற் சொல்லுதல்போல் வேறபடை கொலைசெயதலாற சொல்லுதலில் 'கொன்னவில் குருதிவேல' எனறா. (ருகூ)

[இனி ஆறு பாட்டால படுகளச்சிறப்புச்
சொல்லபபடுகின்றது ]

கொச்சகக்கலிப்பா

புலத்தலுமடநல்லார்புலவிதீர்தரச்சூட்டு
மலத்தகமலர்க்குஞ்சியழிகுருதிப்புனலலைப்ப
மலைத்தடந்திணிதோளார்வடிககணைமெயிற்போர்ப்பக
கொலைத்தலைமுணமாப்போறகொடுஞ்சமத்திறகிடந்தனரோ

(இ - ள்.) மட நல்லார புலததலும் - மாதாகள ஊடியவளவில், புலவி தீர்தர - அவலூடல நீஙகுமபடி, சூடடும் - அணிவிக்கும், அலததகம் - (அவா பாதஙகளி னூட்டப்பெறற) செம்பஞ்சுபடிந்த, மலா - பூவையணிநத, குஞ்சி - குடுமியை, அழி - அழிகினற, குருதி புனல் - உதிரநீரானது, அலைபப - அலைகக, மலை - மலைபோல், தடம - டருத்த, திணி - வலிமையையுடைய, தோளாா - தோளையுடையவரசாகள, வடி கணை - கூரியபாணஙகள, மெயயில போரபப - தேகததிலே மூட, கொலை தலை - கொல்லுகின்ற தலையையுடைய, முண் மா போல் - முளளமபனறிபோல், கொடு சமததில - கொடிய யுதத களத்தில, கிடநதனா - கிடநதாா, எ-று. ஏ-அசை.

(க - து ) அரசாகள் மெயயிற்பட்ட கணையோடு முள்ளம்பன்றி போற போாககளததிற கிடநதாாகள எனபதாம.

மாதாக்கு ஊடலுணடாயின் கணவனையுதைத்தல் மாலைப்படலத்திரண்டாம் பாட்டா லுணாக. மாதா புலவியில் ஆடவனாத் தா முதைததலும் அவனை ஆடவா பணிதலுமாகிய இரண்டுமுண்டு. அது அபபோது அவாக்குணடாகும் வேட்கைக்கீடாய் நிற்குமெனக் கொளக. தேகஙகளில் அம்புகள் தைத்திருததல் முள்ளம்பனறி முட்களைச் சிலிாத்தல்போன் றிருத்தலால் அதறகதை யுவமையாக்கினா.()

இகன்மிகுதிறல்வேந்தரோதியாற்களப்படுத்த
புகர்முகக்கடாயானைபொழிகுருதிச்செழுஞ்சேற்றிற்
றிகிரியகொடிஞ்சிநெடுந்தேருழக்கத்துகளெழுந்தவ்
வகலிருவிசும்புபோர்த்தந்திவான்போன்றதுவே.

(இ - ள்.) இகல் மிகு - பகைமைமிகுந்த, திறல் - வலிமை பொருந்திய, வேந்தா - அரசாகள், ஏதியால் - வாட்படையால், களம் படுதத - யுத்தகளத்திற் கொன்ற, புகா முகம் கடா யானை - புள்ளி பெற்ற முகத்தையு மதத்தையுமுடைய யானைகள், பொழி - ஊற்றிய, குருதி செழு சேற்றில் - செழுமைபொருந்திய வுதிரச்சேற்றில், திகிரிய - உருளைகளையுடையவும், கொடிஞ்சி - மேன்மொட்டையுடையவுமாகிய, நெடு தோ - நெடியதோகள், உழக்க - கலக்க, துகள் எழுந்து - தூளிகள் எழும்பி, அ அகல் இரு விசும்பு - அந்த விரிவுள்ள பெரிய ஆகாசத்தை, போாதது - மூடிக்கொண்டு, அந்தி வான் - செவ் வானத்தை, போன்றது - ஒததது, எ-று. ஏ - அசை.

(க - து) ஆகாயமானது போாக்களத்தின் உதிரப்புழுதியான் மூடப்பட்டுச் செவவானததை யொததிருநதது எனபதாம்.

குருதிச்சேறுயினும் அநேகநதரம் தேருருளைக ளோடுதலால் புழுதியாயிற் றென்க. அப்புழுதி மூடுதலால் ஆகாயம் செவவானம போனறு தெனறுா. இது உவமையணி. (சுக)

ஒளிகிளர்மணியோடைசிதைந்தொழியவுடன்றபோர்க்
களிசினமாலயானைக்கதிர்மருப்புமிழ்ந்ததீ
முளிதடஞ்சினைமேயுமுருங்கெரியெனபபற்றி
விளிதருவயவருடலவெந்தொழியப்பரந்ததே.

(இ - ள்.) ஒளி கிளா மணி ஓடை - பிரகாசமிகுநத அழகிய முகபடாமானது, சிதைந்து ஒழிய - கெட்டு நீஙக, உடனற போா - வெகுணட யுத்ததகில், களி சினம - செருக்கையும கோபததையுமுடைய, மால் யானை - பெரிய யானைகளுடைய, கதிா மருபபு - பிரகாசம் பொருந்திய தந்தங்கள், உமிழநத தீ - சொரிநத நெருப்பானது, முளி - காயந்த, தடம் சினை - பருதத கிளைகளை, மேயும் - தகிக்கின்ற, முருங்கு எரி என - அழியுந தீயைபபோல், பறறி - பறறிககொணடு, விளிதரு - இறந்த, வயவா உடல் - படைவீரருடைய தேகங்கள், வெந்து ஒழிய - வெந்து போகும்படி, பரநதது - பரவியது, எ - று ஆல் - அசை.

(க - து.) யுத்தகளத்தில் யானைக்கொம்பிற் பிறந்த தீயானது அரசாகளுடல் வெநதெரியும்படி பரவியது என்பதாம். (சுஉ)

பரிதிவடிவாள்பிடித்துப்பல்லினலிதழதுக்கித்
திருகுசினந்தலைக்கொளீஇச்செங்கண்கடீயுமிழக்
குருதிபாயகளத்திற்குற்றுயிரிற்கிடந்தார்க்கண்
டருகணையக்கொடுங்கூற்றுமஞ்சிநின்றலறுமால்.

(இ - ள்.) பரிதி - சூரியன்போன்ற, வடி வாள் - கூரிய வாட்படையை, பிடித்து - கையிற்பற்றி, பல்லினல் - பற்களினல், இதழ் அதுக்கி - உதட்டைக்கடித்து, திருகு - மாறுபட்ட, சினம் தலைக்கொளீஇ - கோபம் அதிகரித்து, செம் கண்கள் - சிவந்த கண்க

ளானவை, தீ உமிழ - நெருப்பைச் சொரிய, குருதி பாய் - உதிரம் பரவிய, அடு களத்தில் - கொலைக்களத்தில், கூறு உயிரில் கிடந்தார கண்டு - குற்றுயிருடன் கிடந்தவாகளைக்கண்டு, அருகு அணைய - அவாக ளருகே வருதற்கு, கொடு கூற்றும் - கொடிய யமனும், அஞ்சி நின்று - அச்சமுற்று நின்று, அலறும் - அலறுவான, எ-று. ஆல் - அசைநிலை.

(க - து) வாளைக் கையிற்பிடித்துப் பல்லா விதழைக் கடித்துக் கோபங்கொண்டு கண்ணிலே நெருப்புபொறி பறக்கக் குற்றுயிரோடு போாக்களததிலிருக்கும் வீரரைககண்டு யமன அருகிற்போகப பயப படுவான் எனபதாம்.

குற்றுயிரிற் கிடக்கும்போது யமன் அவரைபபற்றுதற்கு அலறுவா னென்னில் போரி லெதிர்க்குமபோது அவரைக்கண்டவா அருசுதல் சொல்லவேண்டுவதில்லை யாயிற்று. (கூரு)

சிலைபொருதிணிதடந்தோட்டேர்வேந்தர்செருமலைந்து
கொலைபுரியடுகளத்திற்குடர்பின்னிககிடந்ததனைப்
புலவுநாறுடற்றசைவேட்டுண்ணவரும்புள்ளினங்கள்
வலைவளைந்ததெனவெண்ணிவானினிடைச்சுழலுமால்.

(இ - ள்.) சிலை பொரு - மலையை யொத்த, திணி தடம் தோள் - வலிமைபொருந்திய பருதத தோள்களையுடைய, தோ வேந்தா - தேரையுடைய அரசாகள, செரு மலைந்து - போா செய்து, கொலை - புரி—கொலை செய்த, அடு களததில் - யுததகளததில், குடா பின்னி கிடந்ததனை - குடாகள ஒன்றோடொன்று பினனிக்கிடந்ததை, புலவு நாறு - புலாலுறற நாறுகின்ற, உடல் தசை வேட்டு - தேகத்தின மாமி சத்தை விரும்பி, உண்ண வரும் - உண்பதற்கு வநத, புள் இனஙகள் - பறவைக்கூட்டங்களானவை, வலை வளைநதது என எண்ணி - வலை யானது வளைந்திருககிறதென்று நினைந்து, வானினிடை - ஆகாயத் தின்கண், சுழலும் - வட்டமிடும், எ-று. ஆல் - அசை.

(க - து.) ஊனுண்ணவந்த பறவைகள் குடல்கள் பின்னிக்கிடக் கின்றனவற்றை வலையெனநெணணி ஆகாயததில் வட்டமிடும என் பதாம்.

தசைவேட்கையினும் உயிரின்வேட்கை பெரிதாதலாலும், தசை யைவிட்டு நீஙகற்கு மனமொழாமையாலும், குடா பின்னிக்கிடந்ததை வலைவளைந்ததென்று தசைவேட்டுண்ணவரும புள்ளினங்கள் வானி னிடைச் சுழலு மென்றார். (கூச)

சீற்றமிகுங்களியானைத்திறல்கெழுபோர்வயவேந்தர்
காற்றரளக்குடைதுணிந்துகளத்தினிடைக்கிடப்பனக
ளேற்றெருமையுகைத்தடருமிருணிறத்தவெரிகுஞ்சிக்
கூற்றமுயிாப்பலியேற்குங்கொள்கலம்போன்றிருந்தனவே.

(இ - ள்.) சீற்றம் மிகும் களி யானை - கோபமிகுந்த செருக்கை யுடைய யானைகள்போல், திறல் கெழு - வலிமைமிக்க, போா - போர்

செய்கின்ற, வய வேந்தர் - வெற்றிமிகுந்த வீரர்களுடைய, கால் - காலையுடைய, தரள குடை - முத்துக்குடைகளானவை, துணிந்து - துண்டுபட்டு, களத்தினிடை - யுத்தகளத்தின்கண், கிடப்பனகள் - இருப்பனவாகி, ஏற்று எருமை உகைத்து - எருமைப்போத்தைச் செலுத்தி, அடரும் - நெருங்குகின்ற, இருள் நிறத்த - இருளையொத்த நிறத்தையுடைய, எரி குஞ்சி - நெருப்புபோன்ற சிகையையுடைய, கூற்றம் - யமனானவன், உயிர் டலி ஏற்கும் - உயிர்ப்பிச்சையேற்கின்ற, கொளகலம் போன்று - பாத்திரத்தையொத்து, இருந்தன - இருந்தன, எ-று. ஏ - அசை

(க - து) அரசர்களுடைய குடைகள் யம னுயிர்ப்பிச்சை யேற்கும் பாத்திரங்கள்போ லிருந்தன எனபதாம்.

கள் — இங்கே இசைநிறைத்தற்பொருட்டு விகுதிமேல் விகுதி யாய் வந்தது. காமபு துணிந்துகிடந்த குடையைப் பலியேற்கும் பாத திர்மாகக் குறித்தலால் தற்குறிப்பணி. (௬௫)

[இனி இரண்டொட்டால் இந்திரனெண்ணுதல் சொல்லப்படுகின்றது]

கலிவிருத்தம்

இன்னகளத்தினிரிந்தவரலலாற்
றுன்னினராவிதுறத்தலும்வெங்கூற்
றன்னவன்வாளமராற்றலுநோக்காப்
பொன்னகரத்திறைபுந்தியினேர்ந்தான்.

(இ-ள்.) இன்ன களத்தில் - இப்படிப்பட்ட யுத்தகளத்தில், இரிந் தவர் அல்லால் - ஓடிப்போனவ ரல்லாமல், துன்னினர் - எதிர்த்தவர் கள், ஆவி துறத்தலும் - உயிர் விடுதலையும், வெம் கூற்று அன்னவன் - வெவ்விய யமனையொத்த நளனானவன், வாள அமர் ஆற்றலும் - வாட் போரைச் செய்தலையும், நோக்கா - பார்த்து, பொன் நகரத்து இறை - இந்திரனானவன், புந்தியின் - (தன்) புத்தியில், ஓர்ந்தான் - சிந்தித் தான், எ-று.

(க-து.) ஓடினவர் பிழைத்தலையும், எதிர்த்தவரிறத்தலையும் நளன் வாளின் வல்லமையும் இந்திரனகண்டு ஆலோசித்தான் என்பதாம். ()

மன்றன்மலர்த்தொடைமன்னனையெய்தி
வென்றிகொள்போரைவிலக்கிலமாயிற்
றுன்னுதிரைகடல்சூழுலகெல்லா
மின்றுமுடித்திடுமென்னநினைந்தே.

(இ - ள்.) மன்றல் மலர் தொடை மன்னனை - வாசனைபொருந் திய மலர்மாலையையணிந்த நளனை, எய்தி - அடைந்து, வென்றி கொள் போரை - வெற்றியைக்கொண்ட யுத்தத்தை, விலக்கிலம் ஆயின் - விலக்காமற் போவோமாகில், துன்று - நெருங்கிய, திரை கடல் சூழ் -

அலையையுடைய கடலாற்சூழப்பட்ட, உலகு எல்லாம் - பூவுலகத்தி லுள்ள யாவரையும், இன்று முடித்திடும் என்ன நினைத்து - இன்று கொல்லுவானென்று (இந்திரன் முதலிய நால்வரும்) கருதி, எ - று.

(க - து.) இந்திரன்முதலிய நால்வரும் நளனிடத்துச்சென்று போரைவிலக்கா விடுவோமாகில் உலகத்தை இன்றே கொன்றிடுவா னென்று நினைத்தார்கள் என்பதாம்.

இச்செய்யுளு மேற்செய்யுளுங் குளகமாதலின், இதில் நினைந் தெனனும் வினையெச்சம மேறசெயயுளில் மேவியவெனனும் பெய ரெச்சவினை கொண்டது. இந்திரனுக்குண்டான விந்நினைபபு இரக்க மனறியும போரைத் தான் மூட்டினமையாலு முண்டாயிற்றென்க()

[இதனால் இநதிரன் முதலிய நால்வருந தம்முருக் கொளல் சொல்லபபடுகினறது]

மழைகளிறன்னவன்மாணுருநீங்கி
விழைவொடுதம்முருமேவியவிண்ணோ
ரழகுறுகாளையரவ்வுருவிட்டோர்
கிழவுருவெய்தியகேண்மையரொத்தார்.

(இ - ள்) மழ களிறு அன்னவன் - இளங்களிற்றையொத்த நள னது, மாண் உரு நீங்கி - பெருமைபொருந்திய வடிவததை விட்டுநீங்கி, விழைவொடு - விருபபோடு, தம உரு மேவிய - தங்கள் வடிவைப பொருந்திய, விண்ணோா - தேவாகள, அழகு உறு - அழகின் மிகக, காளையா - காளைபபருவததை யுடையவா, அ உரு விட்டு - அக்காளை வடிவததை விடடு, ஓா கிழ உரு எயதிய - ஒரு கிழவடிவத்தை யடைநத, கேண்மையா - தனமையராதலே, ஒத்தாா - ஒத்தனா, எ-று.

(க - து ) இநதிரன்முதலிய நால்வரும் நளன் வடிவத்தைவிட்டு நீங்கித தங்கள வடிவாகிய தேவாகள் நளனழகுக்குமுன்னே வாலிபா விருதநராளுற்போ லானாாகள எனபதாம். (சுஅ)

[இனி இரணடுபாட்டால் நளன போரை விலக்குதல் சொல்லப்படுகின்றது.]

முன்னுருமேவியமொய்கழல்விண்ணோர்
மன்னனையெய்துபுவாய்மையினானுந்
துன்னலரைத்தெறுதோள்வலியானு
நின்னைநிலத்திடைநேர்பவர்யாரோ.

(இ - ள்.) முன் உரு மேவிய - பழைய வடிவினைப்பெற்ற, மொய் கழல் - நெருஙகிய வீரக்கழலையணிந்த, விண்ணோா - தேவாகள், மன்னனை எய்துபு - நளனையடைந்து, வாய்மையினானும் - சத்தியத்தி னாலும், துன்னலரை தெறு தோள் வலியானும் - சத்துருக்களை கொல் லுகினற புசபலத்தினாலும், நின்னை - உன்னை, நோபவா - ஒப்பவர், நிலத்திடை - பூமியில், யாா - எவா, (ஒருவருமில்லை), எ - று. ஏகாரம் ஈற்றசை.

(க - து.) தேவர்கள் நளனை உண்மையினாலும், வலிமையினாலும், உனக்கு நிகரானவ ரிவ்வுலகத்தி லில்லை யென்றார்கள் என்பதாம்.

யாவரும் புகழ்ச்சியில் வயப்படுதல்போல் மற்றென்றிலும் வயப் படா ரென்பது தெரிந்த தேவர்கள் நளனைப் பூமியில் வாய்மையினும் வலிமையினும் உனக்குச் சமானமானவ ரில்லை யென்றார். உவமேய மாகிய நளனை உவமானமாகக் கூறி அவனுக்கு மற்ற வரசரோடு ஒப பின்மை கூறலால் எதிர்நிலையணி. (௬௯)

துன்றுகளத்தெதிர் துன்னலர்யாரும்
பொன்றமுருக்கியபோர்த்தொழினீங்கி
வென்றிகொள்வேலவமின்னனையாடன்
மன்றன்முடித்தனைவாழியவென்றார்.

(இ - ள்.) வென்றி கொள் வேலவ - வெற்றியைக்கொண்ட வேற்படையையுடைய நளனே, துன்று - நெருங்கிய, களத்து எதிர் - யுத்தகளத்தி லெதிர்த்த, துன்னலர் யாரும் - சத்துருக்களெல்லாம், பொன்ற - இறக்கும்படி, முருக்கிய - கொன்ற, போர் தொழில் நீங்கி - போர்த்தொழிலைவிட்டு, மின் அனையாள்தன் மன்றல் - மின்னலை யொத்த தமயந்தியினது விவாகத்தை, முடித்தனை - செய்துகொண் டவனாகி, வாழிய என்றார் - (நீ) வாழக்கடவை யென்றார்கள், எ - று.

(க - து.) தேவர்கள் போரைவிட்டு விவாகமுடித்துக்கொண்டு தமயந்தியோடு நீடூழி வாழ்கவென்று நளனை வாழ்த்தினார்கள் என்பதாம். (எ0)

[இதனால் இந்திரன்முதலிய நால்வரையும் நளன் வணங் குதல் சொல்லப்படுகின்றது]

விண்ணவரின்னணம்வேண்டினர்கூறப்
புண்ணுறுவெய்யபுலால்கமழ்வைவே
லண்ணலமர்த்தொழிலாற்றிலனாகிப்
பண்ணமைதேரினிழிந்துபணிந்தான்.

(இ - ள்.) விண்ணவர் - தேவர்கள், இன்னணம் - இந்தப்பிரகா ரம், வேண்டினர் - வேண்டினவராகி, கூற - சொல்ல, புண் உறு - மா மிசந்தங்கிய, வெய்ய - வெவ்விய, புலால் கமழ் - புலானாற்றம் வீசு கின்ற, வை வேல் - கூரிய வேற்படையையுடைய, அண்ணல் - நள னானவன், அமர் தொழில் - யுத்தத்தை, ஆற்றிலன் ஆகி - செய்யா தவனாகி, பண் அமை - அலங்கரிப்பமைந்த, தேரின் இழிந்து - தேரி னின்று மிறங்கி, பணிந்தான் - (அந்நால்வரையும்) வணங்கினான், எ-று.

(க-து.) தேவர்க ளிப்படி வேண்ட நளன் போர்செய்யாதவனாய் தேரைவிட்டிறங்கி அவர்களைப் பணிந்தான் என்பதாம்.

போர்த்தொழிலில் முடுகினனாயினும் நளனானவன் தேவர்கள் வேண்டுகோளுக் குடன்பட்டவனாய் அமர்த்தொழில்விட்டுத் தனது பொறைதோன்ற அவரைப் பணிந்தன னென்க. (எக)

[இனி ஐந்துபாட்டால் தேவாகள் வரங்கொடுத்தல் சொல்லப்படுகின்றது.]

கருணையினெய்தியகாளையைநோக்கி
யருமகமெவ்வுழியாற்றினுமாங்க
ணுருவொடுவந்தவியுண்குவமென்று
மருவருநல்வரம்வாசவனீந்தான்.

(இ - ள்.) வாசவன் - இந்திரனெனவன், கருணையின் - அருளி னால், எய்திய காளையை - அடைந்த நளனை, நோக்கி - பார்த்து, அரு மகம் - அரிய யாகத்தை, எவ்வுழி ஆற்றினும் - நீ எவ்விடத்தில் செய்தபோதிலும், ஆங்கண் - அவ்விடத்தில், உருவொடு வந்து - உரு வுடனே அடைந்து, அவி உண்குவம என்று - அவிப்பாகத்தை யா முண்போமென்று, மருவு அரும் - அடைதற்கரிய, நல் வரம் - நல்ல வரத்தை, ஈந்தான் - கொடுத்தனன், எ - று.

(க - து.) இந்திரன் நளனைப்பார்த்து நீ யாகஞ்செய்தால் யாம உருவோடுவந்து அவிப்பாக முண்போமென்று வரங்கொடுத்தான் என்பதாம்.

உருவுடனே தேவாகள்வந்து யாகத்தில் அவிப்பாகங் கொள்வது அருமையென்பது தோன்ற 'மருவருநல்வரம்' என்றார். (எ௨)

மிடல்கெழுமேழகமேற்கொளுமேலோ
னுடைதிரைவேலையினின்னமுதொப்ப
மடிதலிலவெங்கனலின்றியும்வாளா
வடிசிலடும்தொழிலவிஞ்சையளித்தான்.

(இ - ள்.) மிடல் கெழு மேழகமேல் கொள்ளும் மேலோன் - வலிமைபொருந்திய ஆட்டுக்கடாவினமேலேறும் அக்கினிதேவனென வன், உடை திரை வேலையின - உடைகின்ற அலைகளையுடைய கடலிற் பிறந்த, இன் அமுது ஒப்ப - இனிய அமிர்தத்தையொப்ப, மடிதலில் - கெடாத, வெம் கனல் இன்றியும் - வெவ்விய தீ யில்லாமலும், வாளா - சும்மா, அடிசில் - உணவை, அடும் தொழில் - சமைக்குந்தொழிலாகிய, விஞ்சை - வித்தையை, அளித்தான - (வரமாகக்) கொடுத்தான், எ-று

(க - து) அக்கினிபகவான் நளனுக்குத் தீயில்லாமற் சமையல் செய்யும் வித்தையைக் கற்பித்தான் என்பதாம்.

அக்கினிதேவன் இவ்வரங் கொடுத்ததனால் உலகத்தில் இப்பொழுதும் நளபாகம்போலென்று உவமை சொல்லும்படி விளங்கிற்றென்க.()

அல்லலுழந்தனுரெய்தினுநெஞ்சி
னல்லறமெய்தவுநண்ணியநாட்டில்
வெல்படைவேண்டுவவெய்தவும்வென்றிக்
கொல்சினவெம்பகடீர்கொடுத்தான்.

(இ - ள்.) வென்றி - வெற்றியையும், கொல் சினம் - கொல்லா நின்ற கோபத்தையுமுடைய, வெம் பகடு ஊர்தி - வெவ்விய எருமைக் கடா வாகனத்தையுடைய யமனானவன, அல்லல் உழந்து - வருத்தப் பட்டு, அனூ எய்தினும் - துன்பமடையினும், நெஞ்சில் - மனத்தின் கண், நல் அறம் எய்தவும் - நல்ல தருமமடையவும், நண்ணிய - பொருந்திய, ஞாட்பில் - யுத்தத்தில், வெல் படை - வெல்லத்தக்க ஆயு தங்கள், வேண்டுவ - வேண்டுவனவற்றை, எய்தவும் - அடையவும், கொடுத்தான் - (நளனுக்கு வரங்) கொடுத்தான, எ - று

(க-து.) அல்லற்படுங் காலத்துந் தாமசிந்தை யுடையவனா யிருக் குமபடியும் சததுருககளை வெல்லு மாயுதஙகளைப பெறவும் நளனுக்கு யமன வரங்கொடுததான் எனபதாம.

காரணம் காரியததுள்ளதென்பது பிரசிததப்படும்படி யமன் தருமனெனனும பெயாககேற்ப நளனை அல்லற்படும்போதும் நல்லற மெய்தவும் கொலைத்தொழிற கேறப யுததகளத்தில் வெல்படைக ளெயதவும் வரமாகக் கொடுத்தன னெனறா. (எச)

தார்புலராதுதயஙகவும்வேண்டி
னூர்கலிவறறவமைக்கவுமலலா
னீரறுபாலையினெஞ்சினினைபபின்
வார்புனலெய்தவுமவருணனளித்தான்.

(இ - ள்.) வருணன - வருணனானவன், தார - மாலைகள், புல ராது தயங்கவும - வாடாமல விளஙகவும், வேணடின - வேண்டுமா னால், ஆர கலி - சமுத்திரமானது, வறற அமைககவும - வற்றும்படி செயயவும், அலலால - அவையலலாமலும், நீர அறு பாலையின் - நீரில்லாத பாலைநிலததில, நெஞ்சில நினைபபின - நெஞ்சிலே நினைத்தால், வார புனல் எயதவும - நெடிய நீருணடாகவும, அளிததான - (நளனுக்கு வரங்) கொடுததான, எ - று.

(க - து) வருணராஜன் நளனுக்குக் கடல்வற்றச் செய்யவும், நீரில்லாவிடததில் நீருண்டாகச் செயயவும வரங்கொடுத்தான் என் பதாம்.

இதனால் மழைபெய்யா விடினும் இவன் தேசத்துக்கு நீராற் குறைவில்லையாம். (எரு)

ஆண்டகைககின்னவளித்தரிவைக்கு
மாண்டகுகற்பைவருத்துவமென்றுத்
தீண்டினராவிசிதைந்திடுமாறும்
வேண்டுருவெய்தவும்விண்ணவரீந்தார்.

(இ - ள்.) விண்ணவா - இந்திரன் முதலிய தேவாகள், ஆண் டகைக்கு - நளனுக்கு, இன்ன அளித்து - இவ்வரங்களைக் கொடுத்து, அரிவைக்கும் - தமயந்திக்கும், மாண் தகு - மாட்சிமைபொருந்திய, கற்பை - கற்பினை, வருத்துவம் என்று - வருத்துவோமென்று, தீண்

டினா - தொட்டவர்களுடைய, ஆவி சிதைந்திடும் ஆறும் - உயிர் கெடு மாறும், வேண்டு உரு எய்தவும் - வேண்டிய வடிவங்களெடுக்கவும், ஈந்தார் - (வரங்) கொடுத்தனர், எ - று.

(க-து.) இந்திரன்முதலிய தேவர்கள் நளனுக்குந் தமயந்திக்கும் வேண்டிய வுருவம் பெறவும், தமயந்தி கற்பழியத் தீண்டினவர் உயிர் நீங்கவும் வரங்கொடுத்தார்கள் என்பதாம்.

அரிவைக்குமென்பதில் உம்மை எச்சவும்மை யெனக்கொள்க தாங்கள் பலமுயற்சிசெய்துஞ் சம்மதியாமல் மனிதனாகிய நளன் மேல்வைத்த கருத்தின்படி சாதித்ததலால் தேவர்கள் அதில் மிகவும் மகிழ்வுடையவராய்த் தமயந்தி கற்பை வருத்தவெண்ணின் அவருயிர் மாயும்படி வரந்தந்தன ரெனக. (எசு)

[இதனால் தேவர் மகிழ்வோடு தம் பதியடைதல் சொல்லப்படுகின்றது.]

கண்ணகன்ஞாலமளித்தகழற்கா
லண்ணலையேத்தியருந்ததிமானும்
பெண்ணமுதத்தைவியந்துபெருஞ்சீர்
விண்ணவர்தம்பதிமேவினரன்றே.

(இ - ள்.) கண் அகல் - இடமகன்ற, ஞாலம் - பூமியை, அளித்த - இரக்ஷித்த, கழல் கால் அண்ணலை - வீரககழலையணிந்த காலையுடைய நளனை, ஏத்தி - துதித்து, அருந்ததி மானும் - அருந்ததியை யொத்த, பெண் அமுதத்தை - தமயந்தியை, வியந்து - அதிசயித்து, பெரு சீர் விண்ணவர் - மிகுந்த சிறப்புடையுடைய தேவர்கள், தம் பதி - தம முடைய நகரங்களை, மேவினர் - அடைந்தனர், எ - று. அன்று - ஏ - அசைகள்.

(க-து.) இந்திரன் முதலிய தேவர்கள் நளனைப் புகழ்ந்தும் தமயந்தியைக்கண்டதிசயித்தும சுவர்க்கத்திற்குப் போனார்கள் எனபதாம்.

குற்றமில்லாத தன்மேலே திக்கவிஜயம் செய்த மற்றையரசனர் விடுத்தலால் 'ஞாலமளித்த அண்ணல்'' என்றார். அருந்ததிமானுமெனபது பெரும்பாலும் கற்புக்கெனக் கொள்க. பெண்ணமுதத்தை வியந்தென்பது தமயந்தி நற்குண நற்செயகையை யுடைமை. (எஎ)

அங்கண்வானத்தமரருமாழியிற்
பொங்குதானையரசரும்போயபின்
சிங்கவேறனையான்றிகழ்மாமணி
தங்குபைம்பொனிருக்கையிற்சார்ந்தனன்.

(இ - ள்.) அம் கண் வானத்து - அழகிய இடத்தையுடைய தெய்வலோகத் திருந்தவர்த, அமரரும் - தேவரும், ஆழியில் - சமுத்திரம் போல், பொங்கு தானை - மிகுந்த சேனையையுடைய, அரசரும் - அரசர்களும், போய பின் - போனபின்பு, திகழ் மா மணி - பிரகாசிக்கின்ற

மாணிக்க மணிகளிழைத்து, தங்கு - தங்கிய, பைம்பொன் - பசிய பொன்னாற்செய்த, இருக்கையில் - ஆசனத்தில், சிங்க ஏறு அனையான் - சிங்கவேற்றையொத்த நளனானவன், சார்ந்தனன் - சேர்ந்தனன், எ-று.

(க - து) தேவர்களும் அரசர்களும் போனபின்பு நளன் நவமணி பீடத்தி லிருந்தனன் என்பதாம். (எ௮)

சுயம்வரப்படலம் முற்றிற்று.

ஆ செய்யுள் - எ௯௬.

---

## மணம்புரிபடலம்.

[நளமகாராஜன் தமயந்தியை விவாகஞ்செய்தல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்

சாந்தமூழ்குதடமுலைக்கோதையர்
காந்துபைம்பொற்கவரியிரட்டுற
வாய்ந்தசெவ்விமணவினைமாடத்தின்
வேந்தர்சூழ்வரவீமன்வந்தெய்தினான்.

(இ - ள்.) சாந்தம் மூழ்கு - சந்தனக்குழம்பினால் முழுகப்பெற்ற, தடம் முலை கோதையர் - பருத்த முலையையுடைய மாதர்கள், காந்து பைம்பொன் - பிரகாசிக்கின்ற பசிய பொற்காம்பையுடைய, கவரி இரட்டு உற - சாமரைகளை வீச, வாய்ந்த - பொருந்திய, செவ்வி - அழகிய, மண வினை மாடத்தின் - விவாகஞ்செய்யும் உபரிகையில், வேந்தர் - அரசர்களனைவரும், சூழ் வர - சூழ்ந்துவாராநிற்க, வீமன் - வீமராஜன், வந்து எய்தினான் - வந்துசேர்ந்தான், எ-று.

(க-து.) வீமராஜன் விவாகமண்டபத்துக்கு வந்தான் என்பதாம்.

பார்த்தவர்களுடைய கண்களைக் கவர்ந்துகொள்ளும்படி கை போயவரால் அணிசெய்த மாடமென்பதற்கு 'வாய்ந்தசெவ்வி மண வினை மாடம்' எனப்பட்டது. விவாகஞ் செய்வித்தற்குப் பிரதான மானவ னாகையால் முன்னே வீமன் வந்தன னென்றார். (க)

ஆற்றுவேள்வியருந்தவர்சூழ்வரப்
போற்றுநான்மறைகோதமன்போர்கெழு
வேற்றடங்கண்விளங்கிழைமன்றலுக்
கேற்றயாவையுங்கொண்டுடனெய்தினான்.

(இ-ள்.) வேள்வி ஆற்று - யாகங்களைச் செய்கின்ற, அரு தவர் - முனிவர்கள், சூழ் வர - சூழ்ந்துவர, நால் மறை - நாலு வேதங்களை யும், போற்று - போற்றுகின்ற, கோதமன் - கௌதமமுனிவன், போர் கெழு - போரின்மிக்க, வேல் தடம் கண் - வேல்போன்ற விசாலம் பொருந்திய கண்களையுடைய, விளங்கு இழை - தமயந்தியினது, மன்ற

னுக்கு - விவாகத்துக்கு, ஏற்ற யாவையும் - ஏற்ற திரவியமனைத்தை யும், கொண்டு - வருவித்துக்கொண்டு, உடன் - அதனுடனே, எய்தி னான் - வந்தான், எ-று.

(க - து.) கௌதமரிஷி விவாகத்திற்கு வேண்டியவைகளைக் கொண்டுவந்தார் என்பதாம்.

கௌதமமுனி விவாகபத்ததிப்படி அக்கிரியைக்கு வேண்டிய மாவிலை, சமித்து, தருப்பை முதலியவும் வரவழைத்துக்கொண்டு வந்தனனென்பதற்கு 'மணற்றனுக்கேற்ற யாவையுங் கொண்டுட னெய் தினான்' என்றார். (உ)

வேரியந்தொடைவீமனுமவேந்தரும்
தேருநான்மறைசசெல்வருமன்றனுக
கோரையெய்தியதென்றுழையொற்றரா
லாரமார்பற்கறியவுணர்த்தினர்.

(இ - ள்) வேரி தொடை வீமனும் - தேனொழுகு மலாமாலையை யணிந்த வீமராஜனும், வேந்தரும - அரசாகளும், தேரும் நானமறை செல்வரும் - நாலு வேதங்களையு மறிந்த பிராமணாகளும், மனற னுக்கு - விவாகத்திற்கு, ஓரை எய்தியது என்று - முகூர்த்தகாலம் வந்ததென்று, உழை - அருகிலிருந்த, ஒற்றரால - வேவுகாரரால், ஆரம மாாபறகு அறிய - நளமகாராஜனுக்குத் தெரியும்படி, உணாத்தி னா - தெரிவித்தாாகள், எ-று. அம - அசை.

(க - து) வீமராஜன முதலானோா முகூாத்தலக்கினம் வந்த தென்று வேவுகாரராலே நளனுக கறிவித்தாாகள எனபதாம.

விவாககிரியைக்கு முனபு நடக்கவேண்டிய சடங்குக ளனைத் தையு முடிக்கவேண்டி நளமகாராஜனைத தூணடு நினைபபுடையவா 'ஓரையெய்தியதென்று ஒற்றரால் ஆரமாாபற குணாத்தினா'என்றா.()

ஒற்றர்கூறவொளிர்முடிவேந்தனைக
கற்றைவார்சடைககாசிபனாதியோர்
சொற்றநான்மறைநூல்வழித்தூமணிப்
பொற்றசும்பினிற்பூம்புனலாட்டினர்.

(இ - ள்.) ஒற்றா கூற - ஒற்றா சொல்ல, (அவ்வளவில்) ஒளிா முடி வேந்தனை - விளங்குகின்ற மகுடத்தையுடைய நளனை, கற்றை வாா சடை - மயிாத்தொகுதியாகிய நெடிய சடையையுடைய, காசி பன் ஆதியோா - காசிபன்முதலிய முனிவாகள், சொற்ற நான்மறை நூல் வழி - வேதநூலிற் சொல்லிய வழிப்படி, தூ மணி - பரிசுத்த மாகிய நவமணிகள் பதித்த, பொன் தசும்பினில் - பொற்குடத்திற் கொணர்ந்த, பூ புனல் ஆட்டினா - பொலிவையுடைய தீாத்தங்களி னால் ஸ்நானஞ் செய்வித்தாாகள், எ-று.

(க-து.) காசிபாமுதலான முனிவர்கள் கொண்டுவந்த புண்ணிய தீர்த்தத்தினலே நளனை ஸ்நாநஞ் செய்வித்தார்கள் என்பதாம்.

பூம்புன லெனலால் கங்கையாகிய தீர்த்த மெனக்கொள்க. நால் வழிப் பூம்புனலாட்டின னெனலால் முப்பத்திரண்டுவகையுள்ள ஓமாலி கையையும் தவாப்பத்தையும் விளை ஐந்தையும் பூசி முழுக்காட்டின னென்க. இவைகள சுயம்வரட படலததில 'களிமகிழ் வெயதி' என்னும் நாற்றெண்பதாம்பாட் டுரையிறகாண்க. (௪)

புனிற்றிளமபிறைக்கண்ணியன்பூங்கழன்
மனத்தினெண்ணிவழிபட்டுமாமறை
யனைத்தும்வல்லவறநெறியந்தணர்
நினைத்தயாவையுநீரொடுநலகினான்.

(இ - ள) புனிற்று இள - மிகுந்த இளமைபொருந்திய, பிறை கண்ணியன் - பாலசந்திரனாகிய மாலையணிந்த பரமசிவனுடைய, பூ கழல் - அழகியபாதங்களை, மனத்தின எண்ணி - இதயததிலே தியானிதது, வழிபட்டு - பூசிதது, மா மறை அனைததும் வலல - வேத முழுதுந்தெரிந்த, அறம் நெறி அந்தணா - தருமமார்க்கத்தினின்ற பிராமணாகள, நினைதத யாவையும - நினைததவை யனைததையும, நீரொடு - நீருடனே, நலகினான - கொடுத்தனன, எ-று.

(க - து) நளன பிராமணாகளா நினைததயாவையுந் தானமாகக் கொடுததான எனபதாம.

புனிறறிளம்பிறைக் கண்ணியன் வழிபடு கடவுளெனக் கொளக. வழிபடல் - பூசிததலாம. குறிட்டறிந் திபவனாதலால் அந்தணா நினைத்தயாவையும நீரொடு தானஞ்செயதன னெனக (௫)

[இதுமுதல் ஆறுபாட்டால் நளனுக்கு அலங்கரித்தல் சொல்லப்படுகின்றது]

அழகுவாய்ப்பவணிபவரண்ணலைத்
தொழுதுநல்லருள்பூண்டுசுடர்விரி
மழவுநன்கதிர்மால்வரைசேர்ந்தெனச்
செழுமணிப்பொற்றிகழ்முடிசூட்டினார்.

(இ - ள்-) அழகு வாய்ப்ப - அழகுபொருந்த, அணிபவா - ஆபரணந் தரிப்பவர்கள், அண்ணலை தொழுது - நளனைவணங்கி, நல அருள் பூண்டு - (அவனுடைய) கிருபைபெற்று, சுடா விரி - கிரணம் விரி கின்ற, மழவு நல் கதிர - இளஞ்சூரியனானவன, மால் வரை சேர்ந்தது என - உதயகிரியில வந்ததுபோல, செழு மணி - செழுமையுள்ள மணி களபதித்து, பொன் - பொன்னாற்செய்து, திகழ் முடி - பிரகாசிக் கின்ற கிரீடத்தை, சூட்டினா - தரிததாாகள், எ-று.

(க-து.) நளனுக்கு முடிதரித்தாாகள் என்பதாம்.

அணிதலில் வல்லவரென்பதுதோன்ற 'அழகுவாய்ப்ப வணிபவா' என்றும், நளனருள் பெற்றெனபதற்கு 'நல்லருள் பூண்டு' என்றும் அரசாக்குப் பிரதானமாகையால் 'முடிசூட்டி' என்றுஞ் சொல்லினா. 'கதிாவரை சேர்ந்தென' என்னலால் உவமையணி. (௬)

புயங்களென்னும்பொலங்கிரிமீதுவான்
றயங்குசோதிக்கதிர்கடவழ்ந்தெனக்
கயங்கொள்வள்ளைக்கவின்கவர்காதினில்
வயங்குபைம்பொன்மணிக்குழைசேர்த்தினர்.

(இ-ள்.) புயங்கள் என்னும் பொலம் கிரிமீது - தோள்களென்கின்ற மேருமலையின்மேல், வான் தயங்கு - ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற, சோதி - ஒளியையுடைய, கதிர்கள் - சூரியர்கள், தவழ்ந்தது என - தவழ்ந்ததைப்போல், கயம் கொள் - தடாகங்கள் கொண்ட, வள்ளை - வள்ளையிலையினுடைய, கவின் கவர் - அழகைக் கொண்ட, காதினில் - செவிகளில், வயங்கு - பிரகாசிக்கின்ற, பைம்பொன் - பசிய பொன்னாற் செய்த, மணி குழை சேர்த்தினர் - ரத்ந குண்டலங்களைத் தரித்தார்கள், எ-று.

(க-து) நளன் செவியில் குண்டல மணிந்தார்கள் என்பதாம்.

நளன் புயங்களென்னும் பொலங்கிரி யென்றது உருவகவணி; கதிர்கள் தவழ்ந்தென மணிக்குழை யென்றது உவமையணி, வள்ளைக் கவின்கவர் காதென்றது காட்சியணி. இம்மூன்றுங் கலந்து வருதலிற் கலவையணி. (எ)

வண்ணமேகலையார்மனங்கூட்டுணக்
கண்ணகன்றுகவின்செயுமார்பிடை
யண்ணன்மால்வரைதாழுமருவிபோற்
றெண்ணிலாமணியாரவடஞ்சேர்த்தினர்.

(இ-ள) வண்ணம் மேகலையார் மனம் கூட்டுண - அழகிய மேகலையைத்தரித்த மங்கையர்களுடைய நெஞ்சைக் கொள்ளைகொள்ள, கண் அகன்று - இடமகன்று, கவின் செயும் - அழகைச்செய்யும், மார்பிடை - மார்பினகணே, அண்ணல் மால் வரை - பெரிய மேருமலையில், தாழும் அருவி போல - தாழ்ந்தொழுகு மருவிநீரைபபோல், தெள் நிலா - தெளிந்த ஒளியையுடைய, மணி ஆர வடம் - முத்துவடங்களை, சேர்த்தினர் - தரித்தார்கள், எ-று.

(க - து) நளன்மார்பில் முத்துமாலை யணிந்தார்கள் என்பதாம்.

மார்தாக்குத் தழுவற்குரிய ஆடவர் மார்பிடத்தில் மிகுந்த மகிழ்ச்சி யென்பது தோன்ற மேகலையார்மனங் கூட்டுணு மார்பெனப்பட்டது. மார்பிடை வரைதாழ் மருவிபோல வடஞ்சேர்த்தினரென்றால் உவமையணி. (அ)

பூமலர்ச்செழுங்கற்பகமபுலலிய
காமர்வல்லியெனககவின்செயதிடத்
தூமணிச்சுடர்தூங்குபொலந்தொடி
தேமலர்த்தொடைதிண்புயஞ்சேர்த்தினர்.

(இ-ள்.) பூ மலர் - பொலிவு பொருந்திய மலர்களையுடைய, செழு கற்பகம் புல்லிய - செழுமையுள்ள கற்பகமரத்தைத் தழுவிய, காமர் வல்லி என - அழகிய வல்லியென்னுங் கொடிபோல், கவின் செய்திட - அழகைச்செய்ய, தூ மணி சுடர் தூங்கு - பரிசுத்தமாகிய நவமணியின் கிரணங்கள் தங்கிய, பொலம் தொடி - அழகிய தோள்வளையை, தேன் மலர் தொடை திண் புயம் - வாசனைபொருந்திய மலர்மாலையை யணிந்த திண்ணிய தோள்களில், சோததினார் - தரித்தார்கள், எ-று.

(க-து) நளன் தோள்களில் வாகுவலயந் தரித்தார்கள் என்பதாம்.

கற்பகம்புல்லிய காமர்வல்லிபோல் பொலந்தொடியைத் திண புயஞ் சோததினு ரெனலால் உவமையணி. (௯)

துளங்குதெண்டிரைசூழ்கடல்வையக
மளந்துகோடற்கருவிலைப்பூந்துகில
விளங்குபொன்னங்கிரியினைவெண்முகில்
வளைந்ததென்னமருங்கினிற்சாத்தினர்.

(இ-ள்.) துளங்கு - அசைகின்ற, தெள் திரை சூழ் கடல் வையகம் - தெளிந்த அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட பூமியை, அளந்து கோடற்கு - அளவிட்டுக் கொள்வதற்கு, அரு விலை பூ துகில் - அரிய விலையையுடைய அழகிய ஆடையை, விளங்கு - பிரகாசிக்கின்ற, பொன் கிரியினை - மேருமலையை, வெண் முகில - வெள்ளை மேக மானது, வளைந்தது என்ன - சூழ்ந்ததுபோல், மருங்கினில் சாததினர் - அரையின்கண் தரித்தார்கள், எ-று அம்-அசை.

(க-து.) நளனிடையி லாடை தரித்தார்கள் என்பதாம்

பொன்னங்கிரியினை வெண்முகில் வளைந்ததென்னப் பூந்துகில் மருங்கினிற் சோததினு ரெனலால் உவமையணி. (௧0)

பாந்தளேந்தியபார்பொதுநீக்கிய
வேந்தல்சேவடிப்போதினெழிலபெற
வேந்தர்பொன்முடிதேய்த்துவிளங்கிய
காந்துபைம்பொற்கனைகழலவீக்கினர்.

(இ - ள்.) பாந்தள் ஏந்திய பார் - ஆதிசேடனால் சுமக்கப்பட்ட பூமியை, பொது நீக்கிய - யாவருக்கும் பொதுவாதலை நீக்கிய, ஏந்தல் - நளனது, சேவடி போதின் - சிவந்த பாதமலர்களில், எழில் பெற - அழகுபெறும்படி, வேந்தர் பொன் முடி தேயத்து - அரசர்க ளுடைய சுவர்ண கிரீடங்களால் தேயக்கப்பட்டு, விளங்கிய - பிர காசித்த, காந்து - சொலிக்கின்ற, பைம்பொன் - பசும்பொன்னாற் செய்த, கனை கழல் - ஒலிக்கும் வீரக்கழலை, வீக்கினர் - கட்டினார்கள், எ-று.

(க-து.) நளன் வலப்பாதத்தில் வீரக்கழ லணிந்தார்களென்பதாம்.

பூமி அரசர்க்கெல்லாம் பொதுவாயிருப்பதை நீக்கித் தனதாக்கி ஆளுகையால் 'பாரபொதுநீக்கிய வேந்தல்' என்றார். வீரத்தன்மை தோன்றக் கனைகழல் வீக்கினார் எனப்பட்டது. (கக)

இன்னபேரணியாவுமெழில்செயத்
துன்னியெங்குமுழவந்துவைத்திடப்
பொன்னைஞ்சூழிப்புகர்முகவெற்பின்மேன்
மன்னர்மன்னன்மகிழ்ச்சியொடேகினான்.

(இ - ள்.) இன்ன - இப்படிப்பட்ட, பேர் அணி யாவும் - பெரிய விலையுள்ள ஆபரணங்களனைத்தும், எழில் செய - அழகினைச்செய்ய, எங்கும் துன்னி - எவ்விடத்தும் நெருங்கி, முழவம் துவைத்திட - பேரிகைகள் ஒலிசெய்ய, பொன் - பொன்னாற்செய்த, அம் - அழகிய, சூழி - முகபடாத்தையுடைய, புகர் முகம - புள்ளிபெற்ற முகத்தையுடைய, வெற்பின்மேல் - மலையையொத்த யானையின்மேல், மன்னர் மன்னன் - நளனென்பவன், மகிழ்ச்சியொடு ஏகினான் - மகிழ்ச்சியுடன் சென்றான், எ-று.

(க - து.) நளன் யானையேறிச் சென்றான் என்பதாம்.

அரசன் புறப்படல் யாவர்க்கும் தெரிவித்தல்போல் 'எங்குமுழவந் துவைத்திட' என்றும், சக்கரவர்த்தி யென்பதுதோன்ற 'மன்னர் மன்னன்' என்றுஞ் சொல்லினார். (கஉ)

நேமிசூழ்ந்தநெடுநிலமன்னவர்
தாமவெண்குடைதாங்கினர்பின்வர
வாமமேகலைமங்கையரங்கையிற்
காமர்செம்பொற்கவரியிரட்டவே.

(இ-ள்.) நேமி சூழ்ந்த நெடு நில மன்னவர் - சமுத்திரஞ் சூழ்ந்த நெடிய பூவுலகத்தரசர், தாமம் - மாலையணிந்த, வெண் குடை தாங்கினர் - வெண்கொற்றக்குடையைச் சுமந்தவராகி, பின் வர - பின்னே வரவும், வாமம் மேகலை மங்கையர் - அழகிய மேகலாபரணத்தையுடைய மாதர்கள், அங்கையில் - அழகிய கையினால், காமர் - அழகிய, செம் பொன் கவரி - சிவந்த பொற்காம்பையுடைய சாமரைகளை, இரட்ட - வீசிவரவும், எ-று. ஏ - அசை.

(க - து.) வேந்தர் குடை பிடிக்கவும், மாதர் சாமரை வீசவும் என்பதாம்.

குடைதாங்குதல் அருமையாதலால் அதற்கேற்ப அரசரையும், கவரியிரட்டல் எளிதாதலால் அதற்கேற்ப மங்கையரையுஞ் சொல்லினார்.()

தண்ணந்தாமரைத்தாக்கணங்கன்னவர்
கண்ணுநெஞ்சுமுவந்துகளிப்புற
வெண்ணில்வேதியராசியியம்பிட
வண்ணமாமணிமண்டபத்தெய்தினான்.

(இ - ள்.) தண் தாமரை - குளிர்ச்சிபொருந்திய தாமரைமலரிலிருக்கின்ற, தாக்கணங்கு அன்னவர் - இலக்குமியையொத்த மங்கையர், கண்ணும் நெஞ்சும் உவந்து - கண்ணு மனமும் மகிழ்ச்சியடைந்து, களிப்பு உற - களிப்புமிக, எண் இல் வேதியர் ஆசி இயம்பிட - அளவற்ற பிராமணர்கள் ஆசீர்வதிக்க, வன்ன மா மணி - அழகிய மாணிக்கமணிகள் பதித்த, மண்டபத்து எய்தினன் - மண்டபத்தில் வந்துசேர்ந்தான், எ-று. அம்-அசை.

(க - து.) மாதர்கள் மகிழ மறையவர் வாழ்த்த நளன் விவாக மண்டபத்தில் வந்தான் என்பதாம்.

நினைக்கு நெஞ்சு களித்தற்கு நோக்குங் கண் காரணமாதலால் 'கண்ணுநெஞ்சு முவந்து களித்திட' என்றும், மண்டபத்தெய்துஞ் சமயமாதலில் 'எண்ணில் வேதிய ராசியியம்பிட' என்றுஞ், சொல்லினர் ()

வேனிலைங்கணைவேள்புறங்காத்திடப்
பானலுண்கட்பனிமதிவாணுதற்
றேனவாங்குழற்றேமொழியைக்கொடு
மானினோக்கின்மடந்தையரெய்தினர்.

(இ - ள்.) வேனில் ஐங்கணை வேள் புறம் காத்திட - வசந்தகாலத்திற்குரிய பஞ்சபாணங்களையுடைய மன்மதனானவன் புறங்காத்து வர, பானல் அம் கண் - நீலோற்பலம்போன்ற அழகிய கண்களையும், பனி மதி வாள் நுதல் - குளிர்ச்சிபொருந்திய சந்திரனையொத்த ஒளி பொருந்திய நெற்றியையும், தேன் அவாம் குழல் - வண்டுகள் விரும்புகின்ற கூந்தலையும், தேமொழியை கொடு - மதுரமான சொல்லையுமுடைய தமயந்தியை யழைத்துக்கொண்டு, மானின் நோக்கின் மடந்தையர் - மான்பார்வையை யொத்த பார்வையையுடைய மாதர்கள், எய்தினர் - அடைந்தார், எ - று.

(க - து.) மாதர்கள் தமயந்தியை யழைத்துக்கொண்டு வந்தார்கள் என்பதாம்.

நளனை வெல்லும்படி வந்தவளாதலால் அதுபற்றி 'வேள் புறங்காத்திட' என்றார். (௫)

கள்ளறுமலர்நாற்றியெண்காவத
முள்ளகன்றவொளிர்மணிமாடத்தின்
பிள்ளைமானிகர்நோக்கியைப்பெய்கழல்
வள்ளலோடுமணத்தவிசேற்றினர்.

(இ-ள்.) கள் அறு மலர் நாற்றி - தேன் நீங்கா மலர்மாலை தூக்கி, எண் காவதம் - எட்டுக்காததூரம், உள் அகன்ற - உள்ளேவிரிந்த, ஒளிர் மணி மாடத்தின் - பிரகாசம்பொருந்திய மணிகள்பதித்த உபரிகையில், பிள்ளை மான் நிகர் நோக்கியை - இளமான் பார்வைபோன்ற பார்வையையுடைய தமயந்தியை, பெய் கழல் வள்ளலோடு - வீரக்கழலை யணிந்த நளனுடன், மணம் தவிசு ஏற்றினர் - கல்யாணமேடையில் ஏற்றினார்கள், எ-று.

(க - து.) தமயந்தியை நளனொடு கல்யாணமேடையி லேற்றி னார்கள் என்பதாம்.

இடமுழுவதும் அலங்கரித்தமை தோன்ற 'கள்ளறுமலா நாற்றி யெண் காவதம்' என்றார். (கசு)

உதகநல்குநல்லோரையிஃதென
விதியினாடிக்கணிதர்விளம்பலும்
பதலையார்த்தெழப்பாவையைநல்கிய
மதுமலர்த்தொடைமன்னெழுந்தனரோ.

(இ - ள்) உதகம் நல்கும் - தாரைவார்க்கின்ற, நல் ஓரை இஃது என - நல்லமுகூர்த்தம் இதுவென்று, விதியின் நாடி - சோதிட விதிப் படி பார்த்து, கணிதர் விளம்பலும் - கணிதநூலோர் சொன்னவள வில், பதலை ஆர்த்து எழ - வாத்தியங்கள் மிகவொலிக்க, பாவையை நல்கிய - தமயந்தியைப் பெற்ற, மது மலர் தொடை மன் - தேனொ ழுகு மலர்மாலையையணிந்த வீமன், எழுந்தான் - எழுந்தனன், எ-று. அரோ - அசை.

(க - து) சோதிடர் முகூர்த்தலக்கின மிதுவென்று சொல்ல வீம னெழுந்தான் எனபதாம்.

தாரைவார்க்கின்ற காலமாதலால் 'பதலையார்த்தெழப் பாவையை நல்கிய மன்னெழுந்தான்' என்றார். (கஎ)

கமலமீதுசெங்காந்தளலர்ந்தெனக்
குமரனங்கையிற்கோல்வளைசெங்கைவைத்
திமயமாதுமிறைவனும்போலவாழ்ந்
தமைதிரென்னவரும்புனனல்கினான்.

(இ - ள்.) கமலம் மீது - தாமரை மலரின்மேல், செம் காந்தள் அலர்ந்தது என - சிவந்த காந்தள்மலர் பூத்ததுபோல், குமரன் அங்கை யில் - நளனது அழகிய கைமேல், கோல்வளை - தமயந்தியினது, செம் கை வைத்து - சிவந்த கையை வைத்து, இமய மாதும் இறைவனும் போல வாழ்ந்து - பார்வதியும் பரமசிவனும்போல வாழ்ந்து, அமைதிர் என்ன - பொருந்தியிருமென்று, அரு புனல் - அரியநீரை, நல்கினான் - வார்த்தான், எ-று.

(க - து ) வீமன் நளன்கையில் தமயந்திகையைவைத்து வாழ்ந் திருங்களென்று தாரைவார்த்தான் என்பதாம்.

கமலமலரையும் காந்தண்மலரையும் நளன் தமயந்தி யென்னும் இருவர் கரங்களுக்கும், இமயமாதையும் இறையையும் அவ்விருவர்க் கும் இணைசொல்லுதலால் உவமையணி. (கஅ)

சாந்தமூழ்குதடம்புயனாரழற்
கேய்ந்தயாவுமினிதுமுடித்தபி

ஞய்ந்தநான்மறையின்வழியாயிழை
காந்தண்மெல்விரற்கைபிடித்தானரோ.

(இ - ள்.) சாநதம் மூழ்கு - சந்தனக்குழம்பால் மூழ்கபபெற்ற, தடம் புயன - பருத்த புயஙகளையுடைய நளனானவன, ஆர அழற்கு ஏய்ந்த யாவும - பொருநதிய அககினி காரியததுக்குப பொருநதிய வினைத்தையும், இனிது முடிதத பின - இனிமையோடு செய்து முடிததபினபு, ஆயந்த - ஆபாதிராககிஙறை, நான மறையின் வழி - வேத மார்க்கப்படி, ஆயிழை காநதள மெலல விரல் - தமயந்தியினது காநத ளரும்புபோனற மெல்லிய விரல்களை, கை - தனகையால, பறறினன - பிடித்தான், எ-று. அரோ-அசை.

(க - து.) நளன் தமயந்தி கையைபபிடிததான் எனபதாம.

விவாககோலந தோனற 'சாநதமூழகு தடம்புயன' எனறும், அர சர்க்குப் பாணிககிரகணமே சிறபபெனபது தோனற 'நானமறையின் வழி யாயிழை காந்தள மெல்விரல கைடபிடிதது' எனறும், சொல்லினா. (கக)

பொங்குசெந்தழலசூழ்வந்துபூம்பொரி
செங்கையாரச்சொரிந்துதிருமகள்
பங்கயப்பதம்பைம்பொனினம்மிவைத்
தங்கண்வானத்தருந்ததிகாட்டினன்.

(இ - ள்.) பொங்கு செம் தழல் சூழ்வந்து - மிகுநத அக்கினியை வலம்வநது, பூ பொரி - அழகிய பொரியை, செம் கை ஆர சொரிந்து - சிவநத கைநிறைய அததீயிலிடடு, திருமகள் - தமயநதியினது, பங் கயம் பதம் - தாமரைமலாபோன்ற பாததததை, பைம்பொனின் அம்மி வைத்து - பசியபொன்னாறசெயத அம்மியினமேற் றாக்கிவைத்து, அம் கண் வானத்து - அழகிய இடததையுடைய ஆகாயததிலிருக்கின்ற, அருந்ததி காட்டினன - அருந்ததி நக்ஷத்திரத்தைக் காண்பித்தான், எ - று.

(க - து.) அக்கினி வலம்வந்து பொரி யிறைத்துத் தமயந்தி பாதத்தை யம்மியில்வைத்து அருந்ததியைக் காட்டினன் என்பதாம். இப்படி செய்தற்கு விதி விவாகபததியிற காண்க. (உ0)

ஏனையுள்ளனயாவுமுடித்தபின்
மானினோக்கியோர்வல்லியினொல்கிப்போய்த்
தானையங்கடற்றாதைபொற்றாளினிற்
றேனவாங்குழற்றேமலர்சூட்டினள்.

(இ-ள்.) ஏனை உள்ளன யாவும் முடித்த பின் - மற்ற காரியங்கள் எல்லாம் முடித்தபின்பு, மானின் நோக்கி - தமயந்தியானவள், ஓர் வல்லியின் - ஒருகொடிபோல், ஒல்கி போய் - அசைந்து போய், தானை கடல் - சேனைசமுத்திரத்தையுடைய, தாதை பொன் தாளினில் - தகப் பனாகிய வீமனது பொற்பாதங்களில், தேன் அவாம் - வண்டுகளால்

விரும்பப்படுகின்ற, குழல் - கூந்தலாகிய, தேனமலா - வாசனைபொருந்திய மலரை, சூட்டினாள் - தரித்தாள், எ - று. அம் - அசை.

(க-து.) தமயந்தி தனபிதாவின் காலில விழுந்தாள் என்பதாம்

விவாகமுடிவில தந்தையை வணஙகி மஙகலவாழததுப பெறுதல் மகளிாக்கு இயலபாதலின, அவவாறு தமயநதியும் தன தாதையாகிய வீமனை வணஙகினு ளெனக. (உக)

சென்னிதாழ்த்துவணங்கியதேமொழி
மின்னனுளையுவந்துவிதாபபர்கோன
பொன்னந்தாமரைப்பூவையுமாலுமபோன்
மன்னர்கோனொடும்வாழ்கெனவாழ்த்தினன்.

(இ-ள்.) சென்னி தாழதது வணஙகிய - தலைவணஙகிப பணிந்த, தேன் மொழி மின் அன்னுளை-தேனபோனற சொலலையுடைய மினனலைப்போல விளஙகுகினற தமயநதியை, உவநது - மகிழநது, விதாப பாகோன - வீமனனவன, பொன தாமரை பூவையும் மாலும் போல் - அழகிய தாமரையில் வீற்றிருக்கும் இலககுமியையும திருமாலையும் போல், மன்னா கோனொடும வாழ்க என - இராஜாதி ராஜனுன நளனொடும் வாழக்கடவையெனறு, வாழததினன - வாழ்த்தினன், எ-று. அம் - அசை.

(க - து.) வீமன, தமயந்தியை நளனொடு வாழ்கவென்று வாழ்த்தினன் என்பதாம்.

இங்கே காபபதுகருதி மாலையும், செலவமிகுதிகருதி திருமகளையும், நளனுக்கும் தமயநதிக்கும் உவமை கூறலாயிற்று. அவ்விருவரையும்போல் நெடுங்காலம் வாழகவென வாழததினனெனினும் அமையும். (உஉ)

முருகுவாய்மடுத்துண்டளிமூசுபூந்
தெரியன்மார்பினன்தேசிகர்தாடொழு
துருகுமன்பினுவந்துவிதர்ப்பர்கோன
வரைகொண்மார்பமகிழ்வுறப்புல்லினன்.

(இ - ள்.) முருகு வாய் மடுத்து - தேனை யுண்டு, அளி மூசு - வண்டுகள் மொய்க்கப்பெற்ற, பூ தெரியல் மாபினன - மலா மாலையையணிந்த மாாபையுடைய நளனனவன், தேசிகா தாள் தொழுது - ஆசிரியரது பாதத்தை வணங்கி, உருகும் அன்பின் - கரைகின்ற பத்தியினல், உவந்து - மகிழ்ந்து, விதாபபாகோன் - வீம ராஜனுடைய, வரை கொள் மாாபு - மலையின தழகைக்கொண்ட மாாபினை, மகிழ்வு உற - மகிழ்ச்சியடைய, புல்லினன - தழுவினன், எ-று. அம்-அசை.

(க - து.) நளன் குருவைவணங்கி வீமனைத் தழுவினன் என்பதாம்.

தேசிகராதலின் ' தாடொழுது' என்றும், தான் சக்கரவர்த்தியா தலின் 'விதாப்பாகோன் வரைகொண்மாரப மகிழ்வுறப் புல்லினான்' என்றுஞ் சொல்லினார் (உ௩)

கோதினன்மறைக்கோதமனாதியா
மாதவத்துமுனிவருமன்னருங்
காதல்வேலைகரையழிந்தோங்கிட
வாதரத்தொடுமாசியியம்பினார்.

(இ - ள்.) கோது இல் நால் மறை - குற்றமற்ற நாலுவேதங்களை யுடைய, கோதமன ஆதி ஆம் - கௌதமமுனிமுதலாகிய, மா தவத்து முனிவரும் - பெரிய தவத்தைச் செய்யும் தபோதனரும், மன்னரும் - அரசரும், காதல் வேலை - ஆசையாகிய கடலானது, கரை அழிந்து - கரைகெட்டு, ஓங்கிட - உயர, ஆதரத்தொடும் - அன்புடனே, ஆசி இயம்பினார் - ஆசீர்வதித்தார்கள், எ-று.

(க - து) முனிவரும் அரசரும் நளனை வாழ்த்தினார்கள் என்பதாம்.

தவமாதியவற்றிற் றலைமையுடைமைபற்றி கோதமனாதியா முனிவர் என்றார் விவாகமுடிவில் ஆசிகூறல் பெரியோர்கடனென்பதாம். ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

இன்னவைநிகழ்ந்தபின்னரிறைவனுமணங்கனாளும்
பொன்னரிமாலைநாற்றிப்பூம்புகைகமழவூட்டிப்
பன்னருஞ்சிறப்புவாய்ந்துபனியிருவிசும்புபாரின்
மன்னியதனையகோலமணவறையெய்தினாரே.

(இ - ள்.) இன்னவை நிகழ்ந்த பின்னர் - இத்தன்மையானவை நடந்தபின்பு, இறைவனும் - நளனும், அணங்கு அனாளும் - தமயந்தியும், பொன் அரி மாலை நாற்றி - பொன்னரிமாலைகளைத் தொங்கக்கட்டி, பூம் புகை கமழ ஊட்டி - அழகிய புகையை பரிமளிக்கும்படி ஊட்டுவித்து, பன் அரும் - சொல்லுதற்கரிய, சிறப்பு வாய்ந்து - சிறப்புப் பொருந்தி, பனி - குளிர்ச்சிபொருந்திய, இரு விசும்பு - பெரிய பொன்னுலகம், பாரில் மன்னியது அனைய - பூமியின்கண் பொருந்தியிருந்தால் அதையொத்த, கோலம் - அழகிய, மணம் அறை - படுக்கையறையை, எய்தினார் - அடைந்தார்கள், எ-று. ஏ-அசை.

(க - து.) நளனுந் தமயந்தியும் பள்ளியறையிற் சேர்ந்தார்கள் என்பதாம்.

பூவுலகில் அவ்வள வழகுள்ள விடமொன்று மில்லாமையால் 'விசும்புபாரின் மன்னியதனையகோல மணவறை' என்றார். (உ௫)

பாயிருட்பிழம்புசீத்துப்பகற்கதிருமிழும்வெய்ய
காயெரிமணியிற்செய்தகவின்றிகழ்மஞ்சமீது
தூயமென்பஞ்சியன்னதூவியூறினியசெய்யு
மாய்மயிர்முதலமூவைந்தடுக்கியவமளிசேர்ந்தார்.

(இ - ள்.) பாய் இருள் பிழம்பு சீத்து - பாயாநின்ற இருளினது திரட்சியைப் போக்கி, பகல் கதிர் உமிழும் - சூரியகிரணங்களைக் கொப்புளிக்கின்ற, வெய்ய - வெவ்விய, காய எரி - சுடுகின்ற அக்கினி போன்ற, மணியில் செய்த - மணிகளாற் செய்யப்பெற்ற, கவின் திகழ் - அழகு விளங்குகின்ற, மஞ்சமீது - கட்டிலின்மீது, தூய மெல் பஞ்சி - சுத்தமாகிய மெல்லிய பஞ்சியிலும், அன்னம் தூவி - அன்னப்புள்ளின் சிறகாலும், ஊறு - பரிசம், இனிய செய்யும் - இனியவாகச் செய்கின்ற, ஆய் - ஆயாநின்ற, மயிர் முதல - மயிர்முதலியவாக, மூவைந்து - பதினைந்தாக, அடுக்கிய - ஒன்றின் மேலொன்று சேர்த்த, அமளி - மெத்தையின் மேல், சேர்ந்தார் - சேர்ந்தார்கள், எ-று.

(க - து.) பதினைந்து பஞ்சணையடுக்கிய கட்டிலின்மேற் சேர்ந்தார்கள் என்பதாம்.

பஞ்சியெனப் பொதுப்படக் கூறினமையால் செம்பஞ்சு வெண்பஞ்சு இரண்டுங்கொள்க. "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேண மூறு தூவிசையையோ டைந்து" என்றார் பிறரும். மூவைந்தென்றமையால் ஐந்துவகை யொன்றுக்குச்செய்த மூன்று மெத்தையெனக் கொள்க. அம்மூன்றும் ஒன்று போகநுகர்தற்கும் இரண்டு இருவரும் தனித்தனி நித்திரைசெய்தற்கு மாம். (௨௬)

போயிறுமருங்குலென்னப்புணர்முலைசுமக்கலாற்றாச்
சேயிழைபஞ்சியார்ந்தசீறடிக்கமலப்போதின்
மீயுயர்விசும்புபூத்தமின்னுருக்கொண்டதன்ன
வாயிரங்கோடிமாதரயினிநீர்சுழற்றிப்போனார்.

(இ - ள்.) மருங்குல் - இடையானது, போய இறும் என்ன - இற்றுப்போய்விடு மென்னும்படி, புணர் முலை சுமக்கல் ஆற்றா - நெருங்கிய முலைகளைச் சுமக்கமாட்டாத, சேயிழை - தமயந்தியினுடைய, பஞ்சி ஆர்ந்த - செம்பஞ்சுநிறைந்த, சீறடி - சிறிய அடிகளாகிய, கமல போதின் - தாமரைமலரின்மேல், மீ உயர் - மேலாகவுயர்ந்த, விசும்பு பூத்த - மேகத்திலுண்டாகிய, மின் - மின்னல், உரு கொண்டது அன்ன - பெண்வடிவு கொண்டதென்னும்படியுள்ள, ஆயிரம் கோடி மாதர் - ஆயிரங்கோடி மங்கையர்கள், அயினி நீர் - சோறிடப்பட்ட மஞ்சள் நீரை, சுழற்றி போனார் - சுழற்றினார்கள், எ-று.

(க - து.) ஆயிரங்கோடிப்பெண்க ளாலஞ்சுழற்றிப் போனார்கள் என்பதாம்.

அநேக மாதரென்பதற்கு ஆயிரங்கோடிமாதரென்றார். அயினி நீரென்பதற்கு முன்பெழுதினும். (௨௭)

அருப்புமென் முலையா ரைஞ்ஞூற் றைம்பதிற் றெண்மர் பைம்பொற், பொருப்புறழ் தோளி னூற்கும் பொருக யற் கண்ணி னுட்கு, முருக்கிளர் மணியிற் செய்த வொளி கிளர் பசும்பொற் றட்டிற், கருப்புரத் தீப மேந்திக் கண் ணெச்சில் கழித்திட் டாரே.

(இ-ள்.) அரும்பு மெல் முலையார் - தாமரையரும்பையொத்த மெல்லிய முலைகளையுடைய மங்கையர்கள், ஐஞ்ஞூற்று ஐம்பதிற்றெண்மர் - ஐஞ்ஞூற்றைம்பததெட்டு ஸ்திரீகள், பைம் பொன் - பசிய பொன்மயமாகிய, பொருப்பு உறழ் தோளினற்கும் - மேருமலையையொத்த புயங்களையுடைய நளனுக்கும், பொரு கயல் கண்ணினாட்கும் - கயற்கெண்டையையொத்த கண்களையுடைய தமயந்திக்கும், உரு இளா - உரு விளங்குகின்ற, மணியில் செய்த - நவமணிகளிற் செய்த, ஒளி இளா - ஒளி விளங்குகின்ற, பசும்பொன் தட்டில் - பசிய பொன்னாற் செய்த தட்டில், கருப்புர தீபம் ஏந்தி - கருப்புரத்தீபத்தையேந்தி, கண எச்சில - திருஷ்டிதோஷத்தை, கழித்திட்டார் - போக்கினார்கள், எ-று.

(க-து.) ஐந்நூற்றைம்பத்தெட்டுப் பெண்கள் நளனுக்குந் தமயந்திக்குங் கருப்பூரத் தீபத்தால் திருஷ்டிகழித்தார்கள் என்பதாம்.

அரும்பெனபது எதுகைநோக்கி அருப்பென விகாரமாயிற்று. கண்ணெச்சில்—கண்ணாலுண்டாகும் தோஷம். (உ௮)

**வாசனைகமழுஞ்சுண்ணம்வண்டிமிர்குழங்கன்மாலை**
**யோசனைநாறுஞ்சாந்தமொண்கருப்பூரம்பைங்காய்க்**
**காசறுசெப்பினுய்ந்தகமழ்திரையமிழ்திறேடுந்**
**தூசுலாம்பருமவல்குற்றோகையரேந்தினாரே.**

(இ-ள்.) வாசனை கமழும் சுண்ணம் - பரிமளமானது மணக்கின்ற பொடிகளையும், வண்டு இமிர் குழங்கல் மாலை - வண்டுகளொலிக்கின்ற அழகிய மாலைகளையும், யோசனை நாறும் சாந்தம் - யோசனைதூரம் கமழ்கின்ற சந்தனத்தையும், ஒள கருப்பூரம் - ஒளிய பச்சைக் கருப்பூரத்தையும், பைங்காய் - துவாக்காயையும், காசு அறு செப்பின் - குற்றமற்ற வட்டிலகளில், ஆய்ந்த - ஆய்ந்தெடுத்த, கமழ - பரிமளிக்கின்ற, சுவை - சுவையையுடைய, அமிழ்தினோடும் - அமிர்தத்துடனே, தூசு உலாம் - ஆடைமேலசைகின்ற, பருமம - பருமத்தையுடைய, அல்குல் - நிதம்பத்தையுடைய, தோகையர் - மங்கையர்கள், ஏந்தினார் - தாங்கினார்கள், எ-று பருமம் - பதினெண்சரமுள்ளது.

(க-து.) பெண்கள் வாசனைப்பொடி, மாலை, சந்தனம், கருப்பூரம், பாக்கு, அமிழ்து, இவைகளையேந்தினார்கள் என்பதாம்.

சுண்ண முதலியவும் போகத்துக்குவேண்டிய பொருள்களெனக் கொள்க. (உகூ)

**பண்ணமை திவவி னல்யாழ் பருமணி யடைப்பை நோக்கிற், கண்வழுக் குறுசெஞ் சோதிக் கதிர்மணிக் கால்செய் வட்டம், வெண்ணிறக் கவரி செம்பொற் படியக மினைய வெல்லா, மண்ணிய மணிசெய் பைம்பூண் மடந்தையர் மருங்கு வைத்தார்.**

(இ - ள்.) பண் அமை - இசையமைந்த, திவவு - கட்டுக்களையுடைய, நல் யாழ் - நல்லவீணையும், பரு மணி - பெரியமணிகள்கோத்த, அடை பை - தாம்பூலப் பையும், நோக்கில் - பார்த்தால், கண் வழுக்கு உறு - கண்கள் கூசுகின்ற, செம் சோதி - சிவந்த காந்தியையுடைய, கதிர் மணி - கிரணங்களையுடைய மணிகள்பதித்த, கால் செய் வட்டம் - சாந்தாற்றியும், வெள் நிறம் கவரி - வெள்ளைநிறத்தையுடைய சாமரையும், செம் பொன் படியகம - சிவந்த பொன்னாற்செய்த தம்பலப்படிக்கமும, இனைய எல்லாம் - ஆகிய இவைமுதலியவற்றைதையும், மன்னிய - கழுவிய, மணி செய - மணிகளபதித்த, பைம்பூண்-பசிய ஆபரணங்களையுடைய, மடநதையா - மாதாகள, மருங்கு - அருகே, வைததா - வைததனா, எ-று.

(க - து.) மாதாகள் யாழ், அடைப்பை, ஆலவட்டம், சாமரை, பொற்படிகம், இவற்றைப் பக்கலில வைததாகள எனபதாம்.

யாழ்முதலியவும் போகத்திற்கு வேண்டியனவாதலால' மாதா மருங்கு வைத்தனரொனருா. (௫0)

**பாம்பினைப்படத்தைமானும்பங்கயப்பருமவலகுற**
**காம்புறழ்பசியமென்றோட்காரிகைவிழைவுநாணு**
**மேம்பலோடினிதுநோககியின்னுயிர்தநோழிமார்சள்**
**பூம்புகைதவழ்ந்தாலன்னபொருமுகவெழினிவீழததா.**

(இ-ள.) பாம்பின படததை - சாபபததினது படததினை, மானும் - ஒதத, பஙகயம - தாமரைமலரையொதத, பருமம - பருமததையுடைய, அல்குல - அலகுலையும, காம்பு உறழ - மூஙகிலையொத்த, பசிய - பசுமையாகிய, மெல தோள் - மெலலிய தோளையுமுடைய, காரிகை - தமயநதியினுடைய, விழைவும - விருபபததையும், நாணும் - நாணததையும், ஏமபலோடு - அகமலாசசியுடன, இனிது நோககி - இனிமையோடு பாாதது, இன உயிா - இனியவுயிரையொதத, தோழி மாாகள - தோழிகள், பூ புகை - அழகிய புகையானது, தவழநதால் அன்ன - தவழநதா லதையொதத, பொரு முக எழினி - பொருமுக வெழினி யெனனுநதிரையை, வீழததா - விடுததாாகள, எ-று.

(க-து.) தோழிமாாகள திரையை விடுததாாகள் எனபதாம்.

பாம்பினைப் படத்தையென்பதில் ஐ சாரியையாககொண்டு பாம்பினது படமெனக்கொளக. அனறி உருபு மயக்கமெனினு மமையும். பங்கயத்தை மாதரல்குறகு உவமைசொலலுதல், "திருமுகங்கமல மிணைவிழிகமலஞ் செய்யவாய்கமலநித் திலந்தாழ், வருமுலைகமலந் துணைக்கரங்கமலம் வலமபுரியுநதிபொற் கமலம், பெருகியவல்குன் மணித்தடங்கமலம் பிடிநடைததாள்களுங் கமல, முருவவட்கவ்வா ருதலினன்றே யுயாந்ததுபூவினுட் கமலம்." இதனாலறிக. பொருமுகவெழினியெனபது அரஙகததிலிடு திரையெனக் கொளக. "அது வழுவில்கேள்வி நன்னூலுணர்ந்தோ, ரெழினிதானே மூன்றெனமொழிப. அவைதாம், ஒருமுகவெழினியும் பொருமுகவெழினியுங், காந்து

வாலெழினியுமென மூவகையே." இராசதானியிலும் அரங்கிலும் கோலமறைத்து வருமிடத்து மிகுவதாம். இது சிந்தாமணி யுரையிற் காண்க. உவமையணி. (௩௪)

வரிமுலை யோடுந் தோன்றி வளர்தொறும் வளர்ந்து
வீங்கிப், பெருகுநாண் சுமககலாற்றாப் பெய்மலர்க்
கொம்பு போல்வா, டிருமுகஞ் சிறிது கோட்டிக் கயிற்புற
மதனிற றேங்கொள், விரிமலர்க் கூந்த றாழ மின்னென
நுடங்கி நின்றாள்.

(இ - ள) வரி முலையோடும் தோன்றி - சந்தனக்கோலத்தை யுடைய முலைகளுடனேயுண்டாகி, வளர்தொறும் வளர்ந்து - (அவைகள்) வளருந்தோறும் (தானும்) வளர்ந்து, வீங்கி - பருத்து, பெருகு நாண் - பெருகியநாணை, சுமக்கல் ஆற்றா - சுமக்கமாட்டாத, பெய் - பெய்கின்ற, மலா - மலரையுடைய, கொம்பு போல்வாள் - கொம்பையொத்த தமயந்தியானவள், திருமுகம் - திருமுகத்தை, சிறிது கோட்டி - கொஞ்சம் வணக்கி, கயிற்புறமதனில - பிடரியின் மேல், தேன் கொள - வாசனைகொண்ட, விரி மலா-விரிகின்ற மலரையணிந்த, கூந்தல் தாழ - குழலானது சோர, மின் என - மின்னல்போல், நுடங்கி நின்றாள - துவண்டு நின்றனள், எ-று.

(க - து.) தமயந்தி நாணிநின்றாள் என்பதாம்.

ஸ்தனங்களோடுதோன்றி வளர்வ தாதலால் 'வரிமுலையோடுந் தோன்றி வளர்தொறும் வளர்ந்து வீங்கிப் பெருகுநாண' என்றார். ()

கூற்றுறழ் தடங்க ணாவி கொள்ளைகொண் டுண்ண
வேவி, மாற்றமொன் றுரையா திங்ஙன் மதிமுகங் கோட்டி
நின்றீர், சேற்றிதழ்க் கமலப் போதிற் றிருந்திழை யனையீர்
காதல், லாற்றுமா றெவன்கொ லாசைக் கடற்படு மளியன்
றானே.

(இ - ள) கூற்று உறழ - யமனையொத்த, தடம் கண் - விசாலம் பொருந்திய கண்ணை, ஆவி - எனதுயிரை, கொள்ளைகொண்டு உண்ண - கொள்ளையிடட்டுண்ண, ஏவி - அனுப்பி, மாற்றம் ஒன்று உரையாது - ஒருபேச்சும் பேசாமல், இங்ஙன - இவ்விடத்தில், மதி முகம் - சந்திரனபோன்ற முகத்தை, கோட்டி நின்றீர - வளைத்து நின்றீர, சேறு - சேற்றிலிருக்கின்ற, இதழ் கமலம் போதில - இதழையுடைய தாமரை மலரிலிருக்கின்ற, திருந்திழை அனையீர - இலக்குமியையொத்தவளே!, ஆசை கடல் படும - ஆசைக்கடலில் மூழ்கிய, அளியன் - எளியேன், காதல் - ஆசையை, ஆற்றும் ஆறு - சகிக்குமாறு, எவன் கொல் - எப்படி, எ-று. ஏ - அசை.

(க - து.) தமயந்தியே! பேசாது முகங்கோணி நிற்கின்றாய், ஆசைக்கடலில்வீழ்ந்த வெளியேன் விரகஞ் சகிக்கும்வழி யாது என றான் என்பதாம்.

மாதர் வலிந்தணைதலின் மிக்க சுகமென்று கருதி நளன் இவ்வாறு கூறினன். (௩௩)

வாட்டடங்கருங்கட்கூற்றைமலர்க்கையான்மறைத்திராவி
கோட்டுமண்கொண்டுவீங்குங்குவிமுலைக்களிநலயானை
யாட்டுசாந்தகலம்போழாதளியனேன்றடந்தோட்கந்திற்
பூட்டிடிலன்றேமுன்னம்புரிந்ததுமளியதாமே.

(இ - ள்) வாள் - வாள்போன்ற, தடம் - விசாலம் பொருந்திய, கரு கண் கூற்றை - கரிய கண்ணாகிய யமனை, மலா கையால - மலா போன்ற கையினால், மறைததிா - மூடிக்கொண்டீா; ஆவி - உயிராகிய, கோட்டு மண் - கனாமண்ணை, கொணடு - கொண்டு, வீங்கும் - பருத்த, குவி முலை - குவிந்த முலையாகிய, களி நல் யானை - களிப்பையுடைய யானையை, ஆட்டு சாநது - சந்தனம் பூசிய, அகலம் - மாாபினிடத்தில், போழாது - பிளவாது, அளியனேன் - எனனுடைய, தடம் தோள் - பருத்த தோளாகிய, கநதில் - தறியில், பூடடிடில் அனறே - பூட்டினலன்றே, முன்னம் புரிந்ததும் - முன செயததும், அளியதாம் - அனபாகும், எ-று. ஏ - அசை.

(க - து) தமயந்தியே! உன்முலைகளாகிய யானைகளை என்னுடைய தோளகளாகிய கட்டுத்தறிகளில கட்டினலல்லவோ அன்பாகும் என்பதாம்.

அந்த யானை கோட்டால் கனாமண் கொள்வதுபோல, முலையாகிய யானை உயிரைக கொளளுமெனக. ஆவி - தடாகமுமாம். இது நாணிக்கண் புதைத்தலாம். (௩௪)

சுற்றநல்கூரவாழுந்தோமுறுசிறியர்போல
விற்றிடைமெலியச்செமமாந்தெழுமுலைப்பாரம்பார்த்துங்
கற்றையங்குழலிலவீழ்ந்துமதுநுகர்களிவண்டீரின்
றற்றதுநுமக்குமேலோரளியெனவளித்தபேரே.

(இ - ள்) சுற்றம் - சுறறத்தாா, நல்கூர - வறுமையடைய, வாழும் - (தாம்) வாழ்கின்ற, தோமுறு சிறியா போல - குற்றததையுடைய அற்பாகளைப்போல, இற்று - ஒடிந்து, இடை மெலிய - இடையானது வாட, செம்மாந்து - அகமலாச்சியடைநது, எழு - எழுகின்ற, முலை பாரம் - முலையினுடைய பளுவை, பாாத்தும் - கண்டும, கற்றை குழலில் - மயிாத்தொகுதியாகிய கூந்தலில், வீழ்ந்து - விழுந்து, மது நுகா - கள்ளையுண்கின்ற, களி வண்டீா - களிப்பையுடைய வண்டுகளே, நுமக்கு - உமக்கு, மேலோா - பெரியோா, அளி என - அளியென்று, அளித்த போ - கொடுத்த நாமமானது, இன்று - இன்று, அற்றது - நீங்கிற்று. எ-று. அம் - அசை.

(க - து) வண்டுகளே தமயந்தி முலைப்பாரத்தைப் பாாத்தும் கூந்தலில்வீழ்ந்து மிதிக்கின்றீாகள்; இடையொடிந்து பழிவரும்; உங்களுக்கு அளியென்னும்பே ரின்றே நீங்கிற்று என்பதாம்.

இது வண்டோச்சி மருங்கணைதல்; அஃதாவது ஒன்றும அவள பேசாமையால் வண்டையோட்டி மருங்கு செல்லுதலாம். இடையொடியும்படி யெழுகின்ற முலைப்பாரம் பார்த்தும் கற்றையங்குழலில் வீழ்தலால் நமக்கு மேலோா அளியென அளித்தபேர் இன்றற்ற தென்றூா. அளியென்பது இங்கே வண்டும், அன்புமாம். (௩௫)

பகைக்கடல் சுவற்றும் வைவேற் பகட்டெழின் மார்பி
ஞன்ற, னகத்திடைப் பெருகி யோங்கு மாசையங் கடலை
யின்னே, முகைத்தெழு முல்லை மாலை முருகுலாங் கோ
தை நாணுற், றகைத்திட லரிதென் றெண்ணித் தன்னுளே
மகிழ்ச்சி கூர்ந்தாள்.

(இ - ள்.) பகை கடல் - பகையாகிய கடலை, சுவற்றும் - சுவறச் செய்கின்ற, வை வேல் - கூரியவேலையுடைய, பகட்டு எழில் - பகட்டு கின்ற அழகையுடைய, மாாபிஞன்றன் - மாாபையுடைய நளனது, அகத்திடை - மனத்தின்கண், பெருகி ஓங்கும் - அதிகரித் துயாகின்ற, ஆசை கடலை - ஆசையாகிய சமுத்திரத்தை, இன்னே - இப்பொழுதே, முகைத்து எழும் - அரும்பி யெழுகின்ற, முல்லை மாலை - முல்லைமாலையினுடைய, முருகு உலாம் - வாசனைவீசுகின்ற, கோதை - தமயந்தியானவள், நாணுல் - (தனது) நாணினுல், தகைத்திடல் - தடுத்திடுவது, அரிது என்று எண்ணி - அருமையென்று நினைத்து, தன் உளளே - தன்மனத்தினுள்ளே, மகிழ்ச்சி கூர்ந்தாள் - மகிழ்சியடைந்தாள், எ-று. அம் - அசை

(க - து.) நளன் காமத்தைத தன் நாணுற் றடுப்பதரிதென்று தன்னுளளே மகிழ்ச்சியடைந்தாள் என்பதாம். (௩௬)

கழிமடநாணமச்சம்பயிர்ப்பெனுங்காவல்வேலை
யழிதரவாசைவெள்ளமகத்திடையடங்காதாகி
வழிவதேபோலவின்பம்வடிவெடுத்தனையநங்கை
பொழிகதிர்நிலவுநாணப்புன்னகைகோட்டினுளே.

(இ-ள்.) கழி - மிகுந்த, மடம் - அறியாமையும், நாணம் - வெட்கமும், அச்சம் - பயமும், பயிாப்பு எனும் - அருவருப்பு மென்றுசொல்லுகின்ற, காவல் - காவலையுடைய, வேலை - சமுத்திரமானது, அழிதர - அழியும்படி, ஆசை வெள்ளம் - ஆசையாகிய வெள்ளமானது, அகத்திடை - மனத்தின்கண், அடங்காது ஆகி - அடங்காததாய், வழிவதே போல் - வழிகிறதே போல, இன்பம் - இன்பமானது, வடிவு எடுத்தது அனைய - (ஒரு) வடிவுகொண்டதை யொத்த, நங்கை - தமயந்தியானவள், பொழி கதிா - கிரணத்தைப்பொழிகின்ற, நிலவு நாண - சந்திரிகையும் நாணும்படி, புல் நகை - புன்சிரிப்பு, கோட்டினுன் - செய்தாள், எ - று.

(க - து.) தமயந்தியானவள், மடம், நாணம், அச்சம், பயிர்ப்பு என்னு மிந்நாற்குணமுங்கெட நகைத்தாள் என்பதாம்.

மட மாதியாய காவலே உறுதிப் படுத்துங்கால மன்றுளையால் அதைத் தா னீக்கினமைதோன்றப புன்னகை செய்தன ளென்க.(௩௭)

குருமணிவலயமின்னுங்குங்குமக்குவவுத்திண்டோண்
முருகுலாந்தாமமாரபன்முறுவலின்குறிப்புநோக்கித்
திருநலங்கனியநின்றசெழுங்கடைமழைக்கட்பேதை
வருமுலைஞெமுங்கப்புல்லிமலரணைமேயினனே.

(இ - ள்.) குரு மணி - நிறம்பொருந்திய மணிகள் பதித்த, வல யம் - கேயூரங்கள், மின்னும் - மின்னுகின்ற, குங்குமம் - குங்கும மணிந்த, குவவு - திரட்சிபொருந்திய, திண் தோள் - வலிமையை யுடைய புயத்தையும், முருகு உலாம் - வாசனை வீசுகின்ற, தாமம் - மாலையணிந்த, மாாபன் - மாாபினையுமுடைய நளனனவன், முறு வலின் - புன்சிரிப்பினுடைய, குறிப்பு நோக்கி - குறிப்பினைப பாாத்து, திரு நலம் - சிறபபினையுடைய சுகமானது, கனிய நின்ற - முதிரும்படியிருந்த, செழு கடை - செழிய கடையையுடைய, மழை கண் - குளிர்ச்சிபொருநதிய கண்ணையுடைய, பேதை - தமயந்தியி னுடைய, வரு முலை - வளர்கின்றமுலையை, ஞெமுங்க புல்லி - அழுந் தத்தழுவி, மலரணை மேயினன - புட்பசயனததிற பொருந்தினன, எ - று. ஏ - அசை.

(க - து.) நளன் தமயந்தியினது நகைக்குறிப்பை யறிந்து தழுவி னன் என்பதாம்.

உடனே முறுவற்குறிப் புணாந்த நளன் வருமுலை ஞெமுங்கப் புல்லி மலரணை மேயின னெனவே, தமயந்தியைத தழுவிக்கொண் டே யவளோடுங்கூட அணையிற் சோந்தா னென்க. (௩௮)

ஆம்பலம்போதுமானுமணிதிகழ்பவளவாயிற்
றேம்பொதிந்தமுதமூறுஞ்செந்துவர்த்தேறன்மாந்திப்
பாம்படுமல்குலாடன்பணைமுலைமணிக்கண்சேப்ப
வேம்பலுற்றினிதுபுல்லியிளநலம்பருகினனே.

(இ-ள்.) ஆம்பல் போது மானும் - அல்லிமலரையொத்த, அணி திகழ் - அழகு பிரகாசிக்கின்ற, பவள வாயில் - பவளம்போன்ற வாயில், தேன் பொதிந்து - வாசனை தங்கி, அமுதம் ஊறும் - அமிாதஞ் சுரக்கின்ற, செம துவா - செம்பவளம்போன்ற அதரத்தினுடைய, தேறல் மாந்தி - தேனை யுண்டு, பாமபு அடும் - பாம்பின் படத்தையடு கின்ற, அல்குலாள் தன் - அல்குலையுடைய தமயந்தியினது, பணை முலை - பருத்த முலைகளினுடைய, மணி கண் - கரிய கண்களானவை, சேப்ப - சிவக்க, ஏம்பல் உற்று - இன்பத்தை யடைந்து, இனிது புல்லி - இனிதாகத்தழுவி, இள நலம் - இளமை யின்ப நலத்தை பருகினன் - அனுபவித்தான், எ - று. அம் - அசை.

(க - து.) தமயந்தியினது இதழைச்சுவைத்துக் கனதனமழுந்தத் தழுவினன் என்பதாம்.

இளநலம் பருகுதல், இங்கே அல்குற்பானமும் அதரபானமு மாம். அன்றியும் இளமைப்பருவத்திற்குரிய காமசுகத்தில் ஆர்தரப புணர்ச்சியெனினு மமையும். (௩௯)

கத்திகைக்கருமென்கூந்தல்கயிற்புறத்தவிழ்ந்துவீழ
முத்தரிச்சிலம்புபைம்பொற்கிண்கிணிமுரன்றுபாடத்
தத்தரிநெடுங்கண்சேப்பத்தடமுலைதாங்கலாற்று
தெய்த்துநுணமருங்குறேம்பவேந்தலோடாடினாளே.

(இ-ள்.) கத்திகை - மலர்மாலையை யணிந்த, கரு மெல் கூந்தல் - கரிய மெல்லிய கூந்தலானது, கயிற்புறத்து - பிடரியினிடத்து, அவிழ்ந்து வீழ - அவிழ்ந்து வீழவும், முத்து அரி சிலம்பு - முத்துக்க ளாகிய பரலையுடைய சிலம்புகளும், பைம்பொன் - பசிய பொன்னாற் செய்த, கிண்கிணி - சதங்கைகளும், முரன்று பாட - ஒலித்துப்பாட வும், தத்து - நெருங்குகின்ற, அரி - செவ்வரிபரந்த, நெடு கண் - நெடிய கண்களானவை, சேப்ப - சிவக்கவும், தடம் முலை - பருத்த முலைகளை, தாங்கல் ஆற்று - சுமக்கமாட்டாமல், எய்த்து - இளைத்து, நுண் மருங்குல் - சிறிய இடையானது, தேம்ப - வருந்த, ஏந்தலோடு - நளனோடு, ஆடினாள் - புணர்ந்தாள், எ-று. ஏ-அசை.

(க - து.) தமயந்தி கூந்தலவிழப் பாதசரஞ் சத்திக்கக் கண்கள் சிவக்க இடைதுவள நளனோடு சேர்ந்தாள் என்பதாம்.

ஒருதலைக்காமமாய் முடியாது தானும் அவ்வாறு நளனுடனாடினா ளென்றார். இது உபரிசுரதம் எனனும் தலைவிடபுணர்ச்சி யின்மை கூறப்படுதலால் தன்மை நவிற்சியணி. (௪0)

களிக்கயல் பொருது நீண்டு கதுப்பினை யளக்கும் வேற் கட், டுளிப்புயன் மின்னி னன்னாட் டொண்டைவா யமுத மாந்தித், தளிர்த்தெழு முவகை பொங்கத் தண்ணறுஞ் சாந்த மார்ப, னளப்பருங் களிகொள் காமக் கடலகத் தழு ந்தி னானே.

(இ - ள்.) களி கயல் - களிப்பையுடைய கயற்கெண்டையை, பொருது - போர்செய்து, நீண்டு - நெடுகி, கதுப்பினை அளக்கும் - கூந்தலினை யளக்காநின்ற, வேல் கண் - வேல்போன்ற கண்ணையுடைய, துளி புயல் - துளியையுடைய மேகத்திற் றோன்றிய, மின்னின் அன்னாள் - மின்னலையொத்த தமயந்தியினது, தொண்டை வாய் - கொவ் வைக்கனியை யொத்த வாயிலுண்டாகிய, அமுதம் மாந்தி - அமிர்தத் தையுண்டு, தளிர்த்து - துளிர்த்து, எழும் - எழுகின்ற, உவகை பொங்க - மகிழ்ச்சியானது மிக, தண் - குளிர்ச்சிபொருந்திய, நறு சாந்தம் மார்பன் - நல்ல சந்தனத்தையணிந்த மார்பினையுடைய நளனானவன், அளப்பு அரு - அளத்தற்கரிய, களி கொள் - களிப்பைக்கொண்ட, காமம் கடலகத்து - காமசமுத்திரத்தில், அழுந்தினான் - மூழ்கினான், எ-று. ஏ-அசை.

(க - து.) நளன் விரகவெள்ளத்தி லழுந்தினான் என்பதாம்.

காமக்கடலகத்தழுந்தல், புணர்ச்சிமுடிவில் அவசத்தினால் முலை யிடைத் துயிறலை யென்க. (௬௧)

அலங்கலங் குன்ற மன்னன் மணிவரை யகல மூழ்கி,
நலங்கெழு கலவைச் சாந்து நானமு மழிதலோடு, மிலங்
கொளி வயிரப் பைம்பூ ணிளமுலை வடுக்கண் டேங்கி,
பொலங்கொடி நாணி னோடும் பொய்த்துயில் கூர்ந்தா
ளன்றே.

(இ - ள்.) அலங்கல் - மாலையையணிந்த, அம் - அழகிய, குன்றம் அன்னன - மலையையொத்த நளமகாராஜனது, மணி வரை - அழகிய மலைபோன்ற, அகலம் மூழ்கி - மார்பினிடத்திலே மூழ்கி, நலம் கெழு - நன்மை பொருந்திய, கலவை சாந்தும் - கூட்டுவாக்குஞ் சேர்ந்த சந்தனக்குழம்பும், நானமும - கஸ்தூரியும், அழிதலோடும் - அழிந்த வளவில, இலஙகு ஒளி - மிகுந்த வொளியையுடைய, வயிரம் பைம் பூண் - வச்சிராபரணத்தை யுடைய, இள முலை - இளமைபொருந்திய ஸதனத்தினிடததிலே, வடு கண்டு ஏஙகி - வடுவைக்கண்டு ஏங்கி, பொலம் கொடி - பொற்கொடிபோன்ற தமயந்தி யானவள், நாணினோடும் - நாணததுடனே, பொய் துயில் கூர்ந்தாள - பொய் நித்திரையைச் செய்தாள, எ-று. அனறு, ஏ - அசைகள்.

(க - து.) தமயந்தி தன்னுடைய கனதனங்களிலே நள னகக்குறி கண்டு வெடகககொணடு பொயநித்திரை செயதாள் என்பதாம்.

முலையின்மேல் கணவன் செய்த வடுவாதலால் தோழிகள் கண் டால் எனன சொல்வாரகளோ வென வெண்ணி 'வடுக்கண்டேங்கி' என்றார். (௬௨)

புலவியிற் றுயின்றா டீண்டின் முனிந்திடும் பூவை
யென்ன, மலரணைப் புறத்துத் தானுந் துயிறல்போற் கிட
ப்ப வாய்ந்த, கலவியின் வேட்கை தூண்டக் கனவினில்
வெருவி னாள்போன், முலைமுக டழுந்த வேந்தன் முழவுத்
தோள் புல்லி னாளே.

(இ - ள்.) புலவியின் - பிணக்கினால், துயின்றாள் - நித்திரைசெய் தாள், தீண்டின் - தொட்டால், முனிந்திடும் - கோபஞ்செய்வாள், பூவை என்ன - தமயநதி யெனறு, மலா அணை புறத்து - மலரணையி னிடத்தில், தானும் துயிறல் போல் - தானும் நித்திரைசெய்தல்போல், கிடப்ப - இருக்க, வாய்ந்த - பொருந்திய, கலவியின் வேட்கை-புணர்ச் சியினுடைய ஆசையானது, தூண்ட - தூண்டுதல் செய்ய, கனவினில்- கனவினிடத்திலே, வெருவினாள் போல - பயந்தவள் போல, முலை முகடு அழுந்த - முலையினுச்சி அழுந்தும்படி, வேந்தன் - நளமகாராஜ னுடைய, முழவு தோள் - மததளம்போன்ற தோளை, புல்லினாள் - தழுவினாள், எ-று. ஏ-அசை.

(க - து.) தமயந்தி கனவிற்பயந்தாள்போல நளன்புயங்களிலே கனதனங்க ளழுந்தப் புணர்ந்தாள் என்பதாம்.

மாதர் தமக்கு வேட்கை மிகுந்திடினும் புணர்ச்சியில் மூந்துவ தில்லை யென்பது தோன்ற "கனவினில் வெருவினுள்போல்" என்றார். ()

புல்லலுமகிழ்ச்சிகூரப்புணர்முலைகுழையமோந்து
மெல்லிதழமுதமாந்திமேகலைநெகிழ்த்தலோடு
நல்லெழில்கனிந்தகோதைநகையுளத்தடக்கலாற்றுண்
முல்லைமென்முகையுநாணவரும்பிளமுறுவல்பூத்தாள்.

(இ-ள்.) புல்லலும் - தழுவிக்கொண்ட வளவில், மகிழ்ச்சி கூர - சந்தோஷமானது அதிகரிக்க, புணர் முலை - நெருங்கிய ஸ்தனங்கள், குழைய மோந்து - குழையும்படி வுச்சியின் மோந்து, மெல் இதழ் - மிருதுவாகிய அதரத்தினுடைய, அமுதம் மாந்தி - அமிர்தத்தையுண்டு, மேகலை - மேகலாபரணத்தை, நெகிழ்த்தலோடும் - அவிழ்த்தவளவில், நல் எழில் கனிந்த - மிக்க அழகானது முதிர்ந்த, கோதை - தமயந்தி யானவள், நகை - மகிழ்ச்சியை, உளத்து - மனத்தின்கண், அடக்கல் ஆற்றுள் - சகிக்காதவளாய், முல்லை - முல்லையினுடைய, மெல் முகை யும் - மிருதுவாகிய அரும்புகளும், நாண - நாணும்படி, அரும்பு - உண்டாகின்ற, இள முறுவல் பூத்தாள் - தந்தங்கள் தோன்ற சிறுநகை கொண்டாள், எ-று.

(க-து.) தமயந்தி புணர்ந்தவளவில் நளன் கனதனங்களை மோந்து அதரபானம்பண்ணி மேகலாபரணத்தை யவிழ்த்தவளவில் நகைத்தாள் என்பதாம்.

தான் கனவில் பயந்தவள்போல் தழுவியது நளன் உள்ளபடி யென்று நினைத்தானென்று நகை யுளத்தடக்க லாற்றளாய் முறுவல் பூத்தா ளென்றார். (சச)

புருவவிற்கோலியுள்ளம்போழ்ந்துகட்கணைகளோட
வுருவத்தாருடையவொற்றைவலம்புரியொலிப்பவிம்மி
வரிமுலைக்களிநல்யானைமருமம்பாய்ந்துழக்கமன்றல்
விரிமலர்க்கோதைகாமவெஞ்சமர்விளைத்திட்டாளே.

(இ - ள்.) புருவம் வில் கோலி - புருவமாகிய தனுசை வளைத்து, உள்ளம் போழ்ந்து - மனதைப் பிளந்து, கண் - கண்களாகிய, கணை கள் ஓட - பாணங்கள் ஓடவும், உருவம் - வடிவம் பொருந்திய, தார உடைய - மாலையையுடைய, ஒற்றை வலம்புரி - ஒற்றைச்சங்குமாகிய மிடறு, ஒலிப்ப - சத்திக்க, விம்மி - பூரித்து, வரி முலை - சந்தனக் கோலம் வனைந்த ஸ்தனங்களாகிய, களி நல் யானை - களிப்பையு டைய நல்ல யானையானது, மருமம் பாய்ந்து - மார்பினிடத்திற் பாய்ந்து, உழக்க - கலக்க, மன்றல் விரி - வாசனையை விரியச்செய் கின்ற, மலர் கோதை - மலராற்றொடுத்த மாலையையணிந்த தமயந்தி யானவள், காமம் - காமமாகிய, வெம் சமர் - வெவ்விய யுத்தத்தை, விளைத்திட்டாள் - செய்தாள், எ - று. ஏ - அசை.

(க-து.) தமயந்தி புருவவில்லே வளைத்துக் கண்ணென்று மம்பை யெய்து கண்டமாகிய வலம்புரிசங்கு சத்திக்க முலைகளாகிய யானைகள் நளன்மார்பிற் பாய்ந்து கலக்கக் காமப்போர செய்தாள் என்பதாம். ()

திருநுதற்பொடித்தவேர்விற்றேங்கமழ்திலகந்தேயப்
புரிமுறுக்கவிழ்ந்துதாழ்ந்தபொலங்குழைதிருவில்வீச
மருமலர்க்கூந்தல்சோரவசமழிந்துருகிவேந்த
னெரிமணியாரமார்பினின்றுயில்பொருந்தினளே.

(இ-ள்.) திரு நுதல் - அழகிய நெற்றியின்கண், பொடித்த - உண்டாகிய, வோவின - வேர்வையினாலே, தேன் கமழ் - வாசனை வீசுகின்ற, திலகம் - சிந்தூரப்பொட்டு, தேய - அழியவும், புரி முறுக்கு - புரிந்த முறுக்குகள், அவிழ்ந்து - நீங்கி, தாழ்ந்த - தொங்கிய (காதினிடத்து, பொலம் குழை - பொன்னினாற்செய்த குண்டலங்கள், திருவில் வீச - அழகிய பிரகாசத்தை வீசவும், மரு மலா கூந்தல் - வாசனை பொருந்திய மலாகளையணிந்த அளகபாரமானது, சோர - சரியவும், வசம் அழிந்து - பரவசபபட்டு, உருகி - மனமுருகி, வேந்தன் - நள மகாராசனுடைய, எரி மணி ஆரம் - பிரகாசிக்கின்ற மணிகள் பதிதத பதக்கமணிந்த, மாாபின - மாாபினிடத்தில், இன் துயில் - இனிதாகிய நித்திரையை, பொருந்தினள் - கொண்டாள், எ-று. ஏ-அசை.

(க - து.) தமயநதி நெற்றிவோவையாற் றிலதமழியவும், குண்டலம் பிரகாசிக்கவும், கூநதலவிழவும், மெய்சோாந்து மனமுருகி நளன்மாாபி னித்திரை செய்தாள் என்பதாம். (சகூ)

கலவியின்மயக்கந்தீர்ந்தகனிபடுகிளவியாட
னலர்முலையாகந்தைவந்தணிவடமணிந்துவாங்குஞ்
சிலைநுதற்றிலகந்திட்டித்தேங்கமழ்கூந்தல்கைசெய்
திலைமலர்க்கோதைசூட்டியிழைபலதிருத்தினனே.

(இ - ள்.) கலவியின் மயக்கம் - புணர்ச்சியிற்றோன்றிய மயக்கமானது, தீாந்த - நீங்கிய, கனி படு - பழம்போற் சுவைபொருந்திய, கிளவியாள்தன் - சொற்களையுடைய தமயந்தியினது, அலா முலை - பரந்த ஸ்தனங்களையுடைய, ஆகம் - மாாபை, தைவந்து - தடவி, அணி வடம் - அழகிய மணிவடங்களை, அணிந்து - தரித்து, வாங்கும் - வளைக்கின்ற, சிலை - விற்போன்ற, நுதல் - நெற்றியினிடத்து, திலகம் திட்டி - சிந்தூரப்பொட்டிட்டு, தேம் கமழ் - வாசனை வீசுகின்ற, கூந்தல் - கூந்தலை, கை செய்து-ஒழுங்குசெய்து, இலை மலர் கோதை - மருமுதலிய இலைகளோடு மலாமாலையை, சூட்டி - தரித்து, இழை பல - பலவாபரணங்களை, திருத்தினன் - திருந்தச்செய்தான், எ - று.

(க - து.) நளன் தமயந்தியைத் தடவிக்கொடுத்து மணிவடஞ்சூட்டித் திலதமிட்டுக் கூந்தலைமுடித்து ஆபரணஞ்சூட்டினன் என்பதாம்.

கணவர் மாதர்க்குக் கலவியி லிவ்வாறு கூந்தன் முதலியவை திருத்த லியற்கையாதல் காண்க. (சஎ)

தெளியுமின்னமிழ்தமன்னதேம்படுகிளவியாட
னொளிகிளர்முகத்துலாயவோடரித்தடங்கண்போலக்
களியிளஞ்சுரும்புகாணீர்கண்டனவுளவோசொல்லீர்
முளரிநாண்மலரிற்பூத்தமுழுநெறிகுவளைப்போதே.

(இ - ள்.) தெளியும் - தெளிந்த, இன் அமிழ்தம் அன்ன - இனிதாகிய அமிர்தம் போன்ற, தேம் படு - மதுரம்பொருந்திய, கிளவியாள்தன் - சொற்களையுடைய தமயந்தியினது, ஒளி கிளர் - காந்தியானது விளங்குகின்ற, முகத்து உலாய - முகத்தினிடத் துலாவுகின்ற, ஓடு - காதளவு மோடாநின்ற, அரி - செவ்வரிபரந்த, தடம் - விசாலம்பொருந்திய, கண் போல - கண்கள்போல, களி - களிப்பையுடைய, இள - இளமையாகிய, சுரும்புகாள் - வண்டுகளே, நீர் - நீங்கள், கண்டன - பார்த்தனவை, உளவோ - உண்டோ, சொல்லீர் - சொல்லுங்கள், முளரி - தாமரையாகிய, நாள் மலரின் - அன்றலர்ந்த மலரின்மேல், பூத்த - உண்டாகிய, முழு நெறி - முழுநெறிப்பையுடைய, குவளை போது - நீலோற்பலங்களை, எ-று.

(க - து) நளன் வண்டுகளே தமயந்திகண்போலத் தாமரையிற் பூத்த நீலோற்பலத்தை நீங்கள் கண்டதுண்டோ சொல்லுங்களென்றான் என்பதாம். (சஅ)

தாமரைப்பொகுட்டின்மேயதாக்கணங்கனையாய்நெஞ்ச
மேமுறவரினுநின்னையிம்மையிற்பிரியேனென்ன
வாமமேகலையினாளுமறுமையிற்பிரிவையென்னாக்
காமருகுவளைபோலுங்கண்பனியுகுப்பநின்றாள்.

(இ - ள்.) தாமரை பொகுட்டில் - தாமரைக் கொட்டையின்மேல், மேய - பொருந்திய, தாக்கணங்கு அனையாய் - இலக்குமியையொத்தவளே, நெஞ்சம் - மனமானது, ஏமம் உற வரினும் - வருத்தம் பொருந்தவந்தாலும், நினை - உன்னை, இம்மையில் - இப்பிறப்பில், பிரியேன் என்ன - பிரியமாட்டேனென்று சொல்ல, வாமம் - அழகிய, மேகலையினாளும் - மேகலையையணிந்த தமயந்தியும், மறுமையில் - வருபிறப்பில், பிரிவை எனா - நீ பிரிவையே யெனறு, காமரு குவளை போலும் - அழகிய நீலோற்பலம்போன்ற, கண் - கண்களினின்றும், பனி உகுப்ப - நீர் துளிக்க, நின்றாள் - வருந்திநின்றாள், எ-று.

(க - து.) நள னிப்பிறப்பிற் பிரியேனென்றுசொல்லத் தமயந்தி மறுபிறப்பிற் பிரிவையென் றழுதாள் என்பதாம்.

இவ ளெந்தசனனத்திலும் பிரியாம லிருத்தல்வேண்டுமென்னு நினைப்புடையவளாதலா லிவ்வாறு கூறினாள். (சகூ)

பெய்தொடி கலுழ்வ தென்கொல் பிழைத்திலே னருளா யென்னி, லுய்குவன் கொல்லோ வின்னே யுன்னுயிர் துறப்ப லென்னா, வெய்துயிர்த் தனிச்சப் போதின் மிதிப்

பினும் பனித்து வாடும், தெய்வமென் கமலப் போது சென்
னிமேற் சூடி னனே.

(இ-ள்.) பெய் தொடி - வளையலையணிந்த தமயந்தியே!, கலுழ்வது - நீ கலங்குவது, என்கொல் - என்னகாரணம், பிழைத்திலேன் - நானொரு குற்றமுஞ் செய்திலேன், அருளாய் எனின் - கிருபை செய்யாவிட்டால், உய்குவன் கொல்லோ - பிழைப்பேனோ, இனியே - இப்பொழுதே, உள உயிர் - உள்ளே யிருக்கின்ற வுயிரை, துறப்பல் என்னு - விடுவேனென்று, வெய்து உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, அனிச்சம் போதில் - அனிச்சப் புட்பத்தில், மிதிப்பினும் - நடந்தாலும், பனித்து - கொப்பளித்து, வாடும் - வாடாநின்ற, தெய்வம் - தெய்வத்தன்மை பொருந்திய, மெல் - மிருதுவாகிய, கமலம் போது - பாதமாகிய தாமரைப்பூவை, சென்னிமேல் - சிரத்தின்மீது, சூடினன் - தரித்துக் கொண்டான் எ-று. ஏ-அசை

(க - து.) நளன் தமயந்தியே நீ யழுவதென்ன ? நான் ஒரு குற்றமுஞ் செய்யவில்லையே, கிருபைசெய்யாவிடி லுயிரைவிடுவே னென்று அவள் அடியை முடியில் வைத்துக்கொண்டான் என்பதாம்.

யாவரும் வணக்கத்தின் வசப்படுவதுபோல மற்றொன்றில் வசப்படா ரென்பதுபற்றி நளனிவ்வாறு செய்தானெனக் (ருo)

குழுமியபறவையாவுங்கூட்டுணப்பொதுவினல்கும்
பழுமரமனையதிண்டோட்பகட்டெழிற்றாமமார்ப
வழுவலன்போடுநின்னையொருமையிற்புணர்வதன்றி
யெழுமையுந்தொடருமாதர்சீறடியிறைஞ்சுகென்னு.

(இ - ள்.) குழுமிய பறவை யாவும் - கூடிய பறவைக்கூட்டங்களனைத்தும், கூட்டு உண - கொள்ளைகொள்ள, பொதுவின் நல்கும் - பொதுவாகத்தரும், பழு மரம் அனைய - ஆலமரத்தையொத்த, திண் தோள் - வலிமைபொருந்திய தோளையும், பகட்டு எழில் - பகட்டு கின்ற அழகையுடைய, தாமம் மார்ப - மாலையணிந்த மார்பினையுமுடைய நளமகாராஜனே!, உழுவல் அன்போடு - இடையறாத அன்புடனே, நின்னை - உன்னை, ஒருமையில் - இப்பிறப்பில், புணர்வது அன்றி - கூடுவதல்லாமல், எழுமையும் தொடரும் - எழுபிறப்பிலும் தொடர்ந்துவருகின்ற, மாதர் - மங்கையருடைய, சிறு அடி - சிறிய பாதத்தில், இறைஞ்சுக என்னு - வணங்கக்கடவாயென்று சொல்லி, எ-று.

(க - து.) தமயந்தியானவள் மாலையணிந்த மார்பா, அன்புடனே உம்மை இப்பிறப்பிற் புணர்வதல்லாம லெழுபிறப்பிலும் புணருமாதர்களினடியை வணங்கென்று சொல்லினள் என்பதாம்.

. யாவருக்கும் உபகாரஞ் செய்வோ னென்பதுதோன்ற 'பழுமர மனைய திண்டோள்' என்றார். இதுமுத லிரண்டுபாட்டுக் குளகம். ()

கிளிபொரு கிளவி யாள்பொற் கிண்கிணி சிலம்போ டார்ப்பத்,தளிநறுப் பிலிற்று மென்பூந் தடம்புயத் துதைத் த லோடுங்,களிசெயப் பொடித்த ரோமங் கண்டகத் துறு த்தி லந்தோ, வளியசி றடிக ணோமென் றல்லலுற் றழுங்கி னனே.

(இ - ள்.) கிளி பொரு - கிளியையொத்த, கிளவியாள் - வசனத்தையுடைய தமயந்தியானவள், பொன் கிண்கிணி - பொன்னினாற் செய்த சிறுசதங்கைகள், சிலம்போடு - சிலம்புடனே, ஆர்ப்ப - சத்திக்க, தளி - துளிதுளியாக, நறு பிலிற்றும் - தேனைத் துளிக்கின்ற, மெல் - மிருதுவாகிய, பூ - புட்பமாலையணிந்த, தடம் புயத்து - விசாலம்பொருந்திய புசத்தினிடத்தில், உதைத்தலோடு - உதைத்தமாத்திரத்தில், களி செய் - மகிழ்ச்சியைச் செய்ய, பொடித்த ரோமம் - புளகித்த மயிர்கள், கண்டகத்து - முட்கள்போல், உறுத்தில்-உறுத்துமாகில், அந்தோ - ஐயோ, அளிய - மிருதுவாகிய, சிறு அடிகள் - சிறிய பாதங்கள், நோம் என்று - வருந்துமே யென்று, அல்லல் உற்று - துன்பமுற்று, அழுங்கினன் - வருந்தினன், எ-று.

(க - து.) நளன்தோள்களிற் காலாலுதைத்தவளவில் அந்நளன் சிற்றடி நோவுமென்று துன்புற்றான் என்பதாம்.

அக்குற்றத்தைத் தமயந்தி பொறுத்தமைதோன்ற தடம்புயத் துதைத்தென்றும், அதிலும் அவளுக்கோ ராச்சரியமான அருமை தோன்ற அளியசிறடிக ணோமென் றல்லலுற் றழுங்கினனென்றுஞ் சொல்லினர். (ருஉ)

உடைதிரைப்பரவைஞாலத்துயர்ந்தவர்தொழும்புபூண்ட வடியவரிழைத்ததீமையருளொடும்பொறுப்பதல்லால் கொடியவர்போலச்சீறியாருயிர்குறைப்பர்கொல்லோ மடலவிழ்கமலப்போதில்வாள்கிடந்தனையகண்ணாய்.

(இ - ள்.) உடை - கரையையுடைக்கின்ற, திரை பரவை - அலைகளையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த, ஞாலத்து - பூமியினிடத்தில், உயர்ந்தவர் - பெரியோர்கள், தொழும்பு பூண்ட அடியவர் - தொண்டுபட்ட வேலைக்காரர்கள், இழைத்த தீமை - செய்த குற்றத்தை, அருளொடும் - கிருபையுடனே, பொறுப்பது அல்லால் - பொறுத்துக்கொள்வதேயல்லாமல், கொடியவர் போல் - தீயவர்போல, சீறி - கோபித்து, ஆர் உயிர் - பொருந்திய ஜீவனை, குறைப்பர் கொல்லோ - சேதிப்பார்களோ, மடல் அவிழ் கமலம்போதில் - இதழ்கள் விரிந்த தாமரை மலரில், வாள் கிடந்து அனைய - இரண்டுவாள்க ளிருந்ததையொத்த, கண்ணாய் - கண்களையுடைய தமயந்தியே, எ-று.

(க-து.) தமயந்தியே! பெரியோர் அடியவர்செய்த குற்றத்தைப் பொறுப்பதல்லாம லுயிர்ச்சேதம் செய்வாரோ என்பதாம்.

கலவிவேளையில் மாதர்க் கிதஞ்செய்வதே முக்கியம், மற்றவேளையில் ஒருவர்க் கொருவர் செய்யு மரியாதை அங்ஙனம் வேண்டிய தின்

றுதலால், நளன் 'அடியவரிழைத்த திமை யருளொடும் பொறுப்பதல்லாற் - கொடியவர்போலச் சீறி யாருயிர் குறைப்பர் கொல்லோ' என்றான். (௫௩)

**அள்ளிலைமணிப்பூண்கோதையருளெனப்பணிதலோடுங்**
**கள்ளுலாநறியகூந்தல்கலவியினுரைத்தயாவுங்**
**கிள்ளைகண்மிழற்றுமாறுகேட்டிளநிலவுகாலு**
**முள்ளெயிறிலங்கச்செவ்விமுகிழ்நகைகோட்டினாளே.**

(இ - ள்.) அள் இலை - நெருங்கிய அரசிலைபோன்ற, மணி பூண் - ரத்நாபரண மணிந்த, கோதை - தமயந்தியே!, அருள் என - கிருபை செய்யென்று, பணிதலோடும் - வணங்கின மாத்திரத்தில், கள் உலாம் - தேனானது பெருகுகின்ற, நறிய கூந்தல் - வாசனைபொருந்திய கூந்தலையுடைய தமயந்தியானவள், கலவியில் - புணர்ச்சியில், உரைத்த யாவும் - சொல்லியவெல்லாம், கிள்ளைகள் - கிளிப்பிள்ளைகள், மிழற்றும் ஆறு - சொல்லும்விதத்தை, கேட்டு - காதிற்கேட்டு, இள நிலவு காலும் - இளஞ்சந்திரிகையைக் கக்குகின்ற, முள் எயிறு - முருந்து போன்ற தந்தங்கள், இலங்க - பிரகாசிக்க, செவ்வி - அழகு, முகிழ் - அரும்புகின்ற, நகை - புன்சிரிப்பை, கோட்டினாள் - செய்தாள், எ-று.

(க - து.) நளன தமயந்தியே! கிருபைசெய்யென வணங்கின வுடனே தமயந்தி புணர்ச்சியிற் சொன்னசொற்களைக் கிளிகள் சொல்லக்கேட்டு நகைத்தாள் என்பதாம்.

தாமிருவரும் கலவியிற் பேசினவற்றைக் கிளிப்பிள்ளைகள் வெளிப்படுத்தலால் தமயந்தி அங்ஙனம் நாணி நகைத்தனளென்க. ()

**இன்னமிழ்துயிர்த்தசெவ்வியிளநிலாவுருவுவாய்ந்த**
**நன்னலங்கனிந்தகோதைநகைமுகவாயில்பெற்றுப்**
**பொன்னவிர்சுணங்குபூத்தபுணாமுலைகோடுபுல்லிக்**
**கன்னவிறோளான்காமக்கடலகத்தழுந்தினானே.**

(இ - ள்.) இன் அமிழ்து உயிர்த்த - இனியவமிர்தத்தை யீன்ற, செவ்வி - அழகுபொருந்திய, இள நிலா - இளமைபொருந்திய நிலவையொத்த, உருவு வாய்ந்த - வடிவம்பொருந்திய, நல் நலம் கனிந்த - நல்ல நலமானது முதிர்ந்த, கோதை - தமயந்தியினது, நகை முகம் - புன்சிரிப்பையுடைய முகமாகிய, வாயில் பெற்று - தூதுபெற்று, பொன் அவிர் - பொன்னைப்போலும் பிரகாசிக்கின்ற, சுணங்கு பூத்த - தேமலானது உண்டாகிய, புணா முலை - நெருங்கிய ஸ்தனமாகிய, கோடு - கொம்பினை, புல்லி - தழுவி, கல் - மலைபோலும் என்று, நவில் - சொல்லாநின்ற, தோளான் - தோளையுடைய நளமகாராஜன், காமம் கடல் அகத்து - காமமாகிய சமுத்திரத்தினிடத்தில், அழுந்தினான் - முழுகினான், எ-று. ஏ-அசை.

(க - து.) நளன் தமயந்தியைப்புணர்ந்து காமக்கடலிலே மூழ்கினான் என்பதாம்.

தமயந்தியினுடைய நகைமுகத்தை நளன் தன்வேண்டுகோளுக்கு வாயிலாகப்பெற்று காமக்கடலைத் தமுந்தினனெனக் கூட்டுக. (௫௫)

எறிதிரைசுருட்டுமுந்நீரினியதெள்ளமிழ்தினோடும்
பொறையுயிர்த்துலகில்வந்தபொலன்கொடியனையநங்கை
கறைகெழுகுருதிவைவேற்கண்வலைப்பட்டுவெம்போர்த்
திறல்கெழுசிங்கவேறுசிமிழ்ப்புண்டுகிடந்ததன்றே.

(இ - ள்.) எறி திரை - வீசாநின்ற அலைகளை, சுருட்டும் - மடக்குகின்ற, முந்நீர் - கடலானது, இனிய - இனிதாகிய, தெள் அமிழ்தினோடும் - தெளிந்த அமிர்தத்தினோடும், பொறை உயிர்த்து - பெறப்பெற்று, உலகில் வந்த - உலகத்திற் றோன்றிய, பொலம் கொடி அனைய நங்கை - பொற்கொடியை யொத்த தமயந்தியினது, கறை கெழு - உதிரந் தோய்ந்த, குருதி வை வேல் - சிவந்த கூரிய வேல்போன்ற, கண் வலை பட்டு - கண்ணின் வலையிலகப்பட்டு, வெம்போர் - வெவ்விய யுத்தத்தில், திறல் கெழு - வலிமை மிக்க, சிங்க ஏறு - நளனாகிய ஆண் சிங்கமானது, சிமிழ்ப்பு உண்டு - கட்டுப்பட்டு, கிடந்தது - இருந்தது, எ-று. ஏ - அசை

(க - து.) தமயந்தி கண்களாகிய வலைகளில் நளனாகிய சிங்கங் கட்டுப்பட்டிருந்தது என்பதாம்.

திறல்கெழுசிங்கவேறு சிமிழ்ப்புண்டு கிடந்தன் றென்பதுபோல, "வேட்டுவன் புடசிமிழ்த்தது" என்றார் பிறரும் (௫௬)

மல்லலந்தோளினானுமழைமதர்நெடுங்கணாளும்
புல்லுவிட்டொழியிலாவிபொன்றிடுமெனனவெண்ணி
யல்லுநண்பகலும்விள்ளாதணிநலம்பருகியாங்கு [ன்
செல்வுழிநிகழ்ந்தவெல்லாஞ்செப்புவான்றொடங்குகின்றே

(இ-ள்.) மல்லல அம் தோளினானும் - வலிபொருந்திய அழகிய தோளையுடைய நளனும், மழை - குளிர்ச்சிபொருந்திய, மதர் நெடு கண்ணாளும் - களிப்பையுடைய நெடிய கண்களையுடைய தமயந்தியும், புல்லு விட்டு - ஒருவர்க்கொருவர் தழுவுதலைவிட்டு, ஒழியில் - நீங்கில், ஆவி - பொன்றிடும் என்ன - உயிரானது போய்விடுமென்று, எண்ணி- நினைத்து, அல்லும் - இராப்பொழுதிலும், நண் பகலும் - பகற்பொழுதிலும், விள்ளாது - நீங்காமல், அணி நலம் பருகி - அழகினது நலத்தையுண்டு, ஆங்கு - அவ்விடத்தில், செல்வழி - செல்லுமிடத்தில், நிகழ்ந்த வெல்லாம் - நடந்தனவனைத்தும், செப்புவான் - சொல்லும்படி, தொடங்குகின்றேன் - ஆரம்பிக்கின்றேன், எ-று. (௫௭)

(க - து.) நளனுந் தமயந்தியு மறுபவித்தவிடத்து நடந்தவை யெல்லாஞ் சொல்லத்தொடங்குகின்றேன் என்றார் என்பதாம்.

திருத்தகு லாரமார்பன் சேயரிக் கண்ணியோடு,
மருத்தியி னுவந்துபைம்பொ னணிநகர்க் கேகவெண்ணி,

விருப்பொடு விதர்ப்பர் கோனுக் குணர்த்தலும் விதர்ப் பன் காதற், புரிக்குழன் மடந்தை யோடும் வதுவைமண் டபத்திற் புக்கான்.

(இ - ள்.) திரு துயில் - இலக்குமி தங்குகின்ற, ஆரம் மாாபன் - பதக்கத்தையணிந்த மாாபினையுடைய நளமகாராசன, சே அரி கண்ணி யோடும் - சிவந்த ரேகைகளுள்ள கண்களையுடைய தமயந்தியோடும், அருத்தியின் - ஆசையினல், உவந்து - மகிழ்ந்து, பைம்பொன் - பசிய பொன்மயமாகிய, அணி நகாக்கு - அழகிய மாவிந்தமாநகாக்கு, ஏக எண்ணி - போகும்படி நினைதது, விருபபொடு - ஆசையுடன், விதாப் பாகோனுக்கு - வீமராஜனுக்கு, உணாததலும் - அறிவித்தலும், விதாப் பன் - வீமராஜனுனவன், காதல் - ஆசையையுடைய, புரி குழல் - கட் டுப்பட்ட கூந்தலையுடைய, மடந்தையோடும் - துணைவியுடன், வதுவை மண்டபத்தில் - விவாகமண்டபததில், புக்கான - புகுந்தான், எ-று. ()

(க - து) நளன் தமயந்தியுடனே தன்னூாக்குப்போக வெண்ணி வீமனுக் கறிவிக்க, வீமன் தன்மனைவியுடன கலியாணமண்டபத்துக்கு வந்தான் என்பதாம்.

பொழிகதிர்மணியிற்செய்தபுதவுடைக்கடிகொள்வாயில்
குழைமுகம்பொருதவேற்கட்கோதையர்விரைவினேடி
விழைவொடுவிதர்ப்பர்கோமான் போந்தமை விளம்பலோ
மழவிடையனையான்போந்துமாமனைததழுவினுனே. [டும்

(இ - ள்.) பொழி கதிா - கதிாகளை வீசுகின்ற, மணியில் செய்த- ரத்நங்களாற் செய்த, புதவு உடை - கதவையுடைய, கடி கொள் வாயில் - காவலைக்கொணட வாசற்படியில், குழை முகம் - காதின் முகததை, பொருத - மோதிய, வேல் கண் - வேல்போன்ற கண்களை யுடைய, கோதையா - மாதாகள, விரைவின் ஓடி - விரைந்துபோய், விழைவொடும் - விருப்பததோடுமு, விதாபபா கோமான் - வீமராஜன், போந்தமை - வந்ததன்மையை, விளமபலோடும் - சொன்னவளவில், மழ விடை அனையான - இளவேற்றையொதத நளமகாராஜன், போந்து - வந்து, மாமனை - மாமனுனை, தழுவினுன் - தழுவிக்கொண் டான், எ-று. ஏ - அசை.

(க - து.) வீமன் வந்ததைப் பெண்கள் சொல்ல நளன் வீமனைத் தழுவினுன என்பதாம். (ருக)

மழையுறழ் தடக்கை வேந்தன் மனைப்பெருங் கிழமை பூண்ட, தொழுதகு கற்பி னுளைச் சுடர்மணிக் கொம்பி னுல்கி, யெழில்குவிந் தனைய நங்கை யிறைஞ்சலு மெடுத் து மோந்து, விழைவொடு குறங்கில் வைத்து மெய்யுறத் தழுவிக் கொண்டாள்.

(இ - ள்.) மழை உறழ் - மேகத்தையொத்த, தடம் கை - விசா லம்பொருந்திய, கையையுடைய, வேந்தன் - வீமனுடைய, மனை -

வீட்டுக்கு, பெரு கிழமை பூண்ட - பெரிய வுரிமையைக்கொண்ட, தொழுதகு - வணங்கத்தக்க, கற்பினளை - கற்பையுடைய தாருகா சனியை, சுடா - காந்தியையுடைய, மணி கொம்பின் - ரத்னக்கொம்பு போல், ஒல்கி - வளைந்து, எழில் குவிந்தது அனைய - அழகெல்லா மொன்றாய்க் குவிந்ததை யொத்த, நங்கை - தமயந்தியானவள், இறைஞ்சலும் - வணங்கலும், எடுத்து - கைகொண்டுதூக்கி, மோந்து-(உச்சி) மோந்து, விழைவொடு - ஆசையோடு, குறங்கில வைத்து - தொடையின்மேல் வைத்துக்கொண்டு, மெய் உற - மெய்யிலேபொருந்த, தழுவினள் - தழுவிக்கொண்டாள், எ-று.

(க - து) தமயந்தி தன் தாயை வணங்கினவுடன் தாயாகிய தாருகாசனி மகளையெடுத்து முத்தமிட்டுத் தொடையில் வைத்துத் தழுவிக்கொண்டாள் எனபதாம். (௬0)

அன்னைதாடொழுதுபின்னரலத்தகக்குழம்புதோய்ந்த
பொன்னிதழ்க்கமலஞ்சேப்பப்புணர்முலைதாங்கலாகா
மின்னுறழ்மருங்குதேம்பமெல்லெனவொதுங்கிப்போந்து
தன்னுடைத்தாதைபைம்பொற்றுளிணைவணங்கினளே.

(இ - ள்.) அன்னை தாள் தொழுது - தாயினது பாதததை வணங்கி, பின்னா - பின்பு, அலத்தகம் குழம்பு தோய்ந்த - செம்பஞ்சுக் குழம்பு படிந்த, பொன் இதழ் - பொன்னையொத்த இதழ்களையுடைய, கமலஞ் சேப்ப - பாததாமரைகள் சிவக்க, புணா முலை - நெருங்கிய ஸ்தனங்களை, தாங்கல் ஆகா - தாங்கமாட்டாத, மின உறழ் - மின்னலையொத்த, மருங்கு தேம்ப - இடையானது வருந்த, மெல் என ஒதுங்கி போந்து - மிருதுவாக நடந்து வந்து, தன்னுடை தாதை - தனனுடைய தகப்பனாகிய வீமராஜனுடைய, பைம் பொன் தாள் இணை - பசிய பொனனையொத்த உபயபாதங்களை, வணங்கினள் - இறைஞ்சினாள், எ-று. ஏ - அசை.

(க - து) தமயந்தி தன பிதாவாகிய வீமனை வணங்கினள் என்பதாம். (௬௧)

வணங்கிநுண்மருங்குநோவவல்லியினொல்கிநின்ற
சுணங்கிளமுலையஞ்சாயற்சுடர்க்கொடிதனையும்வேந்தர்
நிணங்கமழ்குருதிவைவேனளனையுநோக்கிநேரா
ருணங்கியமுன்றில்வேந்தனுவகையங்கடலுளாழ்ந்தான்.

(இ - ள்.) வணங்கி - தொழுது, நுண் மருங்கு - நுட்பமாகிய இடையானது, நோவ - வருந்த, வல்லியின் - கொடிபோல, ஒல்கி நின்ற - அசைந்து எதிர்நின்ற, சுணங்கு - தேமல்பூத்த, இள முலை - இளமையாகிய ஸ்தனங்களையும், அம் சாயல் - அழகிய தோற்றத்தையுமுடைய, சுடா கொடிதனையும் - தமயந்தியையும், வேந்தா -(சத்துருக்களாகிய) அரசாகளது, நிணம் கமழ் - மாமிசம நாறுகின்ற, குருதி - உதிரந்தோய்ந்த, வை வேல் - கூரியவேலையுடைய, நளனையும் - நளமகாராஜனையும், நோக்கி - பாாத்து, நேரார் - பகைவர், உணங்கிய - வாடியிருக்கின்ற, முன்றில்-முற்றத்தையுடைய, வேந்தன்-வீமராஜன்,

உவகை கடலுள் - சந்தோஷமாகிய கடலினிடத்தில், ஆழ்ந்தான் - முழுகினன், எ-று. அம் - அசை.

(க-து.) வீமராஜன் மகளையு மருமகனையும் பார்த்து மகிழ்ந்தான் என்பதாம். (சுஉ)

**பண்ணமைகலினமான்றேராயிரமிரட்டிபாய்மா**
**வண்ணலங்களிநல்யானையாயிரத்தறுபத்தொன்பான்**
**கண்ணகன்விசும்புபூத்தகற்பகத்தருவினோடு**
**மண்ணிழிந்தனையபேரூரைம்பதும்வழங்கினனே.**

(இ - ள்.) பண் அமை - சேணமமைந்த, கலினம் - கடிவாளத்தையுடைய, மான் - குதிரைகட்டிய, தேர் ஆயிரம் - ஆயிரந்தேர்களும், இரட்டி பாய் மா - இரண்டாயிரங் குதிரைகளும், அண்ணல் - பெருமையினையும், அம் - அழகினையும், களி - செருக்கினையு முடைய, நல் - நல்ல, யானை ஆயிரத்து அறுபத்து ஒன்பான் - ஆயிரத்தறுபத்தொன்பது யானைகளும், கண் அகல் விசும்பு - இடமகன்ற தெய்வலோகம், பூத்த - மலர்ந்த, கற்பகதருவினோடும் - கற்பக விருட்சங்களுடனே, மண் - பூமியினிடத்து, இழிந்தது அனைய-வந்ததையொத்த, பேர் ஊர் ஐம்பதும் - ஐம்பது பெரிய கிராமங்களையும், வழங்கினன் - கொடுத்தான, எ-று. ஏ - அசை.

(க - து.) வீமராஜன் மகளுக்குத் தேர் க000, குதிரை உ000, யானை க0சுகூ, ஊர் ருo கொடுத்தான் என்பதாம். (சுங)

**பொருதிரைப்புணரியீன்றபொலன்கொடியனையசெவ்வி**
**யரிவையரிருபத்தையாயிரவர்நல்லரங்கிலாடும்**
**வருமுலைப்பவளச்செவ்வாய்வனிதையரெழுநூற்றெண்ம**
**ரிருபதுகோடிசெம்பொனினிதினில்வழங்கினனே.**

(இ - ள்.) பொரு திரை - மோதுகின்ற அலைகளையுடைய, புணரி - திருப்பாற்கடலானது, ஈன்ற - பெற்ற, பொலன் கொடி அனைய - இலக்குமியை ஒத்த, செவ்வி - அழகையுடைய, அரிவையர் இருபத்து ஐயாயிரவர் - இருபத்தையாயிரந் தோழிகளும், நல் - நல்ல, அரங்கில் - சபையில், ஆடும் - ஆடாநின்ற, வரும் முலை - வளர்ந்து வருகின்ற ஸ்தனங்களையும், பவளம் செவ்வாய் - பவளத்தையொத்த சிவந்த வாயினையுமுடைய, வனிதையர் எழுநூற்று எண்மர் - எழுநூற்றெட்டு நாட்டியப்பெண்களும், இருபதுகோடி செம்பொன் - இருபதுகோடி செம்பொன் நாணயங்களையும், இனிதினில் - இன்பமாக, வழங்கினன் - கொடுத்தான், எ-று. ஏ - அசை.

(க - து.) வீமராஜன் தோழிகள் உரு000, நாட்டியப்பெண்கள் எ0அ, பொன் உ0 கோடியுங் கொடுத்தான் என்பதாம். (சுச)

**பொழிகதிர்மணிசெய்கட்டில்புனைமலர்ப்பாயல்பைம்பொ**
**னிழைபயில்வண்ணப்பேழையினியசாந்தாற்றியோடு**
**விழைதவழ்மணிக்கண்ணாடிவித்தில முகடுவேய்ந்த**
**வொழுகொளிக்கவரியின்னவுலப்பிலநல்கினனே.**

(இ-ள்.) பொழி கதிர-கிரணங்களைப் பொழிகின்ற, மணி செய்-ரத்நங்களாற்செய்த, கட்டில் - கட்டிலும், புனை மலர் பாயல் - புட்பசயனமும், பைம்பொன் - பசியபொன்னாற்செய்த, இழை பயில் - ஆபரணங்கள் வைக்கின்ற, வண்ணம் பேழை - அழகிய பெட்டிகளும், இனிய சாந்தாற்றியோடு - இனிமையையுடைய கால்செய்வட்டத்துடன், நிழல் தவழ் - ஒளிதவழ்கின்ற, மணி கண்ணடி - ரத்நத்தால் விளிம்புசெய்த கண்ணடிகளும், நித்திலம் - முத்துக்களால், முகடு வேய்ந்த - முகடுசெய்யப்பட்ட, ஒழுகு ஒளி - மிகுந்த ஒளியையுடைய, கவரி - சாமரைகளும், இன்ன - ஆகியவிவைகளை, உலப்பு இல - அளவற்றவைகள், நல்கினன் - கொடுத்தான், எ-று. ஏ - அசை.

(க - து.) வீமராஜன் கட்டில்கள், புட்பசயனம், பெட்டிகள், ஆலவட்டம், கண்ணடி, சாமரை, இவைமுதலிய பலவுங்கொடுத்தான் என்பதாம். (௬௫)

அல்லியங்கமலநீங்கியரசரிற்புகுந்துவாழும்
மெல்லியல்பிரியலாற்ருவிழைவொடுபலகாற்புல்லி
மல்லலங்தெரியல்வீமன்மனைவியர்பலருமாழ்கி
யெல்லையில்துயரினேடுந்தனித்தனியிரங்கினுரே.

(இ - ள்.) அல்லி - அகவிதழையுடைய, அம் - அழகிய, கமலம் - தாமரைமலரை, நீங்கி - விட்டு, அரசர் இல் - இராஜமனையில், புகுந்து - சேர்ந்து, வாழும் - வாழ்கின்ற, மெல் இயல் - இலக்குமியாகிய தமயந்தியை, பிரியல் ஆற்ரு - பிரியமாட்டாத, விழைவொடு - ஆசையுடனே, பல கால் புல்லி - பலதரம் அணைத்துக்கொண்டு, மல்லல் - வளம்பொருந்திய, அம் - அழகிய, தெரியல் - மாலையணிந்த, வீமன் - வீமராஜனுடைய, மனைவியர் பலரும் - தேவிமார் பலரும், மாழ்கி - மயங்கி, எல்லை இல் - அளவில்லாத, துயரினேடும் - துன்பத்தோடும், தனி தனி - தனித்தனியாக, இரங்கினர் - வருந்தினார்கள், எ - று, ஏ - அசை.

(க - து.) வீமன் மனைவியர் பலரும், தமயந்தி பிரிவைச் சகியாமல் வருந்தினார்கள் என்பதாம். (௬௬)

பெருந்துயருழந்துவாடும்பிணையனுர்தம்மைநோக்கி
விரிந்தபூந்துளவினேன்பின்விரைமலர்க்கோதையேக
வருந்திமுன்னுயிர்த்ததெண்ணீர்மறிகடல்வருந்திற்ருேவென்
றருந்தவர்க்கிறைவனுனகோதமனுற்றினுனே.

(இ - ள்.) பெரு துயர் உழந்து - மிகுந்த துன்பத்தி லலைந்து, வாடும் - வருந்துகின்ற, பிணையனுர்தம்மை - மானையொத்த மங்கையரை, நோக்கி - பார்த்து, விரிந்த - மலர்ந்த, பூ - புட்பத்தையுடைய, துளவினேன் பின் - துளசிமாலையையுடைய மகாவிஷ்ணுவின் பின்னே, விரை - வாசனைபொருந்திய, மலர் - தாமரைமலரில் வாசமாயிருக்கின்ற, கோதை - இலக்குமியானவள், ஏக - போக, வருந்தி - வருத்தப்பட்டு, முன் உயிர்த்த - முன்னே பெற்ற, தெள் நீர் - தெளிந்த நீரையுடைய, மறி கடல் - புரளாநின்ற சமுத்திரமானது, வருந்திற்று

என்று - வருத்தமுற்றதோ வென்று, அருந்தவர்க்கு - அரியதவத்தை யுடையவர்க்கு, இறைவன் ஆன - அரசனான, கோதமன் - கௌதமன், ஆற்றினன் - தேற்றினன், எ-று. ஏ - அசை.

(க-து.) கௌதமா வீமன் மனைவிகளைத் தேற்றினர் என்பதாம்.()

அன்னையரம்மெலோதித்தோழியையருளினோக்கி
யுன்னினுமிவணமேற்காதலுளமெனவுரைக்கிலேமா
லென்னினுமின்றுதொட்டுமின்னுயிர்த்தோழியல்லை
மின்னனாட்கன்னைநீயேவேண்டுவபுரிதியென்றார்.

(இ - ள்.) அன்னையா - தாய்மாாகள், அம் - அழகிய, மெல் - மிருதுவாகிய, ஓதி - கூந்தலையுடைய, தோழியை - உயிாப்பாங்கியை, அருளின் - கிருபையினால், நோக்கி - பாாத்து, உன்னினும் - உன்னைப் பாாக்கிலும், இவண்மேல் - இந்தத் தமயாதியின்மீது, காதல் உளம் என - ஆசை உள்ளோ மென, உரைக்கிலேம் - சொல்லுகின்றிலேம், என்னினும் - ஆனாலும், இன்றுதொட்டும் - இன்றுமுதலாகவும், இன் - இனிதாகிய, உயிாத் தோழி அல்லை - உயிாபபாங்கியல்லை, மின் அன்னாட்கு - மின்னலையொத்த தமயந்திக்கு, அன்னை நீயே - நீயே தாய், வேண்டுவ - வேண்டியவைகளை, புரிதி என்றா - செய்யென்று சொன்னாாகள், எ-று.

(க - து.) தாய்மாாகளனைவருந் தமயந்தி தோழியைப்பாாத்து இன்றுதொடங்கித் தமயந்திக்குத தோழி நீயல்ல, நீயே தாய், இவளுக்கு வேண்டுவனவற்றைச் செய்யென்றாாகள் என்பதாம். (௬அ)

மணம்புரிபடலம் முற்றிற்று.

---

ஆ செய்யுள் - அ௬௪.

---

## வீட்சிப்படலம்.

[இப்படலத்தால் நளமகாராசன் தமயந்தியோடுந் தன் னகரத்திற்குப் போகுதல் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

மற்றிவை நிகழும் வேலை மகிழ்வொடு மாமன் றன்பால்,
வெற்றிகொள் குருதி வைவேல் வேந்தர்கோன் விடைகொ
ண் டேகி, யற்றமில் கேள்வி சான்ற வமச்சரை யினிதி
னோக்கி, யிற்றைநா ளெழுச்சி யென்ன விமிழ்முரசறைக
வென்றான்.

(இ - ள்.) மற்று இவை - பின்பு இக்காரியங்கள், நிகழும் வேலை - நடக்கும்பொழுது, மகிழ்வொடு - சந்தோஷத்துடனே, மாமன் தன் பால்-வீமராஜனிடத்தில், வெற்றி கொள் - செயத்தைக்கொண்ட, குருதி வை வேல் - இரத்தந்தோய்ந்த கூாமைபொருந்திய வேலையுடைய,

வேந்தர்கோன் - நளமகாராஜன், விடை கொண்டு ஏகி - உத்தரவு பெற்றுக்கொண்டு போய், அற்றம் இல் - சோர்வில்லாத, கேள்வி சான்ற - கியானமுள்ள, அமச்சரை - மந்திரிகளை, இனிதின் நோக்கி - இன்பமாகப்பார்த்து, இற்றை நாள் - இன்றைத்தினம், எழுச்சி என்ன- புறப்படுதலென்று, இமிழ் - சத்தியாநின்ற, முரசு - பேரிகையை, அறைக என்றான் - அடியுங்களென்று சொன்னான், எ-று.

(க - து.) நளன் வீமனிடத்து விடைபெற்றுக்கொண்டு மந்திரி களைப்பார்த்து இன்று புறப்படுதலென்று முரசறையச்சொன்னான் என்பதாம். (க)

கலிவிருத்தம்

அண்ணலங்குருதிவேலரசனேவலிற்
கண்ணகன்முரசெழுகடலினார்த்தெழ
வெண்ணிடவிடமிலையென்னநேமிசூழ்
மண்ணகவரைப்பெலாமலிந்ததானையே.

(இ - ள்.) அண்ணல் - பெருமைபொருந்திய, அம் - அழகிய, குருதி வேல் - இரத்தந்தோய்ந்த வேலாயுதத்தையுடைய, அரசன் - நளமகாராசனுடைய, ஏவலில் - உத்தரவினால், கண் அகல் - இட மகன்ற, முரசு - பேரிகையானது, எழு கடலின் - ஏழ் கடலின் ஒலி யைப்போல, ஆர்த்து எழ - மிகுந்தொலிக்க, எண் இட - எள்ளை இடு தற்கு, இடம் இல்லை என - இடமில்லையென்று சொல்ல, நேமி சூழ் - சமுத்திரஞ்சூழ்ந்த, மண்ணகம் - பூமியினுடைய, வரைப்பு எல்லாம் - எல்லையெல்லாம், தானையே - சேனைகள், மலிந்த - நிறைந்தன, எ - று. ஏ - அசை.

(க - து.) நளனேவலால் முரசறையச் சேனைகள் நிறைந்தன என்பதாம். (உ)

நிலவுவெண்கவிகைமேனிழற்றத்தண்மதிக்
கலைநிலாக்குவிந்தனகவரிகால்செய
மலர்தலையுலகெலாம்புரக்குமன்னவன்
சிலையுலாந்தமனியத்தேரிலேறினான்.

(இ - ள்.) நிலவு - பிரகாசியாநின்ற, வெள் கவிகை - வெண் கொற்றக்குடையை, மேல் நிழற்ற - மேலேபிடிக்க, தண் - குளிர்ச்சி பொருந்திய, மதி - சந்திரனுடைய, கலை நிலா - சோடசகலைகளின் பிரகாசம், குவிந்தன - குவிந்த தோற்றம்போல், கவரி - சாமரைகள், கால் செய - காற்றை வீச, மலர் தலை உலகெலாம் - பரந்த விடத் தையுடைய உலகமுழுதும், புரக்கும் - இரட்சிக்காநின்ற, மன்னவன் - அரசன், சிலை உலாம் - மலைபோல் உலாவுகின்ற, தமனியம் - பொன் னாலாகிய, தேரில் - இரதத்தின்மீதில், ஏறினான் - ஏறிக்கொண்டான், எ-று.

(க - து.) நளன் தேரிலேறினான் என்பதாம். (௩)

கலிகெழுமுரசுகண்கறங்குமோதையாற்
பொலன்முகடுடைந்துமேற்போயிற்றில்லையே
லலர்தலைவிசும்பினிலடங்கலாவதே
நிலமிசையெழுந்துமேனிமிர்ந்ததூளியே.

(இ - ள்.) கலி கெழு - சத்தம்பொருந்திய, முரசு கண் - பேரிகையின் கண்ணனது, கறங்கும் ஓதையால் - ஒலிக்குஞ் சத்தத்தினால், பொலன் - அழகுபொருந்திய, முகடு - அண்டமுகடானது, உடைந்து - உடைபட்டு, மேல் போயிற்று இல்லையேல் - மேலண்டங்களில் போகாமற்போனால், நிலமிசை - பூமியின்மீது, எழுந்து - எழும்பி, மேல் நிமிர்ந்த - மேலே உயர்ந்த, தூளி - புழுதிகள், அலர் தலை விசும்பினில் - பரந்தவிடத்தையுடைய ஆகாசத்தில், அடங்கலாவதே - அடங்குமோ, எ - று

(க - து.) புழுதிகள் பேரிகைச்சத்தத்தா லண்டமுடைந்து அப்பாற் போகாவிடில் ஆகாயங் கொள்ளுமா என்பதாம். (ச)

இருங்கடற்றானையினெழுந்தநுண்டுகள்
பொருங்களிறுமிழ்மதம்பொழிந்ததில்லையேற்
கருங்கடலளறெழப்பருகிக்கார்குல
மொருங்குவான்பொழியினுமொழிக்கவொண்ணுமே.

(இ-ள்.) இரு - பெருமைபொருந்திய, கடல் தானையின் - சேனசமுத்திரத்தில், எழுந்த - எழும்பிய, நுண் துகள் - நுண்ணியபொடிகள், பொரும் - சண்டைசெய்யாநின்ற, களிறு உமிழ் - யானைகள் கக்காநின்ற, மதம் - மும்மதத்தையும், பொழிந்தது இல்லையேல் - பொழியாமற்போனால், கரு கடல் - கறுத்த சமுத்திரசலத்தை, அளறு எழ - சேறுபட, பருகி - குடித்து, கார் குலம் - மேகக்கூட்டங்கள், ஒருங்கு - ஒருமுகமாய், வான் - ஆகாசத்தினின்று, பொழியினும் - சொரிந்தாலும், ஒழிக்க ஒண்ணுமே-போக்கக்கூடுமோ, எ-று.

(க - து.) யானைகள் மதம்பொழியாவிடில் மேகங்கள் கடலைமுற்றுங் குடித்துப்பொழியினும் புழுதிகளை ஒழிக்கக்கூடுமோ என்பதாம்.

சுடர்விடுபருமணிச்சூட்டராவின்மே
னெடுநிலந்துளக்குறநின்றவாற்றினாற்
படவிருவிசும்பினிற்பாய்ந்தவல்லது
புடவிமேன்மிதித்திலபுரவிவெள்ளமே.

(இ - ள்.) சுடர் விடு - பிரகாசத்தை வீசாநின்ற, பரு மணி - பருத்தரத்நங்கள் பொருந்திய, சூடு - உச்சிக்கொண்டையையுடைய, அராவின்மேல் - ஆதிசேஷன்மீது, நெடு நிலம் - நெடிய பூமி, துளக்கு உற நின்ற ஆற்றினால் - அசைவுற இருந்தபடியால், பட - விரிந்த, இரு - பெருமைபொருந்திய, விசும்பினில் - ஆகாசத்தில், பாய்ந்த அல்லது - தாவிச்சென்றன வல்லாமல், புடவிமேல் - பூமியின்மீது,

மிதித்தில - நடக்கவில்லை, புரவி வெள்ளம் - குதிரைக்கூட்டங்கள், எ-று. ஏ - அசை.

(க - து.) குதிரைக் கூட்டங்கள் ஆகாயமார்க்கமாய்ப் போயின என்பதாம். (௬)

புதையிருள்சீத்தொளிபொழியுஞ்செங்கதி
ருதயமால்வரையெழவொளியிழத்தலான்
மதிபலவாய்வெயின்மறைத்தல்போலுமாற்
கதிர்நிலாமுத்தவெண்கவிகையீட்டமே.

(இ - ள்.) புதை இருள் சீத்து - நிறைந்த இருளைக் கெடுத்து, ஒளி பொழியும் - பிரகாசத்தைச் சொரியாநின்ற, செம் கதிர் - சூரியன், உதயம் மால் வரை எழ - உயர்ந்த வுதயகிரியி லுதிக்க, ஒளி இழத்தலால் - பிரகாசத்தை நீங்குதலால், மதி - சந்திரனானவன், பலவாய் - அநேகரூபமாய், வெயில் - சூரியனை, மறைத்தல் போலும் - மறைத்தலையொக்கும், கதிர் நிலா - நிலவுபோற் கிரணத்தை வீசுகின்ற, முத்தம் - முத்தினாற்செய்த, வெள் - வெண்மைபொருந்திய, கவிகை ஈட்டம் - குடையின் கூட்டங்கள், எ-று. ஆல் - ஏ - அசை.

(க - து.) குடைக்கூட்டங்கள் அநேகசந்திரனை யொத்திருந்தன என்பதாம். (௭)

மழலையங்கிள்ளையும்வளர்த்தபூவையும்
குழைபொருதடங்கணார்கொண்டுசூழ்வர
விழைவளர்முலையினாளிளநிலாக்கதிர்
பொழிமணிச்சிவிகையிற்போயினாளரோ.

(இ - ள்.) மழலை - மழலைச்சொல்லையுடைய, அம் கிள்ளையும் - அழகிய கிளிகளும், வளர்த்த - (தாம்) வளர்த்த, பூவையும் - நாகணவாய்ப் புள்ளும், குழை பொரு - குண்டலமணிந்த காதுடன் போர் செய்யாநின்ற, தடம் கண்ணார் - விசாலமாகிய கண்களையுடைய தாதியர்கள், கொண்டு சூழ் வர - கையிற்கொண்டு சூழ்ந்துவர, இழை - ஆபரணங்களையணிந்த, வளர் முலையினாள் - வளர்ந்துவராநின்ற ஸ்தனங்களையுடைய தமயந்தி, இள நிலா - இளஞ்சந்திரன்போல, கதிர் பொழி - கிரணங்களைச் சொரியாநின்ற, மணி சிவிகையில் - முத்துப் பல்லக்கின்மீது, போயினாள் - போனாள், எ-று. அரோ - அசை.

(க - து.) தமயந்தி பெண்கள் சூழ்ந்துவர இரத்தினச்சிவிகையின்மேற் போயினாள் என்பதாம். (௮)

கதிர்மணியடைப்பையுங்கால்செய்வட்டமுந்
ததைமயிர்க்கவரியுந்தாங்கிமெல்லென
வதிர்குரற்கிண்கிணிசிலம்பொடார்ப்பெழு
மதரரிநெடுங்கணார்மருங்குபோயினார்.

(இ - ள்.) கதிர் மணி - கிரணங்களையுடைய ரத்தினத்தினாற்செய்த, அடைப்பையும் - தாம்பூலப்பையையும், கால் செய் வட்டமும் - காற்

றை வீசுகின்ற விசிறிகளையும், தகை மயிர் - நெருங்கிய மயிரை யுடைய, கவரியும் - சாமரைகளையும், தாங்கி - சுமந்து, மெல் என - மெதுவாக, அதிர் குரல் - அதிர்ந்த சத்தத்தையுடைய, கிண்கிணி - கிண்கிணிகள், சிலம்பு - சிலம்புகளுடனே, ஆர்ப்பு எழ - ஆரவாரிக்க, மதர் - மதர்த்த, அரி-செவ்வரிபரந்த, நெடு கண்ணார் - நீண்டகண்களை யுடைய மாதர்கள், மருங்கு - பக்கத்தில், போயினார் - போனார்கள், எ-று.

(க - து.) பெண்கள் அடைப்பை ஆலவட்டம் சாமரை இவை களைத் தாங்கிப் பின்சென்றார்கள் என்பதாம். (௯)

சாந்தணிந்தோங்கியதடங்கொள்வெம்முலை
யேந்திழைத்தோழியரெண்ணின்மங்கையர்
பூந்தருநீழலிற்பொன்னனாரெனக்
கூந்தலம்பிடிமிசைக்குழாங்கொடேகினார்.

(இ - ள்.) சாந்து அணிந்து - சந்தனத்தைத் தரிக்கப்பெற்று, ஓங்கிய - உயர்ந்த, தடம் கொள் - விசாலத்தைக்கொண்ட, வெம் முலை - விருப்பத்தைத்தரும் ஸ்தனத்தினிடத்தில, ஏந்து இழை தோழியர் - ஆபரணங்களைத்தாங்கிய டாங்கிகளும், எண் இல் மங்கையர் - எண்ணிக்கையில்லாத ஸ்திரீகளும், பூ தரு - பூவினை யு டைய கற்பக விருட்சத்தினது, நீழலில் - நிழலில் வாசம்பண்ணுகிற, பொன் அனார் என - இலக்குமியையொத்த அரம்பைமாதர்கள் போல, கூந்தல் - புறமயிரினையுடைய, அம் - அழகிய, பிடிமிசை - பெட்டையானையின்மேல், குழாங்கொடு - கூட்டங்கொண்டு, ஏகினார் - போயினார்கள், எ-று.

(க - து.) தோழிமார்களும் பெண்களும் யானைமேலேறிப் போனார்கள் என்பதாம். (௧௦)

கான்பயின்மரைமலர்ச்செல்விகாமுறு
மான்பயினோக்கியர்மகரயாழிடைத்
தேன்பயிறெள்விளிபாடத்தேரையிற்
கூன்களுஞ்சிந்தொடுகுறளுஞ்சென்றவே.

(இ - ள்.) கான் பயில் மரை மலர் - வாசனை பொருந்திய தாம ரைமலரில் வாசம்பண்ணுகின்ற, செல்வி - இலக்குமியானவள், காமு றும் - இச்சியாநின்ற, மான் பயில் நோக்கியர் - மான்கள் கற்காநின்ற பார்வையையுடைய மாதர்கள், மகரயாழிடை - மகர வீணையினிடத் தில், தேன் பயில் - தேன்போல் மதுரம்பொருந்திய, தெள்விளி பாட - தெள்விளியென்னும் ராகத்தைப்பாட, தேரையில் - தேரை போல், கூன்களும் - கூனரும், சிந்தொடு - அவயவமற்றவருடன், குறளும் - குள்ளரும், சென்ற - போயினர், எ - று. ஏ - அசை.

(க - து.) பெண்கள் மகரயாழ்பாடக் கூனரும் அவயவ வீன ரும் குள்ளரும் போனார்கள் என்பதாம்.

கூன் சிந்து குறள் எனபன உயாதிணைப் பொருளவேனும் சொல் லா லஃறிணை யாதலிற் சென்ற வென்றூா. (கக)

கொடிகளுங்குடைகளுங்குழுமப்பல்லியங்
கடலுடைந்தாலெனக்கறங்கியார்த்தெழ
வடிகெழுகுருதிவேன்மன்னர்சூழ்வர
நிடதனுடைந்தனனேமிவேந்தனே.

(இ - ள்.) கொடிகளும் - துவசங்களும், குடைகளும் - கவிகை களும், குழும - சுற்றிவர, பல் இயம் - நானாவித வாத்தியங்கள், கடல் உடைந்தால் என - சமுத்திரமுடைந்து வருதல்போல, கலங்கி ஆர்த்து எழ - குமுறி யாரவாரிக்க, வடி கெழு - வடித்தல் பொருந்திய, குருதி - இரத்தந்தோய்ந்த, வேல் - வேலாயுதத்தையுடைய, மன்னா - அரசாகள, சூழ்வர - சூழ்ந்துவர, நிடதநாடு அடைந்தனன் - நிடத் தேசத்தைச சோநதான, நேமி - உலகத்தையுடைய, வேந்தன் - நள மகாராசன், எ-று. ஏ - அசை.

(க - து.) நளன் அரசாகள் புடைசூழ்ந்துவர நிடதநாட்டைச் சோந்தான் என்பதாம். (கஉ)

அருமறைமுனிவருமமைச்சர்வெள்ளமுங்
குனைகடற்றுனையுங்குரவர்கூட்டமு
முரசொலியதிர்குரன்முகிலினார்த்தெழ
விருநிலக்கிழவனையெதிர்கொண்டாரரோ.

(இ - ள்.) அரு மறை - அரிதாகிய வேதத்தையுடைய, முனிவ ரும் - வேதியரும், அமைச்சா வெள்ளமும் - மந்திரிகளின் கூட்டமும், குனை - சத்தியாநின்ற, கடல் தானையும் - சேனாசமுத்திரமும், குரவா கூட்டமும் - பெரியோாகள் கூட்டமும், முரசு ஒலி - பேரிகையின் சத்தமானது, அதிா குரல் - அதிாகின்ற குரலையுடைய, முகிலின் - மேகம்போல், ஆாத்து எழ - ஆரவாரிக்க, இரு நிலக்கிழவனை - பெரிய பூமிக்குரிய நளமகாராஜனை, எதிாகொண்டாா - எதிாகொண்டாாகள், எ-று. அரோ - அசை.

(க - து.) முனிவாகளும் மந்திரிகளும், சேனைகளும், பெரியோா களும், நளனுக் கெதிாவந்தாாகள் என்பதாம். (கங)

அகழியங்கடல்புடையணிந்துநீனிற
முகிறவழ்மூதெயின்முற்றியின்னகிற்
புகைகமழெரிமணிப்பொன்செய்மாடத்தி
னைநிலாமதிதவழ்நகரமெய்தினான்.

(இ - ள்.) அகழி - இடங்காகிய, அம் கடல் - அழகிய சமுத்தி ரத்தை, புடை அணிந்து - பக்கததில் தரித்து, நீல் நிறம் - நீலநிறம் பொருந்திய, முகில் தவழ் - மேகந் தவழாநின்ற, மூது எயில் - பழ மையாகிய மதில், முற்றி - சூழ்ந்து, இன் அகில் புகை - இனிய அகி

வினைது புகையானது, கமழ் - பரிமளியாநின்ற, எரி மணி - பிரகாசம் பொருந்திய ரத்நத்தினாலும், பொன் - பொன்னாலும், செய் - செய்த, மாடத்தின் - உபரிகையின்மீது, நகை நிலா - பிரகாசியாநின்ற சந்திரிகையையுடைய, மதி தவழ் - சந்திரன் தவழாநின்ற, நகரம் - மாவிந்த நகரத்தை, எய்தினன் - சேர்ந்தான், எ-று.

(க - து.) நளன்மாவிந்தநகரத்தைச் சேர்ந்தான் என்பதாம்.(கச)

பொருவருங்கங்கைநீர்நிறைத்துப்பூசுர
ரெரிமணிப்பொற்றசும்பேந்திமுன்வர
விரைகமழ்செழுந்தொடைவீமன்மாதொடுந்
திருவளர்கோயிலிற்செல்வனெய்தினன்.

(இ - ள்.) பொரு அரு - ஒப்பில்லாத, கங்கை நீர் - கங்காசலத்தை, நிறைத்து - பூரித்து, பூசுரர் - வேதியர்கள், எரி மணி - பிரகாசம்பொருந்திய ரதநமழுத்திய, பொன் தசும்பு - பொனனாற்செயத பூரணகும்பத்தை, ஏந்தி - தாங்கி, முன வர - எதிாவர, விரை கமழ் - வாசனை பரிமளியாநினற, செழு தொடை - செழுமையாகிய மாலையையணிந்த, வீமன் மாதொடும் - தமயந்தியுடனே, திரு வளர் கோயிலில் - இலக்குமி வாசம்பணணுநின்ற அரமனையில், செல்வன - நளமகாராஜன், எய்தினன் - சேர்ந்தான், எ-று.

(க - து.) பிராமணாகள கங்கையைப் பொற்குடத்திற்கொண்டெதிாவர நளமஹாராஜன் தமயந்தியுடனே அரன்மனையிற் சோந்தான என்பதாம். (கரு)

மீட்சிப்படலம் முற்றிற்று.

ஆக செய்யுள் - அஎகூ.

## கலிதோன்றுபடலம்.

[இப்படலத்தால் தமயந்தியின் விவாகததைக் கருதிவந்த கலி அவனை நளன் விவாகஞ் செயதானென்னும் பொறாமையால் அவனை வருத்துதற்கு அவனது நகரததிற்றோன்றிக் காலம்பாாததிருததல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்

ஈங்கிவனின்னணமிருப்பவானிடைப்
பூங்கழல்விண்ணவர்போகுமேல்லையிற்
றீங்குறுபடுபழிதிதுசூழ்வர
வாங்கவர்முன்கலியடைந்ததோதுவாம்.

(இ - ள்.) ஈங்கு - மாவிந்தமாநகரத்தில், இவன் - இந்த நளமகாராசன், இன்னணம் இருப்ப - இவ்வாறு தமயந்தியோடு (மகிழ்ந்து) இருக்க, வானிடை - ஆகாசத்தினிடத்தில், பூ கழல் - அழகிய வீரகண்

டாமணியையணிந்த, விண்ணவர் - தேவர்கள், போகும் ஏல்வையில் - போகுஞ் சமயத்தில், தீங்கு உறு - குற்றம்பொருந்திய, படுபழி - படு பழியும், தீது - பொல்லாங்கும், சூழ்வர - சுற்றிக்கொண்டுவர, அவர் முன் - அந்ததேவர்களுக் கெதிரில், கலி அடைந்தது - கலிபுருஷனானவன் வந்ததை, ஓதுவாம - சொல்லுகிறோம், எ-று. ஆங்கு - அசை.

(க - து.) நளன் மாலிந்தமாகரி லிருக்கத் தேவர்கள் போகும் போது அவர்களமுன் சனிபகவான் வந்ததைச் சொல்லுவோம் என்பதாம். (க)

வந்தவெங்கொடுங்கலிதன்னைவான்பட
ரிந்திரன்யாண்டுநீயேகின்றாயெனச்
சந்தணிமுலைத்தமயந்திமன்றல்கேட்
டந்தமிலவேட்கையாலடைந்துளேனென்றான்.

(இ - ள்) வந்த - எதிரில்வந்த, வெம் கொடு - வெவ்விய கொடுமையையுடைய, கலிதன்னை - கலிபுருஷனை, வான் படர - தெய்வலோகத்தைநோக்கிப போகின்ற, இந்திரன் - தேவேந்திரன், யாண்டு - எவ்விடத்துக்கு, நீ ஏகின்றாய என - நீ போகின்றாயென்று கேட்க, சந்து அணி முலை - சந்தனத்தையணிந்த ஸ்தனங்களையுடைய, தமயந்தி - தமயந்தியினது, மன்றல் - கலியாணத்தை, கேட்டு - கேள்விப்பட்டு, அந்தம் இல - முடிவில்லாத, வேட்கையால் - ஆசையினால், அடைந்துளேன் என்றான - வந்தேனென்றான், எ-று.

(க - து.) இந்திரன் சனிபகவானை எங்கே போகின்றாயெனக் கேட்க அச்சனிபகவான தமயந்தி விவாகத்திறகுப் போகின்றேனென்றான் எனபதாம். (உ)

என்றலுமமரர்கோன்முறுவலெய்தியம்
மன்றலுக்கோதனிவந்ததிங்கென
வென்றிவேனிடதர்கோன்றனக்குமென்றொடை
துன்றிருங்கூந்தலாள்சூட்டினாளென்றான்.

(இ - ள்.) என்றலும் - இப்படியென்று சொன்னவளவில், அமரர்கோன - தேவேந்திரன், முறுவல் எய்தி - சிரித்து, அ மன்றலுக்கு - அந்தக் கலியாணத்திற்காக, தனி - தனியாய், வந்தது ஈங்கு என - இவ்விடத்தில் வந்ததென்று, வென்றி - வெற்றிபொருந்திய, வேல் - வேலையுடைய, நிடதர்கோன்றனக்கு - நளமகாராஜனுக்கு, மெல் தொடை - மிருதுவாகிய மாலையை, துன்று - நெருங்கிய, இரு - பெருமைபொருந்திய, கூந்தலாள் - கூந்தலையுடைய தமயந்தி, சூட்டினாள் என்றான் - அணிந்தாளென்று சொன்னான், எ-று. ஓ-அசை.

(க - து.) இந்திரன் தமயந்தி நளனுக்குமாலையிட்டாள் என்றான் என்பதாம். (ங)

**விண்ணவரனைவரும்வெள்கப்பூந்தொடை**
**மண்ணகத்தரசனுக்கணியுமாணிழை**

யெண்ணமுங்கெடுத்தவட்பிரிப்பனீண்டெனக்
கண்ணழல்கதுவவெங்கலியுங்கூறினன்.

(இ - ள்) விண்ணவர் அனைவரும் - தேவர்கள் யாவரும், வெள்க - வெட்கப்பட, பூ தொடை - புட்பமாலையை, மண்ணகத்து அரசனுக்கு - பூலோகத்து ராஜனுக்கு, அணியும் மாண் இழை - தரித்த மாட்சிமைபொருந்திய வாபரணங்களையுடைய பெண்ணினது, எண்ணமும் கெடுத்து - நினைப்பையுங் கெடச்செய்து, அவள் - அவளை, பிரிப்பன் - பிரித்துவிடுவேன், ஈண்டு என - இவ்விடதென்று, கண் அழல் கதுவ - கண்ணில் நெருப்புப்பொறி பறக்க, வெம் கலியும் - வெவ்விய கலிபுருஷனும், கூறினன் - சொன்னன், எ-று.

(க - து.) தேவாகள்வெட்க நளனுக்குமாலைதரித்த தமயந்தியை பிரிப்பேனென்று சனிபகவான் சொன்னன் என்பதாம். (௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருந்ததிக் கற்பி னல்லா ளரசிளங் குமரன் றன்னைப், பிரிந்திட வியற்றிப் பின்னர் பெறுவது தீமை யன்றோ, விரிந்தநூற் கேள்வி யென்னும் பிறர்மனை விழைய வுள்ளம், பொருந்திய தெவன்கொல கல்லாப் புல்லரிற் புகழின் மிக்கோய்.

(இ - ள்.) அருந்ததி - அருந்ததியையொத்த, கற்பின் - பதிவிரதத்தையுடைய, நல்லாள - தமயநதி, அரசு இளகுமரன தன்னை - இளமைபொருநதிய ராசகுமாரனை நளமகாராசனை, பிரிந்திட இயற்றி - நீஙகும்படி செயது, பினனா - பினபு, பெறுவது - அந்த மாதைப் பெற்றுக்கொள்வது, தீமை அன்றோ - குறறமல்லவோ, விரிந்த - பரநத, நூல கேளவி - நூல்விசாரணை, எனனும் - யாது பயனைத்தரும், பிறா மனை விழைய - பிறாமனைவியை விரும்ப, உள் ளம் பொருந்தியது எவன் - மனஞ் சம்மதிததது எனன காரணம், கல்லா - படியாத, புல்லரில் - மூடரைப்போல, புகழின் மிக்கோய - கீர்த்தியின் மிக்கவனே, எ-று. கொல் - அசை.

(க - து.) இநதிரன் நளனைவிட்டுத் தமயந்தியைப்பிரித் தவளைப் பெறுவது குற்றமல்லவா, பிறனமனைவியை யிச்சிப்பதெனன என்றான் என்பதாம். (௫)

இனையனவமரர்கூறவிருகையும்புடைத்துநக்குப்
புனைமலர்க்கோதைநல்லார்புணர்முலைகுழையப்புல்லி
வனைதுகினெகிழ்க்குமின்பவாழ்வினையன்றிமற்றோர்
நினைவருமின்பமுண்டோனிகழ்த்துதிர்நீவிரென்றான்.

(இ - ள்.) இனையன - இப்படிப்பட்டவைகளை, அமரா் கூற - தேவர்கள்சொல்ல, இரு கையும் புடைத்து - இரண்டுகையும் கொட்டி, நக்கு - சிரித்து, புனை மலா கோதை நல்லார் - மலரால் அலங்கரிக்கப்

பெற்ற கூந்தலையுடைய மாதரது, புணர் முலை - நெருங்கியமுலைகளை, குழைய புல்லி - குழையும்படி தழுவி, வளை - கட்டியிருக்கிற, துகில் - ஆடையை, நெகிழ்க்கும் - அவிழ்க்கின்ற, இன்ப வாழ்வினை அன்றி - காமவின்ப வாழ்வையல்லாது, மற்று ஓர் - வேறுமொரு, நினைவு அரும் இன்பம் உண்டேல் - நினைத்தற்கரிய வின்பமுண்டாகில், நிகழ்த்துதிர் - சொல்லுங்கள், நீவிர் என்றான் - நீங்களெனறுசொன்னான், எ-று.

(க-து.) தேவர்க ளிவ்வாறுசொல்லச் சனிபகவான் பெண்க ளின்பத்தைப்பார்க்கிலும் வேறின்பமுண்டானாற் சொல்லுங்களென்றான் எனபதாம். (சு)

மறைநெறிபிறழக்கூறுமிவனொடும்வாய்மைகூறி
லறநெறிதிறம்புமென்னுவமரருமவிசும்பிற்போனார்
தெறுதொழிற்கலியுங்காமஞ்சிதைந்துமீதூரவேத
நெறிமுறைவழுவல்செலலாநிடதநாடதனிற்சென்றான்.

(இ - ள.) மறை நெறி பிறழ - வேதவழி மாறுபட, கூறும் - சொல்லும், இவனொடும் - இக்கலியினோடும, வாய்மை கூறில் - உண்மைபேசில், அற நெறி - தருமவழி, திறம்பும என்று - கெடுமென்று, அமரரும் - தேவாகளும, விசும்பில் போனார் - சொர்க்கத்தைச் சேர்ந்தாகள், தெறு தொழில - சொல்லுகின்ற செயகையையுடைய, கலியும் - கலிபுருஷனும், காமம சிதைந்து - விரகமானது வரம்புகடந்து, மீதூர - அதிகரிகக, வேத நெறி முறை - வேதவழியின முறையானது, வழுவல் செல்லா - நாடு அதனில் - நிடததேசததில், சென்றான் - போனான், எ-று.

(க-து.) தேவர்க ளிவனுடனே பேசின் றருமங்கெடுமென்று சுவர்க்கத்திற்குப் போனாகள, சனிபகவான நிடத நாட்டிற்குப் போனான் என்பதாம். (எ)



மல்லலம்பழனவேலிவளங்கெழுநிடதநாட்டி
னல்லலுற்றரிதிற்செல்லுமகொடுங்கலியமரர்வேட்ப
வெல்லையில்வேள்வியாற்றியருமறைபயில்வோரெங்குஞ்
சொல்லியபதங்கள்கேட்டுததுணைப்பதம்பெயர்த்திலானே.

(இ - ள.) மல்லல் - வளம்பொருந்திய, அம் பழனம் - அழகிய கழனிகளையே, வேலி - வேலியாகவுடைய, வளம் கெழு - செல்வம் பொருந்திய, நிடதநாட்டின் - நிடததேசத்தில், அல்லல் உற்று - துன்பமுற்று, அரிதில் செல்லும் - அருமையாகப போகாநின்ற, கொடு கலி - கொடிய கலியானவன், அமரா வேட்ப - தேவர்கள் விரும்ப, எல்லையில் - அளவில்லாத, வேள்வி யாற்றி - யாகததைச்செய்து, அரு - அரிதாகிய, மறை பயில்வோர் - வேதப்பிராமணாகள், எங்கும் - எவ்விடத்திலும், சொல்லிய - சொன்ன, பதங்கள் கேட்டு - வேதவாக்கியங்களைக் காதிற்கேட்டு, துணை பதம் - தன்னுடைய வுபயபாதங்களை, பெயர்த்திலான் - எடுத்துவைக்கவில்லை, எ - று. ஏ - அசை.

(க - து.) சனிபகவான் நிடதநாட்டில் வேதப்பிராமணாகள சொல்லும் வேதவாக்கியங்களைக்கேட்டுத் தன்னிருபதங்களை யெடுத் துவையா திருந்தான் என்பதாம். (அ)

செம்மையிற் றிறம்பல் செல்லா மறைபயில சிறுவ ணங்கோர், கைம்மையைக் கலத்த னோக்கிக களிமகிழ் சிற ந்து செல்வான், வம்மினென் றமரர் தமமை மறையினுற் கூறக் கேளா, வம்மவோ மகமென் றஞ்சி யலக்கணுற் றக ன்று போனான்.

(இ - ள.) செம்மையில் - நன்னெறியில், திறம்பல் செல்லா - மாறுபடாத, மறை பயில் சிறுவன - வேதம்படிக்கின்ற ஒரு பிரம சாரி, ஆஙகு ஓா கைம்மையை - அங்கொரு கைமபெண்ணை, கலததல நோககி - புணாதலைப்பாாதது, களி - செருககையுடைய, மகிழ் - சநதோஷம், சிறநது - அதிகரிததது, செலவான - போகினறவன், வம்மின என்று - வாருங்களெனறு, அமராதம்மை - தேவாகளை, மறையினுல - வேதத்தினுலே, கூற - அழைக்க, கேளா - கேட்டு, அம்மவோ - ஓ அம்ம, மகம் என்று - யாகமெனறு, அஞ்சி - டயந்து, அலக்கண் உற்று - துன்பமுற்று, அகன்று போனன - அட புறமபோயினன, எ - று.

(க - து.) பிரமசாரி கைமபெண்ணைக் கலந்ததைச்கண்டு செல் லுஞ் சனிபகவான மறறொரிடததில் வேதததினல் தேவாகளை வாருகக ளென றழைககககேட்டு ஓாயாகமெனறஞ்சிப போனன் என்பதாம்.( )

அருமறைமுனிவர்யாருமோர்கலத்தார்வமோடும்
பருகியவாறுநோககிததீவினைபயந்ததென்று
விரைவினிற்சேறலோடுமறைமொழிகூறுமவேள்விக்
குரியதுசோமபானமெனவுளமுடைந்துபோனன்.

(இ - ள.) அரு மறை முனிவா யாரும் - அரிதாகிய வேதியாக ளெல்லாரும், ஓா கலதது - ஒரு டாததிரததில், ஆாவமோடும் - ஆசை யுடன், பருகிய ஆறு நோககி - பானம பண்ணுகினற நெறியைபடாா த்து, தீவினை பயந்தது என்று - தீமையுண்டாயிற்றென்று, விரை வினில் - சீக்கிரத்தில், சேறலோடும் - போனமாததிரததில், மறை மொழி கூறும் - வேதவசனததைச் சொலலும், வேள்விக்கு - யாகத்து க்கு, உரியது - உரிததானது, சோமபானம் என - சோமபானயாக மென்று, உளம் உடைந்து-மனங்கலங்கி, போனன-போயினன், எ-று.

(க - து.) சனி வேதியா யாவரு மோாகலத்திற் பானம்பண்ணுவ தைக்கண்டு செல்பவன் யாகததிற்குரியது சோமபானமென்றஞ்சிப போனன், என்பதாம். [சோமபானம்-மதுபானம்.] (௧0)

நிழல்சுளிகளிநல்யானைநிடதர்கோன்மகிழ்ச்சிகூர்ந்து
பழமறைக்கிழவர்யாரும்பரிவொடுகவர்ந்துகொள்ள
விழுநிதிபழனநாடுவேண்டுபவெறுப்பநாளும்
பொழிதருபுனலைநீக்கிப்போக்கரிதென்னநின்றான்.

(இ-ள்.) நிழல் சுளி - தன்னிழலைக் கோபிக்கிற, களி நல் யானை - செருக்கையுடைய நல்லயானையையுடைய, நிடதர்கோன் - நளமகா ராசன், மகிழ்ச்சி கூர்ந்து - சந்தோஷமிகுந்து, பழ மறைக்கிழவா யாரும் - பழமையாகிய வேதப்பிராமணர்க ளெல்லாரும், பரிவொடு - ஆசையுடன், கவர்ந்து கொள்ள - பெற்றுக்கொள்ள, விழு நிதி - மேன்மையாகிய திரவியமும், பழனம் - கழனிகளும், நாடு - ஊர்களும், வேண்டுப - வேண்டியவைகளை, வெறுப்ப - வெறுக்கும்படியாக, நாளும் - நாள்தோறும், பொழிதரு - தத்தம் பண்ணுகிற, புனலை - சலத்தை, நீந்தி - கடந்து, போக்கு அரிது என்ன - போகக்கூடாதென்று, நின்றான் - இருந்தான், எ - று.

(க - து.) சனிபகவான் நளன பிராமணர்களுக்குத் தத்தம்பண்ணுநீரை நீந்திப்போகக்கூடாம னின்றான் என்பதாம். (௧௧)

கலைவலா னொருவன் பொய்மை கட்டுரை யாட னோக்கிக், கொலைபழுத் தொழுகு நெஞ்சங் குழைந்தனன் மகிழ்ந்து செல்வா, னலர்முலை சுமக்க லாற்ரு வையநுண் மருங்குற் பேதை, புலவிதீர்ப் பதற்குக் கூறும் பொய்யெனப் புலர்ந்து போனான்.

(இ - ள்.) கலைவலான் ஒருவன் - வித்தையில்வல்லவ னொருவன், பொய்மை - பொய்ச்சொல்லை, கட்டுரையாடல - உறுதிமொழியாகச் சொல்லுதலை, நோக்கி - அறிந்து, கொலை - கொல்லுதல், பழுத்து ஒழுகு நெஞ்சம் - முதிர்ந்து பெருகாநின்ற மனம், குழைந்தனன் - குழைந்தவனாய், மகிழ்ந்து - சந்தோஷித்து, செல்வான் - போகின்ற கலியானவன, அலர் முலை - பரந்த ஸதனங்களை, சுமக்கல் ஆற்ரு - சுமக்கமாட்டாத, ஐயம் - சந்தேகத்தைத்தரும், நுண் - நுட்பம்பொருந்திய, மருங்குல் - இடையையுடைய, பேதை - மடந்தையரது, புலவி - பிணக்கை, தீர்ப்பதற்கு - போக்குதற்கு, கூறும் - சொல்லும், பொய் என - பொய்யென்று, புலர்ந்து - மனம்வாடி, போனான - போயினான், எ - று.

(க - து.) கல்வியில்வல்லோன் பொய்சொல்லுதலைக்கண்டு செல்லுஞ் சனிபகவான் மாதர்பிணக்கைத் தீர்க்கும் பொய்யென்று வாடிப் போனான் எனபதாம். (௧௨)

கடிமனையிடங்கடோறுங்கற்புடைமகளிரீட்டங்
கொடிநெடுவீதியெல்லாங்கடவுளர்விழவுதுன்று
நெடிபடுகானமுற்றுந்துறந்துளோர்நெருக்கம்யாண்டு
மடியிடலரிதென்றெண்ணியலலுற்றகன்றுபோனான்.

(இ - ள.) கடி மனை இடங்கடோறும் - காவலையுடைய வீட்டினிடங்க ளெல்லாம், கற்புடை மகளிர் ஈட்டம் - பதிவிரதத்தையுடைய மாதர்கூட்டங்கள், கொடி - கொடிகளையுடைய, நெடு வீதி எல்லாம் - நீண்ட தெருக்களனைத்திலும், கடவுளர் விழவு - தேவர் திருவிழா; துன்றும் - நெருங்கியிருக்கும், நெடி படு - சில்வண்டுகள்

உண்டாகிய, கானம் முற்றும் - காடுமுழுவதும், துறந்தோர் நெருக்கம் - முனிவர்களுடைய கூட்டங்களுள்ளன; (ஆதலால்) யாண்டும் - எவ்விடத்தும், அடி இடல் - அடியெடுத்துவைத்தல், அரிது என்று - அருமையென்று, எண்ணி - நினைத்து, அல்லல் உற்று - துன்பமுற்று, அகன்று போனான் - நீங்கிப்போயினான், எ-று.

(க - து) மனைகளெங்குங் கற்புள்ளமாதர் கூட்டத்தாலும், வீதியெங்குந் தேவாதிருவிழாவாலும், காடெங்கு முனிவர்கூட்டத்தாலும், அடிவைக்கவிடமில்லையென்று சனிபகவான்போனான், எனபதாம். ()

இந்நகர் வரைப்பில யாண்டு மெய்துதற் கரிதென் றெண்ணிச், சென்னிவான் றடவு தெய்வச் செழுமலர்ச் சோலை புக்கு, மன்னவ னிழைக்குந் தீமை யாதென மனத்தி னோர்ந்து, துன்னருந் தான்றி மீதிற் சூழ்ச்சியோ டிருக்கு நாளில்.

(இ - ள்.) இந்நகா வரைபபில் - இநத நகரினுடைய இடத்தில், யாண்டும் - எவ்விடததும், எயதுதறகு அரிது எனறு எண்ணி - போகுதற்குக் கூடாதென்று நினைதது, செனனி - தலையானது, வான் தடவும் - ஆகாசத்தை யளாவுகிற, தெய்வம் - தெயவீகமாகிய, செழு மலா - செழிதத புஷபததையுடைய, சோலை புக்கு - சோலையையடைந்து, மன்னவன் - நளமகாராசன, இழைககும் தீமை - செயயுங் குற்றம், யாது என - எதுவெனறு, மனததின் ஓாநது - மனதிலாராய்ந்து கொண்டு, துன்ன அரும் - சேரப்படாத, தான்றி மீதில் - தான்றி விருக்ஷததின்மீது, சூழ்ச்சியோடு - ஆலோசனையுடனே, இருக்குநாளில் - இருககின்றகாலததில், எ-று. [தான்றி - நிஷித்தம்.]

(க - து.) சனிபகவான் சோலையிற்புகுந்து நளன்செய்யுந் தீமையெதுவென்று நினைத்துத் தானறிமரத்தினமே லிருக்கின்றகாலத்தில் என்பதாம். (கச)

கலிதோன்றுபடலம் முற்றிற்று.

ஆ செய்யுள் - அகஙு.

# இளவேனிற்படலம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்

நமதுசெங் கரங்க டோயி னகைமுக விருந்து செய்யுங், கமலநாண் மலரை வாட்டும் பனியினை முழுதுங் காய்வா, னிமயமால் வரையின் வெம்போர்க் கெழுந்தென வுலகம் போர்த்த, திமிரமேய்க் துலவும் வெய்யோன் சென்றனன் வடபான் மன்னோ.

(இ - ள்.) நமது - நம்முடைய, செம் கரங்கள் - சிவந்த கிரணங்கள், தோயில் - பொருந்தினால், நகை முகம் - பிரகாசியாநின்ற முகத்

துடனே, விருந்து செய்யும் - விருந்து செய்யாநின்ற, கமலம் - தாமரையினது, நாள் மலரை - புதிய புஷ்பத்தை, வாட்டும் - வாடப்பண்ணும், பனியினை - பனியை, முழுதும் காய்வான் - முழுமையும் அழிக்கும் பொருட்டு, இமய மால் வரையின் - பெரிய இமயபர்வதத்தில், வெம் போர்க்கு எழுந்தது என - வெவ்விதாகிய யுத்தத்திற் கெழுந்தவன்போல, உலகம் போர்த்த - உலகத்தை மூடிய, திமிரம் மேய்ந்து - இருளை யுண்டு, உலவும் வெய்யோன் - உலவுகின்ற சூரியன், வடபால் - வடதுபக்கத்தில், சென்றனன் - போயினன், எ - று. மன், ஓ - அசைகள்.

(க - து.) உத்தராயணம் பிறந்ததென்பதாம்

காய்வான் எழுந்ததென என்றல் தற்குறிப்பணி. (௧)

இன்றுணைக் கணவர் நீங்கி யிடருறு மடவார் சோர, மன்றலிற் கொழுநர்ப் புல்லு மடந்தையர் மகிழ்ச்சி கூரக், குன்றிடைப் பிறந்த தென்றற் கொழுந்துமுன் போர்த்த தேமா, மென்றளிர்ப் போர்வை போர்த்து வேனில்வந் திறுத்த தன்றே.

(இ - ள்.) இன் துணை கணவர் - இனிய துணையாகிய கொழுநரை, நீங்கி - பிரிந்து, இடர் உறும் - துன்பத்தை யடைகின்ற, மடவார் சோர - மாதர்கள் சோர்வையடையவும், மன்றலில் - விவாகத்தின்கண், கொழுநர் புல்லும் - கணவரைத் தழுவும், மடந்தையர் - மாதர்கள், மகிழ்ச்சி கூர - மகிழ்ச்சியை யடையவும், குன்றிடை பிறந்த - பொதியமலையி லுற்பவித்த, தென்றல் கொழுந்து - இளந்தென்றற் காற்றை, முன் போர்த்த - முன்னே போர்த்துக்கொண்ட, தே மா - தித்திப்புப்பொருந்திய மாமரத்தினது, மெல் தளிர் - மெல்லியதளிராகிய, போர்வை போர்த்து - வஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டு, வேனில் - வேனிற்காலமானது, வந்து இறுத்தது - வந்து தங்கியது, எ-று. அன்று, ஏ - அசைகள்.

(க - து.) தணந்தவர் துன்புறவும் மணந்தவரின்புறவும் வேனிற் காலம் வந்தது என்பதாம். (௨)

கள்ளுயிர்த் தலரு முல்லைக் கடிமுகை முறுவ றோன்ற, வள்ளிதழ்க் குவளை யுண்கண் மலர்ந்துமாந் தளிர்மென் கையாக், கிள்ளைமென் குதலை சாற்றிக் கிளரொளி வண்டு பாணத், தெள்விளி பாட வேனிற் றிருமகள் சிறந்தா ளன்றே.

(இ - ள்.) கள் உயிர்த்து - தேனைத்தந்து, அலரும் - மலருகிற, முல்லை - முல்லையினது, கடி முகை - வாசனைபொருந்திய அரும்புகளாகிய, முறுவல் தோன்ற - பற்கள்தோன்ற, வள் இதழ் குவளை - கூர்மையாகிய இதழையுடைய நீலோற்பலங்களாகிய, உண் கண் - மையுண்ட கண்கள், மலர்ந்து - விழித்து, மா தளிர் - மாந்துளிர்கள்

போன்ற, மெல் - மிருதுவாகிய, கை ஆ - கையாக, இள்ளை - கிளிப் பிள்ளையின் மொழிகளாகிய, மெல் - மிருதுவாகிய, குதலை - குதலைச் சொற்களை, சாற்றி - பேசி, கிளா ஒளி - விரிந்த வொளியையுடைய, வண்டு - வண்டுகளே, பாண் ஆ - பாணாகளாக, தெள்விளி பாட - தெள்விளியெனனும் ராகத்தைபபாட, வேனில திருமகள் - வேனிற் காலமாகிய பெண், சிறந்தாள - பொலிவையடைநதாள, எ - று. அன்று, ஏ - அசைகள்.

(க-து.) இளவேனி லென்கிறபெண் சிறப்படைந்தாள என்பதாம்.

பூசல்வண்டார்ப்பவேனிலபோந்தமைகுயிலகள்கூறப்
பாசிலையுகுத்ததேமாபைந்தளிரீன்றதோற்றம்
மாசுறுதுகிலைநீத்துமகிணாதமவரவுகேட்டுக
கோசிகச்செம்பொனனுடைகொமபனூரசைத்தல்போலும்.

(இ - ள்.) பூசல் வண்டு - போாசெயதலையுடைய வண்டுகள, ஆாப்ப - ஆரவாரிகக, வேனில - வேனிறகாலம், போநதமை - வநத தன்மையை, குயில்கள் கூற - கோகிலஙகளசொலல, பசு இலை - பழுப்பிலைகளை, உகுதத - உதிாதத, தே மா - தித்திபபு மாமரங்கள், பைந்தளிா - பசுமைபொருந்திய துளிாகளை, ஈன்ற தோற்றம் - பெற்ற காட்சியானது, மகிணாதம் வரவு கேட்டு - புருஷாகளுடைய வரவுகேட்டு, மாசு உறு - குற்றம்பொருநதிய, துகிலை - வஸ்திரத்தை, நீத்து - நீககி, கோசிகம் - பட்டாகிய, செம் பொன் - சிவந்தபொன ணுற்செய்த, ஆடை - வஸ்திரததை, கொம்பனூா - பெண்கள, அசைத் தல் போலும் - கட்டிக்கொள்ளுதலை யொககும், எ-று.

(க - து.) வேனில்வந்ததைக் குயில்களறிவிகக மாமரந்தளிாத்த காட்சி கணவா வருதலைக்கேட்டுப பெண்கள பொற்சேலைத் தரிததாற் போலும் என்பதாம்.

"மகிழ்நா" மகிணா என மருவியது. (ச)

வானுயர்சோலைதோறுமுருகுவாய்மடுத்துவீழூந்
தேனெடுசுரும்பும்வணடுமபுதிதுண்டுதெவிட்டியார்ப்பக.
கானமர்குழலினூர்தங்கணவர்பாறபுலவிதீர
வேனிலவேட்குலகம்யாவும்விழவயர்ந்திட்டவன்றே.

(இ - ள்.) வான் உயா - ஆகாசததில் உயாந்த, சோலைதோறும் - தோப்புகள்தோறும, முருகு - தேனை, வாய் மடுத்து - வாய் வைத்து, வீழும் - விரும்பும், தேனெடு - தேன்வண்டுடனே, சுரும்பு - ஆண் வண்டும், வண்டும் - பெட்டைவண்டுகளும், புதிது உண்டு - விருந் துண்டு, தெவிட்டி - தெவிட்டெடுத்து, ஆாப்ப - ஆரவாரிக்க, கான அமர் - வாசனை பொருந்திய, குழலினூா - கூந்தலையுடைய மாதா கள், தம் - தங்கள், கணவாபால் - புருஷாகளிடத்தில், புலவி தீர - பிணக்குகள் நீங்க, வேனில் - வேனிற்காலததுக்குரிய, வேட்கு - மன் மதனுக்கு, உலகம் யாவும - உலகங்களெல்லாம், விழவு அயாந்திட்ட - திருவிழாவைச்செய்தன, எ-று. அன்று, ஏ - அசை.

(க - து.) மன்மதனுக்கு உலகங்கள்யாவுந் திருவிழா செய்தன என்பதாம். (௫)

குன்றிடைப் பிறந்த தென்றற் கொழுந்துமேற் படர்ந்த தன்மை, துன்றிருட் பிழம்பு சீக்குங் கனைகதிர்ச் சுடரோ னுய, தன்றுணைக் கேள்வ னீங்கி வடபுலஞ் சார்த லோடுந், தென்றிசை யணங்கு மாழாந் துயிர்த்தது சிவணு மாதோ.

(இ - ள்.) குன்றிடை பிறந்த - பொதியமலையினிடத்திலே உண்டாகிய, தென்றல் கொழுந்து - இளந்தென்றற்காற்று, மேல் படர்ந்த தன்மை - பூமியின்மீது பரவிய தன்மையானது, துன்று இருள் பிழம்பு - நெருங்கிய இருட்கூட்டத்தை, சீக்கும் - கெடுக்கும், கனை கதிர் - மிகுந்த கிரணங்களையுடைய, சுடரோன் ஆய - சூரியனுகிய, தன் துணை - தனக்குத்துணையாகிய, கேள்வன் - புருஷன், நீங்கி - தன்னை நீங்கி, வட புலம் - வடதிசையாகிய (பெண்ணை), சார்தலோடும் - அடைந்த மாத்திரத்தில், தென் திசை அணங்கு - தெற்குத்திக்காகிய பெண், மாழாந்து - மயங்கி, உயிர்த்தது - பெருமூச்சுவிட்டதை, சிவணும் - ஒக்கும், எ - று. மாது, ஓ - அசை.

(க - து.) தென்றல்வீசியது சூரியன் வடதிசைப்பெண்ணிடத்திற் போனுனென்று தென்றிசைப்பெண் பெருமூச்சுவிட்டதுபோலும் என்பதாம்.

தென்றிசை யணங்கென்றமையால் வடபுல வணங்கென்றுங் கொள்ளப்பட்டது. (௬)

பன்மணிவரன்றிச்சாரற்பாணிறவருவிதாழுந்
தென்வரையினிதினீன்றபுனிற்றிளங்குழவித்தென்றல்
கன்னலஞ்சிலைக்கைமாரன்காதலர்ப்பிரிந்தமாத
ரின்னுயிர்படுப்பவேண்டியியற்றியபார்வையாமால்.

(இ - ள்.) பல் மணி வரன்றி - பலரத்நங்களை வாரிக்கொண்டு, சாரல் - பக்கத்தில், பால் நிறம் - வெள்ளைநிறமாகிய, அருவி தாழும் - அருவிகள் பாயப்பெற்ற, தென் வரை - பொதியமலை, இனிதின் ஈன்ற - இன்பமாகப் பெற்ற, புனிற்று இள - மிகவு மிளமைபொருந்திய, குழவி தென்றல் - இளந்தென்றற் காற்றுனது, கன்னல் - கரும்பாகிய, அம் சிலை கை - அழகிய வில்லைப்பிடித்த கையையுடைய, மாரன் - மன்மதனுனவன், காதலர் பிரிந்த - நாயகர்களை நீங்கிய, மாதர் - மாதர்களின், இன் உயிர் - இனிய உயிர்களை, படுப்ப வேண்டி - பிடிக்க விழைந்து, இயற்றிய - வரவிட்ட, பார்வை ஆம் - பார்வை மிருக மாகும், எ-று.

(க - து.) தென்றல் வீசியது மன்மதன் நாயகரைநீங்கிய மாதருயிரைப் பிடிக்கவிட்ட பார்வைபோலாம் என்பதாம்.

பார்வையென்பது மிருகங்களைப் பிடிக்க அவ்வவ்வினத்தில் வளர்த்து வைக்கு மொன்றும். (எ)

விண்டொடர் பொதும்பர் தோறும் விரைகமழ் போ
தில் வீழ்ந்து, வண்டினங் குடைந்து பாட மகரந்த மெழு
ந்த தோற்றங், கொண்டல்கண் படுக்குந் தேமாங் குயிலின
மழைப்பத் தோன்றுந், திண்டிற லனங்கன் சேனை பராக
மொத் திருந்த தன்றே.

(இ - ள.) விண் தொடா - ஆகாசத்தை யளாவாநின்ற, பொதும்பர்தோறும் - சோலைகடோறும், விரை கமழ் - வாசனை பரிமளியாநின்ற, போதில் வீழ்ந்து - புட்பத்திலிறங்கி, வண்டு இனம் - வண்டுக் கூட்டங்கள், குடைந்து - மூக்கினுலுழுது, பாட - பணணைப்பாட, மகரந்தம் - மகரந்தபபொடிகள், எழுந்த தோற்றம் - எழும்பிய காட்சியானது, கொண்டல் - மேகஙகள, கண்படுக்கும் - நித்திரைசெய்யும் படியுள்ள, தே மா - தித்திப்பு மாமரத்திலிருக்கிற, குயில் இனம் - குயிற்கூட்டம், அழைப்ப - கூப்பிட, தோன்றும் - வந்த, திண் திறல் அனங்கன் - மிகுந்த வலிமையையுடைய மன்மதனது, சேனை பராகம் - சேனையினின் றெழும்புகிற புழுதியை, ஒத்து இருந்தது - ஒப்பாகியிருந்தது, எ-று.

(க-து.) மகரந்தமெழுந்த காட்சியானது மன்மதன் சேனைகளினு லெழும்பும் புழுதியை யொத்திருந்தன என்பதாம். (அ)

காயெரிமணியிற்செய்தகதிர்முலைமகளிர்கூந்த
லாய்மலருகுத்தல்போலக்குயிலகுடைந்தாடவீழ்ந்த
சேயமென்போதுபோர்த்ததிருவநீணிலங்கள்யாவும்
பாயலிற்படுத்தசெம்பொறபடாமெனவிளங்குமன்றே.

(இ - ள்.) காய் எரி - கொளுத்தாநின்ற நெருப்பையொத்த, மணியில் செய்த - ரத்நத்தினுற்செய்த ஆபரணத்தினது, கதிர - பிரகாசம்பொருந்திய, முலை - ஸ்தனங்களையுடைய, மகளிர - மாதாகளது, கூந்தல் - அளகபாரமானது, ஆய மலா உகுத்தல் போல - ஆராய்ந்த புஷ்பத்தை உதிர்த்தல்போல, குயில் - கோகிலங்கள், குடைந்து ஆட - கூத்தாட, வீழ்ந்த - விழுந்த, சேய - சிவந்த, மெல் போது - மிருதுவாகிய புஷ்பங்கள், போர்த்த - மூடப்பெற்ற, திருவ - சிறப்புற்ற, நீள் நிலஙகள் யாவும் - நீண்ட நிலஙகளெல்லாம், பாயலில் படுத்த - சயனத்தில் விரித்த, செம் - சிவந்த, பொன் படாம என - பொன் வஸ்திரத்தைப்போல, விளங்கும - பிரகாசிக்கும், எ-று. அன்று, ஏ - அசை.

(க - து.) மலாகள்விழுந்த நிலங்கள்யாவும் பொற்சீலை விரித்தாற் போலும் விளங்கும் என்பதாம். (க)

தாழ்சினைபூத்தமென்பூந்தண்ணறுஞ்சுண்ணமாடி
வீழ்துணைவருதனேக்கிப்புதுக்கடிமேயதென்ற
யாழிசைமிடற்றசெங்கட்கருங்குயிலினிதினாடிக்
கோழரைக்குமரிவாழைக்குருத்திடையொளித்ததன்றே.

(இ - ள்.) தாழ் சினை பூத்த - வளைந்த கிளைகளில் புஷ்பித்த, மெல் பூ - மிருதுவாகிய புஷ்பத்தினது, தண் - குளிர்ச்சி பொருந்திய, நறு சுண்ணம் ஆடி - வாசனையையுடைய மகரந்தப்பொடியில் வீழ்ந்து, வீழ் துணை - விரும்பாநின்ற புருஷனாகிய ஆண்குயிலானது, வருதல் நோக்கி - வருகிறதைப்பார்த்து, புது கடி - புதுமணத்தை, மேயது என்று - அடைந்ததென்று நினைந்து, யாழ் இசை - வீணையினிசையை யொத்த, மிடற்ற - கண்டத்தினையுடைய, செம் கண் - சிவந்தகண்களையுடைய, கரு குயில் - கறுத்த பெட்டைக்குயிலானது, இனிதின் ஊடி - இன்பத்தினாலே பிணங்கி, கோழ அரை குமரி வாழை - செழிப்பாகிய அரையையுடைய இளவாழையினது, குருத்திடை - குருத்தினிடத்தில், ஒளித்தது - ஒளித்துக்கொண்டது, எ-று. ஏ-அசை.

(க - து.) ஆண்குயில வருதலைக்கண்டு பெண்குயில் வாழைக் குருத்தி லொளித்தது என்பதாம்.

புதுக்கடி என்பதில் நூதனவிவாகம் என்பதும் புதியவாசனை யென்பதுஞ் சிலேடையால் பெறப்பட்டமையால், அதுகண்டு பெட்டைகுயில் ஊடியதாம் எனக்கொள்க. (௪0)

இளவேனிற்படலம் முற்றிற்று.

ஆ செய்யுள் - ௬0௩.

## போதுகொய்படலம்.

[இப்படலத்தால் அந்நகரத்திலுள்ள ஆடவரும் மாதரும் லீலையோடு மலர்களைக் கொய்தல் சொல்லப் படுகின்றது]

கலிவிருத்தம்

இன்னதன்மையவின்னிளவேனில்வா
யன்னபொன்னகராடவர்யாவரும்
பொன்னவாமுலைப்பூவையர்தம்மொடுந்
துன்னுநாண்மலர்ச்சோலைசென்றெய்தினர்.

(இ - ள்.) இன்ன தன்மைய - இத்தன்மையவாகிய, இன் - இனிமையாகிய, இள வேனில்வாய் - வசந்தகாலத்தினிடத்தில், அன்ன பொன் நகர் - அந்த அழகியநகரத்திலுள்ள, ஆடவர் யாவரும் - புருஷர்களெல்லோரும், பொன் - தேமலானது, அவாம் - விரும்புகின்ற முலை - ஸ்தனங்களையுடைய, பூவையர் தம்மொடும் - (தங்கள்) மங்கையரோடுங்கூட, துன்னும் - நெருங்கிய, நாள் மலர் - அன்றலர்ந்த புஷ்பத்தையுடைய, சோலை - பூஞ்சோலையை, சென்று - போய், எய்தினர் - அடைந்தார்கள், எ-று.

(க - து) மாவிந்தநகரத்துப் புருஷர்களும்பெண்களும் பூங்காவனத்தில் வந்தார்கள் என்பதாம். (க)

உள்ளங்கொண்டாரிவரென்றுணர்த்திடப்
புள்ளவாங்கணைவேளிடைப்போதல்போ
லள்ளிலைச்செழுஞ்சோலையிலன்பரைக்
கள்ளுண்கோதையர்கைப்பிடித்தேகினர்.

(இ - ள்.) உள்ளம் கொண்டார் - (எங்கள்) மனத்தை அபகரித்துக்கொண்டவர்கள், இவர் என்று - இவர்களென்று, உணர்த்திட - அறிவிக்க, புள் அவாம் - வண்டுகள் விரும்புகின்ற, கணை - புஷ்பபாணத்தை யுடைய, வேளிடை - மன்மதனிடத்தில், போதல் போல்- செல்வதுபோல, அள் இலை - நெருங்கிய இலைகளையுடைய, செழு சோலையில் - செழித்த சோலையினிடத்தில், அன்பரை - கணவர்களை, கள் உண் - தேன்பொருந்திய, கோதையர் - மாலையையணிந்த மங்கையர்கள், கை பிடித்து - கையிற்பிடித்துக்கொண்டு, ஏகினர் - போனார்கள், எ-று.

(க - து) பெண்கள் புருஷர்கள் கையைப்பிடித்துக்கொண்டு சோலையிற் போனார்கள் என்பதாம.

கள்ளரை அரசரிடத்துப் பிடித்துக்கொண்டுபோய் அவனுக்குக் காட்டுவதுபோல ஆடவரைக் காமனுக் கிலக்காக்குதற் கென்க. ()

அணங்குநோய்செயுமைந்துமலரொனிற்
கணங்கொள்போதுகளுலியபொங்கர்வாய்
மணந்துசெலவதையன்றிமணந்தவர்த
தணந்துசெலலுந்தருக்கினர்யாவரோ.

(இ - ள்.) ஐந்து மலர் - ஐந்து புஷ்பங்களே, அணங்கு நோய் - வருத்தமாகிய துன்பத்தை, செயுமெனில் - செய்யுமேயானால், கணம் கொள் போது - கூட்டங்கொண்ட புஷ்பங்கள், கலுலிய பொங்கர்வாய் - நெருங்கிய சோலையினிடத்தில், மணந்து - கூடி, செல்வதை அன்றி - போவதை யல்லாமல், மணந்தவர் - கூடினவர்களை, தணந்து- பிரிந்து, செல்லும் - போகின்ற, தருக்கினர் - செருக்கையுடையவர்கள், யாவர் - எவர்கள், [ஒருவருமில்லை], எ-று. ஏ-அசை.

(க - து,) புணர்ந்துபோவதல்லாது புணர்ந்தவரைப் பிரிந்து போவா ரில்லை என்பதாம். (௩)

திருவனார்தங்குழாத்தொடுசென்றத
னரிவைபஞ்சடியிற்றென்றறிகிலான்
வரைகொண்மார்பினுதைத்தமலரடி
புரைவதிதெனநோக்கினன்போகின்றான்.

(இ - ள்.) திரு அன்னார்தம் - இலக்குமியையொத்த ஸ்திரீகளுடைய, குழாத்தொடு - கூட்டத்துடன், சென்ற - நடந்த, தன் அரிவை- தன்னுடைய நாயகியினது, பஞ்சு அடி - செம்பஞ்சுக்குழம்பூட்டிய பாதமானது, இற்று என்று - இன்னதென்று, அறிகிலான் - அறியாத

வொருவன், வரை கொள் - மலையை உவமையாகக்கொண்டிருக்கின்ற, மார்பின் - (தனது) மார்பினிடத்தில், உதைத்த - உதைத்த, மலர் அடி - தாமரைமலர் போன்ற பாதக்குறியை, புரைவது - ஒத்திருப்பது, ஈது என - இந்த அடிக்குறியென்று, நோக்கினன் - பார்த்தவனாய், போகின்றான் - செல்கின்றான், எ-று.

(க - து.) தன்னையுதைத்தடி யிஃதென் றறியாதவன் தன்மார்பி லுதைத்த அடிக் கொப பிஃதென்று பார்த்துப்போனான் என்பதாம்.()

மையகூந்தலோர்மங்கையசோகினி
லெய்துறுதுயர்போதினையேறுபு
கொய்துமென்றுகுறித்தடிவைத்தலுஞ்
செய்யபோதுசினைதொறும்பூத்தவே.

(இ-ள்.) மைய கூந்தல் - கறுத்த கூந்தலையுடைய, ஓர் மங்கை - ஒரு மங்கையானவள், அசோகினில் - அசோக மரத்தினிடத்தில், எய்து உறுது - அடையககூடாமல், உயர் போதினை - உயரத்திலுள்ள புஷ்பத்தை, ஏறுபு - ஏறி, கொய்தும் என்று - பறிப்போமென்று, குறித்து - நினைதது, அடி வைத்தலும் - பாததை வைததமாத்திரத தில், செய்ய போது - சிவந்த புஷ்பங்கள், சினைதொறும் - கிளைகள் தோறும், பூத்த - மலாநதன, எ-று. ஏ - அசை.

(க - து,) ஒருத்தி அசோகமரத்திலேறிக் காலடி வைத்தமாத்தி ரத்தில் மலாகள் மலாந்தன என்பதாம (ரு)

கோத்தமேகலைக்கோதையர்நோக்கலிற்
பூத்தொசிந்ததிலகமென்போதினிற்
றேத்துளிக்கமர்தெள்விளிவண்டினம்
பார்த்தகண்ணிழலபாய்ந்தனபோலுமே.

(இ - ள்.) கோத்த மேகலை - கோவையிட்ட மேகலாபரணத்தை யுடைய, கோதையா - மங்கையாகள், நோக்கலின் - பாாத்தவளவில், பூத்து - மலாந்து, ஒசிநத - வளைநத, திலகம் - மஞ்சாடி மரத்தி னுடைய,மெல் போதினில் - மிருதுவாகிய புஷ்பத்தில், தேன் துளிக்கு - தேனினது துளிக்கு, அமா - பொருந்திய, தெள்விளி - தெள்விளிராகத தைப் பாடுகின்ற, வண்டு இனம் - வண்டுக்கூட்டங்கள், பார்த்த - பாாத்ததாகிய, கண் - கண்களினுடைய, நிழல் - சாயல்கள், பாய்ந்தன போலும் - பரவினபோலும், எ-று.

(க - து.) மஞ்சாடி மலரைப் பெண்கள் பாாத்தமாத்திரத்தில் வண்டுகள் பாாவைபாய்ந்தாற்போலும் என்பதாம். (சு)

காசுலாமுலைக்கன்னியர்புல்லலும்
பாசிலைக்குரவின்றபைம்போதினின்
மூசுவண்டினமொய்த்ததுவெம்முலைப்
பூசுநானம்பொறித்ததுபோலுமால்.

(இ-ள்.) காசு உலாம் - ரத்நாபரணங்கள் தங்கிய, முலை - ஸ்தனங்களையுடைய, கன்னியா - மங்கையாகள், புல்லலும் - தழுவினவளவில், பாசு இலை - பசுமையான இலைகளையுடைய, குரவு - குராமரமானது, ஈன்ற - பெற்ற, பைம்போதினில் - பசிய புஷ்பத்தில், மூசு - நெருங்கிய, வண்டு இனம் - வண்டுக்கூட்டமானது, மொய்த்தது - மொய்த்துக்கொண்டது, வெம் - விருப்பத்தைக்கொடுக்கின்ற, முலை - ஸ்தனங்களில், பூசு - பூசப்பட்ட, நானம் - கஸதூரி, பொறித்தது போலும் - பூசியதுபோலும், எ-று. ஆல் - அசை.

(க - து.) பெண்கள் குராமரத்தைத் தழுவினவளவில் அம்மரமலா வண்டுகூட்டம் மாாபில் மொயததது முலைமேற் கஸ்தூரி பூசியயதுபோலும் எனபதாம். (எ)

வஞ்சிநுண்ணிடைமாதர்மிதித்தலிற்
செஞ்சவேதளிரீன்றசெயலைக
ளஞ்செஞ்சீறடிதோய்ந்தவரகதெறி
பஞ்சியுண்டொளிர்பான்மைகடுக்குமே.

(இ-ள்.) வஞ்சி - கொடியையொத்த, நுண் இடை - நுட்பமாகிய மருங்கையுடைய, மாதா - ஸதிரீகள, மிதித்தலில - மிதித்தலினுல், செஞசவே - செம்மையாக, தளிா ஈன்ற - தளிாகளைத்தந்த, செயலைகள - அசோகவிருக்ஷஙகள, அம - அழகிய, செம் - சிவந்த, சீறடி - (அம்மடவாா) சிறறடியில, தோயந்த - பூசிய, அரக்கு எறி - செநநிறத்தை வீசாநின்ற, பஞ்சி - செமபஞசியை, உணடு - (தம்மிடத்திற்) கொணடு, ஒளிா பான்மை - பிரகாசிககிற தனமையை, கடுககும - ஒக்கும், எ-று. ஏ - அசை

(க - து.) அசோகமரஙகள பெணக ளடிகளின செம்பஞ்சுக்குழமபு உண்டாறபோ லிருககும் எனபதாம். (அ)

அரவமேகலையாயிழையார்கருயர்
குரவம்பாவைகொடுத்தகொழுதிமென்
முருகுலாமளிமொய்த்தகடம்பினம்
பரிவினுடவெண்பந்துகொடுத்தவே.

(இ - ள்) அரவம் மேகலை - சத்தியாநின்ற மேகலாபரணத்தையுடைய, ஆயிழையாாக்கு - மாதருக்கு, உயா குரவம் - உயாநத குராவிருக்ஷம், பாவை - (காயாகிய) பதுமைகளை, கொடுத்த - கொடுத்தன; கொழுதி - கோதி, மெல் - மிருதுபொருந்திய, முருகு - தேனினிடத்தில், உலாம் - உலாவுகின்ற, அளி - வண்டுகள், மொய்த்த - நெருங்கிய, கடம்பு இனம் - கடப்பவிருக்ஷங்கள், பரிவின் ஆட - விருப்பத்துடனே ஆடுவதற்கு, வெள் - வெண்மையாகிய, பந்து - (காயாகிய) பந்தை, கொடுத்த - கொடுத்தன, எ-று. ஏ-அசை.

(க - து) குராமரங்கள் மாதாக்குக் காய்களைப் பதுமைகளாகக் கொடுத்தன, கடப்பமரங்கள் காய்களைப் பந்துகளாகக் கொடுத்தன என்பதாம். (கூ)

மாங்குயிற்குரல்கேட்டுமலருறாக்
கோங்கமாதர்குதலையைக்கேட்டலுந்
தேங்கொள்போதுசினைதொறும்பூத்தலா
லாங்கதற்கிணையோகுயிலார்ப்பதே.

(இ-ள்.) மா - மாமரத்திலிருக்கிற, குயில் குரல் கேட்டு - குயிலின் குரலைக்கேட்டு, மலா உறா - மலராத, கோங்கம் - கோங்க விருக்ஷமானது, மாதா - மடவாருடைய, குதலையை - குதலைச்சொல்லை, கேட்டலும - கேட்டவளவில, தேன் கொள் போது - தேனைக்கொண்ட புஷ்பங்களை, சினைதொறும் - கிளைகள் தோறும், பூத்தலால் - புஷ்பித்தலால, ஆங்கு - அவ்விடத்தில், அதற்கு - (அம்மடவார) சொல்லுக்கு, குயில் ஆரபபது - குயில் கூவுவது, இணையோ - ஒப்பாகுமோ, [ஆகாது], எ-று. ஏ - அசை.

(க - து.) குயிலோசையால் மலராத கோங்கு மாதா குரலோசையால் மலாதலால் இவாகள குரலுக்குக் குயிலோசை யொவ்வாது என்பதாம். (௧0)

காவிலன்புடைக்காளையோர்தார்குழற்
பூவைகண்ணுறுபூந்துகண்மாற்றலு
மாவியென்னவருகுறைமாற்றவள்
காவியங்கட்கடைகள்சிவந்தவே.

(இ-ள்) காவில் - பூஞ்சோலையில், அன்பு உடை காளை - ஆசையையுடைய புருஷனானவன, ஓா - ஒரு, தாா குழல் - மாலையணிந்த கூந்தலையுடைய, பூவை - மனையாளது, கண உறு - கண்ணிலேபடிந்த, பூந்துகள் - மகரந்தப்பொடியை, மாற்றலும் - துடைத்தமாத்திரத்தில், ஆவி எனன - (தன்) உயிரைபபோல, அருகு உறை - பக்கத்திலிருந்த, மாற்றவள் - சக்களத்தியினுடைய, காவி - நீலோற்பலத்தைத் யொத்த, அம கண் கடைகள் - அழகிய கடைக்கண்கள, சிவந்த - சிவந்தன, எ-று. ஏ - அசை.

(க - து) நாயகன் ஒரு நாயகிகணணில் விழுந்த மகரந்தத்தைத துடைத்தவளவில் மற்றொரு நாயகிகணகள் சிவநதன என்பதாம்.

தன்கணவன் சக்களத்தியிடத்தி லன்பினன் என்றறிந்து கோபித்தா ளென்க. பூந்துகள் மாற்றலாகிய காரண மோரிடத்தும் கண் சிவத்தலாகிய காரியம் மற்றோரிடததும் கூறலால் தொடாபின்மையணி. (௧௧)

வாங்குவிற்கைவரைபுரைதோளினன்
றேங்கொள்வண்டுதிளைப்பவடுவுறுங்
கோங்கரும்பினைநோக்கியோர்கோல்வளை
வீங்குவெம்முலைநோக்கலும்வெள்கினள்.

(இ - ள்.) வாங்கு வில் - வளைந்தவில்லை, கை - கையிலேயுடைய, வரை புரை தோளினன் - மலையையொத்த தோளையுடைய ஒரு புருஷன், தேன் கொள் வண்டு - தேனை யுண்ணுகிற வண்டுகள்,

திளைப்ப - பொருந்த, வடு உறும் கோங்கு - வடுவுண்ட கோங்கு மரத்தினது, அரும்பினை நோக்கி - அரும்பைப் பார்த்து, ஓர் கோல் வளை - ஒரு மடந்தையினது, வீங்கு - பருத்த, வெம் முலை - விருப்பத்தைத் தருகின்ற ஸ்தனங்களை, நோக்கலும் - பார்க்குமளவில், வெள்கினள் - (அவள்) வெட்கப்பட்டாள், எ-று.

(க-து.) ஒரு புருஷன் கோங்குமலரில் வண்டுகள் கிண்டிய வடுவைக்கண்டு ஒரு பெண்முலையைப் பார்த்தவளவில் அவள் வெட்கமடைந்தாள் என்பதாம்.

வடுவுண்ட கோங்கரும்பையும் நகக்குறியுண்ட ஸ்தனங்களையும் ஒப்பாகப் பார்க்குமளவில் அதுகண்டு நாணினளெனக. (சஉ)

கோதைமாரபனோர்கோல்வளைகாதினில்
மாதர்நீலம்புனைதலுமாற்றவள்
நோதகும்படிநோக்கியநோக்கவள்
காதிலும்புனைகாவிநிகர்த்தவே.

(இ-ள்.) கோதை மார்பன - மாலையணிந்த மார்பையுடையவன், ஓர் கோல்வளை - ஒரு மாதினது, காதினில் - காதிலே, மாதர் நீலம் - அழகிய நீலோற்பலத்தை, புனைதலும் - சூட்டியவளவில், மாற்றவள் - சக்களத்தி, நோதகும்படி - நோகும்படி, நோக்கிய நோக்கு - பார்த்த பார்வையானவை, அவள் - அச்சக்களத்தியினது, காதிலும் - காதிலேயும், புனை - சூடிய, காவி - நீலோற்பலத்தை, நிகர்த்த - ஒத்திருந்தன, எ-று. ஏ - அசை.

(க - து) கணவன் ஒரு நாயகிகாதில் நீலோற்பலந் தரித்தவளவில் அவள் சக்களத்தி பார்த்த பார்வைகள் காதிற்புனைந்த நீலோற்பலத்தை ஒத்திருந்தன என்பதாம். (சங)

கோலநாண்மலர்கொய்பவளங்கையி
லோலிடுஞ்சுரும்போச்சவும்போகில
மாலுழந்துமறிந்துவிழுவன
நீலவொண்கழங்காடனிகர்க்குமால்.

(இ-ள்.) கோலம் நாள் மலர் - அழகுபொருந்திய புதிய புஷ்பங்களை, கொய்பவள் - பறிக்கின்றவளது, அங்கையில் - உள்ளங்கையில், ஓல் இடும் - சத்திக்கின்ற, சுரும்பு - வண்டுகள், ஓச்சவும் - ஓட்டவும், போகில - போகின்றிலவாய், மால் உழந்து - மயக்கமுற்று, மறிந்து - மறிபட்டுமறிபட்டு, விழுவன - (அக்கையில்) விழுகின்றனவாகி, நீலம் - கறுத்த, ஒள் - பிரகாசம் பொருந்திய, கழங்கு ஆடல் - அம்மனை ஆடலை, நிகர்க்கும் - ஒக்கும், எ-று. ஆல் - அசை.

(க - து.) மலர்கொய்பவள் கையில் வண்டுகள் வீழ்பவை நீலப் பந்துகள் ஆடலை யொப்பாகும் என்பதாம். (சச)

போதுகொய்படலம் முற்றிற்று.

---

செய்யுள் - கூசஎ.

## புனல்விளையாட்டுப்படலம்.

[இப்படலத்தால் போது கொய்தவர்கள் பின்பு அக் காலத்துக்கேற்பப் புனலில் விளையாடல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

இணரவிழ்பொதும்பரி னிளைஞர் யாவரும்
புணர்முலைமகளிரும் போதுகொய்தபின்
றுணையொடுமடவன மிரியத் தூநிற
மணிதெளித் தனையநீர் வாவியெய்தினார்.

(இ-ள்.) இணர் அவிழ் - பூங்கொத்துகள் விரியாநின்ற, பொதும்பரின் - சோலையில், இளைஞர் யாவரும் - யௌவனபுருஷர்களெல்லாரும், புணர் முலை - நெருங்கிய ஸ்தனங்களையுடைய, மகளிரும் - மாதர்களும், போது கொய்தபின் - புஷ்பங்களைப் பறித்தபின்பு, துணையொடும் - பெட்டையுடனே, மட அனம் - இளவன்னங்கள், இரிய - ஓட, தூ நிறம் - வெண்மையாகிய நிறத்தையுடைய, மணி - முத்தை, தெளித்தது அனைய - பரப்பியதையொத்த, நீர் - சலத்தையுடைய, வாவி - தடாகத்தை, எய்தினார் - அடைந்தார்கள், எ-று.

(க - து.) வாலிபர்களும் மாதர்களும் தடாகத்திற் சேர்ந்தார்கள் என்பதாம். (க)

வாணெடுங்கண்ணியர் வாவியெய்தலுஞ்
சேணிடைநேமியம் புட்கள் செல்லுதல்
யாணர்மென் கோங்கரும் பிடையவீங்கிய
பூண்முலைக் குடைந்தயல் போதல்போன்றதே.

(இ-ள்.) வாள் - வாளையொத்த, நெடு கண்ணியர் - நீண்ட கண்களையுடைய மாதர்கள், வாவி எய்தலும் - தடாகத்தில் அடையவும், சேணிடை - ஆகாயத்தின்கண், நேமியம் புட்கள் - சக்கரவாகப்பக்ஷிகள், செல்லுதல் - போதலானது, யாணர் - புதுமை பொருந்திய, மெல் - மிருதுவாகிய, கோங்கு அரும்பு - கோங்கரும்புகள், இடைய - தோற்றுப்போக, வீங்கிய - பருத்த, பூண் - ஆபரணத்தை யணிந்த, முலைக்கு - ஸ்தனங்களுக்கு, உடைந்து - தோற்று, அயல் போதல் - புறத்தே போய்விடுதலை, போன்றது - ஒத்திருந்தது, எ-று. ஏ-அசை.

(க - து.) பெண்கள் குளத்துட் சென்றவளவில் சகோரங்கள் பறப்பவை, அப்பெண்கள் முலைக்குத் தோற்றுப் போவனபோலுமிருந்தன என்பதாம். (உ)

மங்கையர் செறிதலு மல்குநீரிடைப்
பங்கயச் செழுமலர் தாழ்தல் பாவையர்
திங்கள்வாண் முகத்தெழிற் குடைந்து தேங்கமழ்
பொங்குதண் புனலிடை யொளித்தல்போலுமால்

(இ - ள்.) மங்கையா - மாதாகள், செறிதலும் - அடைதலும், மல்கு நீரிடை - நிறைந்த சலத்தினிடத்தில், பங்கயம் செழு மலா - தாமரையினது செழித்த புஷ்பங்கள், தாழ்தல் - மூழ்குதல், பாவையா - மாதாகளுடைய, திங்கள் - சந்திரனையொத்த, வாள் முகத்து எழிற்கு - பிரகாசம் பொருந்திய முகத்தினது அழகிற்கு, உடைந்து - தோற்று, தேன கமழ் - வாசனை பரிமளியாநின்ற, பொங்கு தண் புனலிடை - மிகுந்த குளிர்ந்த நீரினிடத்தில், ஒளிததல் போலும் - ஒளித்துக்கொள்ளுதலை யொக்கும், எ-று. ஆல் - அசை.

(க-து.) தாமரை நீரிற்றுழுதல் பெண்கள் முகத்துக்கஞ்சி ஒளித்தல்போலும் எனபதாம். (௩)

வடுவகிர்நெடுங்கணார்வார்கொள்வெம்முலை
குடைபுனல்வாவியுட்குளித்தலிந்திரன்
படர்சிறையரிவதற்கஞ்சிப்பாய்திரைக்
கடலிடைமால்வரையொளித்தலகாட்டுமால்.

(இ - ள்.) வடு வகிா - மாவடுவினது பிளபபையொத்த, நெடு கண்ணாா - நெடிய கண்களையுடைய மாதாகளது, வாா கொள - கச்சையணிந்த, வெம் முலை - விருபபததைததரும் ஸ்தனங்கள், குடை - ஆடாநின்ற, புனல் வாவியள - சலததையுடைய தடாகத்தினுள், குளித்தல் - மூழ்குதல், இந்திரன் - தேவேநதிரன, படா சிறை - விரிந்த இறகை, அரிவதறகு - அறுததறகு, அஞ்சி - பயந்து, பாய் திரை - பாயாநின்ற அலையையுடைய, கடலிடை - சமுத்திரத்தினிடத்தில், மால் வரை - உயாந்த மலைகள், ஒளிததல் - ஒளிததுக் கொள்ளுதலை, காட்டும் - காண்பிக்கும், எ-று. ஆல் - அசை.

(க-து.) பெண்கள் முலைகள் நீரிலிருத்தல் மைநாகபரவத மொளித்தல்போலும் என்பதாம். (௪)

விரைகமழ்சுண்ணமெய்திமிர்ந்துமென்குழற்
றெரியலின்வீக்குபுதெய்வச்சாந்தணி
வரிமுலைதோன்றிடமகளிர்நீந்துத
னிரைமணிகுடத்தினானீந்தல்போலுமால்.

(இ - ள்.) விரை கமழ் - வாசனை பரிமளியாநின்ற, சுண்ணம் - கந்தப்பொடிகளை, மெய் திமிாநது - சரீரத்திற் பூசிக்கொண்டு, மெல் குழல் - மிருதுவாகிய கூந்தலை, தெரியலின வீக்குபு - மாலையினாலே கட்டி, தெய்வம் - தெய்வீகமாகிய, சாந்து அணி - சந்தனத்தை யணிந்த, வரி முலை - கோலத்தையுடைய ஸ்தனங்கள், தோன்றிட - தோற்ற, மகளிா - மாதாகள், நீந்துதல் - நீந்துதலானது, நிரை மணி குடத்தினால் - வரிசைகளாகிய ரதந கும்பத்தினால், நீந்தல் போலும் - நீந்துதலை யொக்கும், எ-று. ஆல் - அசை.

(எ-து.) மாதாகள் முலைதோன்றும்படி நீந்துதல் குடங்கொண்டு நீந்துதல் போன்றது என்பதாம். (௫)

படவரவல்குலார்முலையிற்பாய்புன
லுடைதிரைக்கரத்தினற்பொருதலொண்டிறற்
குடமுனிகருங்கடல்குடித்தவாற்றினற்
புடைதிரண்மணிக்குடம்புடைத்தல்போன்றதே.

(இ - ள்.) படம் அரவு அல்குலார் - பாம்பின்படத்தையொத்த நிதம்பத்தையுடைய மாதரது, முலையில் - ஸ்தனங்களின்மீது, பாய் புனல் - பாயாநின்ற சலமானது, உடை - உடையாநின்ற, திரை கரத்தினல் - அலையாகிய கையினல், பொருதல் - மோதுதல், ஒள் திறல் - பிரகாசமாகிய வன்மையையுடைய, குடமுனி - அகஸ்தியா, கரு கடல் - கருங்கடலை, குடித்த ஆற்றினல் - பானம்பண்ணிய நெறியினல், புடை - பக்கங்களில், திரள் - திரண்ட, மணி குடம் - ரதநக்குடத்தை, புடைத்தல் போனறது - அடித்தலை யொத்திருந்தது, எ-று. ஏ-அசை.

(க-து.) மாதாகள் முலை அகஸ்தியா கமண்டலத்தை ஒத்திருந்தது என்பதாம். (௬)

சிற்றிடையொருத்திதன்றிலகவாண்முகத்
தெற்றுநீர்காதலனிறைப்பக்காண்டலு
மற்றதுபொறுக்கலாதுயிர்த்துமாழ்கிய
முற்றிழைமழைக்கணீர்முகனிறைந்தவே.

(இ-ள்.) சிற்று இடை - சிறிய இடையையுடைய, ஒருத்தி தன் - ஒருமாதினது, திலகம் வாள் முகதது - திலதமணிந்த பிரகாசம் பொருந்திய முகத்தினிடததில், எறறு - மோதுகின்ற, நீா - சலத்தை, காதலன் - புருஷன், இறைபப - இறைக்க, காண்டலும் - பாாத்த வளவில், அது - அதை, பொறுக்கலாது - பொறுக்கமாட்டாமல், உயிாத்து - பெருமூச்சுவிட்டு, மாழ்கிய - மயங்கிய, முற்றிழை - சக்களத்தியினது, மழை கண் நீா - குளிர்ச்சிபொருந்திய கண்ணீரானது, முகம் - முகத்தில, நிறைந்த - நிரம்பின, எ-று. மற்று, ஏ - அசைகள்.

(க-து.) நாயகன் ஒரு நாயகி முகத்திலே நீரை யிறைக்கக்கண்டவளவில் மற்றொரு நாயகி யழுதாள் என்பதாம். (௭)

நாள்விழவயர்ந்தவணணிக்காதலன்
றோளணிசாந்தநீர்தோய்ந்துநீக்கலும்
வாளுகிருழுதமெய்வடுக்கண்டேங்குறு
மீளவுமுளநனிவெள்கினளரோ.

(இ - ள்.) நாள் - புதிதாக, விழவு அயர்ந்தவள் - கலியாணம் பண்ணப்பட்டவள், நாணி - வெட்கப்பட்டு, காதலன் - புருஷனது, தோள் அணி - தோள்களினின்று மணிந்த, சாந்தம் - சந்தனத்தை, நீர் தோய்ந்து - நீரிற்குளித்து, நீக்கலும் - போக்கியவளவில், வாள் - வாள்போன்ற, உகிா - நகங்கள், உழுத - கிழித்த, மெய் - சரீரத்தில், வடு கண்டு - குறிகளைப்பார்த்து, ஏங்கு உறு - இரங்கி, மீளவும் - மறு

படியும், உளம் - மனதில், நனி வெள்கினள் - மிகவும் வெட்கமுற்ருள், எ-று. அரோ - அசை.

(க-து.) புதுமணப் பெண் மூழ்கிச் சந்தனத்தை நீக்கினவளவில் கணவன் நகக்குறி தன் மெய்யிற்கண்டு வெட்கினள் என்பதாம். (அ)

இன்னணமாடுதனோக்கியெய்திய
மன்னவர்மன்னனுமருங்குதேய்த்துயர்
பொன்னவிரிளமுலைப்பூவைதன்னொடுந்
துன்னுநீர்ப்போர்த்தொழில்தொடங்கினனரோ.

(இ - ள்.) இன்னணம - இத்தன்மையவாக, ஆடுதல் நோக்கி - விளையாடுதலைப பாாத்து, எயதிய - அததடாகததி னிடத்திலே வந்த, மன்னவா மன்னனும் - அரசாக்கரசனுகிய நளமகாராஜனும், மருஙகு தேய்த்து - இடையைபததேடதது, உயா - உயாநத, பொன் அவிா - தேமல் பிரகாசியாநின்ற, இள முலை - இளமைபொருந்திய ஸதனங்களையுடைய, பூவை தன்னொடும் - தமயாநதியினேடும், துன்னு - நெருங்கிய, நீா போா தொழில் - சலககிரீடையை, தொடஙகினன - ஆரம்பிததான், எ-று. அரோ - அசை

(க - து.) நளன் தமயந்தியுடன் நீாவிளையாடத் தொடங்கினன் என்பதாம். (௯)

சுண்ணமென்சிவிறிநீர்துரக்குமெந்திர
மெண்ணிலதாங்கிவேளனையவேந்தலை
*பெண்ணலங்கனிந்தொளிர்பேதைதன்னொடு
மண்ணியமணியனார்வளைந்திட்டாரரோ.

(இ - ள்.) சுண்ணம் - கந்தப்பொடிகளையும், மெல் - மிருதுவாகிய, சிவிறி - துருததியையும், நீா துரக்கும் எநதிரம் - நீரிறைக்குங் குழல்களையும், எண் இல - அளவில்லாமல், தாங்கி - எடுத்துக்கொண்டு, வேள் அனைய - மனமதனையொதத, ஏந்தலை - நளமகாராஜனை, பெண் நலம் - பெண்டனமை, கனிநது - பழுதது, ஒளிா - பிரகாசியாநின்ற, பேதைதன்னொடும் - தமயநதியோடுகூட, மண்ணிய - கழுவிய, மணியனாா - ரதநதததையொத்த பெண்கள், வளைந்திட்டாா - வளைந்துகொண்டாாகள, எ-று. அரோ - அசை.

(க - து.) பெண்கள் நீா துருததியெடுத்துத் தமயந்தியோடு நளனைச் சூழ்ந்தாாகள் என்பதாம். (௫௦)

துன்னிருங்கூந்தலார்துரந்ததாரைகண்
மன்னவன்றேள்களிற்பாய்தல்வானிடை
மின்னினங்காரொடுமிடைந்துமென்புனல்
பொன்னெடுங்குன்றின்மேற்பொழிதல்போன்றதே.

(இ - ள்.) துன்னு - நெருக்கிய, இரு - பெருமைபொருந்திய, கூந்தலார் - கூந்தலையுடைய மாதாகள், துரந்த தாரைகள் - ஊவிய

சலதாரைகள், மன்னவன் - நளமகாராசனுடைய, தோள்களில் - புசங்களில், பாய்தல் - வீழ்தலானது, வானிடை - ஆகாசத்தினிடத்தில், மின் இனம் - மின்னற்கூட்டம், காரொடும் - மேகத்துடனே, மிடைந்து - நெருங்கி, மெல் புனல் - மிருதுவாகிய சலத்தை, பொன் நெடு குன்றின்மேல் - நெடிய மகமேருவின்மீது, பொழிதல் போன்றது - பொழிதலை ஒத்திருந்தது, எ-று ஏ - அசை.

(க-து.) பெண்கள் நளன் தோள்மேல் நீரிறைத்தல் மேகம் மலைமேற பொழிதல் போன்றது எனபதாம். (௧௧)

அரசர்கோன்குலிகநீர்த்தாரையாயிரஞ்
சுரிகுழன்மடநதையர்முகததிற்றூவுதன்
முருகவிழ்தாமரைமலரின்மோட்டிளம்
பரிதிசெங்கதிர்க்குழாமபாயதலபோன்றதே.

(இ - ள்.) அரசர்கோன - இராசாதிராசனாகிய நளமகாராசன், குலிக நீர - இங்குலிக நீரினது, தாரை ஆயிரம - ஆயிரந்தாரைகளை, சுரி குழல மடநதையா - சுழிதத கூந்தலையுடைய மாதருடைய, முகததில் - முகங்களில், தூவுதல் - இறைததலானது, முருகு அவிழ் - தேன் விரியாநின்ற, தாமரை மலரின - தாமரைப புஷபததினிடததில், மோடு இளம - மிகுந்த இளமையொடுகூடிய, பரிதி - சூரியனுடைய, செம் கதிர் குழாம் - சிவந்த கிரணககூட்டஙகள, பாயதல் - வீழ்தலை, போன்றது - ஒததிருந்தது, எ-று. ஏ - ஈற்றசை.

(க - து ) நளன் பெண்கள் முகத்தில் நீர்த்தாரை தூவுதல் தாமரை மலரில் சூரியகிரணம் பாயதல்போன்றது எனபதாம். *(௧௨)

விரைகமழ்சுண்ணமுமவீசுசாந்தமு
மரசனைண்டெறியலுமாற்றலாமையாற்
குரைகடல்குளித்திடுமின்னிற்கோதைய
ருரவுநீர்வாவியிலொளித்திட்டாரரோ.

(இ-ள்.) விரை கமழ் - வாசனை டரிமளியாநின்ற, சுண்ணமும் - சுந்தப்பொடிகளையும், வீசு சாந்தமும - (வாசனையை) வீசாநின்ற சந்தனத்தையும், அரசன - நளமகாராஜன, ஆண்டு - அவவிடததில், எறிதலும் - வீசவும், ஆற்றலாமையால் - பொறுக்க மாட்டாமையினால், குரை கடல் - சத்தியாநின்ற சமுததிரததில், குளிததிடும் - மூழ்குகின்ற, மினனின் - மினனலைப்போல, கோதையா - மாதாகள், உரவு நீர - விரிந்த சலத்தையுடைய, வாவியில் - தடாகத்தில், ஒளித்திட்டார - ஒளித்துககொண்டார்கள், எ-று. அரோ - அசை.

(க - து.) நளன் சுந்தபொடியையுஞ் சந்தனத்தையு மெறிதலுக்குச் சகியாமல் பெண்கள் வாவியி லொளித்தாாகள் என்பதாம். (௧௩)

வாமமேகலையினர்வளர்ந்தவெம்முலை
கேமியம்புள்ளெனநீருட்காட்டுவார்

காமர்வாண்முகத்தினைக்கமலஞ்சேர்த்தித்தண்
டாமரையெனமணித்தடத்தின்மூழ்குவார்.

(இ - ள்.) வாமம் மேகலையினார் - அழகுபொருந்திய மேகலா பரணத்தையுடைய மாதர்கள், வளர்ந்த - வளர்ந்த, வெம் முலை - விருப்பத்தைத் தருகின்ற ஸ்தனங்களை, நேமியம் புள் என - சக்கர வாகபக்ஷியென்று, நீருள் காட்டுவார் - சலத்துக்குள்ளே காட்டுவார் கள், காமர் - அழகிய, வாள் - பிரகாசம்பொருந்திய, முகத்தினை - முகத்தை, கமலம் சேர்த்தி-தாமரைப்புஷ்பத்துடனே சேர்த்து, தண் தாமரை என - குளிர்ச்சிபொருந்திய தாமரைப் பூவென்று சொல்ல, மணி - முத்தையுடைய, தடத்தின் - தடாகத்தில், மூழ்குவார் - மூழ்கு வார்கள், எ-று.

(க - து) பெண்கள் முலைகளைச் சகோரம்போலக் காட்டுவார் கள், முகத்தைத் தாமரையோடு சேர்த்து மூழ்குவார்கள் என்பதாம்.()

தோற்றதன்பெரும்படைதுளங்கினுமினி
யாற்றலமெனமலரடியிற்சேர்தலுங்
கோற்றொடியலங்கலங்குன்றன்னானொடு
மேற்றனளெரிமணிச்சிவிறியேந்தியே.

(இ - ள்.) தோற்ற - தோற்றுப்போன, தன - தன்னுடைய, பெரு படை - பெரியசேனைகள், துளங்கினும் - நடுங்கினோம், இனி - இனிமேல், ஆற்றலம் என - பொறுக்கமாட்டோமென்று, மலர் அடி யில் - தாமரைமலரினையொத்த பாதத்தில், சேர்தலும - அடையுமள வில், கோற்றொடி - தமயந்தியானவள், அலங்கல - மாலையணிந்த, அம் - அழகிய, குன்று அன்னானொடும் - மலையையொத்த நளமகா ராசனுடனே, எரி மணி - பிரகாசியாநின்ற இரத்நத்தாற்செய்த, சிவிறி - நீர்தூற்றுந் துருத்தியை, ஏந்தி - தாங்கி, ஏற்றனள் - எதிர்த் தாள், எ-று.

(க - து.) தமயந்தி நீர்வீசுந் துருத்திகொண்டு நளனொடு எதிர்த் தாள் என்பதாம். (௧௫)

ஓவியரெழுதருமுருவப்பூங்கொடிக்
கோவைவார்மணிவடகொம்மைவெம்முலைத்
தூவினேனுறுமெனச்சுடர்செய்பூணினா
னூவியந்துகில்கரந்தமையத்தூவினான்.

(இ - ள்.) ஓவியர் - சித்திரக்காரராலே, எழுது அரு - எழுதுதற் கரிய, உருவம் - வடிவத்தையுடைய, பூங்கொடி - தமயந்தியினது, கோவை - கோத்திருக்கிற, வார் - நீண்ட, மணி வடம் - முத்துமாலை யணிந்த, கொம்மை - இளமைபொருந்திய, வெம் முலை - விருப்பத் தைத் தருகின்ற ஸ்தனங்களில், தூவினால் - நீரைத் தூவில், நோ உறும் என - வருந்துமென்று, சுடர் செய் - பிரகாசிக்கின்ற, பூணினான் - ஆபரணத்தையுடைய நளமகாராசன், ஆவி - பாலாவியையொத்த,

சலதாரைகள், மன்னவன் - நளமகாராசனுடைய, தோள்களில் - புசங்களில், பாய்தல் - வீழ்தலானது, வானிடை - ஆகாசத்தினிடத்தில், மின் இனம் - மினனற்கூட்டம், காரொடும் - மேகத்துடனே, மிடைந்து - நெருங்கி, மெல் புனல் - மிருதுவாகிய சலத்தை, பொன் நெடு குன்றின்மேல் - நெடிய மகமேருவின்மீது, பொழிதல் போன்றது - பொழிதலை ஒத்திருந்தது, எ-று. ஏ - அசை.

(க-து) பெண்கள் நளன் தோள்மேல் நீரிறைத்தல் மேகம் மலைமேற பொழிதல் போன்றது எனபதாம். (கக)

அரசர்கோன்குலிகநீர்த்தாரையாயிரஞ்
சுரிகுழன்மடநதையர்முகததிற்றூவுதன்
முருகவிழ்தாமரைமலரின்மோட்டிளம்
பரிதிசெங்கதிர்க்குழாமபாயதலபோன்றதே.

(இ - ள்.) அரசாகோன - இராசாதிராசனுகிய நளமகாராசன், குலிக நீா - இங்குலிக நீரினது, தாரை ஆயிரம - ஆயிரந்தாரைகளை, சுரி குழல் மடநதையா - சுழிதத கூநதலையுடைய மாதருடைய, முகததில் - முகங்களில், தூவுதல் - இறைத்தலானது, முருகு அவிழ் - தேன விரியாநின்ற, தாமரை மலரின - தாமரைப புஷபததினிடததில், மோடு இளம் - மிகுநத இளமையொருந்திய, பரிதி - சூரியனுடைய, செம் கதிா குழாம - சிவந்த கிரணககூட்டஙகள, பாய்தல - வீழ்தலை, போன்றது - ஒததிருநதது, எ-று. ஏ - ஈற்றசை.

(க - து.) நளன் பெண்கள் முகத்தில் நீாத்தாரை தூவுதல் தாமரை மலரில் சூரியகிரணம் பாயதல்போனறது என்டதாம். (கஉ)

விரைகமழ்சுண்ணமும்வீசுசாந்தமு
மரசனுண்டெறியலுமாறறலாமையாற்
குரைகடல்குளித்திடும்மின்னிற்கோதைய
ருரவுநீர்வாவியிலொளித்திட்டாரரோ.

(இ-ள்.) விரை கமழ் - வாசனை டரிமளியாநின்ற, சுண்ணமும் - சுந்தப்பொடிகளையும், வீசு சாநதமும் - (வாசனையை) வீசாநின்ற சநதனததையும், அரசன - நளமகாராஜன, ஆண்டு - அவவிடததில், எறிதலும் - வீசவும், ஆற்றலாமையால் - பொறுக்க மாட்டாமையினால், குரை கடல் - சத்தியாநின்ற சமுத்திரததில், குளிததிடும் - மூழ்குகின்ற, மின்னில் - மினனலைபோல, கோதையா - மாதாகள், உரவு நீா - விரிந்த சலததையுடைய, வாவியில் - தடாகத்தில், ஒளித்திட்டாா - ஒளித்துககொண்டாாகள், எ-று. அரோ - அசை.

(க - து.) நளன் கந்தபொர்டியையுஞ் சந்தனத்தையு மெறிதலுக்குச் சகியாமல் பெண்கள் வாவியி லொளித்தாாகள் என்பதாம். (கங)

வாமமேகலையினர்வளர்ந்தவெம்முலை
சேமியம்புள்ளெனநீருட்காட்டுவார்

காமர்வான்முகத்தினைக்கமலஞ்சேர்த்தித்தண்
டாமரையெனமணித்தடத்தின்மூழ்குவார்.

(இ - ள்.) வாமம் மேகலையினார் - அழகுபொருந்திய மேகலா பரணத்தையுடைய மாதர்கள், வளர்ந்த - வளர்ந்த, வெம் முலை - விருப்பத்தைத் தருகின்ற ஸ்தனங்களை, நேமியம் புள் என - சக்கர வாகபக்ஷியென்று, நீருள் காட்டுவார் - சலத்துக்குள்ளே காட்டுவார் கள், காமர் - அழகிய, வாள் - பிரகாசம்பொருந்திய, முகத்தினை - முகத்தை, கமலம் சேர்த்தி-தாமரைப்புஷ்பத்துடனே சேர்த்து, தண் தாமரை என - குளிர்ச்சிபொருந்திய தாமரைப்பூவென்று சொல்ல, மணி - முத்தையுடைய, தடத்தின் - தடாகத்தில், மூழ்குவார் - மூழ்கு வார்கள், எ-று.

(க - து) பெண்கள் முலைகளைச் சகோரம்போலக் காட்டுவார் கள், முகத்தைத் தாமரையோடு சேர்த்து மூழ்குவார்கள் என்பதாம்.()

தோற்றதன்பெரும்படைதுளங்கினுமினி
யாற்றலமெனமலரடியிற்சேர்தலுங்
கோற்றொடியலங்கலங்குன்றன்னனொடு
மேற்றனளெரிமணிச்சிவிறியேந்தியே.

(இ - ள்.) தோற்ற - தோற்றுப்போன, தன் - தன்னுடைய, பெரு படை - பெரியசேனைகள், துளங்கினும் - நடுங்கினோம், இனி - இனிமேல், ஆற்றலம் என - பொறுக்கமாட்டோமென்று, மலர் அடி யில் - தாமரைமலரினையொத்த பாதத்தில், சேர்தலும - அடையுபவ வில், கோற்றொடி - தமயந்தியானவள், அலங்கல் - மாலையணிந்த, அம் - அழகிய, குன்று அன்னனொடும - மலையையொத்த நளமகா ராசனுடனே, எரி மணி - பிரகாசியாநின்ற இரத்நத்தாற்செய்த, சிவிறி - நீர்தூற்றும் துருத்தியை, ஏந்தி - தாங்கி, ஏற்றனள் - எதிர்த் தாள், எ-று.

(க - து.) தமயந்தி நீர்வீசும் துருத்திகொண்டு நளனொடு எதிர்த் தாள் என்பதாம். (கரு)

ஓவியரொழுதருமுருவப்பூங்கொடிக்
கோவைவார்மணிவடக்கொம்மைவெம்முலைத்
தூவினேறுமுறுமெனச்சுடர்செய்பூணினு
னாவியந்துகில்கரந்தமையத்தூவினன்.

(இ - ள்.) ஓவியர் - சித்திரக்காரராலே, எழுத அரு - எழுதுதற் கரிய, உருவம் - வடிவத்தையுடைய, பூங்கொடி - தமயந்தியினது, கோவை - கோத்திருக்கிற, வார் - நீண்ட, மணி வடம் - முத்துமாலை யணிந்த, கொம்மை - இளமைபொருந்திய, வெம் முலை - விருப்பத் தைத் தருகின்ற ஸ்தனங்களில், தூவினும் - நீரைத் தூவில், நோ உறும் என - வருந்துவவென்று, சுடர் செய் - பிரகாசிக்கின்ற, பூணினன் ஆபரணத்தையுடைய நளமகாராசன், ஆவி - பாலாவியையொத்த,

அம் துகில் - அழகிய வஸ்திரமானது, கரந்து அமைய - மறையும்படி, தூவினன் - இறைத்தான், எ-று.

(க - து.) நளன் தமயந்தியின்மேல் நீரிறைத்தான் என்பதாம் ()

அந்துகிளனைதலிலல்குறேன்றுதல்
கந்தடுகளிற்றினன்காணவெள்குறாச்
சுந்தரச்சுண்ணநீர்முகத்திற்றூயவன்
சந்தணிதடம்புயந்தழுவினளரோ.

(இ - ள்.) அம் துகில் - அழகிய வஸ்திரம், நனை தலில் - நனைந்த வளவில், அல்குல் - நிதம்பமானது, தோன்றுதல் - தோன்றுதலை, கந்து அடு - கடுத்தறியை முறிக்காநின்ற, களிற்றினன் - யானையையுடைய நளன், காண - பார்க்க, வெள்குறா - வெட்கமுற்று, சுந்தரம் - அழகிய, சுண்ணம் நீர் - கந்தப்பொடிகலந்த நீரை, முகத்தில் தூய் - முகத்திலே யிறைத்து, அவன் - அவ்வரசனுடைய, சந்து அணி - சந்தன மணிந்த, தடம் புயம் - பருத்த தோள்களை, தழுவினள் - தழுவிக் கொண்டாள், எ-று. அரோ - அசை.

(க-து.) சேலை நனைதலால் அல்குலை நளன்காணத் தமயந்தி வெட்கப்பட்டு அவன் முகத்தில் நீரையிறைத்துப் புயத்தைத் தழுவினள் என்பதாம்.

தன்னுடைய அவயவங்களை நளன் பார்க்குமளவில் அதுகண்டு நாணிய தமயந்தி அவன் பாராமைக்கு அவன் முகத்தில் நீர் தூவியது மன்றி மடமையால் தழுவின ளென்க. (௧௭)

[இனிஇரண்டுபாட்டால் சலக்கிரீடைசெய்தபின் தமயந்தி யலங்கரித்தல் சொல்லப்படுகின்றது.]

அலர்முலையம்மருங்ககறுநாமெனக்
கலுழ்வபோற்றண்டுளிகாலிமேகலை
நிலவுமிழ்பூணினணீக்கியேர்பெற
விலகிவில்லுமிழ்கலைவீக்கினளரோ.

(இ - ள்.) அலர் முலை - தமயந்தியினது, அம் மருங்கு - அழகிய இடையை, அகறும் - நீங்குவோம், நாம் என - நாமென்று, கலுழ்வ போல் - அழுகின்றதுபோல், தண் துளி - தண்ணியதுளிகளை, கா லும் - சொரியும், மேகலை - மேகலாபரணத்தை, நிலவு உமிழ் - பிரகாசத்தை உமிழாநின்ற, பூணினள் - ஆபரணத்தையுடைய தமயந்தி, நீக்கி - தள்ளி, ஏர் பெற - அழகுபெற, விலகி - விட்டுவிட்டு, வில் உமிழ் - பிரகாசத்தைக் கக்காநின்ற, கலை - ஆடையை, வீக்கினள் - கட்டிக்கொண்டாள், எ-று. அரோ - அசை.

(க - து.) தமயந்தி மேகலையைநீக்கி வேறோராடையையுடுத்திக் கொண்டாள் என்பதாம்.

பூணினள் மேகலைநீக்கி கலைவீக்கினளெனக் கூட்டுக. (௧௮)

நகைநிலாத்தவழ்ந்தெனநானங்கோட்டிய
முகிழ்முலைமுன்றிலின்முத்தந்தாங்கினு
ளகினறுந்தூமமென்குழலிலம்மலர்ச்
சிகழிகைவேய்ந்தனடிலகந்தீட்டினுள்.

(இ-ள்.) நகை - ஒளியையுடைய, நிலா தவழ்ந்தது என - சந்திரிகை தவழ்ந்ததுபோல, நானம் கோட்டிய - கஸ்தூரியப்பிய, முகிழ் முலை முன்றிலில் - அரும்பையொத்த ஸதனப்பிரதேசத்தில், முத்தம் தாங்கினுள் - முத்துவடத்தைத் தரித்தாள், அகில் - அகிலினுடைய, நறு தூமம் - நறியபுகையூட்டிய, மெல் குழலில் - மெல்லிய கூந்தலில், அம் மலர் சிகழிகை - அழகிய மலர்மாலையை, வேய்ந்தனள் - தரித்தாள், திலகம் - பொட்டை, தீட்டினுள் - எழுதினுள், எ-று.

(க - து.) தமயந்தி முத்துவடமணிந்தாள், மாலைதரித்தாள், திலதமிட்டாள் என்பதாம். (கக)

களிச்சுரும்பரற்றுதார்க்காளைகாமநோய்
தளிர்த்தெழமடமயிற்சாயறன்னெடுந்
துளிப்புயலகணபடுசோலைநாப்பணோர்
பளிக்குமேனிலைமலர்ப்பள்ளிமேவினுன்.

(இ - ள்.) களி - களிப்பையுடைய, சுரும்பு - வண்டுகள், அரற்று தார் - சத்திக்கின்ற மாலையையுடைய, காளை - நளமகாராசனுனவன், காம நோய் - விரகநோயானது, தளிர்த்து எழ - அதிகரிக்க, மட மயில் சாயல் தன்னெடும் - தமயந்தியுடனே, துளி புயல் கண்படு - துளியையுடைய மேகங்கள் நித்திரை செய்யாநின்ற, சோலை நாப்பண் - சோலைக்கு மத்தியத்தில், ஓர் பளிக்கு மேல நிலை - ஒரு பளிங்கினுற்செய்த மேலுப்பரிகையில், மலர் பள்ளி மேவினுன் - புட்பசயனத்தில் சேர்ந்தான், எ-று.

(க - து) நளன் விரகமதிகரிக்கத் தமயந்தியுடன் சோலையிற் பளிங்கு மேன்மாடத்து மலர்ப்பள்ளியுட் சேர்ந்தான் என்பதாம். ()

அரிக்குரற்கிண்கிணிசிலம்பொடார்த்தன
புரிக்குழன்மலர்மழைபொழிந்துபொங்கிய
வரிச்சிறைத்தும்பிபாட்டயர்ந்தமங்கைதன்
றிருக்கிளர்முலைநலஞ்செம்மலுண்ணவே.

(இ - ள்.) மங்கைதன் - தமயந்தியினது, திரு கிளர் - அழகு மிகுந்த, முலை நலம் - ஸ்தனத்தின் இன்பத்தை, செம்மல் - நளமகாராசன், உண்ண - அனுபவியாநிற்க, அரி குரல் - தவளையினது குரலையொத்த, கிண்கிணி - சதங்கைகள், சிலம்பொடு - சிலம்புடனே, ஆர்த்தன - ஆரவாரித்தன, புரி குழல் - கட்டுப்பட்ட கூந்தல், மலர் மழை - புஷ்பவருஷத்தை, பொழிந்து பொங்கிய - சொரிந்து மிகுந்தன, வரி - நீண்ட, சிறை - இறகையுடைய, தும்பி - வண்டுகள், பாட்டு அயர்ந்த - பாட்டைப்பாடின, எ-று. ஏ - அசை.

(க - து.) நளன் தமயந்தியை யனுபவிக்கக் காலில் கிண்கிணி சிலம்புகள் சத்தித்தன கூந்தலில் வண்டுகள் பாடின என்பதாம். (௨௧)

ஏந்திளவனமுலைசாடவீர்நறுஞ்
சாந்துதிர்ந்தெதிரெழிறவழுமார்பினன்
பூந்துணர்பொதுளியபொதும்பர்நாப்பணோர்
வாய்ந்தபூங்கொடியொடுமணந்துவைகினன்.

(இ - ள்.) ஏந்து - ஏந்திய, இள வனம் முலை - இளமையாகிய அழகிய ஸ்தனங்களை, சாட - மோத, ஈர - குளிர்ச்சியும், நறு - வாசனையும்பொருந்திய, சாந்து உதிர்ந்து - சந்தன மழிந்து, எதிர் - நேராக, எழில் தவழும் - அழகுபொருந்திய, மார்பினன் - மார்பையுடைய நளன், பூ துணர் - பூங்கொத்துகள், பொதுளிய - நெருங்கிய, பொதும்பர் - சோலையினுடைய, நாப்பண் - மத்தியத்தில், ஓர் - ஒப்பற்ற, வாய்ந்த - தனக்குக் கிடைத்த, பூங்கொடியொடு - தமயந்தியினுடனே, மணந்து - கூடி, வைகினன் - இருந்தான், எ-று.

(க - து.) தமயந்தியுடன் கூடியிருந்தானென்பதாம். (௨௨)

புனல்விளையாட்டுப்படலம் முற்றிற்று.

---

ஆக செய்யுள் ௯௱௯

---

## சூதாடுபடலம்.

[இப்படலத்தால் குறைவின்றிய செல்வத்தை யனுபவிக்கு நளனை விதிவழியால் அளவிறந்த துன்பமனுபவித்தற்குக் காரணமாகிய சூதாடல் சொல்லப்படுகின்றது.]

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

வாம்பரித்தேரினனுமாவழையொண்கண்ணினளு
மேம்பலோடினிதுபுல்லியிடைவிடாதொழுகுநாளி
லாம்பலம்போதுகாட்டுமணிதிகழ்பவளச்செவ்வாய்க்
காம்புறழ்தோளினட்குக்கருப்பம்வந்துற்றதன்றே

(இ - ள்.) வாம் பரி தேரினனும் - தாவாநின்ற குதிரைகட்டிய தேரையுடைய நளமகாராசனும், மாழை - மாவடுவையொத்த, ஒள் - பிரகாசம்பொருந்திய, கண்ணினளும் - கண்ணையுடைய தமயந்தியும், ஏம்பலோடு - அகமலர்ச்சியுடனே, இனிது புல்லி - இனிமையாகப் புல்லி, இடைவிடாது - நீங்காது, ஒழுகு நாளில் - நடக்குநாளிலே, ஆம்பல் அம்போது - அழகிய செவ்வல்லிமலரை, காட்டும் - காட்டுகின்ற, அணி திகழ் - அழகு பிரகாசியாநின்ற, பவளம் - பவளத்தையொத்த, செவ்வாய் - சிவந்த வாயையும், காம்பு உறழ் - மூங்கிலை யொத்த,

தோளினுட்கு - தோளையுமுடைய தமயந்திக்கு, கருப்பம் வந்து உற்றது - கருப்ப முண்டாயிற்று, எ-று. ஏ - அசை.

(க - து.) தமயந்தி கருப்ப மடைந்தாள் என்பதாம். (௧)

மெலியுநுண்மருங்குதோன்றவேயிளந்தோள்கடேம்ப
நலனுறுசெய்யமேனிபாசொளிநரம்புகாட்ட
வலர்சுணங்கணிந்துவீங்கியழகுவீற்றிருந்தபொம்மன்
முலைமுகங்கருகிச்செவ்விமுகமதிவிளர்த்ததன்றே.

(இ - ள்.) மெலியும் - வாடாநின்ற, நுண் மருங்கு - நுட்பமான இடையானது, தோன்ற - காண, வேய் - மூங்கிலையொத்த, இள தோள்கள் - இளமையாகிய தோள்கள், தேம்ப - வாட, நலன் உறு - நன்மைபொருந்திய, செய்ய மேனி - சிவந்த வுடம்பு, பாசு ஒளி - பசிய வொளியையுடைய, நரம்பு காட்ட - நரம்புகளைத் தோற்றுவிக்க, அலர் சுணங்கு அணிந்து - பரந்த தேமலைத்தரித்து, வீங்கி - பருத்து, அழகு வீற்றிருந்த - அழகானது தங்கியிருந்த, பொம்மல் - பொலிவுபொருந்திய, முலை முகம் கருகி - ஸ்தனங்களின் முகங்கள் கறுத்து, செவ்வி - அழகையுடைய, முகம் மதி - முகமாகிய சந்திரன், விளர்த்தது - வெண்மையடைந்தது, எ-று. அன்று - ஏ - அசைகள்.

(க - து.) தமயந்தி யிடைதோன்ற தோள்கள் வாடப் பசிய நரம்பு காண முலைகருகி முகம்வெளுத்தது என்பதாம். (௨)

குழைமுகங் கிழித்து நீண்ட கொழுங்கடை மழைக கட் பேதை, பொழிகதிர் திங்கள் காட்டும் வலம்புரி வருந் திப் பொங்கி, யொழுகொளி நிலவு காலு நித்தில முயிர்த்த தென்ன, மழகளி றனைய தோற்ற மாணிளங் குழவி யீன் றாள்.

(இ - ள்.) குழை முகம் கிழித்து - காதின்முகத்தைக் கிழித்து, நீண்ட - நீண்டிருக்கிற, கொழு கடை - செழுமையாகிய கடையை யுடைய, மழை கண் - குளிர்ச்சிபொருந்திய கண்ணையுடைய, பேதை - தமயந்தியானவள், பொழி கதிர் திங்கள் - சொரியாநின்ற கிரணங்களை யுடைய சந்திரனை, காட்டும் - தோற்றுவிக்கும், வலம்புரி - வலம்புரிச் சங்கமானது, வருந்தி - வருத்தமுற்று, பொங்கி - பிரகாசித்து, ஒழுகு ஒளி - மிகுந்த காந்தியையுடைய, நிலவு காலும் - சந்திரிகையைக் கக்காநின்ற, நித்திலம் - முத்தை, உயிர்த்தது என்ன - பெற்றதுபோல, மழ களிறு அனைய - இளமைபொருந்திய யானையையொத்த, தோற்றம் - காட்சியையுடைய, மாண் - மாட்சிமை பொருந்திய, இள குழவி ஈன்றாள் - இளங்குழந்தையைப் பெற்றாள், எ-று.

(க-து.) தமயந்தி ஒரு ஆண்பிள்ளையைப் பெற்றாள் என்பதாம்.()

மழகளிறனையநம்பிபிறையெனவளருநாளிற்
கழைபுரைதோளிபின்னோர்கன்னியையுயிர்த்தாண்மக்கள்

குழலினுங்கனிந்தவந்தீங்குதலைகேட்டுருகிவெய்ய
முழைபுகுசீயமன்னானுவகையின்மூழ்கினானே.

(இ-ள்.) மழ களிறு அனைய - இளமைபொருந்திய யானையை யொத்த, நம்பி - பிள்ளையானவன், பிறை என - மூன்றாம்பிறை போல, வளரும் நாளில் - வளர்ந்துவருங் காலத்தில், கழை புரை - மூங்கிலையொத்த, தோளி - தோளையுடைய தமயந்தி, பின் - பின்பு, ஓர் கன்னியை - ஒரு பெண்ணை, உயிர்த்தாள் - பெற்றாள்; மக்கள் - இரண்டு குழந்தைகளுடைய, குழலினும் - வேய்ங்குழலினும், கனிந்த - கனிவாகிய, அம் தீ குதலை - அழகிய தித்திப்புப்பொருந்திய மழலைச்சொல்லை, கேட்டு உருகி - கேட்டுள்ளுருகி, வெய்ய முழை புகும் - வெவ்விதாகிய குகையில் நுழையாநின்ற, சீயம் அன்னான் - சிங்கத்தையொத்த நளமகாராசன், உவகையில் - சந்தோஷத்தில், மூழ்கினான் - அழுந்தினான, எ-று ஏ - அசை.

(க-து.) பிள்ளை வளர்ந்துவருங் காலையில் தமயந்தி யொரு பெண்பிள்ளையைப பெற்றாள, நளமகாராசனும் மக்களின் குதலையைக கேட்டு மகிழ்ந்திருந்தான் எனபதாம. (௪)

நிழலுமிழ்ந்துதிரங்காலும்வயிரவாணிடதர்கோமா
னெழுபுவிவேந்தர்யாருமிடுதிறைகொணர்ந்தெஞ்ஞான்றுந
தொழுதனரேத்திநிற்பததொடுகடலுடுத்தஞால
முழுவதுமொருகோலோச்சிமுறைவழாதளித்தானன்றே.

(இ-ள்.) நிழல் உமிழ்ந்து - பிரகாசததைச் சொரிந்து, உதிரம் காலும் - ரத்தத்தைக் கக்கும், வயிர வாள் - கூரியவாளையுடைய, நிடதர் கோமான் - நளமகாராசன, எழு புவி - சப்ததீவிலுமுள்ள, வேந்தர் யாரும் - அரசரெலலாரும், இடு திறை - கட்டுகின்ற கப்பங்களை, கொணர்ந்து - கொண்டுவந்து, எஞ்ஞான்றும் - எந்தநாளும், தொழுதனர் - வணங்கினவராய், ஏத்தி நிறப - துதிதது நிற்க, தொடு - கடல் உடுத்த - தோண்டபபட்ட சமுததிரஞ்சூழ்ந்த, ஞாலம் முழுவதும் - உலகமுழுமையும், ஒரு கோல் ஓச்சி - ஒரு செஙகோலைச செலுத்தி, முறை வழாது - கிரமந்தப்பாது, அளிததான் - ரட்சிததுக்கொண்டு வநதான், எ-று. அன்று, ஏ - அசைகள.

(க-து.) நளன் அரசர் திறைகொடுக்க உலகததை யாணடுவந தான் என்பதாம். (௫)

கோவடுகுருதிவேலான்கொழுஞ்சுடர்பட்டகாலைச்
சேவடிகழுவலின்றிச்செய்கடன்கழித்தனோக்கிக்
காவலற்சேருங்காலங்கருதுபுபன்னிரண்டு
மேவருதான்றியுற்றவெங்கலிமேயினானே.

(இ-ள்.) கோ அடு - (சத்துருக்களாகிய) ராஜாக்களைக் கொல்லாநின்ற, குருதி வேலான் - ரத்தந்தோய்ந்த வேலாயுதத்தையுடைய நளன், கொழு - செழித்த, சுடர் - சூரியன், பட்ட காலை - அஸ்தமித்தபொழுது, சேவடி - சிவந்தபாதங்களை, கழுவல் இன்றி - கழு

வாமல், செய் கடன் - செய் யத்தக்க நித்திய கருமத்தை, கழித்தல் நோக்கி - செய்து முடித்தலைப் பார்த்து, காவலன் - அரசனை, சேரும் காலம் - அடையுங்காலம், கருதுபு - (எதுவென்று) நினைத்து, பன்னீராண்டு - பன்னிரண்டு வருஷம், மேவு அரும் - அடைதற்கரிய, தான்றி உற்ற - தான்றிமரத்தின்கண் ணிருந்த, வெம் கலி - வெவ்விய கலிபுருடன, மேயினன் - சேர்ந்தான், எ-று. ஏ - அசை.

(க - து.) நளன் திருவடி கழுவாது செய்த கருமத்தைக் கண்டு தான்றி மரத்திலிருந்த சனிபகவான அந்நளனைச் சேர்ந்தான் என்பதாம். (௬)

கலிவிருத்தம்

விட்புலத்தரசருமேனைவேந்தரும்
வட் கவிம்மன்னவன்மல்லல்மார்பகம்
பெட்புறுமடந்தையைபபிரிப்பன்யானென
புட்கரன்பாற்கலிபோயினனரோ.

(இ-ள்) விண் புலத்து - தெய்வலோகத்திலிருக்கும், அரசரும் - இந்திராதி தேவரும், ஏனை வேந்தரும் - பூலோகத்தரசரும், வட்க - நாணமடைய, இ மன்னவன் - இந்த நளனுடைய, மல்லல் - வலிமைபொருந்திய, மார்பகம் - மார்பினிடத்தை, பெட்பு உறும் - விரும்பும், மடந்தையை - தமயந்தியை, பிரிப்பன - பிரித்துவிடுவேன, யான் என - நானென்று, புட்கரன்பால் - புட்கரராஜனிடத்தில், கலி - கலிபுருஷன், போயினன - போனான், எ-று. அரோ-அசை.

(க - து.) சனிபகவான் நளனைவிட்டுத் தமயந்தியைப் பிரிப்பேனென்று புட்கரனிடத்தில் போனான் என்பதாம். (௭)

வருகலிபுட்கரன்வதனநோக்குறாக்
குரைகழனளனெனுங்கொற்றவேந்தனே
யொருகுடைநீழலினுலகங்காத்திட
விருநிலக்கிழமைநீயிழந்ததென்கொலோ.

(இ-ள்.) வரு கலி - வந்த கலியானவன், புட்கரன் - புட்கரராஜனது, வதனம் - முகத்தை, நோக்குறா - பார்த்து, குரை கழல் - சத்தியாநின்ற வீரக்கழலை யணிந்த, நளன் எனும் - நளனென்று சொல்லப்பட்ட, கொற்றம் - வெற்றியையுடைய, வேந்தனே - அரசனே, ஒரு குடை நீழலின் - ஏகசத்திராதிபதியாய், உலகம் காத்திட - இவ்வுலகத்தை ரக்ஷிக்க, இரு - பெருமைபொருந்திய, நிலம் கிழமை - அரசாக்ஷியை, நீ இழந்தது - நீ கைவிட்டது, என்கொலோ - யாது காரணமோ, எ-று. ஏ, ஓ - அசை.

(க - து.) சனி பகவான் புட்கரனைப்பார்த்து உலகெலாம் நளன் ஆள நீ அரசாட்சியிழந்ததென்னவென்றான் என்பதாம். (அ)

வாட்டிறல்வேந்தனைமடந்தைதன்னொடுங்
காட்டிடைப்புகுத்திமண்காக்குமன்னருள்

ரூட்டிணைதொழநறுந்தாமநீண்முடி
சூட்டுவனினக்கெனச்சொல்லினனரோ.

(இ - ள்.) வாள் திறல் - வாட்போரில் வெற்றியையுடைய, வேந்தனை - (நளமகா) ராஜனை, மடந்தை தன்னொடும் - மனைவியுடனே, காட்டிடை புகுத்தி - காட்டினிடத்தில் போகச்செய்து, மண் காக்கும் - உலகத்தை ரக்ஷிக்கானின்ற, மன்னர் - அரசர்கள், உன் - உன்னுடைய, தாள் துணை தொழ - உபயபாதங்களை வணங்க, நறு - வாசனை பொருந்திய, தாமம் - மாலையணிந்த, நீள் முடி - நீண்ட கிரீடத்தை, நினக்கு - உனக்கு, சூட்டுவன் - தரிப்பேன், என - என்று, சொல்லினன் - சொன்னான், எ-று. அரோ - அசை.

(க - து.) நளனையுந் தமயந்தியையுங் காட்டிற்றுரத்தி உனக்கு முடிசூட்டுவேனென்றான் என்பதாம். (௯)

சொல்லலுங்களிமகிழ்தூங்கிப்புட்கரன்
கொல்லியவருதிறற்கூற்றுமஞ்சுறு
மல்லடுதிண்புயமன்னர்மன்னனை
வெல்லுமாறெங்ஙனம்விளம்புவாயென்றான்.

(இ - ள்.) சொல்லலும் - இப்படிச் சொன்னவளவில், களி மகிழ் தூங்கி - மிகுந்த மகிழ்ச்சியை யடைந்து, புட்கரன் - புட்கரராஜன், கொல்லிய வரு - கொல்லவாரானின்ற, திறல் - வெற்றியையுடைய, கூற்றும் - யமனும், அஞ்சு உறும் - பயப்படும்படியாகிய, மல் அடு - மற்போர்செய்கின்ற, திண் புயம் - திண்ணிய புயத்தையுடைய, மன்னர் மன்னனை - நளனை, வெல்லும் ஆறு - வெல்லுநெறி, எங்ஙனம் - எவ்விதம், விளம்புவாய் என்றான் - சொல்லென்று சொன்னான், எ-று.

(க - து.) புட்கரன் நளனை வெல்லும்வழி சொல்லென்றான் என்பதாம். (௧௦)

எண்ணலையாதுநானிழைத்தவஞ்சனை
விண்ணவராயினும்விலக்கற்பாலரோ
வண்ணலைச்சூதினாற்படுப்பலஞ்சனீ
கண்ணுறும்யானகொடுங்கலியென்றனரோ.

(இ - ள்.) யாதும் எண்ணலை - எவ்வளவும் ஆலோசிக்க வேண்டாம்; நான் இழைத்த வஞ்சனை - நான் செய்த கபடத்தை, விண்ணவராயினும் - தேவர்களானாலும், விலக்கற்பாலரோ - நீக்குந்தன்மையை யுடையர்களோ; அண்ணலை - நளனை, சூதினால் படுப்பன் - சூதினால் செயிப்பேன்; நீ அஞ்சல் - நீ பயப்படவேண்டாம்; கண் உறும் - எதிரே வந்த, யான - நானும், கொடு வெம் கலி என்றான் - கொடிய வெவ்விய கலியென்று சொன்னான், எ-று. அரோ-அசை.

(க - து.) சனி நளனைச் சூதினால் வெல்லுவேனென்றான் என்பதாம். (௧௧)

முழையுறைகொடுவரியனையமொய்ம்பினு
னுழையினிற்போதுமென்றுரைத்துவெங்கலி
மழவிடையுருக்கொடுநிற்பவண்சுட
ரிழைதவழ்மார்பினனிவர்ந்துபோயினான்.

(இ - ள்.) முழை உறை - குகையினிடத்தில் இராநின்ற, கொடு அரி அனைய - கொடிய புலியையொத்த, மொய்ம்பினான் - வலியையுடைய நளமகாராசனது, உழையினில் - இடத்தில், போதும் என்று உரைத்து - போவோமென்று சொல்லி, வெம் கலி - வெவ்விய கலி புருடன், மழ இடை - இளவேற்றின், உரு கொடு - உருவத்தைக் கொண்டு, நிற்ப - நிற்க, வண் சுடர் - வளப்பமாகிய காந்தியையுடைய, இழை தவழ் - ஆபரண மசையாநின்ற, மார்பினான் - மார்பையுடைய புஷ்கரராசன, இவர்ந்து - ஏறிக்கொண்டு, போயினான் - சென்றான், எ-று.

(க - து) சனி இடபம்போ லுருக்கொண்டு நிற்கப் புட்கரன் அதன்மே லேறிச்சென்றான என்பதாம். (௧௨)

உரவுநீர்க்கருங்கடலுலகுகாவலன்
குரைகழலபணிந்துதமகுறைகள்சாற்றுவா
னரசர்கண்டுயிலமைமுகிலினார்ப்புறு
முரசுகணடுயிலகிலாவாயின்முன்னினான்.

(இ - ள்) உரவு நீர் - விரிந்த நீரையுடைய, கரு கடல் - கரிய கடலாற் சூழப்பட்ட, உலகு காவலன - உலகுக் கரசனாகிய நளனது, குரை கழல் பணிந்து - சத்திக்கின்ற வீரக்கழலையணிந்த பாதத்தை வணங்கி, தம குறைகள் சாற்றுவான் - தமது குறைகளைச் சொல்வதற்கு, அரசா - அரசாகள், கண் துயில - (சமயங்கிடையாமல்) நித்திரையண்ண, மை முகிலின - கறுத்த மேகத்தைப்போல, ஆர்ப்புஉறும் - சபதிக்காநினற, முரசு - பேரிகையானது, கண் துயில்கிலா - எபபோது மொலிககப்பெறற, வாயில் - அரண்மனை வாசலில், முன்னினான் - அடைந்தான் (புஷ்கரராசன்), எ-று.

(க - து.) புட்கரன் நளன் அரண்மனைவாயிலிற் சென்றான் என்பதாம். (௧௩)

மன்னவற்கெம்வரவுரைத்திவாயிலோ
யென்னலுமாங்கவனெய்திக்கூறலும்
கொன்னவில்வேலினான்கொணர்கவென்றன
னன்னவன்வருகெனவவையினெய்தினான்.

(இ - ள்.) வாயிலோய் - வாயிற் காவலாளனே !, மன்னவற்கு - நளமகாராஜனுக்கு, எம் வரவு உரைத்தி - எமது வரவைச் சொல்லு, என்னலும் - என்று சொல்லலும், அவன் - அக்காவலாளன், எய்தி கூறலும் - போய்ச்சொன்ன வளவில், கொல் நவில் - கொல்லுதலைச் செய்யாநின்ற, வேலினான் - வேலையுடைய வரசன், கொணர்க என்றனன் - அழைத்துவாவென்று சொன்னான் ; அன்னவன்

வருக என - அக்காவலாளன் வாவென்று சொல்ல, அவையின் எய்தி ஞன் - சபையில் வந்தான் (புஷ்கரராசன்) எ-று. ஆல்கு - அசை.

(க - து.) புட்கரன் காவலாளனுக்குச்சொல்ல, அவன் நளனுக் குச் சொல்ல, நளனழையென்றுசொல்ல, அவனழைக்க இவன் வந் தான் என்பதாம். (கச)

களைகணதாகியோர்கவிகைநீழலில்
வளைகடலுலகெலாம்புரக்குமன்னவன்
றளையவிழ்தாமரைத்தாளிலவீழ்ந்தெழு
மிளவலோடளவளாயிருக்குமேல்வையில்.

(இ - ள்.) களைகணது ஆகி - ஆதாரமாகி, ஓர கவிகை - ஒரு வெண்கொற்றக் குடையினது, நீழலில் - நிழலிலிருந்து, வளை கடல் உலகு எலாம் - சமுத்திரஞ்சூழ்ந்த பூவுலகமுழுவதும், புரக்கும் - காட பாற்றுகின்ற, மன்னவன - நளமகாராஜனுடைய, தளை அவிழ் - முறுக்குகள் விரிந்த, தாமரை - தாமரைப்பூவை யொத்த, தாளில் - பா தத்தில், வீழ்ந்து - வணங்கி, எழும் - எழுகின்ற, இளவலோடு - இளையோனுகிய புஷ்கரராசனுடனே, அளவளாய் - ஒருவர்க்கொருவர் கலந்து பேசிக்கொண்டு, இருக்கும் ஏல்வையில் - இருக்குஞ் சமயத் தில், எ-று.

(க - து.) நளனும் புட்கரனுங் கலந்து பேசிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் என்பதாம்.

இதுமுத லிரண்டுங் குளகம் என்பதாம். (கரு)

கொல்சினவாகைவேற்குரிசின்மல்லலேற்
றெல்லுமிழ்மணிக்கொடியுயர்த்ததென்னென
வல்லடுசூதினிலேற்றமன்னனை
வெல்கொடியீதெனவிளம்பினனரோ.

(இ - ள்.) கொல் சினம் - கொல்லுகின்ற கோபத்தையுடைய, வாகை வேல் - வெற்றிபொருந்திய வேலாயுதத்தையுடைய, குரிசில் - நளமகாராசனுனவன், மல்லல் ஏறு - பலம்பொருந்திய ரிஷபத்தின் மேல், எல் உமிழ் - பிரகாசத்தைக் கக்காநின்ற, மணி கொடி - அழகிய கொடியை, உயாத்தது - பிடித்தது, என் என - என்னவென்று கேட்க, வல் - சொக்கட்டானுல், அடு - பொருகினற, சூதினில் - சூதாட்டத் தில், ஏற்ற மன்னனை - எதிர்த்த வேநதனை, வெல் - செயிக்கின்ற, கொடி - துவசம், ஈது என - ஈதென்று, விளம்பினன் - சொன்ஞன், எ-று. அரோ - அசை.

(க - து.) நளன் இடபத்தின்மேற் கொடிபிடித்த தென்ன வென்று கேட்க, புட்கரன் சூதாட்டத்தி லெதிர்த்த மன்னனை வெல்லுங்கொடி யிதுவென்றுன் என்பதாம். (கசு)

சொல்லியவவ்வுரைகேட்டுத்தூமணிக்
கல்லெனப்பணைத்துயர்கலவைத்தோளினன்

வெல்கொடியுயரியவிடலைசூதினீ
வல்லையேலாடுதும்வருகென்றோதினன்.

(இ - ள்.) சொல்லிய - சொன்ன, அ உரை - அந்த வார்த்தையை, கேட்டு - செவியிற்கேட்டு, தூ மணி - பரிசுத்தமாகிய இரத்நங்களை யுடைய, கல் என - மலையைபபோல, பணைதது உயா - பருத்து உயர்ந்த, கலவை - சந்தனமணிந்த, தோளினன - தோள்களையுடைய நளன், வெல கொடி உயரிய - வெல்லாநின்ற கொடியைப்பிடித்த, விடலை - புஷ்கரனே!, சூதில் - சூதாட்டததில், நீ வல்லையேல் - நீ வல்லமையுடையவனுனால், ஆடுதும் - ஆடுவோம, வருக என்று ஓதினன் - வாவென்று சொனனன, எ-று.

(க - து.) நளன் சூதாட்டததில நீ வல்லவனுனால் ஆடுவோம் வாவெனறன என்பதாம். (கஎ)

நஞ்சினிற்கொடியவன்புணர்ப்பினம்மிறை
வஞ்சகச்சூதினிலமனமவைததானென
வஞ்சினரமைச்சரவ்வரசர்கோமகன்
செஞ்சரண்டொழுதிவைசெப்பன்மேயினர்.

(இ - ள்.) நஞ்சினில் - விஷத்தைப்பார்க்கிலும், கொடியவன் - பொல்லாதவனுகிய புஷ்கரனது, புணாப்பின - சம்பந்தத்தினுல், நம் இறை - நம்முடையவரசன், வஞ்சகம் சூதினில் - கபடமாகிய சூதில், மனம் வைத்தான் என - சிநதை வைததானென்று, அஞ்சினா - பயந்தவராய், அமைச்சா - மந்திரிகள், அவ்வரசா கோமகன - அந்த நள மகாராஜனது, செம் சரண தொழுது - சிவந்த பாதங்களை வணங்கி, இவை செபபல் மேயினா - இவை சொல்லத தொடஙகினாகள, எ-று.

(க - து.) மந்திரிகள் பின்வருமாறு நளமஹாராஜனுக்குச் சொல்லத் தொடங்கினாகள என்பதாம். (கஅ)

சீலநற்றருமமெய்சிதைக்குந்தெண்டிரை
வேலைமுற்றிருநிலக்கிழமைவீழ்த்திடும்
மாலுறுத்திடுங்கவறாடன்மன்னகேள்
கோலிழுக்கரசர்தங்கொள்கைத்தென்பவே.

(இ-ள்.) மன்ன கேள் - அரசனே கேளு, கவறு ஆடல் - சூதாடலானது, சீலம் - ஒழுக்கத்தையும், நல் தருமம் - நல்ல தருமத்தையும், மெய் - சத்தியததையும், சிதைக்கும் - கெடுக்கும், தெள திரை - தெள்ளிய அலைகளையுடைய, வேலை முற்று - கடலினுற் சூழப்பட்ட, இரு நிலம் கிழமை - பெருமைபொருந்திய அரசாக்ஷியை, வீழ்த்திடும் - அழிக்கும் , மால் உறுத்திடும - மயக்கஞ் செய்விக்கும் ; கோல் இழுக்கு அரசர் தம் - கொடுங்கோலைச் செலுத்துகிற அரசாகளது, கொள்கைத்து என்ப - கோட்பாட்டை யுடையதென்று (பெரியோர்கள்) சொல்லுவார்கள், எ-று. ஏ-அசை.

(க - து.) நளச்சக்கிரவர்த்தியே சூதாடுதல் ஒழுக்கத்தையும் தருமத்தையும் சத்தியத்தையும் கெடுக்கும்; அரசாட்சியையுந் தள்ளும்;

மயக்கந்தரும்; இது கொடுங்கோல் வேந்தர்செய்கை என்பார்கள் என்பதாம். (கக)

கள்ளுணவிரும்புதல்கழகஞ்சேர்தல்மா
றுள்ளுறப்பிறர்மனைநயத்தலொன்னலர்க்
கெள்ளருஞாட்பினுளிரியல்செய்திடல்
வள்ளியோயறநெறிவழுக்குமென்பவே.

(இ - ள்.) வள்ளியோய் - வரையாது கொடுக்குமரசனே! கள் உணவிரும்புதல் - மதுவைக்குடிக்க இச்சித்தலும், கழகம் சேர்தல் - சூதாடுமிடத்தைச் சேர்தலும், மால் உள் உற - உள்ளே மயக்கமடைய, பிறர் மனை நயத்தல் - பிறர்மனையாளை விரும்புதலும், ஒன்னலர்க்கு - சத்துருக்களுக்கு, எள் அரு ஞாட்பினுள் - இகழ்ச்சியில்லாத அமரக்களத்தில், இரியல் செய்திடல் - பின்னிட்டோடலும் (ஆகிய இவைகளால்), அறநெறி - அறத்தினவழி, வழுக்கும் என்ப - பிறழுமென்று (பெரியோர்கள்) சொல்லுவார்கள், எ-று. ஏ-அசை.

(க-து) அரசனே கள்ளையிச்சித்தல், சூதாடுமிடத்தைச்சேர்தல், பிறன்மனையாளை யிச்சித்தல், யுத்தத்திலோடுதல், இவை தருமவழிக்கு இழுக்கென்பார் என்பதாம். (உ0)

ஐயநீயாடுதற்கமைந்தசூதுமற்
றெய்துநல்குரவினுக்கியைந்ததூதுவெம்
பொய்யினுக்கருந்துணைபுன்மைக்கீன்றதாய்
மெய்யினுக்குறுபகையென்பர்மேலையோர்.

(இ - ள்.) ஐய - ஐயனே!, நீ ஆடுதற்கு - நீ யாடுகிறதற்கு, அமைந்த சூது - சம்மதித்த சூதாட்டமானது, எய்து நல்குரவினுக்கு - தானே வருதற்குரிய தரித்திரத்துக்கு, இயைந்த தூது - நல்ல தூதாகும், வெம் பொய்யினுக்கு - வெவ்விய பொய்க்கு, அரு துணை - நல்ல சகோதரமாகும், புன்மைக்கு - கீழ்த்தொழிலுக்கு, ஈன்ற தாய் - பெற்ற தாயாகும், மெய்யினுக்கு - சத்தியத்துக்கு, உறு பகை என்பர் - மிகுந்த பகையென்று சொல்லுவார்கள், மேலையோர் - பெரியோர்கள், எ - று. மற்று-அசை.

(க - து.) அரசனே சூதானது வறுமைக்குத் தூதும், பொய்க்குதவியும், இழிதொழிலுக்குத்தாயும், மெய்க்குப்பகையும், ஆகும் என்பார்கள் பெரியோர்கள் என்பதாம். (உக)

எள்ளுகசூதினையிகலிவென்றதூஉங்
கள்ளமேற்கொடுவலைகரந்துவேட்டுவ
ருள்ளுறவமைத்திடுமுண்மையோர்கிலாப்
புள்ளினமருந்தினைபோலுமென்பவே.

(இ - ள்.) எள்ளுக - இகழக்கடவாய், சூதினை - சூதாட்டத்தை; இகலி - பகைத்து, வென்றதூஉம் - செயித்ததும், கள்ளம் - கபடத்தை, மேல் கொடு - மேற்கொண்டு, வலை கரந்து - வலையை மறைத்து,

வேட்டுவர் - வேடர்கள், உள் உற அமைத்திடும் உணவை - உள்ளே வைத்திருக்கிற இரையை, ஓர்கிலா - அறியாத, புள் இனம்-பறவைக் கூட்டங்கள், அருந்தின போலும - உண்டவை ஒக்கும், என்ப - என்றுசொல்லுவார்கள் எ-று. ஏ-அசை.

(க - து.) அரசனே சூதாட்டத்தை யிகழ்வீராக என்றார்கள் என்பதாம். (உஉ)

கலைக்கடல்கடந்துளார்கழறுங்கட்டுரை
சிலைத்தழும்பிருந்ததோட்செம்மல்கேட்டுயி
ருலப்பினுமறுக்கிலேனுரைத்தவாய்மைநீர்
விலக்குவதென்னெனவிளம்பினனரோ.

(இ - ள்.) கலை கடல் - அறுபத்து நாலு கலைகளாகிய சமுத்திரத்தை, கடந்துளார் - ஆராய்ந்தறிந்த மந்திரிகள், கழறும - சொல்லுகிற, கட்டுரை - சொல்லை, சிலை தழும்பு இருந்த தோள் செம்மல் - சிலையின் தழும்புபொருந்திய புசத்தையுடைய நளமகாராசன, கேட்டு - கேட்டு, உயிர் உலப்பினும் - உயிரிறந்துவிட்டாலும, உரைத்த வாய்மை - (யான்) சொன்னசொல்லை, மறுக்கிலன் - தடுக்கமாட்டேன், நீர் விலக்குவது என் என - நீங்கள் விலக்குகிற தென்னென்று, விளம்பினன் - சொன்னான், எ - று அரோ-அசை.

(க-து.) நளன் மந்திரிகளை விலக்கவேண்டா மென்றான் என்பதாம்.

மன்னவனியைந்தவைமறுக்கலானென
வின்னலுற்றமைச்சராண்டிருப்பவெங்கலி
துன்னியதானுமூழ்துரந்தவாற்றினு
முன்னருஞ்சூதினின்முயல்கின்றனரோ.

(இ - ள்.) மன்னவன் - அரசன், இயைந்தவை - சம்மதித்தவை, மறுக்கலான் என - தடுக்கமாட்டானென்று, இன்னல் உற்று - வருத்தமடைந்து, அமைச்சர் ஆண்டு இருப்ப - மந்திரிகளவ்விடத்தில் பேசாதிருக்க, வெம் கலி துன்னியதானும் - வெவ்வியகலி சேர்ந்ததினாலேயும, ஊழ் - ஊழ்வினையானது, துரந்த ஆற்றினும் - செலுத்துதலினாலும், முன் அரு சூதினில் - நினைத்தற்கரிய சூதாட்டத்தில், முயல்கின்றான் - முயற்சிபடுகின்றான், எ-று. அரோ-அசை.

(க - து.) நளன் ஊழ்வினையின்படி சூதாட முயற்சி செய்கின்றான் என்பதாம். (உச)

கிழலுமிழ்வயிரவாணிடதர்கோமக
னெழுகொளிப்பூணினுயொட்டம்யாதென
மழவிடையதனையான்வைப்பனீயுமு
னெழுகடன்ஞாலமுமியைகவென்றனன்.

(இ - ள்.) நிழல் உமிழ் - பிரகாசத்தைக் கக்காநின்ற, வயிர வாள் - கூரியவாளையுடைய, நிடதர் கோமகன் - நளமகாராசனானவன், ஒழுகு

ஒளி பூணினுய் - மிகுந்த பிரகாசம்பொருந்திய ஆபரணத்தையுடைய புஷ்கரனே, ஒட்டம் யாது என - பந்தயம் யாதென்று கேட்க, மழ விடையதனை - என்னுடைய இளவேற்றை, யான் - நான், வைப்பன் - பந்தயமாக வைப்பேன், நீயும் - நீயும், உன் எழு கடல் ஞாலமும் - உனது ஏழுசமுத்திரஞ் சூழ்ந்த உலகத்தையும், இயைக - வைத்தற் குச்சம்மதி, என்றனன - என்று புஷ்கரன் சொன்னுன், எ-று.

(க - து.) நளன் பந்தயம் யாதெனக்கேட்க, நான் இடபத்தை வைக்கிறேன் நீ உலகத்தை வை யென்றான் என்பதாம். (உரு)

சூழ்வினைப்புணர்ப்பினுற்சொன்னவாறியைந்
தாழ்கடற்புவிதொழுமரசனுடவெங்
காழ்மனக்கொடுங்கலிகவற்றின்வண்ணமாய்
வீழ்தலும்புட்கரன்வென்றிட்டானரோ

(இ-ள்.) சூழ் வினை-வந்தடைந்த ஊழ்வினையின, புணர்ப்பினுல்- சம்பந்தத்தினுல், சொன்ன ஆறு இயைந்து - அவன சொன்னபடி சம்மதித்து, ஆழ் - ஆழ்ந்த, கடல் புவி தொழும் - கடலாற்சூழப்பட்ட வுலகம் வணங்கும், அரசன - நளமகாராசன, ஆட - சூதாட, வெம் - வெவ்விய, காழ் - வயிரம்பொருந்திய, மனம - மனத்தையுடைய, கொடுங் கலி - கொடிய கலியானவன, கவற்றின வண்ணமாய - சூதாடு கருவிவடிவமாய், வீழ்தலும் - புரளவும், புட்கரன் - புட்கரராசன், வென்றிட்டான் - செயித்தான, எ-று. அரோ-அசை.

(க - து.) ஊழ்வினைப்படி நளனுடைய புட்கரன் வென்றான் என்ப தாம். (உசு)

கழைசுளிபுகர்முகக்களிறுதேர்பரி
யிழைதவழிளமுலைமகளிரீட்டிய
விழுநிதிக்குப்பைகள்வேலைசூழ்புவி
முழுவதுந்தோற்றனன்முழவுத்தோளினுன்.

(இ - ள்.) கழை சுளி - கரும்பை முறிக்கின்ற, புகா முகம் - புள்ளி பொருந்திய முகத்தையுடைய, களிறு - யானையும், தோ - இரத மும், பரி - குதிரையும், இழை - ஆபரணமானது, தவழ் - அசையா நின்ற, இள முலை - இளமைதங்கிய ஸ்தனங்களையுடைய, மகளிா - மாதாகளும், ஈட்டிய - சம்பாதித்த, விழு நிதி குப்பைகள் - மேன் மையாகிய திரவியக்கும்பலும், வேலை சூழ் புவி - சமுத்திரஞ்சூழ்ந்த பூமியும், முழுவதும் - ஆகிய வனைத்தையும், முழவு தோளினுன் - மத்தளத்தையொத்த தோளையுடைய நளமகாராசன், தோற்றனன் - தோற்றுவிட்டான், எ-று.

(க - து.) நளன் யாவுந் தோற்றுப்போனுன் என்பதாம். (உஎ)

அனைத்தையுந்தோற்றனையருவிபாய்கவுட்
சினக்களிமால்களிறனையசிற்றத்தோய்

மனத்திடைநினைக்குவதென்னைவல்லைநின்
புனகொடிக்கியைந்தினிப்பொருதும்யாமென்றான்.

(இ - ள்.) அனைத்தையும் - முழுமையும், தோற்றனை - தோற்று விட்டாய்; அருவி பாய் - மதசல வருவியானது பாயாநின்ற, கவுள் - கபோலத்தையுடைய, சினம் - கோபம்பொருந்திய, களி - செருக்கையுடைய, மால் - பெருமைபொருந்திய, களிறு அனைய - யானையையொத்த, சீற்றத்தோய் - கோபத்தையுடைய நளனே!, மனத்திடை - மனதினிடத்தில், நினைவது என்ன - ஆலோசிப்பதென்னை, வல்லை - சீக்கிரத்தில், நின் புனக்கொடிக்கு - உன்னுடைய மனையாளுக்கு, இயைந்து - பந்தயத்துக்கிசைந்து, யாம் - நாமிருவரும், இனிப்பொருதும் - இனி ஆடுவோம், என்றான - என்றுசொன்னான், எ-று.

(க - து.) புட்கரன், நளனே! உனமனையாளையும் வைத்தாடுக வென்றான என்பதாம். (உஅ)

சூதாடுபடலம் முற்றிற்று.

ஆ செய்யுள் - கூகஎ.

## நகர் நீங்கு படலம்.

[இப்படலத்தால் சூதிற் றோல்வியடைந்த நளன தான் பழகிய அந்நகரத்தி லுள்ளாரோடும வறியனாயக கூடியிருப்பதில் விழையாமல் அந்நகரைவிட்டு நீங்கல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்

என்றலுமுறுவலித்திசைக்கலாதன
வொன்றுநீயுரைத்திடலுலங்கொடோளினைய
வென்றநின்னகர்வயின்மேவலேனெனுத
துன்றுகானகஞ்செலத்துணிதன்மேயினான்.

(இ - ள்.) என்றலும் - என்றுசொன்னவளவில், முறுவலித்து - சிரித்து, இசைக்கலாதன - சொல்லடபடாதவைகளை, நீ ஒன்றும் உரைத்திடல் - நீ யொன்றுஞ் சொல்லாதே, உலம் கொள் தோளினை - திரண்டகல்லையொத்த தோளையுடைய புட்கரனே!, வென்ற - செயித்த, நின் நகர்வயின் - உன்னூரினிடத்து, மேவலேன் எனு - இருக்க மாட்டேனென்று, துன்று - நெருங்கிய, கானகம் செல - காட்டினிடத்திலே போக, துணிதல் மேயினான - (நளமகாராசன) நிச்சயித்தான், எ-று.

(க - து.) நளன் காட்டிற்செல்லத் துணிந்தான என்பதாம். (க)

வாட்டிறன்மன்னவன்கமலவாண்முக
மீட்டருமாசியலிழந்தபோதினும்

பாட்டளிக்கூந்தல்வேந்தவையிற்பைந்தொடை
சூட்டியஞான்றினுந்துலங்குகின்றதே.

(இ-ள்) வாள் - வாட்போரில், திறல் - வல்லமையுடைய, மன்னவன் - நளமகாராசனது, கமலம்-தாமரைப்பூவையொத்த, வாள்முகம்-ஒளிபொருந்திய முகமானது, ஈட்டு அரும் - சம்பாதித்தற்கரிய, அரசு இயல் - அரசாட்சியை, இழந்த போதினும் - இழந்த காலத்திலும், பாட்டு - இராகங்களை பாடாநின்ற, அளி - வண்டுகள் மொய்க்கின்ற, கூந்தல் - அளகாபாரத்தையுடைய தமயந்தியானவள், வேந்து அவையில் - இராசசபையிலே, பைந்தொடை - பசிய பூமாலையை, சூட்டிய ஞான்றினும் - சூட்டின நாளிற்பார்க்கிலும், துலங்குகின்றது - பிரகாசிக்கின்றது, எ-று. ஏ - அசை.

(க - து.) நளன்முகம் பொலிவை யடைந்தது என்பதாம். (௨)

சாமரையிரட்டுநரடப்பைதாங்குநர்
தீமுகத்துமிழும்வாளேந்திச்செலகுந
ரேமுறயாரையும்விலககியேந்தறுன
கோமகளினிதுறைகோயிலெய்தினன்.

(இ - ள்.) சாமரை இரட்டுநர் - சாமரை வீசுகிறவாகளையும், அடைபபை தாங்குநர் - தாம்பூலபபையை யேந்தபபட்டவாகளையும், தீ - அக்கினியை, முகதது - (தன்) முகததில், உமிழும் - கக்குகினற, வாள - கத்தியை, ஏந்தி - தாஙகி, செலகுநர் - வருகின்றவாகளையும், ஏம உற - மயக்கமுற, யாரையும் - மற்றவாகளையும், விலக்கி - நீக்கி, ஏநதல் தான - நளமகாராசன, கோமகள் - தமயநதி, இனிது உறை - இனிமையாக வாசமபணணுகிற, கோயில் - அரமனையை, எயதினன் - சோநதான, எ-று.

(க - து.) நளன் ஒனறியாகத தமயநதி யரண்மனைக்குப போ. னன எனபதாம. (௩)

கற்றையங்கவரியுங்காலசெய்வட்டமுங்
கொற்றவெணகவிதையுமினறிக்கோதைவேன
மற்றடந்தோளினன்வருதலகாண்டலு
முறறதையென்கொலெனறுள்ளததெண்ணினள்.

(இ - ள.) கறறை - தொகுதியாயிராநின்ற, அம் கவரியும் - அழகிய சாமரையும, கால் செய் வடடமும் - சாந்தாற்றியும், கொற்ற வெண் கவிகையும் - வெண்கொறறக்குடையும், இன்றி - இல்லாமல், கோதை வேல் - மாலையணிந்த வேலையுடைய, மல் - வலிமைபொருந்திய, தடம் - பருத்த, தோளினன் - தோளையுடைய நளமகாராசன், வருதல் காண்டலும் - வருதலைபபாாததவளவில், உற்றதை - இபபடிக்கு இவனவருவதை, என்கொல் - எனனகாரணமென்று, உள்ளத்து எண்ணினள - மனததில் ஆலோசித்தாள், எ-று.

(க - து.) தமயந்தி நளன் தனித்து வந்ததைக்கண் டாலோசித்தாள என்பதாம். (௪)

எண்ணிவந்திறைஞ்சியவெழிற்கொம்பன்னவள்
மண்ணியமதிநிகர்வதனநோக்குறாப்
புண்ணுழைவேலெனப்புகுந்தயாவையும்
நண்ணலர்கடந்தவேனம்பிகூறினன்.

(இ - ள்.) எண்ணி வந்து - இப்படியாலோசித் தெதிர்வந்து, இறைஞ்சிய - வணங்கிய, எழில் - அழகுபொருந்திய, கொம்பு அன்னவள் - பூங்கொம்பையொத்த தமயந்தியினது, மண்ணிய - கழுவிய, மதி நிகா - சந்திரனையொத்த, வதனம் - முகத்தை, நோக்கு உறா - பார்த்து, புண் - புண்ணினிடத்தில், நுழை - நுழைகின்ற, வேல் என - வேலைப் போல, புகுந்த யாவையும் - தானடைந்தவைகளை யெல்லாம், நண்ணலா - சத்துருக்களை, கடந்த - செயித்த, வேல் - வேலையுடைய, நம்பி - நளமகாராசன், கூறினன் - சொன்னான், எ-று.

(க - து.) நளன் தமயந்திக்கு நடந்தவற்றைச் சொன்னான் என்பதாம். (௫)

தாழ்தடக்கையினனின்னசாற்றலும்
வீழிவாய்மடமயில்வெய்துயிர்ப்பொடு
மாழ்கினள்வருந்தினள்மழைககணீருகுத்
தூழ்வலியிதுவெனவுள்ளந்தேறினள்.

(இ-ள்.) தாழ் - முழங்கால்மட்டு நீண்ட, தடம் - விசாலமாகிய, கையினன் - கைகளையுடைய நளமகாராசன், இன்ன - இவைகளை, சாற்றலும் - சொன்னவளவில், வீழி - வீழிக்கனியை யொத்த, வாய் - அதரத்தையுடைய, மட மயில் - தமயந்தியானவள், வெய்து உயிர்ப்பொடும் - வெவ்விய பெருமூச்சுடனே, மாழ்கினள் - மயங்கினாள், வருந்தினள் - வருத்தமுற்றாள், மழை கண் - குளிர்ந்த கண்ணின்றும், நீர் உகுத்து - நீரைச்சொரிந்து, ஊழ் வலி - ஊழ்வினையினது வன்மை, இது என - இதுவென்று, உள்ளம் தேறினள் - மனந்தெளிந்தாள், எ-று.

(க-து.) தமயந்தி ஊழ்வினையென்று நினைத்தாள் என்பதாம்· ()

இந்திரசேனனென்றிசைக்கும்பேருடை
மைந்தனுமழலைவாய்க்கொடியுமாழ்குறா
துய்ந்திடக்கொண்டுபேரோசைபோயநின்
றந்தைதன்வளநகர்சார்கவென்றனன்.

(இ - ள்.) இந்திரசேனன் என்று - இந்திரசேனனென்று, இசைக்கும் - சொல்லுகின்ற, பேர் உடை மைந்தனும் - நாமத்தையுடைய பிள்ளையும், மழலை - மழலைச்சொல்லையுடைய, வாய் - வாயையுடைய, கொடியும் - புதல்வியும், மாழ்கு உறாது உய்ந்திட - வருத்த முறாது பிழைத்திருக்க, கொண்டு - உடன்கொண்டு, பேர் ஓசை போய - பெருங்கீர்த்தியையுடைய, நின் தந்தைதன் - உன்னுடைய தகப்பனுடைய, வளம் நகர் - வளம்பொருந்திய பட்டணத்தை சார்க என்றனன் - அடையக்கடவை யென்று (நளமகாராசன்) சொன்னான், எ-று.

(க - து.) நளன் பிள்ளைகளை யழைத்துக்கொண்டு தமயந்தியைத் தன்பிதாவின் வீட்டிற்குப் போவென்றான் என்பதாம். (எ)

உயிர்நிகர்மக்களோடுலங்கொடோளினான்
செயிரறுதந்தைபாற்செல்கென்றோதலும்
புயனறுங்கூந்தலாள்புண்ணினூடெரி
யயினுழைந்தாலெனவலமந்தேங்கினாள்.

(இ - ள்.) உயிர் நிகர் - உயிரையொத்த, மக்களோடு - பிள்ளைகளுடனே, உலம் கொள் - திரண்டகல்லி னழகைக்கொண்ட, தோளினான் - தோள்களையுடைய நளமகாராஜன், செயிர் அறு - குற்றமற்ற, தந்தைபால் - தகப்பனிடத்தில், செல்க என்று ஓதலும் - போகவென்று சொல்லலும், புயல் - மேகத்தையொத்த, நறு கூந்தலாள் - வாசனை பொருந்திய அளகபாரத்தையுடைய தமயந்தியானவள், புண்ணினூடு - புண்ணினுள், எரி அயில் - எரியாநின்ற வேலானது, நுழைந்தால் என - நுழைந்தது போல, அலமந்து - மனங்கலங்கி, ஏங்கினாள் - அழுதாள, எ-று.

(க - து.) தமயந்தி மனங்கலங்கினாள் என்பதாம். (அ)

நெடிபடுகானிடைத்தமியைநீங்கிப்போய்ப்
படுபரலமளிமேற்பள்ளிகொள்ளவெங்
கடிநகரடைந்துமெலலணையிற்கண்படி
லடியனேற்கிதனினுமறனுண்டாங்கொலோ.

(இ - ள்.) நெடி படு கானிடை - சிள்வண்டுகளையுடைய காட்டினிடத்தில், தமியை - தனியாகிய வுன்னை, நீங்கி போய் - விட்டு நீங்கிப்போய், படு பரல் - உறுத்தாநின்ற பரற்கல்லுகளாகிய, அமளி மேல் - அணையின்மீது, பள்ளி கொள்ள - (நீ) நித்திரைசெய்ய, வெம் கடி நகர் - குரூரமாகிய காவலையுடைய பட்டணத்தை, அடைந்து - சேர்ந்து, மெல அணையில் - மிருதுவாகிய சயனத்தில், கண் படில் - (நான்) நித்திரைசெய்யில், அடியனேற்கு - அடியேனுக்கு, இதனினும் - இதைப்பார்க்கிலும், அறன் உண்டாங்கொல் - தருமமுண்டோ, எ - று.

(க - து.) தமயந்தி நீ காட்டிற்போக நான்வீட்டிற்போகுதல் தருமமோ என்றாள் என்பதாம். (கூ)

என்றவளுரைத்தலுமடங்கலேறனான்
மென்றளிர் கவற்றுநின்மெல்லென்சீறடி
கன்றவெம்பரல்படுகானினேகுதற்
கொன்றுமேலெனதுயிருய்யுமோவென்றான்.

(இ - ள்.) என்று - இப்படியென்று, அவள் - அத்தமயந்தியானவள், உரைத்தலும் - சொன்னவளவில், மடங்கல் ஏறு அன்னான் - ஆண்சிங்கத்தையொத்த நளமகாராஜன், மெல் தளிர் - மெல்லிய தளிரை, கவற்றும் - வருந்தச்செய்யும், நின் - உன்னுடைய, மெல் என் -

பிருதுவாகிய, சிறு அடி - சிற்றடிகள், கன்ற - கன்றிப்போக, வெம் பருபரல் - குரூரமான மணியாம்பருக்கைக்கல் உண்டாகிய, கானின் - காட்டில், ஏகுதற்கு - போதற்கு, ஒன்றுமேல் - பொருந்துமாகில், எனது உயிர - என்னுடைய பிராணன், உய்யுமோ என்றான் - பிழைக்குமோவென்று சொன்னான், எ - று.

(க-து.) நளன் தமயந்தியே உன்னடி காட்டில் நடக்க என்னுயிர் பிழையாதென்றான் என்பதாம். (௪௦)

பொற்பினுக்குறையுளாம்பொன்னங்கொம்பனை
யற்பினிற்பயந்தநம்மக்களாயிடை
யெற்பிரிந்துறைகுநரேனுமெங்ஙன
நிற்பிரிந்தாற்றுவர்நிகழ்த்துவாயென்றான்.

(இ - ள்.) பொற்பினுக்கு - அழகிற்கு, உறையுள் ஆம் - இருப்பிடமாகிய, பொன் அம் கொம்பு அன்னாய் - அழகுபொருந்திய பொற்கொம்பையொத்த தமயந்தியே, அற்பினில் - ஆசையினாலே, பயந்த - பெற்ற, நம் மக்கள் - நம்முடைய பிள்ளைகள், ஆயிடை - அந்த பீமனவீட்டில், என் பிரிந்து - என்னைவிட்டு நீங்கி, உறைகுநரேனும் - இருப்பாராயினும், எங்ஙனம் - எத்தன்மையாய், நின் பிரிந்து - உன்னைவிட்டு நீங்கி, ஆற்றுவர் - பொறுத்திருப்பார்கள், நிகழ்த்துவாய் என்றான் - சொல்லென்று சொன்னான், எ - று.

(க-து.) தமயந்தியே பிள்ளைகளென்னை விட்டிருந்தாலும் உன்னை விட்டிரார்கள் என்பதாம்.

மக்கட்குத் தந்தையிலுந் தாயதிக மென்பதாம். (௪௧)

கூற்றுறழ்குருதிவேற்குரிசின்மக்கடா
மாற்றினுமாற்றலாதளுரின்மூழ்கினு
மாற்றருங்கற்பினார்மகிழ்நர்கான்செல
வேற்றுநாடுறைவதுவிழுமிதோவென்றாள்.

(இ - ள்) கூற்று உறழ் - யமனையொத்த, குருதி வேல் - உதிரந்தோய்ந்த வேலாயுதத்தையுடைய, குருசில் - அரசனே!, மக்கள் தாம - பிள்ளைகள், ஆற்றினும் - பொறுத்தாலும், ஆற்றலாது - பொறுக்காமல், அளுரில் மூழ்கினும் - துக்கத்தில் முழுகினாலும், மாற்று அரும் - பிறரால் கெடுத்தற்கரிய, கற்பினார் - பதிவிரதா தருமத்தையுடைய ஸ்திரீகள், மகிழ்நர் - புருஷர்கள், கான் செல - காட்டிற்போக, வேறு நாடு உறைவது - வேறுதேசத்திற்போ யிருப்பது, விழுமிதோ என்றாள் - மேன்மை யுடையதோவென்று (தமயந்தி) சொன்னாள், எ-று.

(க-து.) கற்புள்ளபெண்கள் நாயகரை விட்டிருத்தல் சிறப்பல்லவென்றாள் என்பதாம். (௪௨)

விரிகடலமிழ்தமும்வேலைஞாலமுஞ்
செருமுகத்தழலுமிழ்சிறுகண்யானையு

மெரிமணிக்குப்பையுமெளிதினெய்தலா
மருமகப்பெறுதன்மற்றரியதென்பவே.

(இ - ள்.) விரி கடல் - பரந்த திருப்பாற்கடலி லுண்டாகிய, அமிழ்தமும் - தேவாமிர்தத்தையும், வேலை ஞாலமும் - சமுத்திரஞ் சூழ்ந்த பூமியையும், செருமுகத்து - யுத்தத்தினிடத்திலே, அழல் உமிழ் - நெருப்பைக்கக்குகின்ற, சிறு கண் யானையும் - சிறியகண்களை யுடைய யானைகளையும், எரி மணி குப்பையும் - பிரகாசிக்கின்ற இரத்தினக் குவைகளையும், எளிதின் எய்தலாம் - எளிதிலே யடையலாம், அரு மக பெறுதல் - அரிய பிள்ளைகளைப் பெறுதல், அரியது என்ப - அரியதென்று சொல்வார் (பெரியோர்கள்,) எ-று. மற்று-ஏ-அசைகள்.

(க-து.) எல்லாஞ் சம்பாதிக்கலாம் பிள்ளைகளைச் சம்பாதித்த லரிதென்றான் என்பதாம். (கங)

விம்மிமின்னுழைமருங்கொசியவீங்கிய
கொம்மைவெம்முலையினுய்குதலைமென்மொழிச்
செம்மையவருமகப்பெறுததீமையோர்க்
கிம்மையுமறுமையுமின்பமில்லையால்.

(இ - ள்.) விம்மி - பருத்து, மின் - மின்னலையொத்த, நுழை மருங்கு - நுட்பமாகிய இடையானது, ஒசிய - ஒடிந்துபோகும்படி, வீங்கிய - பூரித்த, கொம்மை - இளமைபொருந்திய, வெம் முலையினுய் - விருப்பத்தைச் செய்கின்ற ஸ்தனங்களையுடைய தமயந்தியே!, குதலை மெல் மொழி - மழலையாகிய மிருதுவாகிய சொல்லையுடைய, செம்மைய - நல்ல குணத்தையுடைய, அரு மக - அரிய பிள்ளைகளை, பெறுத பெற்றுக்கொள்ளாத, தீமையோர்க்கு - குற்றத்தை யுடையோர்க்கு, இம்மையும் - இப்பிறப்பிலும், மறுமையும் - மறுபிறப்பிலும், இன்பம் இல்லை - சுகமில்லை, எ-று. ஆல் - அசை.

(க - து.) நற்பிள்ளைகளைப் பெறுதார்க்கு இருபிறப்பிலு மின்பமில்லை என்பதாம். (கச)

என்னலும்வணரிருங்கூந்தலேந்திழை
மன்னவமழலைவாய்மக்கடம்மொடு
மின்னகுபரிதிவேல்வீமன்மாநகர்
துன்னுதும்யாமெனச்சொல்லினளரோ.

(இ - ள்.) என்னலும் - இப்படியென்று அரசன் சொல்லவும், வணர் - வளைந்த, இரு கூந்தல் - பெரிதாகிய அளகபாரத்தையுடைய, ஏந்திழை - தமயந்தியானவள், மன்னவ - அரசனே!, நம் - நம்முடைய, மழலை வாய் - மழலைச்சொல்லைப்பொருந்திய வாயையுடைய, மக்கள் தம்மொடும் - பிள்ளைகளுடனே, யாம் - நாமிருவரும், மின் நகு - மின்னலைப் பழிக்கின்ற, பரிதி - சூரியனையொத்த, வேல் - வேலாயுதத்தையுடைய, வீமன் - வீமராஜனுடைய, மா நகர் - பெரிய நகரில், துன்னுதும் - சேர்வோம், என - என்று, சொல்லினள் - சொன்னாள், எ-று. அரோ - அசை.

(க - து.) தமயந்தி, நளனைத் தன் தகப்பன் வீட்டுக்கு வாவென்றாள் என்பதாம். (௧௫)

கோற்றொடிசெல்வர்பாற்குறையிரந்துநின்
றேற்றயின்றுயிர்சுமந்திருத்தலீறிலா
வாற்றலுமானமுமறிவுங்கல்வியு
மாற்றருஞ்சீர்த்தியுமாற்றுமென்பவே.

(இ - ள்.) கோற்றொடி - தமயந்தியே!, செல்வர்பால் - செல்வத்தையுடையவர்களிடத்தில, குறை இரந்து நின்று - குறையைச் சொல்லியிரந்துநின்று, ஏற்று - வாங்கி, அயின்று - உண்டு, உயிர் சுமந்து இருத்தல் - உயிரைத்தாங்கி யிருத்தலானது, ஈறு இலா - முடிவில்லாத, ஆற்றலும் - வலியையும், மானமும் - அபிமானத்தையும், அறிவு - அறிவையும், கல்வியும் - வித்தையையும், மாற்று அரும் - நீக்கப்படாத, சீர்த்தியும் - கீர்த்தியையும், மாற்றும் என்ப - போக்குமென்று (பெரியோர்) சொல்வார்கள், எ-று. ஏ-அசை.

(க-து.) நளன் இரந்துண்ட லிழி வென்றான் என்பதாம். (௧௬)

மிக்கவெஞ்சமத்திடைவெருவியோடின
ரொக்கலுன்புறததனியுலகில்வாழுநர்
புக்குவேட்டகத்தினிலுண்ணும்புன்மையோர்
மக்களுட்பதடியென்றுரைக்குமவையமே.

(இ - ள்.) மிக்க - அதிகரித்த, வெம் சமத்திடை - வெவ்விய யுத்தத்தினிடத்தில், வெருவி ஓடினர் - பயந்தோடினவர்களும், ஒக்கல் - சுற்றத்தார், துன்பு உற - வருத்தமடைய, தனி - தனித்திருந்து, உலகில் - உலகத்தில், வாழுநர் - செல்வத்துடன் வாழ்கின்றவர்களும், புக்கு - போய், வேட்டகத்தினில் - மாமனார் வீட்டில், உண்ணும் - புசிக்கின்ற, புன்மையோர் - கீழ்மக்களும், மக்களுள், மனிதருக்குள், பதடி என்று - பதரென்று, வையம் - உலகத்தார், உரைக்கும் - சொல்லுவர், எ-று. ஏ - அசை.

(க - து.) போரி லோடினவர் இனம் வருத்தமுற வாழ்பவர் மாமனார்வீட்டிலுண்பவர், இவர்கள் மக்கட்பதர் என்பரென்றான் என்பதாம். (௧௭)

என்றலுந்திருவுளமின்னதாகுமேன்
மன்றலங்தெரியலாய்மக்கடம்மைநம்
மின்றிகழ்மானவேல்விதர்ப்பன்மாநகர்
சென்றிடப்பணித்தருளென்றுசெப்பினாள்.

(இ-ள்.) என்றலும் - இப்படியென்று அரசன் சொன்னவளவில், திரு உளம் - உம்முடைய சித்தம், இன்னது ஆகுமேல் - இத்தன்மையதாகுமானால், மன்றல் - வாசனைபொருந்திய, அம் தெரியலாய் - அழகிய மாலையையுடைய அரசனே!, மக்கள் தம்மை - பிள்ளைகளை, நம் - நம்முடைய, மின் திகழ - மின்னலைப்போலும் பிரகாசிக்கின்ற, மானம்-

பெருமைபொருந்திய, வேல் - வேலாயுதத்தையுடைய, விதர்ப்பன் - வீமராஜனுடைய, மா நகா - பெரிய நகரத்தில், சென்றிட - போக, பணித்தருள் - உத்தரவுகொடு, என்று செப்பினுள் - என்று தமயந்தி சொன்னுள், எ-று.

(க - து.) தமயந்தி பிள்ளைகளைத் தன்தகப்பன் வீட்டிற் கனுப்பி விடென்றுள் எனபதாம். (௧௮)

தண்டலில்பாகனைநோக்கித்தாதுசேர்
வண்டிமிர்தெரியலான்வருந்திமக்களை
விண்டொடுபுரிசைசூழ்விதர்ப்பன்றன்னுழை
கொண்டனைபோகெனக்கூறினனரோ.

(இ - ள்.) தண்டல் இல் - நீங்குதலில்லாத, பாகனை நோக்கி - தோப்பாகனைப பாாத்து, தாது சோ - மகரநதஞ்சோந்த, வண்டு இமிா - வண்டுகள சபதியாநின்ற, தெரியலான் - மாலையையணிந்த நளமகாராஜன், வருந்தி - வருததமுறறு, மககளை - பிளளைகளை, விண் தொடு - மேகத்தையளாவாநினற, புரிசை சூழ் - மதில்சூழ்ந்த, விதாப்பன் தன்னுழை - வீமராஜனிடததில், கொண்டனை போக என - கொண்டுபோவென்று, கூறினன் - உத்தரவுகொடுத்தான், எ - று. அரோ - அசை.

(க - து.) நளன் தோப்பாகனைப்பாாத்துப் பிள்ளைகளை யழைத்துக்கொண்டு வீமராஜனிடத்திற் போவென்றான் என்பதாம். (௧௯)

தழுவியதாதைதன்முகமுந்தாயர்த
முழுமதியனையவாண்முகமுநோக்குறு
விழிவழிநீருகவிம்மிவிம்மிநின்
றழுதனர்கண்டுளோரலக்கணெய்தவே.

(இ-ள்.) தழுவிய - (தங்களைத்) தழுவிக்கொண்ட, தாதை தன் முகமும் - தகபபனுடைய முகத்தையும், தாயா தம் - தாயாரினுடைய, முழு மதி அனைய - பூாணசந்திரனையொத்த, வாள் முகமும் - ஒளி பொருந்திய முகத்தையும், நோக்கு உறு - பாாதது, விழி வழி - கண்ணின்வழியிலே, நீா உக - நீாசிந்த, விமமி விம்மி நின்று - தேம்பித் தேம்பி நின்று, கண்டுளோா - பாாததவாகள, அலக்கண் எய்த - துன்ப முறும்படி, அழுதனா - அழுதாாகள், எ - று. ஏ - அசை,

(க - து.) பிள்ளைகள் தாய்தகப்பனைப்பாாத்து அழுதார்கள் என்பதாம். (௨௦)

அலமருமக்கடமாகமெங்கணு
முலைவழியொழுகுபானனைப்பமோந்துவாய்
புலர்தரப்பற்பல்காற்புல்லிக்கொண்டுகண்
கலுழ்தருபுனலினுற்கழுவினளரோ.

(இ-ள்.) அலமரு - மனங் கலங்காநின்ற, மக்கள் தம் - பிள்ளைகளுடைய, ஆகம் எங்கணும் - சரீரமுழுமையும், முலை வழி - முலையின்

வழியால், ஒழுகு பால் - ஒழுகாநின்ற பாலானது, நனைப்ப - நனைக்கும்படி, மோந்து - உச்சிமோந்து, வாய் புலாதர - வாயுலர, பல் புல்கால் - அனந்தந்தரம், புல்லிக்கொண்டு - தழுவிக்கொண்டு, கண் கலுழ்தரு - கண்ணினின்று மொழுகாநின்ற, புனலினுல் - சலத்தினுல், கழுவினுள் - கழுவினுள், எ-று. அரோ - அசை.

(க-து.) தமயந்தி பிள்ளைகளைக் கண்ணீரால் கழுவினுள் என்பதாம். (உக)

மடவரறன்னையுமதுகைவேந்தையும்
படுதுயரொழிகெனவாற்றிப்பாகனுங்
குடலுயிர்பிரித்தெனவுவகைமக்களைக்
கொடிநெடுந்தேர்மிசைக்கொண்டுபோயினுன்.

(இ-ள்.) மடவரல் தன்னையும் - தமயந்தியையும், மதுகை - வலியையுடைய, வேந்தையும் - நளனையும், படு - உண்டாகாநின்ற, துயர் ஒழிக என - துக்கம் நீங்கக்கடவீரென்று, ஆற்றி - தணித்து, பாகன் - தேர்ப்பாகன், ஆங்கு - அவ்விடத்தினின்று, உடல் உயிர் பிரித்து என - உடலையு முயிரையும் வேறு பிரித்ததுபோல், உவகை மக்களை - சந்தோஷத்தைச்செய்யும் பிள்ளைகளை, கொடி - கொடியையுடைய, நெடு தேர்மிசை - நெடிய தேரின்மீது, கொண்டு - ஏற்றிக்கொண்டு, போயினுன் - சென்றுன், எ-று.

(க-து.) பாகன் பிள்ளைகளைத் தேர்மேற்கொண்டு போனுன் என்பதாம். (உஉ)

மிகைப்படுதுன்பமும்விழையுமின்பமு
மகத்திடைநிகரெனநோக்குமையனுந்
தகைப்பருந்துயரொடுதளர்ந்துசாம்புமேன்
மகப்பிரிவினுந்துயர்வலிதியாவதே.

(இ-ள்.) மிகை படு - அதிகரித்த, துன்பமும் - துயரத்தையும், விழையும் - இச்சிக்கப்பட்ட, இன்பமும் - இன்பத்தையும், அகத்திடை - மனதில், நிகர் என - ஒப்பாக, நோக்கும் - பார்க்கின்ற, ஐயனும் - நளனும், தகைப்பரும் - தடுத்தற்கரிய, துயரொடு - துன்பத்துடன், தளர்ந்து - வருந்தி, சாம்புமேல் - சோர்வானேயானுல், மக பிரிவினும் - மக்கட்பிரிவிலும், துயர் - துயரில், வலிது - வலிமையுடையது, யாவது - எது [ஒன்றுமில்லை,] எ-று.

(க-து.) பிள்ளைகளைப் பிரிதலைவிடத் துன்பமில்லை என்பதாம்.()

சிலதியர்பரப்பியதேங்கொண்மெல்லிதழ்
மலர்மிசைமிதிப்பினும்வருந்துசீறடி
நிலமிசைப்படுபரலுறைப்பநேரிழை
புலவுவேற்காளைபின்றெடர்ந்துபோயினள்.

(இ-ள்.) சிலதியர் - தோழிகள், பரப்பிய - பரவச்செய்த, தேன் கொள் - வாசனைகொண்ட, மெல் இதழ் - மெல்லிய விதழையுடைய,

மலாமிசை - புஷ்பத்தின்மீது, மிதிப்பினும் - அடிவைத்தாலும், வருந்து - வருந்துகின்ற, சிறு அடி - சிறிய பாதங்களில், நிலமிசை - பூமியின்மீது, படு - உண்டாகிய, பரல் - பருக்கைகள், உறைப்ப - உறுத்தும்படி, நேரிழை - தமயந்தியானவள், புலவு வேல் - புலா னாற்றத்தையுடைய வேலையேந்திய, காளை - நளனது, பின் தொடாந்து - பின்னே தொடாந்து, போயினாள - சென்றாள், எ-று.

(க - து.) தமயந்தி நளன்பின்னே போனாள் என்பதாம். (உ௪)

[இதுமுதல் நாலுபாட்டால் நளனை யிழந்தவா செய்கை சொல்லப்படுகின்றது.]

மடவரறன்னொடுமதுகைவேந்தனைக்
கடிமுரசருதகோமறுகிற்காண்டலு
மிடியுறுமரவெனவேஙகியேங்கிநின்
றுடல்வெறுத்துயிருகவுழல்கின்றார்சிலர்.

(இ-ள்.) மடவரல் தன்னொடு - தமயந்தியுடன், மதுகை வேந்தனை - வலியையுடைய நளனை, கடி - சிறந்த, முரசு - பேரிகையி னொலி, அருத - நீங்காத, கோ மறுகில் - அரசாவீதியில், காண்டலும் - பாாத்தவளவில், இடி உறு - மேகததி னொலியைக் கேட்ட, அரவு என - சாபபதைப்போல, ஏஙகி ஏங்கி - மிகவு மேக்கமுற்று, நின்று - (திகைத்து) நின்று, உடல் வெறுத்து - தேகத்தை வெறுதது, உயிா உக - உயிா நீங்கும்படி, சிலா உழல்கின்றா - சிலா வருநதுகின்றனா, எ-று.

(க - து) கண்டவா வருந்தினா என்பதாம். (உ௫)

மண்ணியமணிவளையனையமாரபினான்
பெணணலங்கனிந்தவிப்பேதைதன்னொடு
நண்ணருங்கானிடைநடத்தலகாணவோ
கண்ணிணைபடைத்தனன்கமலத்தோனென்பார்.

(இ-ள்.) மண்ணிய - கழுவிய, மணி வளை - ரத்நமலையை, அனைய - ஒத்த, மாாபினான் - மாாபினையுடைய நளமகாராசன், பெண் நலம் கனிந்த - பெண்டன்மை முதிாந்த, இ பேதை தன்னொடும் - இத்தமயந்தியுடனே, நண்ணு அரு - போகப்படாத, கானிடை - காட்டினிடத்தில், நடத்தல் காணவோ - போதலைப் பாாக்கவோ, கமலத்தோன் - பிரமன், கண் இணை படைத்தனன் - இரண்டு நேத்திரங்களை (எங்களுக்கு) அமைததனன், என்பாா - எனறு (சிலா) சொல்லுவாாகள், எ-று.

(க-து.) சிலா இந்தத் துன்பத்தைக்காணவோ பிரமன் கண்ணைப் படைத்தான் என்பாாகள்என்பதாம். (உ௬)

மல்லடுதிணிபுயமன்னர்மன்னவ
னெல்லையிறுயருழந்தேகக்காண்டலு
மொல்லையில்வெடித்துயிரொழிந்ததில்லையாற்
கல்லினும்வலியதோகவலுநெஞ்சென்பார்.

(இ - ள்.) மல் அடு - மல்லர்களைக் கொல்லாநின்ற, திணி புயம் - பலம்பொருந்திய புசத்தையுடைய, மன்னர் மன்னவன் - அரசர்க்கரச னாகிய நளன், எல்லை இல் துயர் உழந்து - அளவில்லாத துன்பமுற்று, ஏக - போக, காண்டலும் - பார்க்கவும், ஒல்லையில் - சீக்கிரத்தில், வெடித்து - (மார்பு) வெடித்து, உயிர் - பிராணனானது, ஒழிந்தது இல்லை - நீங்கியதில்லை, (ஆதலால்) கல்லினும் - கல்லைப்பார்க்கிலும், வலியதோ - வலிமையுடையதோ, கவலும நெஞ்சு - துன்பப்படும் மன மானது, என்பர் - என்று சொல்லுவார்கள், எ-று. ஆல் - அசை.

(க-து.) சிலர் தங்கள் மனதைக் கல்லினும் வலிதென்பார்கள் என்பதாம். (உள)

தாயினுமருள்புரிதரணிமன்னவன்
போயினன்கானிடையென்றபோழ்தினின்
மாய்வுறப்பெற்றிலேமன்னர்மன்னன்பா
லேயபேரன்பினரெம்மிலயாரென்பார்.

(இ - ள்.) தாயினும் - தாயைப்பார்க்கிலும், அருள் புரி - உயிர்க ளிடத்தில் கிருபையைச்செய்கின்ற, தரணி மன்னவன் - உலகத்தை யாளு நளன், கானிடை - காட்டினிடத்தில், போயினன் - சென்றான், என்ற போழ்தினில் - என்று சொன்னபொழுதிலே, மாய்வு உற பெற்றிலேம் - இறக்கப்பெறவில்லை; (ஆதலால்) மன்னர் மன்னன்பால் - ராசாதிராசனாகிய நளனிடத்தில், ஏய - பொருந்திய, பேர் அன்பினர் - பேரன்பை யுடையவர்கள், எம்மில் - எங்களைப்பார்க்கிலும், யார் - யாவர், (உளர்) என்பர் - என்று (சிலர்) சொல்லுவார்கள், எ-று.

(க - து.) சிலர் சாவு வரவில்லையேயென விசனப்படுவார்கள் என்பதாம். (உஅ)

அடிதொழுமரசருமமைச்சர்வெள்ளமு
மடவியரனைவருமைந்தரீட்டமுங்
கொடிநெடுவீதிவாய்க்குறுகியெங்கணுங்
கடன்மடைதிறந்தெனக்கலுழ்ந்திட்டாரரோ.

(இ - ள்.) அடி தொழும் - பாதத்தைவணங்காநின்ற, அரசரும் - இராசாக்களும், அமைச்சர் வெள்ளமும - மந்திரிக் கூட்டங்களும், மட வியர் அனைவரும் - மாதர் கூட்டங்களும், மைந்தர் ஈட்டமும் - புருஷர் கள்கூட்டமும், கொடி நெடு வீதிவாய் - கொடிகளையுடைய நீண்ட வீதியினிடத்தில், குறுகி - வந்து, எங்கணும் - எவ்விடத்தும், கடல் மடைதிறந்தது என - கடல் மடைதிறந்தது போல, கலுழ்ந்திட்டார் - அழுதார்கள், எ-று. அரோ - அசை.

(க-து.) பலரும் கடலுடைந்தாற்போ லழுதார்கள் என்பதாம். ()

[இப்பாட்டால் அரசனைத் தடுத்தற்கு அவன் கோட்பாட் டிழிவு கூறப்படுகின்றது.]

பொய்யுறுதிமொழிபுகல்கிலேனென
வையநீயெம்மையிங்கருளில்வேந்தன்

கையகப்படுத்தினைகானிலேகினின்
மெய்யினும்பொய்மையேவிழுமிதாமென்பார்.

(இ-ள்.) பொய் உறு - பொய் யாகிய, தீ மொழி - தீயசொல்லை, புகல்கிலேன் என்று - சொல்லமாட்டே னென்று, ஐய நீ - ஐயனே நீ, எம்மை - எங்களை, இங்கு - இப்பட்டணத்தில், அருள் இல் - கிருபை யில்லாத, வேந்து தன - அரசனுடைய, கை அகபபடுத்தினை - கையிற் சேர்த்தவனாய், கானில் ஏகின - காட்டிடத்துக்குப்போனால், நின் மெய்யினும் - உன்னுடைய சததியததைப்பார்க்கிலும், பொய்மையே - பொய்யுரையே, விழுமிது ஆம் - மேனமையுடையதாம், என்பார - என றுசொல்லுவாரகள், எ-று.

(க - து.) அரசனே நீ காட்டிற்போகில் மெய்யிலும் பொய் பிர காசிக்கும் எனறாரகள் எனபதாம். (௩௦)

[இபபாட்டால் இச்சூதில பொய்யுரைப்பினும் வழுவல்ல வெனக கூறபபடுகினறது.]

இன்னுயிருய்யுமிங்கென்றபோழ்தினும்
பொன்னவிர்முலையினர்புலர்ந்தகாலையு
முன்னருஞ்சூதினும்பொய்மைமூரிவேற்
கன்னவிறோளினாய்கழறலாமென்பார்.

(இ-ள்.) இங்கு - இவ்விடததில், இன் உயிர - இனிய உயிரானது, உய்யும் - பிழைக்கும், எனற போழ்தினும் - எனறு சொல்லிய காலத் திலும், பொன அவிர - தேமல் பிரகாசிக்கிற, முலையினர - முலையை யுடைய மடவார, புலாநத காலையும்-பிணஙகின காலததிலும், உன்ன அரும் - நினைக்கபபடாத, சூதினும் - சூதாடடத்திலும், பொய்மை - பொய்யுரையை, மூரி - பலம்பொருந்திய, வேல் - வேலாயுதத்தை யேந்திய, கல் நவில் தோளினாய் - மலைபோன்ற தோளையுடைய அர சனே!, கழறலாம் - சொல்லலாம், என்பார - என்றுசொல்லுவார கள, எ - று.

(க-து.) உயிர தப்புவிக்கவும் பெண்கள் பிணக்கிலும் சூதாட்டத் திலும் பொயசொல்லலாம் என்பாரகள் என்பதாம். (௩௧)

[இபபாட்டால் தங்களுரையை நளன் கொள்ளாதது கண்டு மந்திரி முதலாயினோர வருததமடைந்தா ரெனபபடுகினறது.]

எண்டிசைத்தலைவருமெழில்கண்டேமுறத்
தொண்டைவாய்மடமயின்மாலைசூட்டுநாள்
புண்டருகோட்டுவெங்களிற்றிற்போதரல்
கண்டகணிவற்றையுங்காணுமோவென்பார்.

(இ - ள்.) எண் திசை தலைவரும் - அஷ்டதிக்குப் பாலகரும், எழில் கண்டு - இங்ஙன அழகைப்பாாத்து, ஏமுற - (இவ்வள வழகு நமக இல்லையென்று) மயக்கமுறாநிற்க, தொண்டை வாய் - கோவைக்

கனியையொத்த அதரத்தையுடைய, மட மயில் - தமயந்தியான வள், மாலை சூட்டு நாள் - சுயம்வரமாலையைச் சூட்டிய தினத்தில், புண் தரு - மாமிசம்பொருந்திய, கோட்டு - தந்தங்களையுடைய, வெம் களிறு - குரூரமான யானையின்மீது, போதரல் - (நீவிர் வரும்) கோலம் வருதலை, கண்ட கண் - பார்த்த கண்கள், இவற்றையும் - இக்கொடிய செய்கைகளையும், காணுமோ என்பார் - பார்க்குமோ வென்று சொல்லுவார்கள், எ-று.

(க - து.) நளன் சிறப்பைக்கண்ட கண்கள் சிறப்பில்லாமையுங் காணலாமோ வென்பார்கள் எனபதாம். (ருஉ)

[இப்பாட்டால் நளனிடத் தன்புள்ளவராய்ப் புலம்புகின்ற
அனைவர்க்கும் புஷ்கரன் பொறாமையால்
கொடியவாக்கினை விதித்தானெனப
படுகின்றது.]

மன்னவனேகுதற்கிரங்கிமாழ்குநர்
துன்னருங்கானிடைத்தொடர்ந்துசெலகுந
ரின்னுயிர்செகுப்பலென்றிசையில்புன்மையோ
னந்நகரிடைமுரசறைவித்தானரோ.

(இ - ள்.) மன்னவன் - நளமகாராசன், ஏகுதற்கு - காட்டிற் போவதற்கு, இரங்கி - அழுது, மாழ்குநர் - துனபபபடுகின்றவாக ளையும், துன்ன அரும் - போககூடாத, கானிடை - காட்டினிடத்தில், தொடர்ந்து - (பின்னே) தொடர்ந்து, செல்குநர் - போகினறவாக ளையும், இன் உயிர் - இனிய வுயிர்களை, செகுப்பல் என்று - கொல்லு வேனென்று, இசை இல் புன்மையோன - புகழில்லாத அற்பனாகிய புஷ்கரன், அ நகரிடை - அந்நகரத்தினிடத்தில, முரசு - பேரிகையை அறைவித்தான் - அடிப்பித்தான, எ - று. அரோ - அசை.

(க - து.) புட்கரன் நளனுக் கிரங்கினவரையும் அவன்பின் சென்ற வரையுங் கொல்வேனென்று பறையறைவித்தான என்பதாம். (ருங)

வசைபடுமன்னவன்வாய்மையாலறை
விசிமுழவொலிசெவிவெதும்பக்கேட்டலு
மிசைபடுமன்னவற்கிரங்கினோரெலா
மசுணமென்புள்ளெனவலமந்தேங்கினர்.

(இ - ள்.) வசை படு மன்னவன் - அபகீர்த்தியையுடைய புஷ கரராசனது, வாய்மையால் - ஆக்கினையால், அறை - அடிக்கப்பெ ற்ற, விசி முழவு ஒலி - வாரினாலிறுக்கிய முரசினுடைய சத்தத்தை, செவி வெதும்ப - காதுகள் வெப்பமுற, கேட்டலும் - கேட்டவள வில், இசை படு மன்னவற்கு - புகழையுடைய நளமகாராசனுக்கு, இரங்கினோர் எலாம் - அழுதவர்களெல்லாரும், அசுணம் மெல் புள் என - அசுணமென்னும் மிருதுவாகிய பக்ஷியைப்போல, அலமந்து - மனஞ்சுழன்று, ஏங்கினர் - துன்பப்பட்டார்கள், எ-று.

(க - து) பறையறைவிப்பைக் கேட்டவர்கள் எல்லாரும் விசன மடைந்தாகள் என்பதாம்.

கொடிய ஒலிகேட்கில் இறப்பது அசுணப்பறவைக் கியல்பாதலின் அதுபற்றி அது இவாக்கு உவமானமாகக் கூறப்பட்டது. (௩௪)

[இதுமுத லிரண்டுபாட்டால் நளன் மந்திரிமுதலானோருக்கு விடைகொடுத்தல் சொல்லப்படுகின்றது.]

வருந்திமுன்போதருமமைச்சர்வாண்முகம்
புரிந்தனனோக்கியபொருவில்வாய்மையான்
விரிந்தநூற்கேள்வியீரறத்தைவேரொடு
மரிந்தனிரெற்பிரிந்தாற்றலாமையால்.

(இ - ள.) வருந்தி - வருத்தமுற்று, முன் போதரும் - முன்னே போகும், அமைச்சா - மந்திரிகளுடைய, வாள் முகம் - ஒளிபொருந்திய முகத்தை, புரிந்தனன - விருமபினவனாய, நோக்கிய - பாாதத, பொரு இல் - ஒபபில்லாத, வாய்மையான - [illegible]த்தையுடைய நளமகாராசன, விரிந்த நூல் கேள்வியீர் - [illegible]ரநத சாஸ்திர விசாரணையுடையவாகளே, என் பிரிந[illegible] - [illegible]னனைபபிரிந்து, ஆற்றலாமையால் - பொறுக்கமாட்டாமையினால், அறததை - தருமத்தை, வேரொடும் - வேருடனே, அரிநதனிர் - அறுததுவிட்டோகள, எ - று.

(க - து.) [illegible] மந்திரி[illegible]பாாததுப் பிரிவாற்றும லறத்தை விட்டோகள் என்பதாம்.

[illegible] மெழுவாய் மேல்வரும் பாட்டில் என்றானென்னும் பயனிலைகொண்டது. (௩௫)

மேவருஞ்சூதினிற்றோற்றமேதினி
யாவதுமவென்றலதாளவெண்ணுதல்
கோவியல்பன்றவனாணைமேற்கொடு
நீவிரென்வாய்மையைநிறுத்துவீரென்றான்.

(இ - ள்.) மேவு அரும் - பொருந்துதற்கரிய, சூதினில் - சூதாட்டத்திலே, தோற்ற - தோற்றுப்போன, மேதினி யாவதும் - உலகமெல்லாவற்றையும், வென்று அலது - (நான்) வெற்றிகொண்டல்லாமல், ஆள எண்ணுதல் - ஆளுகிறதற்கு நினைத்தல், கோ இயல்பு அன்று - அரசாகளுக்கு தருமமன்று, (ஆதலால்) அவன் - அந்த புஷகரனுடைய, ஆணை - ஆக்கினையை, மேற்கொடு - ஏற்றுக்கொண்டு, நீவிா - நீங்கள், என் வாய்மையை - என்னுடைய சத்தியத்தை, நிறுத்துவீா - நிலைநிறுத்துங்கள், என்றான் - என்றுசொல்லினான், எ-று.

(க - து.) நளன் மந்திரிகளைப் புட்கரன் சொற்படி கேளுங்கள் என்றான் என்பதாம். (௩௬)

முளரியால்வெந்தவெங்கானின்மொய்துக
ளளியொடுபுலம்பினரழுதகட்கடைத்

துளியினிலவித்தனர்தொடரவெந்திறற்
களிமதகளிற்றினன்கானிலேகினன்.

(இ - ள்.) முளரியால் வெந்த - அக்கினியினால் நீறுபட்ட, வெம் கானில் - வெவ்விய காட்டினிடத்து, மொய் துகள - நிறைந்த தூளி களை, அளியொடு - இரக்கத்துடன, புலமபினா - புலம்பினவராய், அழு த கண் கடை - அழுத கணணின கடையிலிருந்து வராநின்ற, துளியி னில் - நீரததுளியினால, அவித்தனா - அவித்தவாகளாய, தொடர - பின்றொடர, வெம் திறல் - குரூரமான வலியையும், களி - செருக் கையும், மதம் - மும்மதத்தையுமுடைய, களிற்றினன் - யானையை யுடைய நளமகாராசன, கானில - காட்டினிடத்தில, ஏகினன - சென் றான, எ-று.

(க-து.) அழுவாா கண்ணீா வெம்புழுதியை நனைக்க நளன் காட் டில் நடந்துபோனான் எனபதாம (ருஎ)

திருகுவெஞ்சினக்கலிசெலவன்பின்றொடர்
பரிசனம்யாவுமெயபதைத்துமீடர
முருகுறழ்பொற்பினன்முன்னரேகிய
வருநெறிதெரிவுறாவஞ்சமாற்றினன்.

(இ - ள்.) திருகு - மாறுபாட்டையும், வெம் சினம் - வெவ்விய கோபத்தையுமுடைய, கலி - கலிபுருஷனானவன், செல்வன் - நளனு டைய, பின் தொடா - பினனே போகினற, பரிசனம் யாவும் - ஏவல் செய்வோரெல்லோரும், மெய பதைதது - சரீரந் துடித்து, மீள்தர- திரும்பும்படி, முருகு உறழ் - சுபபிரமணணியனை யொத்த, பொற் பினன் - அழகையுடைய நளமகாராசன, முனனா ஏகிய - முன்னே போன, அரு நெறி - அரிய வழியானது, தெரிவு உறா - தெரியாத, வஞ்சம் - மாயையை, ஆற்றினன - செயதான, எ-று.

(க - து.) கலியன சனஙகளுக்கு வழிதெரியாமற் செய்தான் என்பதாம். (ருஅ)

ஆற்றுவஞ்சனையினாலழகுவாய்ந்தபொற்
கோற்றொடிதன்னொடுங்கொற்றமன்னவன்
றோற்றுதலகாண்கிலார்துயரமெயதிநின்
றூற்றெழுகண்ணினருள்ளமாழ்கினர்.

(இ - ள்.) ஆற்று வஞ்சனையினால் - (கலி) செய்த மாயையினால், அழகு வாய்ந்த - அழகு பொருந்திய, பொன கோற்றொடி தன்னொடு- தமயந்தியோடும், கொற்ற மன்னவன் - வெற்றிபொருந்திய நளமகா ராசன், தோற்றுதல் - தெரிதலை, காணகிலா - பாாக்காதவாகளாய், துய ரம் - துக்கத்தை, எய்தி - அடைந்து, நின்று - நின்று, ஊற்று - சுரப் பாயது, எழு - தோன்றுகின்ற, கண்ணினா - கண்களையுடைய பரி சனங்கள், உள்ளம் மாழ்கினா - உள்ளத்தில் மயங்கினார்கள், எ-று.

(க-து.) கலிபகவான் மாயத்தால் சனங்கள் நளனையுந் தமயந்தி யையுங் காணாதவர்களாய்ப் புலம்பினார்கள் என்பதாம். (ருகு)

ஆயினுமினிதருள் புரியுமெம்பிரான்
றாயமென்மலரடிச்சுவடுகாண்கிலேம்
போயினன்யாண்டெவர் புணர்ப்பினுயதிம்
மாயமென்றருநெறிமருங்கிற்றேடுவார்.

(இ - ள்.) ஆயினும் - தாயைக்காட்டிலும், இனித - இனிதாக, அருள் புரியும் - கிருபையைச்செய்கின்ற, எமபிரான் - எங்களரசனுகிய நளமகாராசனது, தூய - பரிசுத்தமாகிய, மெல் மலா - மெல்லிய தாமரைமலர்போன்ற, அடி சுவடு - அடிக்குறியை, காண்கிலேம் - நாங்கள் காணவில்லை; யாண்டு போயினன - எவ்விடத்திற் போயினுன், இம்மாயம் - இந்த வஞ்சனையானது, எவா புணாப்பின் ஆயது - யாா சம்பந்தத்தினு லுண்டாகியது, என்று - என்று பேசிக்கொண்டு, அரு நெறி - அரியவழியை, மருஙகில் - பககஙகளில், தேடுவாா - தேடுவார்கள், எ-று.

(க - து.) சனங்கள் நளனைத் தேடுவாாகள் என்பதாம். (சுo)

தேடினர்புகுமிடந்தெரியலாமையில்
வாடினரருநெறிமருங்கினோர்வழி
கூடினரின்னுயிர்கூற்றங்கைக்கொள
வீடினராமெனவீழ்ந்துவிம்மினர்

(இ - ள்.) தேடினா - தேடினவாகள், புகும் இடம் - அரசன் போனவிடம், தெரிகிலாமையில் - அறியாதபடியால, வாடினா - வாடினாகள், அரு நெறி - அரிய வழியினது, மருங்கில் - பக்கத்தில், ஓர் வழி - ஒருவழியை, கூடினா - அடைந்தாாகள, இன் உயிா - இனிய வுயிரை, கூற்றம் கை கொள - யமன் கொண்டுபோக, வீடினராம் என - இறந்தவாபோல, வீழ்ந்து - நிலத்திலே விழுந்து, விம்மினர் - அழுதாாகள், எ-று.

(க - து) சனங்கள் நளனைத் தேடிக்காணுது நிலத்தில் வீழ்ந்தழுதாாகள என்பதாம். (சுக)

கொன்னுனையலங்கலவேற்குவவுத்தோளினன்
சென்னெறிகண்களிற்றெரியககாண்கில
ரின்னலுற்றழுதழுதேங்கியேங்கியத்
தொன்னகரடைந்தனர்தொடர்ந்துளோரெலாம்.

(இ - ள்.) கொல் - கொல்லாநின்ற, நுனை - கூர்மையுடைய, அலங்கல் - வெற்றிமாலையணிந்த, வேல் - வேலையுடைய, குவவு தோளினன் - திரண்ட தோளையுடைய நளமகாராசனது, செல் நெறி - போனவழியை, கண்களில் - நேத்திரங்களில், தெரிய - அறிய, காண்கிலர் - காணுதவர்களாய், இன்னல் உற்று - துன்பமுற்று, அழுது அழுது - புலம்பிப் புலம்பி, ஏங்கி ஏங்கி - மிகவு மேக்கமுற்று, தொடர்ந்துளோரெலாம் - பின்றொடர்ந்து போனவாகளெல்லாரும், அ தொல் நகர் - தங்கள் பழைய நகரை, அடைந்தனர் - சேர்ந்தார்கள், எ-று.

(க - து.) சனங்கள் நளனைக்காணுமல் நகரத்தில் வந்தார்கள் என்பதாம். (சஉ)

[இதுமுதல் ஏழுபாட்டால் நளன் சென்றபின்
அத்தேயததி லுண்டாகிய செய்கை
சொல்லப்படுகின்றது.]

பறவைகள்குடம்பையுட்பார்ப்பருத்தில
கறவைகள்புனிற்றிளங்கன்றுக்கூட்டில
நறவுயிர்த்தலர்கிலமலர்களுமவே
யிறைவனேகினன்வனத்தென்றபின்னரோ.

(இ-ள்.) காமம் வேல் - அச்சத்தைத் தருகின்ற வேலையுடைய, இறைவன் - நளமகாராஜன், வனத்து - காட்டினிடத்தில், ஏகினன் என்ற பின்னர் - போயினுனென்ற பின்பு, பறவைகள் - பக்ஷிகள், குடம்பையுள் - கூண்டுக்குள்ளே, பார்ப்பு - தங்குஞ்சுகளை, அருத்தில - இரையூட்டவில்லை; கறவைகள் - பசுக்கள், புனிற்று இள கன்றுக்கு - மிகுந்த இளங்கன்றுகளுக்கு, ஊட்டில - பாலூட்டக் கொடுத்தில, மலர்கள் - புஷ்பங்கள், நறவு உயிர்த்து - தேனைத்தந்து, அலர்கில - மலரவில்லை, எ-று. ஏ - அசை,

(க-து.) நளன் காட்டிற்போனுனென்றபின் பறவைகள் குஞ்சுகளுக் கிரைதரவில்லை, பசுக்கள் கன்றுகளுக் கூட்டவில்லை; மலர்கள் மலரவில்லை என்பதாம். (சங)

வான்மறந்தனதுளிவழங்கலின்னிசைத்
தேன்மறந்தனமடமகளிர்தேங்குழல
பான்மறந்தனபசுங்குழவிபாய்கவுட்
கான்மதமறந்தனகளிநல்யானையே.

(இ - ள்.) வான் - மேகங்கள், துளி வழங்கல் - மழைபெய்தலை, மறந்தன - மறந்துவிட்டன, இன் இசை - இனிய இசையையுடைய, தேன் - வண்டுகள், மட மகளிர் - இளமைபொருந்திய ஸ்திரீகளுடைய, தேன்குழல் - வாசனைபொருந்திய அளகத்தை, மறந்தன - மறந்துவிட்டன; பசு குழவி - இளங்குழந்தைகள், பால் - பாலுண்ணலை, மறந்தன - மறந்துவிட்டன; களி - செருக்கையுடைய, நல் - நல்ல, யானை - யானைகள், பாய் - பெருகாநின்ற, கவுள் - கன்னத்திலுண்டாகிய, கான் மதம் - வாசனைபொருந்திய மதவருஷத்தை, மறந்தன - மறந்துவிட்டன, எ-று. ஏ - அசை.

(க - து.) மழைபெய்யவில்லை; வண்டுகள் பெண்கள் கூந்தலில் மொய்க்கவில்லை; குழைந்தைகள் பாலுண்ணவில்லை, யானைகள் மதம் பொழித லொழிந்தன என்பதாம். (சச)

மலர்ப்பசுந்தாழ்குழன்மகளிர்கேள்வர்பாற்
புலத்தலுங்கலத்தலும்பொருந்துறுமையா

லலத்தகமிழந்தனகுஞ்சியங்கலார்
முலைச்சுவடிழந்தனமுழவுத்தோள்களே.

(இ - ள்.) மலா - புட்பங்களையணிந்த, பசு - பசுமையாகிய, தாழ் குழல் - நீண்ட கூந்தலையுடைய, மகளிர - மாதாகள், கேள்வர்பால் - கணவரிடத்தில், புலததலும் - பிணக்கையும், கலத்தலும் - புணர்ச்சியையும், பொருநதுறுமையால் - அடையாமையால், குஞ்சி - குடுமிகள், அலத்தகம் - செமபஞ்சுக்குழம்பை, இழநதன - நீஙகிவிட்டன; அ கலாா - அந்த மாதருடைய, முலை சுவடு - ஸ்தனத்தின் குறியை, முழவு - மத்தளம்போனற, தோள்கள் - புசங்கள், இழந்தன - நீங்கின, எ-று. ஏ - அசை.

(க-து.) ஆண்பாலுககும் பெண்பாலுக்கும் புலவியுங் கலவியு மற்றன என்பதாம.

ஊடில் அது தீாவதற்குத தலைவிபாதததில் தலைவன் வணங்கில் அப்பொழுது அவளபாதததச் செம்பஞசு அவன குடுமியிற்படும், புணாச்சியுண்டானல் அவா ஸதனததில எழுதிய சந்தனக்கோல மாடவாபுயத்தில் பதியும், இவை துனபததிலை யின்மையால் இழந்தன என்றா. (௫௫)

அள்ளிலைவேற்கணாரங்கைமீதுவைத்
தெள்ளருமின்மொழிபயிற்றலினமையால்
வள்ளவாயாரமுதுண்ணுமவணசிறைக்
கிள்ளையுந்தேனமொழிகிளக்கலற்றவே.

(இ - ள் ) அள - கூாமைபொருந்திய, இலை - இலைபோன்ற, வேல் வேலாயுததைதை யொதத, கணா - கணகளையுடைய ஸ்திரீகள், அங் கைமீது வைதது - அழகிய கையினமீது வைததுக்கொண்டு, எள் அரு - இகழச்சியிலலாத, மென மொழி - மிருதுவான சொற்களை, பயிற்றல இன்மையால - கறபிககாதபடியால, வளளவாய - கிண்ணத்தினிடததில, ஆா - நிறைந்த, அமுது - பாலை, உண்ணும் - குடிக்கும், வள் சிறை - வளபபமபொருநதிய இறகையுடைய, கிள்ளையும் - கிளிப பிள்ளையும், தேன மொழி - மதுரமாகிய சொற்களை, கிளக்கல் அற்ற - பேசுதலொழிந்தன, ஏ-று. ஏ - அசை.

(க - து.) கிளிகள் பெண்கள் கற்பிக்காமையால் பேசுதலற்றன என்பதாம். (௫௬)

வாம்பரியிழந்தனவாவுமைங்கதி
யேம்பலின்விழவணியிழந்தகோமறு
காம்பல்வாயிழந்தனமுருவலாரகிற்
றீம்புகையிழந்தனசெம்பொன்மாடமே.

(இ - ள்.) வாம் பரி - தாவுகின்ற குதிரைகள், வாவும் - தாவுகின்ற, ஐங்கதி - ஐவகை நடையினையும், இழந்தன - நீங்கி விட்டன; ஏம்பலின் - வருத்தத்துடன், விழவு அணி - உச்சவாலங்காரத்தை,

கோ மறுகு - ராஜவீதிகள், இழந்த - நீங்கிவிட்டன, ஆம்பல் - செவ்வல்லி மலர்போன்ற, வாய் - (ஸ்திரீகளுடைய) வாய்கள், முறுவல் - புன்சிரிப்பை, இழந்தன - நீங்கிவிட்டன, ஆர - நிறைந்த, அகில் - அகிற்கட்டையினது, தீ - இனிமையாகிய, புகை - புகையை, செம்பொன் - சிவந்த பொனனுடையத, மாடம் - உபரிகைகள், இழந்தன - நீங்கின, எ-று. ஏ-அசை

(க - து.) குதிரைகள் சதியிழந்தன, இராஜவீதி திருவிழா விழந்தன, மாதர்வாய் நகை யிழந்தன, மாடங்கள் புகை யிழந்தன என்பதாம். (சஎ)

பாவலரிழந்தனர்பரிசிலுணபலி
தேவருமிழந்தனர்கலியின்றீமையாற
காவலனெடிபடுகானிலேகலால
யாவருமிழந்தனரினபமெனபவே

(இ - ள்.) பாவலர் - புலவர்கள், பரிசில் - தியாகத்தை, இழந்தனர் - நீங்கினார்கள், உண - உண்ணப்பட்ட, பலி - அவியை, தேவரும் - தேவர்களும், இழந்தனர் - இழந்து விட்டார்கள், கலியின - கலிபுருஷனுடைய, தீமையால - பொல்லாங்கினால, காவலன் - நளமகாராசன, நெடி படு - செவ்வண்டையுடைய, கானில் - காட்டில், ஏகலால் - போதலினால், யாவரும - எல்லோரும், இனபம் என்ப - இன்பமென்பனவற்றை, இழந்தனர் - நீங்கினார்கள், எ-று. ஏ-அசை.

(க-து.) பாவலர் தியாக மிழந்தார்கள், தேவர்க ளவியிழந்தார்கள், யாவரு மினப மிழந்தார்கள் என்பதாம். (சஅ)

அறந்தலைமயங்கினபொய்மையார்ந்தன
மறந்தலையெடுத்தனதீமைமலகின
திறம்பினமனுநெறிதவங்கடீர்ந்தன
நிறைந்தனவஞ்சனைநேமியெங்குமே.

(இ - ள்.) நேமி எங்கும் - உலகமெங்கும், அறம் - தருமம், தலை மயங்கின - தலைதடுமாறின; பொய்மை - அசத்தியம், ஆர்ந்தன - நிறைந்தன, மறம் - பாவங்கள், தலை எடுத்தன - வளர்ந்தன; தீமை - துர்நடத்தைகள், மலகின - அதிகரித்தன, மனு நெறி - இராஜதருமம், திறம்பின - கெட்டன, தவங்கள் - தவசுகள், தீர்ந்தன - நீங்கின; வஞ்சனை - வஞ்சனைகள், நிறைந்தன - நிறம்பின, எ-று.

(க - து.) தரும நீங்கின, பொய் நிறைந்தன, பாவங்கள் வளர்ந்தன, துன்மார்க்க நிறைந்தன, இராஜதருமங் கெட்டன, தவங்கள் நீங்கின, வஞ்சனை நிறைந்தன என்பதாம். (சகூ)

நகர்நீங்குபடலம் முற்றிற்று.

---

செய்யுள் கoகக.

---

# கான்புகுபடலம்.

[இப்படலத்தால் தன்னகரைவிட்டு நீங்கிய நளமகாராஜன் பிறாநகரில் தன்னிலைதப்பிச் செல்வதில் விருப்பமின்றிக் கானகம் புகுதல் சொல்லப்படுகின்றது.]

கலிவிருத்தம்.

[இதுமுதல் மூன்றுபாட்டால் நளன் சென்றவிடத் துண்டாகிய சிறப்புச் சொல்லப்படுகின்றது.]

களிமயில்குனித்திடக்காலமன்றியுந்
துளிமுகில்பிலிற்றினதுணர்த்தபூங்கொடி
முளிசினைதளிர்த்தனமுகைத்தபைந்தரு
நளிகடற்றானையானடந்தகானமே.

(இ - ள்.) நளி கடல் - குளிர்ச்சிபொருந்திய சமுத்திரத்தை யொத்த, தானையான் - சேனையையுடைய நளமகாராஜன், நடந்த - சென்ற, கானம் - காட்டினில், களி மயில் - களிப்பையுடைய மயில்கள், குனித்திட - கூத்தாட, காலம் அன்றியும் - காரகாலமல்லாமலும், துளி - நீர்த்துளிகளை, முகில் - மேகங்கள், பிலிற்றின - பெய்தன, பூ - பொலிவுபொருந்திய, கொடி - கொடிகள், துணர்த்த - பூங்கொத்துகளை விட்டன; முளி சினை - உலர்ந்த கிளைகள், தளிர்த்தன - துளிர்த்தன; பைந் தரு - பசுமையாகிய விருக்ஷங்கள், முகைத்த - அரும்பின, எ-று. ஏ - அசை.

(க-து) நள னடந்தகாட்டில் மழைபெய்தன - கொடிகள் தளிர்த்தன, பட்டமரம் வளர்ந்தன என்பதாம். (க)

விள்ளருமதரிடைவெதும்பும்வெம்பரல்
கள்ளவிழ்மலரெனக்குழைந்துகாட்டின
வொள்ளழற்கதிர்சுடவுலரும்வெஞ்சுரம்
வள்ளவாய்மலர்விரிமருதமபோன்றதே.

(இ - ள்.) விள்ள அரும் - சொல்லுதற்கரிய, அதரிடை - வழியிலே, வெதும்பு - சுடாநின்ற, வெம் பரல் - வெப்பமான மணியாம் பருக்கைகள், கள் அவிழ் - தேனுடன் விரியாநின்ற, மலர் என - புஷ்பம்போல, குழைந்து - மிருதுவாய், காட்டின - காண்பித்தன; ஒள் - பிரகாசம்பொருந்திய, அழல் - அழற்றுகின்ற, கதிர் - சூரிய கிரணங்கள், சுட - தகிக்க, உலா - காய்ந்த, வெம் சுரம் - வெப்பமாகிய பாலைநிலமானது, வள்ளம் - கிண்ணம்போல, வாய் - முகத்தை யுடைய, மலர் - புட்பங்கள், விரி - மலராநின்ற, மருதம் - மருத நிலத்தை, போன்றது - ஒத்திருந்தது, எ-று. ஏ - அசை.

(க - து.) பருக்கைக்கற்கள் மலரென மிருதுவாயிருந்தன, பாலை நிலம் வயலினிலம்போ லிருந்தன என்பதாம். (உ)

ஊறுசெய்தூன்சுவைத்துடம்புவீக்கிய
வாறலைகள்வருமளியராயினர்
வேறினியுரைப்பதென்வெருவுமானொடு
மாறுகொளுழுவையுமாற்றந்தீர்ந்தவே.

(இ - ள்.) ஊறு செய்து - கொலைசெய்து, ஊன் - மாமிசத்தை, சுவைத்து - புசித்து, உடம்பு - சரீரத்தை, வீக்கிய - பருக்கச்செய்த, ஆறு அலை - வழியினிடத்திற் றழிக்கின்ற, கள்வரும் - திருடரும், அளியர் ஆயினர் - கிருபையுடைய ராயினார்கள்; வேறு - வேறாக, இனி - இனிமேல், உரைப்பது என - சொல்லுவதென்னை; வெருவும் - அஞ்சாநின்ற, ஆனொடு - பசுக்களுடனே, மாறு கொள் - பகை கொண்ட, உழுவையும் - புலியும், மாற்றம் - பகையை, தீர்ந்த - நீங்கின, எ-று. ஏ - அசை.

(க - து.) திருடர்கள் கிருபையுள்ளவாக ளானார்கள், புலியும் பசுவும் பகைநீங்கின என்பதாம். (௩)

ஆயிடையுயிர்நிகரணங்கனுளொடு
மேயதன்னகர்வயின்விசும்புபோழ்ந்துலாய்
காய்கதிர்நுழைகலாக்காவினாடல்போற்
போயினனழலுமிழ்புலவுவேலினன்.

(இ - ள்.) ஆயிடை - அந்தப் பாலைநிலத்தில், உயிர் நிகர் - தன்னுயிரையொத்த, அணங்கு அனாளொடும் - தெய்வப்பெண்ணையொத்த தமயந்தியுடனே, மேய - பொருந்திய, தன் நகர்வயின் - தன்னுடைய பட்டணத்தின்கண், விசும்பு - மேகங்களை, போழ்ந்து - பிளந்துகொண்டு, உலாய் - உலாவுகின்ற, காய் கதிர் - காயாநின்ற சூரிய கிரணமானது, நுழைகலா - நுழையக்கூடாத, காவின் - சோலையில், ஆடல் போல் - விளையாடல்போல், அழல் உமிழ் - அக்கினியைக் கக்காநின்ற, புலவு - புலால் நாற்றம்பொருந்திய, வேலினன் - வேலையுடைய நளமகாராஜன், போயினன் - நடந்தான், எ-று.

(க - து.) நளன் மனைவியுடனே சோலையில் விளையாடல் போலப் பாலையிற் போனான் என்பதாம். (௪)

அள்ளிலைப்பூணினனேகுமாற்றிடைக்
கொள்ளைவண்டினமிழிநறவுகூட்டுணும்
வள்ளவாய்மலரவிழ்வாவியங்கரைப்
புள்ளுருக்கொடுகலிபோயினனரோ.

(இ - ள்.) அள் - நெருங்கிய, இலை - இலைபோன்ற, பூணினன் - ஆபரணங்களையணிந்த நளமகாராசன், ஏகும் - போகாநின்ற, ஆற்றிடை - காட்டுவழியிலே, கொள்ளை வண்டு இனம் - மிகுதியாகிய சுரும்புக்கூட்டங்கள், இழி நறவு - பெருகாநின்ற தேனை, கூட்டுணும் - கொள்ளை கொள்ளும்படியிருக்கின்ற, வள்ளம் வாய் - கிண்ணம்போன்ற மூக்கையுடைய, மலர் - புஷ்பங்கள், அவிழ் - விரியாநின்ற, வாவி -

தடாகத்தினது, அம் கரை - அழகிய கரையினிடத்து, புள் உருக்கொடு- அன்னத்தி னுருவைக்கொண்டு, கலி - கலியன், போயினன் - சென் ருன், எ - று. அரோ - அசை.

(க - து.) சனிபகவான் அன்னத்தின் வடிவுகொண்டு போனன் என்பதாம். (ரு)

வாவியின்மருங்குநன்மணிகள்கோத்தெனத்
தூவியம்பொற்சிறைமென்புட்டோன்றலு
மோவியரெழுதருமுருவப்பைங்கொடி
காவியங்கண்ணிணைகளிப்பநோக்கினள்

(இ - ள்) வாவியின் மருங்கு - தடாகத்தினது பக்கத்தில், நல் மணிகள் - நல்ல முத்துக்களை, கோத்தது என - கோவையிட்டது போல, தூவி - தூவியென்னப்பட்ட, அம் - அழகிய, பொன் - பொற் பிரகாசம்பொருந்திய, சிறை - இறகையுடைய, மெல் - மிருதுவாகிய, புள் - அன்னப்புள்ளானது, தோன்றலும் - காணலும், ஓவியர் - சித் திரக்காரர்கள், எழுதரு - எழுதுதற்கரிய, உருவம் - வடிவத்தையு டைய, பைங்கொடி - பசுமையாகிய கொடிபோன்ற தமயந்தியான வள், காவி - நீலோற்பலத்தையொத்த, அம் - அழகிய, கண் இணை - இரண்டு நேத்திரமும், களிப்ப - சந்தோஷிக்கும்படி, நோக்கினள் - பார்த்தாள், எ - று.

(க - து.) தமயந்தி அன்னத்தைக் கண்டாள் என்பதாம். (சு)

பன்மலர்கஞலியபனிகொள்வாவியிற்
பொன்னவிர்கொடுஞ்சிறைப்புள்ளைநோக்குறூஉ
மன்னநம்மணநிலைமுடித்தவண்சிறை
யன்னமென்புள்ளினீதழகுவாய்ந்ததே.

(இ - ள்.) பல் மலர் - நானாவிதமான புஷ்பங்கள், கஞலிய - நெ ருங்கிய, பனி கொள் - குளிர்ச்சியைக்கொண்ட, வாவியில் - தடாகத் தில், பொன் அவிர் - பொன்போல பிரகாசியாநின்ற, கொடு சிறை- கொடுமையான இறகையுடைய, புள்ளை - அன்னத்தை, நோக்குறூஉ - பார்த்து, மன்ன - அரசனே! நம் மணநிலை - நம்முடைய விவாகத்தை, முடித்த - நிறைவேற்றின, வண் சிறை - வளப்பமாகிய இறகையு டைய, அன்னம் மெல் புள்ளின் - தெய்வ அன்னத்தைக் காட்டிலும், ஈது - இப்பறவை, அழகு - அழகை, வாய்ந்தது - பொருந்தியது, எ - று.

(க - து.) தமயந்தி நம்மிருவரையுங்கூட்டிய அன்னத்தைப்பார்க் கிலும் இவ்வன்னம் அழகுள்ளதென்றாள் என்பதாம். (எ)

மற்றுமோருயிரெனவளர்த்தபூவையுஞ்
சொற்றருகிள்ளையுமறப்பத்தூமணிப்
பொற்றடந்தோளினுய்பொன்னம்புள்ளினைப்
பற்றிநீதருகெனப்பணித்துக்கூறினள்.

(இ - ள்.) மற்றும் ஓர் - மற்றொரு, உயிர் என - உயிர்போல, வளர்த்த - வளர்த்த, பூவையும் - நாகணவாய்ப்புள்ளையும், சொல் - மொழிகளை, தரு - சொல்லாநின்ற, கிள்ளையும் - கிளிப்பிள்ளைகளையும், மறப்ப - மறக்கும்படி, தூ மணி - பரிசுத்தமாகிய ரதகவடமணிந்த, பொன் - அழகிய, தடம - விசாலமாகிய, தோளினய் - புயத்தையுடைய அரசனே!, பொன் - பொன்போன்ற, அம் - அழகிய, புள்ளினை - அன்னத்தை, பற்றி - பிடித்து, நீ தருக என - நீ கொடுப்பாயாக வென்ன, பணிந்து - வணங்கி, கூறினள் - சொன்னாள், எ-று.

(க-து.) தமயந்தி நளனைநோக்கி அன்னத்தைப் பிடித்துத்தரச் சொன்னாள் என்பதாம். (அ)

ஓர்துகிலிருவருமுடுத்துமற்றையோர்
காரகிற்றீமபுகைகமழுநீவிகொண
டேர்குடியிருந்தனவிலைகொள்பூணினய்
வார்சிறைபுள்ளினைவளைததுமென்றனள்.

(இ - ள்) ஓர் துகில் - ஓராடையை, இருவரும் - நாமிரண்டு பேரும், உடுத்து - தரித்துக்கொண்டு, மற்றை ஓர் - மற்றொரு, கார் அகில் - கறுத்த அகிற்கட்டையினது, தீ - இனிமையாகிய, புகை - தூமம், கமழும் - பரிமளியாநின்ற, நீவி கொண்டு - ஆடையைக் கொண்டு, ஏர் குடியிருந்தது அன்ன - அழகு வாசஞ்செய்வதை யொத்த, கொள் - தழைத்தலைக்கொண்ட, பூணினய - ஆபரணங்களையுடைய, அரசனே!, வார் சிறை - நீண்ட இறகையுடைய, புள்ளினை - அன்னத்தை, வளைததும் என்றனள் - பிடிப்போமென்று சொன்னாள், எ-று.

(க - து.) ஒருவஸ்திரத்தை இருவருந் தரித்துகொண்டு மற்றொருவஸ்திரத்தா லன்னத்தைப பிடிப்போ மென்றாள் என்பதாம்.()

கருந்தடங்கண்ணிதனுள்ளங்காமுறத்
திருந்துவேற்றடக்கையான்றுகிலிற்சேர்த்தலும்
பொருந்தியதுகிலொடும்வஞ்சம்பூண்டெதி
ரிருந்தபுள்ளந்தரத்தெழுந்துபோயதே.

(இ - ள்.) கரு - கறுத்த, தடம் - விசாலமாகிய, கண்ணிதன் - கண்களையுடைய தமயந்தியினது, உள்ளம் - மனது, காமுற - இச்சிக்க, திருந்து - திருத்தமாகிய, வேல - வேலையேந்திய, தடம் - பருத்த, கையான் - கையையுடைய அரசன், துகிலில் - ஆடையில், சேர்த்தலும் - சேர்த்தவளவில், பொருந்திய - தன்மேற்சேர்ந்த, துகிலொடும் - ஆடையோடும், வஞ்சகம் பூண்டு - கபடத்தைக்கொண்டு, எதிர் இருந்த - எதிரிலிருந்த, புள் - அன்னம், அந்தரத்து - ஆகாசத்தில், எழுந்து - எழும்பி, போயது - போயிற்று, எ-று. ஏ-அசை.

(க - து.) நளன் சீலையை அன்னத்தின்மேற் போட அன்னஞ் சீலையைக் கொண்டுபோயிற்று என்பதாம். ([illegible])

புனைதுகில்கவர்ந்துபைம்பொன்னிறத்தபுள்
பனியிருவிசும்பினிற்பறத்தல்கண்டலு

மனைவிதனருந்துயர்நோக்கிமாழ்கினன்
வினைவலியிதுவெனமெலிவுநீக்கினன்.

(இ - ள்.) புனை துகில் - தரித்திருந்த ஆடையை, கவர்ந்து - கிரகித்துக்கொண்டு, டைம் பொன் நிறத்த - பசுமையாகிய பொன் போன்ற நிறத்தையுடைய, புள் - அன்னமானது, பனி - குளிர்ந்த, இரு விசும்பினில் - விசாலம் பொருந்திய ஆகாசத்தினில், பறத்தல் - பறந்துபோதலை, காண்டலும் - கண்டவளவில், மனைவிதன் - மனைவியினது, அரு துயர் நோக்கி - அரிதான துக்கத்தைப்பார்த்து, மாழ்கினன் - வருந்தினன்; வினை வலி - ஊழ்வினையினது உறுதி, இது என - ஈதென்று, மெலிவு நீக்கினன் - துன்பத்தைப் போக்கினன், எ-று.

(க - து.) நளன் விதிவசமிதுவென்று எண்ணினன் என்பதாம்.

கல்லதர்நடந்துபூங்கமலம்வாட்டிய
மெல்லடிசிவப்புறலவீழிவாய்மயிற்
கொல்லுமேயெனமனமுருகியுந்தையூர்
செல்லுநீணெறியிதுவென்றுசெப்பினன்.

(இ-ள்.) கல் அதர் நடந்து - மலைவழியில் நடந்து, பூ - அழகிய, கமலம் - தாமரைமலரை, வாட்டிய - கெடுத்த, மெல் அடி - மிருதுவான பாதமானது, சிவப்பு உறல் - சிவத்தல், வீழி - விழுதிப்பழம் போன்ற, வாய் - அதரத்தையுடைய, மயிற்கு - மயில்போன்ற தமயந்திக்கு, ஒல்லுமே என - கூடுமோவென்று, மனம் உருகி - மனது இளகி, உந்தை ஊர் - உன் தகப்பனது குண்டின புரத்துக்கு, செல்லும் - போகாநின்ற, நீள் நெறி - நீண்ட மார்க்கம், இது என்று - இது வென்று, செப்பினன் - சொன்னன், எ-று.

(க - து.) நளன் தமயந்திக்கு உன்தகப்பனூருக்கு போகும் வழி இதுவென்றான் என்பதாம். (கஉ)

ஆங்கதுகேட்டலுமழுதுமாழ்கிநொந்
தீங்குநின்னடியனேனைபிழைத்ததியாதுகொல
பூங்கழற்குரிசிலோயபொறியிலேன்றனை
நீங்கவோவிவ்வுரைநிகழ்த்தினையென்றாள்.

(இ - ள்.) ஆங்கு - அவ்விடத்தில், அது கேட்டலும் - அந்தச் சொல்லைக் கேட்டவளவில், அழுது-புலம்பி, மாழ்கி-வருந்தி, நொந்து - மனநொந்து, ஈங்கு - இவ்விடத்தில், நின் அடியனேன் - உனக்கு அடிமைத்திறம் பூண்ட யான், பிழைத்தது யாது - செய்தகுற்றம் ஏது; பூ - அழகிய, கழல் - வீரக்கழலை யணிந்த, குரிசிலோய் - அரசனே!, பொறியிலேன்றனை - அறிவில்லாத என்னை, நீங்கவோ - பிரியவோ, இவ்வுரை - இந்த வசனத்தை, நிகழ்த்தினை - சொன்னாய், என்றாள் - என்று (தமயந்தி) சொல்லினள், எ-று.

(க - து.) தமயந்தி என்னைவிட்டு நீங்கவோ இப்படிச் சொன்னீரென்றாள் என்பதாம். ([illegible])

செயிரறுமதிமுகம்பசப்பச்சிந்தைநொந்
தயர்வொடுகண்பனித்தவலங்கோடலை
மயிலியற்பேதைநிற்பிரிந்துவாழ்வெனே
யுயிர்பிரிந்தாலுடலுய்யுமோவென்றான்.

(இ-ள்.) செயிர் அறு - குற்றமற்ற, மதி - சந்திரன்போன்ற, முகம் - வதனமானது, பசப்ப - பசந்துபோக, சிந்தை நொந்து - மனநொந்து, அயர்வொடு - சோர்வுடனே, கண் பனித்து - கண்ணீர்விட்டு, அவலம் கோடலை - துன்பத்தைக்கொள்ளாதே, மயில் இயல் பேதை - மயில் போலும் சாயலையுடைய தமயந்தியே!, நின் பிரிந்து - உன்னைப்பிரிந்து, வாழ்வெனே - வாழ்வேனோ, உயிர் பிரிந்தால் - உயிர்நீங்கினால், உடல் உய்யுமோ - தேகம் பிழைக்குமோ, என்றான் - என்று (நளமகாராசன்) சொன்னான், எ-று.

(க-து.) நளன் தமயந்தியே உன்னைப்பிரிந்து வாழேனென்றான் என்பதாம். (கஎ)

முருகுயிர்த்தளியினமூசுபூங்குழற்
கருகருபெருந்துயர்காண்கிலேனெனாப்
பரிநெடுந்தேரொடும்பரிதிவானவ
னுரவுநீர்சுருங்கடலொளித்திட்டானரோ.

(இ-ள்.) முருகு உயிர்த்து - தேனைப்பெற்று, அளி இனம் - வண்டுக்கூட்டங்கள், மூசு - மொய்க்கின்ற, பூ - பூவையணிந்த, குழல் - கூந்தலையுடைய தமயந்தியினது, கருது அரு - நினைத்தற்கரிய, பெரு துயர் - பெரிதாகிய துன்பத்தை, காண்கிலேன் எனா - பார்க்க மாட்டேனென்று, பரி - குதிரைகட்டிய, நெடு - நெடிய, தேரொடும் - ரதத்துடனே, பரிதி வானவன் - சூரியதேவன், உரவு நீர் - உவர் நீரையுடைய, கரு கடல் - கறுத்த சமுத்திரத்தில், ஒளித்திட்டான் - மறைந்தான், எ-று. அரோ-அசை.

(க-து.) சூரியன் அஸ்தமானமாகினான் என்பதாம். (கஅ)

மாயிருஞாலமும்வானுநுங்கிய
பாயிருட்கங்குலிற்பாவைதன்னொடும்
போயரின்முற்றியபொலிவின்மண்டப
மேயினனரசர்கோன்விதியின்கொட்பினால்.

(இ-ள்.) மா - மகத்தாகிய, இரு ஞாலம் - பெரிய பூமியையும், வானும் - ஆகாயத்தையும், நுங்கிய - விழுங்கிய, பாய் இருள் - பரவிய இருட்டையுடைய, கங்குலில் - இராத்திரியில், பாவைதன்னொடும் - தமயந்தியுடனே, போய் - சென்று, அரில் முற்றிய - அழுக்கு நிறைந்த, பொலிவு இல் - சிறப்பற்ற, மண்டபம் - ஓர் மண்டபத்தை, அரசர் கோன் - ராசாதிராசனாகிய நளமகாராசன், விதியின் கொட்பினால் - விதியினது திரிபினால், மேயினன் - அடைந்தான், எ-று.

(க-து.) நளன் தமயந்தியுடன் ஓர்மண்டபத்தைச் சார்ந்தான் என்பதாம். (கசு)

இன்னகிற்புகைதவழ்ந்தினிதின்மென்மைய
பன்மலரமளிமேற்பள்ளிகொள்பவர்
புன்னுனைபரந்தவெம்பொடிகொள்பார்மிசை
மன்னினரூழினும்வலிதியாவதே

(இ-ள்.) இன அகில் புகை - இனிதாகிய அகிற்றூமம், தவிழ்ந்து - ஊர்ந்து, இனிதின் - இன்பமாய், மென்மைய - மிருதுவாகிய, பல் மலர் - நானாவிதமான புஷ்பமபரப்பிய, அமளிமேல் - படுக்கையின்மீது, பள்ளி கொள்பவர் - சயனிப்பவராகிய (தமயந்தி நளனிருவரும்), புல் நுனி பரந்த - புல்லினது, நுனிகள் பரவிய, வெம் - வெவ்விய, பொடி கொள் - புழுதியைக்கொண்ட, பார்மிசை - பூமியின்மேல், மன்னினர் - படுத்தார்கள், (ஆதலால்), ஊழினும் - ஊழினைக்காட்டிலும், வலிது - வன்மையையுடையது, யாவது - யாது, எ-று. ஏ-அசை.

(க-து.) மெல்லணையிற்படுத்த நளனும் தமயந்தியும் புல்லணையிற் படுத்தார்கள் என்பதாம். (கஎ)

அனிச்சமென்புதுமலரமளிமேயினும்
பனித்திடுமெய்யெனப்பதைத்துவாடுவேன்
கனிப்படுகிளவிவெம்பொடியிறகண்படி
லினித்தமியேனுயிரெங்ஙனுய்யுமே.

(இ-ள்.) அனிச்சம் - அனிச்ச விருக்ஷத்தினது, மெல் - மிருதுவாகிய, புது மலர் - புதிய மலரையுடைய, அமளி - மெத்தையிலே, மேயினும் - படுத்தாலும், மெய் - சரீரமானது, பனித்திடும் என - வருந்துமென்று, பதைத்து - துடித்து, வாடுவேன - சோர்வேன், கனி படு கிளவி - பழச்சுவைபொருந்திய வசனத்தையுடைய தமயந்தி, வெம் பொடி - வெவ்விய புழுதியில், கண்படில் - நித்திரை செய்யில், இனி - இனிமேல், தமியேன் உயிர - தனியாகிய எனனுயிர, எங்ஙன் - எப்படி, உய்யும் - பிழைக்கும், எ-று. ஏ-அசை.

(க-து.) நளன தமயந்தி புறபுழுதியிலே நித்திரைசெய்ய என்னுயி ரெப்படி பிழைக்கும் என்றான என்பதாம். (கஅ)

கண்ணகன்புவிக்கெலாங்களைகணாகிய
தண்மதிநெடுங்குடைவிதர்ப்பனூழ்குழ
னண்ணருமித்துயருழந்துநணணுமே
லெண்ணின்மற்றியார்துயரெய்திடாரென்றான்.

(இ-ள்.) கண் அகல் - இடமகன்ற, புவிக்கெலாம் - பூமிக்கெல்லாம், களைகணாகிய - ஆதாரமாகிய, தண் மதி - குளிர்ந்த சந்திரன் போன்ற, நெடு குடை - நீண்ட குடையையுடைய, விதர்ப்பன் - விதர்ப்பதேசத்தையாளும் வீமராசனின்ற, தாழ் குழல் - தமயந்தி

யானவள், நண்ணு அரு - பொருந்துதற்கரிய, இ துயா - இந்தத்துன் பத்தை, உழந்து - வருநதி, நண்ணுமேல் - அடையுமாஞல், எண்ணின் - நினைக்குமிடத்தில், யாா - எவாகள், துயா - துன்பத்தை, எய்திடார் - அடையார்கள், என்ருன் - என்றுசொன்ஞன், எ-று,

(க - து.) நளன் துன்பமடையாதவா யாா என்ருன் என்பதாம்.()

வளைகடலுலகினின்மன்னர்தாடொழ
வுளையரிப்பூந்தவிசுறையுமெம்பிரான்
முளரியாலெங்கணுமுற்றுமண்டபத்
தெளியர்போலிருததியெனலென்றுவிம்மிஞள்.

(இ - ள்.) வளை கடல் உலகினில் - சமுத்திரஞ் சூழ்ந்த உலகத்தில், மன்னா - அரசாகள், தாள் தொழ - பாததில் வணங்க, உளை அரி - புறமயிாையுடைய சிங்கங் தாஙகிய, பூ தவிசு - அழகுபொருந்திய ஆசனததில், உறையும் - இருக்கும், எமபிரான - என் காததன், முளரியால் - முட்செடிகளால், எங்கணும் - எவ்விடத்தும், முறறும் - நிறையப்பெற்ற, மண்டபதது - மண்டபததில், எளியா போல் - வறியோர் போல், இருத்தி எனறு - இருக்கிறுய என்றுசொல்லி, விம்மிஞள் - அழுதாள், எ-று. கொல்-அசை.

(க - து.) தமயநதி நளனைப்பாாதது ஏழைகளைபபோ லிருக்கிரு யென் றழுதாள என்பதாம். (உ0)

தடங்கணீர்துடைத்துமெய்தைவந்தாயிழை
நடுங்கலென்ருற்றிடனள்ளியாமதது
மடங்கலபோனமொய்ம்புடைமன்னர்மன்னவன்
கொடுங்கைமேற்றுயின்றனள்பொன்னங்கொம்பஞள்

(இ - ள்.) தடம் கண் - விசாலமாகிய கண்ணினின்றுவரும், நீா துடைதது - சலததை மாற்றி, மெய் தைவந்து - தேகத்தைத் தடவிக்கொடுததது, ஆயிழை - பெண்ணே, நடுஙகல என்று - அஞ்சாதேயென்று, ஆற்றிட - தேற்ற, நளள யாமத்து - அாத்தராத்திரியில், மடங்கல் போல் - சிங்கம்போல், மொய்ம்பு உடை - பலத்தையுடைய, மன்னா மன்னவன - அரசாக்கரசஞன நளமகாராசனுடைய, கொடுங் கைமேல் - வளைந்தகையின்மீது, பொன் அம் கொம்பஞள - அழகிய பொற்கொம்பையொத்த தமயந்தி, துயின்றனள் - நித்திரை செய்தாள், எ-று.

(க - து.) தமயந்தி நளன்கைமேல் சிரசைவைத்து நித்திரைசெய்தாள் என்பதாம். (உக)

கான்புகுபடலம் முற்றிற்று.

---

ஆ செய்யுள் - ௬0௩௧.

---

# பிரிவுறு படலம்.

[இப்படலத்தால் கானிடத்துச்சென்ற நளமகாராசன் அவ்விடத்தில் தமயந்திபடும் பெருந்துன்பத்தைக் கண்டு சகிக்காதவனாய் அதற்குக் காரணந் தானாகையால் தான்பிரிந்தால் அவள் சிறுதுயருடன் அருகிலுள்ள தன் தாய்வீட்டை யடைவாளென றெண்ணிப் பிரிவுறல் சொல்லப்படுகின்றது ]

## கலிவிருத்தம்

விண்படுமின்னெனமிளிருமாகமு
மண்படத்துயரொருவடிவுகொண்டெனக்
கண்படுகோதையைநோக்கிக்காவலன
புண்படுநெஞ்சொடும்புலம்பியெண்ணினான்.

(இ - ள்.) விண் படு - மேகத்திலுண்டாகிய, மின் என - மின்னல்போல், மிளிரும் - பிரகாசிக்கும, ஆகமும் - சரீரமும், மண் படபூழுதியடைய, துயர் - துன்பம, ஒரு வடிவம் - ஒருவடிவத்தை, கொண்டு என - கொண்டதுபோல, கண்படு கோதையை - நித்திரை செய்யாநின்ற தமயந்தியை, நோக்கி - பார்த்து, காவலன் - நளமகாராஜன், புண் படு நெஞ்சொடும - வருத்தமுற்ற மனதுடனே, புலம்பி - அரற்றி, எண்ணினன - ஆலோசித்தான, எ-று.

(க - து.) நளன் தமயந்தியைப்பார்த்து அழுது எண்ணினான் என்பதாம். (க

நண்ணருங்கானெலாந்தொடர்ந்துநண்ணுமேற்
கண்ணினாலிவடுயர்காணலாவதே
பெண்ணருங்கலத்தினைப்பிரியிற்றந்தையூ
ரண்ணியதவ்வுழியடைந்துவைகுமால்.

(இ - ள்.) நண் அரு கான் எலாம் - பொருந்துதற்கரிய காடுமுழுதும், தொடர்ந்து - பின்றொடர்ந்து, நண்ணுமேல் - அடையுமானால், கண்ணினால் - கண்களினால், இவள் துயர் - இத்தமயந்தியினது துன்பத்தை, காணலாவதே - பார்க்கக்கூடுமோ, பெண் அரு கலத்தினை - பெண்களுக்கரிய ஆபரணமபோன்ற இவளை, பிரியில் - நீங்கில், தந்தை ஊர் - பிதாவினுடைய நகரமானது, அண்ணியது - சமீபமாயது; அவ்வுழி - அந்நகரத்தினிடத்து, அடைந்து - சேர்ந்து, வைகும் - இருப்பாள், எ-று. ஆல்-அசை

(க - து.) இவளைப் பிரிந்தால் தாய்வீட்டுக்குப் போவாள் என்பதாம். (உ)

விரிமலர்ப்பூங்குழல்விழிக்கிலீங்கிவட்
பிரிகுவதரிதினிப்பிரியவெண்ணிலோ

வொருதுகிலாயதித்துகிலையூறுசெய்
கருவியிங்கேதெனக்கருத்தினெண்ணினான்.

(இ-ள்.) விரி மலா - மலர்ந்த புட்பத்தையணிந்த, பூ - பொலிவு பெற்ற, குழல் - கூந்தலையுடைய தமயந்தி, விழிக்கில் - கண்விழித்துக்கொண்டால், ஈங்கு - இவ்விடத்தில், இவள் - இவளைவிட்டு, பிரிகுவது - நீங்குவது, அரிது - கூடாது, இனி பிரிய - இனி மேல் (இவளை) நீங்க, எண்ணிலோ - ஆலோசிக்கிலோ, ஒரு துகில் ஆயது - (இருவருக்கும்) ஓராடையாயிருக்கின்றது, இ துகிலை - இவ்வஸ்திரத்தை, ஊறு செய் கருவி - துணிக்கின்ற ஆயுதம், இங்கு - இவ்விடத்தில், ஏது என - யாதென்று, கருத்தின - மனதில், எண்ணினான் - ஆலோசித்தான், எ-று.

(க - து.) தமயந்தி விழித்தால் பிரிதலரிது, வஸ்திரமொன்று, இதையறுக்கக் கருவியோயில்லையென் றெண்ணினை என்பதாம். (கூ)

எண்ணியதுணர்ந்திவாப்பிரிப்பமுன்னமே
கண்ணியவஞ்சககலியும்வாளதாய்
நண்ணிமுன்கிடத்தலுமெடுத்துநாமவே
லண்ணலுந்துகினடுவரிந்திட்டானரோ.

(இ - ள்.) எண்ணியது உணர்ந்து - ஆலோசித்ததை யறிந்து, அவா பிரிப்ப - அவ்விருவரையும பிரிகக, முனனமே கண்ணிய - முன்னமே கருதிய, வஞ்சகம் கலியும் - கபடத்தையுடைய கலிபுருஷனும், வாளது ஆய - வாளாகி, நண்ணி - பொருந்தி, முன் - எதிரில், கிடத்தலும் - இருந்த அளவில், எடுத்து - கையிலெடுதது, நாமம் வேல் - அச்சத்தைத்தரும் வேலையுடைய, அண்ணலும் - நளனும், துகில் - வஸ்திரத்தை, நடு - மததியில், அரிந்திட்டான் - அரிநதான், எ-று. அரோ - அசை.

(க - து.) சனி வாள்போ லெதிரிற்கிடக்க நளன் அதையெடுத்து வஸ்திரததை யரிநதான எனபதாம். (சு)

சில்லரிநெடுங்கணூடெருளுறுவகை
மெல்லெனகொடுங்கையினீக்கிவெய்துயிர்த்
தொலலையிலுயிர்விடுமுடம்புபோன்மென
வல்லலங்கடலிடையழுந்தினனரோ.

(இ - ள்.) சில் - சிலவாகிய, அரி - அரிபரந்த, நெடு கணள் - நீண்டகண்களையுடைய தமயந்தி, தெருள் உறு வகை - விழிக்காதவிதமாய், மெல் என - மிருதுவாக, கொடுங்கையின் நீக்கி - வளைந்தகையினின்றும் அகற்றி, வெய்து உயிாத்து - பெருமூச்சுவிட்டு, ஒல்லையில் - சீக்கிரத்தில், உயிர் விடும் - பிராணனைநீக்கும், உடம்பு போன்ம் என - தேகத்தைப்போல, அல்லல் கடலிடை - துக்கசாகரத்தில், அழுந்தினன் - மூழ்கினன், எ - று. அம், அரோ - அசை.

(க - து.) நளன் தமயந்தியைக் கையைவிட்டு நீக்கி வருந்தினான் என்பதாம். (எ)

எழுமகன்றாலினியென்கொலாமென
வழுமுயிர்துறந்தெனவவசமேற்கொளா
விழுமிவட்காக்கெனமெலிந்துதெய்வதந்
தொழுமினையனபலதுன்பமெய்துமால்.

(இ - ள்.) எழும் - எழுந்திருப்பான், அகன்றால் - நீங்கினால், இனி - இனிமேல், என கொல் ஆம் என - என்னவாகுமோவென்று, அழும் - புலம்புவான், உயிர் துறந்தது என - உயிர் நீங்கினவன்போல, அவசம் மேற்கொளா - பரவசத்தை மேற்கொண்டு, விழும் - விழுவான், இவள் - இவளை, காக்க என - இரக்ஷிக்கவென்று, மெலிந்து - வாடி, தெய்வதம் - வனதேவதைகளை, தொழும் - வணங்குவான்; இனையன - இவைபோன்ற, பல - அநேகமான, துன்பம் - துயரங்களை, எய்தும் - அடைவான, எ - று ஆல் - அசை.

(க-து.) நளன எழுவான், அழுவான், விழுவான், தமயந்தியைக் காக்க வனதேவதைகளைத தொழுவான என்பதாம். (சு)

செல்லும்வெந்துயரொடுஞ்செல்லக்காலெழா
தொல்லையின்மீளுமவெய்துயிர்க்குமொண்ணுதல்
கல்லதரிடைத்தனியேகிற்பேய்க்கணங்
கொல்லுமென்றாருயிர்குழைந்துசாம்புமால்.

(இ - ள்) செல்லும - நடப்பான், வெம் துயரொடும் - வெவ்விய துக்கத்துடன், செல்ல - நடக்க, கால எழாது - அடியெழும்பாமல், ஒல்லையில் - சீக்கிரத்தில், மீளும் - திரும்புவான், வெய்து உயிர்க்கும் - பெருமூச்சுவிடுவான், ஒள் நுதல் - ஒளளிய நெற்றியையுடைய தமயந்தி, கல் அதரிடை - மலைவழியில், தனி ஏகில் - தனியே செல்வாளானால், பேய் கணம் - பிசாசுககூட்டங்கள், கொல்லும் என்று - கொன்றுவிடுமென்று, ஆர் உயிர் - நிறைந்தவுயிர், குழைநது - குழைவுற்று, சாம்பும் - வாடுவான, எ-று. ஆல் - அசை.

(க - து.) நளன் நடப்பான, திரும்புவான், பெருமூச்செறிவான், தமயந்தியைப் பேய் கொல்லுமென்று தளாவான் என்பதாம்.

இது தன்மை நவிற்சியணி. (எ)

ஆயிடையின்னணம்வருந்தியன்புகூர்
வேயுறழ்தோளியைப்பிரிந்துவெஞ்சின
மாயவெங்கொடுங்கலிவயத்தனாதலிற்
போயினன்பித்தரிற்பொருவில்வாய்மையான்.

(இ - ள்.) ஆயிடை - அவ்விடத்தில், இன்னணம் வருந்தி - இப்படியாகத் துன்புற்று, அன்பு கூர - ஆசைமிகுந்த, வேய் உறழ் - மூங்கிலையொத்த, தோளியை - தோளையுடைய தமயந்தியை, பிரிந்து - நீங்கி, வெம் சினம் - வெவ்விய கோபத்தையும், மாயம் - வஞ்சனையையும், வெம் - குரூரமான, கொடு - கொடுமையையுடைய, கலி - கலியனுக்கு, வயத்தன் ஆதலில் - வசப்பட்டவனாதலால், பொருவில்

வாய்மையான் - ஒப்பற்ற சத்தியத்தையுடைய நளன், பித்தரின் - பித்தனைப்போல், போயினன் - போனான், எ-று.

(க - து.) நளன் பித்தனைப்போல் போனான் என்பதாம். (அ)

நள்ளிருட்போதுவெங்கானினாமவே
லள்ளிலைப்பூணினனகன்றுபோதலும்
விள்ளருந்துயரொடுமெலிந்துகண்படும்
பிள்ளைமானோகிதன்செயகைபேசுவாம்.

(இ - ள) நள இருள போது - நடுராததிரியில், வெம் கானில் - வெவ்வியகாட்டில், நாம வேல் - அசசததைசசெய்யும் வேலையும், அள் இலை - கூாமைபொருநதிய தொஙகலையும், பூணினன் - ஆபரணத்தையுமுடைய நளமகாராசன, அகனறு போதலும் - நீங்கிப் போனவளவில, விள் அரு துயரொடு - நீங்குதற்கரியதுனபத்துடனே, மெலிந்து - நைந்து, கண்படு - நிததிரைசெயகினற, பிள்ளை மான் - மான்கன்றுபோன்ற, நோகிதன் - கணகளையுடைய தமயந்தியினது, செய்கை - நடக்கையை, பேசுவாம் - சொல்லுவோம், எ-று.

(க - து.) புராணிகா தமயநதி செய்கையைச் சொல்லுவாமென்றா என்பதாம். (கூ)

நீடியதுயில்சிறிதுணர்ந்துநேரிழை
யாடகத்தொடிகைகயாலணைககககாண்கிலா
ளூடினள்பதைததனளுயிர்ப்புவீங்கின
டேடினள்காந்தளஞ்செங்கைநீட்டியே.

(இ - ள்.) நீடிய துயில் - மிகுந்த நித்திரை, சிறிது உணர்ந்து - கொஞ்சந்தெளிந்து, நேரிழை - தமயந்தி, ஆடகம் தொடி கையால் - பொன்னாற்செய்த வளையலணிந்த கைகளால, அணைக்க - தழுவ, காண்கிலாள் - காணாதவளாய், ஊடினள் - பிணங்கினாள்; பதைத்தனள் - துடிததாள், உயிாபபு வீங்கினள் - பெருமூச்சுவிட்டாள்; காந்தள் - காந்தள்மலரையொதத, அம் - அழகிய, செங்கை - சிவந்த கையை, நீட்டி - நீட்டி, தேடினள் - தேடினாள, எ-று. ஏ-அசை.

(க - து.) தமயந்தி தன்கைகளால் நளனையணைக்கக் காணாதவளாய்ப் பிணங்கினாள், துடிததாள், பெருமூச்சுவிட்டாள், கையாற்றடவினாள் என்பதாம்.

இது தன்மைநவிற்சியணி. (க0)

ஆயிடைகாண்கிலாதழுங்கிச்செங்கடை
பாயரிநெடுங்கணீரருவிபாய்தரத்
தூயமென்மலர்க்கரநெரித்துத்துண்ணென
வாய்வெரீஇயால்வயிறதுக்கிமாழ்கினாள்.

(இ - ள்.) ஆயிடை - அவ்விடத்தில், காண்கிலாது - (நளனைக்) காணாமல், அழுங்கி - வருந்தி, செம் கடை - சிவந்த கடையையுடைய,

பாய் - பரவிய, அரி - அரிகளையுடைய, நெடு கண் - நீண்ட கண்ணி னின்றும், நீர் அருவி பாய்தர - நீரவெள்ளம் ஒழுக, தூய - பரி சுத்தமாகிய, மெல் - மிருதுபொருந்திய, மலர் கரம் நெரித்து - தாம ரைமலர்போன்ற கைகளை நெரித்து, துண் என - திடுக்கென்று, வாய் வெரீஇ - கூச்சலிட்டு, ஆல் - ஆலிலைபோன்ற, வயிறு - வயிற்றை, அதுக்கி - பிசைந்து, மாழ்கினள் - மயங்கினள், எ-று.

(க - து.) தமயந்தி நளனைக்காணுது கண்ணீரொழுகக் கைகளை நெரித்துக் கூச்சலிட்டு வயிற்றைபபிசைந் தழுதாள் எனபதாம். (கக)

தெளித்தபூம்பள்ளியிற்சிறிதுநீங்கினு
மளப்பருந்துயரொடுமலலமெய்துவேன்
றளிப்பெயற்கங்குலிற்றமியண்மாழ்குற
வொளித்துநீதனிவிளையாடிலுய்வனே.

(இ - ள்.) தெளிதத பூ பள்ளியில் - புஷ்பஙகளைப் பரப்பிய சய னத்தில், சிறிது - கொஞ்சம், நீஙகினும் - விலகினுலும, அளப்பு அரு துயரொடும் - அளவிடுதறகரிய துனபததுடன, அவலம எய்துவேன் - வருத்தத்தை அடைகின்ற யான், தளி பெயல கங்குலில் - பனிததுளி துளிக்காநினற இராததிரியில, தமியன - தனித்தவளாய், மாழ்குற - வருந்த, ஒளிதது நீ - நீ மறைநது, தனி விளையாடில் - தனியாய் விளை யாடினல், உய்வனே - யான் பிழைபபனே, எ-று.

(க - து.) மலரணையிற் பிரியிற் சகியாத நான் நீயொளித்து விளை யாடினுற் பிழைப்பனே என்றுள என்பதாம். (கஉ)

கொச்சகக்கலிப்பா

கான்றாருயிரொழுகக்கண்ணீர்கவுளலைப்ப
வூன்றோய்கணைபட்டுழலும்பிணையொத்தேன்
மான்றேரரசர்முடியுழுதவார்கழற்காற் [லையே.
றோன்றாலென் கண்களிப்ப வின்னமுமென் றோன்றி

(இ-ள்.) கான்று - வெளிபபட்டு, ஆர் உயிர் ஒழுக - பொருந்திய உயிர் நீங்க, கண் நீர - கண்ணீரானது, கவுள் - கன்னத்தை, அலைப்ப - அலைக்க, ஊன் தோய் - தசைபடிநத, கணை பட்டு - அம்புபட்டு, உழ லும் - சுழலாநின்ற, பிணை ஒததேன் - மானுக் கொப்பானேன்; மான் தேர - குதிரைகட்டிய தேரையுடைய, அரசர - அரசருடைய, முடி உழுத - கிரீடங்கள் படிந்த, வார கழல் - நெடிய வீரக்கழலைத்தரித்த, கால் - பாதத்தையுடைய, தோன்றால் - அரசனே, என் கண் களிப்ப - என்னுடைய கண்மகிழ்ச்சியடைய, இன்னமும் - இன்னேரமட்டும், என் - என்னகாரணத்தினல், தோன்றிலை - காணப்படவில்லை, எ-று. ஏ - அசை.

(க-து.) தமயந்தி அரசனே என் கண்களுக் கின்னமுந் தோற்ற லில்லையே என்னகாரண மென்றுள் என்பதாம். (கங)

நேரலார்போரேறேநிடதத்தார்கோமானே
யாரவரைமார்பாவளியேனுயிர்க்குயிரே
காரிருள்வாயான்புலம்பக்கானகத்துவிட்டகன்றுஞ்
சாரலையாலின்னுமிதுவோநின்றண்ணளியே.

(இ - ள்.) நேரலார் - பகைவர்க்கு, போர் ஏறே - போர்செய்கின்ற சிங்கமே, நிடதத்தார் கோமானே - நிடததேசத்தார்க்கு அரசனே, ஆரம் - முத்துமாலையணிந்த, வரை மார்பா - மலைபோன்ற மார்பையுடையவனே, அளியேன் உயிர்க்கு உயிரே - ஏழையாகிய என்னுயிர்க்கு உயிர்போன்ற நளமகாராசனே, கார் இருள்வாய் - கரிய விருளினிடத்தில், யான் புலம்ப - நான் புலம்பும்படி, கானகத்து - காட்டினிடத்தில், விட்டு அகன்றும் - என்னை நீங்கியும், இன்னும் - இவ்வளவு காலஞ்சென்ற பின்பும், சாரலை - சேர்ந்தாயில்லை, (ஆதலால்) இதுவோ - இதுதானோ, நின - உன்னுடைய, தண் அளி - குளிர்ந்தவருள், எ-று. ஆல் - ஏ - அசைகள்.

(க-து.) தமயந்தி நளனைக்குறித்து இதுதானோ தயையென்றாள் என்பதாம். (கசு)

நெஞ்சமெலிவேனினதுதடந்தோளுங்
கஞ்சமலர்முகமுங்காணாதுகண்பனிப்ப
மஞ்சுதவழ்வெற்பெறிந்தவச்சிரதேரானன்றளித்த
விஞ்சைபயின்றுவிளையாட்டயருதியோ.

(இ - ள்.) நெஞ்சம் மெலிவேன - மனம் வாடுகின்ற யான், நினது தடம் தோளும - உன்னுடைய, விசாலமாகிய தோள்களையும், கஞ்சம் முகமும - தாமரைமலர்போன்ற வதனத்தையும், காணாது - பாராமல், கண் பனிப்ப - கண்ணீர்விடும்படி, மஞ்சு தவழ் - மேகங்கள் தவழ்கின்ற, வெற்பு எறிந்த - மலைகளின் (சிறகை) அறுத்த, வச்சிரதேரான - வச்சிராயுதத்தை யேந்திய இந்திரன், அன்று - (தூதுசென்ற) அன்று, அளித்த - கொடுத்த, விஞ்சை - வித்தையை, பயின்று - பழகி, விளையாட்டு அயருதியோ - விளையாடுகின்றாயோ, எ-று.

(க - து.) தமயந்தி நளனைக்குறித்து இந்திரன்கொடுத்த வித்தையால் விளையாடுகின்றாயோ என்றாள் என்பதாம். (கஎ)

ஞாலத்திருணடப்பநாட்கமலம்வாய்நெகிழ
வேலைத்திரைமுகட்டில்வெய்யோனெழுந்தனனால்
மாலைக்கதிர்வடிவேன்மன்னர்பெருமானே
காலைக்கடவகடன்கழிக்கவாராயே.

(இ - ள்.) ஞாலத்து - பூமியிலுள்ள, இருள் - அந்தகாரமானது, நடப்ப - செல்லவும், நாள் கமலம் - புதிய தாமரைமுகைகள், வாய் நெகிழ - மலரவும், வேலை - கடலினது, திரை முகட்டில் - அலைகளின் உச்சியில், வெய்யோன் - சூரியன், எழுந்தனன் - உதித்தான், (ஆத

லால்), மாலை - வெற்றிமாலை யணிந்த, கதிர - ஒளி பொருந்திய, வடி வேல் - கூரிய வேலாயுதத்தை யேந்திய, மன்னா பெருமானே - அரசர்க் கரசனுகிய நளமகாராசனே, காலை - உதயத்தில், கடவ கடன் - செய்யததக்க நித்தியகன்மததை, கழிக்க - செய்து முடிக்க, வாராயே - வரமாட்டாயோ, எ - று. ஆல - அசை.

(க - து.) சூரியனுதயமாகினை காலககருமஞ் செய்ய வாராயோ வென்றாள் எனபதாம். (கசு)

மன்னவனேயிப்பிறப்பிற்கண்டுமணந்திலனே
லின்னமொருபிறப்பிலாகுலுமேழையேன்
றன்னந்தனியேயிருந்துதவமாறறியுமுன்
பொன்னகலமுளளுருகபபுலலாதொழிவேனே.

(இ - ள்.) ஏழையேன - ஏழையாகிய யான், மன்னவனே - நளமகாராசனே, இ பிறபபில் - இநத சனனததில, கண்டு - (உன்னைக்) கண்டு, மணந்திலனேல் - சேராமற போவேனுனல், இன்னம - இனிமேல் (வருஞ் சனனஙகளுள்), ஒரு பிறபபிலாகுலும - ஒரு சனனத்திலாவது, தன்னம் தனியே இருநது - தனிததிருநது, தவம் ஆற்றியும் - தவததைச் செயதாவது, உன பொன அகலம - உனனுடைய அழகு பொருநதிய மாாபு, உள உருக - உளள முருகும்படி, புல்லாது - தழுவாமல், ஒழிவேனே - நீஙகுவேனு, எ-று.

(க - து ) இப்பிறப்பிற் புணராவிடினும் வருபிறபபிற் புணருவே னென்றாள என்பதாம். (கஎ)

வாவுமிளமான்காண்மயிலகாண்மடப்பிடிகாள்
கூவுங்கரியகுயிலகாணமென்புள்ளினங்கா
ளாவியெனமேவியகலேமெனவகன்ற
காவலன்றன்போனவழியெனக்குக்காட்டீரோ.

(இ - ள்.) வாவும் - தாவாநினற, இள மான்காள் - இளமைதங்கிய மான்களே, மயில்காள் - மயில்களே, மட பிடிகாள் - அழகிய பெட்டையானைகளே, கூவும் - கூவுகினற, கரிய குயில்காள் - கருங்குயில்களே, மெல் புள் இனங்காள் - மெனமையாகிய பறவைக்கூட்டங்களே, ஆவி என - உயிரைப்போல, மேவி - பொருந்தி, அகலேம் என - பிரியோமெனறுசொல்லி, அகனற - (இபபொழுது) நீங்கிய, காவலன்றன் - நளமகாராசன், போன வழி - சென்றவழியை, எனக்கு - என்றனுக்கு, காட்டீரோ - (நீங்கள்) காட்டீரா, எ-று.

(க - து.) மான்களே, மயில்களே, யானைகளே, குயில்களே, பறவைக் கூட்டங்களே நளமஹாராஜன் போனவழியைக் காட்டீரோ என்றாள் என்பதாம். (கஅ)

என்னுவுருகிப்பிருகண்ணீராவியுகத்
தன்னுந்தழும்பப்புலம்பித்தமியளாய்

மின்னுரிடை நுடங்கச்செல்வாள்விறல்வேந்தன் [ள்.
பொன்னாரடிநோக்கிப்பூங்கொடிபோல்வீழ்ந்தழுதா

(இ - ள்.) என்று - இப்படியென்று, உருகி - மனமுருகி, இரு கண் - இரண்டு கண்களினின்றும், நீர் ஆலி உக - நீர்த்துளிகள் உதிர, தன் நா - தன்னுடைய நாவானது, தழும்ப - தடிப்புறும்படி, புலம்பி - அரற்றி, தமியளாய் - தனித்தவளாய், மின் ஆர் இடை - மின்னலின்றன்மை நிறைந்த இடையானது, நுடங்க - துவள, செல்வாள் - நடக்கின்ற தமயந்தியானவள், விறல - வெற்றிபொருந்திய, வேந்தன் - நளமகாராசனது, பொன் ஆர் அடி - அழகுபொருந்திய பாதக்குறியை, நோக்கி - பார்த்து, பூ கொடிபோல் - புஷ்பக்கொடி போல், வீழ்ந்து - (அதில்) வீழ்ந்து, அழுதாள் - புலம்பினாள், எ-று.

(க-து.) தமயந்தி நளனடியைக்கண்டு வீழ்ந்தழுதாள் என்பதாம்.

ஐயன்கமலவடிச்சுவடுகாண்டலுமே
வெய்யதுயரவிடமீதூரவாய்புலராச்
செய்யகமலமலரிற்றிருவனையாள
கையறவாநெஞ்சங்கலுழாவுயிர்சோர்ந்தாள்.

(இ-ள்.) ஐயன் - நளமகாராசனுடைய, கமல அடி சுவடு - தாமரை மலாபோன்ற பாதக்குறியை, காண்டலும் - கண்டவளவில், வெய்ய துயரம் விடம் - கொடிய துன்பமாகிய விஷம், மீது ஊர - அதிகரிக்க, வாய் புலரா - வாயுலாந்து, செய்ய கமலம் மலரில் - சிவந்த தாமரைப்புஷ்பத்தி லிருக்கின்ற, திரு அனையாள் - இலக்குமியையொத்த தமயந்தியானவள், கையறவா - செயலற்று, நெஞ்சம் கலுழா - மனங் கலங்கி, உயிர் சோர்ந்தாள் - மூர்ச்சித்தாள், எ-று. ஏ-அசை.

(க - து.) தமயந்தி மூர்ச்சை யடைந்தாள் என்பதாம். (௨0)

இவ்வாறுதுன்பக்கடலினிடைமூழ்கும்
மைவார்தடங்கண்மடமாதின்செவ்விமுகஞ்
செவ்வான்மதியமெனச்செங்கட்டுளையெயிற்று
வெவ்வாயரவமுருத்துவிழுங்கியதே.

(இ-ள்.) இவ்வாறு - இந்தவிதமாய், துன்பம் கடலினிடை - துன்பக்கடலில், மூழ்கும் - அழுந்திய, மை - அஞ்சனமெழுதிய, வார் - நெடிய, தடம் - விசாலமாகிய, கண் - நேத்திரங்களையும், மடம் - அறியாமையையு முடைய, மாதின் - தமயந்தியினது, செவ்வி - அழகு பொருந்திய, முகம் - வதனத்தை, செவ் வான் - செவ்வையாகிய வெளுத்த, மதியம் என - சந்திரனென்று (எண்ணி), செம் கண் - சிவந்த கண்களையும், துளை எயிறு - துவாரம்பொருந்திய பற்களையும், வெம் வாய் - வெவ்விய வாயையுமுடைய, அரவம் - மலைப் பாம்பு, உருத்து - கோபித்து, விழுங்கியது - விழுங்கிற்று, எ-று.

(க - து.) தமயந்தியை மலைப்பாம்பு விழுங்கியது என்பதாம். சந்திரன் மதிக்குச் செவ்வை நிறைவெனக் கொள்க. [illegible] (௨௧)

செய்த்தோரின்மூழ்கிணம்பருகும்வைவேலோய்
பைத்தோர்கொடுந்தறுகட்பாந்தள்விழுங்கியதா
லெய்த்தேனுயிர்காத்தற்கெய்தாயெனவழுதாண்
மைத்தோய்குவளைமதர்நெடுங்கண்வாணுதலே.

(இ - ள்) செய்த்தோரில் மூழ்கி - உதிரத்திற் குளித்து, நிணம் பருகும் - மாமிசத்தைப் புசிக்கின்ற, வை வேலோய் - கூர்மை பொருந்திய வேலாயுதத்தையுடைய நளமகாராசனே!, பைத்து - படத்தையுடையதாகிய, ஓர் கொடு தறு கண் - ஒரு கொடிய கோபத்தையுடைய, பாந்தள் - மலைப்பாம்பானது, விழுங்கியது - (என்னை) விழுங்கியது, எய்த்தேன் - இளைத்த என்னுடைய, உயிர் காத்தற்கு - உயிரைக் காப்பதற்கு, எய்தாய் என - வாராயோ என்று, மை தோய் - அஞ்சனந்தோய்ந்த, குவளை - கருநெய்தல் போன்ற, மதர் நெடு கண் - குளிர்ச்சிபொருந்திய நெடியகண்களையுடைய, வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய தமயந்தியானவள், அழுதாள் - புலம்பினாள், எ-று ஏ - அசை.

(க - து.) தமயந்தி நளனைக்குறித்துப் புலம்பினாள் என்பதாம்.()

பொங்கழல்வெங்கானகத்துப்பூவையழுங்குரல்கேட்
டங்கோர்சிலைக்கையடலவேடன்வந்தணுகி
வெங்கணரவெறிந்துவெவ்வாயிடைநின்றுங்
கொங்கவிழுமென்கூந்தற்கோதைதனைநீக்கினனால்.

(இ - ள்) பொங்கு அழல் - மிகுந்த அக்கினியை யுடைய, வெம் கானகத்து - வெப்பமாகிய காட்டினில், பூவை - தமயந்தியானவள், அழும் குரல் கேட்டு - புலம்புகின்ற சத்தத்தைக்கேட்டு, அங்கு - அவ்விடத்தில், ஓர் - ஒரு, சிலை கை - வில்லைக் கையிலேந்திய, அடல் - பலம்பொருந்திய, வேடன் - வேடனானவன், வந்து அணுகி - வந்துசேர்ந்து, வெம் கண் - வெவ்விய கண்களையுடைய, அரவு - மலைப்பாம்பை, எறிந்து - பிளந்து, வெம் வாயிடைநின்றும் - வெவ்விய வாயினிடத்தினின்றும், கொங்கு அவிழ் - வாசனை வீசாநின்ற, மெல் கூந்தல் - மென்மையாகிய கூந்தலையுடைய, கோதை தனை - தமயந்தியை, நீக்கினான் - விடுவித்தான், எ - று. ஆல் - அசை.

(க - து.) வேடன், தமயந்தியைப் பாம்பிலிருந்து விடுவித்தான் என்பதாம். (௨௩)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வெய்ய வரவின் பகுவாயின் விடுத்த மடமானை நோக்கி, மையல் கூர்ந்த நெஞ்சினனாய் வரிவிற் றடக்கை யவேடன், றுய்யின் முலைமேற் புல்லுதற்குத் தொடரத் தஞ்சா வருங்கற்பின், றையன் முனிந்து நோக்குதலுஞ் சாம்ப ராயிற் றவனுடலே.

(இ - ள்.) வெய்ய அரவின் - கொடிய மலைப்பாம்பினது, பகு வாயின் - பிளப்பாகிய வாயினின்றும், விடுத்த - விடுவிக்கப்பட்ட, மட மான் - இளமான்போன்ற தமயந்தியினது, எழில் நோக்கி - அழகைப்பார்த்து, மையல் கூர்ந்த நெஞ்சினனாய் - மோகித்த மனமுள்ளவனாய், வரி வில் - நீண்டவில்லையேந்திய, தடம் கை - விசாலமாகிய கையையுடைய, வயம் வேடன் - வெற்றிபொருந்திய வேடனானவன், தொய்யில் முலைமேல் - சந்தனகோலமணிந்த ஸ்தனத்தின்மேல், புல்லுதற்கு - அணைதற்கு, தொடர - பின்றொடர, துஞ்சா - கெடாத, அரு கற்பின் - அருமையாகிய கற்பினையுடைய, தையல் - தமயந்தியானவள், முனிந்து - கோபித்து, நோக்குதலும் - பார்த்தமாத்திரத்தில், அவன் உடல் - அவ்வேடனுடலம், சாம்பர் ஆயிற்று - நீறாயிற்று, எ - று. ஏ - அசை.

(க - து.) வேடன் தமயந்தியைப் புணரத் தொடர்ந்தவளவில் தமயந்தி பார்க்க வேடன் எரிந்துபோனான் என்பதாம். (உச)

கற்பி னழலாற் கொடுஞ்சிலைக்கை வேட னுடலங் கரி யாக்கிப், பொற்பின் றுறைபோய் நலங்கனிந்த பொன்னம் பாவை புலம்பெய்தி, வெற்பி னுயர்தோள் வேந்துசெலும் வெங்கான் றுருவி யேகுதலு, மற்பின் முனிவர் தவமியற் றுஞ் சாலைநோக்கி யருகணைந்தாள்.

(இ - ள்.) கற்பின் அழலால் - பதிவிரதாக்கினியால், கொடு சிலை கை - கொடியவில்லைக் கையிலேந்திய, வேடன உடலம் - வேடன் சரீரத்தை, கரி ஆக்கி - சாம்பராக்கி, பொற்பின் துறை போய் - அழகிறசிறந்து, நலம் கனிந்த - நன்மைமிகுந்த, பொன்னம் பாவை - தமயந்தியானவள், புலம்பு எய்தி - அழுதுகொண்டு, வெற்பின் உயர் தோள் - மலைபோல் உயர்ந்த புயத்தையுடைய, வேந்து - நளமகாராசன், செல்லும் - செல்லாநின்ற, வெம் கான் - வெவ்வியகாட்டிவில், துருவி ஏகுதலும் - தேடிக்கொண்டு போகுமளவில், அற்பின் முனிவர் - அன்பினையுடைய முனிவர்கள், தவம் இயற்றும் - தவஞ்செய்யாநின்ற, சாலை நோக்கி - பர்ணசாலையைப்பார்த்து, அருகு - அதனருகில், அணைந்தாள் - சேர்ந்தாள், எ-று.

(க-து.) தமயந்தி முனிவர்கள் தவச்சாலையிற் சார்ந்தாள் என்பதாம். (உரு)

அடைந்த மாதின் முகநோக்கி யாரை நீவெவ் வழற் கானி,னடந்து தனியே யித்தலையிற் போந்த தென்னை நளி னமலர்த், தடங்கண் கலுழ்ந்து புலம்பெய்துந் தன்மையெ வன்கொல் சாற்றுகென, மடந்தை புகுந்த வாறனைத்து முனிவர்கேட்ப வகுத்துரைத்தாள்.

(இ - ள்.) அடைந்த - தம்மிடத்துவந்த, மாதின் - தமயந்தியுடைய, முகம் நோக்கி - வதனத்தைப்பார்த்து, யாரை நீ - நீ யார்; வெவ் அழல் கானில் - வெவ்விய அழல்பொருந்திய காட்டினில், நடந்து -

கானடைந்து, தனியே - தனிமையாகி, இ தலையில் - இவ்விடத்தில், போந்தது என்னை - வந்ததென்னகாரணம்; களின மலர் - தாமரைமலர் போன்ற, தடம் கண் கலுழ்ந்து - விசாலமாகிய கண்கள் கலங்கி, புலம்பு எய்தும்தன்மை - துன்பப்படுதல், எவன்கொல் - என்னகாரணம், சாற்றுக என - சொல்லென்று, முனிவா கேட்ப - முனிவர்கள்கேட்க, மடந்தை - தமயந்தியானவள், புகுந்த ஆறு அனைத்தும் - நடந்தவை யெல்லாம், வகுத்து உரைத்தாள் - பிரித்து (அவர்களுக்குச்) சொல்லினாள், எ-று.

(க - து.) முனிவர்கள் கேட்கத் தமயந்தி நடந்தவையெல்லாஞ் சொன்னாள் என்பதாம். (உகூ)

கேட்ட வளவி லுளமுருகிக் கிள்ளை மருட்டும் பனி மொழியாய, வாட்டமொழிதி நிற்பிரிந்த வடிவேல் ளனைச் சின்னாளில், ஞட்டங் களிப்பக் கண்டுமுன்போ னலம்பெற் றிருத்தி யெனநவிலா, வீட்டுந் தவத்தோர் மறைக்கிழவ ரிருக்கைநோக்கி யேகினரால்.

(இ-ள்.) கேட்ட அளவில - (இச்செய்தியைக்) கேட்டமாத்திரத்தில், உளம் உருகி - மனமுருகி, கிளளை - கிளிப்பிள்ளைகளை, மருட்டும் - வெருட்டாநின்ற, பனி மொழியாய - குளிர்ந்த சொற்களையுடைய தமயந்தியே!, வாட்டம் ஒழிதி - சோாவை ஒழித்துவிடு, நின் பிரிந்த - உன்னைபபிரிநத, வடி வேல் நளனை - கூாமையுடைய வேலேந்திய நளமகாராசனை, சில நாளில் - சிலநாளிலே, நாட்டம் களிபப - கண்கள் களிக்க, கண்டு - பாாத்து, முன்போல் நலம்பெற்று இருததி - முன்போல நன்மையை யடைந்து இருபபாயாகவெனறு, நவிலா - ஆசீர்வதித்து, ஈட்டும் தவதது - தவஞ்செய்கின்ற, ஓா மறைக்கிழவா - ஒ பற்ற அந்தணாகள், இருக்கை நோக்கி - (தாங்க)ளிருக்கு மாச்சிரமததைக்குறித்து, ஏகினா - சென்றாாகள், எ-று. ஆல் - அசை.

(க - து.) முனிவாகள் ஆசீாவதிததுப் போனாாகள் என்பதாம். ()

பிதிர்ந்த பசும்பொற் றிதலைமுலைப் பெய்பூங் கோதை பிணைபோல்வா, ளெதிர்ந்த வணிசா வழித்துணையா வேகிக் கதிர்மா மணிவரன்றி, யதிர்ந்து புனல்பாய் பேராற்றங் கரையி னுறையு மாையிருளின், முதிர்ந்த சினததுப் பிறைக்கோட்டு மூரிக் களிறொன் றணுகியதால்.

(இ - ள்.) பிதிாந்த - உதிாந்த, பசும்பொன் - பசியபொன் போன்ற, திதலை - தேமலையுடைய, முலை - ஸ்தனங்களையும், பெய் பூ கோதை - மலாமாலையணிந்த கூந்தலையுமுடைய, பிணை போல்வாள் - மான்போன்ற தமயந்தியானவள், எதிாந்த - எதிாப்பட்ட, வணிகா - வாத்தகர், வழி துணை ஆ - வழித்துணையாக, ஏகி - போய், கதிர் மா மணி வரன்றி - ஒளிபொருந்திய சிறந்த மணிகளை வாரிக்கொண்டு, அதிர்ந்து - இரைந்து, புனல் பாய் - சலமானது பெருகாநின்ற, பேர் ஆற்று கரையில் - பெரிய ஆற்றங்கரையினிடத்தில், உறையும் - வசிக்கும்

செய்கின்ற, அரை இருளின் - அர்த்தராத்திரியில், முதிர்ந்த - மிகுந்த, சினத்து - கோபத்தையுடையதும், பிறை கோடு - பிறைபோன்ற கொம்புகளையுடையதுமாகிய, மூரி - வலிமையுடைய, களிறு ஒன்று - ஒருயானையானது, அணுகியது - வந்து நெருங்கிற்று, எ - று. ஆல் - அசை.

(க - து.) தமயந்தியினிடத்து யானைவந்தது என்பதாம். (உ௮)

அணுகி யாங்குப் புலம்பெய்து மலர்பூங் கோதை மயி லொழிய, வணிக மாக்க ளியாவரையு மதமால் யானை கொன்றேகத், துணைவந் தடைந்தோர் யாவரையுந் தொலைத்துநடந்த பருஉத்தடக்கை, யிணைவெண் கோட்டுக் களிறென்னை யென்கொல லாத தெனக்கலுழ்ந்தாள்.

(இ-ள்.) ஆங்கு - அவ்விடத்தில், அணுகி - வந்தடைந்து, புலம்பு எய்தும் - புலம்பாநின்ற, அலர் பூ கோதை மயில் - மலர்ந்த பூமாலை யணிந்த அளகபாரத்தையுடைய தமயந்தியானவள், ஒழிய - நீங்க லாக, வணிக மாக்கள் யாவரையும் - வர்த்தகரனைவரையும், மதம் - மும்மதம்பொருந்திய, மால் யானை - பெரிய யானையானது, கொன்று ஏக - கொலைசெய்து போகாநிற்க, துணை வந்து அடைந்தோர் - துணை யாக வந்தடையப்பட்ட, யாவரையும் - அனைவரையும், தொலைத்து - கொன்று, நடந்த - சென்ற, பருஉ தடம் கை - பருத்து நீண்ட துதிக் கையையும், இணை - இரண்டாகிய, வெள் கோடு - வெள்ளைக்கொம் புகளையுமுடைய, களிறு - யானையானது, என்னை - (துன்பப்படு கின்ற) என்னை, என் கொல்லாதது - என்னகாரணத்தினால் கொல் லாமற் போயிற்று, என - என்று, கலுழ்ந்தாள் - புலம்பினாள், எ-று.

(க - து.) வியாபாரிகளைக் கொன்ற யானை தன்னைக் கொல்ல வில்லையென் றரற்றினாள் என்பதாம். (உ௯)

சாத லொழிந்த வழிச்செல்வோர் துணையா வுள்ளந் தளர்வெய்திப், பாத மலர்கொப் புளமெய்திப் பனிக்கப் பரலவெங் கானிறந்து, கோதை வடிவேல் வலனேந்து குவ வுத் திணிதோட் சுவாகுவெனுஞ், சேதி பதிதன் வளநகரிற் சென்றாள் விதர்ப்பன் சேயிழையே.

(இ - ள்.) சாதல் ஒழிந்த - இறக்காமல் சேடித்துநின்ற, வழி செல்வோர் - வழியிற் செல்லுகின்ற பிராமணர்கள், துணை ஆ - சகாய மாகக்கொண்டு, உள்ளம் தளர்வு எய்தி - மனங்கலங்கி, பாதம் மலர் - மலர்போன்ற பாதங்கள், கொப்புளம் எய்தி - கொப்புளித்து, பனிக்க - நீரொழுக, பரல் வெம் கான் - பருக்கைகளையுடைய வெவ் விய வனத்தை, இறந்து - கடந்துநீங்கி, கோதை - வெற்றிமாலை யணிந்த, வடி வேல் - கூர்மைபொருந்திய வேலாயுதத்தை, வலன் - வலதுபுறத்தில், ஏந்து - தாங்காநின்ற, குவவு - திரட்சியையும், திணி - வலிமையையுமுடைய, தோள் - புயத்தையுடைய, சுவாகு எனும் - சுவாகுவென்னும் பெயரையுடைய, சேதிபதிதன் - சேதிதேசத்

தரசனது, வள நகரில் - வளப்பம்பொருந்திய பட்டணத்தில், விதர்ப் பன் சேயிழை - விதர்ப்பராசனுடைய மகளாகிய தமயந்தியான வள், சென்றாள் - சேர்ந்தனள், எ-று. ஏ - அசை.

(க-து.) தமயந்தி சேதிபதிநகரத்தைச் சார்ந்தாள் என்பதாம். ()

**துணிபட் டொழிந்த மென்றுகிலுஞ் சுடர்விட் டொ ளிர மண்ணாத, மணியிற் றோன்றி மாசடைந்த வடிவும் வி ரிந்த வார்குழலும், பிணியுற்றழலு நெஞ்சமுமாய்ப் பித் தே றினர்போற் கோமறுகி, லணுகச் சேதி பதிதாய்கண் டார்கொலிவளென் றையுற்றாள்.**

(இ - ள்.) துணிபட்டு ஒழிந்த - துண்டிடப்பட்ட, மெல் துகி லும் - மெல்லிய ஆடையும், சுடர விட்டு ஒளிர - ஒளிவிட்டு விளங் கும்படி, மண்ணாத மணியில் - கழுவாத இரத்தம்போல, தோன்றி - காணப்பட்டு, மாசு அடைந்த - அழுக்கடைந்த, வடிவும் - உடம்பும், விரிந்த - அவிழ்ந்த, வார குழலும் - நீண்ட கூந்தலும், பிணி உற்று - துன்பப்பட்டு, உழலும் - கலங்காநின்ற, நெஞ்சமும் - மனமும், ஆய்- (ஆகிய இவைகளையுடையவள்) ஆய், பித்து ஏறினாபோல் - பைத்தி யங் கொண்டவாபோல், கோ மறுகில் - இராசவீதியில், அணுக - (தமயந்தி) வர, சேதிபதி தாய் - சுவாகுவென்னு மரசனது தாயா னவள், கண்டு - தமயந்தியைக் கண்டு, ஆர்கொல் இவள் - இந்தப பெண் யாரோ, என்று - எனறு, ஐயுற்றாள் - சந்தேகித்தாள், எ-று.

(க - து.) சேதிபதிதாயாா தமயந்தியைக்கண்டு இவள் யாரோ வென்று சநதேகித்தாள என்பதாம். (௩க)

**பொன்னம் பாவை யுடன்முழுதும் புகையுண் டென் னச் சவிமழுங்கு, மின்னுண் மருங்குற் சில்லோதி யணங் கோவரசர் மடமகளோ, வென்னத் தெருளே னீங்கிவளை யீண்டுக் கொணர்தி ரெனமருங்கின், மன்னு மகளிர் தமைப் பணிப்ப விடைகொண் டவரு மருகணைந்தார்.**

(இ - ள்.) பொன் பாவை - பொற்பதுமையானது, உடல் முழு தும் - உடம்பு முழுமையும், புகை உண்டு என்ன - புகையுண்டது போல, சவி மழுங்கும் மின் - ஒளி மழுங்கிய மின்னலையொதத, நுண் மருங்குல் - நுட்பமாகிய இடையையுடைய, சில்லோதி - இப பெண், அணங்கோ - தெய்வப பெண்ணோ, அரசா மட மகளோ - இராச குமாரத்தியோ, எனன - என்று, தெருளேன் - தெளியேன், ஈங்கு - இவ்விடத்தில், இவளை - இப்பெண்ணை, ஈண்டு - சீக்கிரத்தில், கொணாதிா - கொண்டுவாருங்கள், என - என்று, மருங்கில் மன்னும்- அருகிலுள்ள, மகளிாதமை - ஸ்திரீகளை, பணிபப - (அவ்வரசனது தாயானவள்) ஏவ, விடை கொண்டு - உத்தரவு பெற்றுக்கொண்டு, அவரும் - அம்மாதர்களும், அருகு - (தமயந்தி) சமீபத்திலே, அணைந் தாா - வந்தாாகள், எ-று. அம்-அசை.

(க - து.) சேதிபதிதாய் இவளை யழையென்று சொல்லப் பெண்க ளழைக்கப் போனார்கள் என்பதாம். (௯௨)

அடைந்த மாதர் தனிப்போந்த வணங்கின் கமல முக நோக்கிக், கடைந்த மணிச்செப் பெனப்புடைத்துக் கதித் து வீங்கு வனமுலையாய், படங்கொ ளரவின் முடிகிடந்த பார்தாங் கிறைவன் றனையீன்ற, மடந்தை வருகென் றன ளென்ன வான்றோய் மாடத் தினிதடைந்தாள்.

(இ-ள்.) அடைந்த மாதர் - வந்த ஸ்திரீகள், தனி போந்த - தனித்து வந்த, அணங்கின் - தமயந்தியினது, கமலம் முகம் நோக்கி - தாமரைமலர்போன்ற முகத்தைப் பார்த்து, கடைந்த - கடைதலிடப்பட்ட, மணி செப்பு என - இரத்தின கும்பங்கள்போல, புடைத்து - அடிபரந்து, கதித்து - பருத்து, வீங்கும் - வளராநின்ற, வன முலையாய் - அழகிய ஸ்தனங்களையுடைய பெண்ணே, படம் கொள் அரவின் - படத்தைக்கொண்ட ஆதிசேடனுடைய, முடி கிடந்த - முடியின்மேல் இருந்த, பார் தாங்கு - பூமியைத் தரிக்காநின்ற, இறைவன்றனை ஈன்ற - சுவாகுராசனைப் பெற்ற, மடந்தை - தாயானவள், வருக என்றனள் - (உன்னை) வரச்சொல்லினள், என்ன - என்று சொல்லாநிற்க, வான் தோய் - ஆகாசமளாவிய, மாடத்து - உபரிகையில், இனிது - இன்பத்தோடு, அடைந்தாள் - (தமயந்தியானவள் வந்து) சேர்ந்தாள், எ-று.

(க - து.) பெண்கள் அழைக்கத் தமயந்தி வந்தாள் என்பதாம்.()

வந்த மடமான் முகநோக்கி வரிவண் டூதப் பொதிய விழ்ந்த, வந்தண் கமல மலர்கவறறி யழகு வாய்ந்த முகம் பசப்பச், சிந்தை தளர்ந்து தனிப்போதற் குற்ற தெவன் கொல சேயிழையா, யுந்தை யாருன் றலைவனெவ னுன் பேர்யாதிங் குரையென்றாள்.

(இ - ள்.) வந்த - தன்னிடத்து வந்த, மட மான் - இளமான் போன்ற தமயந்தியினது, முகம் நோக்கி - முகத்தைப்பார்த்து, சேயிழையாய் - பெண்ணே, வரி வண்டு - இசைப்பாட்டினையுடைய வண்டுகள், ஊத - ஒலிக்க, பொதி அவிழ்ந்த - கட்டவிழ்ந்த, அம் தண் கமல மலர் - அழகிய குளிர்ந்த தாமரைமலர்களை, கவற்றி - கவலைச்செய்து, அழகு வாய்ந்த - அழகுபொருந்திய, முகம் - வதனமானது, பசப்ப - பசலைநிறமடைய, சிந்தை தளர்ந்து - மனந்தளர்ந்து, தனி போதற்கு - தனித்து வருதற்கு, உற்றது - பொருந்தியது, எவன் - யாது; உந்தை யார் - உன் தகப்பன் எவன்; உன் தலைவன் எவன் - உன் கணவன் யார்; உன் பேர் யாது - உன்னுடைய நாமதேயம் எது, இங்கு - இவ்விடத்தில், உரை என்றாள் - (அரசன் றாய்) சொல்லென்றாள், எ-று.

(க - து.) சேதிபதிதாய் தனியேபோவதென்ன? உன்தகப்பனார்? உன்கணவனார்? உன்பேரென்ன? சொல்லென்றாள் என்பதாம். (௯௪)

வீமன்புதல்விபுகழ்நிடதவேந்தர்கோமான்மனைக்கிழத்தி
நாமம்பகரிற்றமயந்தியென்பாடன்கோனண்ணலர்க்குக்
காமர்நிதியும்வளநாடுஞ்சூதினிழந்துகானிடைப்போ [ன்.
யாமந்தனின்மற்றவட்பிரிய வவளைத்தேடி யீண்டணைந்தே

(இ - ள்.) வீமன் புதல்வி - வீமராசன் மகள், புகழ் நிடத வேந்தர் கோமான் - புகழ்பெற்ற நளமகாராசனது, மனைக்கிழத்தி - மனையாள், நாமம் பகரில் - பேர் கூறுமிடத்து, தமயந்தி என்பாள் - தமயந்தியென்று சொல்லப்படுவாள், தன் கோன் - அவளது கணவனானவன், நண்ணலற்கு - பகைவனுக்கு, காமர் நிதியும் - விரும்பபடுகின்ற தனங்களையும், வள நாடும் - செழித்த நாட்டையும், சூதில் இழந்து - சூதினில் தோற்றுவிட்டு, கானிடை போய - வனத்திற் சென்று, யாமந்தனில் - இராத்திரியில், அவள் பிரிய - அவளைப்பிரிய, அவளை - அத்தமயந்தியை, தேடி - தேடிக்கொண்டு, ஈண்டு - இந்நகரில், அணைந்தேன - வந்தேன், எ-று. மற்று - அசை.

(க - து.) நளன் சூதிலே நாடிழந்து தமயந்தியைக் காட்டில்விட்டுப்பிரிய அவளைத்தேடி நான் வந்தேன என்றான் என்பதாம். (௩௫)

அனைய மடமா னுயிர்த்தோழி யானென் றுரைப்ப வக மகிழ்ந்து, தனிய ளாகிக் கொடுங்கானிற் றலைவன் பிரியத் தளர்ந்தேங்கும், கனைவண் டிமிரும் கருங்குழலைக் காணு மளவு மிந்நகரி, லினையலவாழி யிருத்தியென விசைந்தாங் கவளு மிருந்தனளால்.

(இ - ள்.) அனைய மட மான் - அத்தமயந்தியினுடைய, உயிர் தோழி - உயிரையொத்த தோழி, யான் - நான், என்று உரைப்ப - என்று (தமயந்தி) சொல்ல, அகம் மகிழ்ந்து - சந்தோஷித்து, கொடு கானில் - கொடிய காட்டினில், தலைவன் பிரிய - கணவன் பிரிந்தேக, தனியள் ஆகி - தனித்தவளாகி, தளர்ந்து - தளர்ச்சியடைந்து, ஏங்கும் - துன்பப்படாநின்ற, கனை வண்டு - சப்திக்கின்ற வண்டுகள், இமிரும் - சததியாநின்ற, கரு குழலை - கரிய கூந்தலையுடைய தமயந்தியை, காணும் அளவும் - பார்க்குமளவும், இ நகரில் - இந்த நகரத்தில், இருத்தி - இருப்பாயாக, இனையல் - வருத்தபடாதே ; வாழி - வாழக்கடவை ; என - என்று (அரசன் றாய்) சொல்ல, இசைந்து - (அவள் சொல்லுக்) கிசைந்து, ஆங்கு - அந்நகரத்தில், அவளும் - அந்தத்தமயந்தியும், இருந்தனள் - இருந்தாள், எ - று. ஆல் - அசை.

(க - து.) தமயந்திக்குத் தோழி தானென்று சொல்லச் சேதிபதியின் தாய் அவளைக்காணுமளவு மிங்கிருவென விருந்தாள் என்பதாம்.()

காதல் கூர்ந்து தன்மகளாஞ் சுனந்தைக் கதிர்வாண் முகநோக்கி, மாதர் நோக்கிம் மடவரலை வருந்தா தளித்தி யெனலோடு, மேதமின்றி யவள்காப்ப விருந்தாண் மற்றிங்

கிருநிற்க, கோதை வடிவே ளளற்குற்ற செய்தி யனைத்துங் கூறுவாம்.

(இ - ள்.) காதல் கூர்ந்து - அன்புற்று, தன் மகள் ஆம் சுனந்தை - தன்னுடைய மகளாகிய சுனந்தையினது, கதிர் வாள் முகம் - மிகுந்த ஒளிபொருந்திய முகத்தை, நோக்கி - பார்த்து, மாதர் நோக்கு - அழகிய பார்வையையுடைய, இ மடவரலை - இப்பெண்ணை, வருந்தாது - துன்பப்படாம லிருக்கும்படி, அளித்தி - காப்பாய், எனலோடும் - என்று (அரசன் றாய்) சொல்லிய வளவில், ஏதம் இன்றி - பழுதின்றி, அவள் - அச்சுனந்தையானவள், காப்ப - இரக்ஷிக்க, இருந்தாள் - (தமயந்தி) இருந்தனள்; இங்கு - இவ்விடத்தில், இது - இச்செய்தி, நிற்க - இருக்க, கோதை வடி வேல - வெற்றிமாலையணிந்த கூரிய வேலையேந்திய, நளற்கு - நளமகாராசனுக்கு, உற்ற - பொருந்திய, செய்தி அனைத்தும் - செய்கை யனைத்தையும், கூறுவாம் - சொல்லுவோம், எ-று. மற்று - அசை.

(க-து.) நூலாசிரியர் தமயந்தி இவ்வாறிருக்க நளன் செய்திகைச் சொல்லுவோமென்றார் எனபதாம். (௩எ)

பிரிவுறுபடலம் முற்றிற்று.

ஆ செய்யுள் - க0எச.

## வேற்றுருவமைந்தபடலம்.

[இப்படலத்தால் நளமகாராசனுக்கு நாட்டிற் செல்வினும் பிறரறியாதிருக்கும்படி வேற்றுரு வமைந்தமை சொல்லப்படுகின்றது.]

கலிநிலைத்துறை

கள்ளுயிர்க்குமென்மலர்க்குழற்காமர்பூங்கொடியை
நள்ளிருட்பொழுதகன்றனனண்ணருங்கானிற்
றள்ளுதற்கருந்துயரொடுபோதலுந்தழலு
மொள்ளழற்புகைக்கொழுந்தெழக்கணடனனுரவோன்.

(இ - ள்.) உரவோன் - நளமகாராசன், கள் உயிர்க்கும் - தேனைத் தருகின்ற, மெல் மலர் - மெல்லிய மலர்களையணிந்த, குழல் - கூந்தலையுடைய, காமர் - அழகுபொருந்திய, பூங்கொடியை - தமயந்தியை, நண் அரு கானில் - அடைதற்கரிய வனத்தில், நள் இருள் பொழுது - நடுராத்திரியில், அகன்றனன் - விட்டுப் பிரிந்தவனுய், தள்ளுதற்கு அரு - ஒழித்தற்கரிய, துயரொடு - துன்பத்துடனே, போதலும் - செல்லுமளவில், தழலும் - தகிக்காநின்ற, ஒள் அழல் - ஒளிபொருந்திய தீயினது, புகை கொழுந்து - தூமக் கொழுந்து, எழ - எழும்பாநிற்க, கண்டனன் - அதைப்பார்த்தனன், எ-று.

(க - து.) நளன் அக்கினி வளர்ந்தெழக் கண்டான் என்பதாம்.(க)

செஞ்சுடர்ச்சிகைவளைதலிற்றெருமரலெய்தி
நஞ்சுயிர்க்கும்வாளரவொன்றுநாமவேலிறைவ
தஞ்சநீயெனையளித்தியென்றுரைத்தலுந்தாழா
தஞ்சலஞ்சலென்றடைந்தனன்மடங்கலேறனையான்.

(இ - ள்.) செம சுடா சிகை - அக்கினிச்சுவாலையானது, வளைத லின் - சுற்றிக்கொணடமையால், தெருமரல் எய்தி - மனங்கலங்கி, நஞ்சு உயிாக்கும் - விஷத்தைத்தருகினற, வாள் அரவு ஒன்று - ஒளி பொருநதிய காாக்கோடகனென்னு நாகமானது, நாம வேல் இறைவ - அச்சததைதருகின்ற வேலையேந்திய நளமகாராஜனே, நீ - நீயே, தஞ்சம் - இரக்ஷகன், எனை - என்னை, அளித்தி - காக்கவேண்டும், என்று உரைததலும் - என்றுசொல்லியவளவில், தாழாது - தயங காது, அஞ்சல அஞ்சல் என்று - பயபபடாதே பயப்படாதே என்று சொல்லியவனும், மடங்கல ஏறு அனையான் - பலம்பொருநதிய ஆண் சிங்கத்தையொத்த நளமகாராஜன, அடைந்தனன் - அருகிலடைந தான், எ-று.

(க - து.) பாம்பு தன்னைக் காப்பாற்றென்ன நளன் பயபபடாதே யென்றான் எனபதாம். (உ)

கனைசெழுஞ்சுடர்க்கொழுங்கனலபடர்தலிற்கரிந்து
பனைமறிந்தெனக்கிடந்ததோர்பாந்தளைநோக்க
வனைபொலன்கழற்குரிசிலோர்மறையவன்முனிவா
னினைவினுந்தனிப்பெயர்ந்திடுநிலைமையொன்றிலனால.

(இ-ள.) கனை - சத்தியாநின்ற, செழு சுடா - செழித்த சுவாலை கனையுடைய, கொழு கனல் - மிகுநத காடடுத்தீயானது, படாதலில் - சுறறிக்கொள்வதினால், கரிந்து - கருகி, பனை - பனைமரமானது, மறிந் தது என - விழுந்து கிடந்ததுபோல, கிடந்தது - கிடந்ததாகிய, ஓா பாந்தளை - (காாக்கோடகனெனனும்) ஒரு பாம்பினை, நோக்க - (நள மகாராஜன்) பாாக்க, வனை பொலன கழல் குரிசில் - கட்டப்பட்ட பொன்னாற்செய்த வீரக்கழலையணிந்த நளமகாராஜனே, ஓா மறை யவன் - அாாகசனென்னும் ஒருபிரம இருஷியினது, முனிவால்-சாபத தினால், நினைவினும் - நினைப்பினாலும், தனி - தனியாக, பெயர்ந்திடு நிலைமை - நடக்கலாம் எனும் நிச்சயத்தை, ஒன்றிலன் - அடைந்தி லேன், எ-று. ஆல் - அசை.

(க - து.) பாம்பானது நளனே அாாகசரிஷி சாபத்தால் நடை பெற்றிலே னென்றது என்பதாம். (௩)

அழலினின்றெடுத்தையிரண்டடிப்புரத்தகற்றின்
முழுவலன்பொடுநன்கிழைக்குவலெனமொழிந்து
தழற்கட்பாம்புடல்சுருக்கலுந்தழலருள்வரத்தா
லெழுவினீள்கரத்தாலெடுத்தழற்புறத்திட்டான்.

(இ - ள்.) அழலினின்று எடுத்து - அக்கினியினின்றெடுத்து, ஐயிரண்டு அடி புறத்து - பத்தடிக்குப்புறத்தில், அகற்றில் - நீக்கிவிடு

வையானுல், முழு வல் அன்பொடு - நிறைந்த வலிய அன்புடனே, நன்கு இழைக்குவல் - உனக்கு நன்மையைச் செய்வேன், என மொழிந்து - என்றுசொல்லி, தழல் கண் பாம்பு - அக்கினிபொருந்திய கண்களை யுடைய கார்க்கோடக நாகமானது, உடல் சுருக்கலும் - உடம்பைச் சுருக்கிக்கொண்ட வளவில், (நளமகாராஜனுனவன) தழல் அருள் வரததால் - அக்கினிதேவன் கொடுதத வரததினுல், எழுவிலா - தூண் போனற, நீள் கரத்தால் - நீண்ட கரததினுல், எடுத்து - எடுத்து, அழல் புறத்து - தீயினுக்குவெளியில், இட்டான் - விடுத்தான், எ-று.

(க - து.) நளன் பாம்பையெடுத்துத் தீக்கப்புறம் விடுத்தான என்பதாம். (௪)

கதமெரிக்கணின்றகற்றலுங்கதிரொளிவிரிக்கு
மதிரபொலன்கழலரசர்கோன்மெய்யுறத்தீண்டி
முதிர்சினத்தவாளரவுதன்முன்னுருவெடுப்ப
விதுகுலத்துயர்வேந்தனும்வேற்றுருவமைந்தான்.

(இ-ள்.) கதம் எரிக்கணினறு - சொலிக்கின்ற தீயினின்றும், அகற் றலும - நீக்கிவிட்டவளவில், கதிர ஒளி விரிக்கும் - கிரணவொளி வீசா நினற, அதிர - சத்திக்கினற, பொலன் கழல் - பொன்னுல் செய்யப பட்ட வீரக்கழலேயணிநத, அரசர்கோன் - நளமகாராஜனது, மெய் உற - சரீரத்திற் பொருநதும்படி, தீண்டி - கடித்து, முதிர சினத்த - மிகுந்த கோபத்தையுடைய, வாள் அரவு - ஒளிபொருந்திய கார்க் கோடக நாகமானது, தன முன் உரு - தன்னுடைய பழையவுருவத் தை, எடுப்ப - எடுக்க, விது குலதது - சந்திரவம்சத்தில், உயர வேந தனும் - உயர்ந்த நளமகாராஜனும், வேறு உரு அமைந்தான - வேற்றுரு வடைந்தான், எ-று.

(க - து.) பாம்புகடிக்க நளன் வேற்றுருவானுன் என்பதாம். (௫)

கருணைசெய்தெனைப்புரந்தநிற்கடித்ததுமுன்னை
யுருவுகண்ணுறிலொன்னலர்செகுப்பரென்பதனுற்
பொருவிலோயினிவாகுவனெனும்பெயர்புனையா
விருதுபன்னன்வாழயோத்திமாநகரினேகுதியால்.

(இ - ள்.) கருணை செய்து - கிருபைசெய்து, எனை - என்னை, புரந்த - இரக்ஷித்த, நின் கடிததது - உன்னைக்கடித்தது, (ஏனெனில்) முன்னை உருவு - பழையவுருவமானது, கண்ணுறில் - காணப்படுமா னுல், ஒன்னலா - சத்துருக்கள், செகுபபா - கொல்லுவாாகள், என்ப தனுல் - என்னு நினைவினுல், பொருவிலோய் - ஒப்பற்ற நளமகாரா ஜனே, இனி - இனிமேல், வாகுவனெனும் - வாகுவன் என்று சொல் லப்பட்ட, பெயா புனையா - பெயரைத் தரித்துக்கொண்டு, இருது பன்னன் - இருதுபன்னமகாராஜன், வாழ் - அரசாட்சி செய்யாநினற, அயோத்தி மா நகரின்-அயோத்தி யெனப்பட்ட பெருமைபொருந்திய பட்டணத்திற்கு, ஏகுதி - போவாயாக, எ-று. ஆல் - அசை.

(க - து.) பாம்பு நளனை அயோத்தியில் இருதுபன்னனிடத்திற் போகும்படி சொல்லிற்று என்பதாம். (சு)

ஏந்தலேகியம்மன்னவன்சூதனுவியைந்து
கூந்தன்மாவுளந்தெரிதருவிஞ்சைநீகொடுப்பி
னுய்ந்தசூதுவெல்விஞ்சைநின்பாலவனளிக்குஞ்
சாந்தமென்முலேத்தமயந்திதன்னெடுஞ்சார்வாய்.

(இ - ள்.) ஏந்தல் - நளமகாராஜனே, ஏகி - அந்நகரத்திற் சென்று, அ மன்னவன் - அந்த இருதுபன்னனுக்கு, சூதன் ஆ - தோபாகனாக, இயைந்து - பொருந்தி, கூந்தல் - புறமயிரினையுடைய, மா - குதிரைகளினது, உளம் - மனதை, தெரிதரும் - அறிகின்ற, விஞ்சை - வித்தையை, நீ கொடுப்பின் - நீ (அவ்வரசனுக்கு) உபதேசிப்பையானால், ஆய்ந்த - பரிசோதிக்கப்பட்ட, சூது வெல - சூதினில் வெற்றியைத்தராநின்ற, விஞ்சை - வித்தையை, நின்பால் - உன்னிடத்தில், அவன் - அவ்வரசன், அளிக்கும் - கொடுப்பான், (அதன் பிறகு) சாந்தம் - சந்தனக்கோலமணிந்த, மெல் முலை - மிருதுவாகிய ஸதனங்களையுடைய, தமயந்திதன்னொடும் - தமயந்தியோடும், சார்வாய் - கூடுவாய், எ-று.

(க - து.) பாம்பு, நளனே குதிரைக ளுள்ளமறியும் வித்தையை நீ இருதுபன்னனுக்குக் கொடுத்தால் அவன் சூதுவெல் வித்தையை உனக்குக் கொடுப்பான் என்பதாம். (எ)

பின்னர்மன்னநின்பெருநிலக்கிழமையும்பெறுதி
முன்னைமாணுருவெளிதினிற்பெற்றிடமுன்னி
லின்னபூந்துகில்புனைதியென்றிருதுகிலளித்துத்
தன்னுருக்கொடுப்போயதுதழலவிழிப்பாந்தள்.

(இ - ள்.) பின்னா - பின்பு, மன்ன - நளமகாராஜனே, நின் - உன்னுடைய, பெரு நில கிழமையும் - பெரிய அரசாட்சியையும், பெறுதி - அடைவாய்; முன்னை - முற்பட்ட, மாண் உரு - மாட்சிமைப்பட்ட வுருவத்தை, எளிதினில் - வருத்தமின்றி, பெற்றிட முன்னில் - பெற நினைப்பையாகில், இன்ன பூ துகில் - இந்த அழகிய வஸ்திரத்தை, புனைதி என்று - தரித்துக்கொளளென்று சொல்லி, இரு துகில் - இரண்டு வஸ்திரங்களை, அளித்து - கொடுதது, தன் உரு கொடு - தனபழைய வுருவததை யெடுததுக்கொண்டு, தழல் விழி பாந்தள் - அக்கினி பொருந்திய கண்களையுடைய கார்க்கோடக நாகமானது, போயது - மறைந்துபோயது, எ-று.

(க - து.) பாம்பு நளனே உன்வடிவுகொள்ள வேண்டில் இந்த வஸ்திரத்தைத் தரியென்று இரண்டுவஸ்திரங் கொடுத்துப் பொயிற்று என்பதாம். (அ)

அதிர்பொலன்கழலரசர்கோனவ்வயினீங்கிப்
பிதிர்சுணங்கணிவெம்முலேப்பெய்வளேத்தடந்தோண்

மதர்வைநோக்கிதன்வாணகையெனவுயிர்வருத்துங்
கதிர்செய்நித்திலம்வரன்றெறிதிரைக்கடல்கண்டான்.

(இ - ள்.) அதிர - சத்தியாகின்ற, பொலன் கழல் - பொன்னாற் செய்த வீரக்கழலையணிந்த, அரசாகோன் - நளமகாராஜனவன், அவ்வயின் நீங்கி - அவ்விடம்விட்டுப் புறப்பட்டு, பிதிர - பிதிர்ந்த, சுணங்கு அணி - தேமலையணிந்த, வெம் முலை - விருப்பத்தைச் செய்கின்ற ஸதனங்களையும், பெய் வளை - வளையலையணிந்த, தடம் தோள் - பருத்த தோள்களையுமுடைய, மதாவை நோக்கிதன் - தமயந்தியினது, வாள் நகை என - ஒளிபொருந்திய தந்தங்கள்போல, உயிர வருத்தும்- உயிரை வருத்துகின்ற, கதிர செய் - ஒளிவிடுகின்ற, நித்திலம் - முத்துக்களை, வரன்று - வாரிகொண்டு, எறி - வீசாநின்ற, திரை - அலைகள்பொருந்திய, கடல் - சமுத்திரத்தை, கண்டான - (நளமகாராஜன) பார்த்தான, எ-று.

(க - து.) நளன் சமுத்திரத்தைக் கண்டான் என்பதாம். (கூ)

வஞ்சர்நெஞ்சினுழ்கழியினோர்மடநடையன்ன
மஞ்சிறைப்புறத்தாருயிர்ப்பெடையினையணைத்துக்
கஞ்சநாண்மலர்ச்சேக்கையிற்கண்படநோக்கி
நெஞ்சமாழ்குறநெடிதுயிர்த்தயர்வொடுநின்றான்.

இ - ள்.) வஞ்சா - வஞ்சகரது, நெஞ்சின் - மனம்போல, ஆழ - ஆழ்ந்த, கழியினில் - கழிநிலத்தில், ஓா மட நடை அன்னம் - ஒரு இளவன்னமானது, அம் சிறை புறத்து - அழகிய சிறகின் புறத்தினால், ஆா உயிா - நிறைந்த வுயிரையொத்த, பெடையினை - பெட்டை யன்னத்தை, அணைத்து - தழுவிக்கொண்டு, கஞ்சம் - தாமரையினது, நாளமலா - புதியமலராகிய, சேக்கையில் - படுக்கையில், கண்படல் - நித்திரை செய்வதை, நோக்கி - பார்த்து, நெஞ்சம் - மனமானது, மாழ்குற - வருத்தமடைய, நெடிது உயிாத்து - பெருமூச்சுவிட்டு, அயா வொடும் - சோர்வுடனே, நின்றான - (நளமகாராஜன்) நின்றனன், எ-று.

(க - து.) நளன் அன்னம் புணர்தலைக்கண்டு சோர்வுடனின்றான் என்பதாம். (௧0)

சுடர்செய்முத்தமுநேமியம்புள்ளுமென்றுகிரு
நெடிதுநோக்கிநந்நேரிழைமூரலுமுலையும்
வடிவமைந்தமென்விரலுமீங்கெய்தியவாற்றாற்
கடலில்வீழ்ந்துயிர்துறந்தனளெனமனங்கலுழ்ந்தான்.

(இ - ள்.) சுடா செய் - ஒளிவிடுகின்ற, முத்தமும் - முத்துக்களையும், நேமி புள்ளும் - சக்கிரவாக பக்ஷிகளையும், மென் துகிரும் - மிருதுவாகிய பவளங்களையும், நெடிது நோக்கி - நெடுங்காலம் பார்த்து, நம - நம்முடைய, நேரிழை - தமயந்தியினது, மூரலும் - தந்த வரிசைகளும், முலையும் - ஸ்தனங்களும், வடிவு அமைந்த - அழகுபொருந்திய, மென் விரலும் - மெல்லிய விரல்களும், ஈங்கு - இக்கழி நிலத்

தில், எய்திய ஆற்றல் - பொருந்தியபடியால், கடலில் - சமுத்திரத்தில், வீழ்ந்து - (தமயந்தியானவள்) விழுந்து, உயிர் துறந்தனள் - இறந்தாள், என - என்றெண்ணி, மனம் கலுழ்ந்தான் - (நளமகாராஜன்) மனங்கலங்கினன், எ-று. அம்-அசை.

(க - து.) நளன் தமயந்தி அவயவங்களுக்கு உவமானப்பொருள்களைக் கடலிற் கண்டு மனங்கலங்கினன் என்பதாம்.

அக்கழிநிலத்தில் காணப்பட்ட முத்துமுதலிய உவமான வஸ்துக்களை உவமேயமாக மயங்கினமையால் மயக்கவணி. (௧௧)

ஆவியன்னதோரணங்கினையனாயிருணீத்த
பாவியேன்முகநோக்குறிற்பழிவருமென்றோ
மேவுசேக்கையிற்குருகிளம்பேட்டினம்வெருவிச்
சேவலோடகன்றேகுவதெனமனந்திகைத்தான்.

(இ - ள்.) ஆவி அன்ன - உயிரையொத்த, ஓர் அணங்கினை - ஒப்பற்ற தமயந்தியை, அனை இருள் - அர்த்த ராத்திரியில், நீத்த - (தனியாக) விடுத்த, பாவியேன் - பாவியாகிய என்னுடைய, முகம் - முகத்தை, நோக்குறில் - பார்த்தால், பழி வரும் என்றோ - பாவம் வரும் என்று நினைத்தோ, மேவு - பொருந்திய, சேக்கையில் - படுக்கையிலுள்ள, குருகு - பறவைகளினுடைய, இள - இளமை தங்கிய, பேடு இனம் - பெட்டைகளினினமானது, வெருவி - பயந்து, சேவலோடு - ஆண்பறவைகளோடும், அகன்று - (அவ்விடத்தைவிட்டு) நீங்கி, ஏகுவது - போவது, என - என்று, மனம் திகைத்தான் - மதிமயங்கினன, எ-று.

(க - து.) பறவைகள் நீங்குதலை நளன்கண்டு தன்குற்றத்தையெண்ணினன் என்பதாம்.

பறவைகள் இயல்பான் மனிதரைக்கண் டேகினும் அதற்கு நளன் தன் குற்றத்தை ஏதுவாக்கின னென்க. இது தற்குறிப்பணி. (௧௨)

நவ்விநோக்கிதனகைமதிமுகமெனச்சிறந்த
தெய்வநாண்மலர்ப்போதவிழ்பூந்துகடிமிர்ந்து
கவ்வவெண்டிரைத்துளியெறிதென்றலங்கன்று
தைவருந்தொறுமெய்பதைத்தாருயிர்தளர்ந்தான்.

(இ - ள்.) நவ்வி நோக்கிதன் - மானபோன்ற, கண்களையுடைய தமயந்தியினது, நகை - பிரகாசியாநின்ற, மதி - சந்திரனையொத்த, முகம் என - முகம்போல், சிறந்த - சிறப்பையடைந்த, தெய்வம் - தெய்வத்தன்மையுள்ள, நாள் மலர் - புதிதாக மலாநின்ற, போது - புஷ்பத்தில், அவிழ் - விரிந்த, பூ துகள் - மகரந்தப்பொடிகளை, திமிர்ந்து - பூசிக்கொண்டு, கவ்வை - ஒளிபொருந்திய, வெண் திரை - வெளுத்த சமுத்திர வலைகளினுடைய, துளி - திவலைகளை, எறி - வீசுகின்ற, தென்றல் கன்று - இளந்தென்றலானது, தைவருந்தோறும் - மேனில் வீசுந்தோறும், மெய் பதைத்து - சரீரமானது துடித்து,

ஆர் உயிர் - நிறைந்த உயிரானது, தளர்ந்தான் - தளரப்பெற்றான், எ-று. அம் - அசை.

(க - து.) நளன் தென்றல் வீசலால் தளர்ச்சியடைந்தான் என்பதாம். (கா)

இன்னதன்மையன்வைகலீரைந்துபோயிறப்பக்
கன்னல்வேலியங்கழனியிற்களிச்சுரும்பரற்றும்
பொன்னந்தாமரைப்பொகுட்டின்மேன்மடப்பெடைபுல்லி
யன்னங்கண்படுவெள்ளநீரயோத்திநாடடைந்தான்.

(இ-ள்.) இன்ன தன்மையன் - இத்தன்மையனாகிய நளமகாராசன், வைகல் ஈரைந்து போய் இறப்ப - பத்துநாள் நீங்கிப்போக, கன்னல் வேலி - கருப்பம்வேலியிடப்பட்ட, அம் கழனியில் - அழகிய வயல்களில், களி சுரும்பு - களிப்பினையுடைய வண்டுகள், அரற்றும் - சத்தியாநின்ற, பொன் அம் - பொன்போலழகிய, தாமரை பொகுட்டின்மேல் - தாமரைப் பூங்கொட்டையில், மட பெடை - இளமை தங்கிய பெட்டை யன்னங்களை, புல்லி - தழுவிக்கொண்டு, அன்னம் - அன்னப்பறவைகள், கண்படு - நித்திரைசெய்கிற, வெள்ளம் நீர் - மிகுந்த நீர்வளமுள்ள, அயோத்தி நாடு - அயோத்திநகரத்தை, அடைந்தான் - சேர்ந்தான், எ-று.

(க - து.) நளன் அயோத்தியைச் சார்ந்தான் என்பதாம். (கச)

இருதுபன்னனைக்காண்டலுமெத்தொழில்வல்லை
மருவுநாமமென்கூறெனவாகுவனென்பே
ருருவவாம்பரிதேரினிதூர்குவனும்ப
ரருமருந்தெனவடுதொழிலபுரிவனென்றறைந்தான்.

(இ-ள்.) இருதுபன்னனை - இருதுபன்ன வரசனை, காண்டலும் - (நளன்) கண்டவளவில், எ தொழில் வல்லை - எச்செய்கையில் (நீ) திறமையுள்ளவன, மருவும் - பொருந்திய, நாமம் என - உன்பெயர் யாது; கூறு என - சொல்லென்று (இருதுபன்னன் கேட்க), வாகுவன் - வாகுவனென்பது, என் பேர் - எனது பெயராம், உருவம் - நிறத்தையுடைய, வாம் பரி - தாவாநின்ற குதிரைகட்டிய, தேர் - இரதத்தை, இனிது - நன்றாக, ஊர்குவன் - நடத்துவேன், (அன்றியும்) உம்பர் - தேவர்களினது, அரு மருந்து என - அரிய அமுதம்போல, அடு தொழில் - சமையலை, புரிவன் - செய்வேன்; என்று அறைந்தான் - என்று (நளமகாராசன்) சொன்னான், எ-று.

(க-து.) நளன் இருதுபன்னனைக் கண்டு தன்னைச் சாரதித் தொழிலிலுஞ் சமையற்றொழிலிலும் வல்லவனென்றான் என்பதாம். (கரு)

வேந்தனவ்வுரைகேட்டலும்வியன்மணிநெடுந்தேர்
கூந்தன்மாவுளமறிந்தனைகுறிப்பினூர்குதியே
லாய்ந்தசெம்பொனோராயிரம்வைகலுமளிப்ப
லேய்ந்தவென்னிருபாகரோடிருத்தியென்றிசைத்தான்.

(இ - ள்.) வேந்தன் - இருதுபன்னராசன், அ உரை - அந்நளன் சொல்லை, கேட்டலும் - கேட்டமாத்திரத்தில், வியன் - பருத்த, மணி- நவரத்தினங்கள் பதித்த, நெடு - நீண்ட, தேர - தேரிற் கட்டப்பட்ட, கூந்தல் - புறமயிரினையுடைய, மா - குதிரையினது, உளம் அறிந்தனை - மனதை யறிந்தவனாகி, குறிப்பின் - குறிப்பினால், ஊர்குதியேல் - நடத்துகிறவனானால், ஆய்ந்த - குற்றமற்ற, செம் பொன ஓர் ஆயிரம்- ஓராயிரம் பொன், வைகலும் - நாளதோறும், அளிப்பல் - கொடுப்பேன, ஏந்தல் - வீரனே, என் - என்னுடைய, இரு பாகரோடு - இரண்டு சாரதிகளோடுங்கூட, இருத்தி - இரு, என்று இசைததான - என்று சொன்னான், எ-று.

(க - து) இருதுபன்னன் நளனை நாளொன்றுக்கு ஆயிரம்பொன சமபளததில் வைததான என்பதாம்

பொன்னென்பது இருபது சின்னப பணத்தினுக்குத் தொகைப பேர. இது சேரசோழபாண்டியர நாட்டு வழககு. (கசு)

அன்னவாறுநேர்ந்தலங்குளைப்புரவிமான்றேர்க்கு
மன்னனாகியநிடதர்கோன்வைகலும்புலம்பித்
துன்னுகானிடைநீத்தவடுயரமீககூர
வென்னளாயினளோவெனவிரங்கிவெய்துயிர்ப்பான்.

(இ - ள.) அன்ன ஆறு நோந்து - அபபடியே சமமதிதது, அல ஙகு - அசைகின்ற, உளை - புறமயிரினையுடைய, புரவி மான - குதிரை கட்டிய, தோக்கு - இரதங்கட்கு, மன்னனாகிய - அதிபனாகிய, நிடதா கோன - நளமகாராசனானவன், வைகலும் - நாள்தோறும், புலம்பி - மனமிரங்கி, துன்னு கானிடை - நெருங்கிய காட்டினில், நீத்தவள் - விடப்பட்ட தமயந்தியானவள், துயரம - துன்பம், மீ கூர-அதிகரிக்க, என்னள் ஆயினளோ - எத்தன்மையளானாளோ, என - என்று, இரங்கி - புலமபி, வெயது - கொடியதாக, உயிரப்பான் - பெருமூச்சுவிடு வான், எ-று

(க - து.) நளன் தமயநதியை நினைத்து விசனப்படுவான் என்பதாம

உயிர்த்துமெயதளர்ந்துருகியவேந்தனையுளத்தி
லயிர்தடொர்சாரதியுற்றதையெவன்கொலென்றறைய
வெயிற்கொடுங்கதிர்மறைந்துழிவெவ்வழற்கானிற்
பயிற்பிலகோதையைத்தீர்ந்தனன்பரிவிலேனென்றான்.

(இ - ள.) உயிாத்து - பெருமூச்சுவிட்டு, மெய் தளாந்து - சரீரம் வாடி, உருகிய வேந்தனை - மனமுருகிய நளமகாராஜனை, உளத்தில் - மனததில், அயிாதது - சந்தேகிதது, ஓா சாரதி-(சீவலனென்னு) மொரு தோபபாகனானவன, உற்றதை - (நாளதோறும்) அடைந்த துனபத்தை, எவன்கொல என்று அறைய - என்னவென்று கேட்க, வெயில் - வெய் யிலைச்செயகின்ற, கொடு கதிா - சூரியன், மறைந்துழி - அஸ்தமித்த பின்பு, வெவ் அழல் - கொடிய அழல்பொருந்திய, கானில் - காட்டி

ணில், பயிர்ப்பு இல் - பரிசுத்தையாகிய, கோதையை - பெண்ணை, பரிவு இலேன் - அன்பில்லாத நான், தீர்ந்தனன் - விடுத்தேன், என்றான் - என்று (நளன்) சொன்னான், எ-று.

(க - து.) ஓர் சாரதி நளனை ஏன் விசாரப்படுகிறா யென நளன் தன் மனைவியைக் காட்டில் விட்டே னென்றான் என்பதாம். (௧௮)

## வேற்றுருவமைந்தபடலம் முற்றிற்று.

ஆ செய்யுள் - ௧0௬௨

---

## வீமன்தேடவிட்டபடலம்.

[இப்படலத்தால் வீமராஜன் தமயந்தி நளன் இருவரையும் தேடுதற்கு அதற்கு உரியோரை விடுத்தல் சொல்லப்படுகின்றது]

கலிநிலைத்துறை

இனையனாகியமன்னவனவ்வழியிருப்ப
வனைகருங்கழல்விதர்ப்பர்கோன்மறையவர்க்கூயென்
றனையைதன்னொடுநளனையுந்தேடிநீர்தந்தா
னினைவயாவையுந்தருகுவனெனவவர்நேர்ந்தார்.

(இ - ள்.) இனையன் ஆகிய - இத்தன்மையனாகிய, மன்னவன் - நளமகாராஜன், அவ்வழி இருப்ப - அவ்வயோத்தியில் இருக்க, வனை கருகழல் - சிறந்த வீரக்கழலையணிந்த, விதர்ப்பர் கோன் - வீமராஜன், மறையவர் கூய் - பிராமணர்களை அழைத்து, என் தனையை தன்னொடும் - என்பெண்ணாகிய தமயந்தியோடும், நளனையும் - நளமகாராஜனையும், தேடி - (தேசங்களில்) தேடி, நீர் தந்தால் - நீவிர் கொடுப்பீரா யின், நினைவ யாவையும் - (நீர்) நினைத்தவை யனைத்தையும், தருகுவன் - கொடுப்பேன், என - என்றுசொல்ல, அவர் - அம்மறையவர் கள், நேர்ந்தார் - (அதற்குச்) சம்மதித்தார், எ-று.

(க - து) வீமன் தன்மகளையும் மருமகனையுங் கண்டுபிடித்துக் கொடுத்தவர்களுக்கு நினைத்த யாவையுங் கொடுப்பே னென்றான் என்பதாம். (௧)

தரங்கவாரிதிசூழ்தருதகைமைசாலுலக
மொருங்குதேடியுங்காண்கிலருலப்பிலர்திரிய [யோன்
வரங்கொள்கேள்வியன் சுதேவனென்றுரைக்குமோர்மறை
கருங்கட்பேதையைச்சேதிபன்மனைவயிற்கண்டான்.

(இ - ள்.) தரங்க வாரிதி - அலைகளையுடைய சமுத்திரமானது, சூழ்தரு - சூழ்ந்த, தகைமை சால் உலகம் - மேன்மை பொருந்திய பூவுலகம், ஒருங்கு தேடியும் - ஒருங்குபட்ட தேடியும், காண்கிலர் - காணாதவராய், உலப்பிலார் - அளவற்றபேர்கள், திரிய - திரியாநிற்க, வரம்

கொள் - வரத்தைக்கொண்ட, கேள்வியன் - (சாஸ்திரக்) கேள்வியை யுடைய, சுவேதன் என்று உரைக்கும் - சுவேதனென்று சொல்லப் பட்ட, ஓர் மறையோன் - ஒருபிராமணன், கரு கண் பேதையை - கரிய கண்களையுடைய தமயந்தியை, சேதிபன் மனைவயின் - சேதிதேசத் தரசனுகிய சுவாகுவின வீட்டில், கண்டான் - பார்த்தான், எ-று.

(க - து) சுவேதனென்னும் ஓர்பிராமணன் தமயந்தியைச் சேதி பதி யரண்மனையிற் கண்டான என்பதாம். (உ)

மாசுபூத்தொளிமழுங்குபுமண்ணுறுமணியிற்
றேசழிந்திடுதெரிவைதன்றிருமுகநோக்கி
யேசலில்லிவட்கோவிவையெய்துமற்றென்னு
வாசிலகேள்வியோன்கலுழ்ந்தனன்றுயர்க்கடலாழ்ந்தான்.

(இ - ள்.) மாசு பூத்து - அழுக்கடைந்து, ஒளி மழுங்குபு - ஒளி மழுங்கி, மண்ணுறு மணியில் - சாணையிடாத மணிபோல, தேசு அழிந்திடும் - அழகழிந்த, தெரிவைதன் - தமயந்தியினது, திருமுகம் நோக்கி - அழகிய முகத்தைப் பார்த்து, ஏசல் இல் - பழிப்பில்லாத, இவட்கோ - இப்பெண்ணுக்கோ, இவை எய்தும் - இவ்வவஸ்தை கள்பொருந்தும, என்னு - என்று, ஆசு இல - குறைவற்ற, கேள்வி யோன் - கேள்வியை யுடைய சுவேதன, கலுழ்ந்தனன் - கலங்கினவ னுகி, துயர் கடல் - துன்பக்கடலில், ஆழ்ந்தான - மூழ்கினன, எ-று. மற்று - அசை.

(க-து) சுவேதன் தமயந்தியைக் கண்டு வருந்தினன என்பதாம்.()

அழுவதென்கொலென்றுயிழைவினவநின்றுதை
முழுவலன்புடைத்தோழன்யான்மொய்த்தநின்றமரும்
குழுவுநின்னிருகுரவருந்தீங்கிலரென்னத்
தொழுதுமைக்கணீர்முலைத்தடம்பெருகமெய்சோர்ந்தாள்.

(இ - ள் ) அழுவது எனகொல் என்று - துன்பப்படுவது என்ன காரணம் என்றுசொல்லி, ஆயிழை - தமயந்தியானவள், வினவ - கேட்க, நின் தாதை - உன்றந்தைக்கு, முழுவல அனபு உடை - நிறைந்த அன்புடைய, தோழன் - தோழமையுள்ளவன, யான் - நான், மொய்த்த - நெருங்கிய, நின தமரும் - உனனுடைய உறவினரும், குழுவும் - கூட்டத்தவரும், நின இரு குரவரும் - உன்னுடைய தாய்தகப்பன்மா ரிருவரும, தீஙகு இலா - கேடிலராயுளா, என்ன - என்றுசொல்ல, தொழுது - (அவளை த) தொழுது, மை கண் நீர் - மைபொருந்திய கண்ணீர், முலைத்தடம் - முலையினிடத்தில், பெருக - ஒழுக, மெய் - உடம்பு, சோர்ந்தாள் - மெலிந்தாள், எ-று.

(க - து.) தமயந்தி சுவேதனை ஏனழுகிறுயென சுவேதன் நான் உன் தகப்பனுடைய தோழனென்றுன், தமயந்தியுமழுதாள் என்ப தாம். (ச)

கந்தவார்குழற்காரிகையழுதல்கேட்டிவட்குத்
தந்தையாரெவற்குரியளித்தளிரியறனித்து

வந்தவாறெவணிவளை நீயுணர்ந்ததெவ்வாறென்
றந்தணாளனை வினவினள் சுவாகுவை யளித்தாள்.

(இ-ள்.) கந்தம் - வாசனைபொருந்திய, வார் குழல் - நீண்டகூந் தலையுடைய, காரிகை - தமயந்தியானவள, அழுதல் - துனபபபடுதலை, கேட்டு - (சுநந்தையால்) கேள்விபபட்டு (வந்து), இவட்கு - இபபெண ணினுக்கு, தந்தை யாா - தகபபன யாா, இ தளிா இயல - தளிரபோ ன்ற மேனியையுடைய இப்பெண்ணானவள, எவறகு உரியள் - எவ னுக்கு மனையாள், தனிதது வந்த ஆறு - தனிததுவாநதவிதம், எவன - யாது, இவளை - இபபெண்ணை, நீ உணாநதது - நீ அறிநதது, எவ்வாறு - எப்படி, எனறு - எனறு, அந்தணாளனை - சுவேதனை, சுவாகுவை அளிததாள் - சேதிதேசததரசனைப பெறற தாயானவள், வினவி னள - கேட்டாள, எ-று.

(க - து.) சேதிபதி தாய் தமயந்தி அழுதலைக்கேட்டு இவட் குத தகப்பனா, கணவனா, எனறுபிராமணனைக கேட்டாள் எனபதாம. ()

மாதுகேட்டியிம்மடவரலவிதர்ப்பர்கோன்புதலவி
காதனாயகனிடதர்கோன்காசினிமுழுதுந
சூதினாலிழந்திவளையுங்கானிடைத்துறந்தா
னாதலாலிவட்டேடெனவிதர்ப்பர்கோனறைந்தான்.

(இ - ள் ) மாது - அரசனததாயே, கேட்டி - கேள், இ மடவ ரல் - இபபெண், விதாபபா கோன் புதல்வி - வீமராஜனது குமா ரததி ; காதல் ஙாயகன் - அன்பினையுடைய (இவட்குக) கணவன, நிடதா கோன - நளமகாராஜன், (அவன்) காசினி முழுதும் - பூமிமு ழுவதும், சூதினால் - சூதாட்டததால், இழநது - தோறறுவிட்டு, இவ ளையும் - இததமயநதியையும், கானிடை - காடடினில், துறந்தான - விடுத்தான, ஆதலால் - ஆகையால், இவள - இவளை, தேடு என - தேடுவீரெனறு, விதாப்பா கோன - வீமராஜன, அறைந்தான் - உத் தரவு கொடுததான், எ-று.

(க - து ) பிராமணன் அரசியே, இட்பெண் வீமராஜன் மகள, இவள் கணவன் நளன, அவன் சூதாடடததால் நாடிழந்து மனைவியைக காட்டில் விடுத்தான், இவளைததேடெ‌ன வீமனுததரவு கொடுத்தான் என்பதாம். (சா)

தேண்டியெங்கணுங்கண்டிலன்றிருவைநின்மனையிற்
காண்டல்செய்தனன்கன்னலிற்பழுத்தமென்மொழியாண்
மாண்டபேரொழிலவாணுதலவயங்கியமறுவா
லீண்டுணர்ந்தனன்யாெனனமறையவனிசைத்தான்.

(இ-ள்.) எங்கணும் தேண்டி - எவ்விடத்திலும் - தேடி, திருவை- லக்ஷ்மியையொத்த தமயநதியை, கணடிலன - காணாதவனாய், நின மனையில் - உன மாளிகையில், காண்டல் செய்தனன - கண்டேன். கன்னலில் - கரும்பினும், பழுத்த - முதிர்ந்த, மென் மொழியாள் - இனிய வசனத்தையுடைய இததமயந்தியினது, மாண்ட - மாட்சிமைப்

(இ - ள்.) விட்ட தூதுவர் - அனுப்பப்பட்டதூதர்கள், உரைத்த சொல் - சொல்லியசொற்களை, கேட்டலும் - கேட்டமாத்திரத்தில், விரிந்து - மலர்ந்து, மட்டு உலாம் - தேனொழுகுகின்ற, தொடை - மாலையையணிந்த, மாரிஞன் - மாரனையுடைய நளன், மா நகர - பெரிய பட்டணத்தில், எய்தி - அடைந்து, கட்டு - கட்டப்பட்ட, வார கழல் - வீரக்கழலையுடைய, புட்கர - புட்கரனே! கவறு - சூதை, நாம் ஆடற்கு - நாமாடுவதற்கு, ஒட்டம் யாது என - பந்தயம் யாதென்று கேட்க, உலம் கெழு தோளான் - திரள்கல்லை யொத்த தோள்களை யுடைய வரசன், உரைத்தனன் - சொன்னான், எ-று.

(க - து.) நளன் பட்டினத்தில்வந்து புட்கரனே சூதாடுதற்குப பந்தயம் யாதெனச் சொன்னான் என்பதாம். (ரு)

வயிரவாட்படைமன்னவர்மன்னநீதோற்பின்
முயலிலாமதிபூத்திடுமுழுநெறிக்குவளை
யயரநீண்டகட்டேவியையளித்தியான்றோற்பி
னுயிரினோடுநின்னுலகெலாந்தருவனென்றுரைத்தான்.

(இ - ள்.) வயிரம் - கூர்மைபொருந்திய, வாள் படை - வாளா யுதத்தை யுடைய, மன்னவர் மன்ன - அரசர்க்கரசனாகிய நளமகாராச னே!, நீ தோற்பின் - நீ தோற்றால், முயல் இலா - முயற்கறையொ ழிந்த, மதி - சந்திரனிடத்தில், பூத்திடும் - புஷ்பித்த, முழு நெறி - முழுநெறிப்பையுடைய, குவளை - நீலோற்பலங்கள், அயர - சோர்வை யடைய, நீண்ட கண் - நீண்டகண்களையுடைய, தேவியை - தமயந்தி யை, அளித்தி - கொடு, யான் தோற்பின - நான்தோற்றால், உயிரி னோடு - என்னுயிரோடு, நின் உலகு எலாம் - உனது உலகமுழுவதை யும், தருவன என்று - கொடுப்பேனென்று, உரைத்தான் - சொன னான், எ-று.

(க - து) புட்கரன் நளனே நீதோற்றால் உன்பெண்சாதியைக கொடு, நான்தோற்றால் என்னுயிரோடு உனதுலகமெல்லாங் கொடுப பே னென்றான் என்பதாம். (சு)

அன்னவாறியைந்தாடலும்புட்கரன்றோற்ப
மன்னமுன்னநீவென்றதுங்கொடுங்கலிவயத்தா
னின்னதாருயிர்நேர்ந்தனனெம்பியாதலினு
மென்னகர்க்கினிதேகெனப்பணித்தனன்றோன்றல்.

(இ - ள்.) அன்னவாறு - அத்தன்மையாகவே, இயைந்து - சம் மதித்து, ஆடலும் - ஆடுமளவில், புட்கரன் - புட்கரராசன், தோற்ப - தோற்க, மன்ன - புட்கரராசனே!, முன்னம் - முன்பு, நீ வென்றதும் - நீ செயித்ததும், கொடு - கொடிய, கலி வயத்தால் - கலியினது வசத்தி னல் (அன்றி வேறல்ல), எம்பி ஆதலினல் - தம்பியாகையினலே, நின னது - உன்னுடைய, ஆர் உயிர - நிறைந்த உயிரை, நேர்ந்தனன் - கொடுத்தேன்; தொல் நகர்க்கு - பழமையாகிய உனது நகரத்திற்கு,

இனிது - இனிதாக, ஏகு என - போவென்று, தோன்றல் - நளன, அளித்தனன் - ஆக்கியாபித்தான், எ-று.

(க - து.) புட்கரன் தோற்க, நளமகாராஜன் வென்றன. நள னுத்தரவால் புட்கரன் தன்னூருக்குப் போனன் என்பதாம். (எ)

பணிதலைக்கொடுபுட்கரன்போதலும்பன்னூற்
கணிதர்சொற்றநலவோரையிற்கடிநகரெய்தி
யணிபொலன்கழன்மன்னவன்விதர்ப்பர்கோனளித்த
மணிசெய்மேகலைவாணுதற்கொற்றரைவிடுத்தான்.

(இ - ள்.) பணி - அந்தவாக்கினையை, தலை கொடு - சிரசின்மீது கொண்டு, புட்கரன் - புட்கரராசன், போதலும் - போனபின், பல் நூல் - அநேக சாஸ்திரங்களை யுணாந்த, கணிதா - சோதிடாகளாலே, சொற்ற - சொல்லப்பட்ட, நல் ஓரையில் - நல்ல லக்கினத்தில், கடி நகா - காவலையுடைய பட்டணத்தை, எய்தி - அடைந்து, அணி - அணியப பட்ட, பொலன் கழல் - பொன்னினுற் செய்யப்பட்ட வீரக்கழலை யுடைய, மன்னவன - நளன், விதாப்பாகோன் அளித்த - வீமராசன பெறற, மணி செய் - இரதநங்களாற் செய்யப்பட்ட, மேகலை - மேக லாபரணத்தையுடைய, வாள் நுதற்கு - ஒளிபொருந்திய நெறறியை யுடைய தமயந்திக்கு, ஒற்றரை - வேவுகாரரை, விடுத்தான் - அனுப்பி னன, எ-று.

(க - து.) நளன் தன்னகரை யடைந்து தமயந்திக்குத் தூதரை விட்டான் என்பதாம். (அ)

ஒற்றரேகியவ்விதர்ப்பர்கோன்றன்னுழையுரைப்ப
வற்றமில்லெனவரும்பொருளாங்கவர்க்களித்துக
கற்றைவார்குழன்மதர்நெடுங்கண்ணியைக்கணிகர்
சொற்றவோரையிலவிடுத்தனன்றோன்றன்மாநகரில.

(இ - ள்.) ஒற்றா ஏகி - வேவுகாரா போய், அ விதர்ப்பா கோன் தனனுழை - அவ்வீமராசனிடத்தில், உரைப்ப - சொல்ல, அற்றம் இல் என - மிகுதியான, அரு பொருள் - அரிய பொருளை, ஆங்கு - அவ விடத்தில், அவாக்கு - அவாகளுக்கு, அளித்து - கொடுதது, கற்றை - கூட்டமாகிய, வாா குழல் - நீண்ட கூந்தலையும், மதர் - மதாத்த, நெடு- நெடிய, கண்ணியை - கண்களையுமுடைய தமயந்தியை, கணிதா - சோதிடாகள், சொற்ற ஓரையில் - சொல்லிய இலக்கினத்தில், தோன றல - வீமராசன், மா நகரில் - பெரிய நளனது பட்டணத்தில், விடுத் தனன - விட்டான், எ-று.

(க-து.) வீமராஜன் தன்மகளை நளமகாராஜன் மாவிந்தமாநகருக் கனுப்பினன் என்பதாம். (க)

வெள்ளத்தானையுமகளிருஞ்சூழ்வரவேந்த
னுள்ளத்தாமரைமலருறையோடரிக்கண்ணாள்

வள்ளத்தாமரைப்பொகுட்டின்மேல்வண்டுகண்படுக்கு
மள்ளற்றீம்புனற்கழனிசூழ்நிடதநாடடைந்தாள்.

(இ - ள்.) வெள்ளம் தானையும் - பிரவாகம் போன்ற சேனையும், மகளிரும் - மாதர்களும், சூழ்வர - சூழ்ந்துவரும்படி, வேந்தன - நள மகாராசனது, உள்ளம் தாமரை மலர - மனமாகிய தாமரைப்பூவில், உறை - வாசஞ்செய்கின்ற, ஓடு அரி - செவ்வரிபரந்த, கண்ணாள - கண்களையுடைய தமயந்தியானவள், வள்ளம் - கிண்ணம்போன்ற, தாமரை பொகுட்டின்மேல் - தாமரைமலரின் காணிகையில், வண்டு - வண்டுகள், கண்படுக்கும் - நித்திரை செய்யாநின்ற, அள்ளல் - சேற்றையும், தீ புனல் - மதுரமான சலத்தையு முடைய, கழனி சூழ - வயல்களால் சூழப்பட்ட, நிடத நாடு - நிடததேசத்தை, அடைந்தாள - சோந்தாள், எ-று.

(க-து.) தமயந்தி நிடதநாட்டைச் சேர்ந்தாள் என்பதாம். (௪0)

நவ்விநோக்கியர்சூழ்வரநகைநிலாவெறிக்குங்
கொவ்வைவாய்மலர்ப்பூங்குழற்குவிமுலைமடந்தை
தெய்வநாண்மலர்த்தவிசிழிதிருமகளென்ன
வெவ்வமில்லதோரெரிமணிச்சிவிகைநின்றிழிந்தாள்.

(இ - ள்.) நவ்வி நோக்கியர் - மான்போன்ற பார்வையையுடைய மங்கையா, சூழ்வர - சூழ்ந்துவர, நகை - பற்கள், நிலா - நிலவைப போல, எறிக்கும் - பிரகாசிக்கின்ற, கொவ்வை - கோவைக்கனிபோன்ற, வாய் - சிவந்தவாயையும், மலா - புஷ்பத்தையுமுடைய, பூ - அழகிய, குழல் - கூந்தலையும், குவி - குவிந்த, முலை - ஸ்தனங்களையு முடைய, மடந்தை - தமயந்தியானவள், தெய்வம் - தெய்வத்தன்மை பொருந்திய, நாள் - அன்றலாந்த, மலர் தவிசு - புஷ்பாசனத்தினின்றும், இழி - இழிகின்ற, திருமகள் என்ன - இலக்குமிபோல், எவ்வம் இல்லது - குற்றமில்லாததாகிய, ஓா - ஒரு, எரி - பிரகாசிக்கின்ற, மணி சிவிகை நின்று - இரதந தன்டிகையினின்றும், இழிந்தாள் - இறங்கினள், எ-று

(க-து.) தமயந்தி இரத்னச்சிவிகையிலிருந் திழிந்தாள் என்பதாம()

பருதிவானவனெதிர்தலும்பனியிதழ்விரிந்த
முருகுலாநறுந்தாமரைபோன்முகமலரா
வருகுநுண்ணிடையின்னுயிர்க்காதலனம்பொற்
றிருவநாண்மலர்ச்சேவடிசென்னியிற்றொழுதாள்.

(இ-ள்.) பருதி வானவன் - சூரியனானவன், எதிர்தலும் - தோன்றினவளவில், பனி இதழ் - குளிர்ச்சிபொருந்திய விதழ்கள், விரிந்த - மலாந்த, முருகு உலாம் - வாசனை வீசுகின்ற, நறு தாமரைபோல - நல்ல தாமரைபோல, முகம் மலரா - முகமலாச்சி யடைந்து, அருகு - சிறுத்த, நுண் இடை - நுட்பமான விடையையுடைய தமயந்தி, இன உயிா - இனிய வுயிாபோன்ற, காதலன் - கணவனாகிய நளனது, அம - அழகிய, பொன் - பொன்போன்ற, திருவ - செல்வத்தையுடைய, நாள